# இரஸரத்தின ஸமுச்சயம்

என்னும்

## ஸித்த ரஸாயன நூல்.

ஆயுர்வேதபூஷணம்

பண்டித

மே. துரைஸ்வாமி ஐயங்கார்

அவர்கள்

மொழி பெயர்த்தது.

"ஆசார்ய வாக்படர்" அஷ்டாங்க ஹ்ருதயத்திற் கூறாத இரஸாயன முறைகளை யெல்லாம் இந்நூலில் விளக்கியிருக்கிறார். அயம் முதலிய உலோஹங்கள், இரஸகந்தகாதி ரஸவகைகள், தாளகாதி பாஷாண வகைகள், சிலாஜது முதலான தாதுவகைகள், இரத்தினங்கள் ஆகியவற்றின் சுத்தி-பஸ்மாதி முறைகளும், ஸத்துவம் - திராவகம் முதலிய முறைகளும் விஸ்தாரமாக விவரிக்கப் படுகின்றன. அவற்றைப் புடமிடும் கிரமங்களும், புடங்களுக்கான மூசை முதலியனவும், ஔஷத பாகங்களுக்கான பலவித யந்திர வகைகளும் விளக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொல்லில் இவ்வித சித்த ரஸாயன நூல் தமிழில் வேறு கிடையாது. சிறந்த காகிதத்தில் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. முகவுரை, விஷய அகராதி, விஷய அட்டவணை, டிப்பணி முதலியவை வெகு உபயோகமானவை.

உயர்ந்த கலிகோ பைண்டு

**விலை ரூ. 4—8—0.**

அட்டை பைண்டு

**விலை ரூ. 3—8—0.**

வைத்திய கலாநிதி ஆபீஸ்.

வேப்பேரி—மதராஸ்.

# ASHTANGA HRIDAYA

**A Compendium of Ayurvedic System of Medicine based on Works belonging to both Atreya and Dhanvantari Schools**

OF 2235

ACHARYA VAGBHATA

**Translated from Sanskrit Original into Tamil with Notes, Introduction, Index, etc.**

**BY**

AYURVEDA BHUSHAN

Pandit M. DURAISWAMI AIYANGAR, A.V.S.

Diplomaed Ayurvedic Medical Practitioner, Ex-Senior Physician, S. K. P. D. Ayurvedic Hospital, Ex-Lecturer, Madras Ayurvedic College, Vice-President, The All India Ayuveda Maha Mandal and Vidyapitha, Examiner, The All-India Ayurveda Vidya Pitha and Madras Government School of Indian Medicine, Translator of Sarngadhara Samhita, Madhava Nidanam, Rasaratna Samuchchaya, etc. into Tamil, etc., etc.

***WITH A FOREWORD***

**BY**

CAPT. G. SRINIVASA MURTI, B.A.,B.L., M.B. & C.M.,
*Principal, Govt. Indian Medical School.*



---

**Sutra-Sarira-Nidana Sthanams.**

**VOL. I.**

**Revised 2nd Edition.**

---

MADRAS:
THE VAIDYA KALANIDHI OFFICE,
**1931.**

# அஷ்டாங்க ஹ்ருதயம்

ஆசார்ய வாக்படருடைய
பிராசீன ஸம்ஸ்க்ருத வைத்தியக் கிரந்தத்தின்
தமிழ்மொழி பெயர்ப்பு.

டிப்ளோமா என்னும் அதிகாரப் பத்திரம் பெற்ற ஆயுர்வேத சிகித்ஸகரும்,
எஸ். கே. பி. டி. ஆஸ்பத்திரியில் தலைமை வைத்தியராயிருந்தவரும்,
சென்னை ஆயுர்வேத கலாசாலையில் போதகாசிரியராயிருந்தவரும்,
சென்னை கவர்ன்மெண்டு இந்திய வைத்தியக் கல்லூரி பரீக்ஷகரும், எல்லா
இந்திய ஆயுர்வேத மஹாமண்டல-வித்யாபீடங்களின் உபாக்ராஸனாதிபதியும்,
'சார்ங்கதர ஸம்ஹிதை'', ''மாதவ நிதானம்'', ''இரஸரத்தின ஸமுச்சயம்''
முதலிய பிரபல ஸம்ஸ்க்ருத வைத்தியக் கிரந்தங்களை
மொழி பெயர்த்தவரும், காதம்பரி-மேகஸந்தேசம் முதலிய ஸம்ஸ்க்ருத
காவ்யங்களை மொழி பெயர்த்தவருமான

ஆயுர்வேத பூஷணம்
**பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார்,** எ. வி. எஸ்.
அவர்களால் மொழி பெயர்க்கப்பட்டது.

மேற்படியார் இயற்றிய
டிப்பணி, முகவுரை, ஸம்பூர்ணமான விஷய அகராதி
முதலியவை அடங்கியது.

ஸூத்திர - சாரீர - நிதாந ஸ்த்தாநங்கள்.

## முதற் பாகம்.

சீர்திருத்திய இரண்டாம் பதிப்பு

---

சென்னை :
வைத்திய கலாநிதி ஆபீஸ்,
வேப்பேரி.
**1931.**

# FOREWORD.

Sriman Pandit M. Duraiswami Aiyangar has done me the honour of asking me to write an introduction for one of his forthcoming publications, viz., the Second edition of the Tamil translation of the well-known Ayurvedic treatise *Ashtanga Hridaya.* I know that neither Sriman Duraiswami Aiyangar nor his works require any words from me to introduce them to the Ayurvedic public. If, nevertheless, I write these few words, it is only because he tells me it pleases him if I do so, and I feel that to do his pleasure in this manner is the least I can do to show my gratitude to one who has been labouring devotedly in the cause of Ayurveda for nearly a quarter of a century. An erudite scholar in both Samskritic and Ayurvedic learning, he early set before himself the task of serving as the pioneer in pormoting the spread of Ayurvedic learning in Tamil country through the medium of the vernacular; and at a time when the odds—financial and other—were heavily against these labouring in this field, he started, a Tamil monthly journal called " The Vaidya Kalanidhi " where he published, among other things, Tamil translations of certain standard Ayurvedic works written in Samskirt. He carried on the journal under great difficulties from 1913 to 1921, when financial and other obstacles became too great for him to continue the publication; but, he would not allow these difficulties to stand in the way of his original resolve to publish a series of Tamil translations of standard Ayurvedic treatises written in Samskrit. The Tamil translation of *Sarngadhara Samhita* was the first of the series to be published; it was a spontaneous and continued success, amply testified to by the fact that it has now gone through three editions. The other works of the series published so far are *Madhava Nidana, Rasa Ratna Somuchchaya* and *Ashtanga Hridaya*, the first edition of which is now exhausted necessitating a second edition to which this introduction is written.

As a standard Text-book for students of Ayurveda, this treatise of Vagbhata has always been highly prized by Ayurvedists. A common saying current among them has if that "Madhava is best in regard to Nidana; Vagbhata, in regard to Sutram; Susruta, in regard to Sariram; and Charaka in regard to Chikitsa." A special feature of this treatise is that its best popularity is not confined to Medical Circles; for, it has also been a favourite in certain non-medical circles to whom it has appealed not only as a guide for understanding simple rules of Hygienic living but also as a work of Classical Kavyam which gives them the same aesthetic thrill and enjoyment similar to that which are generally associated with such classics as the Raghuvamsa or the Ramayana.

This work in Tamil has now undergone a thorough revision. Explanatory notes have been added in many places so as to make the work more useful to medical students and practitioners alike. Every paragraph has been carefully revised and a re-arrangement of paragraphs and head lines made in many places so as to give the reader a better and clearer grasp of the subject-matter. Even the index has not escaped this process of thorough revision so that it is now rendered full and exhaustive. Sriman Duraiswami Aiyangar has added, by this publication, another debt of gratitude to the many that are already due to him from many students, practitioners and lovers of Ayurveda. To all these, I heartily commend this most useful publication.

ADYAR,

G. SRINIVASA MURTI.

*15th January 1932.*

# பொருளடக்கம்.



## ஸூத்திர ஸ்தாநம்.

(பக்கங்கள் 1—296)

## சாரீர ஸ்த்தாநம்.

(பக்கங்கள் 297—381)



## நிதாந ஸ்த்தாநம்.

(பக்கங்கள் 382—500)





# இந்நூல் இயற்றிய முறை

## ஒரு குறிப்பு.

1. மொழி பெயர்ப்பு :—ஸம்ஸ்க்ருத மூலச்லோகங்கள் கிரமமாகத் தமிழில் பதம் விடாமல் மொழி பெயர்க்கப் பட்டிருக்கிறது. மொழி பெயர்ப்பதற்கியலாத சாஸ்த்ரீய பரிபாஷைகளின் பெயர்கள் ஸம்ஸ்க்ருதத்திலுள்ள படியே எழுதப்பட்டு, அவற்றிற்கு அடியில் டிப்பணியில் விவரணம் செய்யப்பட்டிருக்கின்றன. இந்த மொழி பெயர்ப்பில் மூலத்தில் இல்லாததை எதையும் சேர்க்கவுமில்லை, இருப்பதில் எதையும் எடுக்கவுமில்லை.

2. தலையங்கங்கள் :—ஆனால் ஸம்ஸ்க்ருத மூலத்தில் ஒவ்வோர் அத்தியாயத்திலும் விஷயங்கள் வெவ்வேறாகப் பிரிக்கப்படவில்லையாகையால், ஒவ்வொரு அத்தியாயத்திலும் விஷயங்களை யுக்தப்படி விபாகம் செய்து, ஒவ்வொரு விஷயத்துக்கும் "இஷ்ட தேவதையைத் தொழுதல்", "ஆயுர்வேதத்தில் ஆதரவு அவசியம்", "ஆயுர்வேதத்திற்கான ஆசார்ய பரம்பரை", "மூன்று தோஷங்கள்" என்றவாறு விஷயங்களுக்கு முற்றிலும் தலையங்கங்கள் என்னால் சேர்க்கப்பட்டவை.

3. வாக்கிய வகுப்புகள் :—அதாவது பாராக்கள் தலையங்கங்களை அநுஸரித்து வகுக்கப்பட்டதும், மொழிபெயர்ப்பாசிரியராலேயே. அந்தப் பாராக்களின் ஒவ்வொன்றின் முடிவிலும் போடப்பட்டுள்ள இலக்கங்கள் ஸம்ஸ்க்ருத மூலச்லோகங்களின் எண்ணிக்கைகளைக் குறிப்பிடுகின்றன.

4. டிப்பணி :—பெரும்பாலும் ஒவ்வொரு பக்கத்திலும் அடியில் டிப்பணியும் உண்டு. இந்த டிப்பணியும் மொழி பெயர்ப்பாசிரியர் எழுதிச் சேர்த்ததே.

5. விஷய அகராதி :—இத்தமிழ் மொழி பெயர்ப்பு நூலில் அடங்கிய எல்லா விஷயங்களும் தமிழ் மொழி பெயர்ப்பாசிரியரால் விடாமல் பொறுக்கப்பட்டு நூலின் இறுதியில் விஷய அகராதியும் சேர்க்கப் பட்டிருக்கிறது. இது ஒரு வைத்திய அகராதி போன்றது.

இந்த அம்சங்கள் யாவும் இப்புஸ்தகத்தைப் படிப்பவருக்கு மிகவும் அநுகூலமாயிருக்குமெனக் கருதியே சிரமத்தைச் சிறிதும் பாராட்டாமல் இம்மொழி பெயர்ப்பில் அமைக்கப்பட்டுள்ளன.

மே. து.

॥ श्रीरस्तु ॥

॥ श्रीधन्वन्तरये नमः ॥

मेल्पाकाभिजनस्य मेध्यचरितोत्तंसस्य विद्वन्मणेः
  श्रीमन्नैध्रुवकाश्यपाह्वयमहावंशोत्थमुक्तामणेः ।
त्रय्यन्तार्थविचक्षणस्य विजयश्रीराघवार्यस्य यः
  सर्वानुग्रहभाजनं समभवं पुत्रोऽहमेकश्चिरात् ॥ १ ॥

साहित्येऽपि च सांप्रदायिकविधौ श्रीवैष्णवीये स्वयं
  तत्तादृक्जनकोपमः स जनकः शिक्षागुरुर्मेऽभवत् ।
आयुर्वेदकलागृहेऽस्मि विधिवत् गोपालयाह्वय-
  प्रख्यातोत्तमवैद्यरत्नसविधेऽप्यभ्यस्तवैद्यागमः ॥ २ ॥

तन्त्रेष्वाधुनिकेषु वैद्यविषयप्रस्ताविषु प्राक्तने-
  ष्वप्यारूढधियां त्रिजत्वधनिनां* अन्ते चिरायावसन् ।
सांगं सर्वमधीत्य शास्त्रविषयं प्राच्यप्रतीच्यक्रम-
  प्राप्तं वैद्यकतत्परं स विशिखां बाल्ये प्रविष्टोऽस्म्यहम्‡ ॥ ३ ॥

दुरैस्वामीनामा स पुनरिदमष्टांगहृदयं
  व्यतानीत् द्राविड्यामवगतभिषक्तन्त्रहृदयः ।
सुबोधं टिप्पण्याप्यनवगतगीर्वाणवचसां
  बुभुत्सूनामायुर्निगमगततत्त्वार्थसरणेः ॥ ४ ॥

द्राविड्यां परिवर्तितं परिमितज्ञानां च मेधाविनां
  बोधायाखिलदाक्षिणात्यभिषजामेवं दुरैस्वामिना ।
तन्त्रं तत् प्रथितं भिषग्जनगुरोः प्राग्वाग्भटाद्रागतं
  जीयात् भूरिकृपावशात् भुवि दिवोदासस्य धन्वन्तरेः ॥ ५ ॥

---

* सुचिरं आचार्यसन्निधौ अभ्यस्तवैद्यशास्त्रस्य विदितवेदितव्यस्य भिषजः "त्रिज" इति संप्रदायसमुपनतं नाम ।

‡ अगदङ्कर इति अधिकारिणां सविधात् आत्तशासनस्य अभिज्ञस्य भिषजो यथाविधि चिकित्सककर्मणि प्रवेशः "विशिखानुप्रवेशः" इति व्यवह्रियते । (दृश्यतां सुश्रुतसूत्रस्थाने दशमोऽध्यायः)

# முகவுரை

மூன்று ஸ்கந்தங்களோடும்,[1] எட்டு அங்கங்களோடும்,[2] அநேக உபாங்கங்களோடும்[3] கூடியவையாகவும், ருஷிபரம்பரையில் வந்துள்ளவையுமான வடமொழி வைத்தியக் கிரந்தங்களின் சிறப்பையும் உபயோகத்தையும் உவப்புடன் தமிழுலகம் அறிந்து அனுபவிக்கக் கருதி முதலில் நான் சார்ங்கதர ஸம்ஹிதை யென்னும் சிறிய ஸங்கிரஹக் கிரந்தத்தை மொழி பெயர்க்க முயலுகையிலேயே, அதற்கு அடுத்தாற்போல அஷ்டாங்க ஹ்ருதயத்தைத் தமிழில் வெளியிடுவது அவசியமெனத் தீர்மானித்திருந்தேன். இதற்குக் காரணம் வைத்திய சாஸ்திரத்தில் ஆத்ரேயருடைய ஸம்பிரதாயத்தைப் பின்பற்றி இயற்றியுள்ள பிராசீனமான பிராமணக் கிரந்தங்களுள் மிகச் சுருக்கமானது சார்ங்கதர ஸம்ஹிதை யென்பதும், ஆத்ரேயர், தன்வந்தரி ஆகிய இருவருடைய ஸம்பிரதாயங்களான காய சிகித்ஸை, சல்ய சிகித்ஸை ஆகிய இரண்டு முறைகளையும் தொகுத்து விவரிப்பதிலும், ஒழுங்கான விஷய விவரணங்களிலும் அதற்கு அடுத்தபடியில் விரிவான உயர் நூல் அஷ்டாங்க ஹ்ருதயம் என்பதுமேயாம். இது வடமொழி வைத்திய நூல்களில் பரிசயமுள்ளவருக்குத் தெரிந்த விஷயமே. அஷ்டாங்க ஹ்ருதயத்தையும், அதன் ஆசிரியரான வாக்படரையும் பற்றி நாம் சிறிது கூறுவதற்குமுன், அவர் பின்பற்றிய ஆத்ரேய ஸம்பிரதாயம் முதலியவற்றைப் பற்றியும் சில விஷயங்களை விளங்கக் கூறுவது பிரக்ருதத்திற்கு அவசியமென்று எண்ணுகிறேன்.

ஆதியில் வைத்திய சாஸ்திரத்தைப் பிரசாரம் செய்தவர்கள், சிகித்ஸாசாஸ்திரத்தை முக்கியமான இரண்டு பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொருவர் ஒவ்வொரு மார்க்கத்தைக் கைப்பற்றலாயினர். ஜ்வரம், அதிஸாரம், க்ஷயம், இரக்தபித்தம், வாதரோகம் முதலிய தேஹ தாதுக்களைப்பற்றிய வியாதிகளின் சிகித்ஸைக்காக

---

1. மூன்று ஸ்கந்தங்கள்—ஹேது ஸ்கந்தம், லிங்க ஸ்கந்தம், ஔஷத ஸ்கந்தம் என்பனவாம். [வியாதிகளின் காரணங்களைக் கூறும் பாகம், வியாதிகளின் குறிகளைக் கூறும் பாகம், அவற்றிற்கு ஏற்ற சிகித்ஸைகளை விவரிக்கும் பாகம் என்று முறையே அம்மூன்றுக்கும் பொருள். இவை த்ரிஸ்கந்தம் என்று கூறப்படும்.]

2. எட்டு அங்கங்கள்—இப்புஸ்தகத்தில் 2-ம் பக்கம் பார்க்க.

3. உபாங்கங்கள்—சாரீர சாஸ்திரம், வஸௌஷதி சாஸ்திரம், பதார்த்த விஞ்ஞானம் முதலியவை.

ஸ்நேஹ - ஸ்வேத - வமந-விரேசநாதிரூபமாய் அமையப்பெற்றதை காயசிகித்ஸை யெனவும், பலவகையான உலோகப் பொருட்களோ, வேறுவித சல்யங்களோ, சீழ்முதலிய துஷ்டப் பொருட்களோ தேஹத்தினுள் தங்கியிருந்து அவற்றைச் சஸ்திர-யந்திராதிகளைக்கொண்டு வெளிப்படுத்தி ஸ்வஸ்த்தம் செய்வதற்கான முறையைச் சல்யசிகித்ஸை யெனவும் வழங்கினர். இவ்விரண்டு பிரிவுகளுள் முதலிற் குறிப்பிடப்பட்டது ஆத்ரேய ஸம்பிரதாயத்தைச் சேர்ந்ததென்றும், பின்னால் மொழியப்பட்டது தன்வந்தரி ஸம்பிரதாயத்தைச் சேர்ந்ததென்றும் நாம் வழங்குவோம். ஆத்ரேயருடைய உபந்யாஸங்களையும் உபதேசங்களையும் கேட்டு அவருடைய பிரஸித்தி பெற்ற ஆறு சிஷ்யர்களான அக்னிவேசர், பேளர், ஜதூகர்ணர், பராசரர், க்ஷாரபாணி, ஹாரீதர் என்னும் முனிவர்கள் வியாதிகளால் வருந்துபவருடைய நன்மையைக் கோரி தனித் தனியே வெவ்வேறு வைத்திய நூல்களை (ஸம்ஹிதைகளை) அவரவருடைய பெயரைக்கொண்டு இயற்றலாயினர். அவர்களைத் தவிர விச்வாமித்ரர், கரநாதர் முதலிய வேறு பலரும் ஆத்ரேய ஸம்பிரதாயத்தை அனுஸரித்து ஸம்ஹிதைகள் இயற்றினர் என்றும் தெரியவருகின்றது. சில நூற்றாண்டுகளுக்கு முன்பே அவற்றில் பெரும்பான்மையானவற்றை நாம் இழந்துவிட நேரிட்டதென்பதைக் குறிப்பிட வருந்துகிறோம்.[1] அவற்றுள் அநேகம் வழிகளில் இழக்கப்பட்டவை போக மிகுந்துள்ள ஆத்ரேய ஸம்பிரதாய ஸம்பந்தமானக் கிரந்தங்களுள் முக்கியமாயுள்ளது சரக ஸம்ஹிதையேயாம். புராதனமான இவ்வைத்தியநூல் அக்னிவேச முனிவரால் இயற்றப்பட்டதாகையால், இதற்கு உண்மையில் அக்னிவேச ஸம்ஹிதை யென்றே ஆதிப் பெயராகும். ஆனால் பிறகு சரகாசார்யர் அதைப் பரிசோதித்து ஒழுங்குபடுத்தியதால் சரகஸம்ஹிதை யென்று வழங்கப்படலாயிற்று[2]. அதன் பிறகு மறுபடியும் அந்த

---

1. ஆதியில் கி. மு. 327-இல் மஹா அலெக்ஸாண்டர் முதலிய க்ரீக் தேசத்தவர் இந்தியாவின் மீது படையெடுத்து இத்தேசம் சூறையாடப்பட்டதும், பிறகு 5 வது நூற்றாண்டில் சில ஹூணர்கள் நாட்டைக் கொள்ளையடித்ததும், அப்பால் கி. பி. 11-வது நூற்றாண்டில் கஜனி முஹமத் என்பவன் கொடுங்கோல் புரிந்து நாடு நகரங்களையும் அக்ரஹாரங்களையும் அழித்துப் பாழாக்கியதும், இப்பொழுது சுமார் ஒரு நூற்றாண்டு முதல் மேனாட்டு வைத்திய முறை இங்கு மிகப் பிரபலப்பட்டு இராஜாங்க உதவிகளை எல்லாப் படிகளிலும் மிகுதியாகப் பெற்று வந்திருப்பதும், இக்காரணங்களால் இந்தியசாஸ்திரங்கள் ஆதரிப்பாரற்றுப்போனதும், மற்றும் மறைவிடமான சில முகாந்தரங்களும் இவ்விந்திய நாட்டு வைத்தியமுறை முதலியவற்றைப் பற்றிய சாஸ்திரங்களும், கலைகளும், சிற்பங்களும் சீரழிந்ததற்குக் காரணங்கள் என்பது உலகறிந்த விஷயம்.

2. "அக்நிவேசக்ருதே தந்த்ரே சரகப்ரதிஸம்ஸ்க்ருதே" (சரக-[illegible], முதலிய விடங்களில் கூறப்பட்டுள்ளது.)

ஸம்ஹிதை த்ருடபலன் என்பவரால் ஸங்கிரஹிக்கப்பட்டதோடு, சிகித்ஸாஸ்த்தாநத்தின் இறுதியில் சில அத்தியாயங்களையும், கல்பஸ்த்தாந-ஸித்திஸ்த்தாநங்களையும் இயற்றிச் சேர்த்து அக்கிரந்தத்தைப் பூர்த்திசெய்திருக்கிறார் எனத் தெரிகிறது[1]. ஆக நாம் இப்பொழுது படிக்கும் சரகஸம்ஹிதை அநேகம் பெயர்களால் கழித்தும் தொகுத்தும் திருத்தி யமைக்கப்பட்டும் நிற்கும் ஆயுர்வேதக் கிரந்தம் எனக் கருதப்படுகிறது.

ஆத்ரேயருடைய ஸம்பிரதாயத்தைப் பின்பற்றிய ஆயுர்வேதக் கிரந்தங்களுள் பேளஸம்ஹிதையும் ஒன்று. சரகஸம்ஹிதை முதலியவைதப்போலவே இதுவும் பிராசீனமான பிரமாண நூலாகும். இஃது தஞ்ஜாவூர் அரண்மனைப் புஸ்தகசாலையில் ஏட்டுப் பிரதியாக இருக்கிறது. ஆனால் இது பெரும்பாலும் சிதறுண்டு ஆத்யந்தங்கள் அற்றுப் படிக்க வகையற்றுப்போன நிலைமையில் இருப்பதாகக் கூறப்படுகிறது.[2]

இச்சம்பிரதாயத்தைத் தழுவிய ஹாரீதஸம்ஹிதை யென்கிற மற்றொரு கிரந்தம் முற்காலத்தில் மிகப் பிரஸித்தமாயிருந்தது. இப்பொழுது பண்டைக்காலத்திய அக்கிரந்தம் கிடைத்தற்கரிதாய்விட்டது. ஆனால் இப்பொழுது தேவநாகரலிபியில் அச்சிட்டு வெளியாயுள்ள ஹாரீதஸம்ஹிதை யெனப்படுவது ஆத்ரேயருடைய சிஷ்யர்களில் ஒருவரான ஹாரீதரால் இயற்றப் பட்டதென்று கூறுவதற்கான குறிகளுள்ளதாயில்லை. இதிலுள்ள ச்லோகங்களின் நடையும், விஷயங்களின் தன்மையும் இக்கிரந்தம் ஆர்ஷம் என்று நம்புவதற்கு ஏற்றவையாகக் காணப்படவில்லை. சரகஸம்ஹிதையின் வியாக்யாநத்தில் சக்ரபாணியும், மாதவ நிதாந வியாக்யாநத்தில் விஜயரக்ஷிதனும், ஸ்ரீ கண்டதத்தனும், மற்றும் சிவதாஸன் முதலியவர்களும் அநேகம் பிரகரணங்களில் ஹாரீத ஸம்ஹிதையில் கூறப்பட்டிருப்பதாக எடுத்து உதஹரித்துள்ள வசநங்கள், இப்பொழுது வெளியாயுள்ள ஹாரீதஸம்ஹிதை யெனப்படும் நூலில் எங்கும் காணக் கிடைக்கவில்லையாகையால், சக்ரபாணி, ஸ்ரீ கண்டதத்தன், விஜயரக்ஷிதன், சிவதாஸன் முதலானோருடைய காலத்தில் பிரஸித்தமாயிருந்த ஆர்ஷக் கிரந்தமான ஹாரீதஸம்ஹிதை முற்றிலும் வேறுபட்டதென்றும், ஆகவே தற்போது அச்சிடப்பட்டுள்ளது வேறு எவராலோ எழுதப்பட்டு போலிப்பெயரைப் பெற்றுள்ளதென்றும் கருதவேண்டி யிருக்

---

1. "இதமந்யூநசப்தார்த்தம் தந்த்ரம் தோஷவிவர்ஜிதம், அகண்டார்த்தம் த்ருடபலோ ஜாத: பஞ்சநதே புரே. க்ருத்வா பஹுப்யஸ் தந்த்ரேப்யோ விசேஷாச் ச பலோச்சயம். ஸப்ததசௌஷதாத்யாய ஸித்தி கல்பைரபூரயத்." (சரக-ஸித்தி-அ.12. ச்லோ. 78, 79.)

2. பேளஸம்ஹிதை இப்பொழுது கல்கத்தா யூனிவர்ஸிடியாரால் வெளியிடப்பட்டிருக்கிறது.

கின்றது.[1] மற்ற ஆயுர்வேதஸம்ஹிதைகளின் ஆரம்பத்தில் ஆயுர்வேதம் உலகத்தில் வெளி வந்ததற்கான வழிகளும், அந்தந்த ஸம்ஹிதைகளின் ஆசிரியரோடு வித்யாப்யாஸ காலத்தில் ஸஹபாடிகளாயிருந்த அநேகம் இதர முனிவர்களுடைய பெயர்களும் குறிக்கப் பட்டிருப்பதைக் காணலாம்.[2] இந்த ஹாரீதஸம்ஹிதையிலோ அத்தகைய விஷயம் ஒன்றும் கிடையாது. புநர்வஸு வென்னும் ஆத்ரேயர், அநேகம் சிஷ்யர்களுக்கு முன்னிலையில், அனைவரையும் பொதுப்படவே நோக்கி வைத்தியசாஸ்த்ரோபதேசம் செய்ததாகத் தெரியவருகையில், இந்த ஹாரீதஸம்ஹிதையில் மாத்திரம், ஹாரீதர் ஒருவரே ஏகாந்தத்தில் ஆத்ரேயரை வினவியதாகவும், அவருக்கு மட்டும் ஆத்ரேயமுனிவர் வைத்யோபதேசம் செய்ததாகவும், அவ்வுபதேசப்படி ஹாரீதர் விஷயங்களை இயற்றியதாகவும் எழுதியிருப்பதைப் பார்க்குமளவில்,[3] இது ஆர்ஷமான ஹாரீதஸம்ஹிதையினும் வேறுபட்டதென்கிற விஷயம் புலப்படுகிறது. அல்லாமலும் நாம் போலிப்பெயருள்ளதென்று கூறும் இந்த ஹாரீதஸம்ஹிதையில், ஆத்ரேய முனிவர் சுத்த ஸ்படிகம் போல்வெண்ணிற மேனியுடையவராகவும், விபூதியைப் பூசிக்கொண்டிருந்ததாகவும் வர்ணிக்கப்பட்டிருப்பதைப் பார்த்தால்,[4] இந்த நூல் ஸமீபகாலத்திய ஒருவரால் எழுதப்பட்டதென்பது நன்கு விளங்கும். ஆத்ரேயர் விபூதியை உத்தூளநம் செய்துகொண்டிருந்ததாகப் பிராசீன சரகஸம்ஹிதை முதலிய எந்தக் கிரந்தத்திலும் குறிப்பிடப்படவில்லை. அச்சிட்டுள்ள இந்த ஹாரீதஸம்ஹிதையில், ஆத்ரே

---

1. "சதுர்த்தகோ நாம கதோ தாருணோ விஷமஜ்வர:। சோஷணஸ்ஸர்வதாதூநாம் பல வர்ணாக்நி நாசந:। * * * *" என்று மாதவநிதாந வியாக்யாநத்தில் ஜ்வரப்ரகரணத்தில் விஜயரக்ஷிதன் குறிப்பிட்டுள்ள ச்லோகம் பிரக்ருத ஹாரீதஸம்ஹிதையில் காணப்படவில்லை. "நாநா புஷ்பப்ரகாராணாம் ரஸஸாராத்மகம் மது। தத் சைத்யாத் ஸௌகுமார்யாச்ச ஸர்வைருஷ்ணைர் விருத்யதே." என்கிற ச்லோகம் சரகவியாக்யாநத்தில் (ஸூ.க். 23-ம் அத்தி.) ஹாரீதஸம்ஹிதையிலிருந்து சக்ரபாணியினால் எடுத்து உதஹரிக்கப்பட்டிருக்கிறது; இதுவும் இப்பொழுது அச்சிட்டுள்ள ஹாரீதஸம்ஹிதை யெனப்படுவதில் காணப்படவில்லை. இவ்விதமே வேறு பல ஆதாரங்களும் உண்டு.

2. சரக ஸம்ஹிதையின் ஆரம்பத்திலும், சாரீர ஸ்தாநத்திலும், சிகித்ஸா ஸ்தாநத்திலும் (அத்தி. 1. இரஸாயநபாதம் 4-இல்) இவ்விவரங்களைக் காணலாம். ஸுச்ருதத்திலும் அநேக விடங்களில் உண்டு.

3. இப்பொழுது அச்சிடப்பட்டுள்ள ஹாரீத ஸம்ஹிதை யெனப்படுவதில் ஒவ்வொரு அத்தியாயத்தின் ஆரம்பத்திலும் இவ்விதம் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

4. "சுத்த ஸ்படிகவத் சுத்தம் பூதிபூஷித விக்ரஹம்। ஜடாஜூடாடவீமூலே உஷிதம் சுப்ரகுண்டலம். ஆத்ரேயம் * * * * * *" (அச்சிட்ட ஹாரீதஸம்ஹிதை. அத். 1. ச்லோ. 3)

யர் தாம் ஐந்து ஸம்ஹிதைகளை இயற்றி யிருப்பதாக ஹாரீத ருக்கு விஷயங்கள் உபதேசிக்கையில் கூறும் பாவனையாக எழுதப் பட்டுள்ள இரண்டு ச்லோகங்களும், இச்சிறிய நூல், அக்னிவே சர் முதலியவர்களோடு சாஸ்திர சிரவணம் செய்த மிகப் புராதன ருஷியான ஹாரீதரால் இயற்றப்படாததென்கிற அபிப்பிராயத் திற்கு ஆதாரமான அம்சங்களுள் ஒன்று.[1] வைத்திய ஸம்ஹி தைகள் செய்த அக்னிவேசர்முதல் ஹாரீதர்வரையிலுமுள்ள ஆறு ருஷிகளுக்கும் புநர்வஸு வென்னும் ஆத்ரேயர் சாஸ்திரோப தேசம் செய்தவர் என்பதும், அவ்வாத்ரேயர் தாமாகவே ஒரு கிரந்தமும் இயற்றவில்லை யென்பதும் ஆயுர்வேத இதிஹாஸங்களில் பிரவ்ருத்தியுள்ளவர்களுக்குத் தெரிந்த விஷயம். சரகஸம்ஹிதை யில் அக்னிவேசர், புநர்வஸுவென்னும் ஆத்ரேயருடைய சிறப்பு களை அநேக விடங்களில் வர்ணிக்கையில்[2] அவ்வாத்ரேயர் ருஷி ஸங்கத்திற்கு உபதேசம் செய்ததாகவும், அக்னிவேசர் முதலிய வர்களே ஸம்ஹிதைகளை அவ்வுபதேசாநுஸாரமாய் இயற்றிய தாகவும் வெளிப்படையாகக் கூறியிருக்கிறார்.[3]

---

1. " சதுர்விம்ச ஸஹஸ்ரைஸ் து யயோக்தா சாத்ய ஸம்ஹிதா. ததா த்வாதச ஸாஹஸ்ரா த்விதீயா ஸம்ஹிதா மதா. த்ருதீயாஷ்ட ஸஹஸ்ரைஸ்து சதுர்த்தீ த்ரிபிரேவ ச. பஞ்சமீ திக்பஞ்சசதை: ப்ரோக்தா: பஞ்சாத்ர ஸம்ஹிதா:." (ஹாரீத. 2-வது பக்கம்.)

2. சரகஸம்ஹிதையின் ஆரம்பத்தில் வைத்தியசாஸ்திரப் பயிற்சியை விருத்தி செய்வதற்காகக் கூடிய ருஷிகளுடைய ஸங்கவிவரணத்தைப் படித்துப் பார்க்க.

3. ஆயுர்வேத நூல்களைப் படித்து வருகையில் புநர்வஸ்வாத்ரேயர் என்றும், கிருஷ்ணாத்ரேயர் என்றும், பிக்ஷுவாத்ரேயர் என்றும் மூன்று ஆத்ரேயர்கள் இருந்ததாகத் தெரியவருகின்றது. இவர்களுள் (1) புநர் வஸ்வாத்ரேயர் என்பவரே அக்னிவேசர் முதலியவர்களுக்குச் சரகஸம்ஹிதை யில் அடங்கியவைகளைப் போன்ற விஷயங்களை உபநியாஸபூர்வகமாய் உபதேசித்தவர். (2) கிருஷ்ணாத்ரேயர் என்பவர் ஊர்த்வஜத்ரு ரோகங்கள் எனப்படும் கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்களைப் பற்றிய வியாதிகளையும் அவற்றிற்கான சிகித்சைகளையும் பற்றி சாலாக்யதந்த்ரம் எழுதியவர். ஸ்ரீகண்ட தத்தன் முதலியவர் ஸித்தயோக வியாக்யாநாதிகளில் உதஹரித் துள்ள பிரமாணப்படி இவ்விஷயம் நிச்சயிக்கப்படுகிறது. இவர் புநர்வஸ் வாத்ரேயருக்குப் பிற்காலத்தியவர். (3) பிக்ஷுவாத்ரேயர் என்பவர் பௌத்த மதஸ்த்தர்; பிம்பிஸாரன் என்கிற அரசனுக்கும், பௌத்தஸங்கத்தவருக்கும் பிரதான வைத்தியராயிருந்தவர்; தக்ஷசிலையில் முற்காலத்திலிருந்த கல் லூரியில் இவர் வைத்தியசாஸ்திரம் பிரவசநம் செய்தவர்; பிரஸவ சாஸ் திரமும் பாலபோஷணை முறையும் அடங்கிய (பாலி பாஷையில்) கௌமார பச்ச என்கிற கௌமார ப்ருத்யம் என்னும் நூல் இயற்றியவர். சரக-ஸூ. 25-ம் அத்தியாயம் முதலியவிடத்தில் பிக்ஷுவாத்ரேயர் என்னும் பெயர் குறிப்பிடப்பட்டிருப்பது, ஸம்ஸ்கர்த்தாக்களான சிலரால் தவறுதலாகக் கூறப்பட்டிருக்கலாமென்று கருதப்படுகிறது.

ஆத்ரேயருடைய ஸம்பிரதாயத்தை அனுஸரித்து இயற்றப்பெற்ற இதர வைத்தியக்கிரந்தங்கள் ஜதூகர்ண ஸம்ஹிதை, பராசர ஸம்ஹிதை, க்ஷாரபாணி ஸம்ஹிதை, காரீத ஸம்ஹிதை, விச்வாமித்ர ஸம்ஹிதை என்பனவாம். இந்தக் கிரந்தங்களிலிருந்து அநேகம் பிரமாணவசநங்கள் சரகஸம்ஹிதை, மாதவநிதாநம், ஸித்தயோகம் முதலிய நூல்களின் வியாக்யாநங்களில் சக்ரபாணி முதலிய வியாக்யாதாக்களால் எடுத்துக் கூறப்பட்டிருப்பதிலிருந்து இப்பெயர்கொண்ட ஸம்ஹிதைகள் இருந்ததாகத் தெரியவருகின்றது. ஆனால் அவற்றுள் எதுவும் இப்பொழுது நமது துரத்ருஷ்டவசத்தினால் கிடைக்கக் கூடியதாயில்லை. இதே ஸம்பிரதாயத்தைப் பின்பற்றியவைகளில் இப்பொழுது கிடைக்கக்கூடிய ஸித்தயோகம், சக்ரதத்தஸங்கிரஹம், சிகித்ஸாஸார ஸங்கிரஹம், சார்ங்கதர ஸம்ஹிதை, பாவப்ரகாசம் என்பவைகளும் சேர்ந்தவையாம். ஸித்தயோகம் என்பது ப்ருந்தமாதவன் என்பவரால் சரக-ஸுச்ருத-வாக்படாதிக் கிரந்தங்களில் பிரயோகித்துள்ள சிறந்த முறைகளையும், தன் அனுபவத்தில் வந்த முறைகளையும் ஒரு மிக்க ஒழுங்காகச் சேர்த்து, மாதவ நிதாநத்தில் விவரித்துள்ள வியாதிகளுக்கெல்லாம் அதே வரிசைக் கிரமமாகச் சிகித்ஸைகளைக் கூறி இயற்றப்பட்ட காயசிகித்ஸா பிரதானமான நூல்[1]. சக்ரபாணிதத்தர் என்பவர் ஸித்தயோகத்திலுள்ள கிரமங்களையே அனுஸரித்து சக்ரதத்தஸங்கிரஹம் என்கிற சிகித்ஸாக் கிரந்தத்தை இயற்றினார். சக்ரதத்தர்[2] தனது ஸங்கிரஹத்தில் தன் அனுபவத்தில் வந்த சில ஔஷத முறைகளையும் சேர்த்திருக்கிறார். இது வங்காளத்தில் சில வருஷங்களுக்குமுன் கிடைத்து, அவ்விடத்தில் அச்சாய் வெளியாயிருக்கின்றது. ஆந்திரதேசத்தில் வைத்தியசிந்தாமணிக்கும், பஸவராஜீயத்திற்கும் எவ்வளவு பிராபல்யமுண்டோ, கேரள தேசத்தில் அஷ்டாங்கஹ்ருதயத்திற்கு உபயோகத்தில் எவ்வளவு பிரஸித்தியுண்டோ, அவ்வளவு பிரஸித்தி சக்ரதத்த ஸங்கிரஹத்திற்கு வங்காளத்தில் ஏற்பட்டிருக்கின்றது. இதில் சக்ரதத்தர் சேர்த்திருக்கின்ற அனுபவ முறைகள் சிலவற்றை விலக்கிவிட்டோமானால், அல்லது அம்முறைகளையும் ஸித்தயோகத்தில் சேர்த்துவிட்டோமானால் அப்பொழுது ஸித்தயோகத்தைக் காட்டிலும் இச்சக்ரஸங்கிரஹத்திற்கு எவ்விதத்திலும்

---

1. "நாநாமதப்ரதிதத்ருஷ்டபலப்ரயோகை: ப்ரஸ்தாவவாக்யஸஹிதைரிஹ ஸித்தயோக:. ப்ருந்தேந மந்தமதிநாத்மஹிதார்த்திநாயம் ஸம்லிக்யதே கதவிநிச்சயஜக்ரமேண."—ஸித்தயோகம். (கதவிநிச்சயம் அல்லது 'ருக்விநிச்சயம்' என்று மாதவ நிதாநத்திற்குப் பெயர்.) ப்ருந்தமாதவன் கி. பி. 9-ம் நூற்றாண்டில் இருந்தவர்.

2. சக்ரபாணி என்பவர் வங்காளத்தில் கி. பி. 11-ம் நூற்றாண்டில் வாழ்ந்த மிகப் பிரபலமான வைத்திய சிரேஷ்டர்.

விசேஷ பிராதான்யம் ஏற்படமாட்டாது. சிகித்ஸா ஸாரஸங்கிரஹம் என்பது வங்கஸேனன் என்பவரால் இயற்றப்பட்டது. இதில் வியாதி நிதானங்களும் சிகித்ஸாகிரமமும் கூறப்பட்டிருக்கின்றன. இவருடைய பிதாவின் பெயர் கதாதரன். இந்தக் கிரந்தத்திலிருந்து பாவமிச்ரன் தன் கிரந்தத்தில் அநேக விஷயங்களைப் பிரமாணமா யெடுத்துக் கூறி வங்கஸேனனைப் பற்றியும் குறிப்பிடுவதால், பாவப்ர காசத்திற்கு முற்பட்டது இந்த நூல் என்பது வெளிப்படை [1]. பாவ ப்ரகாசம் என்பது பாவமிச்ரனால் இயற்றப்பட்ட விரிவான வைத் திய நூல். பிரமாணக் கிரந்தங்களாகக் கருதப்படுகிற ஆயுர்வேத நூல்களுள் இதுவே கடைசியாக இயற்றப்பட்டதாகும். இதில் பிராசீன வைத்திய நூல்களிலுள்ள விஷயங்கள் எல்லாம் விவரிக் கப்பட்டிருப்பதோடு, இவருடைய காலத்தில் புதிதாகத் தெரிந்த அநேக வியாதி முதலியவற்றின் விஷயங்களையும் ஆங்காங்கு சேர்த் திருக்கின்றார். [2] சார்ங்கதர ஸம்ஹிதையைப்பற்றி ஏற்கனவே தமிழ்மொழிபெயர்ப்பில் விவரமாக நாம் கூறியிருப்பதால், அந் நூலின் முகவுரையில் அவ்விஷயங்களைப் படித்துப் பார்க்க.

அஷ்டாங்க ஹ்ருதயம் (1) காய சிகித்ஸையை விசேஷமாக விளக்குவதாயிருந்தாலும், சல்யம் முதலிய மற்ற ஏழு அங்கங்களை யும் கூட ஸங்கிரஹமாகக் கூறுகிறது. (2) சல்ய சிகித்ஸையின் வெவ் வேறு அம்சங்கள் அஷ்டாங்க ஹ்ருதயத்தில் ஸூத்திர ஸ்தானத் தில் கடைசி ஆறு அத்தியாயங்களிலும், (3) சாலாக்ய தந்திர விஷ யங்கள், (4) பூதவித்யா விஷயங்கள், (5) கௌமாரப்ருத்ய விஷ யங்கள், (6) அகததந்திர விஷயங்கள், (7) இரஸாயந தந்திர விஷயங் கள், (8) வாஜீகரண விஷயங்கள் இவைகளைப்பற்றிய முக்கியமான அம்சங்கள் இக்கிரந்தத்தினுடைய உத்தரஸ்தானத்தில் வெவ் வேறு அத்தியாயங்களிலும் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே தான் இது "அஷ்டாங்க ஹ்ருதயம்" என்கிற பெயரால் அழைக் கப்படுகிறது. ஆத்ரேய ஸம்பிரதாயத்தையும், தன்வந்தரி ஸம்பிர

---

1. வடகமிச்ருடைய புத்திரரான பாவமிச்ரரால் கி. பி. 1535 இல் அல்லது அதற்குச் சிறிது பிந்திய காலத்தில் பாவப்ரகாசம் இயற்றப்பட் டது. பாவமிச்ரருடைய காலத்திற்குச் சிறிது முந்தி வங்கஸேனன் வங்கா ளத்தில் வாழ்ந்து வந்தான்.

2. பிரங்கிரோகம் என்கிற மேஹவியாதி (Syphilis) பாவப்ரகாசத் திலேதான் கூறப்பட்டிருக்கிறது. அதற்குச் சூகதோஷம் என்கிற பெயர் ஸாதாரணமாய் முற்காலத்திய ஆயுர்வேத வைத்தியர்களால வழங்கப்பட்டும், பிரங்கிக்காரர்களின் மூலமாய் இவ்வியாதி விசேஷமாக இந்தியாவில் அக் காலத்தில் பரவத் தொடங்கியதைக் கண்டு பிரங்கி வியாதியென்று பாவ மிச்ரனால் புதிதாகக் கூறப்படலாயிற்று எனத் தோன்றுகிறது. அவ்விதமே மஸூரிகா என்கிற பெரியம்மைக்குச் சீதளா என்கிற பெயரும் பாவமிச்ரனால் குறிப்பிடப்பட்டது. அபினி, அநேகவிதமான உலோகப்பொருட்கள் முத லியவற்றாலான ஔஷதங்களும் இதில் விசேஷமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

தாயத்தையும் அனுஸரித்துள்ள முக்கியமான கிரந்தங்களுள் அஷ்டாங்க ஹ்ருதயம் ஒன்று,[1] அக்னிவேசர், ஸுச்ருதர் முதலியவர்களுக்குப் பிற்காலத்தியவரால் பலவாறு மாற்றியமைக்கப் பெற்ற சரகஸம்ஹிதை ஸுச்ருத ஸம்ஹிதை முதலிய கிரந்தங்களுக்குப் பிறகு ஆசார்ய வாக்படர் ஆயுர்வேதத்தின் அகில அங்கங்களையும் அநுபவஸித்தமான அநேக ஆராய்ச்சி முறைகளுக்கு இணங்கச் சீர்திருத்தி யமைத்திருக்கும் உண்மை அஷ்டாங்க ஹ்ருதயம், அஷ்டாங்க ஸங்கிரஹம் இவற்றை அமைதியுடன் படித்தால் தெரியவரும். வாக்படர் முதலில் இயற்றிய கிரந்தம் அஷ்டாங்க

1. (1) **சல்யதந்திரங்கள்** தன்வந்தரி ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவையாம் :—பிரத்தியேகமாய் இந்த ஸம்பிரதாயத்தையே அனுஸரித்து ஔபதேநவதந்திரம், ஔரப்ரதந்திரம், ஸுச்ருததந்திரம் (வ்ருத்த ஸுச்ருதம்), புஷ்கலாவததந்திரம், வைதரணதந்திரம், போஜதந்திரம், கோபுரரக்ஷிததந்திரம், பாலுகிதந்திரம், காவீர்யதந்திரம், கபிலதந்திரம், கௌதமதந்திரம் என்கிற கிரந்தங்கள் இயற்றப்பட்டிருந்தன. (2) கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்கள் ஸம்பந்தமான சிகித்ஸைகளைக் கூறுபவை **சாலாக்ய தந்திரங்கள்** :—விதேஹ தந்திரம், நிமிதந்திரம், காங்காயநதந்திரம், கார்க்யதந்திரம், ஸாத்யகிதந்திரம், சௌநகதந்திரம், காலவதந்திரம், காராளதந்திரம், சக்ஷுஷ்யதந்திரம், கிருஷ்ணாத்ரேயதந்திரம் என்பவை சாலாக்யதந்திரங்களாம். (3) மானஸிக வியாதிகளை-முக்கியமாய் பூதபிசாசாதிகளால் ஸம்பவிக்கும் விகாரங்களையும் அவற்றிற்குப் பரிஹாரங்களையும் கூறும் கிரந்தங்கள் **பூதவித்யை** யெனப்படும்; இக்கிரந்தங்களின் பெயர்கள்கூட இப்பொழுது லுப்தமாய் விட்டதாய் அறிகிறோம். (4) கர்ப்பிணியையும் ஸூதிகையையும் (பிரஸவித்தவர்களையும்) பாலர்களையும் போஷித்து நிர்மலமாய் வைத்துக்கொண்டு வியாதிகளினின்றும் காப்பாற்றும் முறைகளையும் விவரிப்பது **கௌமாரப்ருத்யமாகும்** :—ஜீவகதந்திரம், பிக்ஷுவாத்ரேய தந்திரம், பர்வதகதந்திரம், பந்தகதந்திரம், ஹிரண்யாக்ஷதந்திரம் (குமாரதந்திரம்) என்று இது ஸம்பந்தமாய் கிரந்தங்கள் ஏற்பட்டிருந்தன. (5) **அகததந்திரம்** என்றால் விஷசிகித்ஸைகளைக் கூறும் சாஸ்திரம் :—காச்யப ஸம்ஹிதை, உசநஸ்ஸம்ஹிதை, ஸநகஸம்ஹிதை, லாட்யாயநஸம்ஹிதை என்று அகதந்திரத்தை விசேஷமாய் விவரித்து கிரந்தங்கள் இயற்றப்பட்டிருந்தன. (6) **இரஸாயநம்** என்பது கிழத்தனம் சீக்கிரம் ஏற்படாமல் தேஹத்தை மிக்க பலப்படுத்தும் சாஸ்திரம் :—பாதஞ்ஜல தந்திரம், வியாடிதந்திரம், வஸிஷ்டதந்திரம், மாண்டவ்யதந்திரம், நாகார்ஜுந தந்திரம், கக்ஷபுடதந்திரம் முதலியவை இவ்விஷயமாய் ஏற்பட்டிருந்தன. (7) ஸ்த்ரீ-புருடர்களுக்குச் சுக்ரார்த்தவங்களைப் பலப்படுத்தி, அவற்றைச் சுத்தம்செய்து ஸந்தாநவிருத்தி செய்விக்கக்கூடிய விஷயங்களை விவரிப்பது **வாஜீகரண தந்திரம்**; யவநவைத்தியம் அல்லது யூனனி வைத்தியம் இந்த முறையை மாத்திரம் பின்பற்றி ஏற்பட்டதாகும்; இது ஸம்பந்தமான ஆயுர்வேத நூல்களாவன :—குசுமார தந்திரம், ஔத்தாலகிகாமதந்திரம், பாப்ரவ்ய காமஸூத்திரம் முதலியவையாம். மேற்குறிப்பிட்டுள்ள தந்திரங்களின் பெயர்களை அந்தந்த வியாக்யாநக் கிரந்தங்களாலும், இதர ஆயுர்வேதக் கிரந்தங்களில் உதாஹரணமாக எடுக்கப்படும் வாக்கியங்களிலிருந்தும் அறிகிறோம்.

ஸங்கிரஹமாகும்; அதன்பிறகு அஷ்டாங்க ஹ்ருதயம் இயற்றப் பட்டது. முதலிற் கூறியதற்கு ஸங்கிரஹம் என்று பெயர் வழங் கப்பெறினும் அது அஷ்டாங்க ஹ்ருதயத்தினும் விரிவான விஷய மடங்கியது. அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் சில விடங்களில் கம்பீர நடையில் அமைந்த வாக்கியங்களாலும், பலவிடங்களில் ஏராள மதுரமான பத்தியங்களாலும் சாஸ்திர விஷயங்கள் விளக்கப்பட் டிருக்கின்றன. இவ்விரண்டு கிரந்தங்களும் ஒருவரால் இயற்றப் பட்டனவா அல்லது வெவ்வேறு ஆசிரியரால் இயற்றப்பட்டனவா வென்பதில் சிறிது விவாதம் உண்டு. அதைப் பற்றிச் சிறிது விசா ரிப்போம்.

அஷ்டாங்க ஸங்கிரஹம், அஷ்டாங்க ஹ்ருதயம் இவ்விரண்டை யும் ஒருவரே இயற்றவில்லை யென்பது ஹோர்னல் முதலானோரின் கொள்கை.[1] இவ்விரண்டையும் இயற்றியவர் வெவ்வேறு ஆசிரியர் கள் என்பதோடு, அவ்விருவரும் ஒரே காலத்தியவரல்லர் என்றும் கூறப்படுகிறது. ஆனால் இவ்விரண்டு கிரந்தங்களும் ஒருவராலேயே இயற்றப்பட்ட தென்பதற்கு எவ்வளவு ஆதாரங்கள் இருக்கின் றனவோ அவ்வளவு ஆதாரங்கள் ஆசிரியர் வேறுபட்டவர் என்ப தற்கு இல்லையென்றே நமக்குப் புலப்படுகின்றது. அஷ்டாங்க ஹ்ருதயத்தின் உத்தர ஸ்தானத்தின் இறுதியில் இங்ஙனம் கூறப் படுகிறது :—"எட்டு அங்கங்கள் அடங்கிய வைத்திய சாஸ்திர மாகிற பெருங்கடலைக் கடைந்து அஷ்டாங்க ஸங்கிரஹம் என்கிற மஹத்தான யாதோர் அமுதத்திரள் கிடைத்ததோ அதிலிருந்து, வேறொரு கிரந்தம், விஸ்தாரமான நூலைப் படிப்பதற்கு இயலாத வர்களுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்வதற்காகச் சொற்ப முயற்சியில் மிகுந்த பயன் தரக்கூடியவாறு இங்ஙனம் இயற்றப்பட் டது."[2] இவ்விஷயம், அஷ்டாங்க ஸங்கிரஹம் இயற்றிய வாக் படரே அஷ்டாங்க ஹ்ருதயத்தையும் இயற்றினார் என்பதை விளக்குகின்றது. அஷ்டாங்கஸங்கிரஹம் வேறொருவரால் இயற்றப் பட்டிருந்தால் அதை வாக்படர் தன் கிரந்தத்திற்கு ஆதாரமாக எடுக்க விரும்பியிருக்கமாட்டார். ஏனெனில் சரக-ஸுச்ருத ஸம் ஹிதைகளைத் தவிர அக்னிவேசருக்கு ஸஹபாடியாயிருந்த பேளர் முதலிய வேறு முனிவர்களுடைய கிரந்தங்களையே இரண்டாந்தர

---

1. Hœrnle's Medicine of Ancient India என்னும் புஸ்தகம் முதற்பாகம் 10-ம் பக்கம் பார்க்க.

2. "அஷ்டாங்கவைத்யகமஹோததிமந்தநேந யோऽஷ்டாங்க ஸங்க் ரஹமஹாம்ருதராசிராப்த :. தஸ்மாதநல்பபலமல்பஸமுத்யமாநாம் ப்ரீத் யர்த்தமேததுதிதம் ப்ருதகேவ தந்த்ரம்." (உத். ஸ்தா. 40-அத். 80-ம் பத்தியம்.)

மாக மதிக்கின்றார் இவ்வஷ்டாங்க ஹ்ருதய கர்த்தா[1]. ஆகவே வேறொரு ஆசிரியரால் இயற்றப்பட்ட ஸங்கிரஹத்தைப் பிரமாணக் கிரந்தமாய் நினைப்பதாகவும், அதை ஆதாரமாகக்கொண்டு அஷ்டாங்க ஹ்ருதயத்தை இயற்றியதாகவும் இவ்வாக்படர் கூறியிருக்கவே முடியாது.

இவ்விரண்டு நூல்களுக்கும் ஆசிரியர் வேறுபட்டவர் அல்லர் என்பதை அஷ்டாங்க ஹ்ருதய வியாக்யாநத்தில் அருணதத்தன் ஆங்காங்கு கூறியுள்ள சில விஷயங்களைக்கொண்டும் நாம் நிர்த்தாரணம் செய்யலாம். "தேப்யோதிவிப்ரகீர்ணேப்ய: ப்ராயஸ் ஸாரதரோச்சய:. க்ரியதேஷ்டாங்க ஹ்ருதயம் நாதிஸம்க்ஷேப விஸ்தரம்" (ஸூத். அத். 1. ச்லோ. 4.) என்கிற ச்லோகத்திற்கு வியாக்யாநம் செய்யுமிடத்து "ஸாரதரோச்சய:" என்னும் பதத்திற்கு இங்ஙனம் உரை எழுதுகிறார்:— "ஸாரதர என்னும் பதத்தைக் கிரஹித்ததால் பின்வரும் விஷயத்தை விளங்கச் செய்கிறார்; அதாவது ஸங்கிரஹக் கிரந்தத்திலேயே ஸாரமான விஷயங்கள் ஒருமிக்கச் சேர்க்கப்பட்டுப் போயின; இக்கிரந்தத்தில் அதிலும் ஸாரமான முக்கியாம்சங்கள் திரட்டப்படுகின்றன; அஃதென்னவென்றால் அஷ்டாங்க ஹ்ருதயமேயாம். ஸர்வாவயவங்களுள் ஹ்ருதயமே முக்கியமான மர்மஸ்தலமாகையால், அது போன்றது இக்கிரந்தம் எனப் பொருள்படுமாறு இப்பெயரிடப் பெற்றதென்க."[2] இந்த வியாக்யாந வாக்கியத்தில் "ஸங்கிரஹக் கிரந்தத்திலேயே" என்று குறிப்பிட்டிருப்பதற்கு "அஷ்டாங்க ஸங்கிரஹம்" என்பது பொருள்; ஏனெனில் வேறு ஒரு கிரந்தமும் "ஸங்கிரஹம்" என்று பிரஸித்தியுடையதாயில்லை யென்பது ஆயுர்வேத நூல்களைப் படித்தவர்களுக்குத் தெரியும். மேலும் ஸூத்திர ஸ்த்தாநம் ஐந்தாம் அத்தியாயத்தில் 18-ம் ச்லோகத்திற்கு வியாக்யாநம் எழுதுகையில் "ஸங்கிரஹத்திற் கூறிய ஜலத்தைக் கொதிப்பிப்பதற்கான முறை, இக்கிரந்தம் சுருக்கமாய் வரையப்பட வேண்டுமென்பதைக் கருதி இங்கு மொழியப்படவில்லை"[3] என்று அருணதத்தன் எழுதுகிறார். இந்த ஸந்தர்ப்பத்தில் ஜலத்தைக் கொதிப்பிக்கும் முறையை (க்வதந லக்ஷணத்தை) விபரித்துக் கூறும் அஷ்டாங்க ஸங்கிரஹத்து ச்லோகமும் அவ்வியாக்யாதா

1. "ருஷிப்ரணீதே ப்ரீதிச் சேத் முக்த்வா சரகஸுச்ருதௌ. பேளாத்யா: கிம் ந பட்யந்தே தஸ்மாத் க்ராஹ்யம் ஸுபாஷிதம்." (உத்த-ஸ்த்தா-40 அத். 87-ச்லோ.)

2. "ஸாரதரக்ரஹணேந ஏதத் த்யோதயதி; ஸங்க்ரஹேணைவ ஸாராணுமுச்சய: க்ருத:; அநேந ததா ஸாரதாராணும் ப்ரதேசாநாமுச்சய: க்ரியதே இதி. கிம் நாம; அஷ்டாங்க ஹ்ருதயமேவ ஸாந்வயார்த்த மஸ்ய நாம." (அஷ்டாங்க ஹ்ருதய வியாக்யாநம்).

3. "ஸங்க்ரஹோக்தம் ச க்வதநலக்ஷணம் ஸங்க்ஷேபாபிப்ராயேண நேஹோக்தம்." அருணதத்த வியாக்யாநம்.

வால் எடுத்து எழுதப்பட்டிருக்கின்றது.[1] இதைக் கொண்டு ஸங்கிர ஹம் என்றால் அருணதத்தனால் அஷ்டாங்கஸங்கிரஹந்தான் குறிக்கப்படுகிறது என்றும், ஸங்கிரஹத்திற்கும் ஹ்ருதயத்திற்கும் ஆசிரியர் ஒருவரே என்றும் அவர் குறிப்பிடுகிறார். "நவநீதம் நவம் வ்ருஷ்யம் சீதம் வர்ணபலாக்நிக்ருத்" (ஸூ. அத். 5. ச்லோ. 35) என்கிற ச்லோகத்தின் வியாக்யாநத்திலும் "சீதம் ஸ்வாது கஷாயாம்லம் நவநீதம் நவோத்த்ருதம்—என்று ஸங்கிரஹத்திலும் கூறப்பட்டிருக்கிறது" என்றுளது[2]. இங்ஙனமே "உஷ்ண: குலுத்தா: பாகேம்லா:" (ஸூ. அத். 6. 18ம் ச்லோ.) என்கிற ச்லோகம், "உஷ்ணஸ் த்வக்ச்யோ ஹிமஸ்பர்ச:." (ஸூ. அத். 6. ச்லோ. 21) என்கிற ச்லோகம் இவை முதலிய அநேக விடங்களில் ஸங்கிரஹத்திற்கும் ஹ்ருதயத்திற்கும் ஆசிரியர் ஒருவரே யென்பதற்கான ஆதாரங்களைக் காட்டுவதற்கேற்ற குறிப்புகள் அருணதத்த வியாக்யாநத்தில் அநேகம் உண்டு. அஷ்டாங்க ஹ்ருதயசாரீர ஸ்தாநத்தின் முதல் அத்தியாயத்தில் 8, 9-வது ச்லோகங்களின் வியாக்யாநத்தில் அருணதத்தன் "ஆகையினாலேயே இந்த கிரந்தகர்த்தா ஸங்கிரஹத்தில் வேறுவிதமாகக் கூறினார்."[3] என்று எழுதியிருப்பது முக்கியமாகக் கவனிக்கத் தக்க விஷயம்.

ஸ்தாநங்களின் பெயர்களும், அவைகளின் எண்ணிக்கையும், அவற்றில் அடங்கிய அத்தியாயங்களின் பெயர்களும் இவ்விரண்டு நூல்களிலும் ஒத்திருப்பதோடு, விஷயங்களும் பத்தியங்களும் பெரும்பான்மையான விடங்களில் ஒன்றிலிருப்பவையே மற்றொன்றிலும் அமைந்திருப்பதை ஆதியோடந்தமாய் இரண்டையும் உற்று நோக்குபவர்கள் காணக்கூடுமாகையால், அதைக்கொண்டும் இவ்விரண்டுக்கும் ஆசிரியர் ஒருவரேயென்று சொல்லத் தடையிராது. இனி, பிற்காலத்திய வைத்திய நூலாசிரியர்கள் சரக-ஸுச்ருதாதி ஸம்ஹிதைகளிலிருந்து விஷயங்களை அவ்வவ்வாறே கிரஹித்துத் தமது நூல்களில் அநேகவிடங்களில் சேர்த்துக்கொண்டது போலவே[4], அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் அதன் ஆசிரியரான வாக்படர் அஷ்டாங்க ஸங்கிரஹத்திலிருந்தும் விஷயங்களை யெடுத்துக்

1. "க்ஷீணபாதத்ரிபாகார்த்தம் தே சார்த்தகுருலாகவாத். க்வதிதம் பேநரஹிதமவேகமமலம் ஹிதம்." என்று—அருணதத்தனால் மேற்கோளாக எடுக்கப்பட்ட ச்லோகம் அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் (ஆனந்தாச்ரம கிரந்தாவளிப் பிரசுரத்தில்) 23-ம் பக்கத்தில் காணப்படும்.

2. அருணதத்த வியாக்யாநத்தில் மேற்கோளாயுள்ள இந்த ச்லோகம் அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் (ஆனந்தாச்ரம 24-ம் பக்கம்) காணப்படும்.

3. "அத ஏவாயமேவ தந்த்ரகாரோந்யதா ஸங்க்ரஹே ஜகாத." (அஷ்டாங்க ஹ்ருதய வியாக்யாநம்.)

4. மாதவநிதாநம், சக்ரதத்த ஸங்கிரஹம் முதலியவற்றில் நிதாநாதி விஷயங்களடங்கிய அநேக அம்சங்கள் சரகஸம்ஹிதை முதலியவற்றிலிருந்து எடுத்துக் கையாளப்பட்டிருப்பது வெளிப்படை.

கையாண்டிருக்கலாம் என்பதற்கும் முற்கூறிய ஆதாரங்களே ஸமாதாநமாகும். மேலும் பிற்காலத்திய வைத்திய நூலாசிரியர் பலர் சரகாதி ஸம்ஹிதைகளிலிருந்து வைத்திய பரிபாஷைகள், நிதாநங்கள், சிகித்ஸைகள் இவை ஸம்பந்தமான விஷயங்களடங்கிய அம்சங்களே அவ்வப்படியே கிரஹித்து அவரவருடைய நூல்களில் கையாண்டிருப்பது உண்மையெனினும், கிரந்தாரம்பத்தில் இயற்றும் மங்களச்லோகாதிகளும், கிரந்தத்தின் முடிவுரையில் மொழியப்படும் விஷயங்களுங்கூட எவராலும் எவ்வைத்திய நூலிலும் அங்ஙனமே கையாளப்படுவதில்லை, அஷ்டாங்கஸ்கிரஹத்திலும் அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் ஆதியிற் கூறியுள்ள மங்களச்லோகங்களும் ஆரம்ப விஷயங்களும் சற்றேறக்குறைய ஒரே வகையாயிருக்கின்றன.[1] அஷ்டாங்கஸங்கிரஹத்தின் இறுதியில் இயற்றியுள்ள முடிவுரை ச்லோகங்களும் அஷ்டாங்க ஹ்ருதயத்தின் இறுதியிலும் அவ்வாறே கூறப்பட்டிருக்கின்றன.[2] இவ்விரண்டு நூல்களுக்கும் ஆசிரியர் ஒருவரே யென்பதற்கு ஆதாரங்கள் இவ்வளவு இருக்கையில், ஹோர்னெல் முதலானோர் இவ்விரண்டுக்கும் ஆசிரியர்கள் வெவ்வேறு என்று கற்பனை செய்யும் காரணம் ஏற்கத் தகுந்ததா என்று விவேகிகள் கூறவேண்டும். ஆகவே, ஆசார்ய வாக்படர் ஆதியில் ஆங்காங்கு சிதறுண்டிருக்கும் ஆயுர்வேத விஷயங்களையெல்லாம் ஒருமிக்கத் திரட்டி அஷ்டாங்க ஸங்கிரஹத்தை இயற்றி, அப்பால் அக்கிரந்தம் விஸ்தாரமாயிருப்பதால் ஆயுர்வேதத்தைக் கற்க ஆரம்பிப்பவருக்கு அது அவ்வளவு எளிதான நூலல்லவென்று யோசித்து, அதைச் சுருக்கி அஷ்டாங்க ஹ்ருதயத்தை இயற்றினர்

1. அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் மங்களச்லோகங்களில் ஒன்று :— "ராகாதிரோகாஸ் ஸஹஜாஸ் ஸமூலா யேநாசு ஸர்வே ஜகதோப்யபாஸ்தா:. தமேகவைத்யம் சிரஸா நமாமி வைத்யாகமஜ்ஞாம்ச் ச பிதாமஹாதீந்-" (பிறகுள்ள விஷயம்) "அதாத ஆயுஷ்காமீயம் அத்யாயம் வ்யாக்யாஸ்யாம:-இதி ஹ ஸ்மாஹுராத்ரேயாதயோ மஹர்ஷய:. ஆயு: காமயமாநேந தர்மார்த்த ஸுக ஸாதநம். ஆயுர்வேதோப தேசேஷு விதேய: பரமாதர:." அஷ்டாங்க ஹ்ருதயத்தின் மங்கள ச்லோகம் முதலியது :— "ராகாதிரோகாந் ஸததாநுஷக்தாந் அசேஷகாயப்ரஸ்ருதா நசேஷாந்:. ஔத்ஸுக்ய மோஹாரதிதாந் ஜகாந யோ பூர்வவைத்யாய நமோஸ்து தஸ்மை. அதாத ஆயுஷ்காமீயம் அத்யாயம் வ்யாக்யாஸ்யாம:. இதி ஹ ஸ்மாஹுராத்ரேயாதயோ மஹர்ஷய:. ஆயு: காமயமாநேக தர்மார்த்த ஸுகஸாதநம், ஆயுர்வேதோபதேசேஷு விதேய: பரமாதர:."

2. அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் முடிவுரையிலுள்ள ச்லோகங்கள் :— "அபிநிவேச வசாதபியுஜ்யதே ஸுபணிதேபி ந யோ த்ருடமூடக:. படது யத்நபர: புருஷாயுஷம் ஸ கலு வைத்யகமாத்யமநிர்வித:. ருஷிப்ரணீதே ப்ரீதிச் சேத் முக்த்வா சரக ஸுச்ருதௌ. பேடாத்யா: கிம் ந பட்யந்தே தஸ்மாத் க்ராஹ்யம் ஸுபா ஷிதம்." அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் இறுதியில் இதே பத்தியங்கள் முடிவுரையாகக் கூறப்பட்டிருக்கின்றன.

என்று ஆசார்ய பாரம்பரையில் நாம் கேள்வியுற்றதைக் கொண்டும், முற்குறிப்பிட்ட இதர ஆதாரங்களைக் கொண்டும் இங்ஙனம் நிச்சயிக்கின்றோம்.

பிறகு இரஸவர்க்கம், லோஹவர்க்கம், தாதுவர்க்கம் முதலியவற்றைக்கொண்டு செய்யப்படும் ஔஷத முறைகளையும் சிகித்ஸா முறைகளையும் விளக்கும் **இரஸரத்தின ஸமுச்சயம்** என்கிற கிரந்தத்தைப்பற்றியுள்ள சில விவாதங்களையும் நாம் குறிப்பிட்டு ஸமாதாநம் கூற விரும்புகிறோம். இக்கிரந்தமும் அஷ்டாங்க ஸங்கிரஹாதிகள் இயற்றிய வாக்படரால் செய்யப்பட்டதென்பது ஸம்ஸ்கிருத வைத்தியநூல்களைக் கற்றறிந்த பலரது கொள்கை. ஆனால் இப்பிரஸித்திக்குள்ள மறுப்பை முதலிற் குறிப்பிடுவோம்:—(1) மிகவும் விஸ்தாரமான அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் இரஸரத்தின ஸமுச்சயத்தினுடைய எந்த வாக்கியமாவது விஷயமாவது ஓரிடத்திலும் காணப்பட வில்லையென்றும், (2) அஷ்டாங்க ஸங்கிரஹம் இயற்றிய வாக்படருக்கு மிகவும் பிந்திய காலத்தவரான ஸோமதேவன் முதலியவர்களுடைய கிரந்தங்களிலிருந்து விஷயங்கள் இரஸரத்தின ஸமுச்சயத்தில் கையாளப் பட்டிருக்கின்றனவென்றும், (3) பத்திய நடை முதலியவை யெல்லாம் பிராசீன அஷ்டாங்க ஹ்ருதயம் முதலியவற்றிலிருப்பவை போல் அமையாமல் ஸமீப காலத்தியவரால் இயற்றப்பட்டவைபோல் காணப்படுகின்றனவென்றும் மஹாமஹோபாத்யாய கவிராஜ கணநாதஸேனன் முதலானோர் கூறுகிறார்கள். (1) முதற்காரணத்தைச் சற்று விசாரிப்போம். அஷ்டாங்க ஸங்கிரஹமும் அஷ்டாங்க ஹ்ருதயமும் சரகஸம்ஹிதை முதலியதைப்போலவே இரஸ லோஹாதிகள் சேர்ந்த ஔஷத முறைகளின் ஸம்பந்தமில்லாமல் மூலிகை முதலியவைகளாலான யோகங்களையும் அவற்றாலான சிகித்ஸைகளையும் விவரிப்பதற்கென்றே ஏற்பட்டவை யென்று ஸ்ரீ கணநாத ஸேனனுக்கும், அவர் இங்ஙனம் எழுதியதற்கு ஆதாரமான இந்திய ரஸாயந சரித்திரம் இயற்றிய ஸ்ரீமான் பி. ஸி. ராய் அவர்களுக்கும் தெரிந்த விஷயமே. இரஸரத்தின ஸமுச்சயமோ, அஷ்டாங்க ஸங்கிரஹாதிகள் இயற்றிய பிறகு ஏற்பட்ட நூலாகும். அஷ்டாங்க ஸங்கிரஹாதிகள் மூலிகைகளையே பிரதானமாக ஔஷதமுறைகளில் உபயோகிக்கும் உபாயங்களைக் கூறுவதற்கு ஏற்பட்டதனாலும், இரஸ லோஹாதிகளைப்பற்றித் தனியே பிற்காலத்தில் இரஸரத்தின ஸமுச்சயம் இயற்றக் கருதியதாகத் தோன்றுவதாலும் முதலிற் கூறியவைகளில் பிற்கூறிய இரஸக்கிரந்தத்திலுள்ள எவ்விஷயமும் குறிப்பிடவேண்டிய அவகாசமுமில்லை அவ்சியமுமில்லையென்று நாம் சொல்லுகிறோம். அன்றியும் "இரஸரத்தின ஸமுச்சயம்" என்கிற பெயரில் "ஸமுச்சயம்" என்பதற்குள்ள இரஹஸ்யத்தைக் கவனித்தாலும் இதன் உண்மை விளங்கும். 'உச்சயம்'

என்ருல் திரட்டிச்சேர்க்கப்பெற்றது என்றும், 'ஸமுச்சயம்' என்ருல் நன்கு சேரகத் திரட்டப்பெற்றது (என்ருல் மிகவும் ஸார மான விஷயங்களை ஒருமிக்கத் திரட்டி இயற்றப்பட்டது) என்றும் பொருளாகும். ஆங்காங்கு சிதறுண்ட ஆயுர்வேத விஷயங்களின் மிகவும் ஸாரமான அம்சங்களைத் திரட்டி அஷ்டாங்க ஹ்ருதயம் இயற்றப்படுகிறதென்கிற விடத்திலும், "ஸாரதரோச்சயம்" என் கிற சப்தத்தை வாக்படர் பிரயோகித்திருக்கிருர்.[1] சாஸ்திரத்தின் மர்மங்களெனத் தகும் மிகவும் ஸாரமான விஷயங்கள் அடங்கிய தால் ஒரு கிரந்தத்திற்கு "ஹ்ருதயம்" என்றும், இரத்தின மெனத்தகும் மிகவும் ஸாரமான அம்சங்களின் திரட்சியாயுள்ள தனது இரஸக் கிரந்தத்திற்கு "ஸமுச்சயம்" என்றும் பெயரிட்ட தாக நமது கருத்து. அதாவது அஷ்டாங்க ஹ்ருதயத்தின் ஆரம் பத்திற் குறிப்பிட்டுள்ள "ஸாரதரோச்சயம்" என்பதையே கிர ஹித்து அப்பெயரை மீண்டும் ஸங்கிரஹம் செய்து, தமது இரஸக் கிரந்தத்தின் பெயரோடு "ஸமுச்சயம்" என்பதாகச் சேர்த்து வாக்படர் வெளியிட்டார் என்று தெரிகிறது. மூலிகைகளென் னும் ஒஷதி முறைகளையே முக்கியமாகக் கொண்ட அஷ்டாங்க ஸங்கிரஹாதிகளிலிருந்து எடுத்து இரஸரத்தின ஸமுச்சயத் தில் ஒன்றும் குறிப்பிடவேண்டிய அவசியமில்லையாகையால் அதைப்பற்றியும் ஒன்றும் ஆக்ஷேபிப்பதற்கில்லை. ஆனுல் அஷ் டாங்க ஸங்கிரஹத்திலும், ஹ்ருதயத்திலும் இயற்றியிருக்கும் மங்களச்லோகமும் முடிவுரை முதலியதும் ஒருவாறு அங்ஙனமே இரஸரத்தின ஸமுச்சயத்திலும் அமைந்திருப்பதை அனைவரும் காணலாம்.[2] அஷ்டாங்க ஸங்கிரஹம் முதலியவற்றை இயற்றிய

1. "தேப்யோதிவிப்ரகீர்ணேப்ய: ப்ராயஸ் ஸாரதரோச்சய:. க்ரிய தேஷ்டாங்க ஹ்ருதயம் * * * *" (ஸூ. அத். 1. ச்லோ. 4.)

2. அஷ்டாங்க ஸங்கிரஹ-அஷ்டாங்க ஹ்ருதயங்களின் மங்களச்லோ கங்கள் இம்முகவுரையின் டிப்பணியில் உச-ம் பக்கத்தில் எடுத்துக் குறிப் பிடப் பட்டிருக்கின்றன; அவற்றில் இருப்பதுபோலவே இரஸரத்தின ஸமுச்சயத்தின் மங்கள ச்லோகத்திலும் "பக்தாநாம் ப்ரபவ ப்ரஸம்ஹ்ருதி ஜரா ராகாதி ரோகா: க்ஷுத் சாந்திம் யாந்தி ஜகத்ப்ரதாநபிஷஜே தஸ்மை பரஸ்மை நம:" என்று கூறி ராகாதிரோகா: முதலிய விஷயங்கள் அடங்கி யிருப்பதைக் கவனிக்கவும்.

அஷ்டாங்க ஸங்கிரஹ-ஹ்ருதயங்களிலும், இரஸரத்தின ஸமுச்சயத் திலும் முடிவுரையிலுள்ள விஷயங்களுக்கும் ஒற்றுமை அடியில் குறிப்பிடப் படும் விஷயங்களால் தெரியவரும்:—"பலம் ப்ரயாத்யூர்த்வமதஸ் த்ரிவ் ருச்ச ப்ரத்யக்ஷத: கஸ்ய ந ஸித்திமேதி" (இதன் பொருள்—மதநபலம் என்கிற மருக்காரை மேல் நோக்கி வாந்தியுண்டுபண்ணும் என்றும், சிவதை வேர் கீழ்நோக்கி விரேசநமுண்டுபண்ணுமென்றும், இவ்வாறு பிரத்யக்ஷ விஷயங்களை எவர் சொன்னுல் பலிக்காது?) (இரஸரத்தி. அத். 30. ச்லோ. 106.)

வாக்படர் ஸிம்மகுப்தருடைய புத்திரன் என்றும், தன் பிதாமஹ னுடைய வாக்படன் என்கிற பெயரே தனக்கும் இடப்பட்டதென் றும் அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் முடிவுரையில் தானே எழுதி யிருக்கிறார்.[1] இந்த இரஸக்கிரந்தத்திலும் "ஸிம்மகுப்தருடைய புத்திரனால் இரஸரத்தின ஸமுச்சயம் இயற்றப்படுகின்றது" என்று ஆரம்பத்திலேயே மொழியப்பட்டிருக்கின்றது.[2] ஆனால் இந்த அரை ச்லோகம் தற்காலத்தியவரால் இடையில் சேர்க்கப் பட்டிருக்கலாம் (பிரக்ஷிப்தம்) என்று பிரொபஸர் பி. ஸி. ராயும், அவரை அனுஸரித்து ஸ்ரீகணநாத ஸேனனும் கூறுவதற்குக் கார ணம் புலப்படவில்லை. ஆகையால் அவர்களுடைய கொள்கையை பலமாக ஆக்ஷேபிப்பதோ, கிரந்தத்தில் எழுதப்பட்டும் தொன்று தொட்டு வைத்திய சாஸ்திரவல்லோரால் ஒருங்கே வழங்கப்பட்டும் ஸ்திரப்பட்டுள்ள விஷயத்தை மறுபடியும் ஸ்திரப்படுத்த முயலு வதோ அவசியமல்ல. அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் உத்தர ஸ்த் தானத்தில் வாஜீகரணாத்தியாயத்தின் முடிவில் கூறியுள்ள அநேகம் ச்லோகங்களும், அச்வினீ தேவதைகளுடைய பிரபாவ விருத்

---

"ஊர்த்வமேதி மதநம் த்ரிவ்ருதாதோ வஸ்து மாத்ரக இதி ப்ரதி பாத்யே. மத்விதோ யதி வதேததவாத்ரி: கத்யதாம் க இவ கார்மணி பேத:" (இதன் பொருள்:—மதநபலம் மேல்நோக்கி வமநம் செய்விக்கும், சிவதைவேர் கீழ்நோக்கி விரேசநம் உண்டுபண்ணும் என்று வஸ்துகுணம் மாத்திரம் பிரதிபாதநம் செய்யப்படுங்கால், அதை என்னைப்போன்றவன் சொன்னாலும் அத்ரிமஹர்ஷியைப் போன்றவர் சொன்னாலும் காரியத்தில் என்ன பேதம் ஏற்படுமோ சொல்லுங்கள்!) (அஷ்டாங்க ஸங்கிரஹம். உத்தரஸ்த்தாநம் முடிவில்.)

"அபிதாத்ருவசாத் கிம் வா த்ரவ்யசக்திர் விசிஷ்யதே." (இதன் பொருள்—அந்தந்த ஆசிரியருக்குத் தகுந்தவாறு பதார்த்தங்களுடைய சக்தி யும் வித்தியாஸப்படுமோ?) (அஷ்டாங்க ஹ்ருதயம் உத்தர. அத்தி. 40. ச்லோ 86.)

"இதமாகமஸித்தத்வாத் ப்ரத்யக்ஷபலதர்சநாத். மந்த்ரவத் ஸம்ப்ரயோக தவ்யம் ந மீமாம்ஸ்யம் கதஞ்சந"—அஷ்டா. ஹ்ருதய. உத்தர. அத். 40. ச்லோ. 81. "ஏததாகம ஸித்தத்வாத் ப்ரத்யக்ஷபலதர்சநாத். மந்த்ரவத் ஸம்ப்ரயோக்தவ்யம் ந மீமாம்ஸ்யம் கதஞ்சந." இரஸரத்தி. அத்-30. ச்லோ 111. அஷ்டாங்க ஸங்கிரஹம் 418-ம் பக்கத்திலும் இதே ச்லோகம் உண்டு.

"அஜ்ஞாதசாஸ்த்ரஸத்பாவாந் சாஸ்த்ரமாத்ரபராயணாந். தாந் வர்ஜ யேத் பிஷக்பாசாந் பாசாந் வைவஸ்வதாநிவ" அஷ்டாங்க ஹ்ருதய. உத்த. அத்-40. ச்லோ. 76. இதே ச்லோகம் இரஸரத்தின ஸமுச்சயத்தில் 30-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. (114-வது ச்லோ.)

1. "பிஷக்வரோ வாக்பட இத்யபூந் மே பிதாமஹோ நாமதரோஸ்மி யஸ்ய. ஸுதோபவத் தஸ்ய ச ஸிம்மகுப்தஸ் தஸ்யாப்யஹம் ஸிந்துஷு லப்த்த ஜந்மா" (அஷ்டாங்க ஸங்கிரஹம். அத்-50.)

2. "ஸுநுநா ஸிம்மகுப்தஸ்ய ரஸரத்நஸமுச்சய:" (இரஸரத்தி, அத்தி. 1. ச்லோ-9.)

தாந்தங்களின் வர்ணனைகளும் அவ்வவ்விதமே இரஸரத்தின ஸமுச்சயத்தின் முடிவிலும் வழங்கப் பட்டிருப்பதையும் படிப்பவர் கவனிக்கவேண்டும்.[1] மேலும் அஷ்டாங்க ஹ்ருதய-அஷ்டாங்க ஸங்கிரஹங்களில் எந்த கிரமத்தில் வியாதிகளுக்குச் சிகித்ஸாமுறைகளை விவரிக்கும் அத்தியாயங்கள் அமைக்கப்பெற்றிருக்கின்றனவோ, அதே கிரமத்தில் அவ்விஷயங்கள் இரஸரத்தின ஸமுச்சயத்திலும் அமைந்திருக்கின்றனவென்பதையும் ஆராய்ச்சி செய்பவர் ஆலோசிப்பாராக.

(2) இனி இரண்டாவது காரணத்தைக் கவனிப்போம். அதாவது அஷ்டாங்க ஹ்ருதயம் முதலியதை இயற்றிய வாக்படருக்குப் பிற்காலத்தியவரான ஸோமதேவன் முதலியவர்களுடைய கிரந்தங்களிலிருந்து சில விஷயங்கள் இரஸரத்தின ஸமுச்சயத்தில் கிரஹித்துச் சேர்க்கப்பட்டிருப்பதாகவும், ஆகவே இரஸரத்தின ஸமுச்சயம் இயற்றிய வாக்படர் அஷ்டாங்க ஹ்ருதயாதிகளை இயற்றிய வாக்படரினும் வேறுபட்டவர் என்பதாகவும், ஆகவே இவ்வாக்படர் மிகவும் பிற்காலத்தியவர் என்றும் கூறுபவருடைய கூற்றுக்குச் சமாதானம் சொல்லுகிறோம். இரண்டு ஸோமதேவர்களைப்பற்றி நாம் கேள்விப்படுகிறோம். 11-ம் நூற்றாண்டில் இருந்த ஸோமதேவன் கதாஸரித்ஸாகரம் இயற்றியவனாவன். இரஸக்கிரந்தம் இயற்றிய ஸோமதேவன் ஆறாம் நூற்றாண்டுக்கு முந்தியவன். இக்கொள்கைக்கு ஆதாரமான விஷயங்களை நாம் இரஸரத்தின ஸமுச்சய மொழிபெயர்ப்பின் நூன்முகத்தில் விளக்கியிருக்கிறோம். ஆனால் இரஸரத்தின ஸமுச்சயத்தில் பிற்காலத்திய சில ஸித்தர்களுடைய பெயரும், ஆங்காங்கு சில விஷயங்களும் ஒருக்கால் காலக்கிரமத்தில் பிரக்ஷிப்தங்களாகச் சேர்ந்திருக்கக் கூடும் என்று நமக்கும் ஒரு சிறிது ஸந்தேஹம் உண்டென்றாலும், இரஸரத்தின ஸமுச்சயத்திற்கும், அஷ்டாங்க ஸங்கிரஹாதிகளுக்கும் ஆசிரியர் ஒருவரே யென்கிற விஷயத்தில் மாத்திரம் யாதொரு ஆக்ஷேபமும் சொல்ல முடியாதென்பது நமது ஸித்தாந்தம்.

---

1. லோபயந்த்யாதுரம் வைத்யா யே சித்தை: கர்மகௌசலை:. தேப்யோ ரக்ஷேத் ஸதாத்மாந மாத்மா யஸ்மாத் ஸுதுர்லப:. தே குணக்ஷாவத்கஞ்சித்துத்தார்ய நியதாயுஷம். க்நந்தி வைத்யாபிமாநேந சதாம்ய நியதாயுஷாம். * * * * * * க்வசித் தர்ம: க்வசின் மைத்ரீ க்வசிதர்த்த: க்வசித் யச:. கர்மாப்யாஸ: க்வசிச்சேதி சிகித்ஸா நாஸ்தி நிஷ்பலா. * * * * * *” இவை முதலிய அநேகம் ச்லோகங்கள் அஷ்டாங்க ஸங்கிரஹத்திலும் இரஸரத்தின ஸமுச்சயத்திலும் முடிவுரையில் ஒரே சீராகக் காணப்படுகின்றன. “யஜ்ஞஸ்ய ஹி சிரச்சின்னமச்வியாம் ஸந்திதம் புந:. பாதிதா தசநா: பூஷ்ணோ பகஸ்ய ச விலோசநே. * * * *” என்று ஆரம்பித்து அச்வனீ தேவதைகளின் வரலாறு அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் கூறப்படுவது போலவே இரஸரத்தின ஸமுச்சயத்திலும் விவரிக்கப்பட்டிருக்கின்றது.

(3) மூன்றாவது காரணம் அஷ்டாங்கஹ்ருதயாதிகளில் அமைந்துள்ள பத்தியநடைகளைப்போல இரஸரத்தின ஸமுச்சயத்தில் அவ்வளவு கம்பீரமாகவும் அழகாகவும் பத்திய சைலிகள் ஒழுங்காகக் காணப்படவில்லை யென்பதேயாம். இரஸரத்தின ஸமுச்சயத்தையும், அஷ்டாங்க ஸங்கிரஹ-ஹ்ருதயங்களையும் முற்றிலும் உற்றுப் படித்துள்ள பண்டிதர் பத்திய நடையில் இவற்றிற்கு வேற்றுமையாவது ஒழுங்கீனமாவது இருப்பதாகக் கூறமாட்டார் என்பது எமது துணிபு. ஆனால் இரஸரத்தின ஸமுச்சயத்தில் ஏதோ சிலவிடங்களில் சில பிழைகள் அல்லது ஒழுங்கீனங்கள் காணப்படலாம். அதற்கும் காரணம் பூனாவிலிருந்து தேவநாகரலிபியில் அச்சிட்டு வெளியிடப்பட்டுள்ள இரஸரத்தின ஸமுச்சயத்திற்கு ஆதாரமாயிருந்த புராதனமான எட்டுப் பிரதிகளை உருவத்தில் மிகச் சிரழிந்த நிலைமையி லிருந்ததாகத் தெரியவருகின்றமையால்[1], சிலவிடங்களில் பரிசோதகர்களுடைய தவறுதலால் பத்தியரசனையிலும் விஷயத்திலும் ஒருவாறு வேறுபாடு காணப்படலாம்; அன்றியும் இப்புஸ்தகத்தை அச்சிட்டவர்கள் கூட ஸாதாரணமான அச்சுப் பிழைகளைத் திருத்துவதிலும் மிக்க அஜாக்கிரதையா யிருந்துவிட்டதும், கிரந்தத்தின் இயற்கையான வசனநடைக்கு ஆங்காங்கு வேற்றுமையும் விகாரமும் ஸம்பவித்ததற்கு மற்றொரு காரணம் என்றும் தோன்றுகிறது; இல்லையேல், 300-பக்கங்களடங்கிய இப்புஸ்தகத்திற்கு 30-பக்கங்கள் பிழைதிருத்தமும் சேர்க்கப்படுமோ?[2]

இந்த இரஸரத்தின ஸமுச்சயத்தை அச்சிடுவதற்கு ஆதாரமாயிருந்த எட்டுப் பிரதிகள் மிகப் பண்டைக்காலத்தவையானதால், சிதறுண்டு சீர்குலைந்திருந்தன வென்றும், அவற்றின் முடிவில் "ஸ்ரீ வைத்யபதி ஸிஹ்மகுப்தனுடைய புத்திரனை வாக்படாசார்யருடைய கிரந்தத்தில் இரஸரத்தின ஸமுச்சயம் முற்றிற்று"[3] என்று வரையப்பட்டிருக்கிறதென்றும், அச்சிட்டுள்ள இரஸரத்தின ஸமுச்சயக்கிரந்தத்தின் முகவுரையில் வியக்தமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விஷயமும் அஷ்டாங்க ஸங்கிரஹாதிகள் எழுதிய வாக்படர்தான் இரஸரத்தின ஸமுச்சயத்திற்கும் ஆசிரியர் என்பதற்குள்ள முகாந்தரங்களுள் ஒன்று. இதுகாறும் நிரூபித்த

---

1. ஆனந்தாச்ரமக் கிரந்தாவளியில் வெளியாயுள்ள இரஸரத்தின ஸமுச்சயத்தின் ஸம்ஸ்கிருத முகவுரையில் 2-வது பக்கத்தில் 17, 18 வது வரிகளையும், 4-வது பக்கத்தில் கடைசியிலுள்ள பாராவையும் பார்க்க.

2. முற்கூறிய இரஸரத்தின ஸமுச்சயத்தின் முடிவில் அநுபந்தமாகச் சேர்க்கப்பட்டுள்ள பக்கங்களைப் பார்க்க.

3. "ஹஸ்தலிகித ஜீர்ணபுஸ்தகாநுஸாரேண இத்தமேவ ஜ்ஞாயதே, தத்யதா—'இதி ஸ்ரீவைத்யபதி ஸிஹ்மகுப்தஸ்ய ஸூநோர் வாக்படாசார்யஸ்ய க்ருதௌ ரஸரத்நஸமுச்சய:.' இதி."

பிரமாணங்களைக்கொண்டு ஆசார்ய வாக்படர் அஷ்டாங்க ஸங்கிரஹம், அஷ்டாங்க ஹ்ருதயம், இரஸரத்தின ஸமுச்சயம் என்கிற மூன்று வைத்தியக் கிரந்தங்களை இயற்றினார் என்று நாம் தீர்மானிக்கின்றோம்.

இந்த ஸந்தர்ப்பதில் வாக்படாலங்காரம் என்கிற வடமொழியிலுள்ள ஓர் அணியிலக்கண நூலின் பெயர் நமக்கு நினைப்பில் வருகின்றது. அஷ்டாங்க ஹ்ருதயாதிகளில் இவ்வாக்படருடைய வாக்கின் சைலியையும், வாஜீகரணாதி சிகித்ஸாமுறைகளை வர்ணிக்குமிடங்களில் அமைந்துள்ள விஷயப்போக்குகளின் வனப்பையும் படிக்கும் இரஸிகர்கள், வாக்படாலங்காரம் என்று பிரஸித்தமாயுள்ள அலங்காரக் கிரந்தத்திற்கும் அவ்வாக்படரே ஆசிரியராயிருந்திருப்பர் என்று பிரமையுறலாம். நாம் ஊஹிப்பதற்கேற்ப வைத்தியக சப்தஸிந்துவின் முகவுரையிலும் அங்ஙனமே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அஷ்டாங்கஸங்கிரஹம் முதலியவற்றை இயற்றிய வாக்படருக்கு பாஹடர் என்கிற பெயர் வேறொன்றுண்டு;[1] அவ்விதமே இவ்வலங்கார நூல் இயற்றிய வாக்படருக்கும் பாஹடர் என்கிற பெயர் உண்டென்று இக்கிரந்தத்தின் ஸங்கராலங்காரப் பிரகரணத்தில் இவ்வாசிரியராலேயே கூறப்பட்டுள்ள உதாரணபத்தியத்தினால் நன்கு விளங்குகின்றது.[2] ஆனால் இவ்வலங்காரம் இயற்றிய வாக்படர் அஷ்டாங்க ஹ்ருதயாதிகள் இயற்றிய வாக்படரினும் வேறுபட்டவர் என்பதும் அப்பத்தியத்தினாலேயே அறியப்படுகிறது. அலங்கார நூலின் ஆசிரியரான வாக்படர் ஸோமன் என்கிறவருடைய புத்திரன் என்று அப்பத்தியத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது; அஷ்டாங்கஹ்ருதயாதிகளின் ஆசிரியரான வாக்படாசார்யரோவென்றால் ஸிம்ஹகுப்தனுடைய

1. வாக்படாசார்யருக்கு பாஹடர் என்கிற பெயர் ஆந்திரதேசத்தில் மிகப் பிரஸித்தமானது. முன்னால் இவ்வாக்படரை பாஹடர் என்றே அழைத்ததாகவும், இதனால் இவருடைய கிரந்தத்திற்கு (ஸங்கிரஹ-ஹ்ருதயங்களுக்கு) வாக்படம் அல்லது பாஹடம் என்றே பெயர் வழங்கப்படுவதாகவும் பிரமாணங்கள் ஆங்காங்கு காணப்படுகின்றன. அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் இந்துவியாக்யானத்தில் "துர்வ்யாக்யாவிஷஸுப்தஸ்ய பாஹடஸ்ய மதுக்தய:. ஸந்து ஸம்வித்திதாயிந்யஸ் ஸதாகமபரிஷ்க்ருதா:." என்றும், "ஸோயம் பாஹடநாமா சாஸ்த்ரகாரோ லோகஹிதாய சாஸ்த்ரமாரிரிப்ஸு: * * * *" என்றும் கிரந்தாரம்பத்திலே கூறுகிறார். வைத்ய சிந்தாமணி, பஸவராஜீயம் முதலிய ஆந்திர தேசத்திற் பிரஸித்தமான நூல்களிலும் வாக்படருக்கு பாஹடர் என்றும், அஷ்டாங்க ஹ்ருதயத்திற்கு பாஹடம் என்றுமே பெயர்கள் வழங்கப்படுகின்றன.

2. நிர்ணயஸாகர அச்சுக்கூடத்தில் வெளியான வாக்படாலங்காரத்தில் 60-வது பக்கத்தில் இது விஷயமாயுள்ள பிராக்ருதபத்தியம் பின்வருமாறு:—

புத்திரன் என்று முன்னமே நிரூபிக்கப்பட்டுள்ளது[1]. இந்த அலங்காரக் கிரந்தம் இயற்றிய வாக்படர் மஹாகவி யென்று அக்காலத்தில் பிரஸித்தி பெற்றதோடு, அணஹில்ல பாடலபுரம் என்கிற நகரத்தில் அரசுபுரிந்துவந்த கர்ணதேவ நரபதியின் புத்திரனான ஸ்ரீ ஜயஸிம்ஹன் என்கிற அரசனுக்குப் பிரதான அமைச்சனாகவும் இருந்ததாகத் தெரியவருகின்றது. இவ்வலங்காரக் கிரந்தத்தில் எவ்விடத்திலேனும் வைத்திய சாஸ்திரத்தில் இவருக்குப் பரிசயமிருந்ததாகக் குறிக்கும் விஷயம் காணப்படவில்லை யென்பதும், வைத்தியசாஸ்திர மியற்றிய வாக்படர் அங்ஙனம் எவ்வரசரிடமும் அமைச்சராக அமர்ந்து வாழ்ந்ததாகத் தெரியவில்லையென்பதும் இவ்வலங்காரக் கிரந்த மியற்றியவர் அஷ்டாங்க ஹ்ருதயாதிகளின் ஆசிரியரான வாக்படரினும் வேறுபட்டவர் என்பதற்கு வேறு முகாந்தரங்களாகும்.

இனி வைத்தியக் கிரந்தங்கள் இயற்றிய இவ்வாக்படர் எந்த மதத்தைச் சேர்ந்தவர் என்பதைச் சற்று விசாரிப்போம். இதைப் பற்றி விவாதம் விசேஷமாய் உண்டு. இவர் இயற்றியுள்ள நூல்களிலேயே காணப்படும் அநேகம் பிரமாணங்களைக்கொண்டு, பௌத்தமதத்தைத் தழுவியவர் என்று நிச்சயிக்கவேண்டியிருக்கின்றது. அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் ஆரம்பத்தில் புத்த தேவனைத் தொழுது மங்களச்லோகம்மொழிந்திருப்பது முக்கியமாய் கவனிக்கத் தகுந்தது.[2] அஷ்டாங்க ஹ்ருதயத்திலும், இரஸரத்ன ஸமுச்சயத்திலுங்கூட இயற்றப்பட்டுள்ள மங்களச்லோகங்களைக் கவனித்துப் படித்தோமானால், புத்ததேவனைத் தவிர வேறு எத்தேவதையையும் அப்பத்தியங்கள் குறிப்பிடுவதாகக் கூறுவதற்கு வழியில்லை யென்றே நிச்சயிக்கலாம். அஷ்டாங்க

---

"பம்பண்ட ஸுத்தி ஸம்புட முத்தி அ மணிணோ பஹாஸஊஹவ்வ. ஸிரி பாஹடத்தி தணஓ ஆஸி புஹோ தஸ்ஸ ஸோமஸ்ஸ." (ப்ரஹ்மாண்ட சுக்திஸம்புட மௌக்திகமணே: ப்ரபாஸமூஹ இவ. ஸ்ரீ பாஹட இதி தநய ஆஸீத் புதஸ் தஸ்ய ஸோமஸ்ய.)

1. இந்த முகவுரையிலே ௨௪-ம் பக்கத்தில் "பிஷக்வரோ வாக்பட இதி" என்று குறிப்பிட்டுள்ள விஷயத்தைக் கவனிக்க. அலங்காரக்கிரந்த மியற்றிய இவ்வாக்படர் ஜைனமதத்தைச் சேர்ந்தவர் என்று "ஸ்ரீயம் திசது வோ தேவ: ஸ்ரீநாபேய ஜிநஸ் ஸதா" என்கிற மங்கள ச்லோகத்தினாலே தெரியவருவதோடு, மிகவும் ஐச்வர்யவானாகவும், பௌத்தாலயம் முதலியவற்றைக் கட்டி தர்மகாரியங்கள் செய்ததாகவும், விக்ரமசகம், 117-ஆம் ல் ஜீவித்திருந்ததாகவும் (1123-கி.பி.) தெரியவருகிறது.

2. "த்ருஷ்ணா தீர்க்க மஸத்விகல்ப சிரஸம் ப்ரத்வேஷ சஞ்சத்பணம் காமக்ரோதவிஷம் விதர்க்கதசநம் ராகப்ரசண்டேக்ஷணம். மோஹாஸ்யம் ஸ்வசரீரகோடரசயம் சித்தோரகம் தாருணம் ப்ரஜ்ஞாமந்த்ரபலேந யச் சமிதவாந் புத்தாய தஸ்மை நம:" (அஷ்டாங்க ஸங்கிரஹத்தின்முதல் மங்கள ச்லோகம்.)

ஸங்கிரஹத்தின் முகவுரையில் கணேச சர்மா என்பவரும், இரஸ ரத்தின ஸமுச்சயத்தின் முகவுரையில் கிருஷ்ணராவ் சர்மா என்பவரும் "வாக்படர் ஆங்காங்கு வேதங்களில் பிரதிபாதித மான பிரமாணங்களை யெடுத்துக் கூறுவதாலும், இருஷிகளையும் பிராம்மணர்களையும் பூஜிக்கவேண்டிய முறைகளைக் குறிப்பிடு வதாலும் இவர் பௌத்தர் அல்ல, ஆனால் வேதமேற்பட்ட காலத்திலிருந்த பிராம்மணன்" என்று எழுதியிருக்கின்றனர்.[1] வாக்படர் "புத்தாய தஸ்மை நம:" என்று வெளிப்படையாகக் கூறி யிருப்பதற்கு "ஸர்வமும் அறிந்த அக்கடவுளைத் தொழுகிறேன்" என்று பொருள் கூறலாம் என்றும் அவர்கள் அபிப்பிராயப் படு கிறார்கள். உள்ளபடி விஷயவிமர்சம் செய்பவர் இக்கூற்றை ஒப்புக் கொள்ளார். மதாபிமானத்தை மனதில் வைத்துக் கொண்டு, பௌத்த மதத்தில் வெறுப்புங்கொண்ட வேறு சிலரும் இக் கிரந்த கர்த்தா பௌத்தர் என்பதற்கு வெளிப்படையாகக் காணப் படும் முகாந்தரங்களை மறைத்துத் தமக்கு இஷ்டமான மற்றொரு மதத்தைச் சேர்ந்தவரென்று மொழிய முயன்றதாகக் கருதவேண்டி யிருக்கின்றது. இக்கிரந்த கர்த்தாவானவர் தனக்கு முன்னிருந்த அக்னிவேச - பேட - ஹாரீத - மாண்டவ்யாதிகளுடைய ஸம்ஹிதை களிலுள்ள விஷயங்களையெல்லாம் கிரஹித்து, அவற்றிலுள்ள கிரந்த ஸந்தர்ப்பங்களையும் அவற்றின் பொருட்களையும் முற்றிலும் பின்பற்றி, விஷயங்களைச் சுருக்கி அஷ்டாங்க ஸங்கிரஹ-ஹ்ருதயங் களைத் தொகுத்திருக்கின்றாரேயன்றி, ஒரு சிறிதும் பிராசீனமான அவ்வாயுர்வேத நூல்களுக்குப் புறம்பான விஷயத்தை இவற்றில் சேர்க்கவில்லையென்று இவ்வாசிரியரே அஷ்டாங்க ஸங்கிரஹ-ஹ்ரு தயங்களில் கூறியிருக்கிறார்.[2] இவருடைய கிரந்தத்திற்கு ஆதார மாயிருந்த ஆயுர்வேத நூல்களில் தேவதைகளையும், பிராம்மண களையும், வேதவாக்கியங்களையும் சிற்சில ஸந்தர்ப்பங்களில் பெருமை படுத்திக் கூறியிருப்பதை இவ்வாக்படர் பின்பற்றவேண்டிய க கடமையாகவும் இன்றியமையாததாகவும் ஆய்விட்டது. அஷ்டாங்

---

1. ஆனந்தாச்ரமக் கிரந்தாவளியில் வெளியாயுள்ள அஷ்டாங்க ஸங் கிரஹத்தினுடையவும், இரஸரத்தின ஸமுச்சயத்தினுடையவும் முகவுரை களைப் பார்க்க.

2. "ஸங்க்ருஹீதம் விசேஷேண யத்ர காயசிகித்ஸிதம். ந மாத்ர மாத்ரமப்யத்ர கிஞ்சிதாகமவர்ஜிதம். தேர்த்தாஸ் ஸ க்ரந்த பந்தச் ச ஸங்க்ஷே பாய க்ரமோந்யதா." (அஷ்டாங்க ஸங்கிரஹம் 2-வது பக்கம்) "* * * ஸோத்ரி புத்ராதிகாந் முநீந். தேந்நி வேசாதிகாம் ஸ்தேது ப்ருதக் தந் த்ராணி தேநிரே. தேப் யோதி விப்ரகீர்ணேப்ய: ப்ராயஸ் ஸாரதரோச்சய க்ரியதேஷ்டாங்க ஹ்ருதயம் நாதிஸங்க்ஷேப விஸ்தரம்." (ஹ்ருதயம் ஸூ அத். 1. ச்லோ 3—4½.) மேலும் "இதி ஹ ஸ்மாஹுராத்ரேயாதயோ மஹர்ஷய:" என்று ஒவ்வொரு ஸ்தானத்தின் ஆரம்பத்திலும் கூறப்படு கிறது.

ஸங்கிரஹத்தின் உத்தரஸ்தானத்தில் வாக்படர் கூறுவதாவது :—“முக்காலங்களை அறிந்தவர்களும், தைவப் பிறப்பெனத் தகுந்தவர்களும், ஸத்வகுணம் நிரம்பி தோஷப்பற்றற்றவருமான பூர்வாசார்யர்களால் அமைக்கப்பெற்ற மார்க்கத்தை எவன்தான் மீறி நடக்கக் கூடும்?”[1] பூர்வ வைத்தியசாரியர்கள் வேதமார்க்கத்தை அவலம்பித்தவர்களா அல்லவா என்பது வாக்படரது நோக்கமல்ல. ஆனால் அவர்கள் மஹா பரிசுத்தாத்மாக்கள், அறிவாளிகள் என்பதையே இவர் கவனித்ததாக “த்ரிகால தர்சிபி:” என்கிற ச்லோகம் குறிப்பிடுகிறது. இதற்குச் சிறிது முன்பாக மொழிந்திருப்பதும் கவனிக்கத் தகுந்தது. அதாவது—“மூத்தோர் உபதேசித்த அற்புதமான இச்சாஸ்திரத்தில் கூறப்படவேண்டிய விஷயங்களை அநுஸரித்துச் செய்யவேண்டுவது என்னவோ அதையே ஜீவஹிம்சை நேரினும் நிறைவேற்ற வேண்டுமேயன்றி மற்றொன்றைச் செய்யக் கூடாது ; சாஸ்திரத்திற்கு இதுதான் இலக்ஷணமாகும்.”[2] வைத்திய சாஸ்திரத்தில் சில ஸந்தர்ப்பங்களில் ஜீவஹிம்சை செய்யும்படி கூறப்பட்டிருப்பதால், தவிர்க்கத் தகாத நிலைமைகளில் அதையும் நிறைவேற்றித்தான் தீரவேண்டுமென்று கூறுவதிலிருந்து, பௌத்தர்களுக்கு இன்றியமையாத ஜீவகாருண்ய விஷயத்தில் வாக்படர் தனது கவனத்தைச் செலுத்துகிறார் என்று இது குறித்துக் காட்டுகிறது. மேலும் அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் அந்திம ச்லோகத்திலும் அடியில் வருமாறு காணப்படுகிறது “உயிருக்கு உபபலமாய் நிற்பவையும், கோரின பலனைக் குறைவின்றி யளிப்பதில் கற்பக விருக்ஷத்திற்கொப்பானவையுமான முனிவர்களின் புனிதமான மொழிகளுக்கு அநுவாதமாகத் தொகுத்துக் கூறிய இக்கிரந்தத்தினால் உலகம் பிணியற்று மனத்தொல்லையின்றி மகிழ்வுடன் வாழட்டும்.”[3] இவற்றையெல்லாம் உற்றுப் பார்த்தபின்பு அஷ்டாங்க ஹ்ருதயாதிகளில் “அர்ச்சயேத் தேவ கோ விப்ராந்” என்கிற இது முதலிய பௌத்தருக்கு ஒவ்வாத விஷயங்கள் பிராசீன வைத்தியாசார்யர்களுடைய கிரந்தங்களிலும் உபதேசங்களிலும் உள்ளபடியே வாக்படராலும் உரைக்கப்பட்டதாகவும், ஆகவே அவ்விதம் கூறியது வாக்படர் பௌத்தமதத்தைச் சேர்ந்தவர் என்பதற்கு பாதகமாக

---

1. “த்ரிகாலதர்சிபிர் திவ்யை : ஸத்வதோஷ விவர்ஜிதை:. பூர்வாசார்யை : க்ருதம் வர்த்ம கோ லங்கயிது மர்ஹதி.” (ஸங்கிரஹம், 417-ம் பக்கம்.)

2. “உபதிஷ்டே விசித்ரேஸ்மிந் வக்தவ்யார்த்தாநுரோதத:. கர்த்தவ்யமேவ கர்த்தவ்யம் ப்ராணுபாயேபி நேதரத். ஏதத் ஸ்வரூபம் சாஸ்த்ரஸ்ய * * * * ” (ஸங்கிரஹம் 417-ம் பக்கம்.)

3. “இதி முநிவசநாநாம் ஜீவிதோபாச்ரயாணு மபிலஷிதஸம்ருத்தௌ கல்பவ்ருக்ஷோபமாநாம். யதுதிதமிஹ புண்யம் குர்வதோ மேநுவாதம் பவது விகதரோகோ நிர்வ்ருதஸ் தேந லோக:”

மாட்டாரென்றும் நாம் கூறுவதைப் பக்ஷபாதமற்றவர் அங்கீகரிப்பரென்பது திண்ணம். முற்கூறிய பிரமாணங்களால் வாக்படர் வைதிக தர்மங்களில் வெறுப்புள்ளவர் அல்லரென்றும், ஆனால் அவர் வைதிக மதங்களைச் சேர்ந்தவரும் அல்லவென்றும் கூறுவோம். இனி இவர் பௌத்தமதத்தைச் சேர்ந்தவர்தான் என்பதற்கான சில முகாந்தரங்களையும் சிறிது விவரிப்போம். வாக்படருடைய கிரந்தங்களிலுள்ள மங்களச்லோகங்களில் புத்ததேவனைத் தொழுகிறார் என்று முன்னமே சொன்னோம். அஷ்டாங்க ஹ்ருதய-ஸங்கிரஹங்களில் வமந-விரேசநீயாத்யாத்தில் "நமோ பகவதே பைஷஜ்ய குரவே வைதூர்ய ப்ரபராஜாய ததாகதாய அர்ஹதே ஸம்யக் ஸம்புத்தாய" என்று ஓதப்பட்டுள்ள மந்திரத்தில் உள்ள "ததாகதாய அர்ஹதே" என்கிற பெயர்களாலும் அவற்றின் விசேஷணங்களாலும் இது புத்ததேவனைக் குறிப்பிடும் முக்கியமான ஸௌகத மந்திரம் என்று நன்றாகப் புலப்படுகின்றதல்லவா? அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் குஷ்ட சிகித்ஸாத்யாயத்தின் முடிவில் ஜினன், ஜினதேவ புத்திரன் இவர்களை ஆராதிப்பதையும் குஷ்ட நிவாரண க்ரியைகளில் ஒன்றாகக் கூறப்பட்டிருக்கின்றது.[1] இவ்விஷய மடங்கிய பத்தியம் அஷ்டாங்க ஹ்ருதயத்திலும் குஷ்ட சிகித்ஸாத்யாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் இங்கு ஒரு விசேஷம். பௌத்த மதத்தில் வெறுப்புள்ளவர் எவரோ "ஜிந ஜிநஸுத" என்கிற பதங்களை யெடுத்துவிட்டு அஷ்டாங்க ஹ்ருதயத்தில் அப்பதங்களின் ஸ்தானத்தில் "சிவ சிவஸுத" என்கிற சொற்களைப் பதிலுக்குச் சேர்த்துவிட்டதாகத் தெரிகிறது. அஷ்டாங்க ஹ்ருதயத்தில் உத்தர ஸ்தாநத்தின் பூதப்ரதிஷேதாத்யாயத்தில் "ஈச்வரம் த்வாதசபுஜம் நாதமார்யாவலோகிதம்" என்று கூறியிருப்பதில், "ஈச்வரன் நாதன்" என்கிற விசேஷணங்களைப் பெற்ற "ஆர்யாவலோகிதன்" என்கிற புத்தன் குறிப்பிடப்படுகிறார் என்பதில் ஸந்தேஹமில்லை. இந்த ச்லோகமே ஸங்கிரஹத்திலும் அதே பிரகரணத்தில் மொழியப்பட்டுள்ளது. ஸங்கிரஹத்தின் உத்தர ஸ்தாநத்தில் வாஜீகரணாத்யாயத்தின் முடிவுரையில், புத்தன் ஆதிகுருவென்பதை மனதில் நினைத்து "ஸமதிகம்ய குரோரவலோகிதாத்" என்றும் கூறியிருக்கிறார். அன்றியும் வாக்படர் பௌத்த ஸந்நியாஸியாயிருந்ததாகவும், அவரைப்பற்றி இதனடியில் குறிக்கப்பட்டுள்ள பத்தியம் முன்னால் அவருடைய சிஷ்யர்களால் அநுஸந்தாநம் செய்யப்பட்டு வந்ததாகவும் பரம்பரையாக ஒரு பிரஸித்தியுண்டு. அப்பத்தியத்தின் பொருளாவது:—"தழைந்து தொங்கும் தாடி மீசைகளோடு விளங்குபவரும், தாமரைமலருக்கு நிகரான தேஹகாந்தியைப் பெற்றவரும், வைத்திய மாணாக்கர்

1. "ஜிந ஜிநஸுத தாரா பாஸ்காரராதநாநி ப்ரகடிதமல பாபம் குஷ்ட முந்மூலயந்தி."

களான இந்து-ஜெஜ்டன் முதலியவர்களுக்கு எப்பொழுதும் சாஸ்திரத்தைக் கற்பித்தவரும், கணுக்கால் வரையில் தொங்கும் நிர்மலமான மெல்லிய கஞ்சுகத்தினால் ஒருவாறு மறைந்து காணக்கூடிய உபவீதத்தினால் பிரகாசிக்கும் கழுத்தில் அகிற்கட்டையின் குழம்பைப் பூசிக்கொண்டிருப்பவரும், மைதீட்டிய நேத்திரங்களோடு பிரகாசிப்பவருமான நீட்சீரமுள்ள வாக்படரை மனதில் தியானிக்கின்றேன்'' என்பதேயாம்.[1] ஜைநஸந்நியாஸிகள் கஞ்சுகம் தரிப்பதும், அஞ்ஜநமிட்டுக் கொள்வதும் ஆசாரமாம். மேலும் வாக்படாலங்காரம் முதலியதை எழுதியவர்கள் அக்கிரந்தங்களின் மங்களச்லோகம் முதலானவற்றில் ஜினதேவனையே தொழுதுவந்திருப்பதையும் கவனித்தால், வாக்படன் என்கிற பெயருள்ளவர்கள் பெரும்பாலும் பௌத்தராக அல்லது ஜைநராக இருந்ததாய் ஊஹிக்க வேண்டியிருக்கின்றது.[2] "வாக்படர் தனது வாழ்நாட்களின் முற்பகுதியில் பிராம்மண தர்மத்தை அவலம்பித்திருந்து, அப்பால் பிற்பகுதியில் பௌத்த தர்மத்தை அறிய விரும்பி ஒரு பௌத்தா சார்யனை ஆச்ரயித்து அந்த மத தத்துவங்களை அறிந்து காலக்கிரமத்தில் பௌத்த மதத்தையே தழுவிக்கொண்டார்'' என்றும் சிலர் அபிப்பிராயப் படுகிறார்கள். அப்படியானால் முதலில் அவர் இயற்றிய நூல்களில் வைதிகதர்மங்களை மட்டும் குறிப்பிட்டு விட்டு, பிற்காலத்தில் இயற்றிய நூல்களில் பௌத்த தர்மங்களையே விளக்கியிருக்க வேண்டுமல்லவா? வாக்படர் முதலில் இயற்றியது அஷ்டாங்க ஸங்கிரஹம் என்றும், அதன் பிறகு அதைச் சுருக்கி ஹ்ருதயம் எழுதப்பட்டதென்றும் இம்முகவுரையைப் படிப்பவர்கள் இதற்கு முன் விவரித்த ஆதாரங்களைக்கொண்டு நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கலாம். அஷ்டாங்க ஸங்கிரஹத்தில் அஷ்டாங்க ஹ்ருதயத்தின் பெயர் எங்கும் குறிக்கப்படவில்லை யானதாலும், அஷ்டாங்க ஹ்ருதயத்தின் முடிவுரையில் "இக்கிரந்தத்தைப் படிப்பவன் ஸங்கிரஹத்தை அறிவதில் திறமையுள்ளவனாவான்''[3] என்று கூறியிருப்பதோடு, "தேப்யோதி விப்ரகீர்ணேப்ய: ப்ராயஸ் ஸாரதரோச்சய:. க்ரியதேஷ்டாங்க ஹ்ருதயம் நாதிஸங்க்ஷேப விஸ்தரம்'' என்கிற (ஸூ. அத். 1. ச்லோ. 4.) ச்லோகத்தின் வியாக்யாநத்தில் "ஆயுர்வேத ஸாரங்கள் ஸங்கிரஹத்தில் கூறப்பட்டுப் போகவே, இப்பொழுது ஸங்கிரஹத்தி

1. "லம்பச்மச்ருகலாபமம்புஜநிபச்சாயாத்யுதிம் வைத்யகா நந்தேவாஸிந இந்து ஜெஜ்டமுகாநத்யாபயந்தம் ஸதா. ஆகுல்ப்பாமலகஞ்சுகாஞ்சித தாரலக்ஷ்யோபவீதோஜ்வலத் கண்டஸ்த்தாகருஸார மஞ்ஜித த்ருசம் த்யாயே த்ருடம் வாக்படம்''.

2. "ஸ்ரீயம் திசது வோ தேவ: ஸ்ரீநாபேயஜிந: ஸதா. மோக்ஷமார்க்கம் ஸதாம் ப்ருதே யதாகம பதாவலீ'' (வாக்படாலங்கார மங்கள ச்லோகம்.)

3. "ஏதத் படந் ஸங்க்ரஹ போதசக்த:'' (அஷ்டாங்க ஹ்ருதயம். உத்தர. அத். 40. ச்லோ. 82.)

விருந்து ஸாரதராம்சங்கள் கிரஹிக்கப்பட்டிருந்தாலும் இயற்றப்படுகின்றது எனக் கருத்து" என்று அருணதத்தர் கூறியிருப்பதாலும், "அஷ்டாங்க வைத்யகமஹோததி மதிதேன யேனாஷ்டாங்க ஸங்க்ரஹ மஹாம்ருதராசிராப்த:" என்று அஷ்டாங்க ஸங்க்ரஹம் என்னும் பெயர் ஹ்ருதயத்தின் முடிவுரையில் விளக்கமாகக் குறிப்பிடப்பட்டிருப்பதாலும், அஷ்டாங்க ஸங்கிரஹம் வாக்படரால் முதலில் இயற்றப்பட்டதென்றும், ஹ்ருதயம் அதன் பிறகு இயற்றப்பட்டதென்றும் நிர்த்தாரணம் செய்கிறோம். இவ்வாறு ஆதியில் இயற்றிய ஸங்கிரஹத்திலேயே மங்களச்லோகத்தில் "புத்தாய தஸ்மை நம:" என்று வெளிப்படையாக புத்தரைத் தான் வாக்படர் தொழுதிருக்கிறார். மேலும் எந்தக் கிரந்தத்திலும், அவர் முன்னது வைத்தியாசார்யர்களுடைய மார்க்கத்தை அனுஸரித்து அந்தந்தப் பிரகரணங்களில் அவசியமாயுள்ள வைதிகநியமங்களைக் கூறியிருப்பதோடு, உசிதமாகத் தோன்றுமிடங்களில் தாம் பௌத்தமதத்தைச் சேர்ந்தவர் என்பதற்குப் போதுமான சில விஷயங்களையும் சேர்த்திருக்கின்றார் என்று இதற்கு முன்பே விளக்கியிருக்கிறோம். அல்லாமலும் வாக்படர் ஆதியில் பிராம்மணராயிருந்து பிறகு பௌத்தனாய் மாறிவிட்டார் என்பதற்கு அவ்விதம் வாதம் செய்பவர் ஆதாரமும் எடுத்துக் கூறவில்லை ஆகையால், வாக்படர் ஒரு பௌத்தர் என்றும், என்றைக்கும் அவர் இம்மதஸ்தராயிருந்ததாகத் தெரியவில்லை யென்றும் நாம் அபிப்பிராயப்படுகிறோம்.

வாக்படருடைய ஜீவிதகாலத்தைப்பற்றியும் சிறிது ஆராய்வோம். இவர் காச்மீரத்தில் ஜயஸிம்ம ராஜன் அரசாண்ட காலத்தில் வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுவதைக்கொண்டு, அவர் கி.பி. பன்னிரண்டாவது நூற்றாண்டுக்கு முன்பு இருந்தார் என்று இராஜ தரங்கிணியில் பிரமாணமிருப்பதாகச் சிலர் கூறுகிறார்கள். ஆனால் வாக்படரைப்பற்றி இராஜ தரங்கிணியில் விவரம் ஒன்றும் காணப்படவில்லை. ஒருக்கால் அவ்வாக்படர் அலங்கார க்ரந்தம் இயற்றியவராயிருக்கலாம்.[1] சரக - ஸுச்ருதர்களுக்கும், சரகஸம்ஹிதையைப் பூர்த்திசெய்த த்ருடபலனுக்கும் பிற்காலத்தில், மாதவநிதான - ப்ருந்த-சக்ரபாணிகளுக்கு முன்னால் வாக்படருடைய ஜீவிதகாலம் என்றும் இதன் கீழ் குறிப்பிடும் பிரமாணங்களைக் கொண்டு நிர்மாணிக்கலாம். வாக்படாசார்யர், அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் பிற்பகுதியான கல்பஸ்தானத்தில், த்ருடபலனால் சரகஸம்ஹிதையின் கல்பஸ்தானத்தில் இயற்றப்பட்டுள்ளபடியே சுத்தரூபமாகவே அதே விஷயங்களை விளக்கியிருக்கிறார். த்ருடபலன் என்பவர் பஞ்சநத புரத்தில் வஸித்து வந்த பண்டைக்காலத்திய வைத்தியர் என்று அவர் கூறியுள்ள வாக்கியத்தைக்கொண்டு அறியப்படுகின்

1. இம்முகவுரையில் ௩௦, ௩௧-ம் பக்கங்களிலும் இந்த விஷயம் படிக்கவும்.

றது.[1] மாதவநிதாநம், ஸித்தயோகம், சக்ரதத்தஸங்கிரஹம் முதலிய நூல்களில் அஷ்டாங்க ஹ்ருதயத்திலுள்ள விஷயங்களும், சிலவிடங்களில் வாக்படருடைய பெயரும் குறிப்பிடப்பட்டிருப்பதைக் கவனிக்கலாம். வாக்படர் ஆகவே த்ருடபலனுக்குப் பிந்தியும், மாதவகராதிகளுக்கு முந்தியும் ஜீவித்திருந்தார் என்று நிர்ணயிக்க வேண்டியிருக்கிறது. மேலும் சக்ரபாணிதத்தர் வங்கதேசத்தில் நயபாலன் என்கிற அரசனுக்கு ஆப்தவைத்தியராக இருந்து வந்ததாகவும்,[2] அவ்வரசன் கி. பி. 1040-ம் வருஷத்திற்கும் 1060-ம் ஆண்டுக்கும் இடையில் இராஜ்யதந்திரம் செய்ததாகவும் தெரிய வருகின்றது. ஆகவே சக்ரபாணிக்கு முந்தியவரான வாக்படாசார்யர் ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு ஜீவித்திருந்தவர் என்று ஒருவாறு ஏற்படுகின்றது. ஆனால் ஹுவான்த்ஸங் என்கிற சீன தேசத்து யாத்ரிகன், தான் இந்தியாவில் யாத்ரை செய்தபோது “அஷ்டாங்க வைத்தியங்களை ஸங்கிரஹித்த நவீநாசார்யர்” என்று தன் குறிப்புப்புஸ்தகத்தில் வரைந்திருப்பதால், இவ்வாக்படரே அச்சீன தேசத்தவரால் குறிப்பிடப்பட்டிருக்கிறார் என்றும், அவ்வாதாரப்படி இவர் கி. பி. ஐந்தாவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் இருந்தவர் என்று நிச்சயிக்கவேண்டி யிருக்கின்றதெனவும் சிலர் கூறுகின்றனர்.[3] இவ்வாக்படருடைய காலத்தில் ஜெஜ்ஜடன், கயதாஸன், இந்து முதலியவர்களும் வைத்திய சாஸ்திரத்தில் மிகத் தேற்சி பெற்றிருந்தனர் என்றும், அவர்கள் வாக்படாசார்யரிடம் சிஷ்யர்களாயிருந்தனர் என்றும் இதற்கு முன் எழுதியுள்ள வாக்படரைப்பற்றிய ச்லோகத்திலும்,[4] அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் வியாக்யாநத்தின் ஆரம்பத்திலுள்ள சில குறிப்புகளாலும் தெரிந்துகொள்ளலாம்.[5] திருச்சூரில் அச்சிட்டுள்ள அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் முகவுரையில், இவ்வாக்படர் கி. பி. இரண்டாவது நூற்றாண்டில் இருந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது. வாக்படர் பௌத்தமதத்தைச் சேர்ந்தவராகத் தெரியவருவதாகவும், அவர் வைத்திய சாஸ்திரத்திற்குச் சற்றும் விரோதமில்லாமல் விஷயங்களை விளக்கிக்

---

1. இதமந்யூநசப்தார்த்தம் தந்த்ரம் தோஷவிவர்ஜிதம். அகண்டார்த்தம் த்ருடபலோ ஜாத: பஞ்சநதே புரே. க்ருத்வா * * * * * ” (சரக-ஸித்தி-அத். 12-ச்லோ. 78.)

2. சக்ரதத்த ஸங்கிரஹத்தின் முடிவில் “கௌடாதிநாத ரஸவத்யதிகாரி பாத்ர * * * ” என்றுள்ள பத்தியத்திற்குச் சிவதாஸனால் இயற்றப்பட்ட வியாக்யாநத்தைப் பார்க்க.

3. பிரத்யக்ஷ சாரீரத்தில் ஸம்ஸ்கிருத முகவுரையைப் பார்க்க.

4. அஷ்டாங்க ஹ்ருதயத்தின் இம்முகவுரையில் ௧௫-ம் பக்கம் பார்க்க.

5. திருச்சூரில் அச்சிட்டு வெளியாயுள்ள அஷ்டாங்க ஸங்கிரஹ முகவுரையைப் பார்க்க.

கூறவேண்டுமென்கிற நிஷ்பக்ஷபாதமான கொள்கையுடையவராகையால் முக்கியமாய் நவீன பௌத்தர்கள் செய்வதுபோலே இவர் வேதமார்க்கத்தைப் புறக்கணிக்காமல், வைத்திய சாஸ்திரத்தோடு மதவிஷயத்தைச் சம்பந்தப்படுத்தாமல், சிகிச்சாக் கிரமங்களில் மிகவும் இன்றியமையாத ஸந்தர்ப்பங்களில் முறைப்படி மாம்ஸாஹாராதிகளையும் வழங்கியிருக்கின்றா ரென்பதாகவும், பௌத்தமதம் உலகில் ஆரம்பித்த காலத்தில் அது பிரபலமடைவதற்கு முன்பே (கிறிஸ்துவுக்கு முன் முதல் சதாப்தத்திற்கு அல்லது இரண்டாவது சதாப்தத்திற்கு முன்பே) ஆதியில் அவர் உற்பவித்ததால் வைதிக தர்மங்களிலாவது வைத்திய சாஸ்திரத்திற்கு அவசியமான மாம்ஸாஹாராதிகளிலாவது பிரபலமான ஆக்ஷேப புத்தி இவருக்கு உண்டாகவில்லை யென்பதாகவும் டாக்டர் அண்ணா மோரேச்வர குண்டே யென்பவர் கூறுகிறார்.[1] வாக்படருடைய கால நிர்ணயத்தைப்பற்றி அவரவர் அவரவருக்குத் தோன்றிய பிரமாணங்களை அனுஸரித்து அநேகவிதமாக அபிப்பிராயப்படுகிறார்கள். ஆனால் நாம் வாக்படர் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் இருந்தவரென்றே அபிப்பிராயப்படுகிறோம். நமது இவ்வபிப்பிராயத்திற்கு ஆதாரமாக இரஸரத்ன ஸமுச்சயத்தினுடைய நமது தமிழ்மொழி பெயர்ப்பின் நூன்முகத்தில் பிரமாணங்கள் பலவற்றை விளக்கியிருக்கிறோம். ஆகவே சரக-ஸுச்ருதர்களுக்குப் பிறகு மாதவகரன்-சக்கிரபாணி முதலியவர்களுக்கு முன்னால் இயற்றப்பட்ட மிகப் பிராசீனமான பிரமாணக்கிரந்தங்கள் ஆசார்ய வாக்படருடைய அஷ்டாங்க ஸங்கிரஹமும் அஷ்டாங்க ஹ்ருதயமுமே யென்றும், மற்றவையெல்லாம் இவற்றிற்குப் பிற்பட்டவை யென்றும் வியக்தமாகின்றன.

அஷ்டாங்க ஹ்ருதயத்தில் சரக-ஸுச்ருதாதிகளில் இருப்பதைவிட சாஸ்த்ரீய விஷயங்கள் யாவும் சித்திரிக்கப்பட்டு ஒழுங்காய் அமைக்கப்பட்டிருக்கின்றன வென்பது, அதை முற்றிலும் உற்றுநோக்குபவர்க்குத் தெரியவரும். காயசிகித்ஸா விஷயத்தில்[2] இதற்குள்ள பெருமை நிகரற்றது. கேரளதேசத்தில் ஸாமாந்ய

1. நிர்ணயஸாகர முத்திராசாலையிலிருந்து வெளியான அஷ்டாங்க ஹ்ருதயத்தின் ஆங்கில முகவுரையில் 14, 15-ம் பக்கங்களைப் பார்க்க.

2. ஆத்ரேய ஸம்பிரதாயமான காயசிகித்ஸையையும், தன்வந்தரி ஸம்பிரதாயமான சல்யசிகித்ஸையையும் சேர்த்தே அஷ்டாங்க ஹ்ருதயம் இயற்றப்பட்டதாக அதை முற்றிலும் படிப்பவர் கூறக்கூடும். இவர் சஸ்திர சிகித்ஸையையும் ஆங்காங்கு வர்ணித்திருந்த போதிலும் காயசிகித்ஸையை முக்கியமாய் விவரிப்பதற்கே இக்கிரந்தம் ஏற்பட்டதென்பது பின்வரும் அஷ்டாங்க ஹ்ருதய ச்லோகத்தைக்கொண்டு அறியலாம் :—"சித்சாப யோகே துர்போதே ஸர்வாங்கவ்யாபி பாவத:, ஸங்க்ருஹீதம் விசேஷேண யத்ர காயசிகித்ஸிதம்."

ஜனங்களாலும் சாஸ்திர மோதியவராலும் ஒருங்கே படிக்கப்பட்டு அனுபவத்திலும் இதிலடங்கிய சிகித்ஸாக்ரமமே இன்றைக்கும் முக்கியமாய் அநுஸரிக்கப்பட்டு வருவதும் அப்பெருமையைக் குறிப்பிடுவதற்கான அத்தாட்சியாகும். சாஸ்த்ரீய தோரணியிலும், இனிய வாக்கிய நடையிலும், விஷய விமர்சங்களின் சீர்திருந்திய வகைகளிலும் அஷ்டாங்க ஹ்ருதயத்திற்குள்ள சிறப்பு அஸாதாரணமான தென்று நினைத்தே, சதுர்வர்க்கசிந்தாமணி யென்னும் ஸ்ம்ருதிஸங்கிரஹம் இயற்றிய ஹேமாத்ரி யென்பவர்கூட இக்கிரந்தத்திற்கு வியாக்யாநம் எழுதலானார். இவ்வியாக்யாநத்திற்கு "ஆயுர்வேத ரஸாயநம்" எனப் பெயர். அஷ்டாங்க ஹ்ருதயத்திற்கு ஹேமாத்ரியினால் ஸூத்திர ஸ்த்தாநத்திற்கு மாத்திரமே வியாக்யாநம் இயற்றப்பட்டதென்று சிலர் கூறுகிறார்கள். ஆனால் ஸ்ரீ கண்ட தத்தர், ஸித்தயோகக் கிரந்தத்தின் அஜீர்ணாதிகாரத்தில், இரஸபேத விஷய விவரணத்தில் வியாக்யாநமெழுதுகையில் ஹேமாத்ரியைக் குறிப்பிட்டிருப்பதோடு, அக்கிரந்தத்தின் மிச்ரகாதிகாரத்திலும் 27-வது ச்லோகத்தின் வியாக்யாநத்தில் "கஷாய யோநய : பஞ்ச ரஸா லவணவர்ஜிதா :" என்கிற அஷ்டாங்க ஹ்ருதய கல்பஸ்த்தாநத்திலுள்ள ச்லோகமும், அதற்கு ஹேமாத்ரி எழுதியிருக்கின்ற வியாக்யாநமும் அவருடைய பெயரோடு ஸ்ரீகண்டனால் குறிப்பிடப்பட்டிருப்பதால், அதைக்கொண்டு அஷ்டாங்க ஹ்ருதயத்திற்கு முற்றிலும் ஹேமாத்ரியினால் வியாக்யாநம் இயற்றப்பட்டிருக்கவேண்டுமெனக் கருதுகிறோம். இப்பொழுது அஷ்டாங்க ஹ்ருதயத்திற்கு எங்கும் பிரஸித்தமாய் வெளிவந்துள்ள வியாக்யாநம் ஸர்வாங்கஸுந்தரம் என்பதே. இது மிருகாங்கதத்தன் என்பவருடைய புத்திரனை அருணதத்தன் என்பவரால் இயற்றப்பட்டது. ஸித்தயோகத்தின் அஜீர்ணாதிகாரம் முதலிய விடங்களில் குறிப்பிட்டிருப்பதைக் கொண்டு சந்திரநந்தன வியாக்யாநம் என்று மற்றொரு உரையும் அஷ்டாங்க ஹ்ருதயத்திற்கு இருந்ததாகத் தெரியவருகின்றது. வேறு சில வியாக்யாநங்களும் ஏட்டுப்பிரதிகளாக இப்பொழுது கிடைக்கின்றன : அவை பெரும்பான்மையும் முற்றுப் பெறாதனவாயிருக்கின்றன. சில அவற்றில் திரமையுடன் வரையப்பட்டுள்ளன.

வைத்திய சாஸ்திர ஸம்பந்தமான அநேக பாரிபாஷிக விஷயங்களும், மற்றும் பஞ்சகர்மங்களென்கிற ஐந்துவித சிகித்ஸாவிசேஷங்களும்,[1] மற்றுமுள்ள சாஸ்திரார்த்தங்களும் அடங்கிய ஸூத்திர ஸ்த்தாநத்தையும், சரீரதத்துவங்களை விளக்கும் சாரீரஸ்த்தாநத்தையும், ரோகங்களின் உற்பத்தி லக்ஷணாதிகளை விவரிக்கும் நிதாந

1. ஸ்நேஹம், ஸ்வேதம், வமநம், விரேசநம், வஸ்தி என்கிற ஐந்துவித சிகித்ஸா முறைகளுக்கு "பஞ்ச கர்மம்" எனப் பெயர்.

ஸ்த்தாநத்தையும், இங்ஙனம் மொழி பெயர்த்து முடித்து அதை முதற் புஸ்தகமாகச் செய்து, அனைவருக்கும் முக்கியமாகத் தமிழ் நாட்டு வைத்தியர்களுக்கும் இவ்வாறு உபயோகமாகக் கூடிய வகையில் வெளியிடுவதில் நாம் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கு இதைப் படித்து இதன் உபயோகத்தைத் தமிழர் உவந்தேற்பதே நமக்கு ஏற்றதோர் பிரயோஜனமாகும். இவ்வஷ்டாங்க ஹ்ருதயத்தின் நமது மொழி பெயர்ப்பில் சிகித்ஸா ஸ்த்தாநம், கல்ப ஸ்த்தாநம் அடங்கிய முந்திய பதிப்பும் செலவாய் விட்டதால், அதையும் இனி உத்தர ஸ்த்தாநம் உட்பட இரண்டாம் பாகமாக வெளியிட வேண்டி முயன்று வருகிறேன். ஆனால் அதுவும் இந்த முதற் பாகத்துக்குச் சம அளவாயிருப்பதால், அதை வெளியிடுவதற்கும் மிகத் திரவ்யச்செலவாகும்; ஆகவே அதற்கு விசேஷமாகப் பொது ஜனங்களுடைய உதவி வேண்டப்படுகிறது.

வைத்தியகலாநிதி ஆபீஸ்,
சென்னை,
1918ஞு ஜூன்மீ 6உ.

மேல்பாக்கம்
துரைஸ்வாமி ஐயங்கார்.

[சீர்திருத்திய 2-ம் பதிப்பு முகவுரை. 1—1—1932]

ஸ்ரீ

# அஷ்டாங்க ஹ்ருதயம்.

## ஸூத்திர ஸ்த்தாநம்.

### முதல் அத்தியாயம்.

### ஆயுஷ்காமீயம்.

இஷ்ட தேவதையைத் தொழுதல் :—எப்பொழுதும் சரீரத்திற் பற்றுள்ளவையும், அகிலசரீரத்தையும்[1] ஆச்ரயித்துண்டாகக் கூடிய வையும், விஷய விருப்பமென்ன, அறிவின்மையென்ன, ஆறுதலற்ற நிலைமையென்ன இவ்விகாரங்களைக் கொடுப்பவையுமான ஆசை முதலிய[2] அகில வியாதிகளையும் யாதொருவர் அடியோடு அழித்த னரோ, அவ்வபூர்வ வைத்தியரை[3] வணங்குவேனாக.—1.

இதன்கீழ் ஆயுஷ்காமீயம்[4] என்னும் அத்தியாயத்தை விவரிக்கப்போகின்றோம் :—

ஆயுர்வேதத்தில் ஆதரவு அவசியம் :—ஆத்ரேயர் முதலிய மஹருஷிகள் இதனடியில் வருமாறு கூறியிருக்கின்றனர்: அறம்

---

1. அகில சரீரத்தையும்—தேஹத்தில் எல்லாப் பாகங்களையும் என்றாவது, எல்லாப் பிராணிகளுடைய தேஹங்களையும் என்றாவது பொருள்.

2. இராகம், த்வேஷம், மதம், மாத்ஸரியம் முதலிய மானஸ தோஷங்கள் 'ஆசை முதலிய' என்பதால் குறிப்பிடப்படுகின்றன.

3. சாரீர ரோகங்களிலேயே சிலவற்றை அஸாத்தியமென்று விட்டு விடவேண்டியிருக்க, மானஸிகமாகவும், அதிலும் இயற்கையிலேயே ஏற்படுபவையுமான ஆசை முதலிய விகாரங்களையும் போக்குந் திறமையுள்ளவரானதால் **அபூர்வவைத்தியர்** எனக் கூறப்பட்டதென்க; அபூர்வ வைத்தியர் என்றால் ஆதிவைத்தியர் என்றும் கூறலாம்.

4. ஆயுஷ்காமீயம்—தீர்க்காயுளை விரும்புபவருக்கு ஹிதமான இக்கிரந்தம் முற்றிலும் இதையே பயனாக வுடையதாயினும், இச்சாஸ்திரத்திற்கே அடிப்படையான மர்மங்களனைத்தரும் விஷயங்கள் இவ்வத்தியாயத்தில் ஆரம்பிக்கப்படுவதால் இதற்கு இப்பெயர் கொடுக்கப்பட்டது.

பொருள் இன்பங்களைச்[1] சாதிக்கவல்லது தீர்க்காயுள்; அதைப் பெற விரும்புபவன் ஆயுர்வேத நூல்களில் அதிக ஆதரவுள்ளவனு யிருக்க வேண்டும்.—2.

ஆயுர்வேதத்திற்கான ஆசார்யபரம்பரை:—பிரம்மாவானவர் ஆயுர்வேதத்தை ஆதியில் அறிந்து தக்ஷப்பிரஜாபதிக்கு போதித்தார்; அவர் அச்விநீ தேவதைகளுக்கும், அச்விநீ தேவதைகள் இந்திரனுக்கும், இந்திரன் ஆத்ரேயர் முதலிய[2] முனிவர்களுக்கும், அவர்கள் அக்னிவேசர் முதலானவர்களுக்கும் அதை போதித்தனர். பிறகு அக்னிவேசர் முதலானோர்[3] தனித்தனியே அநேகம் தந்திரங்களை[4] விஸ்தாரமாயியற்றலாயினர்.—3, 3½.

இந்நூலின் பெயரும் நோக்கமும்:—ஆங்காங்கு மிகவும் சிதறுண்ட விஷயங்களை யுடையவையான அத்தந்திரங்களி லிருந்து பெரும்பாலும் ஸாரதரமான அம்சங்களை[5] ஒருமிக்கத் திரட்டி அதிக சுருக்கமில்லாமலும், அதிக விரிவில்லாமலும் அஷ்டாங்க ஹ்ருதயம்[6] என்னும் இக்கிரந்தம் இயற்றப்படுகின்றது.—4½.

அஷ்டாங்க சிகித்ஸைகள்:—காயம்[7] முதலியவற்றை ஆதாரமாகக்கொண்டு நிறைவேற்றவேண்டிய எண் வகையான அங்கங்கள் இச்சாஸ்திரத்தில் அடங்கியிருப்பதாக முற்காலத்திய முனிவர்கள் மொழிந்திருக்கின்றனர். அவையாவன: காயசிகித்ஸை,[8] பால சிகி

1. இன்பங்கள்—இவ்வுலகத்திய ஸுகங்கள், மோக்ஷஸுகம்; வைத்தியசாஸ்திரஸம்பந்தமான அறிவினுல் இவ்வனைத்தையும் ஸாதிக்கலா மென்பது கருத்து.

2. "ஆத்ரேயர் முதலிய" என்பதால் தன்வந்தரி, நிமி, காச்யபர் முதலானோரும் குறிப்பிடப்படுகின்றனர்.

3. "அக்னிவேசர் முதலானோர்" என்பதால் ஜதூகர்ணர், பேடர், பராசரர், ஹாரீதர், க்ஷாரபாணி இவர்களும் குறிக்கப்படுகின்றனர்.

4. தந்திரங்கள் என்றால் கிரந்தங்கள். அக்னிவேசதந்திரம், பேடதந்திரம், ஜதூகர்ண தந்திரம், பராசரதந்திரம், ஹாரீததந்திரம், க்ஷாரபாணி தந்திரம் என ஆறு தந்திரங்கள் அல்லது ஸம்ஹிதைகள் அப்பொழுது ஏற்பட்டன.

5. முதலில் பலவாறாக இறைந்திருந்த ஆயுர்வேத நூல்களிலுள்ள ஸாரங்களையெல்லாம் கிரஹித்து அஷ்டாங்க ஸங்கிரஹம் இயற்றி, அப்பால், அதிலிருந்து இன்னும் ஸாரமான அம்சங்களையெடுத்து அஷ்டாங்க ஹ்ருதயம் வரையப்பட்ட தென்பதைக் குறிப்பிடுவதற்கே ஸாரதரம் என்று கூறப்பட்டதென்றறிக.

6. மேற்குறிப்பிடப்படும் விஸ்தாரமான எட்டு வைத்தியாங்கங்களையும் இருதயம்போல் இக்கிரந்தம் அடக்கிக்கொண்டிருப்பதால் இக்கிரந்தத்திற்கு இப்பெயர் வந்தது.

7. காயம்—தேஹம்; பெரும்பாலும் கழுத்துக்குக் கீழுள்ள பாகமே இதனுல் குறிப்பிடப்படுகிறது.

8. காய சிகித்ஸை—ஸர்வ சரீரத்திற்கும் துன்ப மளிக்கக்கூடிய ஜ்வரம், க்ஷயம், இரத்தபித்தம் முதலிய வியாதிகளுக்கான சிகித்ஸை.

த்ஸை[1], கிரஹ சிகித்ஸை[2], ஊர்த்வாங்க சிகித்ஸை[3], சல்ய சிகித்ஸை[4], விஷ சிகித்ஸை[5], இரஸாயந சிகித்ஸை[6], வாஜீகரண சிகித்ஸை[7] என்பவையாம்.—5½.

மூன்று தோஷங்கள்:—வாயு, பித்தம், கபம் என்கிற இம்மூன்றும் ஸங்கிரஹமாக[8] மூன்று தோஷங்கள் எனப்படுகின்றன; அவை கோளாறடைந்தால் தேஹத்தைச் சீரழிக்கவும், ஸமான ஸ்திதியில் இருந்தால் தேஹத்தை ஆரோக்கிய ஸ்திதியில் இருத்தி நடத்தவும் தகுந்தவைகளா யிருக்கின்றன—6½.

தோஷங்களுக்கு முக்கிய ஸ்த்தாநங்கள் :—அவை சரீரமுழுதிலும் பரவி ஸஞ்சரிக்குந்தன்மை யுடையவையாயினும், அவற்றுள் வாதம் என்பது நாபிக்குக் கீழேயும், பித்தம் நாபி இருதயம் இவ்விரண்டுக்கும் இடையிலும், கபம் இருதயத்திற்கு மேலும் முக்கியமாக இடம் பெற்றிருக்கின்றன.—7.

தோஷங்கள் பலம் பெறக்கூடிய ஸமயங்கள் :—ஆயுள்காலம், பகல், இரவு, போஜநம் இவற்றின் இறுதிகள் வாயுவுக்கு பலங்கொடுக்கக்கூடியவையாகவும், இவற்றின் மத்திய பாகங்கள் பித்தத்திற்கு பலந்தரக் கூடியவையாகவும், இவற்றின் ஆரம்ப

---

1. பாலசிகித்ஸை—சிறுவர்களுக்கும், முக்கியமாய் இளங்குழந்தைகளுக்கும் செய்யப்படும் சிகித்ஸை.

2. கிரஹசிகித்ஸை—யக்ஷர், பிசாசங்கள் முதலிய பூதகணங்களால் பீடிக்கப்படுபவருக்கு ஏற்ற சாந்திகர்ம ரூபமான சிகித்ஸை.

3. ஊர்த்வாங்க சிகித்ஸை—கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்களான கண், காது, நாசி முதலியவற்றிற்குச் செய்யப்படும் சிகித்ஸை. இது சாலாக்யம் என்றும் கூறப்படும்.

4. சல்ய சிகித்ஸை—சஸ்திர சிகித்ஸை.

5. விஷ சிகித்ஸை —ஸர்ப்பவிஷம் முதலியவற்றால் நேரிடும் தீங்குகளுக்கான பரிஹாரமுறை; இதற்கே அகத சிகித்ஸை யென்றும் பெயர்.

6. இரஸாயந சிகித்ஸை—கிழத்தனம் அல்லது சரீர இளைப்பு முதலியது சீக்கிரம் ஸம்பவிக்காமல் உடலை பலப்படுத்துவதற்கான சிகித்ஸாக்கிரமம்.

7. வாஜீகரண சிகித்ஸை—சுக்லதாதுவை விருத்திசெய்து சிற்றின்பத்தை அதிகப் படுத்துவதற்கான சிகித்ஸை. இதற்கே "விருஷ்யம்" என்றும் பெயர்.

8. வாத பித்த கபங்கள் கோளாறடையாத நிலைமையில் தேஹத்தைத் தாங்கக்கூடியவையா யிருப்பதுபற்றி அவை தாதுக்கள் என்றே உண்மையில் வழங்கப்பட வேண்டியவை; எனினும் எவ்வித வியாதியிலும் முன்னதாய் இவை விகற்பமடைந்து சரீரத்தைத் தூஷிக்குந் தன்மை யுடையவையாயிருப்பதைக் கருதி, இவற்றிற்கு தோஷங்கள் என்றே பிரஸித்தி யுண்டாயிற்று. இரத்தம் முதலிய வேறு சிலவற்றையும் தோஷங்கள் என்று சிலர் கூறுவதால், 'ஸங்கிரஹமாக தோஷங்கள்' மூன்றுஎன்று இங்கு குறிப்பிடப்பட்டது.

பாகங்கள் கபத்திற்கு அநுகூலமானவையாகவும்[1] முறையே அமைந்திருக்கின்றன.—$7\frac{1}{2}$.

தோஷங்களின் நிலைமைகளும் அக்னியின் மாறுபாடுகளும்:—அவற்றுள் வாதம் மேலிட்டிருந்தால் ஜாடராக்னி[2] விஷமமாகவும்[3], பித்தம் மேலிட்டால் தீக்ஷ்ணமாகவும், கபம் மேலிட்டால் மந்தமாகவும் ஆகும்; தோஷங்கள் எல்லாம் ஸமநிலைமையிலிருந்தால் அக்னியும் ஸமமான ஸ்திதியிலிருக்கும்.—8.

தோஷங்களால் கோஷ்டநிலைமை மாறுபடுதல்:—வாதம் மேலிட்டால் கோஷ்டம்[4] க்ரூரமாகவும்[5], பித்தத்தினால் மிருதுவாகவும்[6], கபத்தினால் மத்திமமாகவும்[7] இருக்கும். மூன்றும் ஸமஸ்திதியில் இருந்தால் அப்பொழுதும் கோஷ்டம் மத்திம குணமுள்ளதாகவே இருக்கும்.—$8\frac{1}{2}$.

வாதாதி பிரக்ருதிகள்:—சுக்லத்திலும்[8] ஆர்த்தவத்திலும்[9] கலந்துள்ள இதுதோஷங்களால், ஆதியில் கர்ப்போற்பத்தி காலத்திலேயே ஹீநப்ப்ரக்ருதியென்றும், மத்திமப்பிரக்ருதியென்றும், உத்தமப்பிரக்ருதியென்றும் முறையே மூன்று பிரக்ருதிகள், விஷத்திலிருந்து விஷக்கிருமிகள் உண்டாவதுபோலவே தனித்தனியாக ஏற்படுகின்றன. மூன்று தாதுக்களும் ஸமமான அளவிற் கூடியிருந்தால் அது எல்லாவற்றிலும் சிறந்த பிரக்ருதியாகவும், இரண்டிரண்டு தோஷங்கள் கூடுவதால் ஏற்படுபவை நிந்திக்கக்கூடிய பிரக்ருதிகளாகவும் ஆய்விடுகின்றன.—9, 10.

---

1. ஆயுளின் இறுதியில் வாதமும், இடையில் பித்தமும், ஆதியில் கபமும் மேலிட்டிருக்கும். பகலின் இறுதியில் வாயுவும், மத்தியில் பித்தமும், ஆரம்பத்தில் கபமும் பலங்கொள்ளும். அவ்விதமே இரவின் முடிவில் வாயுவும், இடையில் பித்தமும், ஆரம்பத்தில் கபமும் மேலோங்கியிருக்கும். போஜநம் ஜீர்ணமான ஸமயத்தில் வாதமும், இடையில் பித்தமும், போஜநம்செய்த ஸமயத்தில் கபமும் தலையெடுத்திருக்கும்.

2. ஜாடராக்னி—குடலில் ஆஹாரம் முதலியவற்றை ஜீர்ணம் செய்வதற்கான ஒருவித பாசக சக்தி. அக்னியென்பதை சரீரச்சூடு என்றும் கூறலாம். தோஷங்களின் மாறுபாட்டால் அக்னியும் விகற்பமடையும்.

3. விஷமம்—ஒரு ஸமயம் அதிகரிப்பதும், அடுத்த க்ஷணத்தில் குறைவடைவதுமான ஏற்றத்தாழ்வான நிலைமை.

4. கோஷ்டம்—குடல்.

5. க்ரூரம்—கடிநம்; க்ரூர கோஷ்டம்—கற்குடல்

6. மிருது கோஷ்டம்—வெகு எளிதில் விரேசநமாகக் கூடியவாறு இளகுங் குடல்.

7. மத்திமகோஷ்டம்—க்ரூரமுமாகாத, மிருதுவு மல்லாத குடல்.

8. சுக்லம்—புருஷர்களின் ஏழாவது தாது.

9. ஆர்த்தவம்—ஸ்த்ரீகளின் ஏழாவது தாது. இதுவே இரஜஸ் என்றும், புஷ்பம் என்றும் கூறப்படும். மாதவிடாயிலுள்ள ஸ்த்ரீகளின் பீஜ தாது.

வாதத்தின் குணங்கள்:—அவற்றுள் வாயுவானது வரட்சி, இலகு, சீதம், ஸரம்[1], ஸூக்ஷ்மம்[2], சலம்[3] என்னும் குணங்களையுடையதாகும்.—$10\frac{1}{2}$.

பித்தத்தின் குணங்கள்:—பித்தமானது ஸ்நிக்த்தம்[4], தீக்ஷ்ணம், உஷ்ணம், இலகு, விஸ்ரம்[5], ஸரம், திரவம் என்னும் குணங்களையுடையதாம்.—11

கபத்தின் குணங்கள்:—கபமானது ஸ்நிக்த்தம், சீதம், குரு, மந்தம், ச்லக்ஷ்ணம்,[6] ம்ருத்ஸ்நம்[7], ஸ்த்திரம்[8] என்கிற குணங்களுடையதாம்.—$11\frac{1}{2}$.

ஸம்ஸர்க்கமும் ஸந்நிபாதமும்:—இவற்றுள் இரண்டிரண்டு தோஷங்கள் கூடி ஒருமிக்க க்ஷயமடைந்தாலும், பிரகோபமடைந்தாலும் அதற்கு **ஸம்ஸர்க்கம்** எனப் பெயர்; அவ்வாறே மூன்று தோஷங்களும் கூடி க்ஷயமடைந்தாலும் பிரகோபித்தாலும் அதற்கு **ஸந்நிபாதம்** எனப் பெயர்.—12.

ஸப்த தாதுக்களும் மலங்களும்:—இரஸம்[9], இரத்தம், மாம்ஸம், மேதஸ்[10], அஸ்த்தி[11], மஜ்ஜை[12], சுக்லம் என்னும் இவ்வேழும் **ஸப்த தாதுக்கள்** எனப்படுகின்றன; இவைகளே தூஷ்யங்கள்[13] எனவும் வழங்கப்படுகின்றன. மூத்திரம், மலம், வியர்வை முதலியவை[14] மலங்கள் என்றும்[15] கூறப்படும்.—13.

---

1. ஸரம்—நெகிழ்ந்து வியாபிக்கக்கூடிய குணம்.
2. ஸூக்ஷ்மம்—அதிநுட்பமான த்வாரங்களையுடைய நாடிமுதலியவற்றிலும் பிரவேசித்து சரீரத்தில் ஊடுருவக்கூடிய குணம்.
3. சலம்—எப்பொழுதும் அசைந்தோடுந் தன்மையதான குணம்.
4. ஸ்நிக்த்தம்—எண்ணெய்ப் பசையுள்ள குணம்.
5. விஸ்ரம்—ஒரு வகையான நாற்றந்தரும் குணம்.
6. ச்லக்ஷ்ணம்—மழமழப்பான குணம்.
7. ம்ருத்ஸ்நம்—மிருதுவாகவும் வழவழப்பாகவுமுள்ள குணம்.
8. ஸ்த்திரம்—பெருகியோடக் கூடாதது. நிலைத்திருக்கும் குணம்.
9. இரஸம்—ஜீர்ணமான ஆஹாரத்தின் ஸாராம்சம்.
10. மேதஸ்—கொழுப்பு.
11. அஸ்த்தி—எலும்பு.
12. மஜ்ஜை—எலும்பினுட்புறத்திலுள்ள சோறு.
13. வாதாதி தோஷங்களால் இரஸம் முதலியவை விகாரப்படுத்தக்கூடியவையானதால் "தூஷ்யங்கள்" என்றும் கூறப்படுகின்றன.
14. வியர்வை முதலியவை என்றதால் கண், செவி, நாசி, முதலியவற்றிலுண்டாகும் அழுக்குகளும் குறிப்பிடப்படுகின்றன.
15. இரஸ ரக்தாதிகளுக்கு "தாதுக்கள்" என்றும், "தூஷ்யங்கள்" என்றும் இரண்டு பெயர்கள் இருப்பது போல், மல மூத்திராதிகளுக்கும் "மலங்கள்" என்றும், "தூஷ்யங்கள்" என்றும் இரண்டு பெயர்கள் உண்டென்பதைக் குறிப்பதற்காக "மலங்கள் என்றும்" எனக் கூறப்பட்டது, தாதுக்களைப்போலவே மலங்களும் தாதுக்களால் அல்லது தோஷங்களால் தூஷிக்கப்படுவதால் இவையும் "தூஷ்யங்கள்" எனப்படலாம்.

தோஷாங்களுக்கு விருத்தியும் க்ஷயமும் :—தோஷ தாது மலாதிகள் அனைத்துக்குமே ஸமானமான திரவ்ய - குண - க்ரியை களால் விருத்தியும்[1], எதிரிடையான திரவ்ய - குண - க்ரியை களால் க்ஷயமும்[2] உண்டாகும்—13½.

ஷட் ரஸங்கள்:—இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு[3] என்னும் இவ்வாறும் "ஷட்ரஸங்கள்" அல்லது "அறு சுவை" எனப்படும். இவற்றுள் ஒவ்வொன்றுக்கும் பிந்தியிருப்பதை விட முந்தியது முறையே சரீரத்திற்கு பலந்தருவதில் சிறந்தது. —14, 14½.

தோஷங்களுக்கு பிரதிகூலமும் அனுகூலமுமான சுவைகள் :— அந்த ஷட்ரஸங்களுள் முதலிற் குறிப்பிட்ட மூன்றும் வாததோ ஷத்தையும், கைப்பு முதலிய மற்ற மூனறும் கபத்தையும், துவர்ப்பு, கைப்பு, இனிப்பு என்னும் இவை பித்தத்தையும் தணியச் செய்யும். ஒவ்வொன்றுக்கும் விரோதமானவை யென்று குறிப் பிடப்பட்ட இரஸங்களைத் தவிர மற்றவை[4] ஒவ்வொரு தோஷத் தையும் விருத்திபண்ணும்.—15½.

---

1. திரவ்யத்தினுலேயே தாதுமுதலியவற்றிற்கு விருத்தி எங்ஙன மென்றால்—இரத்தம் இரத்தத்தினுல் விருத்தியாகும்; மாம்ஸபோஜனத்தி னுல் மாம்ஸமும் பலங்கொள்ளும்; குளிர்ந்த ஜலமாவது பாலாவது தமக்குச் சமான குணமுள்ள கபத்தை விருத்தி செய்யும்.

குணத்தினுல் விருத்தி—வாழை, கர்ஜூரப்பழம் முதலியவை தோற் றத்தில் பார்த்திவவஸ்துக்களாயிருந்தும், ஆப்யமான (நீர்மயமான) கபத்தை விருத்திசெய்யக் கூடியவைகளாயிருக்கின்றன.

காரியத்தினுல் விருத்தி—ஓடுவது—வியாயாமம் செய்வது முதலிய சரீரவேலைகளால் வாதத்திற்கும், நித்திரை-உட்கார்ந்திருத்தல் முதலியவற் றால் கபத்திற்கும், கோபம்—சிந்தைமுதலிய மானஸிகவேலைகளால் பித்தத் திற்கும் விருத்தியுண்டாவதியல்பு.

2. திரவ்யங்களால் க்ஷயம்—பார்த்திவமான வரகு முதலிய தானியத் தினுல் பார்த்திவமாயுள்ள மாம்ஸம் க்ஷயிக்கும்.

குணத்தினுல் க்ஷயம்—திரவரூபமான தேன் திரவமான கபத்தைத் தன்னிடமுள்ள குணத்தினுல் க்ஷயிக்கச் செய்யும்.

காரியத்தினுல் க்ஷயம்—நித்திரை முதலியவற்றால் வாதம் க்ஷயிக்கும்.

3. துவர்ப்பைவிட கார்ப்பும், அதைவிட கைப்பும், இவ்வாறே இனிப்பு வரையில் ஒவ்வொன்றும் சரீரத்திற்கு பலமளிப்பதில் சிறந்தது. ஆகவே பலந்தருவதில் மிகச் சிறந்தது மதுரரஸமென்றும், பலத்தைக குறைப்பது துவர்ப்பு என்கிற கஷாயரஸமென்றும் நிச்சயிக்கவேண்டும்.

4. மற்றவை யென்பதால்—கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு இவை வாதத்தை விருத்திசெய்யும். அங்ஙனமே இனிப்பு, புளிப்பு, உப்பு இம் மூன்றும் கபத்தையும், கார்ப்பு, உப்பு, புளிப்பு இவை பித்தத்தையும் விருத்திசெய்யக் கூடியவை. (1) மதுரம்—வாத பித்தங்களைப் போக் கும், கபத்தை யுண்டு பண்ணும்; (2) அம்லம்—வாதத்தைப் போக்

திரவ்யம் மூன்றுவிதம் :—திரவ்யமானது சமநம்[1] என்றும், கோபநம்[2] என்றும், ஸ்வஸ்த்தஹிதம்[3] என்றும் மூவகைப் படும்.—16.

வீர்யம் இரண்டு விதம் :—திரவ்யங்களில் இயற்கையிலடங்கிய வீர்யமானது உஷ்ணமென்றும், சீதமென்றும் இருவகையாகப் பகுக்கப்படும்.—16½.

விபாகங்கள் மூன்றுவிதம் :—திரவ்யங்கள் மதுர விபாகம், அம்ல விபாகம், கடு விபாகம் என்று மூன்று விதமான விபாகங்களை[4] அடைவதுண்டு.—17.

குணங்கள் இருபது விதம் :—குரு, மந்தம், ஹிமம், ஸ்நிக்த்தம், ச்லக்ஷ்ணம், ஸாந்த்ரம், மிருது, ஸ்த்திரம், ஸூக்ஷ்மம், விசதம் என்னும் இவையும், இவற்றிற்கு முறையே எதிரிடையான குணங்களும்[5] ஆக இருபது வகையான குணங்கள் திரவ்யங்களில் அடங்கியிருக்கின்றன.—18.

---

கும், கப பித்தங்களை யுண்டுபண்ணும்; (3) இலவணம்—வாதத்தைப் போக்கும், கப பித்தங்களை யுண்டுபண்ணும்; (4) திக்த்தம்—கப பித்தங்களைப் போக்கும், வாதத்தை யுண்டுபண்ணும்; (5) காரம்—கபத்தைப் போக்கும்; வாத பித்தங்களை யுண்டுபண்ணும்; (6) துவர்ப்பு—கப பித்தங்களைப் போக்கும், வாதத்தை யுண்டுபண்ணும்.

1. சமநம்—விருத்தியான வாதாதிதோஷங்களைக் குறைத்து அதனை தன் நிலைமையில் இருக்கச்செய்து வியாதியைத் தணிக்குங் குணம்.

2. கோபநம்—தோஷங்களை விருத்தி செய்விக்கும் குணம்.

3. ஸ்வஸ்த்தஹிதம்—ஆரோக்கியமாயிருப்பவருக்கு அநுகூலமானது.

4. புஜிக்கப்படும் உணவுகள் குடலிற் சென்று பக்குவமாகும்போது, அவ்வுணவுப் பொருட்களில் சில மதுர ரஸமாகவும், வேறு சில அம்ல ரஸமாகவும், மற்றும் சில கடு ரஸமாகவும் மாறுதலடைவதுண்டு; அவ்வித மாறுதலே விபாகம் என்றும் கூறப்படுகிறது. எங்தெந்த இரஸம் எவ்வித பாகத்தை யடைகிற தென்பது முதலிய விவரத்தைப்பற்றி பத்தாவது அத்தியாயத்தைப் பார்க்க.

5. எதிரிடையான குணங்கள்—இலகு, தீக்ஷ்ணம், உஷ்ணம், ரூக்ஷம், கரம், திரவம், கடிநம், ஸரம், ஸ்த்தூலம், பிச்சிலம் இவை முறையே குரு முதலியவற்றிற்கு நேர் விரோதமானவையாம். [குரு—பாரமுள்ளது; இலகு—இலேசானது; மந்தம்—மெது; தீக்ஷ்ணம்—கூர்மை; ஹிமம்—குளிர்ச்சி; உஷ்ணம்—சூடு; ஸ்நிக்த்தம்—எண்ணெய்ப்பசையுள்ளது; ரூக்ஷம்—வரட்சி; ச்லக்ஷ்ணம்—மழமழப்பு; கரம்—மழமழப்பற்றது; ஸாந்த்ரம்—தோய்ந்தது; திரவம்—நீர்; மிருது—மெத்தென்றிருத்தல்; கடிநம்—உரப்பு; ஸ்த்திரம்—பெருகியோடக் கூடாதது; ஸரம்—பெருகுந் தன்மையது; ஸூக்ஷ்மம்—நுட்பம்; ஸ்த்தூலம்—பருமன்; விசதம்—தெளிவு; பிச்சிலம்—பிசு பிசுப்புள்ளது.]

**ரோகா ரோக்கிய காரணங்கள் :**—காலங்களென்ன [1], விஷயங்களென்ன [2], காரியங்களென்ன [3] இவை ஹீநயோகங்களாகவோ, மித்தியாயோகங்களாகவோ, அதியோகங்களாகவோ ஏற்படுமாயின்[4] அவையே முக்கியமாக ரோகங்களை யுண்டு பண்ணுவதற்குக் காரணங்களாகவும், சரியான யோகங்களைப் பெற்றிருந்தால் ஆரோக்கியத்திற்கு ஆதாரங்க ளாகவும் ஆகின்றனவென்றறிக.—19.

**ரோகா ரோக்கிய நிலைமை :**—தோஷங்கள் எவ்விதத்திலேனும் கோளாறடைந்தால் அவ்வித நிலைமையே ரோகம் எனப்படும். அவை ஸமான ஸ்திதியிலிருந்துவந்தால் அதுதான் ஆரோக்கியம் எனப்படுகின்றது.—19½.

**ரோகங்கள் இரண்டு விதம் :**—அவற்றுள் ரோகங்களானவை நிஜரோகங்கள் [5] என்றும், ஆகந்துகரோகங்கள் [6] என்றும் இரண்டு விதங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. 20.

**ரோகங்களுக்கு இரண்டு ஆச்ரயங்கள் :**—அப்பிணிகளுண்டாவதற்கு சரீரமென்னும் மனதென்னும் இரண்டு ஆச்ரயங்களும் [7] உண்டு.—20½.

---

1. குளிர்காலம், கோடைகாலம், மாரிகாலம் என்று காலம் பலவிதம்.

2. விஷயங்கள்—சப்தம், பரிசம், ரூபம், இரஸம், கந்தம் என்னும் (பஞ்சபூதங்களின்) குணங்கள்.

3. காரியங்கள்—சாரீர க்ரியைகள், வாசிக க்ரியைகள், மானஸிக க்ரியைகள் என்று பலவகையாக வகுக்கக்கூடிய காரியங்கள்.

4. **ஹீநயோகம்**—அந்தந்த காலங்களில் இருக்க வேண்டிய உஷ்ண சீதாதிகள் குறைவுற்றால் அது காலத்திற்கு ஹீநயோகம்; **மித்தியாயோகம்**—உஷ்ண காலத்தில் குளிர்ச்சியும், சீதகாலத்தில் உஷ்ணமும் உண்டானால் அது மித்தியாயோகம்; **அதியோகம்**—அந்தந்த காலத்தில் உஷ்ண சீதாதிகள் அபரிமிதமாயிருப்பது. சப்தமுதலிய விஷயங்களில் இந்திரியங்களுக்கு வேண்டியவளவு ஸம்பந்தமில்லாமற் போனால் அது அவற்றிற்கு ஹீநயோகம்; அவ்விதமே அதிக சேர்க்கையுண்டானால் அதியோகம்; ஒரு வஸ்து பல வஸ்துக்களாக அல்லது வேறொருவஸ்துவாகக் காணப்படுவது முதலியது மித்தியாயோகம். இவ்விதமே கர்மங்களுக்குமறிக. அந்தந்த காலங்களின் நிலைமைகளும், விஷயப்பிரவ்ருத்திகளும் அததற்குற்றவாறு ஸமமாய் அமைந்திருந்தால் அது **ஸம்யக்யோகம்** (சரியான சேர்க்கை) எனப்படும். "**யோகம்**" என்றால் சேர்க்கை யெனப் பொருள்.

5. நிஜரோகங்கள்—வாதாதி தோஷங்கள் கோளா றடைந்துண்டாகும் வியாதிகள்.

6. ஆகந்துகரோகங்கள்—காயம் முதலியவை தாக்கி வெளிக் காரணங்களாலுண்டாகும் வியாதிகள்.

7. ஆச்ரயங்கள்—வியாதிகள் உண்டாவதற்கும், தங்கி விருத்தியாவதற்கும் ஆதாரமான ஸ்தாநங்கள்.

மனதுக்கு வேறு இரண்டு தோஷங்கள் :—இரஜோகுணமும் தமோகுணமுங்கூட [1] மனதுக்கு இரண்டுவித தோஷங்களாகக் கூறப்பட்டிருக்கின்றன.—21.

பிணியாளியைப் பரீக்ஷிக்க மூன்று உபாயங்கள் :—தர்சநம் [2], ஸ்பர்சநம் [3], பிரச்நம் [4] என்னும் இம்மூன்று உபாயங்களால் பிணியாளியைப் பரீக்ஷிக்க வேண்டும்.—21½.

ரோகங்களைப் பரீக்ஷித்தறிய ஐந்து உபாயங்கள் :—நிதாநம் [5], பூர்வரூபம் [6], ரூபம் [7], உபசயம் [8], ஸம்ப்ராப்தி [9] என்கிற இவ்வைந்து உபாயங்களைக் கொண்டு ரோகஸ்வரூபத்தைப் பரீக்ஷித்தறியவேண்டும்.—22.

தேசங்கள் இரண்டு விதம் :—இவ்வாயுர்வேத சாஸ்திரத்தில் பூதேசம்[10] என்றும், தேஹதேசம்[11] என்றும் இரண்டுவித தேசங்கள் வழங்கப்படுகின்றன.—22½.

பூதேசம் மூன்று விதம் :—பூதேசத்தை ஜாங்கல மென்றும், ஆநூப மென்றும், ஸாதாரண மென்றும் மூன்று வகைப்பட்டதாகக் கூறவேண்டும். அவற்றுள் ஜாங்கல மென்பது மிகவும் வாயுவினுல்

---

1. வாத பித்த கபங்கள் சரீரத்திற்கு ஸம்பந்தப்பட்டிருப்பது போலவே மனதுக்கும் ஸம்பந்தப்பட்டிருப்பதால், அவற்றுடன் இரஜஸ் தமஸ் என்னும் இவ்விரண்டுங்கூட அதற்கு தோஷங்களா யமைந்துள்ளன.

2. தர்சநம்—நேத்திரங்களால் பார்த்து வியாதியைப் பரீக்ஷித்தல்.

3. ஸ்பர்சநம்—வியாதிகொண்ட அவயவங்களைக் கைகளால் பரிசித்துப் பரீக்ஷித்தல்.

4. பிரச்நம்—தர்சந ஸ்பர்சநங்களால் அறியமுடியாத விஷயங்களை ரோகியைக் கேட்டு அறிதல்.

5. நிதாநம்—வியாதிகளை யுண்டு பண்ணுவதற்கான காரணம்.

6. பூர்வரூபம்—வியாதி யுண்டாவதற்குமுன் அதற்குத் தகுந்தவாறு ஸம்பவிக்கும் குறி.

7. ரூபம்—வியாதியின் குறி. இலக்ஷணம்.

8. உபசயம்—ஔஷதப் பிரயோகம் முதலியவற்றால் வியாதி நிவ்ருத்தியாதல். [ஒருவனுக்கு உண்டான ரோகம் வெவ்வேறு வியாதிகளாக ஸந்தேஹப்பட வேண்டியிருக்கையில், எவ்வித சிகித்ஸையினுல் அப்பிணியாளி ஸுகம் பெறுகிருனே, அச்சிகித்ஸையின் தன்மையைக்கொண்டு அது இவ்வித வியாதி யென்று நிச்சயிக்கக்கூடுமாகையால், உபசயமும் ரோக பரீக்ஷைக்கு ஏற்ற உபாயங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது.]

9. ஸம்ப்ராப்தி—ரோககாரணங்கள் தேஹத்திற்பற்றி, தாதுக்களிற்பரவி, வியாதி எவ்வெவ்விதம் உண்டாகின்றதென்கிற முறையை அறியவல்ல உபாயம்.

10. பூதேசம்—நிலம். பூமியைச் சேர்ந்த பலவித இடங்கள்.

11. தேஹதேசம்—பலவித தாதுக்களும் அவயவங்களும் அடங்கிய சரீரம்.

வாட்சி யுண்டதாயிருக்கும்[1]; ஆநூபமானது மிகச் சதுப்பாகவும், ஆகவே கபத்தைப் பிரகோபிக்கச் செய்யுந் தன்மையதாகவு மிருக்கும்[2]; ஸாதாரண பூமியில் எத்தோஷமும் அதிகரிக்காமல் ஸமான நிலைமையில் இருந்துவரும்.[3] —23½.

ஔஷதம் சரீரத்திற் பற்றுவதற்கான காலம் இரண்டுவிதம் :— ஔஷதம் முதலியவை தேஹத்திற் பற்றி சரியானபடி அதனதன் குணங்களைக் காட்டுவதற்கு அவசியமாயுள்ள காலத்தை இருவிதமாகப் பிரிக்கலாம் ; அவற்றுள் ஒன்று க்ஷணம் அல்லது நொடிப்பொழுது முதலியது;[4] மற்றொன்று அந்தந்த வியாதியின் பலவேறு வகையான நிலைமைகள்.[5] —24.

ஔஷதம் இரண்டு விதம்:—ஔஷதமானது சோதநம்[6] என்றும், சமநம்[7] என்றும் சுருக்கமாய் இரண்டுவிதமாகப் பிரிக்கக் கூடியதாம்.—24½.

முக்கியமான சோதந சமநௌஷதங்கள் :—சரீரத்திலுண்டான வாத-பித்த-கபங்கள் என்னும் தோஷங்களுக்கு வஸ்தி[8], விரேகம்[9], வமநம்[10] என்னும் இம்மூன்றும் முறையே மிகப் பிரதாநமான சோதந சிகித்ஸைகளாகவும், தைலம், கிருதம், தேன் என்னும் இம்மூன்றும் முறையே முக்கியமான சமநௌஷதங்களாகவும் கருதப்படுகின்றன.—25, 25½.

---

1. ஜாங்கலதேசம்—ஜலமும் செடி கொடிகளும் குன்று முதலியவைகளும் குறைவாயுள்ள, அல்லது முற்றிலுமில்லாத, வாயு விசேஷித்த பூமி. இவ்விடத்தில் ஏதாவது செடி கொடிகளாவது ஜந்துக்களாவது உண்டானால் அவை வாதப் பிரதாநங்களாயிருக்கும்.

2. ஆநூபம்—ஜலமும் செடிகொடிகளும் அதிகரித்து, வெயில் விசேஷமாயில்லாமலிருக்கும் பிரதேசம். இவ்விடத்திலுண்டான ஓஷதி முதலியவை மிகவும் ஸ்நிக்தங்களாயிருக்கும்; ஆகவே கபப்பிரதாநமாயிருக்கும்.

3. ஸாதாரணதேசம்—இப்பிரதேசம் முற்கூறிய இரண்டுவித பூமிகளுக்கும் மத்தியஸ்தமான குணங்களைப் பெற்றிருக்கும்.

4. க்ஷணம் முதலியது—இதனால் நாழிகை, யாமம், நாள், மாதம் முதலிய மற்றக் காலங்களும் குறிக்கப் படுகின்றன.

5. வியாதிகளுக்கு ஆமாவஸ்த்தை (பக்குவமாகாத நிலைமை), பக்வாவஸ்த்தை முதலிய நிலைமைகள் இங்கு குறிக்கப்படுகின்றன.

6. சோதநம்—வாந்தி, விரேகம் முதலியவற்றால் தேஹத்தினுள் அடங்கியுள்ள மலங்களைக் கழித்துச் சுத்தம் செய்தல்.

7. சமநம்—கோளாறடைந்த தோஷம் முதலியவற்றை அவ்வவ்விடத்திலேயே சரிப்படுத்தித் தணித்து ஆரோக்கிய நிலைமையையுண்டுபண்ணுதல்.

8. வஸ்தி—பீச்சாங்குழல் முதலிய கருவிகளால் தைலம் முதலியவற்றை ஆஸநத்துவாரத்திலும் மூத்திர மார்க்காதிகளிலும் செலுத்தி, குடல் முதலியவற்றிலிருந்து மலம் முதலியவற்றை வெளிப்படுத்தல்.

9. விரேகம்—குடலிலுள்ள மலத்தை உடைத்துக் கழியச்செய்தல்; இதுவே ஸாதாரணமாய் பேதியென்று வழங்கப்படுகிறது.

10. வமநம்—வாந்தி செய்விக்கும் சிகித்ஸை.

மனோதோஷங்களுக்கு ஔஷதங்கள்:— புத்தி, தைரியம், ஆத்மஞ்ஞாநம் முதலியவை மனோதோஷங்களுக்கு[1] மிகச் சிறந்த ஔஷதங்களாம்.—26.

சிகித்ஸைக்கு நான்கு பாதங்கள் :—வைத்தியன், ஔஷதம் முதலிய பதார்த்தங்கள், பரிசாரகன், ரோகி என்னும் இவை சிகித்ஸைக்கு நான்கு பாதங்களாகக்[2] கூறப்படுகின்றன. இவற்றுள் ஒவ்வொன்றும் நான்கு குணங்களையுடையதாம்.—27.

வைத்தியனுக்கு அவசியமான நான்கு குணங்கள் :—அவற்றுள் வைத்தியன் தொழிலில் நிபுணனாகவும், யோக்கியதையிற் சிறப்புற்ற ஆசாரியரிடமிருந்து வித்தையைக் கற்றறிந்தவனாகவும், காரியங்களை அநுபவப்படி அப்யஸித்தவனாகவும், பரிசுத்தனாகவும்[3] இருத்தல் வேண்டும். —27½.

ஔஷதத்திற்கு அவசியமான நான்கு குணங்கள் :—ஔஷதம் அநேகவித முறைகளாகப் பக்குவம் செய்யக்கூடியதாகவும், வெகு குணங்களடங்கியதாகவும், சிறந்த பூமிகளிலுண்டாய் தகுந்தவாறு ஸம்ஸ்கரிக்கப்பட்டதாகவும், அந்தந்த வியாதிகளுக்கு ஏற்றவாறு அமைந்ததாகவும் இருக்கவேண்டும்.—28.

பரிசாரகனுக்கு அவசியமான நான்கு குணங்கள்:—பரிசாரகன் பிணியாளியினிடம் அன்புள்ளவனாகவும், பரிசுத்தனாகவும், திறமையுள்ளவனாகவும், புத்திசாலியாகவும் இருக்கவேண்டும்.—28½.

ரோகிகளுக்கு அவசியமான நான்கு குணங்கள் :—ரோகி செல்வவானாகவும், வைத்தியனுக்கு அடங்கியவனாகவும், ஞாபகசக்தியுள்ளவனாகவும், தைரியசாலியாகவும் இருப்பது அவசியம்.—29

வியாதியின் நிலைமைகள்:—எவ்விதமான ஔஷதப் பிரயோகத்தையும் தாங்கக்கூடிய தேஹத்தில் உண்டாகும் வியாதி எளிதில் நிவர்த்தி செய்யக்கூடியதாம்; ஸ்த்ரீகளைவிட புருஷருக்கும், அதிலும் வாலிபருக்கும், எவ்விஷயத்திலும் ஆசை கொள்ளும் சபல புத்தியில்லாதவருக்கும் உண்டாகும் ரோகமும் எளிதில் சிகித்ஸை செய்யக்கூடியன. வியாதியானது மர்மஸ்தாநங்களில்[4] உண்டாகா

---

1. மனோ தோஷங்கள்—இரஜஸ், தமஸ் என்னும் இரண்டும் மனோ தோஷங்கள் என்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது.

2. நான்கு பாதங்கள் என்றால்—முக்கியமான நான்கு அம்சங்கள் எனப் பொருள். நாற்கால் ஜந்துக்களுக்கு அவை நடப்பதற்காக ஏற்பட்டுள்ள கால்களில் ஏதேனும் ஒன்று குறைந்தாலும் அவை நடக்க முடியாததுபோல், இங்கும் இந்த நான்கு அம்சங்களில், ஒன்றிரண்டு குறைந்தாலும் சிகித்ஸை நன்கு நடைபெறமாட்டாது.

3. உடலிலும், வாக்கிலும், உள்ளத்திலும் பரிசுத்தனா யிருக்கவேண்டுமெனக் கருத்து.

4. மர்மங்கள்—சிரஸ், ஹ்ருதயம், வஸ்தி முதலிய பிராணாதாரமான அவயவங்கள்.

மலும், அதன் நிதானம்-பூர்வரூபம், ரூபம் இவை மிகக் குறைவாகவும், உபத்திரவம் [1] ஏற்படாமலும் இருந்தால் அது கஷ்டமின்றியே தீர்க்கக்கூடியதாகும். சரீரத்திலுள்ள தாதுக்களாவது, வஸிக்கும் பிரதேசமாவது, ருதுக்களாவது, பிரக்ருதியாவது [2] வியாதியின் தன்மைக்கு ஸமானமாயில்லாமல் எதிரிடையான குணங்களுடையவையா யிருந்தாலும் அவ்வியாதி ஸுலபமாக நிவர்த்திக்கக் கூடியதாகும்; மேற்கூறிய நான்கு பாதங்களும் நன்கு அமைந்திருப்பதும், கிரஹங்கள் அநுகூலமான நிலைமையிலிருப்பதும், ஒரு தனி தோஷத்தையும், ஒரு மார்க்கத்தையும் [3] ஆச்ரயித்துண்டானதும், வெகு ஸமீப காலத்திலுற்பத்தியானதுமான வியாதியும் ஸுகஸாத்தியமாகும்.[4]—30, 31.

கிருச்சிர ஸாத்திய வியாதி:— சஸ்திரம் முதலியவற்றைப் பிரயோகித்து சிகித்ஸை செய்யவேண்டியதும், முற்கூறிய ஸுக ஸாத்திய நிலைமைகளில் ஏதேனும் சில குறிகள் மட்டும் சேர்ந்திருக்கக் கூடியதுமான வியாதி கிருச்சிரஸாத்தியம்[5] ஆகும்.—31½.

யாப்ய வியாதி:— வியாதியானது ஸாத்திய லக்ஷணங்களுக்கு மாறான நிலைமையில் இருந்தும் ஆயுள் மிகுந்திருந்தால், பத்தியமான ஆசரணைகளைக் கொண்டு அவ்வியாதி யாப்யமாக [6] ஆகலாம். 32.

---

1. உபத்திரவம்—ஒரு ரோகத்தை ஆதாரமாகக்கொண்டு ஸம்பவிக்கும் வேறு வியாதிகள்.

2. பிரக்ருதி—வாதப் பிரக்ருதி, பித்தப் பிரக்ருதி, கபப் பிரக்ருதி முதலிய பிரக்ருதிகள். இயற்கையிலேயே வாதம் அதிகரித்தவனை வாதப் பிரக்ருதி யென்றும், பித்தம் அதிகரித்தவனை பித்தப் பிரக்ருதியென்றும், கபம் அதிகரித்தவனை கபப் பிரக்ருதி யென்றும் கூறுவது முறை.

3. **மார்க்கம்** என்றால்—வியாதியின் காரணம், வியாதி தேஹத்திற் பற்றுவதற்கான வழி. அது பாஹ்யம் அல்லது வெளி யென்றும், ஆந்தரம் அல்லது உள்ளென்றும், மத்திமம் என்றும் மூவகைப்படும்.

4. சீதகாலத்தில், ஆநூபதேசத்தில், வாதப்பிரக்ருதியான மனிதனுக்கு மேதஸ், மஜ்ஜை முதலிய தாதுக்களை ஆச்ரயித்து பித்தம் பிரகோபம் அடைந்தால், அப்பொழுது காலதேசாதிகள் பித்தத்திற்கு எதிரிடையான குணங்களுடையவையா யிருந்தால், அவ்வித வியாதி ஸுகஸாத்தியமாகும். இவ்விதமே சீதவீர்யமான கபத்தினுல் உஷ்ணவீர்யமான இரத்தம் கோளாறடைந்தாலும் ஸுக ஸாத்தியமாயிருக்கும். பித்தப்பிரகிருதிக்கு கபத்தினுல் உண்டாகும் வியாதி ஸுகஸாத்தியம். "எவ்விதமான ஒளஷதப் பிரயோகத்தையும் தாங்கக்கூடிய" என்பது முதல் "ஒரு மார்க்கத்தை ஆச்ரயித்துண்டானதும்" என்பது வரையிற் குறிப்பிட்டுள்ள நிலைமைகள் பெரும்பாலும் ஒருமிக்கக் கூடியிருந்தால் அவ்வியாதி ஸுக ஸாத்தியமாகும்.

5. க்ருச்சிர ஸாத்தியம்—வெகு சிரமப்பட்டு சிகித்ஸை செய்யக்கூடியது. கஷ்டஸாத்தியம் எனவும் படும்.

6. யாப்யம்—வியாதியை நிவர்த்தி செய்ய முடியாவிடினும் அதனுல் சீக்கிரத்தில் பிராணுபாயமுண்டாகா வண்ணம் காலந்தள்ளக்கூடியது.

அஸாத்திய வியாதி:—ஸர்வவிதத்திலும் விபரீதமான நிலைமையிலுள்ள வியாதியானது சிகித்ஸைக்கு வசப்படாமல் அஸாத்திய மாய் விடும்; மேலும் திடீரென்று ஏதேனும் விஷயங்களில் அதிக ஆவலை யுண்டுபண்ணுவதும், அறிவின்மையை அதிகமாயுண்டாக்கு வதும், அமைதியின்றி அலட்டலைக் கொடுப்பதும், மரணக்குறிகளு டன் [1] கூடியதும், இந்திரியங்களை யழிப்பதுமான வியாதி அஸாத்திய மானதேயாம்.[2]—33.

சிகித்ஸை செய்வதற்குத் தகாதவர்கள்:— வைத்தியர்களாலும் அரசராலும் வெறுக்கப்பட்டவனும், அவர்களுக்கு விரோதியா யிருப்பவனும், சிகித்ஸை செய்பவனுக்கே பகைவனானவனும், வேண்டியவளவு உபகரணங்களில்லாதவனும், பலவிதமான காரி யங்களில் கவலையுள்ளவனும், தனக்கு ஸ்வாதீனமா யில்லாத வனும், ஆயுள் காலம் முடிவு பெற்றவனும், துஷ்டகுணமுள்ள வனும், மனத்துயரத்தினால் வருந்துபவனும், எளிதில் எதற்கும் பயப்படுந் தன்மையனும், நன்றிகெட்டவனும், வைத்தியனென்று வீணில் கர்வப் படுபவனும் ஆகிய இத்தகைய ரோகிகளுக்கு சிகித்ஸை செய்வது பிசகு—34, 34½.

அத்தியாயங்களின் ஸங்கிரஹம்:— பிறகு இதனடியில் இக்கிரந் தத்தில் அடங்கிய அத்தியாயங்கள், அவற்றின் பெயர்களைக் குறிப் பிட்டு வரிசைப்படி ஸங்கிரஹமாகக் கூறப்படுகின்றன.[3]—35.

ஸூத்திர ஸ்த்தானம்—அத்தியாயங்கள்:— (1) ஆயுஷ்காமீயம், (2) தினசர்யை, (3) ருதுசர்யை, (4) ரோகாநுத்பாதநீயம், (5) திர வத்திரவ்ய விஞ்ஞாநீயம், (6) அந்நஸ்வரூப விஞ்ஞாநீயம், (7) அந்ந ரக்ஷை, (8) மாத்திராசிதீயம், (9) திரவ்யாதி விஞ்ஞாநீயம், (10) இரஸபேதீயம், (11) தோஷாதி விஞ்ஞாநீயம், (12) தோஷ பேதீ யம், (13) தோஷோபக்ரமணீயம், (14) த்வி-விதோபக்ரமணீயம், (15) சோதநாதி கண ஸங்கிரஹம், (16) ஸ்நேஹவிதி, (17) ஸ்வேத விதி, (18) வமந-விரேசநவிதி, (19) வஸ்தி விதி, (20) நஸ்ய விதி, (21) தூமபாந விதி, (22) கண்டூஷாதி விதி, (23) ஆச்சியோதநாஞ் ஜந விதி, (24) தர்ப்பணபுடபாகவிதி, (25) யந்திர விதி, (26) சஸ் திர விதி, (27) ஸிராவ்யத விதி, (28) சல்யாஹரண விதி, (29) சஸ் திர கர்ம விதி, (30) க்ஷாராக்னி கர்மவிதி ஆக இந்த முப்பது அத்தியாயங்களும் சேர்ந்து ஸூத்திர ஸ்த்தானமாகின்றது. 36—38½.

---

1. மரணக்குறிகள் அரிஷ்டங்கள் என்று இங்கு வழங்கப்படும்.

2. அஸாத்தியம்—எவ்விதத்திலும் சிகித்ஸைக்கு வசப்படாத வியாதி, என்றால் நிவர்த்திக்க முடியாதது.

3. இதனடியில் குறிப்பிடப்படும் அத்தியாயங்களின் பெயர்களுக் குள்ள பொருட்களும், அவற்றைப்பற்றிய விவரங்களும் அந்தந்த அத்தியா யத்தில் பிறகு விவரமாகக் கூறப்படும்.

**சாரீரஸ்த்தானம்-அத்தியாயங்கள்** :—இதன் பிறகு சாரீரஸ்த்தானம் கூறப்படுகிறது:— (1) கர்ப்பாவக்ராந்தி சாரீரம், (2) கர்ப்ப வியாபச் சாரீரம், (3) அங்கவிபாக சாரீரம், (4) மர்மவிபாக சாரீரம், (5) விக்ருதிவிஞ்ஞான சாரீரம், (6) தூதவிஞ்ஞான சாரீரம் என்னும் ஆறு அத்தியாயங்களும் **சாரீர ஸ்த்தானம்** எனப்படும். 39½.

**நிதானஸ்த்தானம் - அத்தியாயங்கள்** :—நிதானஸ்த்தானத்திலுள்ள அத்தியாயங்களாவன:—(1) ஸர்வரோக நிதானம், (2) ஜ்வரநிதானம், (3) இரக்தபித்த-காஸ நிதானம், (4) ச்வாஸ-ஹிக்கா நிதானம், (5) இராஜயக்ஷ்மாதி நிதானம், (6) மதாத்யய நிதானம், (7) அர்சோ நிதானம், (8) அதிஸார கிரஹணீரோக நிதானம், (9) மூத்திராகாத நிதானம், (10) பிரமேஹ நிதானம், (11) வித்ரதி-வ்ருத்தி-குல்ம நிதானம், (12) உதரநிதானம், (13) பாண்டு-சோப-விஸர்ப்ப நிதானம், (14) குஷ்ட-ச்வித்ர-க்ருமி நிதானம், (15) வாதவியாதி நிதானம், (16) வாதசோணித நிதானம் என்று இப்பதினாறு அத்தியாயங்களும் சேர்ந்து **நிதானஸ்த்தானம்** எனப்படும்.—40, 41.

**சிகித்ஸாஸ்த்தானம்-அத்தியாயங்கள்** :—இதன் பிறகு சிகித்ஸாஸ்த்தானம் கூறப்படுகிறது:—(1) ஜ்வர சிகித்ஸை, (2) இரக்தபித்த சிகித்ஸை, (3) காஸ சிகித்ஸை, (4) ச்வாஸ-ஹிக்கா சிகித்ஸை, (5) இராஜயக்ஷ்ம சிகித்ஸை, (6) சர்த்தி-ஹ்ருத்ரோக-த்ருஷ்ணா சிகித்ஸை, (7) மதாத்யய சிகித்ஸை, (8) அர்சஸ் சிகித்ஸை, (9) அதிஸார சிகித்ஸை, (10) கிரஹணீ சிகித்ஸை, (11) மூத்திராகாத சிகித்ஸை, (12) பிரமேஹ சிகித்ஸை, (13) வித்ரதி - வ்ருத்தி சிகித்ஸை, (14) குல்ம சிகித்ஸை, (15) உதர சிகித்ஸை, (16) பாண்டு ரோக சிகித்ஸை, (17) ச்வயது சிகித்ஸை, (18) விஸர்ப்ப சிகித்ஸை, (19) குஷ்ட சிகித்ஸை, (20) ச்வித்ர-க்ருமி சிகித்ஸை, (21) வாதவியாதி சிகித்ஸை, (22) வாதசோணித சிகித்ஸை என்னும் இவ்விருபத்திரண்டு அத்தியாயங்களும் சேர்ந்து **சிகித்ஸா ஸ்த்தானம்** எனப்படும்.—42, 43.

**கல்பஸ்த்தானம்-அத்தியாயங்கள்**:—(1) வமநகல்பம், (2) விரேசநகல்பம், (3) வமந-விரேசந வியாபத்ஸித்தி, (4) வஸ்திகல்பம், (5) வஸ்தி வியாபத் ஸித்தி, (6) பேஷஜகல்பம் என்னும் இவ்வாறு அத்தியாயங்களும் சேர்ந்து **கல்பஸ்த்தானம்** எனப்படும்.—44, 44½.

**உத்தரஸ்த்தானம்-அத்தியாயங்கள்**:—இதன் பிறகு உத்தரஸ்த்தானம் கூறப்படுகிறது; இதற்கே உத்தரதந்திரம் என்னும் பெயர்:—(1) பாலோபசரணீயம், (2) பாலாமயப் பிரதிஷேதம், (3) பாலக்கிரஹப்பிரதிஷேதம், (4) பூதவிஞ்ஞாநீயம், (5) பூதப்பிரதிஷேதம், (6) உன்மாதப் பிரதிஷேதம், (7) அபஸ்மாரப் பிரதிஷேதம், (8) வர்த்மரோக விஞ்ஞாநீயம், (9) வர்த்மரோகப் பிரதிஷேதம், (10) ஸந்தி ஸிதா ஸிதரோக விஞ்ஞாநீயம், (11) ஸந்தி-ஸிதாஸிதப் பிரதிஷேதம், (12) திருஷ்டிரோக விஞ்ஞாநீயம், (13) திமிரப் பிரதி

ஷேதம், (14) லிங்கநாசப் பிரதிஷேதம், (15) ஸர்வாக்ஷிரோக விஞ்ஞாநீயம், (16) ஸர்வாக்ஷி ரோகப் பிரதிஷேதம், (17) கர்ண ரோக விஞ்ஞாநீயம், (18) கர்ணரோகப் பிரதிஷேதம், (19) நாஸா ரோக விஞ்ஞாநீயம், (20) நாஸாரோகப் பிரதிஷேதம், (21) முக ரோக விஞ்ஞாநீயம், (22) முகரோகப் பிரதிஷேதம், (23) சிரோ ரோக விஞ்ஞாநீயம், (24) சிரோரோகப் பிரதிஷேதம், (25) விரண விஞ்ஞாநீயப் பிரதிஷேதம், (26) ஸத்யோவ்ரணப் பிரதிஷேதம், (27) பங்கப் பிரதிஷேதம், (28) பகந்தரப் பிரதிஷேதம், (29) கிரந்தி யர்புத-ச்லீபதாதி விஞ்ஞாநீயம், (30) கிரந்தியர்புதாதிப் பிரதிஷேதம், (31) க்ஷுத்ரரோக விஞ்ஞாநீயம், (32) க்ஷுத்ரரோகப் பிரதி ஷேதம், (33) குஹ்யரோக விஞ்ஞாநீயம், (34) குஹ்யரோகப்பிரதி ஷேதம், (35) விஷப் பிரதிஷேதம், (36) ஸர்ப்பவிஷப் பிரதிஷேதம், (37) கீட-லூதாதிவிஷப் பிரதிஷேதம், (38) மூஷிகாளர்க்க விஷப் பிரதிஷேதம், (39) இரஸாயநாத்தியாயம், (40) வாஜீகரணாத்தியா யம்; ஆக இந்த நாற்பது அத்தியாயங்களும் உத்தர ஸ்த்தாநத் தில் அடங்கியவையாம்; இந்த ஸ்த்தாநத்திற் கூறப்பட்டுள்ள முறை கள் புத்திரப்பேறு பெறுதவற்கு அவர்களுடைய சுக்லம் முதலிய வற்றை விருத்தி செய்யக் கூடியவை. 45—47½.

இக்கிரந்தத்தில் நூற்றிருபது அத்தியாயங்கள்:—இங்ஙனம் இக் கிரந்தத்தில் ஆறு ஸ்த்தாநங்களைக் கொண்டு நூற்றிருபது அத்தி யாயங்கள் கூறப்பட்டிருக்கின்றன.—48.



## இரண்டாம் அத்தியாயம்.

### தினசர்யை.

இதன் பிறகு தினசர்யாத்தியாயத்தை [1] விவரிப்போம்:—

அதிகாலையில் எழுந்திருத்தல்; தந்த தாவந முறை:—ஆரோக்கிய நிலைமையி லிருப்பவன் தனதாயுளை இரக்ஷிப்பதன்பொருட்டு பிராஹ்ம முகூர்த்தத்தில் எழுந்திருக்க வேண்டும்.[2] பிறகு ஜீர்ண ஜீர்ணம் முதலியவற்றைக் கவனித்து, சௌசவிதி முதலியதை நிறைவேற்றிக் கொண்டு, துவர்ப்பாகவோ, கார்ப்பாகவோ, கசப் பாகவோ உள்ள எருக்கு, ஆல், கருங்காலி, புங்கை, மருதை முத லியவற்றில் ஏதேனும் ஒன்றின் குச்சியை யெடுத்து முனையில் மிருதுவாகச் செய்து, அதனால் பல்லீறுகளுக்குச் சிதை வுண்டுபண் ணாமல் விடியற்காலத்திற் பற்களைத் துலக்க வேண்டும். 1—2½.

---

1. தினந்தோறும் காலையில் எழுந்திருந்து, இரவிற் படுக்கும் வரையி லும் செய்யவேண்டிய நடவடிக்கைகளின் கிரமத்தை ஆரோக்கியத்தைக் காப்பாற்றுவதற்காக விவரிக்கும் பிரகரணம்.

2. பிராஹ்ம முகூர்த்தம்—இரவின் நான்காவது யாமம்; அதாவது இரவில் 26 முதல் 28-வது நாழிகை வரையிலுமுள்ள காலம்.

தந்த தாவநத்திற்குத் தகாதவர்கள்:—அஜீர்ணம், வாந்தி, ச்வாஸ ரோகம், காஸ ரோகம், ஜ்வரம், அர்திதம் என்னும் வாதரோகம்[1], நாவரட்சி, வாய்ப்புண், இருதயத்தைப் பற்றிய வியாதி, நேத்திர ரோகம், சிரோரோகம், கர்ணரோகம் ஆகிய இவற்றால் வருந்துபவர் தந்த தாவநம்[2] செய்வது பிசகு.—3½.

ஸௌவீராஞ்ஜந முபயோகித்தல்:—தந்த தாவநம் செய்தபிறகு, கண்களுக்கு ஹிதமான ஸௌவீராஞ்ஜநம்[3] என்பதை தினந்தோறும் நேத்திரங்களுக்கு உபயோகிப்பது நலம்.—4.

கபத்தைக் கழிக்க இரஸாஞ்ஜநப் பிரயோகம்:—நேத்திரம் இயற்கையிலேயே தேஜோமயமாயிருப்பதாலும், ஆகவே விசேஷமாக கபத்தினால் அது எளிதில் தாக்கப்படக் கூடுமாகையாலும், ஏழு நாட்களுக்கு ஒருமுறை அதிற் சேர்ந்துள்ள கபத்தைக் கழிப்பதற்காக இரஸாஞ்ஜநம்[4] என்னும் ஔஷதத்தைப் பிரயோகிப்பதால் நன்மை யுண்டாகும்.—5.

நஸ்யாதிகள் உபயோகித்தல்:—அப்பால் நஸ்யம்[5], கண்டூஷம்[6], தூமபாநம், தாம்பூலதாரணம் இவற்றை உபயோகிப்பது உசித மாகும்.—5½.

தாம்பூல முபயோகிக்கத் தகாதவர்கள்:— உரக்ஷதம்[7], இரக்த பித்தம்[8], ரூக்ஷநேத்திரம்[9], உத்குபித நேத்திரம்[10] இவ்வித வியாதிகளால் வருந்துபவருக்கும், விஷம், மூர்ச்சை, வெறி இவற்றால் துன்பப் படுபவருக்கும், க்ஷயரோகிகளுக்கும் தாம்பூலம் ஹிதமானதல்ல.—6½.

---

1. அர்திதம்—முகவாய்க் கட்டையை ஒருபுறமாக இழுத்து வாயை வக்கிரமாகச் செய்யக்கூடிய வியாதி.

2. தந்த தாவநம்—பல் துலக்குதல்.

3. ஸௌவீராஞ்ஜநம்—சிறிது வெண்மையான ஒருவித அஞ்ஜநக் கல்; இது ஸுர்மா என்று வழங்கப் படுகிறது.

4. இரஸாஞ்ஜநம்—மரமஞ்சளின் கஷாயத்தினால் செய்யப்படும் அஞ்ஜநம் போன்ற ஒருவிதக் குழம்பு.

5. நஸ்யம்—நாசியில் உபயோகிக்கப்படும் ஔஷதம் முதலியது.

6. கண்டூஷம்—வாய்க்கொப்புளிக்க உபயோகிக்கப்படும் திரவ வஸ்து; அல்லது வாய்க் கொப்புளித்தல்.

7. உரக்ஷதம்—இரத்தக் கசிவுடன் கூடிய இருமல்.

8. இரக்த பித்தம்—பித்தம் என்கிற தோஷம் அதிகரிப்பதால் இரத்தமும் கோளாறடைந்து ஸம்பவிக்கும் வியாதி.

9. ரூக்ஷநேத்திரம்—கண்களில் ஈரப்பசையற்றுண்டாகும் நேத்திரரோகம்.

10. உத்குபித நேத்திரம்—கண்கள் வீங்கிப் போதல்.

அப்யங்கத்திறு லுண்டாகும் குணங்கள் :—தினந்தோறும் அப்யங்கம் செய்வது நலம் [1]; அது சரீரசிரமத்தைப் போக்கும்; முதிர்ச்சி சீக்கிரமுண்டாகாமல் தடுக்கும்; நேத்திரங்களுக்குத் தெளிவை யுண்டாக்கும்; தேஹ புஷ்டியைக் கொடுக்கும்; ஆயுளை விருத்தி செய்யும்; நன்கு நித்திரை யுண்டு பண்ணும்; சர்மத்தை மிருதுவாக்கும்; சரீரத்தைத் திடப்படுத்தும்.—7½.

அப்யங்கத்தை அதிகமா யுபயோகிக்கக் கூடிய அவயவங்கள்:—சிரஸ், காதுகள், பாதங்கள் இவ்வவயவங்களில் தைலாப்யங்கத்தை விசேஷமாய் உபயோகிக்க வேண்டும்.—8.

அப்யங்கத்திற்குத் தகாதவர்கள் :—விசேஷமாக கபம் பிரகோபமடைந்தவனும், சோதந சிகித்ஸை [2] செய்துகொண்டவனும் அப்யங்கத்தை விலக்க வேண்டும்.—8½.

வியாயாமத்தின் பிரயோஜநம் :—பிறகு வியாயாமம் [3] செய்ய வேண்டும். வியாயாமம் செய்வதால் சரீர லாகவமும், வேலைகளில் விசேஷத் திறமையும், பசி தீபநமும், மிதமிஞ்சிய கொழுப்புக்குத் தணிவும் உண்டாகும்; அவயவங்கள் யாவும் திரண்டிருண்டு நன்றுகப் பருத்து பலங்கொள்ளும்.—9½.

வியாயாமம் செய்யத்தகாதவர் : — வாதரோகங்களாலாவது, பித்தரோகங்களாலாவது பீடிக்கப்படுபவரும், அஜீர்ணரோகிகளும், பாலர்களும், கிழவர்களும் வியாயாமம் செய்யக்கூடாது.—10.

வியாயாமம் செய்யவேண்டிய அளவு:—பலசாலிகளாயிருப்பவர், ஸ்நிக்த்தமான உணவுகளையும் புஜித்து வந்தால், அவர்கள் தமது சக்தியில் அரைவாசிக்கு வியாயாமம் செய்வது உசிதமாம்.—10½.

வியாயாமத்திற்கேற்ற காலங்கள்:— சீதகாலங்களும் [4], வஸந்தருதுவும் வியாயாமம் செய்வதற்கு ஏற்றகாலங்களா யிருக்கின்றன; அவற்றைத் தவிர வேறு காலங்களில் வெகு சொற்பமாகவே அதைச் செய்யவேண்டும்.—11.

வியாயாமத்தின் பிறகு உடம்பைப் பிடித்தல் :—வியாயாமம் செய்தபிறகு, தேஹம் அனைத்தையும் ஸுகமாக நன்றுகப் பிடித்து விடவேண்டும்.—11½.

---

1. அப்யங்கம்—எண்ணெய் முதலியதைத் தலை முதலான அவயவங்களில் தேய்த்தல்.

2. சோதந சிகித்ஸை — குடல் முதலியவற்றைச் சுத்திசெய்யும் சிகித்ஸை; அதாவது வமநம், விரேகம், வஸ்தி முதலியன.

3. வியாயாமம்—தேஹ வுழைப்பு; கஸரத்து என்று வழங்கப் படுகிறது.

4. வருஷருது, ஹேமந்தருது, சிசிருது இம்மூன்றும் சீதகாலங்கள்.

அதிவியாயாமத்தினு லுண்டாகும் தீமைகள் :—வியாயாமம் அதிக அளவாகச் செய்யப்படுமானுல், விசேஷமான நாவரட்சி, க்ஷயம், பிரதமகம் [1], இரக்த்தபித்தம், சிரமம், தேஹவாட்டம், காஸம், ஜ்வரம், வாந்தி இவையோ அல்லது இவற்றில் சில மட்டுமோ ஸம்பவிக்கும்.—$12\frac{1}{2}$.

வியாயாமம் முதலியதை பலாத்காரமாகச் செய்வதாலுண்டாகும் தீங்கு:—வியாயாமம், கண்விழித்தல், வழிநடத்தல், ஸ்திரீ ஸம்பந்தம், ஹாஸ்யம், உபநியஸித்தல் என்னும் இவற்றை ஒருவன் தனது வன்மையை யோசிக்காமல் பலாத்காரமாய் மிதமிஞ்சிச் செய்ய முயன்றால், மிகப்பெரிய உடலுள்ள யானையை வலிய இழிக்க முயலும் சிங்கத்தைப்போல் [2] வீணில் வீழ்ச்சியடைவான்.—$13\frac{1}{2}$.

உத்வர்த்தநத்தின் குணங்கள்:—பிறகு நலங்குப்பொடி [3] முதலியதை உடம்பிற் பூசுவதால் பிரகோபமடைந்துள்ள கபம் தணிந்து, கொழுப்பும் கரைந்து, தேஹமும் வன்மையுற்று, சர்மமும் நிர்மலமாய் ஒருவித காந்தி யடையும்.—$14\frac{1}{2}$.

ஸ்நாநத்தின் குணங்கள்:—அப்பால் ஸ்நாநம் செய்வதால் பசி தீபநமுண்டாகும்; சுக்லதாது விருத்தியாம்; ஆண்மை அதிகரிக்கும்; ஆயுளும் வளரும்; உத்ஸாஹமும் உடல் வன்மையும் ஏற்படும்; சொறி, சிரங்கு, அழுக்கு, சிரமம், ஸ்வேதம், திமிர், நாவரட்சி, தேஹ அழற்சி, பாபம் இவை நீங்கும்.—$15\frac{1}{2}$.

உஷ்ணஜல ஸ்நாநத்தின் குணங்கள் :—வெந்நீரால் கழுத்துக்குக் கீழுள்ள அவயவங்களைக் குளிப்பாட்டுவது பலமுண்டாக்கக் கூடியது; அதைக் கொண்டே சிரஸ்நானம் செய்தால் தலைமயிர்களுடையவும் நேத்திரத்தினுடையவும் பலம் குறைந்துவிடும்.—$16\frac{1}{2}$.

ஸ்நானம் செய்யத்தகாதவர் :—அர்திதம், [4] நேத்திர ரோகம், முகரோகம், கர்ணரோகம், அதிஸாரம், வயிற்றுப்பொருமல், பீநஸம், அஜீர்ணம் இவற்றால் வருந்துபவரும், அப்பொழுதே போஜநம் செய்தவரும் ஸ்நானம் செய்வது பிசகு.—$17\frac{1}{2}$.

போஜநமும் மல மூத்திராதி விஸர்க்கமும்:—முன்னால் புஜித்த உணவு நன்றாக ஜீர்ணமான பின்பு, தனது தேஹத்திற்கு ஹிதமானவற்றை மிதமாய் உட்கொள்ளவேண்டும். மல மூத்திராதிகளை

---

1. ச்வாஸ ரோகத்தில் ஜ்வரம் மூர்ச்சை முதலியன தொடர்ந்திருக்குமானுல் அந்நிலைமை "பிரதமகம்" எனப்படும்.

2. சிங்கம் யானையைக் கொல்லுவதில் பெயர்போன சக்தி யுடையதென்றாலும், அதன்மேற் பாய்ந்து உடனே அடிக்காமல், அதை பலாத்காரமாய் இழுக்கமுயன்றால், அச்சிங்கம் யானையின் பலத்திற்கு முன் அலுத்துப்போய் வீழ்ந்துவிடும் என்பது கருத்து.

3. உத்வர்த்தநம்—நலங்குப்பூச்சு முதலியது.

4. அர்திதம் 11-வது பக்கம் பார்க்க.

வலிய வெளிப்படுத்த முயலக் கூடாது ; மலபாதை முதலியவற்றை நிவர்த்திசெய்து கொள்ளவேண்டி நேரிட்டால், அவற்றை அடக்கிக்கொண்டு வேறு காரியங்களைச் செய்யவுங் கூடாது. எளிதில் நிவர்த்திசெய்யக்கூடிய நிலைமையிலுள்ள வியாதிக்கு சிகித்ஸை செய்யாமலும் இருக்கக் கூடாது.—18½.

தர்மத்திற் கருத்து :—நாம் செய்யும் காரியங்கள் அனைத்தும் ஸகலப்பிராணிகளுடையவும் ஸுகத்தையே பிரயோஜநமாயுடையவையாதலால், தர்மத்தாலன்றி வேறுவகையில் அச்சுகமுண்டாகாதாகையால், எப்பொழுதும் தர்மத்தையே செய்து வருக.—19½.

நண்பருடன் கூடியிருத்தல்:—துஷ்ட ஜனங்களிடம் அணுகாமல் தூரத்தில் இருந்து வருவதுடன், நற்குணமமையப்பெற்ற நண்பருடன் அன்புடன் கூடிப் பழகவும் வேண்டும்.—20.

பரிஹரிக்கவேண்டிய பத்துவித தோஷங்கள்:—வதைசெய்தல், களவாடுதல், தர்ம விரோதமான புணர்ச்சி ஆகிய காயிகமான பாபங்களையும், கோள் சொல்லுதல், கடுமையாகப் பேசுதல், பொய் சொல்லுதல், முன்பின் தவறுதலாக மொழிதல் என்கிற வாசிகமான குற்றங்களையும், த்ரோஹசிந்தை, பொறாமை, சாஸ்திர விரோதமான எண்ணம் என்கிற மானஸிகமான பாவங்களையும் பரிஹரிக்கவேண்டும் [1].—21, 21½.

துன்பப்படுபவரை ஆதரித்தல் :—ஜீவநோபாய மில்லாமையாலும், வியாதியினாலும், மனத்துயரத்தினாலும் வருந்துபவரை யாவரும் அவரவரது சக்திக்கியன்றவளவு ஆதரிக்கவேண்டும். கிருமி, எறும்பு முதலிய பிராணிகளையுங்கூட தன்னைப்போலவே எப்பொழுதும் பார்க்கவேண்டும்.—22½.

பூஜிக்கத் தகுந்தவர்கள்:—தேவதைகள், பசுக்கள், பிராம்மணர், வயதினாலோ அறிவினாலோ ஆசாரத்தினாலோ பெரியோர்களாயிருப்பவர், வைத்தியர், அரசர், அதிதிகள் இவர்களைப் பூஜிக்க வேண்டும். யாசகர்களைப் பயன் பெறச் செய்யாமல் வீணில் திருப்பியனுப்புவதும், அதிக்ஷேபமாகக் கூறி அவமதிப்பதும் அநுசிதமான காரியம்.—23½.

உபகரித்தல் முதலியன :—பொல்லாங்கையே செய்துவரும் பகைவருக்கும் உதவிபுரிவதிலேயே கருத்தாயிருந்து வரவேண்டும். செல்வமுண்டானாலும் ஸங்கட மேற்பட்டாலும் இரண்டிலும் மனதை ஒரே சீராக வைத்திருக்க வேண்டும் ; எவ்விதத்திலேனும் நல்ல நிலைமையிலிருப்பவரிடம் அவ்விதம் ஆனதற்குண்டான காரணத்தைக் கண்டு பொறாமையுறலாமே யன்றி, அவரடைந்துள்ள பலனைக் கண்டு பொறாமையுறக்கூடாது.—24½.

---

1 துர்நடத்தை, துரெண்ணம் முதலியவைகளும் தேஹ மனோவிகாரங்களை யுண்டுபண்ணும் என்பது கருத்து.

பேசும் வகை முதலியன :—ஸமயம் வாய்ந்தபோது ஹிதமாகவும், மிதமாகவும், முன் பின் விரோதமில்லாமலும், மனோஹரமாகவும் பேசவேண்டும். எவரையும் காணும்போது பூர்வ பாஷியாகவும், ஸுமுகமாகவும், நன்னடக்கை யுடையவனாகவும், கருணையினால் மன மிளகுந் தன்மையனாகவும் நடந்துகொள்ள வேண்டும். ஸுகங்களை தான் ஒருவனே அனுபவிப்பவனாகவும், எவ்விடத்திலும் நம்பிக்கை கொண்டு கவலையற்றவனாகவும், எவரிடமும் அவநம்பிக்கை அதிகரித்தவனாகவும் இருந்துவிடக்கூடாது. தனக்கு எவரையும் சத்ருவாகவாவது, தான் எவருக்காவது பகையாளியென்றாவது சொல்லிக் கொள்ளக் கூடாது; தனக்காவது பிறருக்காவது நேர்ந்த அவமானத்தையும், தன்னிடம் பிரபுவுக்குப் பிரீதியின்மையையும் வெளிப்படுத்திக் கொள்ளக் கூடாது. பிறரை திருப்திப்படுத்துவதில் திறமைசாலியா யிருப்பவர் ஜனங்களுடைய உட்கருத்துகளை உற்றுநோக்கி, எவன் எவ்வித காரியத்தினால் ஸந்தோஷப் படுவனோ அவனை அவ்வித காரியத்தைச் செய்து அநுஸரிக்க வேண்டும் 25.—28.

இந்திரியங்களை ஆளுதல் முதலியது:—தமது புலன்களை அதிகமாகக் கட்டியடக்கி இயற்கைக்கு மாறாக நிர்ப்பந்திப்பதும் கூடாது; இவற்றை இஷ்டப்படியும் விட்டுவிடக்கூடாது. அறம் பொருள் இன்பங்களுக்கு ஸம்பந்தமில்லாமல் எவ்வித முயற்சியையும் செய்யக் கூடாது; அப்பொழுது அம்மூன்றிலொன்றுக்கு மற்றொன்றால் விரோதமுண்டாகாத காரியத்தைச் செய்ய வேண்டும். எல்லாக் காரியங்களிலும் மிதமிஞ்சிப் பற்றுதலை வைக்காமல் நடுநிலைமையையே நாடி நடக்கவேண்டும்.—29, 29½.

மற்றும் அவசியமான நல்ல சீலங்கள் :—உரோமங்கள், நகங்கள், மீசை இவற்றை அதிகமாய் வளரவிடக் கூடாது. பாதங்கள், மலவிஸர்க்கம் செய்யும் அவயவங்கள், அல்லது அழுக்கு அழுக்கு அதிகமாகச் சேரக் கூடிய பாகங்கள் ஆகியவை சுத்தமாயிருத்தலும் அவசியம். தினந்தோறும் ஸ்நானஞ் செய்து, அலங்காரம் பொருந்தியவனாய், ஆடம்பரமற்ற ஒழுங்கான வேஷத்துடன் கூடியவனா யிருப்பதும், இரத்தினங்களையும் பலன் தரக்கூடியதாக கண்ட மந்திரங்களையும், மஹாப் பிரபாவமுள்ள மூலிகைகளையும் தன்னிடம் எப்பொழுதும் வைத்திருக்க வேண்டும். குடை, பாதரக்ஷை இவற்றைத் தரித்துக் கொண்டு, தான் செல்லும் வழியில் ஒரு நுகத்தடி யளவுக் குள்ளேயே பூமியிற் கண்வைத்து ஜாக்கிரதத்துடன் நடக்க வேண்டும். காரியம் அத்யாவசியமானதாயிருந்தால் அப்பொழுதுதான் இரவில் வீட்டை விட்டு வெளியில் ஸஞ்சரிக்கலாம்; அப்படியானாலும் கையில் தடியோடும், தலையிற் பாகையோடும், துணையாட்களோடும் வெளியிற் போகவேண்டும். கிராம தேவதை முதலியவைகளுக்கு அதிஷ்டானமான விருக்ஷங்

கள், பூஜிக்கத் தகுந்த பெரியோர்கள், த்வஜங்கள், அசுத்தமான மனிதர் அல்லது இதர ஜந்துக்கள் இவற்றின் நிழல்கள், சாம்பர், உமி, மற்றும் அசுசியான வஸ்துக்கள், பருக்கைக் கற்களடர்ந்த பிரதேசம், பலவிதமான ஓடுகள் நிரம்பிய இடம், பூஜை செய்யுமிடம், ஸ்நாந பூமி முதலியவற்றையும் தாண்டக்கூடாது. நதியைக் கைகளால் நீந்தியே கடந்துவிட முயலக் கூடாது. அக்னிராசியை எதிர்நோக்கிச் செல்வதும் தகாது. துஷ்ட வாஹநங்களின்மீதும், உன்னதமான மரங்களின்மீதும், ஸந்தேஹமுறக் கூடிய மரக்கலத்தின்மேலும் ஏறுவது பிசகு. கைமுதலியவற்றால் முகத்தை மறைத்துக் கொள்ளாமல் தும்மவாவது, சிரிக்கவாவது, கொட்டாவி விடவாவது கூடாது. நாசியை அடிக்கடியும் விரல்களால் குடைவதும், அநாவசியமாய்ப் பூமியை விரல்களால் கீறுவதும், அந்தந்த அவயவங்களால் அவ்வவற்றிற்கு இயல்பாகாத வேலைகளைச் செய்வதும், வெகு ஒடுக்கமான ஆஸநம் முதலியவற்றில் கஷ்டப்பட்டு உட்காருவது அல்லது படுத்திருப்பதும் உசிதமல்ல. தேஹம், வாக்கு, மனது இவற்றால் செய்யப்படும் காரியங்களைச் சிரமமுண்டாவதற்கு முன்னமே நிறுத்திக்கொள்ளவேண்டும். முழங்காலை மடக்கி, உயரத்திற் காலையமர்த்திக்கொண்டு வெகு நேரமளவும் நிற்கக்கூடாது. இரவில் மரத்தடியில் இருப்பதும் தகாது. அங்ஙனமே முச்சந்திகள், கிராமதேவதைகளுக்கு அதிஷ்டாநமான விருக்ஷத்தின் ஸமீபம், நாற்சந்தி வீதி, தேவாலயம் இவற்றிலும் இரவு நேரங்களில் செல்லக்கூடாது; மத்ய பூமி, வநம், பாழ்வீடு, மயானம் இவ்விடங்களுக்குப் பகற் பொழுதிலும் செல்லக்கூடாது. எந்த நிலைமையிலும் சூரியனை நேராக உற்று நோக்கக்கூடாது. தலையில் வெகு நேரம் சுமையைச் சுமந்து கொண்டிருத்தல் தகாது. மிக ஸூக்ஷ்மமான வஸ்துக்களையும், தேஜோமயமான பதார்த்தங்களையும், அசுசியான பொருட்களையும், மனதுக்கு அருவருப்பானவற்றையும் அடிக்கடியும் பார்ப்பது உசிதமல்ல. மதுவை ஸந்தாநம்[1] செய்வதும், விற்பதும், தாநம் பண்ணுவதும், அதைப் பெறுவதும் தகாத காரியமென்றறிக. 30—39.

பரிஹரிக்க வேண்டிய இன்னும் சில அநுசித காரியங்கள்:— எதிர்க்காற்று, எதிர்வெயில், எதிரிடையாகக் கிளம்பும் புழுதி, எதிரிடையான பனி,[2] பெருங்காற்று, இவற்றிற்கு எதிராகப் போகக்

1. ஸந்தாநம்—வெறியுண்டாக்குவதான மது முதலிய பானவகைகளைப் பக்குவம் செய்யு முறை.

2. எதிர் காற்று, எதிர் வெயில், எதிரிடையான புழுதி, எதிரிடையான பனி என்னும் இவற்றிற்குப் பதிலாய் கீழ்க்காற்று, கீழ்த்திசை வெயில் கீழ்த்திசைப் புழுதி, கீழ்த்திசைப் பனி யென்று முறையே வேறு விதமாகவும் சிலர் கூறுவர்.

கூடாது. உடம்பை வக்கிரமாக வைத்துக்கொண்டு தும்முதல், ஏப்பம் விடுதல், இருமுதல், நித்திரைசெய்தல், புஜித்தல், புணர்தல் இவையும் தகாதனவாம். ஆற்றங்கரை முதலியவற்றின் நிழல், அரசருடைய ஸமீபம், பகைவர், யானை, நீண்ட கோரப்பற்களுள்ள புலி முதலிய விலங்குகள், கொம்புள்ள துஷ்ட மிருகங்கள், அற்பர், துஷ்டர், அதிநிபுணர் இவர்களைப் பரிஹரிக்க வேண்டும். அவர்களை யடுத்துப் பிழைத்தலும் தகாது. உத்தம புருஷருடன் விரோதம், ஸந்தியா காலங்களிற்போஜனம் செய்வது, அப்பொழுது ஸ்த்ரீகளுடன் இருத்தல், அந்த நேரத்தில் அத்யயநம் செய்தல், சத்ருக்களிடும் அன்னம், யாகத்தில் இடும் அன்னம், பெருங்கூட்டத்திலிடும் அன்னம், பணத்திற்கு விற்கப்படும் அன்னம் இவற்றையும் விலக்கவேண்டும். அவயவங்களையும் நகம் முதலியவைகளையும் வாத்தியமாக உபயோகிக்கக்கூடாது. கைகளையும் தலைமயிரையும் ஆடம்பரத்துடன் ஆட்டி யுதறத் தகாது. ஜலம் இருபுறத்திலுமிருக்க அவற்றிற்கு இடையிலும், அக்னிக்கு மத்தியிலும், பூஜிக்கத்தகுந்த பெரியோர்களுக்கு நடுவிலும் வாஹநமேறிச் செல்லத்தகாது. சவத்தின் மேலிருந்து எழும்பும் தூமம் முதலியதைப் பரிஹரிக்கவேண்டும். மதுபானத்தில் அதிக பற்றுதல் கூடாது. ஸ்த்ரீகளிடத்தில் அதிக நம்பிக்கைவைத்தலும், அவர்களுக்கு அதிகசுதந்திரம் அளித்தலும் தக்கதல்ல. 40—43¼.

**உலகத்தோடொத்து வாழவேண்டும்:—** கூர்மையான மதியைப் பெற்ற மனிதனுக்கு எல்லாக்காரியங்களிலும் உலகமே உபதேசகர் குருவாயிருப்பதால், உலக வியவஹாரங்களில் ஈடுபட்டு விஷயங்களைப் பரிசோதனை செய்ய விருப்பமுள்ளவன் அவ்வுலகத்தையே எதற்கும் அநுஸரித்து நடப்பானாக.—44½.

**ஸத்புருஷ விரதம்:—** எல்லாப் பிராணிகளிடத்திலும் கருணை பாராட்டல், பாத்திரமறிந்து தானம் செய்தல், சரீரத்திலும் வாக்கிலும் மனதிலும் அடக்கமாயிருத்தல், பிறருடைய பிரயோஜனங்களைத் தன்னுடையவற்றைப் போல் பாவித்தல் என்பவை ஸத்புருஷ விரதங்களாம்.—45½.

**செய்யும் காரியங்களில் கருத்தா யிருத்தல்:—** இராப் பகல்கள் எவ்வித காரியங்களைச் செய்துகொண்டு எவ்வாறு கழிக்கப்படுகின்றன வென்பதில் எப்பொழுதும் கண்ணுங்கருத்துமா யிருந்து, நடுநிலைமை தவறாது நடந்துவரும் மனிதன் துன்பத்திற்கு உட்படமாட்டான்.—46½.

**நல்லொழுக்கங்களால் ஆரேக்கியாதி நன்மைகளுண்டாகும் :—** இங்ஙனம் நல்லொழுக்கமுறைகள் இங்கு சுருக்கமாகக் கூறப்பட்டன ; இவற்றை நன்றாக அநுஷ்டிப்பவன் ஆயுளபிவிருத்தியையும், ஐச்வர்யத்தையும், புகழையும், அப்பால் அழியாத போகங்களையும் அடைந்து இன்பமுறுவான்.—47½.

# மூன்றும் அத்தியாயம்.

## ருது சர்யை.

அப்பால் "ருதுசர்யை"[1] என்னும் அத்தியாயத்தை விவரிபோமாக.

**ஆறு ருதுக்கள்:**—மாசிமாதம் முதலாக[2] இரண்டிரண்டு மாதங்களைச் சேர்த்து கிரமமாக ஆறு ருதுக்கள் கணக்கிடப்படுகின்றன. அவையாவன: சிசிர ருது, வஸந்த ருது, கிரீஷ்ம ருது, வர்ஷ ருது, சரத் ருது, ஹேமந்த ருது என்பவையாம்.—1.

**உத்தராயணம் அல்லது ஆதாநகாலம்:**—அவற்றுள் சிசிர ருது முதற்கொண்டு மூன்று ருதுக்கள் சேர்ந்து உத்தராயணம்[3] எனப்படும். இம்மாதங்களில் மனிதருடைய தேஹவன்மை தினந்தோறும் பறிக்கப்படுவதால், இதற்கு ஆதாநகாலம்[4] எனப்பெயர்.-2.

**ஆதாநகாலத்தின் தன்மை:**—ஆதாநகாலத்தில் சூரியன் வடதிசை நோக்கிச் செல்லுவதால் காலத் தன்மை அதிக உஷ்ணமாகவும் தீக்ஷ்ணமாகவும் வரட்சியுடையதாகவு மிருக்கும்; வெயிலும், வாயுவும் பூமியினுடைய ஸௌம்யமான[5] குணங்களைப் போக்கிவிடுகின்றன; ஆகவே அதற்கேற்றவாறு ரூக்ஷகுணமுள்ள கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு என்னும் இம்மூன்று இரஸங்களும் முறையே இம்மூன்று ருதுக்களிலும்[6] பலம் பெறுகின்றன. ஆகையினால் ஆதாநகாலம் ஆக்நேயகுண[7] முள்ளதாகும்.—3, 3½.

---

1. ஒவ்வொரு ருதுவினுடையவும் குணங்கள் வெவ்வேறு விதமாக மாறுபடுவதையும், அவற்றிற்கேற்ப ஆரோக்கியத்திற்கு ஆதாரமான ஆசார கிரமங்களையும் கூறும் அத்தியாயம் ருதுசர்யாத்தியாயம் எனப்படுகிறது.

2. ஸாதாரணமாய் சித்திரை முதற்கொண்டே மாதங்களும் ருதுக்களும் கணக்கிடப்படுவது வழக்கமாயிருந்தும், வைத்தியசாஸ்திரத்தில் "ஆதாநகாலம்", "விஸர்க்காலம்" என்கிற இரண்டுவித காலங்களைப் பிரிக்கவேண்டியது அவசியமா யிருப்பதைக் கருதி "மாசிமுதலாக" என்று ஆரம்பிக்கப்பட்டதென்று அறிக.

3. தைமாதம் முதற்கொண்டு உத்தராயணம் என்று வழங்கப்பட்டாலும், தைமாதத்திலேயே ஆதாந காலத்தின் குணங்கள் ஏற்படுவதில்லையாகையாலும். அப்பொழுதே சூரியன் வடதிசையில் சென்றுவிடுவதில்லையாகையாலும், "சிசிரருதுமுதல் உத்தராயணம்" என்று கூறப்பட்டது.

4. ஆதாநம்—கவர்தல். பூமியின் பலத்தை உறிஞ்சுதல்.

5. ஸௌம்யம்—குளிர்ச்சி, அல்லது களிப்பு.

6. சிசிர ருது, வஸந்த ருது, கிரீஷ்ம ருது என்பவையாம்.

7. ஆக்நேயம்—அக்நி ஸம்பந்தமானது ; உஷ்ணகுணம். சிசிர ருது, வஸந்தருது, கிரீஷ்ம ருது என்பவை ஆதாநகாலம். இவற்றுள் சிசிர ருதுவில் தித்தம் என்னும் கைப்பும், வஸந்தருதுவில் கஷாயமென்னும் துவர்ப்பும், கிரீஷ்மருதுவில் கடுவென்னும் கார்ப்பும் பலம்பெறுவது இயல்பு. இரஸங்கள் என்றால் அவ்வித இரஸமடங்கிய ஔஷதி முதலியவைகள்.

**தக்ஷிணாயனம் அல்லது விஸர்க்ககாலம்:**—வர்ஷருது முதலான மூன்று ருதுக்களும் சேர்ந்து **தக்ஷிணாயனம்** என்று வழங்கப்படும்; இக்காலம் பிராணிகளுடைய தேஹபலத்தைப் பெருக்குந் தன்மையதாகையால், இதற்கு **விஸர்க்ககாலம்**[1] என்று பெயர்.—1½.

**விஸர்க்ககாலத்தின் தன்மை :**—இக்காலம் இயற்கையிலேயே ஸௌம்ய குணமுள்ளதுபற்றி, இதில் குளிர்ச்சியே பலம் பெற்று, சூரியதாபம் குறைந்து விடுகின்றது. மிகவும் சீதளமான மேகத்தினாலும், மழையினாலும், மாருதத்தினாலும் பூமியின் தாபம் மிகத் தணிந்து விடுகின்றது. ஆகவே இந்த ருதுக்களில் ஸ்நிக்தகுணமுள்ள[2] புளிப்பு, உப்பு, தித்திப்பு என்னும் இரஸங்கள் முறையே பலம் பெறுவதியல்பு.[3]—5,6.

**பலம் உத்தம - மத்திம - ஹீந நிலைமைகளையடையும் ருதுக்கள்:**—ஹேமந்த-சிசிரருதுக்களில் பிராணிகளுடையவும் ஓஷதி முதலியவைகளுடையவும் பலம் மிகவும் அதிகரித்திருக்கும்; வர்ஷருதுவிலும் கிரீஷ்மருதுவிலும் பலம் சொற்பமாயிருக்கும்; மற்ற இரண்டு ருதுக்களிலும் பலம் மத்திமமாயிருக்கும்[4].—6½.

**ஹேமந்தருதுவின் குணம் :**—ஹேமந்த ருதுவில் மனிதர்கள் நன்கு பலம் பெற்றிருப்பர். அப்பொழுது அதிகமான குளிர்ச்சியினால் தேஹத்தின் மயிர்க்கால்களும் மற்ற பாகங்களும் மறைக்கப் படுவதால், சரீரத்தின் உட்புறத்தில் அதிகரித்து, ஜாடராக்னியும் அதிகமாய் விருத்தியடைகின்றது. அப்படியதால் எரிக்கப்படுவதற்குப் போதுமான உணவு உபயோகிக்கப் படாமற் போனால், சரீரத்திலுள்ளிருக்கும் வாயுவினால் அத்தீ ஆரம்பிக்கப் பட்டு தாதுக்களை எரிக்க ஆரம்பிக்கும்.[5]—7½.

---

1. விஸர்க்கம்—விடுவது பிராணிகளுடைய தேஹத்தில் பலத்தைப் பொழிவது எனக் கருத்து. அல்லது மழை முதலியதால் பூமியைச் செழிக்கச் செய்வது. வர்ஷருது, சரத்ருது, ஹேமந்தருது இம்மூன்றும், விஸர்க்க காலம்.

2. ஸ்நிக்தகுணம்—5-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. வர்ஷருதுவில் அம்லமென்னும் புளிப்பும், சரத்ருதுவில் லவணமென்னும் உப்பும், சிசிரருதுவில் மதுரமென்னும் தித்திப்பும் பலம் பெறும்; அதாவது அவ்வித இரஸமுள்ள ஓஷதி முதலியவை பலம் பெறுகின்றன.

4. ஹேமந்தருது விஸர்க்ககாலத்தின் அந்தியமாகையாலும், சிசிரருதுவில் அப்பொழுதே ஆதாநகாலம் ஆரம்பிப்பதாலும் பிராணிகளின் பலம் அதிகமாயிருக்கும். மற்ற ருதுக்களிலும் இவ்விதமே காரணத்தையறிக.

5. சரீரத்தைப் போஷிப்பதற்கு வேண்டிய அளவாக ஆஹாரம் உபயோகிக்கப்படாவிட்டால், வாததோஷம் அதிகரிப்பதும், அது தேஹக்கட்டை அல்லது ஜாடாக்னியைத் தூண்டி மாம்ஸம், மேதஸ் என்னும் கொழுப்பு முதலான தாதுக்களை எரிக்கச் செய்வதும் இயல்பு. ஒருவன் அடிக்கடி உபவாஸமிருந்தால் இளைத்துப்போவதற்கும் காரணம் இதுவே.

ஹேமந்தருது சர்யை :—ஆகையினால் ஹேமந்தருதுவில் மதுரமும், அம்லமும், இலவணரஸமுமுள்ள பதார்த்தங்களையே உபயோகிப்பது நலம்.[1] இந்த ருதுவில் இராத்திரி நேரம் மிக நீண்டிருக்குமாகையால் உதயகாலத்திலேயே பசியுத்தீபநமாகும்; ஆகவே அவசியமான காரியங்களை[2] முடித்துக்கொண்டு உடனே மேற்கூறப்படுமாறு செய்யவேண்டும் :—வாதஹரமான தைலங்களை தேஹத்தில் தேய்க்கவேண்டும்; சிரஸ்ஸிலும் தைலத்தை நன்றாகத் தேய்க்க வேண்டியது அவசியம். முறைப்படி வியாயாமம் முதலியவற்றில் நிபுணரா யிருப்பவரோடு கைச்சண்டையிடுவதும், சரீரத்தைத் தேய்த்துப் பிடிப்பதும், பாதங்களால் மிதிப்பதும் நலமாம்.[3] பிறகு உவர்ப்பான வஸ்துக்களைத் தேய்த்து எண்ணெய்ப் பசையைப் போக்கிவிட்டு, முறைப்படி ஸ்நானம் செய்து, குங்குமப்பூ, கஸ்தூரி இவற்றை உடம்பிற் பூசிக்கொண்டு, அகிற்கட்டையை அக்னியிலிட்டு அதிலிருந்தெழும் தூமத்தினால் தேஹத்திற்கு தூபநம் செய்துகொள்ள வேண்டும். அப்பால் மிகவும் ஸ்நிக்த்தமான மாம்ஸரஸங்கள், போஷணையுண்டாக்கக்கூடிய மாம்ஸம், கௌடமென்னும் மது,[4] அச்சஸுரை,[5] ஸுரை,[6] கோதுமை மாவினாலும் உளுந்தாலும் கருப்பஞ்சாற்றாலும் பக்குவம் செய்யப்பட்ட சிறந்த சிற்றுண்டிகள், அப்பொழுதே பக்குவம் செய்த அன்னம், வஸை[7], எண்ணெய்ப்பசையுள்ள பணியாரம் இவற்றை யுக்தப்படி உட்கொள்ளலாம். சௌசம் முதலியதற்கு இளஞ்சூடான ஜலத்தை உபயோகிக்கவேண்டும். துப்பட்டி, மிருதுவான மயிர்களடர்ந்த சர்மம், பட்டுவஸ்திரம், மெல்லிய கம்பளம் முதலியவற்றைப் பரப்பிய படுக்கையின் மேல், தேஹ அனலைக் காக்கக்கூடிய குணமுள்ள அதிக கனமில்லாத வஸ்திரங்களைப் போர்த்துக்கொண்டு படுக்க வேண்டும். தகுந்த முறைப்படி சிறிதளவு வெய்யிலிலும் இருக்கலாம். வியர்வை யுண்டாகுமாறு ஏதேனும் உபாயம் செய்வது நலம். எப்பொழுதும் பாதரக்ஷையையும் போட்டுக்கொண்டிருக்க வேண்டும். திரண்டுரண்டு வளர்ந்த துடை முதலிய அவயவங்களால்

---

1. மதுராம்லலவண ரஸங்கள் ஸ்நிக்த்தமாகையால், பிரபலமான ஜாடராக்னியைத் தணிக்கவும், வாதத்தைக் குறைக்கவும் அவை ஏற்றவை.

2. மலவிஸர்க்கம், முதலியதைச் செய்வதே அவச்யமான காரியங்களாம்.

3. எண்ணெயை உடம்பில் பூசிக்கொள்வதற்கு முன்னமே, உடம்பை மர்த்தநம் செய்வதும், மிதிப்பதும், கைச்சண்டை செய்வதும் உசிதம்.

4. கௌடம்—வெல்லத்தினால் செய்யப்படும் ஒருவித மது.

5. அச்சஸுரை—ஸுரை யென்னும் ஒருவித மதுவின் தெளிவான அம்சம். இதற்கே 'ப்ரஸந்நா' என்றும், 'ஸுராமண்டம்' என்றும் பெயர்.

6. ஸுரை—அரிசியைப் பக்குவம் செய்து இறக்கப்படும் ஒருவித மது.

7. வஸை—சுத்தமாம்ஸத்திலிருந்து எடுக்கப்படும் தைலம்.

நன்கு விளங்குபவரும், மதுபானம் செய்து ஒருவாறு சிறிது மதங் கொண்டவரும், நறுமணம் பொருந்திய தூபங்களாலும் குங்குமம் முதலியவற்றாலும் பரிமளமுள்ள தேஹத்துடன் கூடியவருமான மனதுக்கிசைந்த பத்னிகள் தமது உஷ்ணமான அங்கங்களால் குளிரைப் போக்கிவிடுவர். பூமியின் கீழ் நிர்மிக்கப்பட்ட கிருஹத்தின் உட்புற அறைகளில் அக்னித்தழலால் சூடுண்டாக்கி அவற்றில் ஸஞ்சரித்து வந்தால், கடுங்குளிரால் ஸம்பவிக்கக்கூடிய கெடுதி ஒருபொழுதும் உண்டாகாது. 8—16.

**சிசிரருதுவும் அதிற் செய்யக்கூடிய சர்யைகளும்:**—சிசிர ருதுவிலும் ஹேமந்த ருதுவுக்கேற்ற முறைகளையே இன்னும் அதிகமாய் அநுஸரித்து நடக்க வேண்டும்; ஏனெனில் அப்பொழுது குளிரும் அதிகம்; ஆதாநகாலம் ஆரம்பிப்பதால் அதனால் ஏற்படக்கூடிய வரட்சியும் அப்பொழுது மிகுதியாயுண்டாகின்றது.[1] 17.

**வஸந்தருதுவின் குணம்:**—சிசிர ருதுவில் சயமாக[2] அடைந்த கபமானது, வஸந்தருதுவில் சூரியகிரணங்களின் வெப்பத்தினால் கரைக்கப்பட்டு பிரகோபமடைவது[3] இயல்பு; அப்பொழுது அக்கபமானது ஜாடராக்னியை அழித்து அநேகவித வியாதிகளையுண்டுபண்ணுமாகையால், அக்கபத்தை உடனே தணிக்கச் செய்ய முயல்வது மிகவும் அவசியம்.—18.

**வஸந்தருது சர்யை:**—நன்கு தீக்ஷ்ணமான வீர்யமுள்ள வமனௌஷதங்களாலும், நஸ்யம் முதலியவற்றாலும், இலகுவும் ரூக்ஷமுமான போஜனங்களாலும், வியாயாமம்-மர்த்தனம்-உத்வர்த்தனம் என்னும் இவற்றாலும் மேலோங்கிய கபத்தைப் பரிஹரித்து, ஸ்நானம் செய்து, பச்சைக்கர்ப்பூரம், சந்தனம், அகில், குங்குமப்பூ இவற்றைப் பூசிக்கொள்ளலாம். அப்பால் பழகிய வாற்கோதுமை, கோதுமை, தேன், சூலத்திற் குத்திப் பதமாகச் சுட்டுப் பக்குவம் செய்யப்பட்ட ஜாங்கல மாம்ஸம் இவற்றைப் புஜித்து, மாம்பழச்சாறு கலந்து பாவிதத்திலும் பழுதுருத சீது-[4] மார்த்வீகம்[5]-மாதவம்[6] என்னும் மத்ய வகைகளை மித்திரர்களோடுகூட அருந்தலாம்; அம்மத்யங்கள் மனதுக்

---

1. வரட்சி முதலியதைப் போக்குவதற்காக ஹேமந்தருதுவுக்கு ஏற்றவையென்று கூறப்பட்ட ஸ்நிக்தமான ஆஹாரம் முதலானவைகளை உபயோகிக்கவேண்டும் எனக் கருத்து.

2. சயம்—இதைப்பற்றிய விவரங்களை மேலே 12-வது அத்தியாயத்தில் 22, 23-ம் பத்தியங்களின் மொழி பெயர்ப்பிற் காண்க.

3. பிரகோபம்—இதன் விவரங்களை 12-வது அத்தியாயத்தில் 23-வது பத்தியத்திற் பார்க்க.

4. கருப்பஞ்சாறு அல்லது இனிய சுவையுள்ள கனிமுதலியவைகளை ஊறவைத்துப் பக்குவம் செய்யப்படும் மது "சீது" எனப்படும். இது "பக்வரஸ சீது", "சீதரஸசீது" என இருவகைப்படும்.

5. மார்த்வீகம்—திராக்ஷையினாலான மது.

6. மாதவம்—தேனால் செய்யப்பட்ட மது.

கிசைந்த மணுட்டிகளின் முகப்பரிசத்திஞல் மிகப் பரிமளமுள்ள வையாகவும், அவர்களுடைய கருங்குவளை மலர்களுக்கொப்பான கண்களின் பிரதிபிம்பங்களைப் பெற்றவையாகவும், மனதுக்கு இன்பமூட்டத் தகுந்தவையாகவும், ஹ்ருதயத்திற்கு பலமுண்டாக்கக் கூடியவையாகவும், தனது இன்பமுற்ற இல்லாளால் அளிக்கப்படுபவையாகவும் இருத்தல் மிகவும் நலம். சந்தனம் முதலியவற்றின் ஸத்து, தேன், வெட்டிவேர் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றைச் சேர்த்து பக்குவம் செய்த ஜலத்தைப் பருகலாம். தென்திசையிலுண்டாகும் மந்தமாருதத்திஞல் குளிர்ந்திருப்பவையும், நாற்புறமும் தண்ணீரருவிகளால் சூழப்பட்டிருப்பவையும், சூரியனை முற்றிலும் மறைத்து வெயிலின் வெப்பத்தை அடியோடு அகற்றியவையும், மணிமயமான மேடைகளின் ஒளிகளால் பிரகாசிப்பவையும், காதுகளுக்கு இன்பமாய் கூவும் குயில்களுடன் கூடியவையும், ஒருவருக்கொருவர் காதலுடன் கிரீடை செய்வதற்கேற்ற பிரதேசங்களையப் பெற்றவையும், பற்பல நிறமான புஷ்பங்களால் மிகமனோஹரமான மரங்களடர்ந்தவையும், ஆகவே நறுமணம் வீசுபவையுமான கிரீடாவனங்களில் நண்பருடன் கூடி, விதம்விதமான கதைகளைக்கேட்டு, வேடிக்கையாய் விளையாடிக்கொண்டு, பேரின்பத்தோடு பகற்பொழுதைக் கழித்துவரவேண்டும். குருகுணம், சீதவீர்யம், ஸ்நிக்த்தம், அம்லம், மதுரம் இத்தன்மையுள்ள பதார்த்தங்களையும், பகலில் நித்திரை செய்வதையும் வஸந்தருதுவில் பரிஹரிக்க வேண்டும். 19—25½.

கிரீஷ்மருதுவின் குணம் :—கிரீஷ்மருதுவில் சூரியவெப்பம் அதிதீக்ஷ்ணமாய்விடுவதால் உலகத்திலுள்ள திரவ பாகத்தையே அவ்வெப்பம் உறிஞ்சுவிடுவது போலிருக்கும்; ஆகவேஅக்காலத்தில் தினந்தோறும் கபம் க்ஷயித்து வாயுவும் விருத்தியடைந்து வருகின்றது.—26½.

கிரீஷ்மருது சர்யை:—ஆகையிஞல் இந்த ருதுவில் இலவணம், கடு, அம்லம் இச்சுவையுள்ள பதார்த்தங்களையும், வியாயாமம்[1] செய்வதையும், வெயிலில் ஸஞ்சரிப்பதையும் பரிஹரிக்கவேண்டும். சீக்கிரம் ஜீர்ணமாகக்கூடியதும்,ஸ்நிக்த்தமானதும், திரவமாயிருப்பதும், மதுர ரஸமொன்றையே மிகப்பிரதாநமாயுடையதுமான ஆஹாரத்தைஉட்கொள்ளவேண்டும். மிகக் குளிர்ந்த ஜலத்திஞல் தேஹத்தை நனைத்துக்கொண்டு, வாற்கோதுமைப் பொரிமாவையும் சர்க்கரையையும் கலந்து உட்கொள்வது நலம். மதுபாநம் செய்யக்கூடாது; செய்வதாயிருந்தால் சொற்ப அளவாகவும், அதிலும் அதிகஜலம் சேர்த்தும் உட்கொள்ளவேண்டும். இல்லையேல் சோபையையும், அங்கங்களில் தளர்ச்சியையும், அழற்சியையும், மயக்கத்தையும் அது உண்டுபண்ணும். குருக்கத்திப்பூ, சந்திரன் இவற்றைப்போல் வெண்மையான

1. வியாயாமம்—உழைப்பு அல்லது தேஹப் பயிற்சி.

சம்பா அரிசியாலான அன்னத்தை ஜாங்கல மாம்ஸங்களுடன் கலந்து உபயோகிக்கலாம். அதிக குழம்பாயில்லாத மாம்ஸரஸம், இரஸாலா,[1] இராகம்,[2] காண்டவம்,[3] பஞ்சஸாரபாநகம்[4] இவற்றில் ஏதேனும் வேண்டியதைப் புதிய மட்பாத்திரத்தில் வைத்திருந்து, அதில் வாழைப்பழத்துண்டுகளேயும் பலாச்சுளேகளேயும் சேர்த்து, சிறிது அம்லமாகவும் செய்து, சிறிய மண்சிப்பிகளால் எடுத்துப் பருகலாம். பாதிரிப்பூவையும், கற்பூரத்தையும் சேர்த்து வாஸனே யேற்றப்பட்டு மிகக் குளிர்ச்சிபொருந்திய ஜலத்தைப்பருகலாம். இரவில் சந்திரிகையிலும் நக்ஷத்திர வெளிச்சத்திலும் வைத்துக் குளிர்ந்துள்ள எருமைப்பாலில் சர்க்கரையும் கலந்து பருகலாம். அத்துடன் சசாங்ககிரணங்கள்[5] என்னும் பக்ஷயங்களேயும் புஜிக்கலாம். ஆகாசத்தை அளாவிய ஆச்சாமரங்களாலும், மிகப் பெரிதாக வளர்ந்த பனமரங்களாலும் சூரியன் மறைக்கப்பட்டு நிழலடர்ந்தவையும், முல்லேக்கொடிகளால் தழுவப்பெற்ற அழகிய திராக்ஷைக்கொடிகளாலும் அவற்றின் பழக்கொத்துகளாலும் விளங்குபவையுமான உத்தியானவனங்களில், மாந்தளிர்களுடையவும் மாங்கனிகளுடையவும் கொத்துகளால் சூழப்பெற்ற அழகிய பந்தலில், பரிமளம் பொருந்திய பன்னீர்களால் நனேக்கப்பட்டமெல்லியவஸ்திரப்படல்கள் நாற்புறமும் தொங்க, மிகக் கோமளமான வாழையிலேகளென்ன, செங்கழு நீர்மலர்களென்ன, தாமரைப் பூக்களென்ன, அவற்றின் தண்டுகளென்ன, கருங்குவளேப் புஷ்பங்களென்ன, இவற்றாலான சயனத்திலாவது, மனோஹரமான தளிர்களேயும் மலர்களேயும் பரப்பிய தாராகிருஹத்திலாவது[6] சயனித்துக்கொண்டு நடுப்பகலில் சூரியதாபத்தால் வருந்துபவன் இனிது நித்திரையுறலாம்; அந்த தாராக்ருஹங்களில் பெண்ணுருவமுள்ள பிரதிமைகளின் முகங்களிலிருந்தும், கைமுதலிய அவயவங்களிலிருந்தும் வெட்டிவேரால் வாஸனேயுண்டாக்கப் பட்ட ஜலம் விழுந்துகொண்டிருக்கும்படி அமைக்கவேண்டும். இராக்காலங்களிலும்

1. இரஸாலா—ஏலக்காய், இலவங்கப்பட்டை, ஜாதிக்காய் முதலியவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த துவையல் போன்ற வியஞ்ஜனம்.

2. இராகம்—வெல்லம், மாதுளே, தேன் முதலியவற்றாலான ஒரு தவி பான வகை.

3. காண்டவம்—இனிப்பு, புளிப்பு, கார்ப்பு, உப்பு இவ்வித சுவைகளுள்ளதாய் செய்யப்படும் ஒருவித பணியாரம்.

4. பஞ்சஸாரம்—திராக்ஷை, இலுப்பைப்பூ, குமிழன், கர்ஜூரம், ஈச்சம்பழம் இவற்றையும், கற்பூரம் முதலானதையும் சேர்த்துச் செய்யப்படும் ஒருவித பாநகம்.

5. சசாங்ககிரணம்—ஜிலேபி போன்ற ஒருவித பணியாரம்.

6. தாராகிருஹம்—குழாய்களிலிருந்து தாரைபோலவும் திவலேகளாகவும் ஜலம் சொரியும்படி அமைக்கப்பட்ட ஸ்நானகிருஹம்.

சந்திரகிரணங்கள் பரவிய பெரியதோர் உப்பரிகையின்மீது இருந்துவரலாம். மனிதன் கவலையற்று மிக்க களிப்புற்ற மனமுடையவனுய், சந்தனம் பூசி மாலையைத் தரித்து மிகமெல்லிய வஸ்திர முடுத்துக்கொண்டு, புணர்ச்சியின்றி ஸுகமாயிருந்து வர வேண்டும். சிறிது ஈரமான உடைகளும், சிற்றுலவட்டங்களும், விசாலமாகத் தடித்த தாமரையிலைகளும், தண்ணீர்த்திவலைகளோடு குளிர்ந்த காற்றுவீசும் மிருதுவான சாமரை முதலியவைகளும், கற்பூரம் மல்லிகைப்பூ இவற்றுலான மாலைகளும், செஞ்சந்தனக் குழம்பில் நனைத்த நல்முத்துச் சரங்களும், மனோஹரமாகவும் மதுரமாகவும் மழலைச்சொற்களை மொழிந்திடும் குழந்தைகளும், பெண்கிளிகளும், ஆண்கிளிகளும், தாமரைக்கொடிகளைக் கங்கணங்களாகப் பூண்டு நன்கு மலர்ந்து நறுமணங்கமழும் கமலமலர்களை அங்கங்களில் அணிந்து ஸஞ்சரிக்குந் தன்மையுடைய தாமரையோடைகளெனத்தகும் மனதுக்கிசைந்த மனோஹரமாயுள்ள மங்கையரும் பரிச்ரமத்தைப் பரிஹரிக்கக் கூடியஸாதநங்களாம். 27—41.

வர்ஷருதுவின் குணங்கள்:—ஆதாநகாலத்திருல் வாட்டமுற்ற அங்கங்களையுடையவருக்கு முன்னமே ஜாடராக்னி மந்தப்பட்டிருந்தும், மீண்டும் மாரிகாலங்களில் இயற்கையாகவே கோளாறடையும் தோஷங்களால் அவ்வக்னி இன்னும் அதிகமாக மந்தப்படும். அதெங்ஙனமெனில்—ஆகாயத்தில் மேகங்கள் எங்கும்அடர்ந்து தொங்குகையில் அதனுல் திடீரென்று வாயுவானது மிகக் குளிர்ந்து நீர்த்திவலைகளுடன் கூடி வீசும்; அப்பொழுது பூமியிலிருந்து ஆவியெழும்; அதனுல் தண்ணீர் மலினமாய் அம்லபாகமடையும்[1]; ஆகவே உடற்சூடு அல்லது ஜாடராக்னியும் மந்தமாகும்; இக்காரணங்களால் தோஷங்கள் விகாரமடைகின்றன[2]. 42—43½.

வர்ஷருது சர்யை:—தோஷங்கள் இவ்வாறு ஒனரேடொன்று விகாரமடைந்து வருங்கால், எல்லாத் தோஷங்களையும் இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரக்கூடியதும், அக்னியைத்[3] தூண்டிக் கொடுக்க வல்லதுமாயுள்ள எதையும் உபயோகிக்கவேண்டும். மனிதன் சரீரத்திற்கு முறைப்படி சோதந சிகித்ஸை[4] செய்துகொண்டு

---

1. காலஸ்வபாவத்திருல் அப்பொழுது ஜலம் சரீரத்தினுள் ஒருவாறு புளித்துவிடுவது இயல்பு; ஜலத்தில் அச்சமயம் பலவிதமான மலின வஸ்துக்கள் கலப்பதே இதற்குக் காரணமாகும்.

2. திடீரென்று குளிர்ச்சியடைந்து ஜலத்திவலைகளைப்பெற்ற வாயுவால் வாததோஷமும், ஆவியினுலும் அம்லபாகமடைந்த ஜலத்திருலும் பித்தமும், மலினமான ஜலத்திருலும் அக்னி மாந்தியத்திருலும் கபமும் முறையே கோளாறடையும் எனக் கருத்து.

3. அக்னி—இதற்கு இச்சாஸ்திரத்தில் பெரும்பாலும் ஜாடராக்னி என்றே பொருள். சிலவிடங்களில் தேஹச்சூடென்றும் பொருள்படும்.

4. வமநவிரேகாதிகள் சோதந சிகித்ஸைகள் எனப்படும்.

ஆஸ்த்தாப நவஸ்தியைச்[1] செய்துகொள்ள வேண்டும்; பிறகு நன்கு பதமாகப் பழகிய தானியம், பக்குவம் செய்த மாம்ஸரஸங்கள், ஜாங்கல மாம்ஸம், யூஷங்கள்[2], வெகு நாட்பட்ட தேன், அதேவித மான அரிஷ்டம்,[3] ஸௌவர்ச்சலவணம்[4] நிரம்பவும் சேர்ந்ததும் பஞ்சகோல சூர்ணம்[5] கலந்ததுமான நீர்மோர், ஆகாயத்திலேயே ஏந்தப் பட்ட சுத்தமான மழைநீர், கிணற்று ஜலம், கொதிக்க வைத்த ஜலம் ஆகியவற்றை யுபயோகிக்கலாம். அபரிமிதமாக மழை பொழிகையில் அம்லரஸமும் இலவணரஸமும் ஸ்நேஹமும் அதிக மாகச் சேர்ந்ததும், சற்றும ஈரித்துப் போகாததும், தேன் கலந்ததும், இலகு குணமுள்ளதுமான உணவையே உபயோகிக்க வேண்டும். எப்பொழுதும் பரிமளம் பொருந்திய சரீரமுடையவனுய், நல்ல வாஸனையுள்ள வஸ்துக்களால் தூபமிட்ட வஸ்திரங்களையுடுத்துக்கொண்டு, காலால் ஸஞ்சரிக்காமல், நீராவியென்ன-குளிரென்ன-நீர்த்திவலைகளென்ன இவையொழிந்த உப்பரிகைகளில் வஸித்து வரலாம். நதிஜலம், நெய்ப்பசை முதலியவை அதிகமாகக் கலந்த நீர்மோர், பகலில் நித்திரை செய்தல், ஆயாஸகரமான வேலை, வெயில் இவற்றைப் பரிஹரிக்க வேண்டும். 44—48.

**சரத் ருதுவின் குணங்கள்:**—வர்ஷருதுவில் சைத்தியம் சரீத்திற்கு அப்யாஸமாய் விடவே, அவ்விதம் பழகிய மனிதர்கள் திடீரென்று சரத் ருதுவில் சூரியவெப்பத்தினுல் தாபமடைய நேரிடுவதால், அதற்கு முன்ருதுவில் சயாவஸ்த்தையடைந்த பித்தமானது சரத்ருதுவில் பிரகோபமடைகிறது[6].—49.

**சரத் ருது சர்யை:**—அவ்வாறு பிரகோபமடைந்த பித்தத்தைப் போக்குவதற்காக திக்தக க்ருதத்தை[7] உட்கொள்வதுடன், விரேசந சிகித்ஸையும்,[8] இரக்த மோக்ஷணமும்[9] செய்ய வேண்டும். நன்ருகப் பசியெடுக்கும் பொழுது கசப்புள்ளதும் மதுரமானதும்

---

1. ஆஸ்த்தாபந வஸ்தி—கஷாயாதிகளால் செய்யப்படும் வஸ்தி; இது ஆங்கிலத்தில் Enema என்று வழங்கப்படும்.

2. யூஷங்கள் — கஞ்சி வகைகள்.

3. அரிஷ்டம்—ஔஷதிகளைக் காய்ச்சி செய்யப்படும் ஒருவித மது.

4. ஸௌவர்ச்ச லவணம்—அட்டுப்பு.

5. பஞ்ச கோலம்—திப்பிலி, மோடி, சவ்வியம், சித்திரமூலம், சுக்கு இவ்வைந்துக்கும் பெயர்.

6. சயாவஸ்த்தை பிரகோபாவஸ்த்தை என்னும் விஷயங்கள் 12-வது அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன.

7. திக்தக க்ருதம்—சிகித்ஸாஸ்த்தாநத்தில் குஷ்ட-சிகித்ஸையில் கூறப்பட்டிருக்கும் முறை.

8. விரேசநம்—மலத்தை குதத்திஞல் கழிப்பதற்கான சிகித்ஸை.

9. இரக்தமோக்ஷணம்—ஸிரைகளென்கிற இரத்தக்குழாய்களிலிருந்து இரத்தத்தைக் குத்தி வெளிப்படுத்தல்.

துவர்ப்பாகவுமுள்ள இலகு குணம் பொருந்திய உணவை உபயோகிக்கவேண்டும்; அவ்வுணவு சம்பா அரிசி, பயறு, சர்க்கரை, நெல்லிக்கனி, பேய்ப்புடல், தேன், ஜாங்கல மாம்ஸம் இவை ஸம்பந்தப் பட்டதா யிருக்கவேண்டும். 50, 50½.

ஹம்ஸோதகம்:—பகலிலும் இரவிலும் இடைவிடாமல் நாற்புறமும் சூரிய கிரணங்களின் பரிசத்தினால் சூடுண்டாக்கப் பெற்றதும், சந்திரனுடையகதிரொளிகளால் குளிர்ச்சி பொருந்தியதும், அகஸ்திய நக்ஷத்திரம் உதயமாய் அதன் கதிரொளியால்[1] தோஷம் நீங்கியதும், ஆகவே மாசுகளும் ஒழிந்து மிகப் பரிசுத்தமாயுள்ளதுமான ஜலம் ஹம்ஸோதகம் என்று வழங்கப்படும்; இது எவ்வித தோஷத்தையும் அகற்றும்; இந்த ஜலம் அபிஷ்யந்தியாகவும் இல்லாமல்[2], ரூக்ஷமாகவுமில்லாமல்[3] நடுத்தரமான குணமுடையதாகையால், பாநம் முதலியதற்கு அமுதம்போல் அநுகூலமானது.—51—52½.

சரத்ருதுவில் உபயோகிக்கக் கூடியவையும் தகாதவையும்:—சந்தனம், வெட்டிவேர், பச்சைக்கற்பூரம், முத்துமாலை, நிர்மலமான வஸ்திரம் இவற்றைத் தரித்துக்கொண்டு பார்ப்பதற்கு மனோஹரமாயிருந்தவனாய், அந்திநேரத்தில் மட்டும் மாடிகளின் உச்சிகளில் சுண்ணச் சாந்துபோல் வெண்ணிறமான நிலவில் உட்கார்ந்திருத்தலும் நலம். பனி, க்ஷாரங்கள், முற்றிலும் திருப்தியுண்டாகுமாறு புஜித்தல், தயிர், தைலம், கொழுப்பு, வெயில், தீக்ஷ்ண வீர்யமுள்ள மது, பகலில் நித்திரை, கீழ்க்காற்று இவற்றை இந்த ருதுவில் பரிஹரிக்கவேண்டும். 53—54½.

ஒவ்வொரு ருதுவிலும் உபயோகிக்கக் கூடிய இரஸங்கள்:—ஹேமந்தருது, சிசிரருது, வர்ஷருது இவற்றில் முதல் மூன்றுஇரஸங்கள்[4] அடங்கிய பதார்த்தங்களையும், வஸந்த ருதுவில் இறுதியிற் கூறப்பட்ட மூன்று இரஸங்களடங்கியவற்றையும்[5], கிரீஷ்மருதுவில் மதுர ரஸத்தையும், சரத்ருதுவில் இனிப்பு-கைப்பு-துவர்ப்பு இச்சுவையுள்ளவஸ்துக்களையும் உபயோகிக்கவேண்டும்.—55½.

ஒவ்வொரு ருதுவுக்கேற்ற அன்னபானங்கள்:—சுருக்கமாகக் கூறுவோமாயின் சரத்ருது வஸந்தருது இவ்விரண்டிலும் ரூக்ஷமான அன்னபானங்களையும், கிரீஷ்மருது சரத்ருது இவ்விரண்டிலும் சீத

---

1. சரத்ருதுவில் அகஸ்திய நக்ஷத்திரம் உதயமாவதால், அந்த நக்ஷத்திரத்தின் ஒளியின் சக்தியினால் கலங்கிய ஜலம் தெளிந்து விடுமாம்.

2. அபிஷ்யந்தி—பசையினாலும் குருகுணத்தினாலும் தேஹத்திலுள்ள தாதுக்களைக் களிக்கச் செய்யும் குணம்.

3. ரூக்ஷம்—வரட்சி.

4. இனிப்பு, புளிப்பு, உப்பு இவை முதல் மூன்று ரஸங்கள்.

5. கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு இம்மூன்றும் இறுதியிற்கூறியசுவைகள்.

மான அன்னபானங்களையும், இதரகாலங்களில் இவற்றிற்கு எதிரிடையான குணங்களுள்ள வஸ்துக்களையும் உபயோகிக்கலாம்[1].—56½.

எல்லா ருதுக்களிலும் உபயோகிக்கக் கூடிய இரஸங்களைப் பற்றிய விசேஷ விதி :—எல்லாக் காலங்களிலும் எல்லா இரஸங்களையுமே கலந்துபயோகித்து வரவேண்டும்; ஆனால் ஒவ்வொரு ருதுவிலும் அவ்வக்காலத்திற்கு ஹிதமான சுவையுள்ள வஸ்துக்களையே அதிகமாய் உபயோகிக்கவேண்டும்.—57.

ருது ஸந்தியும் அதிற்செய்ய வேண்டிய சர்யையும் :—ஒவ்வொரு ருதுவினுடையவும் இறுதியிலுள்ள ஏழு நாட்களும் ஆதியிலுள்ள ஏழு நாட்களும் ஒருமிக்க ருதுஸந்தி என்று வழக்கப்படும்[2]. அந்த ருதுஸந்தியில், கழிந்து போன ருதுவில் அநுஸரித்து வந்த ஆசாரத்தைக் கிரமமாக விட்டுவருவதுடன், வரப்போகிற ருதுவுக்கேற்ற சர்யையை சிறுகச் சிறுக அநுஷ்டிக்க முயலவும் வேண்டும்.—58.

திடீரென்று எதையும் செய்வதாலும் விடுவதாலும் உண்டாகும் தீங்குகள் :—வழக்கத்திலுள்ள காரியங்களைத் திடீரென்று விட்டுவிடுவதாலும், வழக்கத்திலிராதவைகளைத் திடீரென்று செய்யமுயல்வதாலும் அஸாத்மியஜமான[3] வியாதிகள் ஸம்பவிக்கும்.—58½.

---

## நான்காம் அத்தியாயம்.

### ரோகாநுத்பாதநீயம்.

அப்பால் ரோகாநுத்பாதநீயம்[4] என்னும் அத்தியாயத்தைக் கூறுகிறோம் :—

---

1. சரத்ருது, வஸந்தருது இவற்றைத் தவிர்த்து மற்ற நான்கிலும் ஸ்நிக்த்தமான பதார்த்தங்களையும், கிரீஷ்மருது சரத்ருது இவற்றைத் தவிர மற்ற நான்கிலும் உஷ்ணமான வஸ்துக்களையும் உபயோகிக்க வேண்டும்.

2. வஸந்தருதுவின் கடைசி ஏழு நாட்களும், கிரீஷ்மருதுவின் முதல் ஏழுநாட்களும் சேர்ந்து ருதுஸந்தியாகும். இவ்விதமே கிரீஷ்மருதுவின் கடைசி வாரமும் வர்ஷருதுவின் முதல் வாரமும் சேர்ந்து ருதுஸந்தியாம். ஆகவே ருது ஒன்றுக்கு 14 நாட்கள் ருதுஸந்தியாம்.

3. அஸாத்மியம்—வழக்கமின்மையினால் சரீரத்திற்கு ஒத்துக்கொள்ளாதது. அவ்வித வஸ்துக்களை உபயோகிப்பதால் அல்லது அவ்வித காரியங்களைச் செய்வதால் உண்டாகும் வியாதிகள் அஸாத்மிய வியாதிகள் என்று சொல்லப்படும். உதாரணமாக: கிரீஷ்மருதுவில் அநுஷ்டித்துவந்த சர்யைகள் வழக்கத்தில் வந்துவிடுவதால், திடீரென்று வர்ஷருதுவில் அதை விட்டுவிட்டு, வர்ஷ ருதுவுக்கு அநுகூலமான ஆசாரங்களை நடத்துவது அஸாத்மியமான சர்யையாம்; இவ்விதமே மற்ற ருதுக்களிலும் என்றறிக. ஆகவே ருதுஸந்தியில் கிரமமாக அவற்றை மாற்ற வேண்டும்.

4. ரோகாநுத்பாதநீயம்—வியாதியுண்டாகாமல் அவற்றைத் தடுப்பதற்கான உபாயங்களை அறிவிக்கும் அத்தியாயம்.

வேகநிரோதம் செய்யலாகாது:—வேகங்களை [1] அடக்கித் தடுத்து விடக்கூடாது. அவ்வித வேகங்களாவன:—அபாநவாயு பிரிதல், மலம் வெளியாதல், மூத்திரம் வெளியாதல், தும்மல், நாவரட்சி, பசி, நித்திரை, இருமல், ச்வாஸம், கொட்டாவி, கண்ணீர், வாந்தி, சுக்லம் வெளியாதல் என்பவையாம்.—1.

அபாநாவாயு நிரோதத்தால் உண்டாகும் தீங்குகள் :—அபாநவாயுவைத் தடைசெய்வதால் குன்மம், உதாவர்த்தம், [2] வயற்றுவலி, சரீரவாட்டம், அபாநவாதமும் மூத்திரமும் மலமும் வெளிவர முடியாமல் குடலில் சேர்ந்து விடுதல், திருஷ்டிநாசம், ஜாடராக்னி மந்தமாதல், இருதயத்தைப் பற்றிய வியாதிகள் இவை ஸம்பவிக்கும்.—2.

அபாநவாத நிரோதத்தாலாகும் தீங்குகளுக்குப் பரிஹாரம் :—அபாநவாதத்தைத் தடை செய்வதால் உண்டாகும் கோளாறுகளில் ஸ்நேஹஸிகித்ஸை,[3] ஸ்வேதஸிகித்ஸை,[4] வர்த்திப் பிரயோகங்கள்,[5] வாதஹரமான போஜனங்கள், வாதஹரமான பானவகைகள், அவ்வித வஸ்திகர்மங்கள் [6] என்னும் இவ்வித சிகித்ஸைகள் செய்யக்கூடியனவாம்.—3.

மலவேகத்தைத் தடுப்பதாலுண்டாகும் தீங்குகள்:— மலம் வெளியாவதை அடக்கினால் காலிலுள்ள ஆடுச்சதை முறுக்கிக்கொள்ளுதல், பிரதிச்யாயம் [7], சிரோவேதனை, ஊர்த்வ ச்வாஸம், ஆஸநத்வாரத்தில் கடுப்பு, இருதயநடை தடைபடுதல் அல்லது மாரடைப்பு, முகத்தின் வழியாக மலம் வெளியாதல் என்னும் இவையும், அபாநவாயுவைத் தடுப்பதால் ஸம்பவிப்பதாக முன் கூறப்பட்டுள்ள கோளாறுகளும் உண்டாவதாக நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. —4, 4½.

மூத்திரவேக நிரோதத்தாலுண்டாகும் தீங்குகள்:— மூத்திரம் வெளியாக வேண்டியிருக்க அதை அடக்கினால் அச்மரீரோகம், [8] வஸ்தியிலும்[9] ஆண்குறியிலும் துடையிடுக்கிலும் வேதனை இவை

1. வேகங்கள்—மலவிஸர்க்கம், மூத்திரவிஸர்க்கம், பசி, தாஹம், நித்திரை முதலியவை ; இவற்றை அடக்குதல் வேக நிரோதம் எனப்படும்.

2. உதாவர்த்தம்—குதம் மூத்திரமார்க்கம் முதலியவற்றால் வெளிவர வேண்டியவை அதற்கு மாறாக மேல்நோக்கிக் கிளம்புவது.

3. ஸ்நேஹஸிகித்ஸை—16-ம் அத்தியாயம் பார்க்க.

4. ஸ்வேதஸித்ஸை—17-ம் அத்தியாயம் பார்க்க.

5. வர்த்திப் பிரயோகங்கள்—மதநபலம் என்னும் மருக்காரை முதலியதால் செய்யப்படும் நீண்டமாத்திரைகளைப் போன்ற குளிகைகளை குதத்திலும் யோனியிலும் பிரவேசிக்கச் செய்தல்.

6. வஸ்திகர்மங்கள் — 19-ம் அத்தியாயத்தைப் பார்க்க.

7. பிரதிச்யாயம் — நாசியிலுண்டாகும் பீநஸம்போன்ற நோய்.

8. அச்மரீ—மூத்திரமார்க்கத்தில் சிறிய கற்கள் போன்ற பதார்த்தங்கள் உண்டாவதாலான வியாதி.

9. வஸ்தி—மூத்திரப்பை.

புண்டாம். இவற்றோடு வாதநிரோதத்திற்குக் கூறிய ரோகங்களும் பெரும்பாலும் உண்டாகின்றன.—5½.

மலத்தைத் தடுப்பதாலான தீங்குகளுக்குப் பரிஹாரம்:—அவ்வாறு மலப் பிரவ்ருத்தியைத் தடுப்பதால் ஏற்படும் கெடுதிகளில் வர்த்திகளையும், அப்யங்கத்தையும்,[1] அவகாஹத்தையும்,[2] ஸ்வேத விதியையும், வஸ்தியையும் பிரயோகிப்பதே தகுந்த சிகித்ஸை யாகும். மலத்தைத் தடுப்பதா லுண்டாகும் வியாதிகளில் மலத்தை உடைத்து வெளிப்படுத்துங் குணமுடைய அன்ன-பானங்களையு முபயோகிக்க வேண்டும்.—6½.

மூத்திரத்தைத் தடுப்பதாலான தீங்குகளுக்குப் பரிஹாரம்:—மூத்திரவேகத்தைத் தடுப்பதாலுண்டாகும் வியாதிகளில் ஆஹார முண்பதற்குமுன் கிருதபானம் செய்வது நலம்; உணவு ஜீர்ணமான பிறகு, கிருதத்தை உத்தம மாத்திரையாக[3] உபயோகிக்கவேண்டும்; இவ்வாறு ஆஹாரத்திற்கு முன்பும் பிறகும் இரண்டு முறை கிருத முபயோகிக்கும் முறை அவபீடகம் எனப்படும்.—7, 8.

ஏப்பத்தைத் தடுப்பதாலான வியாதிகளும் அவற்றிற்குப் பரிஹாரமும்:—ஏப்பம் விடுவதைத் தடுப்பதால் அரோசகம், உடம்பில் நடுக்கம், இருதயம் மார்பு இவ்விரண்டிலும் ஒருவாறு அடைப்பு, வயிற்றுப்பொருமல், இருமல், விக்கல் இவை ஸம்பவிக்கும். இதற்கு விக்கலுக்கு ஏற்ற சிகித்ஸை[4] உபயோக முள்ளதாயிருக்கும்.—9.

தும்மலைத் தடுப்பதாலுண்டாம் தீங்குகள்:—தும்மலைத் தடுப்பதால் தலைவலி, இந்த்ரியங்களுக்குப் பலம் குறைதல், மந்யாஸ்தம்பம்,[5] அர்திதம்[6] இவையுண்டாகும்.—9½.

தும்மலை அடக்குவதாலான தீங்குகளில் பரிஹாரம்:—தீக்ஷ்ண வீர்யமுள்ள தூமங்களையும் அஞ்ஜநங்களையும் முகர்வது, நஸ்யமிடுதல், சூரியனைப் பார்த்தல் ஆகிய இவ்வுபாயங்களால் தடைப்பட்ட தும்மலை மீண்டும் உண்டாக்கவேண்டும். ஸ்நேஹ சிகித்ஸை ஸ்வேத சிகித்ஸை இவற்றையும் செய்யவேண்டும்.—10½.

---

1. அப்யங்கம்—சிரஸ்ஸிலும் மற்ற அவயவங்களிலும் எண்ணெய் முதலியவற்றைத் தேய்த்துக் கொள்ளுதல்.

2. அவகாஹம்— எந்தெந்த அவயவம் வியாதியினால் பீடிக்கப்படுகின்றதோ அந்தந்த அவயவத்தை அதற்கேற்ற மூலிகைகளைச் சேர்த்துக் காய்ச்சிய ஜலம் முதலானதில் அமிழ்த்திவைத்தல்.

3. ஒரு இராப்பகலில் ஜீர்ணமாகக்கூடிய ஔஷதாதிகளின் அளவு உத்தமமாத்திரை யெனப்படும்.

4. விக்கலுக்கு சிகித்ஸா ஸ்த்தாநத்தில் 4-வது அத்தியாயத்தில் சிகித்ஸை கூறப்படுகிறது.

5. மந்யாஸ்தம்பம்—ஒருவித வாதரோகம்; கழுத்தின் பின்புறத்திலுண்டாகும் வலியுடன் கூடிய இசிவு அல்லது பிடிப்பு.

6. அர்திதம்—முகவாய்க்கட்டையை அல்லது வாயை ஒரு பக்கமாக இழுக்கும் வாதரோகம்.

நாவரட்சியைத் தடுப்பதாலான தீங்குகளும் அவற்றின் பரிஹார மும் :—நாவரட்சியைத் தடுப்பதால் முகம் உலர்ந்து விடுதல், சரீர மிளைத்துவிடுதல், செவிட்டுத்தனம், மயக்கம், தலைச்சுற்றல், இருதயத்தைப்பற்றிய வியாதிகள் இவையுண்டாகும். இதில் ஸகலவித சீதோபசாரமும் அநுகூலமாயிருக்கும்.—11½.

பசியை அடக்குவதாலான தீங்குகளும் பரிஹாரமும்:—பசியை அடக்குவதால் தேஹம் தளர்ச்சியுறுதல், அரோசகம், உடல்வாட்டம், இளைப்பு, தேஹத்தில் வலி, தலைச்சுற்றல் இவ்விகாரங்கள் உண்டாகும். இதில் இலகுவும், ஸ்நிக்த்தமும், உஷ்ண வீர்யமுமுள்ள உணவைச் சொற்பமாயுபயோகிக்கவேண்டும்.—12½.

நித்திரா பங்கத்தினலுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும்:—நித்திரையைத் தடுப்பதால் மயக்கம், தலையும் கண்களும் பாரமாயிருத்தல், சோம்பல், கொட்டாவி, உடலெங்கும் வேதனை இவையுண்டாகும். அந்த நிலைமையில் நன்ருக நித்திரை செய்வதும், உடம்பை ஸுகமாக மர்த்தநம் பண்ணுவதும் உசிதமாம்.—13½.

காஸத்தைத் தடுப்பதாலுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும்:—இருமலை அடக்கிக்கொண்டு வந்தால் அதே இருமல் விருத்தியாவதுடன், ச்வாஸரோகம், அரோசகம், இருதயத்தைப்பற்றிய வியாதிகள், க்ஷயம், விக்கல் இவையுமுண்டாகும். இதில் காஸஹரமான சிகித்ஸையையே[1] விசேஷமாகச் செய்யவேண்டும்.—14½.

சிரமச்வாஸத்தை அடக்குவதா லுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும் :—ஆயாஸத்தின லுண்டாகும் பெருமூச்சை அடக்குவதால் குன்மம், இருதய வியாதி, மூர்ச்சை இவைகளுண்டாகும். அதில் இளைப்பாறுதலும், வாதஹரமான சிகித்ஸா முறையும் அநுகூலமானவையாம்.—15½.

கொட்டாவியை அடக்குவதாலான தீங்குகளும் பரிஹாரமும் :— கொட்டாவியைத் தடுப்பதால், தும்மலை யடக்குவதாலுண்டாவதைப்போன்ற கோளாறுகள் ஸம்பவிக்கும். இதில் வாதஹரமான ஸகல சிகித்ஸையும் ஹிதமாயிருக்கும்.—16.

கண்ணீரை அடக்குவதாலுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும் :—கண்ணீரைப் பெருகவிடாமல் தடுத்தால் பீநஸம், கண்ணோய், தலைநோய், இருதய வியாதி, மந்யா ஸ்தம்பம்,[2] அரோசகம், தலைச்சுற்றல், குன்மம் ஆகிய வியாதிகள் உண்டாகும். அதில் நித்திரை செய்வதும், மதுபாநம் பண்ணுவதும், மனதுக்கின்பமான கதைகளைக் கேட்பதும் அநுகூலமானவையாம்.—17.

---

1. சிகித்ஸா ஸ்த்தாநத்தில் "காஸசிகித்ஸை" என்னும் 3-வது அத்தியாயத்திற் கூறப்படும் சிகித்ஸை.

2. மந்யாஸ்தம்பம்—புறங்கழுத்து வலி அல்லது கழுத்துப் பிடிப்பு.

**வாந்தியை அடக்குவதாலுண்டாகும் தீங்குகள் :—** வாந்தியை வர விடாமல் தடுத்தால் விஸர்ப்பம்,[1] கோடம்,[2] குஷ்டம், கண்ணோய், பாண்டுரோகம், ஜ்வரம், காஸம், ச்வாஸம், இருதயத்துடிப்பு, வியங்கம்,[3] வீக்கம் இவை உண்டாகும்.—18.

**வாந்தியைத் தடுப்பதாலான தீங்குகளுக்குப் பரிஹாரம் :—** வமனத்தைத் தடுப்பதாலுண்டான வியாதிகளில் ரூக்ஷ குணமுள்ள கண்டூஷங்களையும்,[4] தூமபானங்களையும் உபயோகித்து, அவ்வித ஆஹாரத்தையும் புஜித்து, அடக்கின வமநவேகத்தை மறுபடியும் தூண்டவேண்டும். மேலும் வியாயாமம், இரக்தமோக்ஷணம், விரேசனம் இவை உபயோகமானவையாம்; அப்யங்கம் செய்துகொள்வதற்கு க்ஷாரம், உப்பு இவற்றைச் சேர்த்து பக்குவம்செய்த தைலம் சிறந்த ஔஷதமாகும்.—19, 19½.

**சுக்லத்தைத் தடுப்பதாலுண்டாகும் தீங்குகள் :—** சுக்லத்தைத் தடுப்பதால் அதே தாது அதிகமாகப் பொசிய ஆரம்பிக்கும்; குஹ்யஸ்த்தாநத்தில் வேதனையுண்டாகும்; அவ்விடத்தில் வீக்கமும் காணலாம். ஜ்வரம், இருதயத்தில் வேதனை, மூத்திர அடைப்பு, சரீரத்தின் திறமை யொடுங்கிப்போதல், அண்டவ்ருத்தி, அச்மரீ, நபும்ஸகத்தன்மை இவையும் ஸம்பவிக்கலாம்.—20½.

**சுக்ல நிரோதத்தினாலான வியாதிகளில் பரிஹாரம் :—** முற்கூறிய கோளாறுகளில் சம்பா அரிசியினாலான அன்னம், கோழியின் இறைச்சி, மது, வஸ்திகர்மம், அப்யங்கம், அவகாஹநம், வஸ்தியென்னும் மூத்திரப் பையைச் சுத்திசெய்யவல்ல மூலிகைகளைச் சேர்த்து பக்குவம் செய்த பால் இவற்றை யுபயோகிக்கலாம்; அன்பார்ந்த பெண்களுடன்கூடி விளையாடி இன்பமாகக் காலங்கழிக்கலாம்.—21½.

**வேகரோதிகளில் சிகித்ஸைக்கு வசப்படாதவர்கள் :—** நாவரட்சியினாலும், விசேஷமான வலியினாலும் பீடிக்கப்படுபவரும், மிகவும் இளைத்துப் போயிருப்பவரும், மலத்தை வாயால் கக்குபவருமான வேகரோதிகள்[5] வைத்தியர்களால் சிகித்ஸை செய்யப்படாமல் பரிஹரிக்கக் கூடியவராவர்.—22.

**வேகரோதமே வியாதிகளுக்குக் காரணமாகும் :—** முற்கூறிய எல்லா வேகங்களையும் பலாத்காரமாக நாமே தூண்டுவதாலும், அவற்றை அடக்குவதாலுமே ஸகல ரோகங்களும் ஸம்பவிக்கின்றன.—22½.

---

1. விஸர்ப்பம்—அக்கியென்று வழங்கப்படும் சர்ம வியாதி.
2. கோடம்—ஒருவித தழும்பு.
3. வியங்கம்—வங்கு என்னும் சர்மவியாதி.
4. கண்டூஷங்கள்—வாய்க்கொப்புளிக்கும் மருந்துகள்.
5. வேகரோதம்—மல-மூத்திராதிகளை இயற்கைக்கு விரோதமாய் அடக்கிக்கொண்டிருத்தல்.

வேகநிரோதத்தாலான எல்லாக் கோளாறுகளுக்கும் பொதுப் பரிஹாரம்:—வேகங்களை அடக்குவதாலுண்டாகும் கோளாறுகளுக்கு ஏற்ற பரிஹார முறைகள் அநேகம் சுருக்கமாகக் கூறப்பட்டன; அப்படிச் செய்தும் வாததோஷம் பலவாறாகப் பிரகோபமடையுமாயின் அத்தோஷத்தை இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரக்கூடிய அன்ன-பான-ஔஷதங்களை உபயோகிக்கவேண்டும்.—**23, 24.**

வேகங்களில் சிலவற்றை அடக்கவேண்டும்:—ஆனால் இம்மையிலும் மறுமையிலும் நன்மையையே விரும்புபவன், ஜிதேந்த்ரியனாயிருந்து உலோபம், பொறாமை, பகைமை, பிறரது குணங்களில் வெறுப்பு, ஆசை முதலான மானஸிகவேகங்களை எப்பொழுதும் அடக்கவேண்டும்.—25.

சில தோஷங்களை வலிய வெளிப்படுத்துவதும் அவசியம்:—மேலும் வாதாதி தோஷங்களை அவ்வப்பொழுது சோதந சிகித்ஸைகளால் பரிஹரிப்பதற்கும் முயலவேண்டும்; அத்தோஷங்கள் மிதமிஞ்சி அதிகரித்தால், அவை மிகப் பிரகோபமடைந்து உயிரையும் இழக்கச் செய்யுந் தன்மையன.—26.

தோஷங்களைச் சுத்திசெய்ய சோதந சிகித்ஸைகளே ஏற்றவை:—லங்கந சிகித்ஸையினாலும்[1] பாசந சிகித்ஸையினாலும்[2] தோஷங்கள் இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரப் படுகின்றனவாயினும், அவ்வித சிகித்ஸையினால் தோஷங்கள் மீண்டும் பிரகோபமடையக்கூடும்; சோதந சிகித்ஸைகளால்[3] சுத்திசெய்யப்பட்ட தோஷங்களோ மறுபடியும் அவ்வாறு கோளாறடைவதில்லை.—27.

சோதநத்திற்குப் பிறகு பிரயோகிக்கத் தகுந்த ஔஷத முறைகள்:—இவ்வாறு சோதந சிகித்ஸை செய்த பிறகு கிரமப்படியும், அந்த ஔஷத முறைகளை அநுஸரித்தும் நற்பயனுண்டாக்கத் தகுந்தவையென்று அநுபவத்தினால் அறியப்பட்ட இரஸாயநங்களையும்,[4] விருஷ்யயோகங்களையும்[5] வைத்தியர்கள் காலமறிந்து பிரயோகிக்கவேண்டும்.—28.

ஔஷதப் பிரயோகத்திற்குப் பிறகு அனுகூலமான ஆஹாராதி கிரமம்:—ஔஷதப்பிரயோகங்களால் ஒருவாறு சிதைவுண்ட மனித

1. லங்கந சிகித்ஸை—உபவாஸம் முதலிய உபாயத்தினால் செய்யப்படும் சிகித்ஸை.

2. பாசந சிகித்ஸை—அபக்குவமான நிலைமையிலுள்ள ஆஹாரங்களை அல்லது தோஷங்களைப் பக்குவப்படுத்தும் சிகித்ஸாகிரமம்.

3. விரேசநம், வமநம் முதலியவற்றால் மலாதிகளை தேஹத்தினின்றும் வெளிப்படுத்தல் **சோதநம்** எனப்படும்.

4. இரஸாயநங்கள்—கிழத்தனம் சீக்கிரமுண்டாகாதபடி தேஹத்திற்கு வன்மையுண்டாக்கும் ஔஷதங்கள்.

5. விருஷ்ய யோகம்—சுக்ர தாதுவை விருத்தி செய்து விஷயேச்சையில் விசேஷ பலம் தரும் சிகித்ஸை.

னுக்குக் கிரமமாக ஆஹாரங்களைக் கொண்டு பிருஹ்மண சிகித்ஸை [1] செய்வது ஹிதமாம். அதெங்ஙனமெனில்:—மனதுக்கின்பமாகவும், இருதயத்திற்கு பலந்தரக்கூடியதாகவும், தீபநசக்தியை விருத்தி செய்யத்தகுந்ததுமான ஔஷதங்களைச் சேர்த்து நல்லசுவையையும் பாசந சக்தியையும் உண்டாக்குமாறுபக்குவம் செய்யப்பட்ட உணவுகளைஉபயோகிக்கவேண்டும்; அவை சம்பா அரிசி, காரரிசி, கோதுமை, பயறு, மாம்ஸம், நெய் இவற்றைக்கொண்டு செய்யப்பட்டவையாயிருப்பது நலம். இவ்வித ஆஹாரங்களை யுட்கொண்டு அவற்றுடன் அப்யங்கம், கந்தப்பொடி முதலியதைப் பூசிக்கொள்ளுதல், ஸ்நாநம் செய்தல், நிரூஹவஸ்தி [2] அநுவாஸந வஸ்தி இவைகளைப் [3] பிரயோகித்தல் ஆகியவையும் அநுகூலமானவை.—29, 30.

**வேகரோதங்களின் பரிஹாரமுறைகளாலான பிரயோஜனங்கள் :**—முற்கூறிய கிரமங்களை முறைதவறாது அநுஷ்டித்துவருபவன் ஆரோக்கியநிலைமையைப் பெறுவான்; ஜாடராக்னியும் தாதுக்களைப் பற்றிய அக்னியும் உத்தீபநமடையும்; புத்தி, தேஹ நிறம் இவை நிர்மலாகும்; சுக்லதாது விருத்தி யடைந்து ஆண்மையும் அதிகரிக்கும்; ஆயுளும் மேனமேலும் வளரும்.—31.

**ஆகந்துக ரோகங்கள் :**—பூதங்கள், விஷவஸ்துக்கள், காற்று, அக்னி இவற்றாலும், அடிபடுவதாலும், அவயவங்கள் ஒடிவதாலும் உண்டாகும் வியாதிகளும், சிற்றின்பப்பற்று, சினம், பயம் முதலியவற்றால் ஸம்பவிக்கும விகாரங்களும் ஆகந்துகரோகங்கள் [4] எனப்படும்.—32.

**நிஜாகந்து ரோகங்களைத் தடுக்கவும் போக்கவும் ஏற்றவிதி:**—எப்பிழைகளையும் புத்தி பூர்வமாகச் செய்யாமற் பரிஹரித்தல், இந்த்ரியங்களை அடக்கியாளுதல், நடந்தேறிய விஷயங்களை நினைவில் வைத்திருத்தல், தேச-கால - பிரக்ருதிகளின் [5] தன்மைகளை அறிதல், சான்றோரது நடத்தையை அநுஸரித்தொழுகுதல் என்னும் இவை

---

1. பிருஹ்மணம்—சரீரத்திற்குப் புஷ்டியைத் தரும் சிகித்ஸை.

2 நிரூஹவஸ்தி—கஷாய வகைகளால் செய்யப்படும் வஸ்தி கர்மம்.

3. அநுவாஸந வஸ்தி—தைலம், நெய் முதலிய எண்ணெய் ஸம்பந்தமான வஸ்துக்களைச் சேர்த்து செய்யப்படும் வஸ்தி கர்மம். [வஸ்தி யென்பதைப்பற்றி 10-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.]

4. ஆகந்துக ரோகங்கள்—வாத-பித்த-கபங்கள் முதலிற் கோளாறடையாமலே திடீரென்று ஸம்பவிக்கும் வியாதிகள். உதாரணம்:—அடிபடுவது, மூச்சடைப்பு முதலியதால் உண்டாகும் கோளாறுகள் அல்லது கெடுதிகள்.

5. தேசம்—ஜாங்கல ஆநூபாதி பிரதேசம்; காலம்—சீதகாலம், உஷ்ணகாலம் முதலியது; பிரக்ருதி—வாதப் பிரக்ருதி, பித்தப் பிரக்ருதி, கபப் பிரக்ருதி யெனப்படுபவை.

நிஜவியாதிகளையும்[1] ஆகந்துக வியாதிகளையும்[2] உண்டாகாமலிருக்கச் செய்யும்; அவை உண்டான வியாதிகளைப் போக்குவதற்கும் ஏற்ற விதிகளென்பதும் இங்கு விளக்கப்பட்டதாம்.—33, 34.

ருதுஸம்பந்தமான வியாதிகளைத் தடுக்கு முபாயம் :—சீதகாலத்தில் [3] சயாவஸ்த்தையடைந்த தோஷத்தை [4] வஸந்த ருதுவிலும், கிரீஷ்மருதுவில் சயத்தையடைந்த தோஷத்தை [5] வர்ஷாகாலத்திலும், வர்ஷருதுவிலுண்டானதை [6] சரத்ருதுவிலும் சீக்கிரத்தில் நன்றாய் சோதநசிகித்ஸைகளால் வெளிபடுத்துவானாயின், [7] ருதுஸம்பந்தமான வியாதிகள் அவனுக்கு என்றைக்கும் உண்டாகா.—35.

ஆரோக்கியமா யிருப்பதற்கான ஆசாரங்கள் :—எப்பொழுதும் ஹிதமான ஆஹாரங்களை யுபயோகித்து, உசிதமான தேஹ வுழைப்புகளையும் செய்துகொண்டு, நன்றாக யோசித்து எக்காரியங்களையும் நிறைவேற்றி, விஷயேச்சைகளில் பற்றில்லாதவனாய், கொடையாளியாயிருந்து கொண்டு, அனைவரிடமும் ஸமத்ருஷ்டியை வைத்து, ஸத்தியமொன்றையே பாராட்டி, பொறுமையுடன் கூடி, ஆப்தர்களுடன்சேர்ந்து வாழ்ந்துவருபவன் ஆரோக்கியவானா யிருப்பான்.-36.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

### திரவத்திரவ்யவிஞ்ஞாநீயம்.

பிறகு திரவத்திரவ்யவிஞ்ஞாநீயம் [8] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

காங்கோதகமும் அதன் குணங்களும் :—ஆகாயத்திலிருந்து நிர்மலமான வஸ்திரம் முதலியவற்றில் ஏந்தப்பட்டதும், சூரிய சந்திர கிரணங்களாலும் வாயுவாலும் பரிசிக்கப்பட்டதுமான சுத்த ஜலம்

---

1. நிஜவியாதிகள்—வாத-பித்த-கபங்கள் சீர்கேடடைந்து ஸம்பவிக்கும் ஜ்வரம், அதிஸாரம், க்ஷயம், காஸம் முதலிய ரோகங்கள்.

2. ஆகந்துகவியாதிகள்—அபிகாதங்களால் அல்லது பூதாவேசம் முதலியதால் திடீரென்று ஸம்பவிக்கும் பிணிகள்.

3. சீதகாலம்—இதனால் ஹேமந்தருது, சிசிரருது இவை குறிக்கப்படுகின்றன-என்று சிலர்; சிசிரருதுவிலேயே கபம் சயாவஸ்த்தை யடைவதால் சீதகாலம் என்பதற்கு இங்கு சிசிரருதுவென்றே பொருள் கூறுவது பொருந்தும்.

4. சிசிரருதுவில் சயாவஸ்த்தையடையும் தோஷம் **கபம்.**

5. கிரீஷ்மருதுவில் **வாயு** சயாவஸ்த்தை யடையும்.

6. வர்ஷருதுவில் சயத்தையடையும் தோஷம் **பித்தம்.**

7. கிரீஷ்மருதுவில் சயாவஸ்த்தை யடைந்த வாத தோஷத்தை சிராவண (ஆவணி) மாஸத்திலும், வர்ஷருதுவில் சயத்தையடையும் பித்தத்தை கார்த்திகை மாஸத்திலும், சிசிரருதுவில் சயமடையும் கபத்தை சித்திரைமாஸத்திலும் தாமதம் செய்யாமல் சுத்தி செய்யவேண்டும். இவ்விஷயம் பிறகு இந்நூலிலேயே விவரமாகக் குறிப்பிடப்படும்.

8. திரவபதார்த்தங்களின் ஸ்வரூபங்களையும் குணங்களையும் அறிவிக்கக் கூடிய அத்தியாயம்.

காங்கோதகம் எனப்படும். அதற்கு ஜீவநம்,[1] தர்ப்பணம்,[2] ஹ்ருத்யம்,[3] ஹ்லாதி,[4] புத்தி ப்ரபோதநம்[5] என்னும் குணங்களுண்டு; மேலும் அது நிர்மலமாகவும், சுவையற்றதாகவும், பருகுவதற்கு இன்பமாகவும், சீதவீர்யமுடையதாகவும், ஆகவே அமுதத்திற்கொப்பாகவும் இருக்கும். ஆனால், இத்தண்ணீர் ஹிதமாகவோ அஹிதமாகவோ இருப்பதானது பெரும்பாலும் தேசகாலங்களைப்[6] பொருந்தியதாயிருக்கும்.—1, 2.

**காங்கோதகத்தைப் பரீக்ஷிக்கும் முறை :**—எந்த ஜலம், ஒரு வெள்ளிப்பாத்திரத்திலுள்ள வெண்மையான சம்பா அரிசியின் அன்னத்தை நொதிக்கச் செய்யாமலும், அதற்கு நிறமாறுபாட்டையுண்டுபண்ணாமலும் இருக்குமோ அதுவே **காங்கோதகம்**[7] ஆகும். பருகுவதற்கு அதுதான் உபயோகமானது.—3.

**ஸாமுத்ரோதகம் :**—அவ்விதமில்லாவிட்டால் அந்த ஜலம் **ஸாமுத்ரம்**[8] எனப்படும்; அத்தகைய ஜலம் ஐப்பசிமாதத்தைத் தவிர்த்து இதரகாலங்களில் பருகத் தகுந்ததல்ல.[9]—3½.

**பருகுவதற்கேற்ற ஆகாயஜலம் :**—ஆகாயத்திலேயே ஏந்தப்பட்டு எவ்வகையிலும் கெடுதியுறாத ஜலத்தை[10] ஏற்றதோர் சிறந்த பாத்திரத்தில் வைத்திருந்து எப்பொழுதும் உட்கொள்ளுவதற்கு உபயோகித்துவரலாம். அவ்வித ஜலம் கிடைக்காவிடின், பெரும்பாலும் ஆகாயத்திலேந்திய ஜலத்திற்கு ஸமானமாகத் தோற்றுவதும், கறுத்து அல்லது வெளுத்து மிகச் சுத்தமாயிருக்கும் விசாலமான பிரதேசத்திலுள்ளதும், வெயில் காற்று இவற்றின் ஸம்பந்தத்தைப் பெற்றதுமான ஜலத்தை உபயோகிக்கலாம்.—4, 5.

---

1. ஜீவநம்—ஓஜோதாதுவை விருத்தி செய்வது. (ஸப்ததாதுக்களுடையவும்) ஸாரம்சமான ஒருவித உபதாது 'ஓஜஸ்' எனப்படும்.
2. தர்ப்பணம்—சரீர வாட்டத்தைப் போக்குவது.
3. ஹ்ருத்யம்—இருதயத்திற்கு பலந்தரத் தகுந்தது.
4. ஹ்லாதி—மனக்களிப்புண்டாக்குவது.
5. புத்திப்ரபோதநம்—புத்தியை விசாலப்படுத்தி அல்லது தூண்டி அதற்குத் தெளிவைக் கொடுப்பது.
6. தேசம் என்பதால், கிரஹிப்பதற்கு உபயோகிக்கப்படும் பாத்திரம் முதலியது குறிப்பிடப்படுகின்றது; காலம் என்பதால், மாரிகாலத்தின் முற்பகுதி, இடைப்பகுதி, பிற்பகுதி முதலியன குறிப்பிடப்படுகின்றன.
7. கங்கையின் தண்ணீரைப்போல் பருகுவதற்கு உபயோகமாய் நிர்மலமாயிருப்பதால் இந்த ஜலம் 'காங்கம்' என்று கூறப்படுகின்றது.
8. ஸாமுத்ரம்—ஸமுத்ர ஜலத்தைப்போல் உப்புவகைகளும் மற்றும் மலிந வஸ்துக்களும் கலந்து குடிப்பதற்கு உதவாமலிருக்கும் தண்ணீர்.
9. "ஐப்பசி மாதத்திலேயே பெரும்பாலும் காங்கோதகம் பெய்வது வழக்கம்" என்று ஸுச்ருதர்.
10. ஆகாயத்தில் ஏந்தப்படும் நிர்மலமான ஜலம் 'ஆந்தரிக்ஷோதகம்' என்றும், 'காங்கோதகம்' என்றும் வழங்கப்படும். ஆகாய ஸம்பந்தமானது ஆந்தரிக்ஷம்.

**பருகத்தகாத ஜலம் :—** சேறு, பாசி, புற்கள், இலைகள், மற்றும் மலினமான வஸ்துக்கள் இவை வியாபித்துள்ளதும், வெயில் நிலவு வாயு இவற்றின் ஸம்பந்தமற்றதும், புதிதாகப் பூமியிற் பெய்ததும், கலங்கியிருப்பதும், குருகுண முள்ளதும், நுரைத்திருப்பதும், கிருமி முதலிய ஜந்துக்களுடன் கூடியதும், மிகச் சூடாக்கப்பட்டதும், அதிக குளிர்ச்சியினால் பற்களைப் பிடித்துக்கொள்வது போலிருப்பதுமான ஜலத்தைப் பருகக் கூடாது.—6, 6½

**ஆந்தரிக்ஷஜலத்திற்கும் உபயோகிக்கத் தகாத நிலைமை :—** தகாத ருதுவிற்பெய்த ஜலம் ஆந்தரிக்ஷமாயிருந்தாலும் அதை உபயோகிக்கக்கூடாது; தகுந்த ருதுவிலும் முதலிற் பெய்த மழைநீர், சிலந்தி முதலியவற்றின் நூல்களுடையவும், மலமூத்திரங்களுடையவும், அவற்றின் விஷங்களுடையவும் சேர்க்கையினால் கெட்டுப்போயிருப்பது இயல்பாதலால், [1] அதையும் உட்கொள்ளக்கூடாது.—7½.

**ஆற்றுஜலத்தில் அநுகூலமானதும் பிரதிகூலமானதும் :—** மேற்கு ஸமுத்திரத்தை நோக்கிப் பிரவஹிப்பவையும், எங்கும் தங்காமல் வேகமாய் ஓடுபவையும், மிகத்தெளிவான தண்ணீருடன் கூடியவையுமான நதிகள் எவையோ அவை ஆரோக்கியத்திற்கு ஏற்றவையென்றும், இதற்கு மாறான ஆற்றுநீர்கள் உபயோகிக்கத் தகாதவை யென்றும் ஒருவாறு சுருங்கச் சொல்லலாம்.—8½.

**ஹிமாலய மலயபர்வதங்களிலுண்டாகும் ஆற்று நீர்களின் குணகுணங்கள் :—** ஹிமாலயத்திலும், மலயபர்வதத்திலும் உற்பத்தியாய், மேடுபள்ளமான சிலைகளில் அடிபட்டுச் சிதறுண்டு பூமியின் மீது விழுந்தோடும் நதீஜலங்கள் நன்குபயோகிக்கக் கூடியவையாம்; அதே ஜலங்கள் ஓரிடத்தில் தங்கி நிற்குமாயின் கிருமிரோகம், ச்லீபதமென்னும் யானைக்கால், இருதயத்தையும் கண்டத்தையும், சிரஸ்ஸையும் பற்றியுண்டாகும் வியாதிகள் ஆகியவற்றிருக் காரணமாகும்.—9, 10.

**பற்பல ஆற்றுநீர் முதலானதின் குணகுணங்கள் :—** கௌட தேசத்திலும், மேற்கு மலைத்தொடர்களிலும் உற்பத்தியாகும் நதிகளின் ஜலங்கள் அர்சஸ் என்னும் மூலரோகத்தை யுண்டுபண்ணும்; மஹேந்திர மலையிலுண்டாகுபவை உதரரோகங்களையும், யானைக் காலையும் உற்பத்தி செய்கின்றன; ஸஹ்யபர்வதத்திலும், விந்த்ய பர்வதத்திலும் உண்டாகும் ஆற்றுஜலங்கள் குஷ்டத்திற்கும், பாண்டுரோகத்திற்கும், சிரோவியாதிகளுக்கும் காரணமாகின்றன. பாரியாத்ர தேசத்தியவை ஸகல தோஷங்களையும் போக்கி, தேஹ வன்மையையும் புருஷத்தன்மையையும் கொடுக்கக்கூடியன; கடல் நீரானது மூன்று தோஷங்களையும் கோளாறடையச் செய்யுந் தன்மையது.—11, 12.

1. கோடைகாலம் முதலியவற்றில் ஆகாயத்தில் தூம்பு தூசுகளும் ஸூக்ஷ்மக்கிருமிகளும் வியாபித்திருக்குமாகையால், வர்ஷாகால ஆரம்பத்திலுள்ள மழைஜலம் ஆந்தரிக்ஷமானாலும் அசுத்தமாயிருக்கும்.

**கிணற்றுநீர் முதலியவற்றின் குணங்கள் :—** கிணற்று ஜலம், குளத்து ஜலம் முதலியவற்றின் குணகுணங்களை அவையிருக்கும் ஜாங்கல பூமி, ஆநூப பூமி [1] பர்வதபூமி முதலானவற்றின் தன்மைகளைக்கொண்டு நிச்சயிக்கவேண்டும்.—12½.

**ஜலபாநம் செய்யத் தகாதவர் :—** பசி மந்தப்பட்டிருப்பவரும், குன்மம், பாண்டு, உதரரோகம், அதிஸாரம், அர்சஸ், கிரஹணீ, சோபை இவற்றால் வருந்துபவரும் தண்ணீர் அருந்துவது ஆகாது; நாவறட்சி அடக்கக் கூடாமற்போனால் சொற்ப அளவில் வேண்டுமானால் தண்ணீரைக் குடிக்கலாம். வியாதியின்றி ஆரோக்கிய நிலைமையிலிருப்பவனும், சரத்ருது கிரீஷ்மருது இவற்றைத் தவிர்த்து மற்ற ருதுக்களில் மிகவும் சொற்பமாய் ஜலத்தை உபயோகிக்க வேண்டும்.—13, 14.

**போஜநம் செய்கையில் ஜலமருந்துவதன் பயன் :—** போஜனத்தின் இறுதியில் தண்ணீர் அருந்துபவர் ஸ்த்தூல தேஹிகளாகவும், போஜனத்திற்கு முன்பு ஜலமருந்துபவர் மெலிந்த சரீரமுடையவராகவும், போஜநத்தின் இடையில் உபயோகிப்பவர் நடுத்தரமான தேஹமுடையவராகவும் ஆவர்.[2]—14½.

**சீதோதக குணங்கள் :—** குளிர்ந்த ஜலமானது, மதாத்யயம், [3] தேஹவாட்டம், மூர்ச்சை, வாந்தி, சிரமம், தலைச்சுற்றல், நாவறட்சி, அழற்சி, இரக்த பித்தம், விஷவேகம் இவற்றைத் தணியச் செய்ய வல்லது.—15½.

**உஷ்ணோதக குணங்கள் :—** இளஞ்சூடான ஜலமானது தீபநம்[4] பாசநம், [5] கண்ட்யம், [6] வஸ்திசோதநம் [7] என்னும் காரியங்

---

1. ஜாங்கலம், ஆநூபம் என்னும் பிரதேசங்களைப்பற்றி 10-வது பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.

2. போஜநம் செய்யும் பொழுது முதலில் ஜலம் பருகப்படுமானால் ஜாடராக்னி மந்தப்பட்டு, ஆஹாரம் நன்கு பக்குவமாகாமல், தேஹம் மெலிவடையும். போஜனத்தின் முடிவில் உட்கொள்ளப்படுமானால் கபம் செழித்து வளர்ந்து தேஹம் ஸ்த்தூலமாகும். போஜனத்தின் இடையில் ஜலமுட்கொள்ளப்படுமானால் ஆஹாரம் நன்கு ஜீர்ணமாய் தாதுக்கள் தகுந்தவாறு போஷிக்கப்பட்டு, சரீரம் நடுநிலைமையிலுமிருக்கும் என்று அஷ்டாங்க ஸங்கிரஹம்.

3. மதாத்யயம்—அளவுமீறிய மதுபானம் முதலியவற்றால் உண்டாகும் வெறி முதலான விகாரம்.

4. தீபநம்—ஜாடராக்னியைத் தூண்டுவது. பசியை விருத்திசெய்வது.

5. பாசநம்—ஆஹாரங்களை நன்றாகப் பக்குவம் செய்ய வல்லது. ஜீர்ணம் செய்விப்பது.

6. கண்ட்யம்—தொண்டையிலுண்டாகும் கோளாறுகளைப் போக்கி அவ்வவயவத்திற்கு பலம் தரக் கூடியது.

7. வஸ்தி சோதநம்—மூத்திர மார்க்கத்தில் முக்கியமாய், மூத்திரப் பையிலுண்டாகும் தோஷங்களைப் போக்குவது, அல்லது மூத்திரத்தை தாராளமாக வெளிபடுத்தி மூதிரப்பையைச் சுத்தமாக்குவது.

ளைச் செய்யத் தகுந்தது; மேலும் விக்கல், வயிற்றுப் பொருமல், வாதரோகம், கபரோகம், நவஜ்வரம்,[1] காஸம், ஆமதோஷம்,[2] பீநஸம், ச்வாஸம், பக்கவலி இவற்றில் உபயோகிக்கத் தகுந்தது; அப்பொழுதே சோதநசிகித்ஸை செய்துகொண்டவரும் உஷ்ண ஜலத்தை உபயோகிப்பதுதான் நலம்.—16, 17.

**கோதித்து ஆறிய ஜலத்தின் குணங்கள்:**—கொதிக்கவைத்து அப்பால் தானே குளிர்ந்துபோன ஜலம்[3] அபிஷ்யந்தியாக[4] இல்லாமலும், இலகு குணமுடையதாகவும் இருக்கும். இந்த ஜலம் பித்தஸம்பந்தான கோளாறுகளில் அநுகூலமானது. மூன்று நாட்களுக்கு மேற்பட்டால் இது ஸந்நிபாதவிகாரத்தை[5] யுண்டு பண்ணும்.—18.

**இளநீரின் குணங்கள்:**—இளநீரானது ஸ்நிக்த்தம், மதுரம், விருஷ்யம்,[6] சீதவீர்யம், இலகு, தீபநம், வஸ்தி சோதநம் என்கிற குணங்களையும், நாவறட்சி-பித்தக்கோளாறு, வாத விகாரம் இவற்றைப்போக்கும் தன்மையையும் உடையதாம்.—19.

**வர்ஷாகாலங்களில் உபயோகிக்கத் தகுந்தஜலம்:**—மாரிகாலங்களில் உபயோகிப்பதற்கு திவ்யோதகம்[7] மிகச் சிறந்ததாகும்; அக்காலங்களில் ஆற்று நீர் சிறிதும் உபயோகிக்கத் தகாததாயிருக்கும்.—19½.

**பாலின் போது குணங்கள்:**—பொதுவாக எல்லாப் பாலும் சுவையிலும் விபாகத்திலும்[8] மதுரமாயிருக்கும்; ஸ்நிக்த்தகுண முள்ளது; ஓஜஸ்ஸையும்[9] இதர தாதுக்களையும்

---

1. நவஜ்வரம்—ஏழு நாட்களுக்கு உட்பட்ட ஜ்வரம்; ஆமஜ்வரம்.

2. ஆமதோஷம்—புஜித்த உணவு நன்கு ஜீர்ணமாகாமையால் ஏற்படும் ஒருவித தோஷம்.

3. இந்த ஜலம் க்வதித சீதளம் எனப்படும். **நீரைக் கொதிக்கவைக்கும் விதி**—"ஜலம் இருக்கும் தேசம், காலம், அதன் குருத்வம், லகுத்வம் முதலியதைக் கவனித்து, நாலில் ஒரு பங்காகவோ, மூன்றில் ஒரு பங்காகவோ, அரைவாசியாகவோ காய்ச்சியெடுக்கவும்; அது நிர்மலமாகவும் நுரையில்லாமலும் இருக்கவேண்டும்;"—அஷ்டாங்க ஸங்கிரஹம்.

4. அபிஷ்யந்தி—பசையினாலும் குருகுணத்தினாலும் ரஸாயனிகள் என்னும் குழாய்களைப் பூரிப்பித்துச் சரீரத்தில் ஒருவிதமான செழிப்பை யுண்டுபண்ணும் குணம்.

5. ஸந்நிபாத் விகாரம்—மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோளாறடைந்த நிலைமை.

6. விருஷ்யம்—3-வது பக்கத்தில் மூலமும் டிப்பணியும் பார்க்க.

7. திவ்யோதகம்—ஆகாயத்தில் ஏந்தப்படும் தண்ணீர்; ஆந்தரிக்ஷம் என்றும் கூறப்படும்.

8. விபாகம்—இதைப்பற்றிபத்தாம் அத்தியாயத்தில்விவரம் காண்க.

9. ஓஜஸ் என்னும் முக்கியமான ஓர் உபதாதுவை விருத்தி செய்யக்கூடியது "ஓஜஸ்யம்" எனப்படுகிறது; ஓஜஸ் என்பது இவ்விதமான தென்று இக்கிரந்தத்திலேயே பிறகு விளக்கமாகக் கூறப்படும்.

விருத்திசெய்யும்; வாத-பித்தங்களைப் போக்கும்; விருஷ்யம்;[1] கபத்தை யுண்டுபண்ணும்; குரு; சீதவீர்யம்.—20, 20½.

**பசுவின் பாலின் குணங்கள்:**—இவற்றுள் பசுவின் பால் ஜீவநீயம்,[2] இரஸாயநம்[3], மேத்யம்,[4] பல்யம்,[5] ஸ்தந்யகரம்[6], ஸரம் என்னுங் குணங்களுடையது; க்ஷத-க்ஷீண ரோகிகளுக்கு[7] ஹிதமானது; மேலும் சிரமம், தலைச் சுற்றல், வெறி, அலக்ஷ்மீகரமான பொலிவின்மை, ச்வாஸம், காஸம், அதிக நாவறட்சி, அபரிமிதமான பசி, நீடித்த நாட்களாய்த் தொடர்ந்திருக்கும் ஜ்வரம், மூத்ரக்ருச்சிரம் என்னும் நீர்ச்சுருக்கு, இரக்தபித்தம் இவற்றைப் போக்குங் குணமும் இதற்குண்டு.—21, 22½.

**எருமைப்பாலின் குணங்கள்:**—எருமைப்பால் அதிக குருகுணமும் சீதவீர்யமுமுள்ளது; அது அபரிமிதமான பசியினாலும், தூக்கமின்மையினாலும் துன்பப்படுபவருக்கு ஹிதமானது.—23.

**வெள்ளாட்டுப்பாலின் குணங்கள்:**—வெள்ளாடுகள் தண்ணீரைச் சொற்பமாகப் பருகுவதாலும், அதிகமாக ஓடியாடித் திரிவதாலும், காரமும் கைப்புமுள்ள ஔஷதிகளை மேய்வதாலும் அவற்றின் பால் இலகு குணமுடையதாகும்; அது க்ஷயம், ஜ்வரம், ச்வாஸம், இரக்தபித்தம், அதிஸாரம் இவற்றைப் போக்கும்.—24.

**ஒட்டகப் பாலின் குணங்கள்:**—ஒட்டையின் பால் சிறிது ரூக்ஷமும், உஷ்ண வீர்யமும், சற்று இலவணரஸமும் உடையதாய், தீபநம் இலகு என்னும் குணங்களுடையதாயிருக்கும்; வாதரோகம், கபரோகம், வயிற்றுப்பொருமல், கிருமிதோஷம், நீர்க்கோவை, மஹோதரம், அர்சஸ்[8] இந்த ரோகங்களில் உபயோகிக்கத் தகுந்தது.—25.

**முலைப்பாலின் குணங்கள்:**—ஸ்த்ரீகளுடைய முலைப்பால் தர்ப்பணம்,[9] ஆச்சியோதநம்,[10] நஸ்யம்[11] என்னும் இச்சிகித்ஸாகிரமங்களில் உபயோகித்தால் அது வாதரோகம், இரக்தபித்தம், அபிகாதம்,[12] நேத்திர ரோகங்கள் இவற்றைப் போக்கவல்லது.—25½.

---

1. விருஷ்யம்—இதைப்பற்றி 3-வது பக்கத்தில் வாஜீகரண சிகித்சை யென்பதையும், 37-வது பக்கத்தில் விருஷ்யயோகம் என்பதையும் பார்க்க.
2. ஜீவநீயம்—ஜீவசக்தியை விருத்தி செய்யுங்குணம்.
3. இரஸாயநம்—3-வது பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.
4. மேத்யம்—புத்திவிசேஷத்தை விருத்தி செய்யும் தன்மை.
5. பல்யம்—வன்மையளிக்குந்தன்மை.
6. ஸ்தந்யகரம்—முலைப்பாலை யுண்டாக்குவது.
7. க்ஷதம்—இரத்தத்தைக் கக்கும் காஸரோகம்; க்ஷீணம்-க்ஷயரோகம்.
8. அர்சஸ்—மூலரோகம்.
9. தர்ப்பணம்—இதைப்பற்றி 24-வது அத்தியாயம் பார்க்க.
10. ஆச்சியோதநம்—24-வது அத்தியாயம் பார்க்க.
11. நஸ்யம்—20-வது அத்தியாயம் பார்க்க.
12. அபிகாதம்—அடிமுதலியது தாக்குதல்.

**செம்மறியாட்டுப் பாலின் குணங்கள் :—** *செம்மறியாட்டுப் பால் உஷ்ணவீர்யம்; இருதயத்திற்கு அஹிதமானது; வாத வியாதிகளைப் போக்கும்; விக்கல், ச்வாஸம், பித்தம், கபம் இவற்றை விருத்திசெய்யும்.—26½.*

**யானைப்பாலின் குணம் :—** *யானையின் பால் உபயோகிக்கப்படுமானால், தேஹத்திற்கு வன்மையை யுண்டுபண்ணும்.—27.*

**ஒற்றைக் குளம்புள்ள மிருகங்களுடைய பாலின் குணங்கள் :—** *ஒற்றைக் குளம்புடைய மிருகங்களின் [1] பாலானது மிகவும் உஷ்ணவீர்யமுள்ளது; இலகு குணமுடையது; சாகைகளிலுண்டாகும் [2] வாதரோகங்களைப் போக்கக்கூடியது; சிறிது அம்லமும் இலவணமும் கலந்த சுவையுடையது; தேஹத்தில் திமிர் முதலியதை விருத்தி செய்யுந் தன்மையது.—27½.*

**காய்ச்சிய பால் காய்ச்சாத பால் இவற்றின் குணங்கள் :—** *காய்ச்சிப் பக்குவம் செய்யாத பாலானது அபிஷ்யந்தியாகவும், [3] குரு குணமுள்ளதாகவும் இருக்கும். முறைப்படிக் காய்ச்சிய பால் அதற்கு நேர் மாறான குணமுடையதாம். [4]—28.*

**மிதமிஞ்சிக் காய்ச்சிய பால்-தாரோஷ்ணம் இவற்றின் குணங்கள் :—** *மிதமிஞ்சிக் காய்ச்சிய பால் குணத்தில் மிகவும் அதிக குருவாய்விடுகிறது.* **தாரோஷ்ணமான பால்** [5] *குணத்தில் அமுதத்திற்கொப்பானது.—28½.*

**தயிரின் குணங்கள்:—** *தயிர் சுவையிலும் விபாகத்திலும் அம்லமானது; கிராஹீ, [6] குரு, உஷ்ணம், வாதஹரம், ரோசிஷ்ணு [7] என்னும் குணங்களுடையது; கொழுப்பு, சுக்ரம், தேஹபலம், கபம், இரக்தபித்தம், ஜாடராக்னி, சோபையென்னும் சோகை இவற்றை யுண்டுபண்ணும்; அரோசகத்தைப் போக்க உபயோகமானது; குளிருடன் உண்டாகும் விஷமஜ்வரத்திலும், பீநஸத்திலும், மூத்ரக்ருச்ரத்திலும் நன்மை பயக்கும்; கிரஹணீரோகத்தில் ரூக்ஷமான தயிர் [8] உபயோகமானதாம். 29—30½.*

**தயிரை உபயோகிக்கவேண்டிய விசேஷவிதிகள் :—** *தயிரை இரவில் உபயோகிக்கக்கூடாது; வஸந்தருதுவிலும், கிரீஷ்மருதுவிலும்,*

---

1. *ஒற்றைக் குளம்புடைய மிருகங்கள்— குதிரை, கழுதை முதலியன.*
2. *சாகைகள்—கை கால்களுக்கும், இரஸத்தைத்தவிர்த்து மற்ற ஆறு தாதுக்களுக்கும், சர்மத்திற்கும் சாகைகள் என்று பெயர்.*
3. *அபிஷ்யந்தி—43-வது பக்கம் பார்க்க.*
4. *காய்ச்சியபால் அநபிஷ்யந்தி (கபம் முதலியதைச் செழிக்கச் செய்யாதது), இலகு என்னும் குணங்களுடையதாம்.*
5. *தாரோஷ்ணம்— கறந்தவுடனே சூடாயிருக்கும் கலப்பில்லாதபால்; கறந்த சூடு ஆறுவதற்கு முன்பே இதை உட்கொள்வது வழக்கம்.*
6. *கிராஹீ—இளகிய மலம் முதலியவற்றை இறுகச்செய்யும் குணம்.*
7. *ரோசிஷ்ணு—நாக்கில் நற்சுவை யுண்டுபண்ணுந்தன்மை.*
8. *ரூக்ஷமான தயிர்—வெண்ணெய் நீக்கிய தயிர்.*

சரத்ருதுவிலும் அது உபயோகிக்கக் கூடியதல்ல; அதைஉஷ்ண மாகச் செய்தும் உபயோகிக்கக்கூடாது. பயறு, துவரம்பருப்பு, தேன், நெய், கற்கண்டு,நெல்லிக்கனி இவற்றில் ஏதேனும் ஒன்றோடு தயிரை உபயோகிக்கவேண்டுமே யன்றி, அதைத் தனியாய் உபயோகிக்கக்கூடாது. அதை தினந்தோறும் உபயோகிப்பதும் பிசகு; அதிகமாகவும் உபயோகிக்கக்கூடாது; இதற்கு மாறுகச் செய்தால் ஜ்வரம், இரக்த பித்தம், விஸர்ப்பம், குஷ்டம், பாண்டு, தலைச்சுற்றல் இவையுண்டாகும். 31—32½.

மோரின் குணங்கள்:—மோரானது இலகு, சிறிது துவர்ப்புடன் கூடிய புளிப்பு, தீபநம், கபவாதஹரம் என்னும் குணங்களை யுடையது. இது சோபையென்னும் நீர்க்கோவை, மஹோதரம், அர்சஸ், கிரஹணீதோஷம், நீர்ச்சுருக்கு, அரோசகம், ப்லீஹம், குன்மம், இவற்றைத் தீர்க்கும்; கிருதபாநம் அமிதமாகச் செய்யப்படுவதா லுண்டாகும் தீங்குகள், கரவிஷம்,[1] பாண்டு என்னும் இவற்றையும போக்கும்—33, 34.

மஸ்துவின் குணங்கள்:—மஸ்துவுக்கும்[2] மோருக்குள்ள குணங்களெல்லாம் இருப்பதுடன், ஸ்ரோதஸ்ஸுகளைச்[3] சுத்தி செய்யும்; வயிற்றுப் பொருமலைப் போக்கும்; இலகுகுணமுள்ளது.—34½.

நவநீதத்தின் குணங்கள்:—புதிதாகக் கடைந்தெடுத்த வெண்ணெயானது விருஷ்யம், சீதவீர்யம், ஸங்க்ராஹீ[4] என்னும் குணங்களுடையது; சரீரத்திற்கு நல்ல நிறத்தையும், வன்மையையும், ஜாடராக்னியையும் உண்டுபண்ணும்; வாதம், இரக்தபித்தம்,க்ஷயம் அர்சஸ், அர்திதம்,[5] காஸம் இவற்றைப் போக்கக்கூடியது.—35½.

பாலிலிருந்தெடுத்த வெண்ணெயின் குணங்கள்:—பாலிலிருந்து எடுக்கப்படும் வெண்ணெய்க்கு ஸங்க்ராஹீ யென்னுங்குணமும், இரக்தபித்தம், நேத்திரரோகம்[6], இவற்றைப் போக்குந்தன்மையும் உண்டு.—36.

கிருதத்தின் குணங்கள்:—நெய்யானது புத்தி, விஷயக்கிரஹண சக்தி, ஞாபக சக்தி, தாரணசக்தி, அக்னிபலம், ஆயுர்பலம், சுக்ரம் இவற்றை விருத்தி செய்யும்; நேத்திரத்திற்கு நன்மை, பாலர், வயதுமுதிர்ந்தவர், ஸந்தாநாபிவ்ருத்தியை விரும்புபவர், சரீரகாந்

1. கரவிஷம்—ஸாதாரணமான சரக்குகள் ஒன்றோடொன்று சேர்வதாலோ அல்லது வேறு வகையினுலோ உண்டாகும் விஷம். இதையே கிருத்ரிமவிஷமென்பார்கள்.

2. மஸ்து—தயிர் அல்லது மோரின் மேலுள்ள தெளிவு

3. ஸ்ரோதஸ்ஸுகள்—இந்த்ரியமார்க்கங்களும் இரத்தக்குழாய் முதலியவையுமாம்.

4. ஸங்க்ராஹீ— க்ராஹீ: அதாவது மலம் முதலியதை இறுக்கிக் கட்டுங்குணம்.

5. அதிர்தம்—16-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

6. நேத்திரரோகம்—கண்களைப்பற்றிய வியாதிகள்.

தியையும் அழகையும் நல்ல குரலையும் அபேக்ஷிப்பவர், க்ஷதகாஸமுள்ளவர், க்ஷயரோகிகள், விஸர்ப்பத்திஞலோ சஸ்திரங்களாலோ அக்னியிஞலோ வாட்டமடைந்த சரீரமுடையவர்கள் ஆகியவர்களுக்கும் அநுகூலமானது. வாதம், பித்தம், விஷம், உன்மாதம் என்னும் பைத்தியம், க்ஷயம், ஜ்வரம் இவற்றையும் மற்றும் இதரபிணிகளின் அவக்குறிகளையும் போக்கக்கூடியது. ஸ்நேஹத் திரவ்யங்களுக்குள் நெய்யே உத்தமமானது; சீதவீர்யமும், ஆயுளுக்கு மிகவும் தார்ட்யமுண்டு பண்ணும் தன்மையும் இதற்கு உண்டு. அந்தந்த முறைப்படி பக்குவம் செய்யப்பட்ட நெய்யானது ஆயிரமடங்கு அதிகமான வீர்யத்தைப் பெற்று அநேகவிதமான சிகித்ஸைகளில் உபயோகிக்கக் தகுந்ததாயிருக்கும்.—37—39.

**புராணகிருதத்தின் குணங்கள்:**—புராணகிருதமானது [1] வெறி, அபஸ்மாரம், மூர்ச்சை, சிரஸ்ஸையும், காதுகளையும், நேத்திரங்களையும், யோனியையும் ஆச்ரயித்துண்டாகும் வியாதிகள் ஆகியவற்றைப் போக்கும்; விரணங்களைச் சுத்தி செய்வதற்கும் ஆற்றுவதற்கும் தகுந்தது.—40.

**கிலாடாதிகளின் குணங்கள்:**—கிலாடம், [2] பீயூஷம், [3] கூர்ச்சிகை, [4] மோரணம் [5] முதலியவை பல்யமானவை. [6] சுக்ரம் நித்திரை கபம் இவற்றையுண்டுபண்ணும்; குருகுணமுள்ளவை; விஷ்டம்பீ [7], தோஷலம் [8] என்னும் தீமைகளும் அவற்ருல் உண்டாம்.—41.

**பால் நெய்களில் சிறந்தவையும் இழியவையும்:**— பசுவின் பாலும் நெய்யும் சிறந்த குணமுடையவையாம். செம்மறியாட்டுப் பாலும் நெய்யும் குணத்தில் இழியவையாகும்.—41½.

**கருப்பஞ்சாற்றின் குணங்கள்:**—கருப்பஞ்சாருனது குரு, ஸ்நிக்த்தம், பிருஹ்மணம், [9] விருஷ்யம், சீதவீர்யம், ஸரம் [10] என்னும்

1. புராண கிருதம்—வெகு நாள் பழகிய சுத்தமான நெய்.

2. கிலாடம்—சிறிதளவு பாலில் அதிக மோரை சேர்த்து பக்குவம் செய்யப்படும் ஒருவித தயிர்.

3. அப்பொழுதே கன்றையீன்ற பசுவின் பாலைக் கொண்டு பக்குவம் செய்த தயிர் "பீயூஷம்" எனப்படும்.

4. கூர்ச்சிகை—தயிரையும் மோரையும் பாலில் சேர்த்து பக்குவம் செய்யப்படுவது.

5. மோரணம்—கிலாடத்தைக் கடைவதாலுண்டாகும் ஒரு திரவம்.

6. பல்யம்—பலத்தை விருத்தி செய்யுந் தன்மை.

7. விஷ்டம்பீ—மலமூர்த்திராதிகளைக் கட்டி வயிற்றுப் பொருமல் முதலானதுகளை யுண்டுபெண்ணுங்குணம்.

8. தோஷலம்—வாதபித்த கபங்களைக் கோளாறடையச் செய்யுந் தன்மை.

9. பிருஹ்மணம்—38-வது பக்கம் பார்க்க.

10. ஸரம்—5-வது பக்கம் பார்க்க.

குணங்களுடையது; கபத்தையும் மூத்திரத்தையும் விருத்தி செய்யக்கூடியது; சுவையிலும் விபாகத்திலும் மதுரமானது; இரக்தபித்தத்தையும் போக்கும். கரும்பின் முனையும் சர்மமும் இலவணரஸமுடையவை. பற்களால் மத்தியிற் கடிக்க அவை இனிப்பாகவும் இருக்கும்.—42, 43.

யந்திரத்திலிட்டு ஆட்டிய கருப்பஞ்சாற்றின் குணங்கள் :—யந்திரத்திலிட்டு ஆட்டியெடுத்த கருப்பஞ்சாற்றில் கரும்பின் அடி, முனை, பூச்சிகள் எரித்த பாகம் முதலியவைவையும் நசுக்கப்பட்டு அந்த அம்சங்களும் சேர்ந்து விடுமாகையாலும், சிறிது நேரம் பாத்திரத்திலேயே தங்கியிருக்கும்படி நேரிடுவதாலும் அந்த இரஸம் ஒருவாறு கெட்டுப்போகும். ஆகையினால் இவ்விதமான கருப்பஞ்சாறு விதாஹீ,[1] குரு, விஷ்டம்பி என்னும் குணங்களுடையதாகும். 44, 44½.

கரும்புகளின் பேதங்களும் அவற்றின் குணங்களும்:—பௌண்ட்ரகம் என்னும் நாமக்கரும்பு குளிர்ச்சியினாலும், தெளிவாலும், இனிய சுவையினாலும் குணங்களிற் சிறந்ததாகும்; வாம்சிகமென்னும் மூங்கிற்கரும்பு குணங்களில் அதைவிடக் குறைந்ததாம்; சதபர்வா என்னும் நூறு கணுக்களுள்ள கரும்பு, பேய்க்கரும்பு, நேபாளக்கரும்பு முதலியவை க்ஷாரத்தன்மையிலும், துவர்ப்பான சுவையிலும் உஷ்ணவீர்யத்திலும், விதாஹகுணத்திலும் முறையே ஒன்றன்மேலொன்று அதிகப்பட்டுவருவதால் இவற்றின் சாறு கிரமமாக அதிக ஹீநகுணங்களுடையவையெனக் கருதப்படுகின்றன. 45, 46.

பாணிதத்தின் குணங்கள்:—பாணிதமானது[2] குரு, அபிஷ்யந்தி, த்ரிதோஷகரம், மூத்திரசோதநம் என்னும் குணங்களுடன் கூடியதாம்.—46½.

சுத்த வெல்லத்தின் குணங்கள்:—அழுக்குகளை அகற்றி சுத்தம் செய்த வெல்லம் கபத்தை அதிகமாக விருத்தி செய்யாமல், மலமூத்திரங்களை நன்கு வெளிப்படுத்தக்கூடியது.—47.

அசுத்த வெல்லத்தின் குணங்கள்:—அவ்விதம் சுத்தி செய்யப்படாத வெல்லமானது கிருமிகளையும், மஜ்ஜையென்னும் தாதுவையும், இரத்ததோஷத்தையும், மாம்ஸதோஷத்தையும், கபத்தையும் மிகவும் அதிகப்படுத்தும்.—47½.

பழைய வெல்லம் புதிய வெல்லங்களுடைய குணங்கள்:—தகுந்தவாறு பழகிய வெல்லமானது ஹ்ருத்யமாகவும்,[3] பலவிதங்களில்

---

1. விதாஹீ—குடலில் நன்கு ஜீர்ணமாகாமல் உள்ளே அழற்சியைக் கொடுக்கக் கூடியது.

2. பாணிதம்—அதிக கெட்டியாகாமல் பக்குவம்செய்யப்பட்ட சிறிது திரவமான வெல்லம்; வெல்லப்பாகு என்றும் கூறலாம்.

3. ஹ்ருத்யம்—இருதயத்திற்கு ஹிதமானது.

*உபயோகிக்கத்தகுந்த நற்குண முடையதாகவும் இருக்கும்.* புதிய வெல்லம் *கபத்தை விருத்திபண்ணும்.*—48.

அசுத்த சர்க்கரை, கற்கண்டு, வெண்சர்க்கரை இவற்றின் குணங்கள் :—*சுத்தம்செய்யாத சர்க்கரை, கற்கண்டு, வெண் சர்க்கரை இம்மூன்றும் விருஷ்யம், க்ஷதக்ஷீணஹிதம்,*[1] *இரக்தபித்தஹரம், வாதஹரம் ஆகிய குணங்களில் மேன்மேலும் சிறந்தவை.*—49.

யாஸசர்க்கரையின் குணங்கள்:—*யாஸசர்க்கரையானது*[2] *சிறிது கசப்பு கலந்த மதுர ரஸமுள்ளதாகவும், சிறிது துவர்ப்பாகவும், ஸாதாரண சர்க்கரைக்கான மற்ற குணங்களுடன் கூடியதாகவும் இருக்கும்.*—49½.

சர்க்கரைகளுடைய போது குணங்கள்:—*ஸகல சர்க்கரைகளும்*[3] *அழற்சி, நாவரட்சி, வாந்தி, மூர்ச்சை, இரக்தபித்தம் இவற்றைப் போக்குங் குணமுடையவை.*—50.

கருப்பஞ்சாற்றின் திரிபான வஸ்துக்களுள் சிறந்ததும் இகழ்ந்ததும்:—*கருப்பஞ்சாற்றால் பக்குவம் செய்யப்படும் முற்கூறிய பதார்த்தங்களுள்* சர்க்கரை *குணங்களிற் சிறந்தது;* பாணிதம் *குணத்திற் குறைந்ததாம.*—50½.

தேன்-மதுசர்க்கரை இவற்றின் குணங்கள்:—(1)*தேன் சக்ஷுஷ்யம்,*[4] *சேதி,*[5] *விரணசோதநம்,*[6] *ஸந்தாநம்,*[7] *ரோபணம்,*[8] *வாதலம்,*[9] *ரூக்ஷம் என்னும் குணங்களுடையதாம்; நாவரட்சி, கபக்கோளாறு, விஷ ஸம்பந்தமான தீங்குகள், விக்கல், இரக்தபித்தம், பிரமேஹம், குஷ்டம், கிருமிதோஷம், வாந்தி, ச்வாஸகாஸம் இவற்றைப் போக்*

---

1. *இருமலில் இரத்தமும் வெளிவருமானால் அது க்ஷதம் அல்லது க்ஷதகாஸம் எனப்படும்; அவ்வித இருமலாலும் க்ஷயத்தினாலும் வருந்துபவனுக்கு ஹிதமானது க்ஷதக்ஷீணஹிதம் எனப்படுகிறது. அல்லது க்ஷதம் என்றால் அடிபடுதல்; அவ்வித அபிகாதத்தினால் உண்டாகும் க்ஷயத்துக்கு அநுகூலமானது என்றும் கூறலாம்.*

2. *யாஸசர்க்கரை—இனிய சுவையுள்ள ஒருவித புல்லின் சாற்றிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரை.*

3. *ஸகல சர்க்கரைகளும் என்பதால் திராக்ஷை முதலியதிலிருந்து கிரஹிக்கப்படும் மற்றச் சர்க்கரைகளும் குறிப்பிடப்படுகின்றன.*

4. *சக்ஷுஷ்யம்—நேத்திரங்களுக்கு ஹிதமானது.*

5. *சேதி—கபம் முதலியதை அறுத்து வெளிப்படுத்துங்குணம்;* சேதநம் *என்றும் கூறப்படும்.*

6. *விரணசோதநம்—விரணங்களில் சீழ்முதலியது உண்டாகாதபடி அவற்றைச் சுத்தம் செய்வது.*

7. *ஸந்தாநம்—விரணங்களால் பிளவுபட்டுள்ள பாகங்களைக் கூட்டி வைத்தல். ஒடிந்து போன எலும்புகளையும் சேர்ப்பிக்குங் குணம்.*

8. *ரோபணம்—விரணங்களை ஆற்றுங்குணம்.*

9. *வாதலம்—வாததோஷத்தை விருத்திசெய்வது.*

கும்; சிறிது துவர்ப்பு கலந்த மதுரரஸமுள்ளது. (2) மதுசர்க்கரையும்[1] இதே குணங்களையுடையது. 51—52½.

**தேனை உஷ்ணநிலைமையில் உபயோகித்தல்**—(1) தேனை உஷ்ணமாகவோ, உஷ்ணமான பதார்த்தங்களோடு கலந்தோ, உஷ்ணகாலத்திலோ உபயோகித்தாலும், உஷ்ணமதிகரித்ததால் வருந்துபவனுக்குக் கொடுத்தாலும் அது மிகத் தீங்கு விளைவிக்கும். ஆனால் நிரூஹவஸ்தியிலும், [2] வமநவிதியிலும் உஷ்ணமான தேனைப் பரிஹரிக்கவேண்டிய அவசியமில்லை; ஏனெனில் அவ்விதமாய் உபயோகிக்கையில் தேன் ஜீர்ணமாகமலே சீக்கிரம் வெளியாய்விடுகின்றது.—53, 54.

**தைலங்களின் பொது குணங்களும், திலதைலத்தின் குணங்களும்**:—ஸகல **தைலமும்** அவை எந்தெந்த வஸ்துக்களிலிருந்து கிரஹிக்கப்படுகின்றனவோ அவற்றிற்கேற்ற குணங்களுடையனவாயிருக்கும். அவற்றுள் **முக்கியமான தைலம்**[3] தீக்ஷ்ணம்,[4] வியவாயி[5], அசக்ஷுஷ்யம்[6], ஸௌக்ஷ்மம்,[7] உஷ்ணவீர்யம் என்னும் குணங்களுடையதாம். ஆகவே கபத்தை விருத்திசெய்யாது; சர்மதோஷங்களையுண்டுபண்ணும்; இளைத்திருப்பவருக்கு ப்ருஹ்மணமாகவும், ஸ்த்தூலதேஹிகளுக்குக் கர்சநமாகவும்[8] இது உபயோகிக்கக்கூடியது.[9] மலச்சிக்கலுண்டுபண்ணும். இதற்குக் கிருமிஹர குணமுமுண்டு. மேலும் முறைப்படி பக்குவம் செய்யப்படுமாயின் ஸந்நிபாத விகாரங்களைப் போக்கும்.—55, 56.

---

1. மதுசர்க்கரை—தேனிலிருந்து எடுக்கப்படும் சர்க்கரை.

2. நிரூஹவஸ்தி—கஷாயவகைகளைக் குதமார்க்கத்தினால் உட்செலுத்தி குடலைக் கழுவும் முறை.

3. முக்கியமானதைலம்—எள்ளெண்ணெய்; திலம்—எள்; எள்ளிலிருந்து எடுக்கப்படுவதால் தைலம் எனப் பெயர் வந்தது. ஆகவே இது முக்கியமானதென்று கூறப்பட்டது. தைலம் என்பது எள்ளிலிருந்து எடுக்கப்படுவதற்கே பொருத்தமான பெயர்.

4. தீக்ஷ்ணம்—வேகமாக அந்தந்த தாதுக்களில் பிரவேசித்து அதனதன் வேலையை ஜடிதியில் நிறைவேற்றுங் குணம்.

5. வியவாயி—எந்த வஸ்துவானது உட்கொள்ளப்பட்டவுடனே முதலில் தனது வீர்யத்தை உடலிற் பரவச்செய்து, தன் குண விசேஷத்தைக் காட்டி, பிறகு ஜீர்ணமாகுமோ அப்பதார்த்தத்தின் குணம்.

6. அசக்ஷுஷ்யம்—கண்களுக்கு ஆகாதது.

7. ஸௌக்ஷ்மம்—தேஹதாதுக்களில் மிகவும் நுட்பமான பாகங்களிலும் அல்லது மிக நுண்ணிய இரத்தக்குழாய் முதலியவற்றிலும் ஊடுருவி வியாபிக்கக்கூடியது.

8. கர்சநம்—இளைக்கச் செய்வது; தேஹதாதுக்களைச் சிதையச் செய்வது.

9. தைலமானது (நல்லெண்ணெய்) குறுகிய அல்லது சுருங்கிப் போன ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் குழாய்களில் (தீக்ஷ்ணாதி குணங்களினால்) சீக்கிரம் பிரவேசித்து, அங்குள்ள தோஷங்களை வெளிப்படுத்தும்;

ஆமணக் கெண்ணெயின் குணங்கள் :—ஆமணக்கெண்ணெய் சிறிது கைப்பும் காரமும் இனிப்புமான சுவையுடையது; ஸரம், குரு என்னும் குணங்களையும் பெற்றது; வர்த்மா என்னும் அண்டவ்ருத்தி, குன்மம், வாயு, கபம், மஹோதரம், விஷமஜ்வரம் இவற்றைத் தீர்க்கவல்லது; இடுப்பையும், குஹ்யஸ்த்தாநத்தையும், கோஷ்டமென்னும குடலையும், முதுகையும் ஆச்ரயித்துண்டாகும் வலியையும் வீக்கத்தையும் இத்தைலம போக்கிவிடும்.—57, 57½.

சிவந்த ஆமணக் கெண்ணெயின் குணங்கள் :—சிவந்த ஆமணக்கிலிருந்து உண்டான எண்ணெயானது அதிக தீக்ஷ்ணமும், அதிக உஷ்ணவீர்யமும், அதிகமாகக் குழைந்து வழுவழுப்புள்ள தன்மையும் உடையது.—58.

கடுகெண்ணெயின் குணங்கள் :—கடுகெண்ணெயானது சுவையில் கார்ப்பு; தீக்ஷ்ணம் இலகு என்னுங் குணங்களுடையது; வீர்யத்தில் உஷ்ணமானது; இதனால் கபம், சுக்ரம், வாதம், கோடம்,[1] குஷ்டம், அர்சஸ், விரணம், கிருமிகள் இவை நிவ்ருத்தியாகும்; இரக்தபித்தத்தை இது உண்டாக்கும்.—59.

தான்றிக்கா யெண்ணெயின் குணங்கள் :—தான்றிக்கா யெண்ணெய் மதுரரஸம், சீதவீர்யம், குரு, பித்தஹரம், வாதஹரம், கேச்யம் [2] என்னுங் குணங்களுடையது.—59½.

வேப்பெண்ணெயின் குணங்கள் :—வேப்பெண்ணெயானது, சிறிது உஷ்ணவீர்யமும், கைப்பும், கிருமிஹரம், குஷ்டஹரம், கபஹரம் என்னுங் குணங்களு முடையதாம்.—60.

காசாம்பூத்தைலம், குஸூம்பா எண்ணெய் இவற்றின் குணங்கள் :—காசாம்பூத் தைலமும், குஸூம்பா எண்ணெயும் உஷ்ணவீர்யமாகவும், சர்மவியாதிகள் கபதோஷம் பித்த தோஷம் இவற்றை யுண்டுபண்ணுங் குணமுள்ளவையாகவும் இருக்கின்றன.—60½.

வஸா, மஜ்ஜை, மேதஸ் இவற்றின் குணங்கள் :— வஸா[3], மஜ்ஜை [4] என்னும் இவ்விரண்டு ஸ்நேஹங்களும் [5] வாதஹரங்களாக

---

ஸ்ரோதஸ்ஸுகள் சுத்தியாகவே போஷணைக்கு அவசியமான வஸ்துக்கள் தேஹத்தில் நன்கு வியாபித்து, ப்ருஹ்மணம் (புஷ்டி) உண்டாகும். அவ்விதமே ஸூக்ஷ்ம ஸ்ரோதஸ்ஸுகளில் பிரவேசித்து தீக்ஷ்ணாதி குணங்களால் கொழுப்பு முதலானவற்றைக் கரைத்து அவற்றைக் குறையச் செய்து, தேஹத்தை இளைக்கச்செய்து இயற்கை நிலைமையை யுண்டுபண்ணும்.

1. கோடம்—சரீரமெங்கும் தினவை யுண்டுபண்ணிக்கொண்டு வியாபிக்கும் படை.

2. கேச்யம்—தலைமயிரை வளரச் செய்யுங்குணம்.

3. வஸா—சுத்தமாம்ஸத்திலிருந்து கிரஹிக்கப்படும் ஒருவித எண்ணெய்.

4. மஜ்ஜை—4-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

5. ஸ்நேஹம்—நெய், எண்ணெய், கொழுப்பு முதலிய எல்லாத் தைலவகையும் ஸ்நேஹம் எனப்படும்.

வும், பலம் பித்தம் கபம் இவற்றை விருத்தி செய்யுந் தன்மையன வாகவும், மற்ற விஷயங்களில் அந்தந்த ஜந்துவின் மாம்ஸங்களுக் குண்டான குணத்தைப் பொருந்தியவையாகவும் இருக்கின்றன. மேதஸ் என்னும் கொழுப்பும் இவ்விரண்டுக்கும் ஸமானமான குணங்களுடையதென்றே அறிக.—61, 61½.

மதுவகைகளின் பொது குணங்கள் :—மத்ய மென்னும் மதுவா னது தீபநம்[1], ரோசநம்[2], தீக்ஷ்ணம்[3], உஷ்ணம், ஸரம்[4], இலகு, ருக்ஷம்,[5] ஸௌக்ஷ்மம்,[6] ஸ்ரோதோவிசோதநம்,[7] வாதஹரம், கப ஹரம் என்னும் குணங்களையுடையது; மனக்களிப்பையுண்டாக் கும்; தேஹத்திற்கும் புஷ்டியைத் தரும்; இனிப்பு, சிறிது துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு என்னும் இரஸங்களுடன் கூடியது; அம்லவிபாக மடையும்; குரலையும், பொதுவில் ஆரோக்கியத்தையும், பிரதிபை யென்னும் புத்திவிசேஷத்தையும், தேஹநிறத்தையும் விருத்தி செய்யும்; தூக்கமின்மையினாலும் அதிநித்திரையினாலும் வருந்துப வருக்கு ஹிதமானது; பித்தத்தையும் இரத்தத்தையும் தூஷிப்பிக் கும்; மெலிந்த தேஹிகளுக்கும் ஸ்தூலித்தவருக்கும ஒருங்கே உபயோகமானது. மதுவை முறைதவருமற் பருகினல் முற்கூறிய குணங்கள் உண்டாகும்; இல்லையேல் அது விஷத்திற்குச் சமானமா னது. 62—64½.

நூதன புராதன மத்யங்களின் குணங்கள் :—புதிய மதுவானது[8] குருகுணம் அதிகரித்ததாகவும், ஸந்நிபாத விகாரத்தை உண்டு பண்ணுவதாகவும் இருக்கும். தகுந்தவாறு பழகிய மத்யம் இதற்கு மாறுன குணங்களுடையதாகும்.—65.

மத்யத்தை உபயோகிக்கத் தகாத நிலைமைகள் முதலியன :— உஷ்ணமான உபசாரங்கள் நடந்து வருகையிலும், விரேகம் செய்து கொண்டபோதும், பசியினல் வருந்தும் பொழுதும் மத்யபாநம் செய்யக்கூடாது; அதிக தீக்ஷ்ணமானதும், சிறிதும் காரமில்லாத

1. தீபநம்—ஜாடராக்னி யெனப்படும் பசியையுண்டுபண்ணும் கூறு களைத் தூண்டுந் தன்மை.

2. ரோசநம்—நாவில் நற்சுவையை யுண்டாக்குந் தன்மை.

3. தீக்ஷ்ணம்—தாதுக்களில் ஜடிதியில் ஊறிப்பரவக் கூடிய குணம்; அதிக நெடியுள்ளதென்றும் கூறலாம்.

4. ஸரம்—3 வது பக்கம் பார்க்க.

5. ருக்ஷம்—வறட்சி.

6. ஸௌக்ஷ்மம்—3-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

7. ஸ்ரோதோவிசோதநம்—ஸ்ரோதஸ்ஸுகள் எனப்படும் இரத்தக் குழாய்களிலும் இரஸாயநீமுதலியவற்றிலும் சேர்ந்துள்ள தோஷங்களை அப் புறப்படுத்தி அவற்றைச் சுத்தம் செய்யுங் குணம்.

8. புதியமத்யம் என்றல் ஒரு வருஷத்திற்கு உட்பட்ட மத்யம். ஆறு மாதங்களுக்குட்பட்டதென்று சிலர்.

தும், மிகவும் சொற்ப ஸம்பாரங்களுடையதும், கலங்கியிருப்பது மான மத்யவகையும் உபயோகிக்கக் கூடியதல்ல.—66.

**ஸுரையின் குணங்கள்:**—ஸுரை [1] யென்னும் மதுவானது ஸ்நேஹநம்,[2] குரு, வாதஹரம் என்னுங் குணங்களுடையது; குன்மம், உதரரோகங்கள், [3] அர்சஸ், கிரஹணீ, க்ஷயம் இவற்றைப் போக்கும். கொழுப்பு, இரத்தம், முலைப்பால், மூத்திரம், கபம் இவற்றை விருத்தி செய்யும்.—67.

**வாருணியின் குணங்கள்:**—வாருணியும்[4] ஸுரைக்குச் சமான மான குணங்களுடையது; மேலும் ஹ்ருத்யம்[5], இலகு, தீக்ஷ்ணம் என்கிற விசேஷ குணங்களையுடையது; சூலம்[6], காஸம், மல பந்தம், வயிற்றுப்பொருமல், பீநஸம் இவற்றைப் போக்கும்.—68.

**விபீதக ஸுரையின் குணங்கள்:**—விபீதக ஸுரை[7] யென்னும் மதுவானது அதிக தீவ்ரமான வெறியை புண்டுபண்ணுதது; இலகுகுணமுள்ளது; தேஹத்திற்கு ஹிதமானது; விரணத்தினால் வருந்தபவனுக்கும், பாண்டு ரோகிக்கும், குஷ்டரோகிக்கும் இது அதிக கெடுதியைத் தரக்கூடியதல்ல.—69.

**அரிஷ்டத்தின் குணங்கள்:**—அரிஷ்டம் [8] என்னும் மது மற்ற மதுக்களெல்லாவற்றைப் பார்க்கிலும் அதிக குணமுள்ளதாகும்; அது எந்தெந்த வஸ்துக்களால் பக்குவம் செய்யப்படுகின்றதோ, அவ்வவற்றிற்கு ஏற்ற குணங்களுடையது; கிரஹணீ, பாண்டு, குஷ்டம், அர்சஸ், சோகை, க்ஷயம், மஹோதரம், ஜ்வரம், குன்மம், கிருமி, ப்லீஹ விருத்தி இவற்றைப் போக்கும்; துவர்ப்பும் கார்ப்புமான சுவையுள்ளது; வாதத்தை விருத்தி செய்யும்.—70, 70½.

**மார்த்வீக மதுவின் குணங்கள்:**—மார்த்வீகம் [9] என்னும் மதுவுக்கு லேகநம், ஹ்ருத்யம், ஸரம் என்னுங் குணங்களுண்டு; அது சுவையில் இனிப்பாயிருக்கும்; உஷ்ணத்தை அதிகமாயுண்டுபண்ணுதது; பித்தத்தையும் வாதத்தையும் சிறிது விருத்திசெய்யுந்

1. ஸுரை—அன்னத்திலிருந்து அல்லது அரிசியிலிருந்து இறக்கப் படும் ஒருவித மது.
2. ஸ்நேஹம்—ஸ்நிக்த்த குணத்தை புண்டுபண்ணுவது.
3. ப்லீஹ வீக்கம், கல்லீரலின் வீக்கம், நீர்க்கோவையினால் வயிறு வீங்கிப்போதல் இவ்விதமான வியாதிகள் உதரரோகங்கள் எனப்படும்.
4. வாருணீ—கள்.
5. ஹ்ருத்யம்—48-வது பக்கம் பார்க்க.
6. சூலம்—வயிற்றுவலி த்தல்.
7. விபீதக ஸுரை—தான்றிக்காயைப் பக்குவம் செய்து அதிலிருந்து ஸந்தாநம் செய்யப்படும் மது.
8. அரிஷ்டம்—பதார்த்தங்களைக் கஷாயமாகக் காய்ச்சி பக்குவம் செய்யப்படும் மது.
9. மார்த்வீகம்—திராக்ஷாரஸத்திலிருந்து ஸந்தாநம் செய்யப்படும் மது.

தன்மையது; பாண்டு, மேஹரோகம், அர்சஸ், கிருமி இவற்றை நிவ்ருத்தி செய்யும்.—$71\frac{1}{2}$.

**கர்ஜூர மதுவின் குணங்கள்** :—கர்ஜூர மதுவானது குணங்களில் மார்த்வீகத்தின் குணங்களினும் சிறிதே விகற்பப்படும்; வாதலம், குரு என்னும் குணங்களில் விசேஷித்தது.—72.

**சர்க்கராமதுவின் குணங்கள்** :—சர்க்கரையிலிருந்து செய்யப்படும் மது ஹ்ருத்யம், இலகு என்னும் குணங்களுடையது; நறுமணம் பொருந்தியது; இனிய சுவையுள்ளது; அதிக வெறியையுண்டுபண்ணுதது.—$72\frac{1}{2}$.

**குடமதுவின் குணங்கள்**:—குடமதுவானது[1] மூத்திரம், மலம், அபானவாயு இவற்றை நன்கு வெளிப்படுத்துந் தன்மையது; தர்ப்பணம், தீபநம் என்னும் குணங்களுமுடையது.—73.

**சீதுவின் குணங்கள்** :—சீது [2] என்னும் மது வாதத்தையும் பித்தத்தையும் விருத்திசெய்யும்; ஸ்நேஹபாநத்தை முறைகேடாகச் செய்வதாலும், [3] கபத்தினாலும் உண்டாகும் கோளாறுகளை நிவ்ருத்தி செய்யவல்லது.—$73\frac{1}{2}$.

**பக்வரஸ சீதுவின் குணங்கள்** :—அதில் பக்வரஸ சீதுவானது[4] மேதோரோகம்,[5] சோகை, உதரரோகங்கள், அர்சஸ் இவற்றைப் போக்கக் கூடியது; மேலும் முதலிற்கூறிய சீதுவைவிட இதுவே குணத்திற் சிறந்தது.—74.

**மத்வாஸவத்தின் குணங்கள்** :—மத்வாஸவம் [6] என்பது சேதநம்,[7] தீக்ஷ்ணம் என்கிற குணங்களுடையது; மேஹரோகங்கள், பீநஸம், காஸம் இவற்றை நிவ்ருத்தி செய்யவல்லது.—$74\frac{1}{2}$.

**சுக்தத்தின் குணங்கள்**:—சுக்தம்[8] என்பது ரோசநம்,[9] ஸரம், [10] தீபநம், இக்குணங்களைப் பெற்றது; இரத்தம், பித்தம், கபம்

1. குடமது—வெல்லத்தினால் ஸந்தாநம் செய்யப்படும் மது.

2. சீது—கருப்பஞ்சாற்றால் அல்லது மதுர ரஸமுள்ள மூலிகைகளின் சாற்றால் (அவற்றைச் சமைக்காமலே) பக்குவம் செய்யப்படுவது. இதுவே **சீதரஸ** சீது என்று வழங்கப்படும்.

3. ஸ்நேஹ பானத்தை முறைதவறிச் செய்வதாலுண்டாகும் தீங்குகளைப்பற்றிய விவரங்களை 16-வது 18-வது அத்தியாயங்களிற் காண்க.

4. சீதரஸ சீதுவுக்கு உபயோகிக்கும் வஸ்துக்களையே சமைத்து அவற்றிலிருந்து ஸந்தாநம் செய்யப்படுவது பக்வரஸ சீதுவாம்.

5. மேதோரோகம்—கொழுப்பு அதிகரித்து உடல் ஸ்த்தூலித்து விடும் வியாதி.

6. மத்வாஸவம்—தேனைக்கொண்டு செய்யப்படும் ஒருவித மது.

7. சேதநம்—49-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

8. சுக்தம்—ஏதேனும் திரவத்தில் கிழங்குகளையும், வேர்களையும், ஸ்நேஹ வர்க்கங்களையும் சேர்த்து ஸந்தாநம் செய்யப்படும் மிகப் புளிப்பான ஒருவித மது. இதுவே **ஸூக்தம்** என்றும் கூறப்படும்.

9. ரோசநம்—நாக்கில் நற்சுவையைத் தரும் குணம்.

10. ஸரம்—5-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

இவற்றை நீக்கச் செய்யும்; பிரகோபமடைந்த வாத தோஷத்தை மீண்டும் இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரும்; மிகவும் உஷ்ண வீர்யமும், அதிக தீக்ஷ்ணமும், அதிக ரூக்ஷமும், மிக அம்ல ரஸமும் உள்ளது; பரிசிப்பதற்கு மிகவும் குளிர்ச்சியாயிருக்கும்; பாண்டு ரோகத்தையும் கிருமிகளையும் நிவ்ருத்தி செய்யக்கூடியது; நேத்திரத்திற்குக் கெடுதியைத் தரும்.—75, 76.

**அநேக சுக்தங்களின் குணங்களில் தாரதம்யம்** :—குடசுக்தம், இக்ஷூசுக்தம், மத்யசுக்தம், மார்த்வீகசுக்தம் இவை [1] மேன்மேலும் முறையே அதிக இலகு குணமுள்ளவையாம்.—76½.

**கந்த-மூல-பலாதி சுக்தங்களின் குணங்கள்** :—கிழங்குகளும், வேர்களும், கனி முதலானவைகளும [2] குடசுக்தம் முதலானவைகளிற் சேர்த்து ஸந்தாநம் [3] செய்யப்படுமாயின் அவையும் அந்தந்த சுக்தத்திற்குச் சமானமான குணமுள்ளவைகளாய் விடும்.—77.

**சாண்டாகீ அல்லது காலாம்லம்** :—மற்றும் சில பதார்த்தங்களைக் [4] காய்ச்சி யிறக்கி ஸந்தாநம் செய்து சிலகாலம் வரையில் புளிக்கவைத்து பக்குவம் செய்யப்படும் ஒருவகை மதுவுக்கு சாண்டாகீ அல்லது காலாம்லம் எனப் பெயர். அது ரோசநமாகவும் இலகு குணமுள்ளதாகவும் இருக்கும்.—77½.

**தாந்யாம்லம் அல்லது காஞ்ஜிகம்** :—தாந்யாம்லம்[5] என்பது பேதி,[6] தீக்ஷ்ணம், உஷ்ணம், ருச்சியம்,[7] தீபநம், ஹ்ருத்யம், இலகு, வாதஹரம், கபஹரம் என்கிற குணங்களையுடையது; பித்தத்தை விருத்தி செய்யும்; பரிசிப்பதற்குக் குளிர்ச்சியாயிருக்கும்; சிரமத்தையும் தேஹ வாட்டத்தையும் தீர்க்கும்; வஸ்தியிலுண்டா

1. குடசுக்தம்—வெல்லத்திலிருந்து செய்யப்படுவது. இக்ஷூசுக்தம்—கருப்பஞ்சாற்றிலிருந்து செய்யப்படுவது. மத்யசுக்தம்—மதுவிலிருந்து செய்யப்படுவது. மார்த்வீகசுக்தம்—திராக்ஷையிலிருந்து பக்குவம் செய்யப்படுவது. [**சுக்தம்** அல்லது **ஸூக்தம்** எனப்படுவது மிகவும் புளிப்பான ஒருவித மத்யம்.]

2. முதலானவை யென்பதால் இலைகள், பட்டைகள், புஷ்பங்கள் என்னும் வேறு சில அம்சங்களும் குறிப்பிடப்படுகின்றன.

3. ஸந்தாநம்—மதுவகைகள் பக்குவம் செய்யுமுறை.

4. முள்ளங்கி, கடுகு, காய்கனிகள் முதலானவை இங்கு 'மற்றும் சில பதார்த்தங்கள்' என்பதால் குறிப்பிடப்படுகின்றன.

5. தாந்யாம்லம்—இதுவே காஞ்ஜிகம் என்று கூறப்படும்.

6. பேதி—குடலிலுள்ள மலங்களை உடைத்து வெளிப்படுத்துங் குணம்.

7. ருச்சியம்—அரோசகத்தைப் போக்கி நாவிற்கு நற்சுவையைத் தருவது; ரோசநம் என்றும் கூறப்படுகிறது.

கும் வலியைப் போக்கும்; ஆஸ்த்தாபநவஸ்தி [1] செய்வதற்கு உசிதமான சிறந்த பதார்த்தமாகும்.—78, 79.

கோமூத்திரம் முதலியவற்றின் குணங்கள்:—பசு, வெள்ளாடு, செம்மறியாடு, எருமை, யானை, குதிரை, ஒட்டகம், கழுதை இவற்றின் மூத்திரங்கள் ரூக்ஷம், தீக்ஷ்ணம், உஷ்ணம், இலகு இக்குணங்களுடையது; பித்தத்தை விருத்திசெய்யும்; இவற்றிற்கே காரம் பிரதாநரஸம்; இலவணம் அநுரஸம் [2]; இவை கிருமி, சோபை, உதர ரோகங்கள், வயிற்றுப் பொருமல், சூலம், பாண்டு, கபரோகம, வாத ரோகங்கள், குன்மம், அரோசகம், விஷவேகம், வெண்குஷ்டம், குஷ்டம், அர்சஸ் இவற்றை நிவ்ருத்திசெய்யும். 80—82.

திரவத்திரவ்ய விஞ்ஞாநீயாத்யாயத்தில் அடங்கிய திரவவர்க்கங்கள்:—ஜலவர்க்கம் [3], க்ஷீரவர்க்கம் [4], இக்ஷுவர்க்கம் [5], தைலவர்க்கம் [6], மத்யவர்க்கம் [7] இவற்றைக் கிரமமாகக் கூறி, இவ்வத்தியாயத்தில் முக்கியமான சில திரவ பதார்த்தங்கள் விவரிக்கப்பட்டன.—83.

---

## ஆரும் அத்தியாயம்.

### அந்நஸ்வரூப விஞ்ஞாநீயம்.

அப்பால் அந்தஸ்வருபவிஞ்ஞாநீயம் [8] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

---

1. ஆஸ்த்தாபந வஸ்தி—தகுந்த உபகரணங்களால் கஷாயவகைகளை குதத்தில் செலுத்தி குடலைச் சுத்தி செய்வதற்கான சிகித்ஸா முறை. இதற்கே நிரூஹவஸ்தி யென்றும் பெயர்.

2. சில வஸ்துக்களில் ஒரு ரஸமும், சிலவற்றில் இரண்டு மூன்று இரஸங்கள் கலந்தும் இருப்பதுண்டு. அவ்வாறு கலந்திருக்கும் இரஸங்களில் நன்கு நாக்கினால் உணரக்கூடியது **பிரதானரஸம்** என்றும், குறைந்திருப்பதற்கு அல்லது உபயோகித்த பிறகு சிறிது நேரம் கழித்து உணரக்கூடியதற்கு **அநுரஸம்** என்றும் பெயர்.

3. காங்கம், ஸாமுத்ரம், நதீஜலம், கிணற்றுநீர், உஷ்ண ஜலம், குளிர்ந்த ஜலம், தேங்காயின் நீர் இவை **ஜலவர்க்கத்தைச்** சேர்ந்தவை.

4. பசுவின்பால், எருமைப்பால், வெள்ளாட்டுப்பால், தயிர், மோர், வெண்ணெய், நெய் முதலியவை **க்ஷீரவர்க்கத்தைச்** சேர்ந்த வஸ்துக்களாம்.

5. கருப்பஞ்சாறு, பாணிதம், வெல்லம், சர்க்கரை, கற்கண்டு முதலியவை **இக்ஷுவர்க்கத்தைச்** சேர்ந்தவையாகும்.

6. நல்லெண்ணெய், ஆமணக்கெண்ணெய், கடுகெண்ணெய், கொழுப்பு முதலியவை **தைலவர்க்கத்தைச்** சேர்ந்தவை.

7. மத்யம், வாருணீ, ஸுரா, மார்த்வீகம், கார்ஜூரம், சீது முதலியவை **மத்யவர்க்கத்தைச் சேர்ந்தவையாம்.**

8. தான்யங்கள் மாம்ஸங்கள் முதலிய ஆஹாரத்திற்கு உபயோகமான **வஸ்துக்களையும், ஆஹாரவகைகளையும்** விவரித்து, அவற்றின் குணகுணங்களைக் கூறும் அத்தியாயம்.

## சூகதான்ய வர்க்கம்[1].

**சாலி என்னும் சம்பாவகைகளும் அவற்றின் பொதுகுணங்களும்:-** சிவப்புச் சம்பா, பெருஞ்சம்பா, கலமம் என்னும் சின்னச் சம்பா, தூர்ணகம்,[2] சகுநாஹ்ருதம்,[3] ஸாராமுகம்,[4] தீர்க்க சூகம்,[5] ரோத்ர சூகம்,[6] ஸுகந்தகம்,[7] பதங்கம்,[8] தபநீயம்[9] முதலிய இன்னும் அநேகவகையான சிறந்த நெல்வகைகள் உண்டு. சூகதான்ய வகுப்பைச் சேர்ந்த இந்த தான்யங்கள் சுவையிலும் விபாகத்திலும் மதுரமாயிருக்கும்; ஸ்நிக்த்தம், விருஷ்யம், இலகு, சீதவீர்யம் என்னும் குணங்களுடையது; மலபந்தத்தை யுண்டுபண்ணுவதுடன், இவற்றையுண்பதால் மலம் அற்பமாகவும் உண்டாகும்; இவற்றிற்கு ஒருவிதமான கஷாயரஸம் அநுரஸமாயிருக்கும்; மூத்திரத்தை அதிகமாகச் சுரப்பிக்கும்; பொதுவில் அனைவரும் உபயோகிப்பதற்கு ஹிதமானவை. 1—2½.

**இரக்தசாலி, மஹாசாலி, கலமம் இவற்றின் குணங்கள் :—** சாலிதான்யங்களில்[10] இரக்தசாலி யென்கிற சிவப்புச்சம்பா சிரேஷ்டமானது. அது நாவரட்சியையும், ஸந்நிபாத தோஷத்தையும் போக்கக்கூடியது. மஹாசாலி யென்கிற பெருஞ்சம்பா குணங்களில் அதற்கு அடுத்தது; பெருஞ்சம்பாவுக்கு அடுத்தது கலமம் அல்லது சின்னச்சம்பா அல்லது சிறுமணி என்னும் தான்யமாகும். மற்றவையெல்லாம் இவற்றிற்குக் கீழ்ப்பட்ட குணங்களுடையன.-3, 3½

---

1. சூகம் என்றால் சுணை அல்லது ஊசுமுள்; அவ்வித ஊசுமுள்ளுடன் அல்லது சுணையுடன் கூடிய தான்யங்கள் சூகதான்யங்கள் எனப்படும்.

2. தூர்ணகம்—காச்மீரம் முதலிய வடநாடுகளிலுண்டாகும் ஒருவித நெல்; இதற்கு அவ்விடங்களில் **ஆஜவம்** என்று பெயராம்.

3. சகுநாஹ்ருதம்—பக்ஷிகளால் கொண்டுவரப்பட்டதான்யம் என்று இதற்குப் பொருள். [முன்னால் புத்தனுண்டான காலத்தில் அன்னப்பறவைகளால் உத்தர குருதேசத்திலிருந்து மகததேசத்திற்குக் கொண்டுவரப்பட்டு, மிருகாரி யென்பவனுடைய தாயாரான விசாகையென்பவளால் விதைக்கப்பட்டு, அப்பால் அத்தேசமெங்கும் பரவிய ஒருவித நெல் என்று கூறப்படுகிறது.—அருணதத்தன்.]

4. ஸாராமுகம்—கறுப்பான ஊசுமுள்ளைப் போன்ற **சுணை**யுள்ள நெல்.

5. தீர்க்க சூகம்— நீண்டு வெண்மையாயுள்ள சூகத்துடன் கூடியது.

6. ரோத்ர சூகம்—வெள்ளிலோத்திப் பூவைப்போன்ற சூகமுடைய தான்யம்.

7. ஸுகந்தகம்—கந்தசாலி யென்னும் வேறுபெயருமுண்டு. இதுவும் மகததேசம் முதலான வடநாடுகளிலே பிரஸித்தமான தான்யம். ஸுகந்த சம்பா எனவும் வழங்கப்படும்.

8. பதங்கம்— } இவ்விரண்டும் வடதேசங்களில் முற்காலத்தில்
9. தபநீயம்— } பிரஸித்தமாயிருந்த தான்யங்கள்.

10. நெல் இனங்களில் சம்பாவைச் சேர்ந்தவை **சாலிதான்யங்கள்** எனப்படும்.

யவகம் முதலிய வேறு கில சம்பா வகைகளும் அவற்றின் குணங்களும் :—யவகம், ஹாயநம், பாம்ஸு, பாஷ்பம், நைஷதம் என்னும் இத்தான்யங்கள் [1] மதுரம், உஷ்ணவீர்யம், குரு, ஸ்நிக்த்தம், அம்லவிபாகம் என்கிற குணங்களை யுடையவையாம்; கபம், பித்தம் இவற்றை யுண்டுபண்ணும்; மலமூத்திரங்களை நன்கு வெளிபடுத்தும். இந்த தான்யங்களில் பிந்தியவைகளைவிட முந்தியவை முறையே குணங்களிற் குறைந்தவையாம்.—4, 5.

கார் நெல்லின் குணங்கள்:—ஷஷ்டிகம் என்னும் கார்நெல் வ்ரீஹி தான்யங்களுக்குள் [2] சிறந்தது; இதிலும் வெண்கறுப்பான கார் நெல்லை விட வெள்ளைக்கார் சிரேஷ்டமானது. அது ஸ்நிக்த்தம், கிராஹி, குரு, த்ரிதோஷஹரம், ஸ்த்திரம், சீர்வீர்யம் என்னும் குணங்களுடையது; சுவையில் இனிப்பானது.—6.

மஹாவ்ரீஹிமுதலியவைகளும்அவற்றின்குணங்களும்:—அடியிற் கூறப்படும் வ்ரீஹிதான்யங்கள் ஷஷ்டிகத்திலும் குறைந்த குணமுள்ளவைகளாம்:—மஹாவ்ரீஹி, கிருஷ்ணவ்ரீஹி, ஜதூமுகவ்ரீஹி, குக்குடாண்ட வ்ரீஹி, கபால வ்ரீஹி, பாராவதகவ்ரீஹி, கரவ்ரீஹி, வரகவ்ரீஹி, உத்தாலகவ்ரீஹி, ஜ்வாலாவ்ரீஹி, சீனவ்ரீஹி, சாரத வ்ரீஹி, தர்த்துரவ்ரீஹி, கந்தநவ்ரீஹி, குருவிந்தவ்ரீஹி [3] இவை ஒன்றைவிட மற்றொன்று மேன்மேலும் முறையே குணத்திற் சிறிது குன்றியவை யெனக் கருதப்படுகின்றன.—7, 8.

மற்ற வ்ரீஹிதான்யங்களின் குணங்கள்:—முற்கூறியவைகளைத் தவிர்த்து மற்ற வ்ரீஹிதான்யம் எதுவும் சுவையில் மதுரமாகவும், விபாகத்தில் அம்லமாகவும், பித்தகரமாகவும், குருகுணமுடையதாகவும் இருக்கும்.—$8\frac{1}{2}$.

பாடலவ்ரீஹியின் குணங்கள்:—பாடலம் என்னும் சிவந்த நெல்லானது மலமூத்திரங்களையும், தேஹச்சூட்டையும் அதிகமாய் உண்டாக்கும். மூன்று தோஷங்களையும் கோளாறடையச் செய்யும்.—9.

ப்ரியங்கு முதலிய த்ருணதான்யங்களும் அவற்றின் போது குணங்களும் :—ப்ரியங்கு [4], வரகு [5], செந்நெல், சாமை முதலியவை

---

1. யவகம், ஹாயநம் முதலிய இந்த நெற்கள் முற்காலத்தில் வழங்கப் பட்டவை.

2. கார்நெல் இனங்களைச் சேர்ந்தவை இங்கு **வ்ரீஹிதான்யங்கள்** எனப் படுகின்றன.

3. மஹாவ்ரீஹி முதல் குருவிந்தவ்ரீஹி வரையிலுமுள்ள தான்யங்ள் முன்னால் வட தேசங்களில் பிரஸித்தமா யிருந்தவையாம்.

4. ப்ரியங்கு—இது ஒருவித த்ருணதான்யம்; ஞாழல் ஸம்பந்தமான ஒரு வகைப் புல்லின் தான்யம்.

5. கோத்ரவத்தைக் காட்டுக்குரும்பை என்னும் தான்யம் என்றும் கூறுவர்.

த்ருணதான்யங்கள் ஆகும். இவை சீதவீர்யம், இலகு, வாதலம், லேகநம்[1], கபஹரம், பித்தஹரம் என்னும் குணங்களுடையன.—10.

ப்ரியங்குவின் குணங்கள் :—அவற்றுள் ப்ரியங்கு என்பது ஒடிந்துபோன அவயவங்களை மீண்டும் ஒருமிக்கக் கூட்டுங்குணமுடையது; ப்ருஹ்மணம், குரு என்னும் குணங்களையும் பெற்றது.—10½.

வரகின் குணங்கள் :—வரகு என்பது மிகவும் கிராஹி ;[2] பரிசிப்பதற்குக் குளிர்ச்சியாயிருக்கும் ; விஷஹரம் என்னுங் குணத்தைப் பெற்றது.—11.

யவதான்யத்தின் குணங்கள் :—யவதான்யமானது[3] ரூக்ஷம், சீதம், குரு, மதுரம், ஸரம், விருஷ்யம் என்னுங் குணங்களுடையது ; மலத்தையும் அபாநவாயுவையும் விருத்திசெய்யும் ; சரீரத்திற்கு திடனையுண்டு பண்ணும் ; மூத்திரம், கொழுப்பு, பித்தம், கபம் இவற்றின் கோளாறை அகற்றும் ; பீநஸம், ச்வாஸம், காஸம், ஊருஸ்தம்பம்[4], தொண்டையிலுண்டாகும் வியாதிகள், சர்மரோகங்கள் ஆகியவற்றையும் போக்கும்.—11½, 12½.

அங்யயவ-வம்ச யவங்களின் குணங்கள்:—அங்யயவம்[5] என்னும் தான்யம் ஸாதாரண யவதான்யத்தினும் குணத்திற் குறைந்தது. வம்சயவம்[6] என்னும் மூங்கிலிலிருந்துண்டாகும் யவதான்யமானது ரூக்ஷமாகவும் உஷ்ண வீர்யமுடையதாகவும் இருக்கும்.—13.

கோதுமையின் குணங்கள் :—கோதுமையானது விருஷ்யம், சீதவீர்யம், குரு, ஸ்நிக்தம், ஜீவநம்,[7] வாத-பித்தஹரம், ஸந்தாநகாரீ[8], மதுரம், ஸ்தைர்யகாரீ,[9] ஸரம் இக்குணங்களுடையது.—14.

---

1. லேகநம்—தாதுக்களையும் தோஷங்களையும் கல்லிவெளிப்படுத்தும் தீக்ஷ்ணமான குணம்.

2. கிராஹி—கெட்டியாயுள்ள மலம் முதலியவற்றை உடைத்து வெளிப்படுத்துவது பேதியெனப்படும். இதற்கு நேர் எதிரிடையான குணம் கிராஹி எனப்படுகிறது. என்றால் உடைந்த மலாதிகளைக் கட்டுவதென்று பொருள்.

3. யவதான்யம்—இதை **வாற்கோதுமை** என்றும் ஆங்கிலத்தில் பார்லி என்றும் கூறுகின்றனர்.

4. ஊருஸ்தம்பம்—துடையில் கபத்தின் கோளாறால் ஸம்பவிக்கும் வீக்கமும் வலியும் அதிகரித்த ஒரு வியாதி.

5. அங்ய யவம்—என்பது யவதான்யத்தில் சேர்ந்த ஒருவித தான்யம்

6. வம்சயவம்—இதுவும் யவத்தைப்போன்றது ; **மூங்க்லரிசி** எனப்படுகிறது ; ஆனால் மூங்கிலப்பு அல்ல.

7. ஜீவநம்-40-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

8. ஸந்தாநகாரீ—ஒடிந்துபோன எலும்பு முதலியவற்றை மீண்டும் ஒன்று சேர்க்குங் குணம்.

9. ஸ்தைர்யகாரீ — சரீரத்திற்கு வன்மையை யுண்டுபண்ணுங் குணம்.

**நந்தீமுகியின் குணங்கள்** :—*நந்திமுகி*[1] *என்கிற தான்யம் சீத வீர்யமும், கஷாயரஸமும், மதுரரஸமும் உடையது ; இலகு குண முள்ளது*.—14½.

## சீம்பீதான்யங்கள் [2].

**சீம்பீதான்யங்களின் பொது குணங்கள்** :—*பயறு, துவரை, சிறு கடலை முதலிய சிம்பீ தான்யங்கள் கஷாயமும், மதுரமும் கலந்த சுவையுடையன ; ஸ்ரோதஸ்ஸுகளைக்*[3] *கட்டும் ; கிராஹி ; விபாகத்திற் கடுவானவை ; சீதவீர்யம் ; இலகுகுணமுள்ளவை. கொழுப்பு, கபம், இரத்தம், பித்தம் இவற்றின் கோளாறுகளால் ஸம்பவிக்கும் வியாதிகளில் லேபநம்*[4] *செய்வதாலும், ஸேகம்*[5] *செய்வதாலும் ஹிதமுண்டு பண்ணக்கூடியவை*.—15, 16.

**பயறு, கலாயம், மோச்சை இவற்றின் குணங்கள்** :—*சிம்பீதான்யங்களுள்* பயறு *குணத்திற் சிறந்தது ; அது வாதத்தைச் சிறிது விருத்தி செய்யும். பட்டாணிக் கடலை யெனப்படும்* கலாயமானது *வாதத்தை மிகவும் அதிகமாய் விருத்திசெய்யும்.* மோச்சைக் கோட்டை *வாதத்தைப் பிரகோபப்படுத்தும் ; ரூக்ஷமும் குரு குணமுமுள்ளது ; மலத்தை அதிகமாக உண்டுபண்ணும்*.—17.

**கோள்ளின் குணங்கள்** :—*கொள்ளானது உஷ்ணவீர்யம் ; விபாகத்தில் அம்லம்; சுக்கிரத்தைக் குறைக்கும்; அச்மரீ, ச்வாஸம், பீநஸம், காஸம், அர்சஸ், கபம், வாதம் இக்கோளாறுகளை அகற்றும் ; இரக்தபித்த ரோகத்தை விருத்தி செய்யக்கூடியது*.—18.

**நிஷ்பாவத்தின் குணங்கள்** :—*நிஷ்பாவம்*[6] *என்பது குரு, ஸரம், விதாஹி என்கிற குணங்களுடன் கூடியது. வாதம், பித்தம், இரத்தம், முலைப்பால், மூத்திரம் இவற்றை விருத்திசெய்யுந் தன்மையது. நேத்திரத்திற்கும் சுக்ரத்திற்கும் ஆகாது ; கபம், சோபை, விஷம் இவற்றைப் போக்கும்*.—19.

**உளுந்தின் குணங்கள்** :—*உளுந்துக்கு ஸ்நிக்த்தம், ஸரம், குரு, உஷ்ணம, வாதஹரம் என்னுங் குணங்களுண்டு. தேஹபலம், கபம், மலம், பித்தம் இவற்றை விருத்திசெய்யும் ; சுக்ரத்தை விருத்திசெய்து அதை வெளிப்படுத்துந் தன்மையுடையது ; இனிய சுவையுள்ளது*.—20.

---

1. *நந்தீமுகி*—நீண்டும் மெல்லியதாகவுமிருக்கும் ஒருவித கோதுமை என்று ஹேமாத்ரி.

2. *சிம்பீ தான்யங்கள்*—இரண்டு பிளவுகளாகப் பிரியக்கூடிய பருப்புகளை யுள்ள தான்யங்கள்.

3. *ஸ்ரோதஸ்ஸுகள் என்றால்*—இரஸாயனிகள் எனப்படும் இரஸக் குழாய்கள்.

4. *லேபநம்*—பூசுதல் அல்லது பூச்சு.

5. *ஸேகம்*—திரவ பதார்த்தங்களைச் சூடாகவோ சீதமாகவோ வியாதி கொண்ட இடங்களில் விடுதல்.

6. *நிஷ்பாவம்*—இதை அவரைக் கொட்டை யென்பார் சிலர்.

பூனைக்காலி வாலுளுவைக் கனிகளின் குணங்கள் :—பூனைக் காலியின் கனிகளும் வாலுளுவைக் கனிகளும் குணத்தில் உளுந் துக்குச் சமானமானவை யென்றறிக.—20½.

எள்ளின் குணங்கள் :—எள்ளானது உஷ்ணவீர்யம், த்வச் சியம்,[1] கேச்யம்,[2] பல்யம்,[3] குரு இக்குணங்களுடையது; பரிசிப்ப தற்குக் குளிர்ச்சியாயிருக்கும்; மூத்திரத்தைக் குறைக்கும்; விபா கத்திற் கடுவாக மாறும்; புத்தியையும், கபத்தையும், பித்தத் தையும், ஜாடராக்கினியையும் அதிகப்படுத்தும்.—21½.

ஆளிவிதையினுடையவும், குஸும்பாவிதையினுடையவும் குணங்கள்:—(1) ஆளிவிதையானது ஸ்நிக்த்தம், உஷ்ணவீர்யம், குரு இக்குணங்களைப்பெற்றது; இனிப்பாகவும் சிறிது கைப்பாகவும் இருக்கும்; கபத்தையும் பித்தத்தையும் உண்டுபண்ணும்; திருஷ் டியின் சக்தியையும் சுக்ரத்தையும் குறைத்துவிடும்; விபாகத்தில் கடுவாக மாறும். (2) குஸும்பாவிதையின் குணங்களும் இதைப் போன்றவையே.—22½.

சூக-சிம்பீதான்யங்களுள் ஹீன குணமுள்ளவை :—சிம்பீதான் யங்கள் அனைத்திலும் உளுந்தும், சூகதான்யங்களுள் யவகமும்[4] ஹீன தான்யம் எனப்படும்.—23.

புதிய தான்யம் பழைய தான்யம் முதலியவற்றின் குணங்கள்:— புதிதான தான்யங்கள் அபிஷ்யாகங்களா யிருக்கும். ஒரு வருஷ காலம் பழகியவை இலகு குணமுடையவையாகும். சீக்கிரத்திற் பயி ராய் பலிக்கக் கூடியதும், பருப்பாக உபயோகிக்கத் தகுந்ததும், முற்றிலும் உமிநீக்கி முறைப்படி பொருக்கப்பட்டதுமான தான்ய மும் இலகுகுணமுடையது.—24.

### அன்னவர்க்கம்.

மண்டபேயாதிகளின் பொது குணங்கள்:—மண்டம், பேயா, விலேபி, அன்னம் இவற்றில் பிந்தியதைவிட முந்தியவை முறையே அதிக இலகுகுணமுடையவையாம்.—24½.

மண்டத்தின் குணங்கள் :—அவற்றுள் மண்டமானது[5] மிக வும் சிறந்த உணவாகும். கோளாறடைந்த வாதத்தை இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரக் கூடியது. பாசநம், தீபநம் என்னுங் குணங்களுடையது. நாவரட்சி, தேஹவாட்டம், ஔஷதப்பிரயோ கம் செய்தபிறகு மிச்சப்பட்டுள்ள தோஷங்கள் இவற்றை நிவ்

1. த்வச்சியம்—சர்மவியாதிகளைப் போக்கி அதற்கு ஹிதமுண்டு பண்ணுவது.
2. கேச்யம்—தலைமயிரை விருத்திசெய்யத் தகுந்தது.
3. பல்யம்—சரீரத்திற்கு வன்மையைத் தரும் குணம்.
4. யவகம்—அங்யயவம் என்கிற தான்யம்.
5. மண்டம்—ஒருவித கஞ்சி. [சுக்கு, திப்பிலி, கொத்தமல்லி விதை இவற்றை வீசம் பலம் அளவில் அரைப்படி ஜலத்தில் சேர்த்து, ஜலம் பாதி யளவுக்கு வற்றும்படிக் காய்ச்சி, அதில் ½ பலம் மாதுளம் ரஸமும் சேர்த்து, அப்பால் ½ பலம் நெற்பொரியைப் போட்டு பக்குவம் செய்ய வேண்டும்.]

ருத்தி செய்யும். விஷமித்துள்ள தாதுக்களுக்குச் சமநிலைமையை யுண்டுபண்ணும். ஸ்ரோதஸ்ஸுகளை மிருதுவாக்கும். வியர்வையை விருத்தி செய்யும்.—25, 26.

**பேயாவின் குணங்கள்:**—பேயாவானது [1] மலாநுலோமநம் [2], தீபநம், பாசநம் என்னும் குணங்களையுடையது. பசி, நாவரட்சி, தேஹவாட்டம், பலஹீனம், வயிற்றைச் சேர்ந்தவியாதிகள், ஜ்வரம் இவற்றைப் போக்கும்; ஆகவே தேஹத்திற்கு ஹிதமான உணவாகும்.—27.

**விலேபியின் குணங்கள்:**—விலேபியானது[3] கிராஹி, ஹ்ருத்யம், தீபநம் இக்குணங்களைப் பெற்றது. நாவரட்சியைப் போக்கும். விரணங்கள், நேத்திரவியாதி இவற்றால் வருந்துபவருக்கும், சோதந சிகித்ஸை செய்து கொண்டவருக்கும், துர்ப்பலதேஹிகளுக்கும், ஸ்நேஹபாநம் செய்பவருக்கும் ஹிதமாயிருக்கும்.—28.

**அன்னமும் அதன் குணங்களும்:**—அரிசியை நன்றாகக் கழுவி வடித்து, நன்கு சமையல் செய்து, சூடு ஆறுமலிருக்கையிலே உபயோகித்தால் அது இலகு குணமுடையதாயிருக்கும்; உஷ்ணவீர்யமுள்ள ஔஷதங்களின் கஷாயத்தில் பக்குவம் செய்த அன்னம் அதைவிட இன்னும் இலகுவானது; அரிசியை வறுத்து அவ்வாறு கஷாயத்தில் சமையல் செய்து எடுக்கப்படும் அன்னம் அதையும் விட இலகுவாயிருக்கும். இம்முறைகளுக்கு மாறாகப் பக்குவம் செய்யப்பட்ட அன்னமும், பால், மாம்ஸம் முதலியவற்றுடன் சேர்த்துப் பக்குவம் செய்யப்பட்ட அன்னமும் குருகுணமுடையவையாம்.—29, 29½.

**மற்ற அன்னவகைகளின் குணகுணங்களை அறியுமுபாயம்:**—முற்கூறியவாறு பதார்த்தங்களுடையவும், க்ரியைகளுடையவும், அவற்றை சேர்க்கும் முறைகளுடையவும், அவற்றின் அளவுகளுடையவும் தன்மைகளை அநுஸரித்து மற்ற உணவுவகைமுதலியவற்றின் ஸகல குணங்களையும் ஒருவாறு கூறலாம்[4].—30.

---

1. பேயா—சிறிதளவு அரிசியைப் பக்குவம் செய்து, கஞ்சியைப் போல் வரும்போது அதில் மோரையும் மாதுளம் பழச் சாற்றையும் சேர்த்து பக்குவம் செய்யப்படும் கஞ்சி.

2. மலாநுலோமநம்—சிக்குண்ட மலத்தை மெதுவாக இயற்கைக்கு விரோதமில்லாமல் குத மார்க்கத்தினால் வெளிப்படுத்துந் தன்மை.

3. விலேபி—அன்னம் சிறிதளவு கலந்துள்ள சிறிது கனமான கஞ்சி. அவிழ்களில்லாமல் வடித்த குழம்பான கஞ்சி **மண்டம்** எனப்படும். அதே கஞ்சி சில அவிழ்களுள்ளதா யிருந்தால் **பேயா** என்று வழங்கப்படும். கஞ்சியில் அதிக அவிழ்கள் கலந்திருப்பது **விலேபி** எனப்படும். அவிழ் அதிகமாகவும் திரவம் சொற்பமாகவும் இருப்பது **யவாகூ** எனப்படும்.

4. உதாரணம்:—மாம்ஸத்தை ஆவியிற் சமைத்தால் அது குருகுணமுள்ளதாகவும், வாயு முதலியதை ஸ்தம்பநம் செய்து ஜீர்ணத்தையும் தடை செய்யும். அதையே சூலத்திற் குத்திப் பக்குவம் செய்தால் ஸந்நிபாதஹரமாகவும் உபயோகப்படுகிறது.

மாம்ஸரஸத்தின் குணங்கள் :— மாம்ஸ ரஸமானது ப்ருஹ்மணம், ப்ரீணநம்[1] விருஷ்யம், விரணஹரம்[2] என்னும் குணங்களையுடையது.—30½.

பயற்றம்பருப்புரஸத்தின் குணங்கள் :— பயற்றம்பருப்பின் ஸாரம் அல்லது இரஸமானது விரணங்களைச் சுத்தி செய்துகொண்டவர்களுக்கும், இரணங்களை யுடையவர்களுக்கும், தொண்டை வியாதிகள், நேத்திரவியாதிகள் இவற்றால் வருந்துபவருக்கும் ஹிதமானது.—31.

கோள்ளின் இரஸத்தினுடைய குணங்கள்:—கொள்ளின் இரஸம் கோளாறடைந்த வாயுவை இயற்கை நிலைமைக்குத் திருப்பிவிடும்; குன்மம், தூநி[3], பிரதி தூநி[4] இவற்றையும் அகற்றும்.—31½.

எள், உலர்ந்த சாகம் முதலியவற்றின் குணங்கள் :— எள்ளாலும், அதன் பிண்ணாக்காலும் ஆகிய உணவு வகைகளும், உலர்ந்த சாகமும்[5], முளைத்த தான்யமும், சாண்டாகீ வடகமும்[6] திருஷ்டிக்கு ஹானி யுண்டுபண்ணும், மூன்று தோஷங்களையும் கோளாறடையச் செய்யும், சரீரத்திற்கு வாட்ட முண்டாக்கும்; குருகுணமுடையவை.—32½.

இரஸாலா குணங்கள் :—இரஸாலா[7] என்பது ப்ருஹ்மணம், விருஷ்யம், ஸ்நிக்த்தம், பல்யம, ருச்சியம் என்னுங் குணங்களைப் பெற்றது.—33.

பாநகத்தின் குணங்கள் :—பாநகமானது[8] ப்ரீணநம், குரு, விஷ்டம்பி[9], மூத்திரலம்[10], ஹ்ருத்யம் இக்குணங்களுடையது; சிரமம், பசி, நாவரட்சி, சரீர வாட்டம் இவற்றைப் போக்கும். மேலும்

---

1. ப்ரீணநம் — தேஹத்திற்குப் போஷணையையும், மனதுக்குத் திருப்தியையும் தருவது.
2. விரணஹரம்—புண்களைச் சுத்தம் செய்து ஆற்றுந் தன்மை.
3. தூநி—குடலின் மேற்புறமிருந்து கீழே நோக்கி வியாபிக்கும் ஒருவித வாதநோய்.
4. பிரதி தூநி—குதத்தின் பக்கத்தில் ஆரம்பித்து இரைப்பையின் பக்கமாக வியாபிக்கும் ஒருவித வாதநோய்.
5. சாகம்—காய், கிழங்கு, கீரை முதலியன.
6. ஒருவிதமான வடதேசத்து வற்றல் "சாண்டாகீ வடகம்" எனப் படுகின்றது.
7. இரஸாலா—மிளகுப்பொடி, சர்க்கரை முதலிய ஸம்பாரங் கலந்த குழப்பிய தயிர்.
8. பாநகம்—வெல்லம் சர்க்கரை முதலியதை ஜலத்திற் கரைத்து செய்யப்படும் இனிய குடிநீர்.
9. விஷ்டம்பி—மலம் முதலியவைகளை இறுகக் கட்டிவிடுந் தன்மை; உப்பசமும் தோன்றும்.
10. மூத்திரலம்—மூத்திரத்தை அதிகமாக வெளிப்படுத்துங் குணம்.

அது அந்தந்த வஸ்துவுக்கு ஏற்ற குணங்களுடையதாகவு மிருக்கும்.—34.

நெற்பொரியின் குணங்கள்:—நெற்பொரிகள் நாவரட்சி, வாந்தி, அதிஸாரம், மேஹம் அல்லது நீரிழிவு, மேதோரோகம், கபம் இவற்றைப் போக்கும்; காஸம், பித்தம் இவற்றைத் தணிக்கும்; தீபநம், இலகு, சீதவீர்யம் என்னும் குணங்களையுமுடையன.—35.

முட்டைப் பொரியின் குணங்கள் :—முட்டைப் பொரியானது குரு, பல்யம், கபகாரி, விஷ்டம்பி என்கிற குணங்களுடையது.—35½.

ஸாதாரண பொரியின் குணங்கள் :—நெல் முதலிய தான்யங்களாலான ஸாதாரண பொரி விஷ்டம்பநம்,[1] ரூக்ஷம், தர்ப்பணம், லேகநம், குரு என்னும் இக்குணங்களையுடையது.—36.

பொரிமாவின் குணங்கள் :—பொரிமாவானது இலகுகுண முள்ளது; பசி, நாவரட்சி, சிரமம், நேத்திர வியாதி, விரணங்கள் இவற்றைப் போக்கும். ஜலத்தில் கரைத்து உட்கொண்டால் தர்ப்பணமாகவும், அப்பொழுதே பல்யமாகவும் வேலை செய்யும். ஆனால் தண்ணீரைப் பருகியதும் இதைப் புஜித்துவிட்டு, மீண்டும் தண்ணீரைக் குடிப்பது தகாது; இதை தினத்திற்கு இரண்டு முறையுட் கொள்ளக்கூடாது; இரவிலும் மற்றொன்றோடு கலக்காமல் தனியாகவும் புஜிப்பது பிசகு; ஆஹாரம் புஜித்த பிறகும், பற்களால் கடித்தும், அதிக அளவாகவும் இந்த மாப்பண்டத்தை யுபயோகிக்கக் கூடாது.—37, 38.

பிண்ணாக்கின் குணங்கள் :—பிண்ணாக்கு சரீரத்தை வாடச் செய்யும்; ரூக்ஷம், விஷ்டம்பி என்னும் குணங்களையுமுடையது; நேத்திரத்திற்குக் கெடுதியைத் தரக்கூடியது.—38½.

வேஸவாரத்தின் குணங்கள் :—வேஸவாரமானது[2] குருகுண முள்ளது; ஸ்நிக்த்தமானது; தேஹத்திற்கு வன்மையையுண்டு பண்ணி புஷ்டியையும் தரத்தக்கது.—39.

பயறு முதலியதால் செய்த வேஸவாரங்களின் குணங்கள் :— பயறு முதலியவற்றாலான[3] வேஸவாரங்கள் குருகுணமுள்ளவை

1. விஷ்டம்பநம்—வயிற்றுப் பொருமலுண்டாக்குவது.

2. சுக்கு, கொத்தமல்லிவிதை, ஓமம், பெருங்காயம், நெய் இவைகளைச் சேர்த்து இடித்த இறைச்சி **வேஸவாரம்** எனப்படும். மற்றொரு முறை :—எலும்பில்லாமல் எடுத்த மாம்ஸத்தில் வெல்லம், நெய், திப்பிலி, மிளகு, இவற்றைக் கூட்டி, ஆவியில் அவைதப் பக்குவம் செய்தெடுத்தால் **வேஸவாரம்** எனப்படுகிறது. **வேஸவாரகணம்**—கருஞ்ஜீரகம், மிளகு, சுக்கு, கிரந்திதகாம், கொத்தமல்லிவிதை, மஞ்சள், மரமஞ்சள், திப்பிலி, மாதுளை இவற்றின் கூட்டும் **வேஸவாரம்**.

3. பயறு முதலியவை யென்பதால் உளுந்து முதலானவை குறிக்கப் படுகின்றன.

அல்லாமலும் அந்தந்த வஸ்துக்களின் தன்மைகளுக்கேற்ற குணங்களுமுடையவையாம்.—39½.

ஒரே வஸ்துவால் உமித்தணல் முதலியவற்றில் சுட்டெடுத்த பணியாரங்களின் குணங்கள் :—உமித்தணல், வறையோடு, பாணல், எண்ணெய்பாணல், ஸாதாரண நெருப்புத்தணல் இவற்றில் சுட்டு பக்குவம் செய்யப்பட்ட ஒரே வஸ்துவினாலான பணியாரங்கள் முறையே மேன்மேலும் இலகு குணத்திற் சிறந்தவையாம்.—40½.

மாம்ஸவர்க்கம்.

மிருகங்களின் வகுப்பு :—ஹரிணம்,[1] ஏணம்,[2] குரங்கம்,[3] ருச்யம்,[4] கோகர்ணம்,[5] மிருகம்,[6] மாத்ருகம்,[7] சசம்,[8] சம்பரம்,[9] சாருஷ்கம்,[10] சரபம்[11] இவை முதலியவை மிருகங்கள் என்று கூறப்படுகின்றன.—41½.

விஷ்கிரங்களின்வகுப்பு:—உள்ளாங்குருவி,[12] நாகணவாய்ப்புள், கவுதாரி, செங்கண்குருவி, செங்குருவி, களவிங்கப்பறவை, உபசக்ரம், சகோரம், குருபாஹு, விச்சுளி, விச்சுளிப் பேடு, தித்திரி, மீன்குத்தி, கோழி, கொக்கு, கோநர்த்தம், கிரிவர்த்திகா, சாரபதம், இந்த்ராபம், நாரை என்னும் இப்பக்ஷிகள் விஷ்கிரங்கள்[13] எனப்படும். 42—44.

பிரதுதங்களின் வகுப்பு :—ஜீவஞ்ஜீவகம் என்னும் நிலாமுக்கிப் பறவை, கள்ளிக்காக்கை, குடுமிப்பருந்து, கிளி, பெண்கிளி, ஊர்க்குருவி, குயில், பச்சைக்குருவி, மாடப்புறா, செங்குருவி இவை பிரதுதங்கள்[14] என்று கூறப்படுகின்றன.—45.

---

1. ஹரிணம்—வெள்ளைமான்.
2. ஏணம்—விசாலமான நேத்திரங்களையுடைய கறுப்புமான்.
3. குரங்கம்—வெகுவேகமாய் ஓடும் சிறியமான்.
4. ருச்யம்—மயிர்களடர்ந்த எருமையைப்போன்ற மான்.
5. கோகர்ணம்—கோமளமான தேஹத்தையுடைய மான்.
6. மிருகம்—ஸாதாரண புள்ளிமான்.
7. மாத்ருகம்—பசுவைப்போன்ற மான்.
8. சசம்—முயல் போன்றுள்ள குள்ள மான்.
9. சம்பரம்—சிவந்த மெல்லிய மான்.
10. சாருஷ்கம்—ஒருவகை கலை மான். இதன் கொம்புகள் மிருதுவான தோலால் மூடப்பட்டிருக்கும்.
11. சரபம்—எட்டுக்கால்களையுடைய, ஒருகொடிய மிருகம். பண்டைக்காலத்தில் பிரவிசித்தமாயிருந்தது.
12. உபசக்ரம்,குருபாஹு முதலியசிலபக்ஷிஜாதிகள்அபூர்வமானவை.
13. விஷ்கிரங்கள்—நிலங்களில் சிதறியுள்ள தானியங்களைப் பொறுக்கிக் கொறிப்பதால் இப்பறவைகளுக்கு இப்பெயர் வந்தது.
14. அலகுகளால் தானியம் முதலியவற்றைப் பிளந்து அல்லது குத்தியுண்பதால் ' பிரதுதங்கள் ' எனப்படுகின்றன.

**பிலேசயங்களின் வகுப்பு**:—*தவளை, உடும்பு, ஸர்ப்பம், முள்ளம் பன்றி முதலியவை* **பிலேசயங்கள்**[1] *என்று கூறப்படுகின்றன.*—45½.

**பிரஸஹங்களின் வகுப்பு**:—*பசு, கழுதை, கோவேறுக்கழுதை, ஒட்டகம், குதிரை, சிவங்கி, சிங்கம், கரடி, குரங்கு, பூனை, எலி, புலி, செனாய், கிரிப்பிள்ளை, சிறுத்தை, கருங்குரங்கு, நரி, பருந்து, காடை, நாய், காக்கை, கருடன், வான்கோழி, அழுகுரல்பக்ஷி, கழுகு, ஆந்தை, கடுவன்குருவி, தூமிகா, மதுஹா இந்த வகுப்பிலுள்ள மிருகங்களும் பக்ஷிகளும் ஒருமிக்க* **பிரஸஹங்கள்** [2] *எனப்படுகின்றன.*—46-48.

**மஹா மிருகங்களின் வகுப்பு**:—*பன்றி, எருமைக்கடா, ந்யங்கு*[3], *குரு,* [4] *ரோஹிதம்,* [5] *யானை, ஸ்ருமரம்,* [6] *சமரம்,* [7] *கட்கம்,* [8] *கவயம்* [9] *என்னும் இவை* **மஹாமிருகங்கள்** *என்று கூறப்படுகின்றன.*—49.

**ஜலசரங்களின் வகுப்பு**:—*அன்னப்பறவை, ஸாரஸபக்ஷி* [10], *காரன்னம், நீர்க்காக்கை, நீர்க்கோழி, நாரை, அழுகுரல்பக்ஷி, சக்கிரவாகப் பக்ஷி, நீர்க்குருவி, கிரௌஞ்ச பக்ஷி இவை* **ஜலசரங்கள்** *எனப்படும்.*—50.

**மத்ஸியங்களின் வகுப்பு**:—*ரோஹிதம்,*[11] *பாடீநம்,* [12] *கூர்மம்,*[13] *கும்பீரம்,*[14] *கர்க்கடம்,*[15] *சுக்தி,*[16] *சங்கு, சம்பூகம்,* [17] *சபரீ,*[18] *வர்மி*[19],

---

1. *பாழிகளில் வஸிப்பதைக்கொண்டு தவளை முதலியவை 'பிலேசயங்கள்' என்று வழங்கப்படுகின்றன.*

2. *பிரஸஹங்கள்—வலியக்கவர்ந்து தீனிகளைத் தின்னு மியல்புடையவை யாகையால் இப்பெயர் வந்தது.*

3. *ந்யங்கு—தலைகவிழ்ந்தோடும் மான்.*
4. *குரு—கறுப்புச்சாரலையுடைய கலைமான்.*
5. *ரோஹிதம்—கேஸரியென்னும் ஒருவித மான்.*
6. *ஸ்ருமரம்—பெரிய சவுரிமான்.*
7. *சமரம்—சவுரிமான்.*
8. *கட்கம்—காண்டாமிருகம் எனப்படும் கல்யானை.*
9. *கவயம்—பசுவைப்போன்ற பெரிய மான்.*
10. *ஸாரஸபக்ஷி—வண்டாழ்வான் என்று வழங்கப்படுமாம்.*
11. *ரோஹிதம்—செங்கல்மீன்.*
12. *பாடீநம்—ஆயிரம்பற்களுடைய பெரிய மீன்.*
13. *கூர்மம்—ஆமை.*
14. *கும்பீரம்—யானையைப்பிடிக்கும் மிகப் பெரிய முதலை.*
15. *கர்க்கடம்—நண்டு.*
16. *சுக்தி—முத்துச்சிப்பி யெனப்படுகிற நத்தையினத்தைச்சேர்ந்த ஜந்து.*
17. *சம்பூகம்—நத்தை.*
18. *சபரீ—துள்ளியோடும் கண்டைமீன்.*
19. *வர்மி—புழுவைப்போன்ற வயிறுநீண்ட ஒருவித மீன்.*

சந்தரிகை[1], சுலூகீ[2], நக்ரம்[3], மகரம்,[4] சிசுமாரம்[5], திமிங்கிலம், ராஜீ[6], சிலிசிமம்[7] இவை முதலியவை மத்ஸியவகுப்பைச் சேர்ந்தவையாம்.—51, $51\frac{3}{4}$.

இவ்விதம் மாம்ஸ வகைகளுக்கான ஜந்துக்களை எட்டு விதங்களாகச் சாஸ்திரஞ்ஞர் பகுத்திருக்கின்றனர்.—52.

**வெள்ளாடு செம்மறியாடுகளின் தன்மை :**—முற்கூறிய எண் வகையான மாம்ஸோபயோகியான பிராணிகளுள் வெள்ளாடு, செம்மறியாடு இவ்விரண்டும் ஜாங்கலமாகவும், ஆநூபமாகவும் கலந்து விவஹரிக்கக்கூடியவைகளா யிருப்பதால், அவை நிச்சயிக்கக்கூடாத தன்மை யுள்ளவைகளா யிருக்கின்றன[8].—$52\frac{1}{2}$.

**மூன்றுவித பூமிகளுக்கேற்ற மூன்றுவித ஜந்துக்கள் :**—முதலிற் கூறப்பட்ட மூன்று வகுப்புகளும் ஜாங்கலதேசத்தைச் சேர்ந்தவைகளாகவும், இறுதியிலுள்ள மூன்று வகுப்புகளும் ஆநூபதேசத்தைச் சேர்ந்தவைகளாகவும், இடையில் கூறப்பட்ட இரண்டு வகுப்புகளும் ஸாதாரண பூமியைச் சேர்ந்தவையாகவும் கருதப்படுகின்றன.[9]—53.

**ஜாங்கலமாம்ஸகுணங்கள் :**— அவற்றுள் ஜாங்கலபூமியில் வாழும் ஜந்துக்களுடைய மாம்ஸங்கள் இலகு குணமுள்ளவையாம்; அவை மலபந்த முண்டுபண்ணக் கூடியனவாயும், சீதவீர்யங்களாகவும் இருக்கும். கபத்தினால் அநுஸரிக்கப்பட்டு, பித்தம் அதிகரித்து, வாதம் நடுநிலைமையிலுள்ள ஸந்நிபாத தோஷத்தில் இம் மாம்ஸங்கள் அநுகூலமானவையாம்.—54.

**முயல் மாம்ஸத்தின் குணங்கள் :**—முயல்மாம்ஸமானது தீபநம், ரூக்ஷம், கிராஹி, சீதவீர்யம் என்னும் குணங்களுடையது; விபாகத்தில் கடுவாக மாறும்.—$54\frac{1}{2}$.

---

1. சந்த்ரிகை—வயிற்றில் மினுக்கித்துலங்கும் அழகிய மீன்.
2. சுலூகீ—சிசுமாரம் என்னும் மத்ஸியத்தைப் போன்ற ஒருவிதமீன்.
3. நக்ரம்—ஸாதாரண சிறிய முதலை.
4. மகரம்—சுறுமீன்.
5. சிசுமாரம்—முதலையைப்போன்ற ஒருவித கொடிய மீன்.
6. ராஜீ—நீர்ப்பாம்பு.
7. சிலிசிமம்—ஸாதாரண சிறிய மீன்.
8. ஆடுகள் சில ஸமயம் ஜாங்கல பூமிகளிலும், சில ஸமயம் ஆநூப பூமிகளிலும் ஸஞ்சரிக்கும் சுபாவமுள்ளவை யாதலால், அவை இன்னபூமியில்மட்டும் வாழக்கூடியவையென்று நிச்சயிப்பது கஷ்டம். (ஜாங்கல-ஆநூப—ஸாதாரண பூமிகளின் இலக்ஷணம் முதலானதைக் குறித்து 10-வது பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க).
9. மிருகங்களின் வகுப்பு, விஷ்கிரவகுப்பு, பிரதுதவகுப்பு இம்மூன்றும் முதலிற் கூறப்பட்டவை; மஹா மிருகங்கள், ஜலசரங்கள், மத்ஸியங்கள் இவற்றின் வகுப்புகள் இறுதியிற் கூறப்பட்டவை; பிலேசயங்கள், பிரஸஹங்கள் இவை இடையிற் கூறப்பட்டவையாகும்.

**வர்த்தகம் முதலானவற்றின் மாம்ஸகுணங்கள் :—** வர்த்தகம் முதலான ஜாங்கல ஜந்துக்களின் மாம்ஸங்கள் [1] சிறிது உஷ்ணவீர்ய முள்ளவை; குரு, ஸ்நிக்த்தம், பிருஹ்மணம் என்னும் குணங்களையு முடையன.—55.

**தித்திரிமாம்ஸகுணங்கள் :—** அவற்றிலும் தித்திரியென்னும் பக்ஷியின் மாம்ஸம் மிகச் சிறந்தது. அது புத்திவிசேஷத்தையும், ஜாடராக்னியையும், பலத்தையும், சுக்ரத்தையும் விருத்திசெய்யுந் தன்மையது; கிராஹி, வர்ண்யம் என்னும் குணங்களும், வாத தோஷம் மேலோங்கிய ஸந்நிபாதத்தைப் போக்கும் தன்மையும் விசேஷமாய் இதற்குண்டு.—55, 56.

**மயில்மாம்ஸத்தின் குணங்கள் :—** மயிலின் மாம்ஸம் அதிகமாய் உபயோகிக்கத் தகுந்ததல்ல; ஆனால் இது காது, தொண்டையின் த்வனி, வயது, நேத்திரம் இவற்றின் பலம் விருத்தியாவதற்கு அநுகூலமாயிருக்கும்.—56½.

**கோழிகளின்மாம்ஸகுணங்கள்:—** (1)காட்டுக்கோழியின் மாம்ஸமும் மயில் மாம்ஸத்திற்கேற்ற குணங்களையுடையது; ஆனால் விருஷ்யம் என்னும் குணத்தில் விசேஷித்ததாகும். (2)நாட்டுக்கோழியின் மாம்ஸம் கபத்தை விருத்திசெய்யக் கூடியதாகவும், ஆகவே குரு குணமுள்ளதாகவும் இருக்கும்.—57.

**க்ரகரம், உபசக்ரகம் இவற்றின் மாம்ஸகுணங்கள் :—** க்ரகரம், உபசக்ரம் என்னும் பக்ஷிகளின் [2] மாம்ஸங்கள் புத்தியின் தாரணைசக்தியையும், ஜாடராக்னியையும் விருத்திசெய்யக் கூடியவை; இருதயத்திற்கும் ஹிதமானவையாம்.—57½.

**பெட்டைப் புறாவின் மாம்ஸ குணங்கள்:—** பெட்டைப் புறாவின் மாம்ஸம் குருகுணம், இலவணரஸம் இவற்றையுடையது; வாத பித்த கபங்கள் என்னும் மூன்று தோஷங்களையும் விருத்திசெய்யுந் தன்மையது.—58.

**காடையின் மாம்ஸகுணங்கள் :—** காடையின் மாம்ஸம் கபத்தை விருத்திபண்ணக் கூடியது; ஸ்நிக்த்தகுணமுள்ளது; ஆகவே விசேஷமாய் வாதஹரமாகவும், சுக்ரத்தைச் செழிப்பிக்கக் கூடியதாகவும் இருக்கிறது.—58½.

**பிலேசயாதிவகுப்புகளின் மாம்ஸங்களுடைய குணங்கள் :—** இதன் பிறகுள்ள மாம்ஸவகுப்புகள் [3] அடியிற் கூறப்படும் குணங்களில் மேன்மேலும் கிரமமாக விசேஷித்தவையாகும். அவை

---

1. வர்த்தகம் முதல், சடகம் என்னும் குருவியைப் பற்றிகுறிப்பிடும் வரையிலுள்ள ஜந்துக்கள், வர்த்தகம் முதலானது என்பதால் குறிப்பிடப்படுகின்றன. வர்த்தகம் என்பது விச்சுளியென்றும் கூறப்படுகின்றது.

2. க்ரகாம், உபசக்ரம் இவற்றிற்குத் தமிழில் பெயர் நன்கு விளங்கவில்லை.

3. இதன்பிறகுள்ள மாம்ஸவகுப்புகள் என்றால்—பிலேசயம்,பிரஸஹம், மஹாமிருகம் முதலான வகுப்பைச் சேர்ந்தவை யெனப் பொருள்.

யாவன:—குருகுணம், ஸ்நிக்த்தம், மதுரம், மூத்ரவிரேசநம், சுக்ரலம், பல்யம், வாதஹரம், கபகரம், வாதலம் என்பவையே யாம்.—59, 59½.

மஹாமிருகப்பிரஸஹங்களின் மாம்ஸகுணங்கள்:— அவ்வகுப்பு களுள் (1)மஹாமிருகங்களின் மாம்ஸம் சீதவீர்யம். (2)மாம்ஸத்தைப் புஜிப்பவையான பிரஸஹவகுப்பிலுள்ள ஜந்துக்களின் மாம்ஸம் இலவணரஸத்தை அநுரஸமாயுடையது; விபாகத்தில் கடுவாக மாறக்கூடியது; தேஹத்தில் மாம்ஸத்தையும் விருத்தி செய்யும்; அஜீர்ணம், அர்சஸ், கிரஹணி, க்ஷயம் இவற்றால் வருந்துபவருக்கு மிகவும் ஹிதமானது.—60, 61.

வெள்ளாட்டுமாம்ஸகுணங்கள்:—வெள்ளாட்டின் மாம்ஸம் சிறிது உஷ்ணவீர்யமுள்ளது; குருகுணமுடையது; ஸ்நிக்த்தமானது. வாதாதி தோஷங்களை விருத்திபண்ணாதது; மனிதருடைய தேஹ தாதுக்களுக்குச்சமான குணமுடையதாயிருப்பதால், அபிஷ்யந்தியாக இல்லாமல் ப்ருஹ்மணம் என்னும் குணத்தில் சிறந்தது.—62.

செம்மறியாட்டின் குணங்கள்:—செம்மறியாட்டின் மாம்ஸம் வெள்ளாட்டு மாம்ஸத்தினும் குணங்களில் மாறுபட்டதெனவும், ஆனால் ப்ருஹ்மணமென்னும் குணத்தையுடையதெனவும் அறிக.—62½.

பசுமாட்டு மாம்ஸகுணங்கள் :— பசுமாட்டின் இறைச்சியானது கபம் வெளிவராத வரட்டு இருமல், சிரமம், அதிகமாய் விருத்தியடைந்த ஜாடராக்னி, விஷமஜ்வரம், பீநஸம், தேஹம் இளைத்துப் போயிருத்தல், மற்ற தோஷங்களின் ஸம்ப்ந்த மற்றதாய் கோளாறடைந்த வாததோஷம் இவற்றைப் போக்கும்.—63, 63½.

எருமைமாட்டின் மாம்ஸகுணங்கள் :— எருமைமாட்டின் இறைச்சியானது உஷ்ணவீர்யமும், குருகுணமுமுள்ளது; அதிக நித்திரையையும் தேஹத்திற்கு வன்மையையும் உண்டு பண்ணக்கூடியது; சரீரத்தைப பெருக்கவும் செய்யும்.—64.

பன்றிமாம்ஸத்தின் குணங்கள் :—பன்றியின் மாம்ஸமும் எருமைமாட்டின் மாம்ஸத்திற்கேற்ற குணங்களுடையதாயிருப்பதோடு சிரமத்தைப் போக்கக் கூடியது; நாக்குக்கு நல்ல ருசியைத் தரும்; சுக்ரத்தையும் தேஹபலத்தையும் விருத்தி செய்யும்.—64½.

மத்ஸியமாம்ஸகுணங்கள்.—மத்ஸியங்கள் மிகவும் கபத்தை விருத்தி செய்யக் கூடியன; அவற்றுள் சிலிசிமம் என்னும் மத்ஸியத்தின் மாம்ஸமானது மூன்று தோஷங்களையும் கோளாறடையச் செய்யும்.—65.

ஒவ்வொரு மாம்ஸவகுப்பிலும் சிறந்த குணமுடைய மாம்ஸம்.—உள்ளாங் குருவி, ரோஹிதம், உடும்பு, ஏணம், என்கிற

இந்த நான்கு ஜந்துக்களின் மாம்ஸமும் அதனதன் வகுப்பில் மிகவும் சிறந்ததாகும்[1].—65½.

**கிரஹிக்கக்கூடிய மாம்ஸம்.** — ஜந்துக்களை அப்பொழுதே அடித்து எடுக்கப்படும் மாம்ஸமும் நடுவயதிலுள்ள நல்ல பிராணியினுடைய மாம்ஸமும் உபயோகிக்கத் தகுந்தவையாம்.—66.

**பரிஹரிக்கத்தகுந்த மாம்ஸம்.**—தானே இறந்துபோன பிராணி, இளைத்துப்போன ஜந்து, மிகவும் கொழுத்துப்போன ஜந்து, வ்யாதியாதிகளாலேயோ, ஜலத்தில் மூழ்கியோ, விஷஸம்பந்தத்தினுலேயோ இறந்துபோன ஜந்து, இவற்றின் இறைச்சிகள் பரிஹரிக்கத் தகுந்தவை.—66½.

**ஒரே இனமான ஜந்துக்களின் தேஹத்திலுள்ள மாம்ஸாதிகளின் குண பேதங்கள்.**—ஆண் ஜந்துக்களின் தேஹத்தில் தலை முதலிய முன் அவயவங்களின் மாம்ஸமும், பெண் ஜந்துக்களில் வயிற்றுக்குக் கீழுள்ள அவயவங்களின் மாம்ஸமும் குரு குணமுடையனவாம். கர்ப்பந்தரித்துள்ள ஜந்துவின் மாம்ஸமும் குருகுணமுள்ளதே. நாற்கால் விலங்குகளில் பெண் இனமும், பக்ஷிகளில் ஆண் இனமும் இலகு குணமுள்ளவை. சிரஸ், தோள், துடை, முதுகு, இடுப்பு, கால் இவற்றில் பிந்தியதை விட முந்திய அவயவங்களின் மாம்ஸங்கள் குணத்தில் முறையே குருவா யிருக்கும்; அவ்வாறே பக்வாசயத்தினும் ஆமாசயத்தின்[2] மாம்ஸம் அதிக குருகுணமுடையது. இரத்தம் முதலிய தாதுக்களும் கிரமமாக மேன்மேலும் குரு குணத்தில் அதிக மேன்மை யடைந்ததாகும். இதர அவயவங்களின் மாம்ஸத்தினும் பீஜமும், அதைவிட ஆண்குறியும், அதைவிட வ்ருக்கங்களும், அதைவிட யக்ருத் என்னும் கல்லீரலும், கல்லீரலைவிட குதமும் குருகுணத்தில் விசேஷித்தனவா யிருக்கின்றன.67—69½.

## சாகவர்க்கம்.

**பங்கம் பாளைமுதலியவற்றின் குணங்கள்.**—பங்கம் பாளை, கச்சோரம், நிலவாகை, ஆரை, பட்டாணிக்கடலை, கறுப்புக் கடுகு, சக்கிரவர்த்திக் கீரை இவை த்ரிதோஷங்களின் பிரகோபத்தினுலுண்டாகும் கோளாறுகளைப் போக்கக் கூடியன; இலகு, கிராஹி என்னும் குணங்களையு முடையன. அவற்றுள் ஆரை யென்பது ஜாடராக்னியை விருத்திசெய்வதிலும், விருஷ்யம் என்னும் குணத்திலும் விசேஷமானது. கறுப்புக் கடுகுக்கும் கிரஹணீ ரோகம், அர்சஸ் இவற்றைப் போக்குந் தன்மை அதிகமாய் உண்டு. சக்கிரவர்த்திக்

1. லாவம் என்பது விஷ்கிரவகுப்பிலும், ரோஹிதம் என்பது மத்ஸிய வகுப்பிலும், உடும்பு பிலேசய வகுப்பிலும், எணம் என்பது மிருகவகுப்பிலும் சிறந்ததாகும்.

2. பக்வாசயம்—குடலில் ஆஹாரம் இரஸமாக மாறி இரத்தத்தில் சேரக்கூடிய பாகம். ஆமாசயம்—இரைப்பை.

கிரை பேதநம் என்கிற மலத்தை உடைத்துத் தள்ளும் குணத்தில் சிறந்ததாகும்.—70, 71½.

மணத்தக்காளியின் குணங்கள்.—மணத்தக்காளியானது த்ரிதோஷஹரம்; குஷ்டத்தையும் நிவ்ருத்தி செய்யக் கூடியது; விருஷ்யம், இரஸாயநம், ஸரம், ஸ்வர்யம்[1] என்னும் குணங்களையு முடையது; உஷ்ண வீர்யமுள்ளது.—72½.

புளியாரையின் குணங்கள் :—புளியாரை சுவையில் அம்லம்; உஷ்ண வீர்யம்; கிராஹி, இலகு, தீபநம் என்னும் குணங்களுடையது; கிரஹணீரோகம்; அர்சஸ் இந்த வியாதிகளிலும், வாதகபங்களின் கோளாறுகளிலும் ஹிதமானது.—73.

பேய்ப்புடல் முதலியவற்றின் குணங்கள் :—பேய்ப்புடல், எழிலம்பாலை, வேம்பு, நாயர் வேளை, ஆட்லாங்கொடி, சிந்திற்கொடி, பிரம்புக் குருத்து, கண்டங்கத்திரி, ஆடாதோடை, காட்டு எள், இலந்தை, வல்லாரை, வெள்ளரி, பாகல், பர்ப்பாடகம், வெண்ணறுகு, பொன்னாங்கண்ணி, கத்திரி, செவுங்கஞரப்பூண்டு, மூங்கிற்குருத்து, கருந்தும்பை, நந்தியாவர்த்தம், சவியம், கடுகரோகிணி, சார்வளை, கேமுகம்[2], சந்தனம், பீர்க்கு, செறுகம்புல் இவை சுவையில் கைப்பு; விபாகத்தில் கடு; கிராஹி, வாதலம்[3]; கப பித்தஹாரம் என்னும் குணங்களுமுடையன. இவற்றுள் பேய்ப்புடலுக்கு வேறு சில விசேஷகுணங்களுமுண்டு; அவையாவன :— கிருமிஹாரம், ருச்சியம், மதுரவிபாகம் என்பவையாம். ப்ருஹதீத்வயத்திற்கு[4] தீபநம், பேதி, வாதஹாரம், பித்தலம் என்கிற குணங்கள் விசேஷமானவையாம். ஆடாதோடையானது காஸம், வாந்தி, இரக்தபித்தம் இவற்றை நிவ்ருத்தி செய்யக் கூடிய விசேஷகுணமுடையதாகும். பாகல் சிறிது கடுரஸத்திலும், தீபநம், கபஹாரம் என்னும் குணங்களிலும் விசேஷித்ததாம். கத்திரிக்கு சிறிது கடுரஸமும், சிறிது கைப்பும், உஷ்ண வீர்யமும், மதுரரஸமும், கபஹாரம், வாதஹாரம், தீபநம், ஹ்ருத்யம், ருச்சியம் என்னும் குணங்களும், பித்தத்தை விருத்திசெய்யும் சக்தியும், க்ஷாரமென்னும் உப்பு வகையோடு கூடியதுமா யிருக்கிறது. மூங்கிற் குருத்தானது துவர்ப்பு இனிப்பு கைப்பு ஆகிய மூன்று சுவைகள் கலந்த ஒருவித ருசியுடையதாகவும், வயிற்றுப் பொருமலுண்டாக்கக் கூடியதாகவும் இருக்கிறது. பீர்க்கு, ஆட்லாங்கொடி இவ்விரண்டுக்கும் பேதநம், தீபநம் என்னும் குணங்கள் விசேஷமானவையாம். 74—80½.

---

1. ஸ்வர்யம்—குரலை பலப்படுத்துங் குணம்.

2. கேமுகம்—இஃதோர் அபூர்வ சரக்கு.

3. வாதலம்—வாத தோஷத்தை விருத்தி செய்யக் கூடியது.

4. ப்ருஹதீத்வயம்—கத்திரி, கண்டங்கத்திரி இவ்விரண்டையும் ஒருமிக்கக் குறிப்பிடும் பெயர்.

அம்மாம்பச்சரிசியின் குணங்கள் :—சிற்றிலைப்பாலாவி யென்னும் அம்மாம்பச்சரிசியானது சீத வீர்யம், ரூக்ஷம், இலகு, மதஹரம்[1], பித்தஹரம், விஷஹரம் இக்குணங்களுடையது; சுவையிலும் விபாகத்திலும் மதுரமானது.—81¼.

வெள்ளுள்ளியின் குணங்கள் :—வெள்ளுள்ளியானது[2] வாதபித்த ஹரம், ஸ்நிக்த்தம், சீதவீர்யம், குரு, மதுரரஸம், ப்ருஹ்மணம் என்னுங் குணங்களையுடையது; விசேஷமாய் சுக்ரத்தையும் விருத்தி செய்யும்.—82.

பாலைக்கீரை-கொத்துப்பசளைகளின் குணங்கள் :—(1) பாலைக்கீரை ஸரம் என்னும் செய்கையிலும், குருகுணத்திலும் சிறந்ததாம். (2) கொத்துப்பசளைக்கு பாலைக்கீரைக்குள்ள இரண்டு குணங்களோடு, மதஹரம்[3] என்னும் தன்மையும் உண்டு.—82½.

காறுவாழையின் குணங்கள் :—காறுவாழை பாலைக்கீரைக்குச் சமானமான குணமுடையதாகவே கருதப்படுகிறது; ஆனால் பாலைக்கீரை ஸரம் என்னும் குணமுள்ளது; சஞ்சுவானது கிராஹியென்னும் குணத்தையுடையது.—83.

நிலப்பனங்கிழங்கின் குணங்கள் :—நிலப்பனங்கிழங்குக்கு வாதஹரம், பித்தஹரம், மூத்ரலம், சீதவீர்யம் என்னும் குணங்கள் உண்டு; அது சுவையில் மதுரமானது.—83½.

ஜீவந்தியின் குணங்கள் :—ஜீவந்தியானது[4] ஜீவனீயம்,[5] ப்ருஹ்மணம், கண்டயம், குரு, விருஷ்யம், இரஸாயநம், சக்ஷுஷ்யம்,[6]

1. மதஹரம்—வெறியைப் போக்குவது; கொழுப்பைக் குறைக்கக் கூடியதென்று பொருள் படுமாறு மேதோஹரம் என்று கேரள தேசத்திய பாடம்.

2. வெள்ளுள்ளி யென்றால் "க்ருஞ்ஜநம்" என்று ஸம்ஸ்கிருதத்திற் கூறுவர். க்ருஞ்ஜநம் என்று மலையாளதேசத்திய புஸ்தகத்திலும், முஞ்ஜாதம் என்று தேவநாகரலிபி யிலுள்ள புஸ்தகங்களிலும் காணப்படுகின்றன.

3. மதஹரம்—மதுபானத்தாலான வெறி முதலியதைத் தணிக்குங் குணம்.

4. ஜீவந்தீ—15-வது அத்தியாயத்தில் கூறப்படும் ஜீவனீயகணத்தைச் சேர்ந்த ஓர் ஔஷதி; இதை சிறு பாலையென்றும் சிலர் கூறுவர்.

5. ஜீவனீயம்—ஜீவசக்தியை விருத்தி செய்யக்கூடியது. [ஜீவனீயம் முதல் இரஸாயநம் வரையிலுமுள்ள ஆறு குணங்களை நிலப்பனங்கிழங்குக்குச் சேர்ந்தவையென்று ஸர்வாங்கஸுந்தரவ்யாக்யாநம். ஆனால் அக்குணங்கள் ஜீவனீய கணத்தைச் சேர்ந்த ஜீவந்திக்கு இயல்பானவை யென்பது பிரஸித்தம். அவ்விதமே அஷ்டாங்கஸங்கிரஹத்தின் இந்துவியாக்யாநத்திலும் எழுதியிருப்பதுடன், கேரளபாஷையிலுள்ள வியாக்யானத்திலும் அவ்வாறே கூறியிருப்பதால், ஜீவனீயாதிகுணங்கள் ஜீவந்திக்கே உரித்தானவையென்று நிச்சயித்து இங்கும் அவ்விதமே எழுதப்பட்டன.]

6. சக்ஷுஷ்யம்—கண்ணுக்கு ஹிதமானது.

த்ரிதோஷஹரம்,[1] சீதவீர்யம் இக்குணங்களையுடையது ; மதுரரஸமுள்ளது. 84½.

கூஷ்மாண்டம் முதலியவற்றின் குணங்கள் :—பூசுணி, சுரை, கொம்மட்டி, கக்கரி, வெள்ளரி, கோவை (?), பெரும்பூசுணி, சீனப்பறங்கி, காட்டுவெள்ளரி இவை கபம் வாதம் இவற்றை விருத்தி செய்யும் ; பேதநம்,[2] விஷ்டம்பி,[3] அபிஷ்யந்தி, குரு இக்குணங்களுடையன; சுவையிலும் விபாகத்திலும் மதுரமானவை. இவற்றுள் கூஷ்மாண்டம் எனப்படும் சாம்பற்பூசுணியானது கொடிகளிலுண்டாகும் காய்களுக்குள் சிறந்தது; வாதபித்தங்களின் கோளாறுகளை அகற்றுவதும், வஸ்தி சோதநம்[4] செய்வதும், விருஷ்யத்தன்மையும் இதன் விசேஷகுணங்களாம். பெரும்பூசுணிக்கு மூத்திர விரேசநம் செய்யுந்தன்மை மிகுதியானது. சுரை, கொம்மட்டி, வெள்ளரி, காட்டு வெள்ளரி இவை இளங்காய்களாயிருக்கையில் அதிக ரூக்ஷமாகவும், கிராஹியாகவும், பித்தஹரமாகவும், சீத வீர்யமுள்ளவையாகவும் இருக்கும் ; அவை முதிர்ந்தவையானால் இவற்றிற்கு நேர் மாறான குணங்களுடையனவாகும்.[5] சீர்ணவ்ருந்தம் என்கிற முலாம்பழம்[6] ஒருவித க்ஷாரமென்னும் உப்புடன் கூடியது ; பித்தத்தை விருத்திசெய்யும் ; கப-வாதஹரம் ; ரோசநம், தீபநம், ஹ்ருத்யம் இக்குணங்களுடையது ; அஷ்டீலா[7], ஆநாஹம்[8] இவற்றைப் போக்கும் ; இலகு குணமுள்ளது. 85—89.

தாமரைத்தண்டுமுதலியவற்றின் குணங்கள் :— தாமரைத்தண்டு, தாமரைக் கிழங்கு, நீர்ச்சேம்பு, ஆம்பற்கிழங்கு, நைதற் கிழங்கு, சேம்பு, அல்லிக்கிழங்கு, மேட்டுத்தாமரை (?), கோரைக் கிழங்கு,

1. த்ரிதோஷஹரம்—வாதபித்தகபங்களின் கோளாறுகளைப் போக்கி அவற்றை இயற்கை நிலைமைக்குக் கொண்டு வரக்கூடியது.

2. பேதநம்—இதுவே பேதி யென்று கூறப்படும் ; என்றால் இறுகிய மலத்தை உடைக்குந்தன்மை.

3. விஷ்டம்பி—வயிற்றுப் பொருமலை யுண்டாக்குந்தன்மை.

4. வஸ்தி சோதநம்—மூத்திரமார்க்கத்திலுள்ள அடைப்பு முதலானதைப் போக்கி, வஸ்தியென்னும் மூத்திரப்பையிலிருந்து மூத்திரத்தை தாராளமாக வெளிப்படுத்துங் குணம்.

5. முதிர்ந்தவை அதிக ஸ்நிக்த்தமாகவும், பேதநமாகவும், பித்தத்தை விருத்தி செய்யக்கூடியவையாகவும், ஆகவே உஷ்ணவீர்யமாகவும் இருக்கும் எனக் கருத்து.

6. சீர்ணவ்ருந்தம்—இதைப்பற்றி ராஜநிகண்டுவில் "சீர்ணவ்ருந்தம் சித்ரபலம் விசித்ரம் பீதவர்ணகம்" என்று வர்ணம் முதலியதைக் குறிப்பிட்டிருப்பதைக்கொண்டு சீர்ணவ்ருந்தம் என்பதற்கு முலாம்பழம் என்று பொருள் எழுதப்பட்டது.

7. அஷ்டீலா—ஒருவித குன்மரோகம்.

8. ஆநாஹம்—வயிற்றுப் பொருமல்.

முத்தக்காசு, தாமரைமொட்டு, தாமரைவிதை இவற்றிற்கு ரூக்ஷம், கிராஹி, சீதவீர்யம், குரு இக்குணங்களுண்டு.—90, $90\frac{1}{2}$.

வேளை முதலியவற்றின் குணங்கள் :—வேளை, நீர்க்கடம்பு, முரம் என்கிற கந்தத்திரவ்யம், கருங்கஞ்சாங் கோரை, தும்பை, பெருந்துத்தி, குங்கிலியம், புளிச்சக்கீரை, வேலிப்பருத்தி, காட்டுக்கோதுமை, ஜீவந்தம்,[1] கஸ்தூரி எனுமிச்சை (?), தகரை, வாற்கோதுமை, ஸூர்யகாந்தி இவையும், எல்லாவகையான சேம்புகளும், பலவிதமான பருப்பு தானியங்களின் கீரைகளும், அதிமதுரக்கீரையும், ரூக்ஷம், குரு, சீதவீர்யம், ரேசகம், மூத்திர ரேசகம் என்னும் குணங்களுடையன ; சுவையில் சிறிது இலவணரஸத்துடன் கூடி மதுரரஸமுள்ளவை ; வாத கபங்களை விருத்தி செய்யும் ; இவை பெரும்பாலும் வயிற்றுப்பொருமலுண்டுபண்ணியே ஜீர்ணமாகும் ; இவற்றை முறைப்படி சமையல் செய்து, அவைகளிலிருந்து சாற்றைப் பிழிந்துவிட்டு, நெய்முதலிய ஸ்நேஹங்களைச் சேர்த்து பக்குவம் செய்து உபயோகித்தால், அதிக கெடுதலை யுண்டுபண்ணுவதில்லை. சிறு இலைகளையுடைய துத்தியானது சக்ரவர்த்திக்கீரைக்குச் சமானமான குணமுடையது. 91—$94\frac{1}{2}$.

தழுதாழை, மாவிலங்கை இவற்றின் குணங்கள்:—தழுதாழை, மாவிலங்கை இவ்விரண்டும் சுவையில் மதுரமானவை ; சிறிது கைப்புடன் கூடியவை; கப-வாதஹரங்கள்.—95.

சாறடை, வெள்ளைச்சாறடை முதலியவற்றின் குணங்கள் :— சாறடை, வெள்ளைச்சாறடை, சிறுதேக்கு இவற்றில் ஒருவித க்ஷாரமுண்டு ; கடுரஸமும், சிறிது கசப்பும் கலந்தவை; தீபநம், பேதநம் என்னும் குணங்களும், விஷதோஷம், சோகை, கபவாதக் கோளாறு இவற்றை நிவ்ருத்தி செய்யுந் தன்மையும் இவற்றிற்கு உண்டு.—96.

புங்க மரத்தளிர் முதலியவற்றின் குணங்கள்:—புங்கமரத்தளிர்களும், மொட்டுகளும் தீபநம், கபவாதஹரம். ஸரம்[2] என்னும் குணங்களையுடையன. தண்ணீர்விட்டாங்கிழங்கின் முளைகள் சுவையில் கைப்பாகவும், விருஷ்யம், த்ரிதோஷஹரம் என்னுங் குணங்களுடையவையாகவும் இருக்கும். மூங்கிற் குருத்துக்கு ரூக்ஷம், விதாஹி[3] என்னுங் குணங்களும், வாதபித்தங்களை விருத்தி செய்யுந் தன்மையும் உண்டு.—97, $97\frac{1}{2}$.

பொன்னாங் கண்ணியின் குணங்கள் :—பொன்னாங்கண்ணியானது தீபநம், கபவாதஹரம் என்னுங் குணங்களுடையது ; சுவையில் கைப்பு ; ப்லீஹமென்னும் மண்ணீரலைப்பற்றிய வியாதிகளையும், அர்சோரோகத்தையும் போக்கக் கூடியது.—98.

---

1. ஜீவந்தம்—மாளவ தேசத்தில் பிரஸித்தமான ஒருவித கீரை.
2. ஸரம்—மலத்தை மெள்ள இளகச்செய்து நெகிழப்பண்ணுங்குணம்.
3. விதாஹி—ஆஹாரத்தைக் குடலில் முறியச் செய்து, மார்பிலும் வயிற்றிலும் எரிச்சலையுண்டாக்குங் குணம்.

பெரும்புல் முதலானதின் குணங்கள் :—(1) பெரும்புல்லானது [1] கிருமி, காஸம், மார்ச்சளி இவற்றைப் போக்கும்; ஸரம் என்கிற குணமும் உடையது. (2) குஸூம்பக் கீரையானது ரூக்ஷம், குரு, ஸரம் இக்குணங்களும், பித்தத்தை விருத்தி செய்யுந்தன்மையும், அம்லரஸமுமுள்ளது. (3) கடுகுக்கீரை குருகுணமும், உஷ்ணவீர்யமும், மூன்று தோஷங்களையும் விருத்தி செய்யுந்தன்மையும், மலமூத்திரங்களைக் கட்டும் சுபாவமும் உடையது.—99, 99½.

இளசான முள்ளங்கியின் குணங்கள் :—சிறிது க்ஷாரத்தின் சுவையும் கைப்புங்கலந்து எவ்வித ருசியும் நன்கு உணரக்கூடாத இளசான நிலைமையிலுள்ள முள்ளங்கியானது மூன்று தோஷங்களின் கோளாறுகளை அகற்றக்கூடியது; இலகுகுணமும் உஷ்ணவீர்யமுமுடையது; குன்மம், காஸம், க்ஷயம், ச்வாஸம், விரணம், நேத்திர ரோகங்கள், தொண்டைநோய்கள், குரல் கம்மல், அக்னிமாந்த்யம், [2] உதாவர்த்தம், [3] பீநஸம் இவற்றைப் போக்குந்தன்மையுமுடையது.—100, 101½.

முதிர்ந்த முள்ளங்கியின் குணங்கள் :—முதிர்ந்த முள்ளங்கியானது கடுவான சுவையும் விபாகமு முள்ளது; உஷ்ணவீர்யமானது; த்ரிதோஷங்களை விருத்தி செய்யுந்தன்மையது; குரு, அபிஷ்யந்தி என்னும் குணங்களையு முடையது.—102½.

பக்குவம் செய்ததும், உலர்ந்ததுமான முள்ளங்கியின் குணங்கள்:- அந்த முள்ளங்கியைச் சமைத்து, ஸ்நேஹம் சேர்த்து பக்குவம் செய்தால், அது வாதஹரமாகவும் இருக்கும். இளசான முள்ளங்கியென்ன, முதிர்ந்த முள்ளாங்கியென்ன ஸகலமும் உலர்ந்து போனால் வாத-கபங்களின் கோளாறுகளைப் போக்குங் குணமுடையன. பக்குவம் செய்யாத எந்த முள்ளங்கியும் வாதாதி தோஷங்களுக்குக் கோளாறையுண்டுபண்ணும்.—103.

பிண்டாலு என்னும் சேம்பின் குணங்கள் :—பிண்டாலு என்னும் ஒருவகைச் சேம்பு வாத-கபங்களின் கோளாறுகளை அகற்றும்; பித்தத்தை விருத்தி செய்யும்.—103½.

கஞ்சாங் கோரை முதலியவற்றின் குணங்கள் :—கறுப்புக் கஞ்சாங்கோரை, முருங்கை, கருந்துளஸி, கர்ப்பூரவல்லி, கடுகு, வாஸனைப்புல், கிடாரை, வெண்கஞ்சாங்கோரை, எலுமிச்சை முதலியவை கிராஹி, சாலநம், [4] விதாஹி, ரூக்ஷம், உஷ்ணவீர்யம், ஹ்ருத்யம், தீபநம், ரோசநம், க்ருமிஹரம், தீக்ஷ்ணம், இலகு,

1. காஸமர்தம், பேராவாரை, பெருந்தகரை யென்றும் கூறப்படும்.
2. அக்னிமாந்த்யம்—பசியின்மை.
3. உதாவர்த்தம்—குதம் முதலியவற்றால் வரவேண்டிய மலம் முதலானவை மேல்நோக்கி வெளிவருதல்.
4. சாலநம்—(3)—ஊறுகாய் முதலிய உபதம்சங்களின் குணம்; என்றால் உணவு உட்கொள்ளும் விருப்பத்தை விருத்தி செய்யுந்தன்மை.

தோஷோத்க்லேசநம் [1] என்னும் குணங்களுடையன; சுவையில் கடுரஸமானவை; நேத்திரசக்தியையும் சுக்ரத்தையும் க்ஷயிக்கச் செய்யும். இவற்றுள் கருந்துளஸியானது விசேஷமாக விக்கல், காஸம், ச்வாஸம், பக்கச் சூலை, உடம்பிலுண்டாகும் துர்க்கந்தம் இவற்றைப் போக்கும். கர்ப்பூரவல்லி யென்பது சிறிது விதாஹி யென்னும் குணத்திலும், கிருத்ரிமவிஷங்களையும் சோகையையும் சமநம் செய்யும் தன்மையிலும் விசேஷித்ததாகும். 104—106½.

**கோத்தானின் குணங்கள் :**—கொத்தான் என்னும் சரக்கு [2] கைப்பும், சிறிது மதுரரஸமு முள்ளது; மூத்திரத்தைச் சுரப்பிக்கும்; பித்தத்தை விருத்திசெய்யுங் குணமும் சிறிது உண்டு.—117.

**ஈருள்ளியின் குணங்கள் :**—ஈருள்ளியானது மிகவும் தீக்ஷ்ணமும், உஷ்ணவீர்யமும், கடுவான விபாகமும், சுவையும் உடையது; ஸரம், ஹ்ருத்யம், கேச்யம், [3] குரு, விருஷ்யம், ஸ்நிக்த்தம், ரோசநம், தீபநம் என்கிற குணங்களும் இதற்குண்டு; வெண்குஷ்டம், குஷ்டம், குன்மம், அர்சஸ், மேஹம், கிருமி, கபவிகாரம், வாதவிகாரம், விக்கல், பீநஸம், ச்வாஸம், காஸம், இரக்தபித்தம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும் [4].—108, 109.

**வெங்காயத்தின் குணங்கள் :**—வெங்காயமானது உள்ளியைப் பார்க்கிலும் குணத்திற் குறைந்தது; கபத்தை விருத்தி செய்யும்; பித்தத்தைச் சிறிதளவு உண்டுபண்ணும்; கபத்தினாலும் வாதத்தினாலும் உண்டான அர்சஸ்ஸுகளின் சிகித்ஸையில் ஸ்வேதநம் செய்வதற்கும், உட்கொள்வதற்கும் ஹிதமாகும்.—110.

**வெள்ளைப்பூண்டின் குணங்கள் :**—வெள்ளைப்பூண்டானது தீக்ஷ்ணமாகவும், கிராஹியாகவும், பித்தரோகிகளுக்கு அல்லது பித்தப் பிரக்ருதிகளுக்குப் பிரதிகூலமாகவும் இருக்கிறது.—110½.

**காராக்கருணை-காருங்கருணைகளின் குணங்கள் :**—(1)கருணைக்கிழங்குக்கு தீபநம், ரோசநம், கபஹரம், விசதம், [5] இலகு இக்குணங்கள் உண்டு; விசேஷமாக அர்சோரோகங்களுக்கு ஹிதமானது. (2) காருங்கருணை தோஷங்களை மிகவும் கோளாறடையச் செய்யும்.—111½.

---

1. கபம், பித்தம் முதலானவற்றைக் கல்லி வெளிப்படுத்துங்குணம்.
2. ஆர்த்ரிகா என்பது இங்கு கொத்தான் என்று தமிழில் கூறப்படுகிறது; இதைக் காட்டு இஞ்சிஎன்றும் கூறுவர்.
3. கேச்யம்—தலைமயிருக்கு அநுகூலமானது.
4. ஈருள்ளிக்கு இன்னும் வேறு சில குணங்களும் இருப்பதாக அஷ்டாங்க ஸங்க்ரஹத்தில் கூறப்பட்டுள்ள பாடத்தை இங்கும் சிலர் படிக்கின்றனர். அதாவது—"பக்நஸந்தாநக்ருத் வ்ருஷ்யோ ரக்தபித்த ப்ரதூஷண:" என்றால்—ஒடிந்த எலும்பு முதலானதை மீண்டும் ஒருமிக்கச் சேர்ப்பதற்கு உபயோகமானது; விருஷ்யம்; இரத்தம், பித்தம் இவற்றைக் கெடுக்கும். பழைய ஏட்டுபிரதிகளிலும் பழைய அச்சிட்ட புஸ்தகங்களிலும் இந்த பாடம் காணப்படுவதில்லை.
5. விசதம்—பிசுபிசுப்பற்றது; அல்லது பசையில்லாதது.

**இலை, புஷ்பம், கனி, தண்டு, கிழங்கு இவற்றிற்கு குணத்தில் தாரதம்யம்** :—சாகவர்க்கங்களில் நாம் உபயோகிக்கும் அம்சங்களான இலை, புஷ்பம், கனி, தண்டு, கிழங்கு இவை மேன்மேலும் ஒன்றைவிட மற்றொன்று முறையே குருகுண முள்ளவையாம்.-112.

**சாகவர்க்கத்தில் சிறந்ததும் இகழ்ந்ததும்** :—சாகவர்க்கத்தில் ஜீவந்தியென்கிற பதார்த்தம் சிரேஷ்டமானது; கடுகுக்கீரை குணத்தில் மிகவும் குறைந்ததாம். 112½.

## கனிவர்க்கங்கள்.

**திராக்ஷையின் குணங்கள்** :—திராக்ஷையானது கனிவர்க்கங்களுள் உத்தமமானது; விருஷ்யம், சக்ஷுஷ்யம், மலமூத்திர ரேசநம், ஸ்நிக்த்தம், சீதவீர்யம், குரு இக்குணங்களுடையது; சுவையிலும் விபாகத்திலும மதுரமானது; வாதரோகம், இரக்தபித்தம், வாயிற்கசத்தல், மதாத்யயம்,[1] நாவரட்சி, காஸம், ச்வாஸம், சிரமம், தொண்டைக் கம்மல், க்ஷதகாஸம்,[2] க்ஷயம் இவற்றை நிவ்ருத்தி செய்யுந்தன்மையது.—113, 114½.

**மாதளைகளின் குணங்கள்** :—(1) மதுர ரஸமுள்ள மாதளையானது சிறிது பித்தம் மேலிட்டுள்ள ஸந்நிபாதக்கோளாறை நிவ்ருத்தி செய்யவல்லது. (2) புளிப்பான மாதுளை பித்தத்திற்குச் சிறிது பிரதி கூலமானது ; சிறிது உஷ்ணவீர்யமுடையது ; வாத-கபங்களைப்போக்கும். (3) எல்லா மாதளையும் ஹ்ருத்யம், இலகு, ஸ்நிக்த்தம், கிராஹி, ரோசநம், தீபநம் என்னும் பொதுவான குணங்களுடையன.—115, 116.

**வாழை முதலியவற்றின் குணங்கள்** :—வாழை, பேரீச்சு, பலா, தெங்கு, ஈச்சு, காட்டுமா, பனை, பெருங்குமிழ், பழமுன்னிப்பாலை, இலுப்பை, சிற்றிலந்தை, இலந்தை, ஏறழிஞ்சில், பேயத்தி, நறுவிலி, வாதுமை, மரவள்ளி, மலையூவக்காய், நாகமல்லி, அழிஞ்சில், மலைவாழை, முறளஞ்செடி இவற்றின் கனிகளுக்கு பிருஹ்மணம், குரு, சிதவீர்யம், ஸ்நிக்த்தம், விஷ்டம்பி என்னும் குணங்களுண்டு; அவை நாவரட்சி, க்ஷதகாஸம், க்ஷயம், இரக்தபித்தம் இவற்றைப் போக்கும்; கபம், சுக்ரம் இவ்விரண்டையும் விருத்திசெய்யும்; சுவையிலும் விபாகத்திலும் மதுரமானவை. இவற்றுள் பனம்பழம் பித்தத்தை விருத்திசெய்வதிலும், பெருங்குமிழன்பழம் ஸரம், சீதவீர்யம், கேச்யம், மேத்யம், இரஸாயநம், மலமூத்திர பந்தஹரம் என்னும் குணங்களிலும் விசேஷித்தவையாம். வாதுமை முதலியவற்றிற்கு உஷ்ணவீர்யமும், கப பித்தங்களை விருத்தி செய்யுந் தன்மையும், ஸரம், வாதஹரம், ஸ்நிக்த்தம் என்னும் குணங்களும் விசேஷமானவை. முறளம்பழம் சிறிது

---

1. மதாத்யயம்—மதுபானம் செய்வதாலுண்டாகும் வெறி அதிகரித்து ஸம்பவிக்கும் கெடுதி.

2. க்ஷதகாஸம்—இரும்பும்போது இரத்தமும் வெளிவரும் ரோகம்.

உஷ்ணவீர்யமானது. முறளம்பழத்தின் விதை மதுரரஸமுள்ளது; விருஷ்யம், பித்தஹரம், வாதஹரம் என்னும் குணங்களிற்சிறந்தது. இலந்தங்கொட்டைக்கும் அதே குணங்களோடு நாவரட்சியைப் போக்குதல், வாந்தியையும் கிருமிகளையும் நிவ்ருத்தி செய்தல் என்னும் குணங்களும் விசேஷமாய் உண்டு. 117—122½.

**பில்வப்பழம்-காய் இவற்றின் குணங்கள் :**—(1) நன்றாகக் கனிந்த பில்வப்பழம் ஜீர்ணமாவது மிகவும் கடினம்; தோஷங்களை விருத்தி செய்யும்; துர்நாற்றமுள்ள அபாநவாயுவை வெளிப்படுத்தும் (2) பழுக்காத காய் தீபநம், கப-வாதஹரம் என்னும் குணங்களையுடையது. இரண்டுக்கும் கிராஹியென்னும் குணம் விசேஷமானது.—123½.

**விளாங்காய், பழம் இவற்றின் குணங்கள்:**—விளாங்காய் தொண்டையைக் கெடுக்கும்; தோஷங்களை விருத்திசெய்யும். விளாம்பழமோ தோஷங்களின் கோளாறைப் போக்கும்; வீக்கம் வாந்தி இவற்றையும் தீர்க்கும். விளாங்காய், விளாம்பழம் இரண்டும் கிராஹி, விஷஹரம் என்னும் இரண்டு பொதுவான குணங்களையும் உடையவை.—124½.

**நாவற் கொட்டையின் குணங்கள் :**—நாவற்கொட்டைக்கு குரு, விஷ்டம்பி [1], சீதவீர்யம், கபஹரம், பித்தஹரம் இக்குணங்களும், வாதத்தை அதிகமாய் விருத்தி செய்யுந் தன்மையும், மூத்திரம் மலம் இவ்விரண்டையும் கட்டுங்குணமும் உண்டு.—125½.

**மாங்காய்-மாங்கனிகளின் குணங்கள் :**—(1) இளசான மாங்காய் வாத-பித்தங்களுக்கும், இரத்தத்திற்கும் பிரகோபத்தை யுண்டு பண்ணும்[2]. (2) முதிர்ந்த காய் கபம்-பித்தம் இரண்டையும் பிரகோபிக்கச் செய்யும். (3) நன்கு பக்குவமான மாம்பழம் இனிய சுவையும் சிறிது அம்லரஸமும் அடங்கியதாய், குரு குணமாகவும், வாதஹரமாகவும், கபம் சுக்ரம் இவற்றை விருத்தி செய்யக்கூடியதாகவும் இருக்கின்றது.—126½.

**புளியின் குணங்கள் :**—புளியானது கிராஹி, ரூக்ஷம், உஷ்ணவீர்யம், வாதஹரம், கபஹரம், இலகு இக்குணங்களுடன் கூடியது.—127.

**வன்னிக்கனி ஊவக்காய்களின் குணங்கள் :**—(1) வன்னிக்கனியானது குரு, உஷ்ணவீர்யம், ரூக்ஷம் இக்குணங்களையுடையது; இதை உபயோகித்தால் மயிர்களும் உதிரும். (2) கசப்பான ஊவக்காயானது [3] பித்தத்தை விருத்தி செய்யும்; கபஹரம்; வாதஹரம்; பேதநம்; ப்லீஹமென்னும் மண்ணீரலைப்பற்றிய ரோகங்களையும்,

---

1. விஷ்டம்பி—வயிற்றுப் பொருமலையுண்டுபண்ணுந் தன்மை.
2. இரத்தம் பிரகோபித்தல் என்றால்—ஏதேனும் தோஷ ஸம்பந்தத்தினால் இரத்த கதியின் வேகம் அதிகரித்தல்.
3. பீலு—இதை ஊவக்காயென்றும், "பெருங்களர்வா" என்றும் கூறுவர்.

கிருமி ரோகத்தையும், குன்மத்தையும், அர்சஸ்ஸையும் நிவ்ருத்தி செய்யுந்தன்மையது. (3) மதுர ரஸமுள்ள ஊவக்காய் அதிக உஷ்ண வீர்யமல்லாதது; மூன்று தோஷங்களின் கோளாறுகளைப் போக்கக்கூடியது.—128, 128½.

கொம்மட்டி மாதளையின் குணங்கள்:—கொம்மட்டி மாதளையின் மேல் தோலானது கைப்பும் சிறிது கடுரஸமுமுடையது; ஸ்நிக்த்தமும் வாதஹரமுமான குணங்களை யுடையது. (2) இக்கனியின் உட்புறத்துச் சதை இனிப்பாகவும், ப்ருஹ்மணமாகவும், வாத-பித்தஹரமாகவும, குருகுணமுள்ளதாகவும் இருக்கும். (3) மணிகளைப் போன்ற அதன் கதுப்பானது இலகுகுணமுள்ளது; காஸம், ச்வாஸம், விக்கல், மதாத்யயம், நாவரட்சி, வாதகோபம், கபப்பிரகோபம், மலபந்தம், வாந்தி, அரோசகம், குன்மம், உதரரோகங்கள்,[1] அர்சஸ், வயிற்றுளைத்தல், அக்னிமாந்தியம் இவற்றை நிவ்ருத்தி செய்யும். 129—131.

சேராங்கோட்டையின் குணங்கள்:—(1) சேராங்கொட்டையின் மேல்தோலும் சதையும் பிருஹ்மணமாகவும், மதுரமாகவும், சீதவீர்யமுள்ளதாகவும் இருக்கின்றது. (2) அதன் கொட்டை அக்னியைப்போல் அழற்சியுண்டாக்கக்கூடிய உஷ்ணவீர்யமுள்ளது; மேத்யம்; விசேஷமாய் வாத கபஹரம்.—132.

கோன்றைமுதலியவற்றின் குணங்கள்:—கொன்றையில் இனிப்பு, புளிப்பு என்று இரண்டுவிதமுண்டு. அவற்றுள் இனிப்பான கொன்றை சீதவீர்யமும், குருகுணமும், நற்சுவையைத்தரும் தன்மையையும் உடையது. புளிப்பான கொன்றை உஷ்ணவீர்யமும், குருகுணமும், நல்ல சுவையைத் தந்து, இருதயத்திற்கு பலமுமுண்டுபண்ணக்கூடியது. மிதமிஞ்சி விருத்தியான ஜாடராக்னியையும் இது சமநம் செய்யும். மதுரமான ஆருகம் என்பது[2] நாக்குக்கு இன்பமாயிருக்கும்; நன்கு பக்குவமான ஆருகம் சீக்கிரம் ஜீர்ணமாகும்; அதிக உஷ்ணவீர்யமுமல்லாதது; குருகுணமும், மூன்று தோஷங்களை விருத்தி செய்யுந்தன்மையும் உண்டு. திராக்ஷையும், ஈச்சம்பழமும் உலராத பசுமையான நிலைமையில் அம்லமாகவும், பித்த-கபங்களை விருத்திசெய்யக்கூடியவையாகவும், குருத்வம், உஷ்ண வீர்யம், வாதஹரம், ஸரம் இக்குணங்களுடையனவாகவும் இருக்கின்றன. பெருங்களாக்காயும் இவ்வித குணங்களையே உடையது. அம்லரஸங்களான இலந்தை, சிற்றிலந்தை, கொடியெலுமிச்சம்பழம், காட்டுமா, ஆருகம், குழிநாவல், எலுமிச்சம்பழம், பூவரசம்பழம், மாதளம்பழம் இவை சிறிது பித்தத்தை விருத்திசெய்யும். நன்றாகப் பக்குவமாய் உலர்ந்திருக்கும் பெருங்க

1. உதரரோகங்கள்—மஹோதரம், ப்லீஹம்வீங்கிப்போதல், கல்லீரல் வீங்குதல் முதலியவை.

2. ஆருகம் என்பது இமாலயத்திலுண்டாகும் ஒருவித ஔஷதி. இதை ஆல்பகூரா என்றும் கூறுவர்.—வைசப்தவலிந்து.

ளாப்பழமும் அதே குணமுடையதாம். உலர்ந்த புளியங்காய், உலர்ந்த இலந்தம்பழம் இவற்றிற்கு தீபநம், பேதநம், இலகு இக்குணங்களும், நாவரட்சி, சிரமம், தேஹவாட்டம் இவற்றைப் போக்குந் தன்மையும் உண்டு; கபவாத விகாரங்களிலும் இவை ஹிதமானவை. 133—137.

**எல்லாவற்றிலும் கீழ்த்தர குணமுள்ள கனி :**— கனிகளெல்லாவற்றிலும் சிதாப்பலா குணத்திற் குறைவுபட்டது ; அது மூன்று தோஷங்களேயுமே பிரகோபிக்கச் செய்யும்.—137½.

**உபயோகிக்கத்தகாத தானியங்களும், சாகாதிகளும்:**—(1) பனி, காற்று, உஷ்ணம், கெட்டுப்போன வாயு, ஸர்ப்பத்தின் உமிழ்நீர் முதலியவற்றால் தூஷிப்பிக்கப்பட்டதும், கிருமி முதலியவற்றோடு கூடியதும், ஜலத்தில் அமிழ்ந்திருப்பதும், தகாத பூமியில் உற்பத்தியானதும், அகாலத்தில் உண்டானதும், பலவேறு தானியங்களுடன் கலந்திருப்பதும், மிகவும் நாட்பட்டு விட்டதால் வீர்யமிழந்ததுமான தானியங்களைப் பரிஹரிக்கவேண்டும். (2) அதேவிதமான தோஷங்களுள்ளதும், நெய் முதலிய ஸ்நேஹ பதார்த்தங்களின் ஸம்பந்தமில்லாமல் ரூக்ஷமாகவே பக்குவம் செய்யப்பட்டதும், கடினமாயிருப்பதும், இரஸமுண்டாகாததும், உலர்ந்துபோனவையுமான சாகங்களும் விலக்கத் தகுந்தவையாம். (3) ஆனால் முள்ளங்கி மாத்திரம் உலர்ந்து விட்டாலும் உபயோகிக்கக் கூடியதேயாகும். (4) இவ்வித தோஷங்களுள்ளதும், கனியாததுமான பழமும் பெரும்பாலும் இவ்விதமே உபயோகிக்கத் தகாததாகும். (5) ஆனால் பில்வப்பழம் மட்டும் கனியாமல் உபயோகிக்கத் தகுந்தது. 138—140½.

## ஔஷத வர்க்கம்.

**உப்புகளின் பொது குணங்கள் :**—உப்புவகை அனைத்துமே விஷ்யந்தி,[1] ஸூக்ஷ்மம்,[2] வாதஹரம், பாகி,[3] தீக்ஷ்ணம், உஷ்ணவீர்யம், ரோசநம், இலகு இக்குணங்களும், மலத்தை மெதுவாக வெளிப்படுத்துந் தன்மையும் உடையவை[4].—141½.

**இந்துப்பின் குணங்கள் :**—அவற்றுள் இந்துப்பானது சிறிது இனிப்பானது ; விருஷ்யம், ஹ்ருத்யம், த்ரிதோஷஹரம், இலகு, தீபநம் என்னும் குணங்களுடையது ; சிறிது உஷ்ணவீர்யம் ; மற்ற உப்புகளைப்போல் அவ்வளவு அழற்சியை யுண்டுபண்ணுவதல்ல ; நேத்திரங்களுக்கு ஹிதமானது.—142½.

---

1. விஷ்யந்தி—அபிஷ்யந்தியென்றும் கூறப்படும். இரஸமென்னும் அன்னச்சத்து ஓடுவதற்கான குழாய்களை நிரப்பிச் சரீரத்திற்குச் செழிப்பையுண்டாக்குங் குணம்.

2. ஸூக்ஷ்மம்—5-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. பாகி—அழற்சியை யுண்டுபண்ணி கொப்புளிக்கச் செய்யுங்குணம்.

4. இந்துப்பு, வளையலுப்பு, அட்டுப்பு, கடலுப்பு, உவர்மண்ணுப்பு என்னும் இவ்வைந்தும் **பஞ்சலவணங்கள்** எனப்படும்.

வளையலுப்பின் குணங்கள் :—வளையலுப்பு இலகு, ஹ்ருத்யம், தீபநம், ருச்சியம் இக்குணங்களுடையது; ஒருவித மணமுமுள்ளது; ஏப்பத்தைச் சுத்திசெய்யும்; கடுவிபாகத்தையும் மலபந்தத்தைப் போக்குந்தன்மையையும் உடையது.—143½.

அட்டுப்பின் குணங்கள் :—அட்டுப்பு, கபம் வாதம் இவைமேல் நோக்கி வந்தாலும் கீழ்நோக்கி வந்தாலும் அவற்றை அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு வெளிப்படுத்தக்கூடியது; தீபநம் என்னும் குணமுடையது; மலபந்தம், வயிற்றுப்பொருமல், மலாதிகள் கட்டுப்படுவதால் ஏற்படும் வயிற்றுளைத்தல், குருத்வம் இவற்றையும் நிவ்ருத்திசெய்யும்.—144½.

கடலுப்பின் குணங்கள் :—கறியுப்பு எனப்படும் கடலுப்பு விபாகத்தில் கடுவானது; குருகுணமுடையது; கபத்தை விருத்திசெய்யும்.—145.

உவர்மண்ணுப்பின் குணங்கள் ;—சவுட்டுப்பென்னும் உவர்மண்ணுப்பானது சிறிது கைப்பும் கடுவும் கலந்த க்ஷாரத்தின் சுவையுடையது; தீக்ஷ்ணமும் கசியச்செய்யுந்தன்மையுமுள்ளது.—145½.

கிருஷ்ணலவணத்தின் குணங்கள் :—கிருஷ்ணலவணமென்னும் கரியுப்புக்கு, ஒருவித வாஸனையைத் தவிர்த்து வளையலுப்புக்குள்ள மற்றெல்லாக்குணங்களும் உண்டு. 146.

ரோமலவண - பாம்ஸுலவணங்களின் குணங்கள் :—ரோமலணம்[1] என்பது இலகு குணமுள்ளது. பாம்ஸுலவணம் என்னும் கல்லுப்பானது சிறிது க்ஷாரத்துடன் கூடியது; குருகுணமும் கபத்தை விருத்திசெய்யும் தன்மையுமுள்ளது.—146½.

இலவணங்களை உபயோகிக்க வேண்டிய கிரமம் :—முற்கூறிய இலவணங்களைப் பிரயோகிக்க வேண்டுமானால், அவற்றுள் எதையும் முறையே இந்துப்புமுதலாகக்கொண்டு உபயோகிக்க வேண்டும்.—147.

யவக்ஷாரத்தின் குணங்கள் :—யவதானியத்தின் சுணையிலிருந்துண்டாகும் யவக்ஷாரம் என்பது குன்மம், இருதயரோகம், கிரஹணீரோகம், பாண்டு, மண்ணீரலைப்பற்றிய வியாதிகள், வயிற்றுப் பொருமல், தொண்டையைப்பற்றிய நோய்கள், ச்வாஸரோகம், அர்சஸ், கபத்தின் கோளாறுகள், காஸம் இவற்றைப் போக்கும்.—148.

க்ஷாரங்கள் அனைத்துக்கும் பொதுகுணங்கள் ;—எல்லா க்ஷாரமும் மிகவும் தீக்ஷ்ணம், உஷ்ணவீர்யம், கிருமிஹரம், இலகு, பாகீ,[2]

1. ரோமலவணம், ஸௌவர்ச்சலவணம் இரண்டும் ஒரே சரக்கின் பெயர் என்று வைத்யக சப்தஸிந்து.

2. பாகீ—தாதுக்களை அழலச் செய்யுங்குணம்.

சேதி[1], விதாரணம்[2] இக்குணங்களுடையது ; இரத்தம் பித்தம் இவற்றைத் தூஷிப்பிக்கும் ; கடுரஸமும் இலவணரஸமும் அதிகமாயிருப்பதால் சுக்ரம், ஓஜஸ்,[3] தலைமயிர், கண் இவற்றிற்கு அநுகூலமானதல்ல.—149, 149½.

**பெருங்காயத்தின் குணங்கள்** :—பெருங்காயம் வாதகபங்களின் கோளாறுகளையும், வயிற்றுளைத்தலையும், வயிற்றுப் பொருமலையும் போக்கும் ; பித்தத்தைப் பிரகோபப்படுத்தும் ; சுவையிலும் விபாகத்திலும் கடுவானது ; ருச்சியம், தீபநம், பாசநம், இலகு என்னுங் குணங்களுடையது.—150½.

**கடுக்காயின் குணங்கள்** :—கடுக்காய் உவர்ப்பான சுவையுள்ளது ; விபாகத்தில் மதுரமானது ; இலவணரஸமொன்றைத் தவிர மற்ற இரஸங்களும் இதற்குண்டு;[4] ரூக்ஷம், இலகு, தீபநம், பாசநம், மேத்யம், ஸரம், ஆயுஷ்யம் இக்குணங்களுடையது ; திடமான நடுவயதை நிலைநிறுத்துவதில் சிறந்தது ; உஷ்ணவீர்யமானது ; புத்திக்கும் புலன்களுக்கும் வன்மைதரக் கூடியது ; குஷ்டம், தேஹ நிறம் மாறுபடுதல், தொண்டைக்கம்மல், வெகு நாட்பட்ட ஜ்வரம், விஷமஜ்வரங்கள், சிரோரோகங்கள், நேத்திர ரோகங்கள், பாண்டுரோகம், இருதயத்தைப்பற்றிய ரோகம், காமாலை, கிரஹணீ ரோகம், க்ஷயம், சோகை, அதிஸாரம், மேதோரோகம்,[5] மூர்ச்சா ரோகம், கிருமிரோகம், ச்வாஸம், காஸம், வாயில் நீர்சுரத்தல், அர்சஸ், ப்லீஹரோகங்கள், வயிற்றுப் பொருமல், கிருத்ரிமவிஷ ஸம்பந்தமான கோளாறுகள், உதரரோகங்கள், ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் இந்த்ரியமார்க்கங்களும், மலம் முதலியவை வெளியாக வேண்டிய மார்க்கங்களும் அடைபடுதல், குன்மம், ஊருஸ்பதம்பம்[6], அரோசகம் இவற்றையும், கபவாதங்களாலுண்டாகும் அந்தந்த ரோகங்களையும் நிவ்ருத்தி செய்யவல்லது. 151—155.

**நெல்லிக்காயின் குணங்கள்** :—நெல்லிக்காயும் கடுக்காய்க்குச் சமானமான குணங்களுடையது ; ஆனால் சீதவீர்யமும், அம்லரஸமும், பித்த கபங்களைப் போக்குந்தன்மையும் இதற்கு விசேஷமான குணங்களாம்.—155½.

---

1. சேதி—இதுவே சேதநமென்றும் கூறப்படும் ; கபம் முதலிய தோஷங்களை அறுத்து வெளிப்படுத்துங்குணம்.

2. விதாரணம்—வீக்கம் அல்லது கட்டி முதலியவற்றை உடைக்குங் குணம்.

3. ஓஜஸ்—43-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

4. கடுக்காய்க்கு துவர்ப்பு முக்கிய ரஸம்; புளிப்பு, கார்ப்பு, இனிப்பு இந்த நான்கும் உபரஸங்களாம். ஆகவே கடுக்காய் இலவண ரஸத்தைத் தவிர்த்து மற்ற ஐந்து ரஸங்களுமுடையது.

5. மேதோரோகம்—கொழுப்பு அதிகரித்து தேஹம் ஸ்தூலித்துவிடும் வியாதி.

6. ஊருஸ்தம்பம்— வீக்கத்தோடும் வலியோடும் தொடை அசைக்க முடியாமற் போதல்.

தான்றிக்காயின் குணங்கள் :— தான்றிக்காயானது விபாகத்தில் கடுரஸமும் சீதவீர்யமும் உள்ளது; தலைமயிர்களை வளர்க்கக்கூடியது; மற்ற விஷயங்களில் கடுக்காய் நெல்லிக்காய்களுக்குச் சற்றேறக்குறைய ஸமான குணமுள்ளது.—156.

த்ரிபலையும் அதன் குணங்களும்:—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன்றுக்கும் ஒரு மிக்க த்ரிபலை எனப் பெயர்; இக்கூட்டு இரஸாயநமென்னும் குணத்திற் சிறந்தது; நேத்திர ரோகங்களையும் போக்கும்; ரோபணமென்னும் குணமும் இதற்குண்டு; சர்மரோகம், சீழ் அல்லது ஊன் தண்ணி முதலியது கசிதல், மேஹரோகம், மேஹரோகம், கபத்தின் கோளாறு, இரக்தபித்தம் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும்.—157.

த்ரிஜாத-சதுர்ஜாதங்களும், அவற்றின் குணங்களும் :—இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, ஏலக்காய் இம்மூன்றுக்கும் த்ரிஜாதகம்[1] என்று பெயர். இம்மூன்று வஸ்துக்களோடு நாக கேஸரமும் சேர்ந்தால் சதுர்ஜாதம் எனப் பெயர். தீக்ஷ்ணம், உஷ்ணவீர்யம், ரூக்ஷம், தீபநம், ரோசநம் என்னும் குணங்களும், பித்தத்திற்குப் பிரகோபமுண்டு பண்ணுந்தன்மையும் இவற்றிற்கு உண்டு.—157½.

மிளகின் குணங்கள் :—மிளகானது பித்தத்தை விருத்தி செய்யும்; தீக்ஷ்ணமானது; உஷ்ணவீர்யம்; ரூக்ஷம்; தீபநம்; ரோசநம்; சுவையிலும் விபாகத்திலும் கடுவானது; கபஹரம்; இலகு குணமுள்ளது.—158½.

திப்பிலியின் குணங்கள் :—(1) திப்பிலியானது ஈரமாயிருக்கையில் கபஹரம், மதுரரஸம், சீதவீர்யம் குருத்வம், ஸ்நிக்த்தம் இக்குணங்களுடையது. (2) அதுவே உலர்ந்து விட்டால், அதற்கு நேர் மாறான குணங்களை யுடையதாகும்; ஸ்நிக்த்தம், விருஷ்யம், கடு ரஸம், மதுரவிபாகம், வாதஹரம், கபஹரம், ஸரம் என்கிற விசேஷகுணங்களும், ச்வாஸ காஸங்களைப் போக்குந்தன்மையும் இவ்வுலர்ந்த திப்பிலிக்கு உண்டு; ஆனால் இரஸாயநமுறையில் உபயோகிப்பதைத் தவிர்த்து, மற்றதில் அதை அதிகமாய் உபயோகிக்கக் கூடாது.159—160½.

சுக்கு இஞ்சி இவற்றின் குணங்கள் :—(1) சுக்கானது தீபநம், விருஷ்யம், கிராஹி, ஹ்ருத்யம், ருச்யம், இலகு, மதுரவிபாகம், ஸ்நிக்த்தம், உஷ்ணவீர்யம், கபஹரம், வாதஹரம் என்னும் குணங்களையுடையது; மலம் முதலியவை கட்டுண்டிருப்பதைப் போக்கி சுத்தம் செய்யும். (2) இஞ்சியும் சுக்குக்குச் சமானமான குணங்களுடையதேயாம்.—161¾.

த்ரிகடுகமும் அதன் குணங்களும்:—மேற்கூறிய மிளகு, திப்பிலி, சுக்கு இம்மூன்றுக்கும் த்ரிகடுகம்[2] என்று பெயர். இது

1. த்ரிஜாதகம்— இதையே த்ரிஸுகந்தம் என்றும் கூறுவர்.
2. த்ரிகடுகத்திற்கு த்ரியூஷணம் என்றும் பெயருண்டு.

உடம்பு ஸ்தூலித்துப் போதல், அக்னி மாந்த்யம், ச்வாஸம், காஸம், யானைக்கால், பீநஸம் இவற்றை நிவ்ருத்தி செய்யும்.—162½.

**சவ்யம் மோடி இவற்றின் குணங்கள்** :—சவ்யமும் மோடியும் சற்றேறக் குறைய குணத்தில் மிளகுக்குச் சமானமானவையே யாம்.—163.

**சித்திர மூலத்தின் குணங்கள்** :—சித்திர மூலம் விபாகவிஷயத்தில் அக்னிக்குச் சமானமானது; சோகை, அர்சஸ், கிருமிரோகம், குஷ்டம் இவற்றைப் போக்கும்.—163½.

**பஞ்சகோலமும் அதன் குணங்களும்** :—திப்பிலி, சுக்கு, சவ்யம், மோடி, சித்திரமூலம் இவ்வைந்தும் ஒருமிக்க **பஞ்சகோலம்** என்று கூறப்படும். இது குன்மம், ப்லீஹரோகங்கள், மஹோதரம், வயிற்றுப் பொருமல், வயிற்றுளைத்தல் இவற்றைப் போக்கும்; தீபநசக்தியும் இதற்கு விசேஷமாய் உண்டு.—164½.

**மஹாபஞ்ச மூலமும் அதன் குணங்களும்** :—பில்வம், பெருங்குமிழன், பெருவாகை, பாதிரி, சிறுவழுதுணை இவ்வைந்துக்கும் **மஹாபஞ்சமூலம்** என்று பெயர். இவை துவர்ப்பும் கைப்பும் கலந்த சுவையுடையவையாம்; உஷ்ணவீர்யமுள்ளவை; வாத கபங்களின் கோளாறுகளையும் அகற்றும்.—165½.

**இலகுபஞ்சமூலமும் அதன் குணங்களும்**:—கண்டங்கத்திரி, கத்திரி, சிறுமல்லிகை, பெருமல்லிகை, நெரிஞ்சில் இவ்வைந்துக்கும் **இலகுபஞ்சமூலம்** என்று பெயர். இவற்றின் சுவையும் விபாகமும் மதுரமானவை; அதிக உஷ்ணவீர்யமாவது அதிக சீதவீர்யமாவது இல்லாமல் நடுத்தரகுணமடையவை; த்ரிதோஷஹரம்.—166½.

**மத்யமபஞ்சமூலமும் அதன் குணங்களும்**:—சிற்றுமுட்டி, சாறணை, ஆமணக்கு, நரிப்பயறு, காட்டுளுந்து இவ்வைந்தும் ஒரு மிக்க **மத்யமபஞ்சமூலம்** எனப்படும். இது கபவாதஹரம், ஸரம் என்னும் குணங்களுடையது; பித்தத்தை சிறிது விருத்தி செய்யும்.—167½.

**ஜீவந பஞ்சமூலமும் அதன் குணங்களும்** :— தண்ணீர்விட்டாங் கிழங்கு, மேதா, ஜீவந்தீ, ஜீவகம், ருஷபகம் என்னும் இவ்வைந்தும் **ஜீவந பஞ்சமூலம்**[1] என்று வழங்கப்படும். இதற்கு சக்ஷுஷ்யம், விருஷ்யம், பித்தஹரம் என்னும் குணங்கள் உண்டு.—168½.

**திருணபஞ்சமூலமும் அதன் குணமும்** :— தர்ப்பம், ஞாழல், கரும்பு, பேய்க்கரும்பு, சம்பாத்தாள் இவ்வைந்துக்கும் சேர்ந்து **திருணபஞ்சமூலம்** என்று பெயர். இவை பித்தஹரங்கள்.—169.

**அந்நஸ்வரூப விஞ்ஞாநீயத்தியாயத்திற் கூறிய திரவ்யங்களின் தொகுதி** :—சூகதான்யங்கள், சிம்பீ தான்யங்கள், பக்வான்னங்கள், கனிகள், ஔஷதங்கள் என்னும் இவற்றின் வகுப்புகளைக் கொண்டு தினந்தோறும் உபயோகிப்பதற்கு அவசியமாயுள்ள சில உணவுவகைகள் இங்ஙனம் இங்கு மொழியப்பட்டன.—170.

---

1. ஜீவந்தீ, ஜீவகம், ருஷபகம், மேதா என்னும் பதார்த்தங்களுக்கு இதர பாஷைகளில் பெயர் கிடைப்பதில்லை.

## ஏழாம் அத்தியாயம்.

### அன்னரக்ஷை.[1]

அப்பால் அன்னரக்ஷை யென்னும் விஷயத்தை விளக்குகிற அத்தியாயம் கூறப்படுகின்றது :—

**அரசருக்கு அருகில் வைத்தியன் இருந்து அன்னபானாதிகளைக் காப்பது :—** அரசன், தனது அரண்மனைக்கு அருகில் உயிரைக் காக்கும் உத்தமாசிரியனை [2] வஸிக்கச் செய்யவேண்டும் ; இவ்விதம் செய்தால், அவ்வாசிரியன், அரசனது ஆயுளைக் காப்பதற்கு அவசியமான அகில விஷயங்களிலும் எப்பொழுதும் கண்ணுங் கருத்துமாயிருந்துவரக்கூடும். அன்னபானங்களில் விஷப்பொருள் ஏதும் ஸம்பந்திக்காதவாறு அவற்றைக் காத்துவரவேண்டும் ; அதிலும் மன்னவருடைய அன்னபானாதிகளைக் காப்பது முக்கியம் ; ஏனெனில், பிரஜைகளுடைய நன்மைகளை நிறைவேற்றுவதும், தீமைகளைத் தீர்ப்பதும் அரசருக்கு அதீனமானவை. அறம், பொருள், இன்பம் முதலிய மற்ற விஷயங்களும் அவர்களுடைய பொறுப்பாயிருக்கின்றன.—1, 2.

**விஷங்கலந்த அன்னத்தின் குறிகள் :—** அன்னம் கெட்டியாகப் போய் மீண்டும் மிருதுவாகச் செய்ய முடியாமற்போனாலும், சமைக்கும்பொழுது பக்குவமாவதற்கு வெகு நேரம் ஆனாலும், சமைத்த பிறகு சீக்கிரத்தில் பழைய அன்னம்போல் திரிபடைந்தாலும், மயிலின் கழுத்தைப்போன்ற நிறமுள்ள ஆவி வெளிவந்தாலும், உணவை யுண்டதும் மனோப்ரமை-மூர்ச்சை-உமிழ்நீர் சுரத்தல் என்னும் இவ்விகாரங்கள் தோன்றினாலும், அன்னத்தின் இயற்கையான நிறம் மணம் முதலியது மாறுதலடைந்தாலும், சந்த்ரிகை யென்னும் பளபளப்பான மினுக்கங்கள் ஏற்பட்டாலும் அது ஏதோ விஷப்பொருள் ஸம்பந்தப்பட்டதாயிருக்க வேண்டுமென்று அறிக.—3, 4.

**விஷங்கலந்த வியஞ்ஜநங்களின் குறிகள் :—** வியஞ்ஜநங்கள் [3] ஏதேனும் விஷஸம்பந்தத்தினால் சீக்கிரம் உலர்ந்துவிடும் ; அவை அழுக்கடைந்து வெந்து விகாரங்கொள்ளும் ; அவற்றை உற்று நோக்கும்போது நமது நிழல் இயற்கையினும் குறைந்த அளவாகவாவது, அதிக அளவாகவாவது, வேறு விதமான கோளாறுடன் கூடியதுபோலவாவது காணப்படும் ; அல்லது நிழலின் உருவமே புலப்படாமலும் போகலாம் ; அவற்றில் நுரையும், மேலே பல நிறமுள்ள கோடுகளும், இடையிற் பல பிரிவுகளும், நூல்களைப்

1. அன்னரக்ஷாத்தியாயம்—ஆஹாரங்களில் விஷப்பொருட்கள் ஸம்பந்திக்காதபடியும், அவை கெடாமலிருக்கும்படியும் அவற்றைச் சுத்தமாயிருக்கும்படி காப்பதற்கான உபாயங்களைக் கூறும் அத்தியாயம்.
2. உயிரைக் காக்கும் ஆசிரியன்—வைத்தியன்.
3. வியஞ்ஜநங்கள் :—அன்னத்தோடு கலந்து உபயோகிப்பதற்கான பருப்பு குழம்பு காய் கறிகள் முதலியவையாம்.

போன்ற விகாரங்களும், குமிழ்களும் ஏற்படக்கூடும். ராகங்கள்[1], காண்டவங்கள்[2], சாகம், மாம்ஸம் இவைகள் அதற்குற்றவாறு கெட்டியாக நில்லாமல் பலவாறு சிதறுண்டு, சுவையிலும் மாறுதலடைந்தால், அவையும் விஷஸம்பந்தமுள்ளவை யென்றறிக.—5, 6.

விஷங்கலந்த திரவபதார்த்தங்களின் குறிகள்:—மாம்ஸரஸத்தில் கருநிறமான கோடுகளும், பாலிலும் தயிரிலும் சிவந்த கொடி போன்ற கோடுகளும், மோரில் கருமஞ்சள் நிறமான கோடுகளும், நெய்யில் ஜலத்தைப்போன்ற கோடு முதலியவைகளும், மதுவிலும் ஜலத்திலும் சுத்தக் கறுப்பான கோடுகளும், தேனில் பச்சைக் கோடுகளும், தைலத்தில் சிவந்த கோடுகளும் உண்டானால் அவை விஷஸம்பந்தமுள்ளவையாம்.—7, 7½.

விஷஸம்பந்தமுள்ள வேறு சில பதார்த்தங்களின் அறிகுறிகள் :— பழுக்காத இளங்காய்கள் திடீரென்று கனிந்திருப்பதாகத் தோன்றினாலும், பழுத்தவை அழுகிப்போனாலும், ஈரமான வஸ்துக்கள் வாடிப்போனாலும், உலர்ந்தவை அழுக்கடைந்தாலும் அவை விஷப் பற்றுடையவைகளாயிருக்கும். மிருதுவான வஸ்துக்கள் கடினமாகவும், கடினமானவை மிருதுவாகவும் பரிசத்தில் மாறுதலடைந்தால் அவையும் விஷங்கலந்தவையாகும். புஷ்பம் முதலியவை திடீரென்று முனையில் வெடித்திருப்பதும், அவை வாஸனையில் மாறுதலுறுவதும் ஏதோ விஷஸம்பந்தத்தைக் குறிப்பிடக்கூடியவை யென்றறியலாம். வஸ்திரத்தில் அழுக்கடைந்து ஆங்காங்கு வட்டவடிவமான கறைகள் பிடித்தாலும், அவற்றின் முந்தானைகளின் நூல்கள் சிதறிப் போனாலும், தாதுப்பொருளென்ன, நல்முத்துவென்ன, கட்டைகளென்ன, கற்களென்ன, இரத்தினம் முதலியவை யென்ன, இவை அழுக்கடைந்து எண்ணெய்ப்பசையின் கலப்புள்ளவைபோல் காந்தியிழந்து பரிசத்திலும் இயற்கைக்கு மாறாகக் காணப்படுமாயின், அவற்றிலும் ஏதோ விஷம் ஸம்பந்தித்திருப்பதாய் அறியலாம்.8—11.

விஷமிட்டவனின் அறிகுறிகள்:—உணவுமுதலியவற்றில் விஷமிட்டவனை அடியில் வரும் குறிகளால் அறிந்துகொள்ளலாம். அவனுடைய முகம் ஒருவாறு கறுத்தும் உலர்ந்தும் காணப்படும் ; ஒருவிதமான விகாரங் கொண்டவனாய் திசைகளை அங்குமிங்குமாய் நோக்குவான்; வியர்வை சொரிய உடல்நடுங்க பயந்து திகிலடைந்து தட்டுத் தடுமாறி நடப்பான்; கொட்டாவி விடுவான்.—12.

விஷமுள்ள உணவு முதலியதைப் பரீக்ஷிக்கும் முறை:—விஷம் ஸம்பந்தித்த அன்னத்தை அக்னியிலிட, அவ்வக்னி உடனே ஒரு முறை சுழன்று, அதிகமாய் வெடிக்கும்; மயிலின் கழுத்தைப்போன்ற நிறத்துடன் அதிலிருந்து புகையும் ஜ்வாலையும் கிளம்பும்; தாங்க

1. ராகம்—சிவந்த நிறமான ஒருவித இனிய பணியாரம்.
2. காண்டவம்—லட்டு முதலியதைப்போன்ற பக்ஷணம்.

முடியாத ஒருவித வாஸனையும் உண்டாகும்; அவ்விதமான அன்னம் முதலியதை ஈக்கள் தின்றால் அவை மரித்துவிடும். அதைக் காக்கை புஜித்தால் தொண்டையின் த்வனி மழுங்கி விடும். கிளி, நச்சுக்குருவி, பெண்கிளி, இவை விஷங்கலந்த ஆஹாரத்தைக் கண்டதும் கூக்குரலிடும். அன்னப்பறவையானது அவ்வுணவைப் புஜித்து இங்குமங்கும் தடுக்கி விழும். நிலாமுக்கிப் பக்ஷிக்கு உடலில் வாட்டமுண்டாகும். சகோரபக்ஷியின் கண்களுக்கு இயற்கையாயுள்ள செந்நிறம் மாறிவிடும். கிரௌஞ்சபக்ஷிக்கு இதனால் ஒருவிதவெறி அதிகரிக்கும். மாடப்புறா, குயில், கள்ளிக்காக்கை, சக்கிரவாகப் பறவை இவை விஷப்பொருள் ஸம்பந்தித்த உணவுகளை உபயோகிப்பதால் உடனே உயிரிழக்கும். பூனை அதைக் கண்டு பிரமித்து நிற்கும். குரங்கு மலங்கழியும். மயில் அதைப் பார்த்து ஸந்தோஷமடையும். அதனால் விஷத்தின் வீர்யமும் குன்றிவிடும். இவ்வித பரிசோதனைகளால் அன்னம் விஷங்கலந்ததென்று அறிந்து, அதனால் ஏதேனும் சிற்றுயிர்களும் எவ்வாறு உயிரிழக்காமலிருக்குமோ அவ்விதமாய் அவ்வுணவை தூரத்தில் பரிஹரிக்க வேண்டும். 13—17½.

விஷங் கலந்தவற்றைப் பரிசிப்பதால் உண்டாகும் அவக்குறிகளும் பரிஹாரமும்:— விஷஸம்பந்தமுள்ள அன்னம் முதலியவற்றைப் பரிசித்தால் தினவு, எரித்தல், அழற்சி, ஜ்வரம், வலி, கொப்புளித்தல், பரிசவுணர்ச்சியிழத்தல், நகங்களும் மயிர்களும் உதிர்தல், வீக்கம் இவ்விகாரங்கள் ஸம்பவிக்கும். இந்த நிலைமையில் விஷஹரமான வஸ்துக்களால் [1] அவ்வவயவத்தை நனைப்பது நலம்; வெட்டிவேர், சந்தனம், தாமரைக் கிழங்கு, வெண் கருங்காலி, தாளிசப்பத்திரி, இலவங்கப் பத்திரி, கோஷ்டம், சீந்தில் நத மென்கிற ஒருவித வாஸனைப் பொருள் இவற்றின் கல்கத்தினால் [2] அவ்விடத்தில் லேபனம் [3] செய்வதும் உத்தமமாம். 18—19½.

விஷங்கலந்த வஸ்து வாயில் படுவதால் உண்டாகும் துர்க்குணங்களும் பரிஹாரமும்:—விஷங் கலந்த வஸ்துவை வாயில் வைத்தால் உமிழ்நீர் அதிகமாகக் கசியும்; நாக்கு, உதடு இவை உணர்ச்சியிழந்து விடும்; அழற்சி, காரல் அல்லது தினவு, பற்கூச்சம், சுவையறிய முடியாமை, முகவாய்க்கட்டை அசைக்க முடியாமற் போதல் என்னும் இக்குறிகள் உண்டாகும். இந்த நிலைமையில் முற்கூறிய வெட்டிவேர் முதலிய சரக்குகளால் வாய்க் கொப்புளிப்பதும்,

1. விஷஹரமான வஸ்துக்களையும் சிகித்ஸையையும் பற்றி உத்தரஸ்த்தானத்தில் 36, 37, 38-வது அத்தியாயங்களைப் பார்க்க.

2. கல்கம்—எந்த வஸ்துவையும் இடித்து அல்லது அரைத்து, திரவமாகவு மில்லாமல் சூர்ணமாகவு மில்லாமல், பூசுவதற்கு ஏற்றவாறு பக்குவம் செய்யப் பட்ட ஔஷத முறை.

3. லேபநம்—பூச்சு மருந்து.

மற்றும் விஷஹரமான எல்லாச் சிகித்ஸையும் ஹிதமானதாம்.—20, 21.

**ஆமாசய பக்வாசயங்களில்[1] விஷம் சேருவதால் ஸம்பவிக்கும் துர்க்குணங்கள் :**—விஷக்கலப்புள்ள வஸ்து இரைப்பையில் சேர்ந்து விட்டால் வியர்வை அதிகமாகக் கசிதல், மூர்ச்சை, வயிற்றுப் பொருமல், வாந்தி, எரித்தல், கண்பார்வை மந்தமாகப் போதல், மாரடைப்பு, உடம்பில் ஆங்காங்கு ஒருவகையான தழும்புகள் உண்டாதல் ஆகிய இக்குறிகள் ஏற்படும். மேலும் அவன் அநேக நிறமாக வாந்தி செய்வான். அடிக்கடி சிறு நீர் இறங்கும். அதிஸாரமுண்டாகும். சோம்பல், இளைத்தல், வெளுத்தல், மஹோதரம், பலக் குறைவு இவை ஸம்பவிக்கும்.—22, 23½.

**ஆமாசய-பக்வாசயங்களில் சேர்ந்த விஷத்தைப் பரிஹரிக்கும் முறை :**—விஷப்பொருள் இரைப்பையில் சேர்ந்தாலும், பக்வாசயமடைந்தாலும் இந்த நிலைமைகளில் முதலில் வாந்தியும் அப்பால் விரேசநமும் செய்விக்கவேண்டும். அப்பால் மஞ்சள், மரமஞ்சள், முள்வாகை, வெல்லம், ஆவாரை, அவரை, ஹிங்குப்பத்திரி,[2] மூங்கிற் குருத்து, அம்மான் பச்சரிசி வேர், கோழி முட்டை, ஆட்லாங்கொடி இவற்றை நஸ்யமாகவோ, அஞ்ஜநமாகவோ, பாநௌஷதமாகவோ விஷத்தைப் போக்க வேண்டுவதற்காகப் பிரயோகிக்க வேண்டும்.—24, 25½.

**விஷமுண்டவனுக்கு தாம்ர பஸ்மமும் ஸ்வர்ண பஸ்மமும் :**—விஷத்தை உட்கொண்டவனுக்கு வமநசிகித்ஸையும், விரேசந சிகித்ஸையும் செய்வித்து, கால மனுஸரித்து இருதயத்தைச் சுத்தி செய்வதற்காக நுண்ணிய பஸ்மமாகச் செய்த தாம்ரத்தைத் தேனுடன் கலந்து உட்கொள்ளக் கொடுக்கவேண்டும். இருதயம் சுத்தமான பிறகு, ஸ்வர்ண பஸ்மத்தை ஒரு சாணமளவு கொடுக்கலாம்.—26, 27.

**விஷமுண்டவனுக்கு ஸ்வர்ணத்தின் உபயோகம் :**—ஸ்வர்ணத்தை உட்கொள்பவனுடைய தேஹத்தில் விஷமானது, தாமரையிலையில் தண்ணீரைப் போலவே சிறிதும் பற்றுவதில்லை. ஆயுளும் இதனால் விருத்தியாகும். ஸாதாரண விஷங்களை முறிப்பதற்கென்று கூறப்பட்ட இம்முறைகள் கரம் என்கிற விஷங்களைப்[3] போக்குவதற்கும் ஏற்றவையாம்.—28.

---

1. ஆமாசயம்—இரைப்பை; **பக்வாசயம்**—உணவுகள் ஜீர்ணமாவதற்கான சிறு குடல்.

2. பாஷ்பிகா—இதை ஒருவித ஜீரகம் என்றும் கூறுவர்.

3. கரவிஷம்—சத்ருக்களாவது, புருஷர்களைத் தமதிடம் பாசமுள்ளவராகச் செய்ய விருப்பமுள்ள ஸ்த்ரீகளாவது உணவு முதலியவற்றில் இடும் விஷம். தனித்தனியாயிருக்கையில் விஷத்தன்மை யற்றதான சில சரக்குகளை ஒன்றோடொன்று சேர்ப்பதால் உண்டாகும் விஷமும் 'கரவிஷம்' எனப்படும்.

ஒன்றுக்கொன்று குணத்தில் விரோதமான வஸ்துக்கள் :—குணங்களில் ஒன்றுக்கொன்று விரோதமான ஆஹாரவஸ்துக்களும் விஷத்திற்கு அல்லது கரவிஷத்திற்குச் சமானமென்று அறியவும். அவ்வித பதார்த்தங்களாவன :—(1) ஆநூபதேசத்திலுண்டான ஜந்துக்களின் மாம்ஸமானது உளுந்து, தேன், பால், முளைத்த தான்யங்கள் இவற்றுடன் கலந்து உபயோகிக்கப்படுமானால் விஷகுணம் காட்டும்; முள்ளங்கியோடாவது, தாமரைக் கிழங்குகளோடாவது, வெல்லத்தோடாவது அம்மாம்ஸத்தைக் கலந்துபயோகித்தாலும் விரோதமாம். (2) முக்கியமாய் மத்ஸியங்களே—அவற்றிலும் சிலிசிமம் என்னும் ஜாதியைச் சேர்ந்த மத்ஸியங்களே பாலுடன் கூட்டினால் பகைக்குங் குணமுடையவை. (3) அம்லரஸமுள்ள எல்லாக் கனிகளுமே பாலுடன் உபயோகிப்பதற்குத் தகாதனவாம். (4) அவ்வாறே கொள், வரகம் என்கின்ற ஒருவித நெல், கம்பு, வல்லமென்கிற ஒருவகையான பருப்பு, காட்டுப்பயறு இவையும் பாலோடு ஒருமிக்க உபயோகிக்கத் தகாதவையாகும். (5) முள்ளங்கி, மற்றும் பசுங்கீரை முதலியதைப் புஜித்தவுடனேயும் பால் குடிப்பது பிசகு. (6) பசுமையான கீரை முதலியதை உண்பவன் அடுத்தாற்போல் பாலை உட்கொள்ளக் கூடாது. (7) பன்றிமாம்ஸத்தை முள்ளம்பன்றியின் மாம்ஸத்தோடும், (8) மான், கோழி இவற்றின் இறைச்சியைத் தயிரோடும் கலந்து உண்ணக்கூடாது. (9) சமைக்காத மாம்ஸத்தை ரோசனையென்னும் பித்தத்தோடும், (10) முள்ளங்கியை உளுத்தம்பருப்போடும், (11) செம்மறியாட்டு மாம்ஸத்தை குஸூம்பக்கீரையோடும், (12) முளைத்த தான்யத்தைத் தாமரைக் கிழங்கோடும், (13) கிச்சிலிப்பழத்தை உளுத்தம்பருப்பு, வெல்லம், பால், தயிர், நெய் இவற்றோடும் உட்கொள்ளக்கூடாது. (14) வாழைப்பழத்தை மோருடனாவது, தயிருடனாவது, பனம்பழத்தோடாவது புஜிக்கக் கூடாது. (15) மணத்தக்காளியைத் திப்பிலியுடனாவது, மிளகுடனாவது, தேனுடனாவது, வெல்லத்தோடாவது உபயோகிப்பது பிசகு. (16) மத்ஸியம்சமைத்த பாத்திரத்திலாவது, சுக்கு சமைத்த பாத்திரத்திலாவது, மணத்தக் காளியையிட்டுச் சமையல் செய்து உபயோகிப்பது தகாது. (17) வேறு பாத்திரத்தில் சமைத்த மணத்தக்காளியையும் இராத்திரியில் அவ்வாறே வைத்திருந்து மறு நாள் உபயோகிப்பதும் தகாது. (18) மத்ஸியம் பொரித்த எண்ணெயில் அல்லது நெய்யில் வறுத்த திப்பிலியையும் பரிஹரிக்கவேண்டும். (19) வெண்கலப் பாத்திரத்தில் பத்து நாள் ஊறிய நெய்யையும் உபயோகிக்கக்கூடாது. (20) சேங்கொட்டையோடு உஷ்ணமான எப்பதார்த்தத்தையும் கலந்து உட்கொள்ளக் கூடாது. (21) கள்ளிக்காக்கையின் மாம்ஸத்தைச் சூலத்திற் குத்தி அக்னியிற் பக்குவம் செய்தால் விஷகுணமுள்ளதாகும். (22) கம்பில்லமென்னும் குருவியின் மாம்ஸத்தை மோரில் சமைத்தாலும்

விரோதகுணமுண்டாகும். (23) பாயஸம், கள், எள் முதலியவற்றாலான ஒருவித கஞ்சி இவற்றையும் ஒன்றோடொன்றாகச் சேர்த்து உபயோகிக்கக்கூடாது. (24) தேன், நெய், கொழுப்பு, எண்ணெய், ஜலம் இவற்றில் ஏதேனும் இரண்டையோ, மூன்றையோ, அல்லது அனைத்தையுமோ ஸம அளவாகச் சேர்த்து உபயோகித்தால், அவை ஒன்றோடொன்று குணத்தில் விரோதப்படும். (25) தேனையும் நெய்யையும் வெவ்வேறு அளவில் கலந்து உபயோகித்தாலும் காங்கோதகத்தை அவற்றிற்கு அநுபாநமாய் உட்கொண்டால் விஷமித்துவிடும். (26) மேலும் தேனும் தாமரைவித்தும் ஒன்றோடொன்று விரோதப்படும். (27) தேனும், பேரீச்சம்பழத்தினால் ஆன மைரேயம் என்கிற மத்யமும், சர்க்கரையினாலான மத்யமும் ஒன்றுக்கொன்று விரோதகுணமுள்ளவை. (28) பாயஸம் முதலிய பால்ஸம்பந்தமான உணவுக்கு மந்தமென்னும் ஒருவித கஷாயத்தை[1] அநுபாநமாக உட்கொள்வதும், (29) மஞ்சளை கடுகெண்ணெயில் பொரித்து உபயோகிப்பதும் தகாது. (30) கொத்துவசளை யென்னும் கீரை எள்ளுப் பொடி சேர்த்து பக்குவம் செய்யப்படுமானால், அதிஸாரத்தையுண்டாக்கும். (31) நாரையென்னும் பக்ஷியின் மாம்ஸம், கள்ளோடாவது சிறிது வேகவைத்த காராமணியோடாவது உபயோகிக்கப்பட்டாலும் கெடுதியைத் தரும். (32) அதே மாம்ஸம் பன்றிக்கொழுப்பில் பொரித்து உட்கொள்ளப்படுமானால் உடனே உயிரைப்போக்கும், (33) அவ்வாறே தித்திரியென்னும் பக்ஷியென்ன, மயிலென்ன, உடும்புவென்ன, லாவம் என்னும் ஒருவித சிட்டுக்குருவியென்ன, காடையென்ன இவற்றின் மாம்ஸம் ஆமணக்கன் கழிகளை எரித்து அதில் சமையல் செய்தாலும், ஆமணக்கெண்ணெயில் பொரித்தாலும் பிராணாபாய முண்டாக்கும். (34) பச்சைக்குருவியின் மாம்ஸத்தை மஞ்சளின் அடித்தண்டில் குத்தி, அதே மஞ்சள் தண்டையெரித்து அந்த அக்னியில் பக்குவம்செய்து உபயோகித்தாலும் உடனே பிராணனைப் போக்கும். (35) அதே மாம்ஸம் சாம்பலுடன் அல்லது மண்ணுடன் கலந்து தேனில் கூட்டப்படுமானால் அப்பொழுதும் தீங்கு விளைவிக்கும். 29—44.

விருத்தத் திரவ்யத்தின் தன்மையும் அதனாலான தீங்குகளுக்குப் பரிஹாரமும்:—சுருங்கச்சொன்னால் எந்த வஸ்துவாகிலும் தேஹத்திலுள்ள தோஷத்தை அதன் ஸ்த்தானத்திலிருந்து கல்விக் கிளறிவிட்டு, அதை முற்றிலும் வெளிப்படுத்தாமல் நிறுத்தி விடுமானால் அது விருத்தத்திரவ்யம் என்று கூறப்படும். அந்த நிலைமையில் அவ்வித தோஷத்தை வெளிப்படுத்துவதற்கான சோதந சிகித்ஸை

---

1. மந்தம்—ஒருவித பாண்ட கஷாயத்தைச் சேர்ந்த முறை. [அவசியமான சரக்குகளைப் பொடிசெய்து, ஒன்றுக்கு நாலு மடங்கு ஜலம் சேர்த்து ஒரு மட்பாத்திரத்தில் நன்றாகக் கடைய வேண்டும். அவ்விதம் கடையப்பட்டதே மந்தம் எனப்படும். வேறுபலவித மந்தமுறைகளுமுண்டு.]

யைச் செய்யவேண்டும்; அல்லது அவ்வித விருத்தத் திரவ்யங்களுக்கு எதிரிடையான வஸ்துக்களால் சமந சிகித்ஸையாவது [1] செய்ய வேண்டும்; அல்லது அப்பதார்த்தங்களைக்கொண்டே முன்னதாய் சரீரத்தைப் பண்படுத்தவேண்டும். [2]—45.

விருத்தத் திரவ்யங்களும் சிலருக்குக் கெடுதலுண்டுபண்ணுவதில்லை:—வியாயாமம் செய்துவருபவருக்கும், ஸ்நேஹமுறைகளால் சரீரத்தை ஸம்ஸ்காரம் செய்துகொண்டவருக்கும், நன்கு பசிதீபநமுள்ளவருக்கும், நடுப்பிராயத்திலிருப்பவருக்கும், நல்ல தேஹவன்மையைப் பெற்றவருக்கும் ஒன்றுக்கொன்று குணத்தில் விரோதமுள்ள பதார்த்தமும் தீங்குண்டுபண்ணுவதில்லை; அங்ஙனமே ஸாத்மியமான [3] உணவும், அற்ப அளவான ஆஹாரமுங்கூட விரோதகுணமுள்ளதாயினும் கெடுதலைத் தருவதில்லை.—46½.

உபயோகிக்கப்பட்ட அபத்திய வஸ்துவை விடவேண்டியமுறை:-தேஹாரோக்கியத்திற்கு அநுகூலமில்லாத வஸ்து உபயோகிக்கப்பட்டுப் போனால், அவ்வழக்கத்தைப் பரிஹரிக்கும்போது அவ்வித பதார்த்தத்தை முதலில் உபயோகித்து வந்த அளவில் கால்பாகமாகவாவது, வீசம் பாகமாகவாவது கிரமமாக விட்டுவரவேண்டும்.—47.

ஹிதமான வஸ்துவைக் கிரஹிக்கும் முறை:—அவ்விதமே தேஹத்திற்கு அநுகூலமான பதார்த்தத்தைப் புதிதாக உபயோகிக்கத் தொடங்கும்பொழுது உண்ணப்படும் உணவின் அளவில் கால்பங்கு விதமோ, அல்லது வீசம்பங்கு விதமோ முதலில் ஒரு வேளையும், பிறகு இரண்டு வேளையும், அப்பால் மூன்று வேளைகளும் இடையில் விட்டு விட்டு உபயோகிக்கவேண்டும் [4].—47½.

---

1. சமநசிகித்ஸை—இதைப்பற்றி முதல் அத்தியாயம் 24-வது பத்தியத்தின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

2. எவ்வித பதார்த்தங்களால் தேஹத்தில் வியாதி ஸம்பவிக்கிறதோ, அதே பதார்த்தங்களை முன்னதாய் சிறுகச் சிறுக உபயோகித்து, அவற்றை தேஹத்திற்கு அநுகூலமாகச் செய்துகொண்டால், பிறகு அவ்வித பதார்த்தங்களால் எப்பொழுதுமே கெடுதி ஸம்பவிப்பதில்லை. இந்த முறையையே இப்பொழுது வைசூரிகுத்துதல் (Vaccination) முதலியவற்றில் இக்காலத்தியவர் அநுஸரிக்கின்றனர். இதுதான் ஸாத்மியமுறை என்றும் ஆயுர்வேத பரிபாஷைப்படி விவஹரிக்கப்படுகிறது.

3. ஸாத்மியம்—தேஹத்திற்கு பிரதிகூலமான வஸ்து அல்லது காரியம் அநுகூலமாய் விடுவது.

4. முதலில் அப்யஸிக்கப்பட்டுவந்த சரீரத்திற்கு அனுகூலமல்லாத வஸ்துவில் கால் பாகத்தை விலக்கி, அனுகூலமானதில் கால் பாகம் கூட்டி உபயோகிக்கவேண்டும். இவ்வாறு முதல்வேளை செய்துவிட்டு, அடுத்த வேளையில் முற்றிலும் அபத்திய உணவையே உபயோகிக்கவேண்டும். பிறகு மூன்றாவது வேளையில் அபத்திய வஸ்துவில் அரை பாகம் விலக்கி, பத்திய வஸ்துவில் புதிதாக அரை பாகம் சேர்த்துக்கொள்ளவேண்டும். அப்பால் நாலாவது ஐந்தாவது வேளைகளில் முற்றிலும் அபத்திய உணவையே உபயோகிக்கவும். பிறகு ஆறாவது வேளையில் வழக்கத்திற்கு வந்த அபத்திய

அபத்தியமானதை திடீரேன்று விலக்குவதாலும், பத்தியத்தைக் கிரஹிப்பதாலும் உண்டாகும் தீங்குகள்:—*அவ்வாறின்றி, உபயோகிக் கப்பட்டுவந்த அபத்தியமான பதார்த்தத்தை திடீரென்று விலக்கு வதாலும், பத்தியமான வஸ்த்துவைத் திடீரென்று கிரஹிப்ப தாலும் முறையே ஸாத்மியவிகாரமும் அஸாத்மிய விகாரமும் ஸம் பவிக்கும்.*—48½.

தோஷங்களைக் கிரமமாகக் குறைப்பதும் குணங்களைக் கிரமமாக விருத்திசெய்வதும் அவசியம்:—*தோஷங்கள்*[1] *கிரமக் கிரமமாகக் குறைக்கப்பட்டுவருமானால், அவை மறுபடியும் உண்டாகாமல் நிவ் ருத்தியடையும். அவ்வாறே கிரமமாக குணங்களும் மெள்ள மெள்ள விருத்திசெய்யப்படுமானால், அவை மீண்டும் அசைவுபெறு மல் ஸ்திரமாய் நிற்கும்.*—49½.

அபத்திய வஸ்துக்களை எப்போழுதுமே உபயோகிப்பது பிசகு:—*தேஹத்தில் மிக்க நெருக்கடியான நிலைமையைப் பெற்று தூஷிப் பிக்கும் தன்மையை அடைந்திறக்கிற வாதாதி தோஷங்களை அபத் தியமான பதார்த்தங்களைக்கொண்டு மேன்மேலும் தூஷிக்கச் செய்வது கற்றறிந்த வைத்தியனுடைய காரியமல்ல.*—50½.

தேஹத்தை என்றைக்கும் திடமாகப் பாதுகாக்கும் முறை:—*ஆஹாரம், நித்திரை, பிரஹ்மசர்யவிரதம்*[2] *இவற்றை முறைதவ றுமல் நன்கு நடத்திவந்தால், பலமான தூண்முதலியவற்றுல் வீடு தாங்கப்பட்டு வருவதுபோல், சரீரமும் எப்பொழுதும் திடமாகத் தாங்கப் பட்டுவரும்.*—51½.

ஆஹார விஷயம்:—*அவற்றுள் ஆஹார விஷயமானது முன்ன மே விவரிக்கப்பட்டிருக்கிறது; மேலும் ஆங்காங்கு இன்னும் விவ ரிக்கப்படவும் போகின்றது.*—52.

நித்திரையின் உபயோகம்:— *இன்பம், துன்பம், சரீரபுஷ்டி, இளைத்துப்போதல், வன்மையுறுதல், வன்மையிழத்தல், சிற்றின்பப் பற்றை நிறைவேற்றுவதற்கான நல்ல நிலைமையைப் பெறுதல், நபும்ஸகனுய்விடுதல், அறிவாளியாதல், மூடனுயிருத்தல், நன்கு*

---

*வஸ்துவை கால் பாக அளவில் உபயோகித்து, வழக்கத்தில் வாாத பத்தியவஸ் துவில் முக்கால்பாகம் உபயோகிக்கவேண்டும். அப்பால் ஏழாவது எட்டாவது ஒன்பதாவது வேளைகளில் அபத்திய ஆஹாரமே உபயோகித்து, பத்தாவது வேளையில் பத்தியாஹாரத்தையே முடியவும் உபயோகிக்கவேண்ம்டு. இதே கிரமத்தில் இன்னும் சிறிய அளவுகளில் அதாவது வீசம் பாகம் விதமாகவும் அபத்தியங்களை விட்டு, பத்தியங்களையும் அதே கிரமத்தில் முறையே கிர ஹித்து வருவதும் நலம்.*

1. *தோஷங்கள்—தேஹத்தில் உண்டாயிருக்கும் பற்பல விதமான கோளாறுகள் இங்கு தோஷங்கள் என்பதால் குறிக்கப்படுகின்றன; ஆகவே அவை வாத பித்த கபங்கள் அல்லவென்று அறிக.*

2. *பிரஹ்மசர்ய விரதம்—சிற்றின்பங்களைக் கண்டபடி நாடாமல் நிஷ்டையுடன் இருத்தல்.*

உயிருடன் வாழ்தல், மரித்தல் என்னும் இவ்வனைத்தும் நித்திரைக்கு அதீனமாயிருக்கின்றன.—53.

அகால நித்திரை முதலியவற்றால் உண்டாகும் தீமை:—அகாலத்தில் நித்திரைசெய்வதும், மிதமில்லாமல் தூங்குவதும், மிகவும் சொற்பமாய் நித்திரையுறுவதும், காலராத்திரியைப்போல[1] ஆரோக்கியாதி ஸுகங்களையும் ஆயுளையும் அழித்துவிடும்.—54.

இரவில் நித்திரையின்மை, பகலில் தூங்குதல் முதலியவற்றின் குணங்கள் :—(1) இரவில் நித்திரையில்லாமல் கண்விழித்தலால் தேஹம் ரூக்ஷமாகும். (2) பகலில் நித்திரையுறுவதால் சரீரம் ஸ்நிக்த்தமாகும். (3) உட்கார்ந்தவாறு அசைந்துகொண்டே தூங்குவது அதிக ரூக்ஷமுமன்று, ஸ்நிக்த்தமுமன்று.—55.

பகலில் நித்திரை செய்வதற்கு ஏற்றவர்களும் ஏற்ற காலமும் :—கிரீஷ்மருதுவில் வாயுவானது சயாவஸ்த்தையை அடைவதாலும், ஆதாநகாலத்தின் இயல்பினாலும், ரூக்ஷத்தன்மை விருத்தியாவதாலும், இராத்திரிகாலம் குறைவாயிருப்பதாலும் அக்காலத்தில் பகலில் நித்திரை செய்வது நலமே; மற்ற ருதுவில் அவ்விதம் செய்வது கப-பித்தங்களை விருத்திசெய்வதற்குக் காரணமாகும். ஆனால் அடிக்கடி பிரஸங்கம் செய்வது, வாஹனமேறி சவாரிசெய்வது, வழிநடப்பது, மதுபாநம் செய்வது, புணர்ச்சி, சுமையைச் சுமப்பது, மற்றும் வெவ்வேறு வேலைகளைச் செய்வது, கோபித்தல், மனம் வருந்துதல், பயம், வாட்டமுற்று சிரமப்படுதல் ஆகியவற்றால் வருந்துபவரும், ச்வாஸரோகமென்ன, விக்கலென்ன, அதிஸாரமென்ன இவற்றால் கஷ்டப்படுதல், கிழவர்கள், பாலர், துர்ப்பலர்கள், மிக மெலிவடைந்தவர்கள், உரக்ஷதம்[2], நாவறட்சி, வயற்றுவலி இவற்றால் பீடிக்கப்படுபவர்களும், அஜீர்ண ரோகிகளும், ஏதேனும் காரணத்தினால் அடிபுண்டு கஷ்டப்படுபவரும், பித்துப்பிடித்தவர்களும், பகலில் வழக்கமாக நித்திரை செய்பவரும் இராக்காலந் தவிர பகற்பொழுதிலும் தூங்குவது உசிதமே; அவ்வாறு செய்தால் தாதுக்கள் இயற்கையான ஸமநிலைமையைப் பெற்று வரும்; கபமும் ஏற்றவண்ணம் அவயவங்களைப் போஷிக்கக் கூடியதாகும். 56—58½.

பகலிலும் அல்லது இரவிலும் நித்திரை செய்யத்தகாதவர்கள் :—கொழுப்பு அதிகரித்த தேஹமுடையவர்களும், கபப்பிரகோபமுடையவர்களும், அடிக்கடி ஸ்நேஹப்பிரயோகம்[3] செய்து கொள்

1. காலராத்திரி—மரணபயத்தை யுண்டுபண்ணும் மிகக் கொடிய காட்சிகளுடன் கூடிய இரவு.

2. உரக்ஷதம்—மார்பில் கபம் முதலியது அதிகம் சேர்ந்து இரத்தத்துடன் கபம் வெளிவருமாறு இருமுதல்.

3. ஸ்நேஹப்பிரயோகம்—எண்ணெய் முதலியவற்றைத் தேய்த்துக் கொள்வது, அல்லது உட்கொள்வது முதலியது.

பவரும் பகலில் தூங்கக்கூடாது. விஷஸம்பந்தத்தினால் வருந்துபவனும், தொண்டையில் வியாதி யுடையவனும் எப்பொழுதும் இராக்காலத்திலுங்கூட நித்திரையுறக்கூடாது.—59½.

**அகால நித்திரையினால் நேரிடும் கெடுதி :—** தகாத காலத்தில் நித்திரை செய்வதால் மயக்கம், ஜ்வரம், திமிர், பீநஸம், தலைவலி, சோகை, இருதயத்துடிப்பு, ஸ்ரோதஸ்ஸுகள்[1] அடைபடுதல், அக்னிமாந்த்யம்[2] இவை ஸம்பவிக்கும்.—60½.

**அகால நித்திரை, அதி நித்திரைகளுக்குப் பரிஹாரம் :—** அவ்வாறு உண்டாகும் கோளாறுகளில் உபவாஸம், வமநம், ஸ்வேதநம், நஸ்யம் இவ்வித சிகித்ஸைகளைச் செய்து ஔஷதப்பிரயோகம் செய்யவேண்டும். நித்திரை மிதமிஞ்சியுண்டானால், தீக்ஷ்ணவீர்யமுள்ள ஔஷதங்களால் வமநசிகித்ஸையும், அஞ்ஜநமிடுதலும் நலம்; அவ்வித ஔஷதங்களாலேயே நஸ்யமிடுதல், லங்கநம் செய்வித்தல், மனக்கவலை புண்டுபண்ணுதல், புணர்ச்சி செய்வித்தல், வியாயாம மென்னும் தேஹவுழைப்பு, வியஸநமுறச் செய்தல், பயப்படுத்தல், கோபமுண்டு பண்ணுதல் என்னும் இவ்வித உபாயங்களைச் செய்யலாம்; இவற்றால் கபம் அதிகமாகக் குறைந்துவிடுமாகையால் நித்திரையும் விசேஷமா யுண்டாகாமலிருக்கும். 61—62½.

**நித்திரையின்மையினாலுண்டாகும் கெடுதிகள் :—** நித்திரையில்லாவிட்டால் சரீரத்தில் வேதனை, தலையில் ஒருவித பாரமான உணர்ச்சி, கொட்டாவி விடுதல், உடம்பு திமிர்த்துப்போதல், சோர்வடைதல், தலைச்சுற்றல், அஜீர்ணம், சோம்பல், மற்றும் வாத ஸம்பந்தமான ரோகங்கள் இவை உண்டாகும்.—63½.

**காலத்தில் நித்திரை செய்வதும், இரவிற் கண்விழித்தலுக்குப் பரிஹாரமும் :—** ஆகையால் இரவில் அவரவருடைய வழக்கத்திற்கு ஏற்றவாறு தகுந்தவளவு காலத்தில் நித்திரை செய்ய வேண்டும். வழக்கத்திற்கு மாறாகக் கண்விழித்தால், காலையில் ஆஹாரமுண்ணுமலே, இரவில் தூங்கவேண்டியதில் பாதியளவு நித்திரைசெய்யலாம்.—64½.

**நன்கு நித்திரை வருவதற்கான உபாயங்கள் :—** வேண்டியவளவு நித்திரையின்றி வருந்துபவன் பால், மத்யம், மாம்ஸரஸம், தயிர் இவற்றை உட்கொள்ளவேண்டும்; தைலம் முதலியதைத்தேய்த்துக் கொள்ளுதல், நலங்குப்பொடி முதலியவற்றை உடம்பிற்பூசி ஸ்நாநம்

---

1. ஸ்ரோதஸ்ஸுகள்—கண், காது முதலிய இந்த்ரியங்களும், இரத்தம் முதலியது ஓடும் குழாய் முதலியவைகளும்.

2. அக்னிமாந்த்யம்—பசியுண்டுபண்ணும் கூறுகள் குறைந்து பசி மந்தித்தல்.

செய்தல், மூர்த்ததர்ப்பணம்,[1] கர்ண தர்ப்பணம்,[2] நேத்திர தர்ப்பணம்,[3] மனதுக்கினிய மனைவி தனது கொடிபோன்ற புஜங்களால் தழுவுதல், செய்வன திருந்தச்செய்து அமைதியுடன் இருத்தல், மற்றும் மனதுக்கிசைந்த விஷயங்கள் இவையெல்லாம் நித்திரா ஸுகத்தை நிரம்பவும் உண்டுபண்ணக் கூடியன. பிரம்மசர்யத்தில் கருத்து வைத்து, சிற்றின்பத்தில் விருப்பமற்ற மனமுடையவனும், ஸந்தோஷத்துடன் திருப்தியடைந்திருப்பவனுமான மனிதனுக்கு நித்திரையானது காலந்தவறாது தானே வந்துவிடும். 65—67½.

**புணர்ச்சிக்குத் தகாதநிலைமைகளும் காலதேசங்களும்:**—நிமிர்ந்து மேல் முகமாயில்லாமலும், புஷ்பவதியாகவும், மனதுக்குப் பிரியமில்லாமலும், அருவருப்பான காரியங்களைச் செய்து கொண்டும், கெட்டுப்போய்ச் சுருங்கிய மர்மஸ்த்தாநத்துடன் கூடியும், மிகப் பருமனுள்ள அல்லது மிகவும் மெலிந்த தேஹத்தைப் பெற்றும், பிரஸவித்தும், கருத் தரித்துமிருக்கிற ஸ்த்ரீயுடனும் புணர்ச்சி செய்யலாகாது; அங்ஙனமே பிறருடைய ஸ்த்ரீயையும், பிரஹ்மசர்யம் அநுஷ்டிப்பவளையும், மானிடஜாதியைச் சேராத பெண் இனத்தையும் இவ்விஷயத்தில் பரிஹரிக்கவேண்டும். மேலும் குருவின் வீடு, தேவாலயம், இராஜகிருஹம், சில தேவதைகள் குடிபுகுந்த வாஸஸ்த்தலமான விருக்ஷத்தின் நிழல், மயானம், துஷ்டர்களைத் தண்டிக்குமிடம், ஜைநகிருஹம், ஜலந்தங்கியுள்ள இடம், நாற்சந்தி வீதி, ஸங்கிராந்தி முதலிய பருவதினங்கள், தகாத அவயவம், பகற்பொழுது இவற்றிலும் புணர்ச்சி செய்யக்கூடாது. சிரஸ், மார்பு முதலான விடங்களிலும் அவ்வாறு செய்வது பிசகு. அதிக அளவாக போஜனம் செய்திருக்கையிலும், மனக்கோளாறு நேர்ந்திருக்கையிலும், பசித்திருக்கையிலும், அங்கங்கள் சரியான நிலைமையில் நிற்காமலும், நாவரட்சி யிருக்கையிலும், மலபாதை முதலியவற்றை நிவ்ருத்தி செய்து கொள்ளாமலும் இக்காரியம் செய்ய முயலக் கூடாது. பாலர், வயதுமுதிர்ந்தவர், பிணியாளிகள் இவர்களுக்கும் புணர்ச்சியாகாது. 68—71½.

**காலங்களுக்கு ஏற்றவாறு ஸம்போக அளவும், அதற்கு வேண்டிய ஸம்ஸ்காரமும்** :—வாஜீ கரணமென்னும்[4] சிகித்ஸையினால் திருப்தியடைந்திருப்பவன், அவ்வாறே வாஜீகரணம் செய்துகொண்ட ஸ்திரீயுடன் விஷயேச்சையதிகரித்தவனாய் ஹேமந்த ருதுவிலும், சிசிரருதுவிலும் வேண்டியவளவு கூடி வரலாம்; வஸந்த ருதுவிலும், சரத் ருதுவிலும் அதே சிகித்ஸைகளைச் செய்துகொண்டு மூன்று

1. 24-வது அத்தியாயத்தில் மூர்த்ததர்ப்பணத்தின் விவரங்கள் கூறப்படும்.
2. கர்ண தர்ப்பணம்—24-வது அத்தியாயத்தில் விவரம் காண்க.
3. நேத்திர தர்ப்பணம்—23-வது அத்தியாயத்தைப் பார்க்க.
4. வாஜீகரணம்—3-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

நாட்களுக்கு ஒரு முறைவீதம் சேரலாம்; வருஷ ருதுவிலும், பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையே கூடவேண்டும்.—72½.

**முறைதவறுன புணர்ச்சியினுலுண்டாகும் கெடுதிகள்:**—முற்கூறிய முறைகளுக்கு மாருக ஸ்த்ரீகளோடு கூடுபவருக்கு பிரமம் அல்லது தலைச்சுற்றல், தேஹவாட்டம், துடையில் பலக்குறைவு, தேஹ வன்மை யிழத்தல், தாதுக்கள் க்ஷயமடைதல், இந்த்ரியங்களின் சக்தி க்ஷீணகதி யடைதல் என்னும் இவையும், அகால மரணமும் உண்டாகும்.—73½.

**பிரஹ்மசர்யவிரதத்தில் கருத்துள்ளவருக்குண்டாகும் நன்மைகள்:**—தோன்றியவாறெல்லாம் ஸ்த்ரீகளுடன் புணராமல், நியமப்படி அவ்விஷயத்தில் பிரவ்ருத்திப்பவர் ஞாபகசக்தியிலும், மேதையென்னும் புத்தி விசேஷத்திலும், ஆயுளிலும், ஆரோக்கியத்திலும், தேஹபுஷ்டியிலும், இந்த்ரியபலத்திலும், கீர்த்தியிலும், தேஹவன்மையிலும் மேன்மை யடைந்து, இரஜோகுணம் முதலியவை குறைவுபட்டு சுகமாக வாழ்வார்கள்.—74.

**புணர்ச்சிக்குப் பிறகு செய்யவேண்டிய காரியம்:**—ஸ்த்ரீயுடன் கூடிய பிறகு ஸ்நாநம் செய்தல், ஸுகந்தவஸ்து முதலானவற்றைப் பூசிக்கொள்ளுதல், குளிர்ந்த காற்றில் வஸித்தல், கற்கண்டினுல் செய்த சிற்றுண்டிகளைப் புஜித்தல், குளிர்ந்த ஜலம், பால், மாம்ஸரஸம், யூஷமென்னும் கஞ்சி, ஜலத்திற் சேர்த்த அன்னத்தின்மேலுள்ள தெளிவுநீர் இவற்றைப் பருகுதல் என்னும் இவையும், அடுத்தாற்போல் உடனே சயநத்திற்படுத்து நித்திரைசெய்வதும் நலம்; அவ்வாறு செய்பவனுக்கு தேஹத்தில் செலவழிந்த வீர்யம் மீண்டும் சீக்கிரம் உண்டாகும்.—75.

**யோக்கியதையுள்ள வைத்தியரிடம் பிரபுக்கள் தேஹரக்ஷணையை ஒப்புவித்தல்:**—மிகச் செல்வவானுயிருக்கும் அரசன் முதலியவர் சாஸ்திரங்களைக் கற்று நல்ல நடத்தை யுடையவனும், தனது தொழிலில் நிபுணனுயிருப்பவனும், தயாளுவானவனுமான வைத்தியனிடத்தில் முழு நம்பிக்கையோடு தனது தேஹரக்ஷணையை ஒப்புவித்துவிடுவானுயின், அவனுடைய சரீரகாந்தியும், ஆரோக்கிய நிலைமையும், கீர்த்தியும், மற்றுமுள்ள மஹிமையும் செழித்தோங்க, ஆயுளும் விசேஷமாய் வளர்ந்துவர, தனது க்ஷேமம் செழித்தோங்க இன்பமுற்று வாழ்வான்.—76.

---

## எட்டாம் அத்தியாயம்.
### மாத்திராசிதீயம்.

இதன் பிறகு **மாத்திராசிதீயம்**[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது:—

1. மாத்திராசிதீயம்—மாத்திரை யென்ருல் அளவு அல்லது பிரமாணம்; அசிதம் என்ருல் போஜனம்; ஆஹாரம் முதலியதை அளவுப்படி உட்கொள்வதை விவரிக்கும் அத்தியாயம் எனக் கருத்து.

பதார்த்தங்களை அளவறிந்து உபயோகிப்பது:—(1) *எப்பொழுதும் அளவறிந்து ஆஹார முதலியதைத் யுண்ணவேண்டும்.* (2) *ஜாடராக்னியைத் தனது தொழிலில் தூண்டி அதை ஒழுங்காக நடத்துவதற்கும் மாத்திரையே ஆதாரமாயிருந்து வருகிறது.* (3) *குருகுணமுள்ளவைபும் இலகுகுணமுள்ளவையுமான எப்பொருட்களும் குறிப்பிட்ட குணமுண்டுபண்ணுவதாவது அதனதன் மாத்திரையைப் பொருந்தியதாயிருக்கிறது.*—1.

குரு-இலகுகுணங்களுள்ள வஸ்துக்களை உபயோகிக்கும் அளவு:- *குருகுணமுள்ள பதார்த்தங்களை அரைவாசி திருப்தி யுண்டாகையிலேயே நிறுத்தி விடவேண்டும்; இலகுபதார்த்தங்களை, நன்ருகத் திருப்தி யுண்டாவதற்கு ஒரு சிறிதளவு முன்னமே நிறுத்தவேண்டும். இதுதான் குரு-இலகு குணமுள்ள வஸ்துக்களுபயோகிப்பதற்கான அளவாம். அதாவது உட்கொண்ட வஸ்துவானது எவ்வளவு நாழிகைக்குள்ளாகச் சுகமாய் ஜீர்ணமாகின்றதோ அந்த கால அளவுக்குத் தகுந்தவாறு உபயோகிக்கப்படும் அளவுதான் மாத்திரையென்று கூறப்படுகிறது.*—2.

உணவைக் குறைந்த அளவில் உபயோகிப்பதின் கெடுதிகள்:— *முறைப்படி உபயோகிக்கப்படும் மாத்திரையிலும் குறைந்த அளவில் எடுத்துக் கொள்ளப்படும் உணவானது பலம் உண்டாவதற்கும், தேஹம் செழிப்பதற்கும், ஓஜஸ் ஏற்படுவதற்கும் போதாததாய்விடும்; வாதரோகங்கள் அனைத்துக்கும் காரணமாகவும் ஆகின்றது.*—3.

உணவை அதிக அளவில் உபயோகிப்பதின் கெடுதிகள்:—*அதிக அளவாக உபயோகிக்கப்படும் உணவானது எல்லாத் தோஷங்களையும் சீக்கிரத்தில் பிரகோபிக்கச் செய்யும். அவ்விதமான கோளாறுல் ஜீர்ணமாகாமல் கெட்டுப்போன அவ்வுணவினுல் வாயுமுதலியவை ஒருமிக்க நெருக்கப்பட்டு திடீரென்று பிரகோபமடைந்து, அதே உணவுடன் கூடி, வயிற்றிலுள்ள கெட்டுப்போன அன்னம் முதலியவற்றை மேல் நோக்கி வாந்தி ரூபமாகவோ, கீழ்நோக்கி மலங்கழிதல் ரூபமாகவோ வரமுடியாமல் செய்து* அலசகம் *என்கிற விகாரத்தையாவது, அதற்கு மாருக வாந்தியோடு விரேசநத்தை ஒருமிக்க உண்டுபண்ணி விஷூசி யென்னும் விகாரத்தையாவது திடீரென்று உண்டுபண்ணும்.* 4—5½.

அலஸகம் :—*உட்கொள்ளப்பட்ட ஆஹாரமானது மேல் நோக்கி வந்து வாந்தியுமாகாது; கீழ்நோக்கி விரேசநத்திலும் வராது; குடலில் ஜீர்ணமுமாவதில்லை; அது இரைப்பையிலேயே நின்று அலஸமென்னும்*[1] *நிலைமையை அடைந்துவிடும்; அதனுலேயே இவ்விகாரம்* அலஸகம் *என்று கூறப்படுகிறது.*—6½.

---

1. *அலஸம்—மந்தித்துப் போதல்.* இரைப்பையில் விழுந்த உணவு *அதற்கு* இயல்பான வகையில் ஜீர்ணமாகாமல் மந்தப்பட்டு விடுவது.

விஷூசி :—அநேகவிதமான வேதனைகளை யுண்டுபண்ணி, வாயுமுதலானவற்றை மிகவும் பிரகோபிக்கச் செய்து, அவயவங்களை யெல்லாம் ஊசிகளால் குத்துவதுபோல் துன்பமுண்டுபண்ணு மியல்புடையதாகையால் இது விஷூசியென்று கூறப்படுகிறது.—7½.

மூன்றுவித விஷூசிகள் :—அதில் (1) வயிற்றுவலி, தலைச்சுற்றல், வயிற்றுப்பொருமல், நடுக்கம், விறைப்பு முதலிய குறிகள் காணப்படுமானால் அது வாதத்தினால் உண்டான விஷூசியென்றும், (2) ஜ்வரம், அதிஸாரம், தேஹத்தின் உட்புறத்தில் தாபம், நாவரட்சி, மூர்ச்சையடைதல் முதலிய விகாரங்கள் உண்டானால் அவ் விஷூசி பித்தத்தினால் ஏற்பட்டதென்றும், (3) வாந்தி, தேஹம் பாராமாயிருத்தல், வாய் அசைக்க முடியாமற்போதல், மூக்கால் அடிக்கடி கபம் கசிதல் முதலிய கோளாறுகள் இருந்தால் அது கபத்தினாலுண்டான விஷூசி யென்றும் அறிக.—8, 9.

அலஸகமுண்டாகும் விசேஷ வகை :—துர்ப்பலன், ஜாடராக்னி மந்தப்பட்டவன், மலம் முதலிய வேகங்களை அடக்குபவன் ஆகியவர்களுக்கு விசேஷமாக இவ்வியாதியுண்டாகும். அவனுடம்பில் விருத்தியான வாயுவினால் உணவானது ஒருமிக்கச் சேர்த்து இறுக்கப்பட, அதை கபமானது குடலுக்குள்ளேயே தடுத்து விடுகின்றது; அவ்வாறு தடுக்கப்பட்ட உணவானது அலஸம் என்னும் நிலைமையடைந்து, தோஷங்களால் கலக்கப்பட்டு, தேஹத்தில் சல்யம் போலவே இருந்து கடுமையான வலி முதலியவற்றை யுண்டுபண்ணும்; ஆனால் வாந்தியாவது பேதியாவது இராது. இவ்வியாதியே அலஸகம் எனக்கூறப்படுகிறது.—10, 11.

தண்டகாலஸகம் :—தீங்கு செய்விக்கக்கூடிய ஆமமென்னும் விஷத்தினால் வாதம்முதலிய தோஷங்களுடைய மார்க்கங்கள் அடைபட்டுப்போக, அதனால் தோஷங்கள் மிகவும் கெட்டுப்போய், அங்கங்களில் எங்கும் அவை குறுக்காகப் பாய்ந்தோடும்; அப்பொழுது சரீரம் முற்றிலும் தடியைப்போல் விறைத்து நிற்குமாகையால், அவ்வித வியாதி தண்டகாலஸகம் என்று வழங்கப்படும். வெகு சீக்கிரத்தில் பிராணாபாயம் விளைவிக்கக்கூடியதாயிருப்பதால், இது சிகித்ஸைக்கு ஏற்றுக்கொள்ளக்கூடாத அஸாத்திய வியாதியாகும்.—12½.

ஆமவிஷம் :—ஒன்றுக்கொன்று விரோதகுணமுள்ள ஆஹாரப் பொருட்களையும், மிதமிஞ்சிய உணவுகளையும், ஜீர்ணமாகக்கூடாத வஸ்துக்களையும் உபயோகிப்பவனுக்கு விஷக்குறிகளுள்ளதும், விஷமென்று ஒருவாறு வ்யவஹரிக்கப்படுவதும், ஆகவே மிகவும் தீங்கு விளைவிக்கக்கூடியதுமான ஆமதோஷம் உண்டாகின்றது. இந்த தோஷம் விஷஸ்வரூபமுள்ளதா யிருப்பதாலும், சீக்கிரத்தில் பிராணாபாயமுண்டாக்குந்தன்மையதா யிருப்பதாலும், விஷத்திற்கும் ஆமதோஷத்திற்கும் சிகித்ஸையில் பரஸ்பர

விரோத மிருப்பதாலும்[1] இது அஸாத்திய வியாதியாகின்றது— 13, 14.

**அலஸகசிகித்ஸை :**—அப்பால் ஆமதோஷமானது அலஸக மென்னும் நிலைமையை யடைந்து சிகித்ஸைக்கு வசப்படக்கூடிய தாகத்தோற்றுமானால், வசம்பு, உப்பு, மருக்காரையின் பழம் இவற்றை வெந்நீருடன் உட்கொண்டு சீக்கிரத்தில் வாந்தி செய்ய முயற்சிக்கவேண்டும்; பிறகு ஸ்வேதசிகித்ஸையையும்,[2] மலம் அபாநவாயு இவற்றை வெளிப்படுத்துங் குணமுடைய பலவர்த்தி யையும்[3] பிரயோகிக்கவேண்டும்; அவயவங்களை இங்குமங்கும் வளைத்து[4] நன்றாக ஸ்வேதசிகித்ஸை செய்து அவற்றை ஒருவாறு சுற்றிக்கட்டவும் வேண்டும்.— 15, 16.

**விஷூசி விருத்தியானால் செய்யவேண்டிய சிகித்ஸை :**— விஷூசி மிகவும் அதிகரித்துவிட்டால் குதிகால்களில் சூடு இடுவது நலம். பிறகு அன்றைய தினமெல்லாம் அவனை உபவாஸமிருக்கச் செய்து, விரேக சிகித்ஸை செய்து கொண்டவனுக்கு அவசியமான உபசார கிரமங்களை நிறைவேற்றவேண்டும்.—17.

**அஜீர்ணம் கடுமையா யிருக்கையில் ஔஷதமுட்கொள்வது பிசகு :**—அஜீர்ணரோகி, கடுமையான வேதனையினால் பீடிக்கப்படும் நிலைமையிலும் சூலஹரமான ஔஷதத்தை[5] உட்கொள்ளக் கூடாது; ஏனெனில், ஆமதோஷத்தினால் குன்றிப்போயிருக்கும் ஜாடராக்னியானது அபக்குவமான தோஷங்களையும், ஔஷதங் களையும், உணவுகளையும் பக்குவப்படுத்துவதற்குப் போதுமான பலமுடையதல்ல; மேலும் இவ்வளவு கோளாறுகளின் சேர்க்கை

---

1. விஷத்தைப்போல வெகு துரிதமாக உடலெங்கும் வியாபித்து ஆபத்தை விளைவிக்கக் கூடியதாயிருப்பதால் விஷகுணங்களுள்ளதென்றும், ஆகவே விஷமென்று விவஹரிக்கக்கூடியதென்றும் சொல்லுகிறார்கள். முறைப்படி விஷத்திற்குச் சீதளமான சிகித்ஸை செய்ய வேண்டியதாயிருந் தும், ஆமதோஷத்திற்கு உஷ்ண சிகித்ஸை அவசியமானதால் இது விருத்த சிகித்ஸை யெனப்படுகிறது.

2. ஸ்வேதசிகித்ஸை—வியர்வை யுண்டாகும்வண்ணம் செய்ய வேண்டிய சிகித்ஸை.

3. பலவர்த்தி—மதநபலமென்னும் மருக்காரையினால் செய்யப்படும் வர்த்தியைப்போன்ற குளிகை. [நேபாளம், மருக்காரை, திப்பிலி, கரி யுப்பு, ஒட்டடை, கோஷ்டம் இவற்றைப் பசுமூத்திரத்தினாலும், புளிப்பான கனிவகைகளின் சாற்றாலும், தேனாலும் ஆட்டியெடுத்து, கையின் பெரு விரலுக்குச் சற்றேறக்குறைய ஸம அளவான வர்த்தியைச் செய்து, அதில் சிறிது நெய்யைத்தடவி குதத்தினுள் வைக்க, வயிற்றுவலி, வயிற்றுப் பொரு மல் முதலியன நிவ்ருத்தியாகும்.]

4. இவ்விடத்தில், ஆமதோஷத்தினால் உடலெல்லாம் வளைந்து போவது இயல்பு.

5. சூலஹர ஔஷதம்—வயிற்றுவலியைப் போக்கும் ஔஷதம்.

யினுனுண்டாகும் கலக்கமுற்ற நிலைமையானது பிணியாளியை அடியோடு துலைத்து விடவுங்கூடும்.—18, 18½.

**ஆஹாரம் ஜீர்ணமான பின் மிச்சமுள்ள தோஷத்தைப் பக்குவம் செய்ய ஔஷதம்** :—உணவு நன்கு ஜீர்ணமானபிறகு, வயிற்றில் பொருமலும் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சியும் இருந்தால், மிச்சமுள்ள ஆமதோஷத்தைப் பக்குவப்படுத்துவதற்காகவும், ஜாடராக்னியைத் தூண்டுவதற்காகவும் ஔஷதம் ஏதேனும் தகுந்தவாறு உபயோகிக்கவேண்டும்.—19½.

**ஆமவிகாரங்களுக்கு அபதர்ப்பணசிகித்ஸை**: — ஆமதோஷத்தினுலுண்டாகும் விகாரங்களுக்கு அவற்றிற்கு ஆதாரமான மூன்று தோஷங்களின் நிலைமைகளுக்கு ஏற்றவாறு மூன்றுவிதமான **அபதர்ப்பணசிகித்ஸை** [1] செய்ய, அவ்விகாரங்கள் நிவ்ருத்தியாகும்; இச்சிகித்ஸையை நன்றாகக் கவனித்துச் செய்யவேண்டும்.—20½.

**மூன்று விதமான அபதர்ப்பண கிகித்ஸைகள்** :—மூன்று வகைப்பட்ட அவ்வபதர்ப்பண சிகித்ஸைகளில் சொற்ப அளவான தோஷத்தில் லங்கந சிகித்ஸையும், [2] மத்திய அளவான தோஷத்தில் லங்கந-பாசந சிகித்ஸையும், [3] தோஷம் அதிக அளவாயிருக்கையில் சோதந சிகித்ஸையும் [4] அநுகூலமானவை. சோதநசிகித்ஸையானது கோளாறடைந்த தோஷங்களை அடியோடு வெளிப்படுத்திவிடும்.—21½.

**வியாதிகளுக்குச் சிகித்ஸை செய்யும் போது முறைகள்** :—(1) இவ்வாறே இதர வியாதிகளுக்கும் அதனதன் காரணங்களுக்கு எதிரிடையான முறையில் சிகித்ஸை செய்யவேண்டும். (2) இங்ஙனம் செய்தும் வியாதி தொடருமாகுல், அப்பொழுது வைத்தியன், ஹேது விபர்ய்யமெனப்படும் காரணத்திற்கு எதிரிடையான சிகித்ஸையைப் பரிஹரித்து, வியாதியின் குணங்களுக்கு எதிரிடையான சிகித்ஸையை யுக்தப்படி யோசித்துப் பிரயோகிக்க வேண்டும். [5] (3) அவ்விரண்டு சிகித்ஸைகளும் பயன் படாவிட்டால், அதே வியாதிக்கு அல்லது அதே வியாதியின் காரணத்திற்கு ஆதார

---

1. அபதர்ப்பண சிகித்ஸை—லங்கநம் வமநம், விரேசநம் முதலான சோதநசிகித்ஸை முதலியவை அபதர்ப்பண சிகித்ஸை யெனப்படும். உணவு முதலியதைப் பரிஹரித்து, தேஹத்திலுள்ள தோஷங்களை வெளிப்படுத்துவதற்கான சிகித்ஸாமுறைகளும் இப்பெயரால் வழங்கப்படும்.

2. லங்கந சிகித்ஸை-ஆஹார மொழித்துச் செய்யப்படும் சிகித்ஸை.

3. ஆஹாரத்தை யொழித்திருப்பதோடு, ஆமதோஷம் முதலியதைப் போக்குவதற்கு ஏற்ற சிகித்ஸையையும் சேர்த்துச் செய்தால் அது **லங்கந-பாசந சிக்த்ஸை** எனப்படும்.

4. விரேசநம், வமநம், வஸ்தி, இரக்தமோக்ஷணம் முதலியவை **சோதந சிகித்ஸை** யெனப்படும்.

5. இவ்விரண்டு சிகித்ஸைகளுள் காரணத்திற்கு எதிரிடையான சிகித்ஸை **நிதாந விபர்யயம்** என்றும், வியாதிக்கு எதிரிடையானது **வியாதி விபர்யயம்** என்றும் விவஹரிக்கப்படும்.

பானமெனத் தோற்றும் சிகித்ஸையையாவது செய்வது நலம்.[1] இச்சிகித்ஸைகளில் ஏதேனும் ஒன்றால் ஆமதோஷம் முதலியது பக்குவமாய், பசி தீபநமும் விருத்தி யடைந்துவிட்டால், அப்யங்கஸ் நாநமும், ஸ்நேஹபாநமும், வஸ்தி சிகித்ஸை முதலியதும் முறைப்படி பிரயோகிக்கப்பட அநுகூல முண்டாகும். 22—24.

ஆமாஜீர்ணம் :—கபப் பிரகோபத்தினால் உண்டாகும் அஜீர்ணமானது ஆமம் என்று கூறப்படும். அதில் கண்களைச் சுற்றியும், கன்னத்திலும் வீக்கமுண்டாகும்; அப்பொழுதுதான் போஜநம் செய்தாற்போல் ஏப்பம் வரும்; மேலும் வாயில் ஜலம் ஊறுதல், தோஷங்கள் அதனதன் ஸ்த்தாநத்தினின்றும் பெயர்தல், தேஹம் பாரமாயித்தல் இக்குறிகளும் உண்டாகும்.—25.

விஷ்டப்த்தாஜீர்ணம் :—வாதப் பிரகோபத்தினால் உண்டாகும் அஜீர்ணம் விஷ்டப்த்தம் எனப்படும். இந்த அஜீர்ணமானது வயிற்றுளைத்தல், மலச்சிக்கல், வயிற்றுப் பொருமல், தேஹம் மெலிவுறுதல் என்னும் இக்குறிகளை யுண்டாக்கும்.—25½.

விதக்த்தாஜீர்ணம் :—பித்தப் பிரகோபத்தால் ஏற்படும் அஜீர்ணமானது விதக்த்தம் என்று வழங்கப்படும். இதில் நாவரட்சி, மூர்ச்சை, தலைச்சுற்றல், புளிப்பான ஏப்பம், ஒரு விதமான உடலெரிச்சல் இவை யுண்டாகும்.—26.

மூன்றுவித அஜீர்ணங்களுக்கும் மூவகையான சிகித்ஸைகள் :— அவற்றுள் ஆமாஜீர்ணத்தில் லங்கநசிகித்ஸையும், விஷ்டப்த்தத்தில் வியர்வையைப் பெருக்கும் சிகித்ஸையும், விதக்த்தாஜீர்ணத்தில் வமந சிகித்ஸையும் செய்ய வேண்டும். அல்லது அந்தந்த நிலைமைகளுக்கு ஏற்றவாறு அததற்கு ஹிதமாகத் தோற்றும் சிகித்ஸையையாவது செய்யலாம்.—27.

விலம்பிகையும் அதன் சிகித்ஸையும் :—ஆமாஜீர்ணமே மிகவும் அதிகரித்து, அதன் தோஷம் தேஹ தாதுக்களில் நன்றாகப் பற்றிவிட்டால், அது விலம்பிகா என்று கூறப்படும். இதில் கபம், வாதம் இவ்விரண்டு தோஷங்களால் ஏற்படும் அஜீர்ணத்தின் குறிகளும் கலந்து காணப்படும். இதற்கு அவ்வாறே அவ்விரண்டுக்கும் செய்யப்படும் சிகித்ஸைகளையே கிரமமாகக் கலந்து பிரயோகிக்க வேண்டும்.—28.

இரஸசேஷத்தையும், பொதுவாக அஜீர்ணத்தையும் பரிஹரிக்குமுபாயம் :—உட்கொண்ட உணவு ஜீர்ணமாகாத நிலைமையைக் குறிப்பிடுவதான ஏப்பமானது முற்றிலும் தணிந்திருக்கையிலும்

1. இந்த மூன்றாவது சிகித்ஸை ததர்த்தகாரி எனப்படும்; என்றால் மதுபாநத்தாலுண்டான வெறியைப் போக்குவதற்கு மறுபடி மதுவையே பருகக் கொடுப்பது, அல்லது அதிஸார வியாதியில் விரேசநத்திற்குக் கொடுப்பது முதலியவற்றைப் போன்ற சிகித்ஸை.

இரஸசேஷமிருந்தால்,[1] செய்யவேண்டிய பணிகளில் பிணியாளிக்கு சிரத்தையின்மையும் இருதயத்தில் ஒரு வகையான வலியும் உண்டாகும். இந்த நிலைமையில் பகற்பொழுதில் சிறிதளவு படுத்துறங்கினால் போதுமானது. எவ்வித அஜீர்ணத்திலும் அனைவருமே பகலில் போஜநம் செய்வதற்கு முன்பு தூங்குவது அவசியம்; பசி யுண்டான பின்பு மிதமானதும் இலகு குண முள்ளதுமான உணவைப் புஜிக்கவேண்டும்.—29, 29½.

**அஜீர்ணத்தின் பொதுக் குறிகள் :**—அஜீர்ணத்தில் பொதுவாகக் காணக்கூடிய குறிகள் பின் வருமாறு : மலபந்தமாவது, அதிக மலப் போக்காவது உண்டாகும்; உடல் வாட்டம், அபாநவாயு குடலிலேயே தடைப்பட்டு வெளிவர முடியாமை, வயிற்றுப் பொருமல், தேஹம் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சி, தலைச்சுற்றல் இவையேயாம்.—30½.

**ஆமதோஷமுண்டாக்கும் அன்னங்கள் :**—அதிக அளவான உணவு ஒன்றே ஆமதோஷத்தை யுண்டுபண்ணுவதென்பதில்லை; வெறுக்கப்படுவதும், வயிற்றுப் பொருமலுண்டாக்குவதும், கருகிக் காந்திப்போனதும், பக்குவமாகாததும், குருகுணமுள்ளதும், ரூக்ஷமானதும், அதிக குளிர்ச்சியாயிருப்பதும், அசுத்தமானதும், நெஞ்செரிவு முதலிய அழற்சி யுண்டுபண்ணுவதும், உலர்ந்து போனதும், அதிகமாய் ஜலத்தில் நனைக்கப்பட்டதுமான எந்த அன்னமும் ஜீர்ணமாகாமல் ஆமதோஷத்தை யுண்டாக்கும். 31, 32.

**மனோவிகாரங்களாலும் உணவு ஜீர்ணமாகாமை :**—மனத்துயரம், கோபம், பசி[2] இவை முதலியவற்றால் வருந்தும் நிலைமையிலும் புஜிக்கப்பட்ட உணவு ஜீர்ணமாகாது.—32½.

**அபத்திய போஜநம் மூன்று விதம் :**—பத்தியமான உணவையும், அபத்தியமான உணவையும் கலந்து உட்கொண்டால் அது **ஸமசநம்**[3] என்று கருதப்படுகிறது. போஜநம் செய்த பிறகு அதன் மேல் மறுபடியும் அடுத்தாற்போல் புஜித்தால் அதை **அத்யசநம்**[4] என்றறிக. அகாலத்திலும், அதிக அளவாகவும் சொற்ப அளவாகவும் ஒழுங்கினமாக உட்கொள்ளப்படும் உணவானது **விஷமாசநம்**[5] எனப்படும். இம்மூன்றும் மரணத்தையாவது உண்டுபண்ணும்,

1. இரஸசேஷம்—உட்கொண்ட உணவுப்பொருள் குடலில் ஜீர்ணமாய் ஒருவித வெண்மையான இரஸமாக மாறி அதுவே இரத்தமாகிறதல்லவா? இரஸமானது இரத்தமாகப் போக, மிச்சமுள்ள பதார்த்தம் மலமாக வெளிவரும். மலமாகப்போன உணவில் சிறிது இரஸம் மிச்சமிருப்பினும், அளவுக்கு அதிகமான அந்த இரஸம் தேஹத்தில் ஊறினால் அது ஆமதோஷமாகும்.

2. பசித்து புஜிப்பது முறையென்றாலும், வெகு நேரம் பட்டினி கிடந்து புஜிப்பது உசிதமல்லவெனக் கருத்து.

3. ஸமசநம்—பத்தியமும் அபத்தியமும் கலந்த உணவு.

4. அத்யசநம்—அதிக போஜனம்.

5. விஷமாசநம்—விஷமமான அல்லது கிரம விரோதமான உணவு

அல்லது கொடிய வியாதிகளையாவது உற்பத்தி செய்யும். 33—34½.

**ஹிதமான ஆஹாரமும் போஜநகிரமமும் :**—வழக்கமாய் உபயோகிக்கப்பட்டு வந்து சரீரத்திற்கு ஹிதமாயுள்ள பரிசுத்தமான உணவை காலத்தில் அதே மனதாயிருந்து புஜிக்கவேண்டும்; அவ்வுணவு ஸ்நிக்த்தமாகவும், உஷ்ணமாகவும், இலகுகுணமுடையதாகவும், அறு சுவைகளுடன் கூடி மதுரரஸம் மேலோங்கியதகாவும் இருக்கவேண்டும். ஸ்நாநம் செய்து, மீண்டும் முகத்தையும் கை கால்களையும் நன்ருகக் கழுவிக்கொண்டு, பித்ருக்களுக்கும் தேவதைகளுக்கும் தர்ப்பணம் செய்து, அதிதிகள், சிறு குழந்தைகள், ஆசார்யர்கள் இவர்களுக்கு போஜநம் செய்வித்து, பசு பக்ஷி முதலிய திர்யக்ஜந்துக்களும் உணவெடுத்துக் கொண்டனவாவென்பதைப் பார்த்துவிட்டு, தனது தேஹ மனோ நிலைமைகளையும் நன்ருகக் கவனித்து, பசியெடுத்திருக்கையில் தனக்கு ஆப்தர்களான பந்து மித்திரர்களோடு கூட ஏகாந்தமான இடத்தில் உட்கார்ந்து கொண்டு, ஒருவரையும் ஒரு பதார்த்தத்தையும் நிந்திக்காமலும், பொதுவாக வார்த்தை யாடாமலும், தனதிடம் அன்புள்ளவர்களால் இடப்படும் மனதுக்கு இன்பமாயுள்ள நிர்மலமான ஆஹாரத்தைப் புஜிக்கவேண்டும்; அவ்வுணவு பெரும்பாலும் திரவம் கலந்ததாயிருப்பதும் நலம்; அதிக வேகமாகவு மில்லாமல் அதிக மெதுவாகவுமில்லாமல் அமைதியாய் போஜநம் செய்ய வேண்டும். 35—38.

**பரிஹரிக்கவேண்டிய அன்னம் :**—புல் மயிர் முதலியவற்றுடன் கூடியும், மறுபடியும் உஷ்ண முண்டாக்கப்பட்டதும், அதிக காய்கறிகள் சேர்ந்ததும், மிகக் குறைந்த குணமுள்ளதும், அதிக சூடானதும், உப்பு அதிகமாகக் கலந்ததுமான அன்னத்தை உபயோகிக்கக்கூடாது.—39.

**உபயோகிக்கத் தகாத சில உணவுப் பொருட்கள் :**—கிலாடம்,[1] தயிர், கூர்ச்சிகை,[2] க்ஷாரம், சுக்தம்,[3] சமையல் செய்யாத முள்ளங்கி, மிக்க மெலிந்து உலர்ந்துபோன பன்றிமாம்ஸம், செம்மறியாட்டு மாம்ஸம், மாட்டிறைச்சி, மத்ஸிய மாம்ஸம், எருமை மாட்டின் மாம்ஸம், உளுந்து, சிறுகடலை, அல்லிக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, மாப்பண்டம், முளைத்த தானியம், உலர்ந்துபோன காய்கறிகள், ஒருவிதமான சிறிய கோதுமை இவற்றையும் உணவாக விசேஷமாய் உபயோகிக்கக் கூடாது.—40, 41.

---

1. கிலாடம்—இதைப்பற்றி 5-வது அத்தியாத்தில் 41-வது பத்தியத்தின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

2. கூர்ச்சிகை—இவ்விஷயமும் மேற்கூறிய அத்தியாயத்தில் அதே இடத்தில் பார்க்கக்கூடியது.

3. சுக்தம்—5-வது அத்தியாயத்தில் 75-வது பத்தியத்தின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

**உபயோகிக்கக்கூடிய உணவுப் பொருட்கள்:**—சம்பா அரிசி, கோதுமை, யவதானியம், காரரிசி, ஜாங்கலமாம்ஸம், கடுக்காய், நெல்லிக்காய், திராக்ஷை, புடல், பயறு, சர்க்கரை, நெய், காங்கோதகம், பால், தேன், மாதளை, இந்துப்பு இவை உபயோகிக்கக்கூடிய உணவாம்; த்ரிபலையை நெய்யோடும் தேனோடும் கலந்து இரவில் நேத்திர வன்மைக்காக உபயோகிப்பதும் நலம். மேலும் தேஹாரோக்கியத்திற்குக் கெடுதி செய்யாமல் அதைத் தொடரச் செய்வதும் எதுவோ, எது வியாதிகளை முற்றிலும் ஒழிக்கக்கூடியதோ அவ்வுணவையும் கிரஹித்துவரவேண்டும். 42—43½.

**போஜநத்தின் ஆதியிலும் மத்தியிலும் இறுதியிலும் உபயோகிக்கத் தகுந்த பதார்த்தங்கள்:**—தாமரைக்கிழங்கு, கரும்பு, வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம், மோதக மென்கிற குழக்கட்டை, இனிய சுவையுள்ள அடை இவை முதலிய உணவுப் பொருட்களை முதலில் சாப்பிடவேண்டும்; அப்பதார்த்தங்கள் குருகுணமுள்ளவையாகவும் ஸ்நிக்த்தமாகவும், மதுரமாகவும், மந்தம் ஸ்த்திரம் என்கிற குணங்களுடன் கூடியவையாகவும் இருத்தல் நலம். இவற்றிற்கு எதிரிடையான குணமுள்ள வஸ்துக்களை இறுதியிலும்[1], அம்லமும் இலவண ரஸமும் மேலோங்கிய உணவை இடையிலும் உபயோகிக்கவேண்டும்.—44, 45.

**அன்னபாநாதிகளால் வயிற்றை நிரப்ப வேண்டிய அளவு:**—இரைப்பையில் நான்கில் இரண்டு பாகத்தை அன்னத்தினாலும், ஒரு பாகத்தைப் பானவகைகளாலும் நிரப்பவேண்டும். மற்றொரு மிச்சமுள்ள பாகத்தை வாயு முதலியவை தங்குவதற்காகச் சூன்யமாய்விட்டு விடவேண்டும்.—46.

**அந்தந்த பதார்த்தங்களுக்கும் நிலைமைகளுக்கும் ஏற்ற அநுபானங்கள்:**—யவதானியம், கோதுமை இவற்றாலான உணவுகளுக்குக் குளிர்ந்த ஜலம் அநுபானமா யுபயோகிக்கத்தகுந்தது. தயிர், மது, விஷகுணமுள்ள வஸ்து, தேன் இவற்றிற்குங் குளிர்ந்த ஜலமே அநுபானமாயுபயோகிக்கத் தகுந்ததாகும். மாப்பாண்டத்திற்கு உஷ்ண ஜலம் அநுபானமாகும். சாகவர்க்கங்கள், பயறு இவைமுதலியவற்றால் பக்குவம் செய்யப்பட்ட உணவுகளுக்குத் தயிரின் தெளிவு நீரும், மோரும், காடியும் அநுபானமாகும். இளைத்திருப்பவர்கள் புஷ்டியடைவதற்கு ஸுரையென்னும் மதுவும், மிகவும் பருத்திருப்பவர்களை இளைக்கச் செய்வதற்கு ஜலம் கலந்த தேனும் அநுகூலமானவையாம். சோஷ மென்னும் க்ஷயத்தில் மாம்ஸ ரஸமும், மாம்ஸத்திற்கும், ஜாடராக்னி சொற்பமா யிருக்கையிலும் மதுவும் அநுபானமா யுபயோகிக்கத் தகுந்தவை. வியாதிகளாலும், ஔஷத ஸேவையினாலும், வழிநடப்பதாலும், அதிகமாகப் பேசுவதாலும்,

1. குருகுணம், ஸ்நிக்த்தம், மந்தம், ஸ்த்திரம் முதலிய குணங்களையும், அவற்றிற்கு எதிரிடையான குணங்களையும் பற்றி 5-வது, 7-வது பக்கங்களில் மூலமும் டிப்பணியும், பார்க்க.

ஸ்த்ரீ ஸம்பந்தத்தினுலும், லங்கநத்தினுலும், வெயிலாலும், அதிக வேலையினுலும் சோர்ந்திருப்பவனுக்கும், கிழவருக்கும், குழந்தைகளுக்கும் பாலானது அமுதத்தைப் போல் ஹிதமான அநுபானமாகும். 47—49½.

அநுபானத்தின் போதுவான தன்மை :—சுருங்கச் சென்னல்-உணவுக்கு எதிரிடையான குணங்களுள்ளதும், ஒன்றுக்கொன்று விரோதமுண்டு பண்ணுததுமான அநுபாநம் யாதொன்றுண்டோ அது தான் எப்பொழுதும் சிறந்ததாகும்.—50½.

அநுபானத்தின் உபயோகம் :—அநுபானமானது மனதுக்கு ஸந்தோஷத்தையும் திருப்தியையும் உண்டுபண்ணும்; உட்கொள்ளப் படும் உணவை நன்ருக தேஹத்திற் பரவச் செய்யும்; சரீரத்திற்கு வன்மையையும் தரும்; கெட்டியான உணவுப் பொருட்களை உடைத்துக் கரைத்து ஜீர்ணம் செய்வதற்கும் அநுபானம் உபயோகமானது.—51½.

அநுபானத்திற்குத் தகாத நிலைமைகள்:—மார்புக்கு மேற்பட்ட அவயவங்களிலுண்டாகும் வியாதிகளிலும், ச்வாசகாஸங்களிலும், உரக்ஷதத்திலும், பீநஸத்திலும் அநுபானம் ஹிதமானதல்ல; மேலும் பாடும்பொழுதும், அதிகமாகப் பேசும்போதும், மற்றும் பிரஸங்கங்கள் செய்யும் பொழுதும், தொண்டைக்கம்மல் முதலியவற்றிலும் அநுபானம் தகாது.—52½.

எவ்வித பானத்திற்கும் தகாதவர்கள் :—வியர்வை முதலியவற்ருல் கசிவுள்ள தேஹமுடையவர்களும், மேஹரோகிகளும், நேத்திர வியாதியினுல் வருந்துபவரும், தொண்டை வியாதியுடையவர்களும், விரணங்களால் கஷ்டப்படுபவரும் எவ்வித பானத்தையும் விலக்கவேண்டும்.—53.

அன்னபானுதிகளுக்குப் பிறகு ஆகாத காரியங்கள் :—அனைவருமே ஆஹாரமுண்ட பின்பும், பானங்களைப் பருகிய பிறகும், பேசுவதும் படிப்பதும் தகாது; அங்ஙனமே வெயிலில் இருப்பதும், அக்னிக்கு ஸமீபத்தில் நிற்பதும், வண்டி முதலியவற்றில் ஏறுவதும், நீந்துவதும், குதிரை முதலியவற்றின்மீது சவாரி செய்வதும் தகாதனவாம்.—54.

போஜனம் செய்வதற்கான கால நியமம் :—மலமூத்திராதிகளை விஸர்க்கம் செய்த பிறகு, உள்ளம் மிகத் தெளிவுற்றிருக்கையில், வாதாதி தோஷங்கள் அதனதன் ஸ்த்தாநத்தை யடைந்திருக்கும் போது, ஏப்பமும் சுத்தமாய் அடங்கிய பின்பு, பசியுண்டாயிருக்கையில் ஆஹாரத்தை யுட்கொள்ள வேண்டும்; மேலும் குடலிலுள்ள வாயு வெளியாய், ஜாடராக்னி விருத்தியாய், இந்த்ரியங்கள் யாவும் நிர்மலமான நிலைமையடைந்திருக்கையில், தேஹமும் நன்கு இலகுவாக ஆய்விட்டால் அப்பொழுதுதான் போஜநம் செய்யலாம். இதுதான் ஆஹாரத்திற்குச் சாஸ்திர முறைப்படி யேற்பட்ட கால நியமம்.—55.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

### திரவ்யாதி விஞ்ஞாநம்.

அப்பால் திரவ்யாதி விஞ்ஞாநீயம்[1] என்னும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோமாக:—

**திரவ்யம் இரஸாதிகளுள் சிறந்தது:**—இரஸம் முதலான[2] அகில கூறுகளும் திரவ்யங்களையே ஆதாரமாகப் பெற்றிருப்பதால், அந்த திரவ்யமே அவைகளனைத்திலும் சிரேஷ்டமானதாகும்.—½.

**திரவ்யம் ஐந்து பூதங்களால் ஆனது:**—அந்த திரவ்யம் பஞ்ச பூதமயமானது. அது ப்ருதிவீ யென்னும் பூதத்தை ஆதாரமாய்க் கொண்டு உண்டாகின்றது; அது ஒருவாறு பரிணமமடைந்து உற்பவிப்பதற்கு அப் என்னும் பூதம் (ஜலாம்சம்) பீஜமாயிருக்கின்றது; அந்த திரவ்யமானது தேஜஸ், வாயு, ஆகாயம் என்னும் இம்மூன்று பூதங்களுடைய இன்றியாமையாச் சேர்க்கையினுல் அந்தந்த உருவத்தைப் பெற்று, விசேஷமான பேதங்களையும் அடைவது இயல்பு; ஆனுல் பார்த்திவ திரவ்யமென்றும், வாயவ்ய திரவ்யமென்றும், மற்றும் ஆக்நேயாதி திரவ்யமென்றும் பகுத்துக் குறிப்பிடுவதற்கு அந்தந்த வஸ்துவில் அந்தந்த பூதம் மற்றவைகளைவிட அளவில் அதிகமாகச் சேர்ந்திருப்பதே காரணமாம்.[3]
1, 2.

**திரவ்யங்கள் பலவித இரஸங்களுள்ளதா யிருப்பதற்கும், வியாதிகள் பலதோஷங்களா லுண்டாவதற்கும் காரணம்:**—திரவ்யமானது அவ்விதம் பஞ்ச மஹாபூதங்களுடைய பரஸ்பர சேர்க்கையினுல் உண்டாக்கப்படுவதால், ஒவ்வொரு திரவ்யமும் சுவையிலும் பல

---

1. திரவ்யம் என்பதால் ஔஷதாதிகளுக்கு உபயோகமான வஸ்து குறிப்பிடப்படுகிறது; ஆதிஎன்பதால் இரஸம், வீர்யம், விபாகம், பிரபாவம் இவை குறிப்பிடப்படுகின்றன; இவ்விஷயங்களை விளக்கிக் காட்டுவதால் "திரவ்யாதி விஞ்ஞாநீயம்" என்று இவ்வத்தியாயம் கூறப்படுகிறது.

2. "இரஸம் முதலான" என்பதால் வீர்ய விபாக பிரபாவங்களும், திரவ்யமும் குறிக்கப்படுகின்றன.

3. ஒவ்வொரு வஸ்துவும் உற்பத்தியாய் வளர்வதற்கு ஐந்து பூதங்கள் அல்லது தத்துவங்கள் தேவை; ஒரு வஸ்து உண்டாக வேண்டுமானுல் அதற்கு ஓர் ஆதாரம் தேவை, அது பூமி. அதற்கு பீஜம் அல்லது வித்து வேண்டும்; அது ஜலம்; மேலும் செழிப்பாகக் குளிரச்செய்வதற்கும் தண்ணீரே உபயோகம்; அதைப் பக்குவமாக மாற்றுவதற்கு உஷ்ணம் தேவை, அது அக்னி; கப்பும் கிளையுமாகப் பிரித்து வளர்ப்பதற்கு வாயு அவசியமானது; அவ்வஸ்து வளர்வதற்கு உள்ளும் புறமும் இடைவெளி வேண்டியது; அதற்கு ஆகாசம் ஆதாரம் என்றறிக. [எதில் ப்ருதிவீபூதம் அதிகமோ அதை பார்த்திவம் என்றும், வாயு அதிகரித்தால் வாயவ்யம் என்றும், அவ்வாறே மற்றவைகளும் கூறப்படுகின்றன.]

விதமாய் பேதப்பட்டிருக்கிறது.[1] அதனாலேயே பெரும்பான்மையான ரோகங்களும் அநேக தோஷங்களை ஆதாரமாகப் பெற்று உண்டாகின்றன.[2]—2½.

இரஸமும் அநுரஸமும் :—அவற்றுள் அந்தந்த பதார்த்தத்திலும் அடங்கியுள்ள அநேகம் இரஸங்களுள் எது முதலில் நன்றாக உணரப்படுகிறதோ அதுதான் "இரஸம்" என்று விவஹரிக்கப்படும். நன்கு வியக்தமாக உணரப்படாமலும், இறுதியில் சிறிது உணரப்படுவதுமான இரஸம் "அநுரஸம்" என்றும்[3] கூறப்படும்.—3, 3½.

குணங்களுக்கும் இரஸாதிகளுக்குமுள்ள ஸம்பந்தம் :—குரு முதலிய குணங்கள், இரஸங்களுக்கு ஆதாரமாயுள்ள ப்ருதிவீ முதலான பூதங்களிடம் சேர்ந்திருக்கின்றன; ஆனால் குணங்களும் அவற்றிற்கேற்ப இரஸங்களும் ஒன்றோடொன்று பதார்த்தங்களில் ஒருமிக்கக் கலந்திருப்பதைக் கருதி, அக்குணங்கள் இரஸங்களுக்கு ஸம்பந்தப்பட்டவையாக விவஹரிக்கப்படுகின்றன.—4.

பார்த்திவ திரவ்யங்களின் குணங்களும் செய்கைகளும் :— அவற்றுள் பார்த்திவ திரவ்யத்தில்[4] (1) குரு, ஸ்த்தூலம், ஸ்த்

---

1. ஒவ்வொரு வஸ்துவிலும் பூதங்கள் பலவிதமான அளவுகளில் சேர்ந்திருப்பதால், ஒவ்வொரு வஸ்துவிலும் பலவித சுவைகள் ஏற்படுகின்றன; மேலும் அறுசுவைகளில் ஒவ்வொன்றும் ஒரே மாதிரியாயில்லாமல், ஒவ்வொரு வஸ்துவில் ஒவ்வொரு மாதிரியாயிருப்பதால் அதற்கும் இச்சேர்க்கையே காரணமாகும்; அதாவது—மதுரரஸம் என்பது திராக்ஷையில் ஒருவிதமாகவும், பேரீச்சம்பழத்தில் மற்றொரு மாதிரியாகவும், கரும்பில் வேறுவிதமாகவும் இருப்பதும், புளியிலுள்ள புளிப்பும், எலுமிச்சம்பழத்துப் புளிப்பும், மாதுளம்பழப்புளிப்பும் வெவ்வேறு விதமாயிருப்பதும் இதனாலேயே என்றறிக.

2. பஞ்சபூதங்களைப் பலவேறு அளவுகளாகப் பெற்ற வஸ்துக்களை உபயோகிப்பதால், அவ்வஸ்துக்களால்வளரும் தேஹத்திலுள்ள வாத-பித்த-கபங்களும் ஒருமிக்கக்கோளாறடைந்து, ஒவ்வொரு வியாதியிலும் அவற்றின விகாரங்களும் காணப்படும் என்றறிக.

3. எப்பொருளையும் புஜிக்கும்போது அவற்றில் முதலில் ஒருவித சுவையும், மென்று முடிந்தபின் வேறொரு விதமான சுவையும் பெரும்பாலும் உணரப்படுவதுண்டு. உதாரணமாக நெல்லிக்கனி அம்லரஸமுள்ளது; அதற்கு அது பிரதானரஸம்; மதுரரஸமும் அதில் அப்பால் உணரப்படுவதுண்டு; அச்சுவை அதற்கு அநுரஸமாம். இவ்விதமே பெரும்பான்மையான பதார்த்தங்களுக்கும் பிரதானரஸங்களையும் அநுரஸங்களையும் அநுபவத்தில் அறியலாம். அநுரஸத்தை உபரஸம் என்றும் கூறுவர்.

4. ப்ருதிவீ—பூமி; அந்த பூதத்தின் அம்சத்தினால் உற்பத்தியான வஸ்து பார்த்திவம்.

திரம், கந்தம்[1] என்கிற குணங்கள்[2] விசேஷமாயுண்டு. (2) அப்பதார்த்தம் கௌரவம்[3], ஸ்தைர்யம்[4], திரட்சி, வளர்ச்சி என்னும் இவற்றை யுண்டுபண்ணும்.—5½.

ஆப்யத் திரவ்யங்களின் குணங்களும் செய்கைகளும் :—அப் என்னும் ஜலஸம்பந்தமான திரவ்யத்தில் திரவம், சீதம், குரு, ஸ்நிக்த்தம், மந்தம், ஸாந்த்ரம், சுவை இக்குணங்கள் விசேஷமானவையாம். (2) அது ஸ்நேஹநம்[5], விஷ்யந்தம்[6], க்லேதநம்[7], ஹ்லாதநம்[8], பந்தநம்[9], என்னும் இக்காரியங்களைச் செய்யும்.—6½.

ஆக்நேயதிரவ்யத்தின் குணங்களும் செய்கைகளும் :—(1) ஆக்நேயதிரவ்யமானது[10] ரூக்ஷம், தீக்ஷ்ணம், உஷ்ணம், விசதம், ஸூக்ஷ்மம், ரூபம் என்கிற இக்குணங்களை விசேஷமாகப் பெற்றது. (2) எரித்தல், பிரகாசிப்பித்தல், நிறமுண்டுபண்ணுதல், ஒளிவீசுதல், பசநம் செய்வித்தல் என்னும் இக்காரியங்களைச் செய்யுந் தன்மையது.—7½.

வாயவ்யதிரவ்யத்தின் குணங்களும் செய்கைகளும் :—(1)வாயவ்யதிரவ்யமானது[11] ரூக்ஷம், விசதம், இலகு, பரிசம் இக்குணங்களை விசேஷமாய் உடையது. (2) ரௌக்ஷ்யம்,[12] இலாகவம்,[13] வைசத்யம்,[14] மனக்கவலை, உடல் வாட்டம் இக்காரியங்களைச் செய்யும்.—8½.

நாபஸத்திரவ்யத்தின் குணங்களும் செய்கைகளும் :—(1)நாபஸத்திரவ்யத்தில்[15] ஸூக்ஷ்மம், விசதம், இலகு, சப்தம் இக்குணங்கள் விசேஷமாய் உண்டு. (2) அவ்வித திரவ்யம் துவாரமுள்ள பாகங்

---

1. கந்தம்—மணம்.

2. இங்கு குறிப்பிடப்படும் குரு, ஸ்நிக்த்தம் முதலிய குணங்களும், இதற்குப் பிறகு வரும் அவற்றைப் போன்ற மற்ற குணங்களும் இவ்விதமானவை யென்பதைப்பற்றி 5-வது 7-வது பக்கங்களில் மூலத்தையும் டிப்பணியையும் பார்க்க.

3. கௌரவம்—குருத்தன்மை ; விசேஷ பாரமுள்ளது.

4. ஸ்தைர்யம்—ஸ்திரத்தன்மை ; பெருகி ஓட முடியாமை.

5. ஸ்நேஹநம்—ஸ்நிக்த்தமென்னும் எண்ணெய்ப் பசையுண்டாக்குதல்.

6. விஷ்யந்தம்—தளர்ந்து பெருகுதல்.

7. க்லேதநம்—கடினமான வஸ்து ஜலம் முதலியவற்றின் ஸம்பந்த்ததால் ஊறிக் கசிதல்.

8. ஹ்லாதநம்—மனக்களிப்பை யுண்டாக்குதல்.

9. பந்தநம்—சிதைந்துபோயுள்ளவற்றை ஒன்றுகூட்டல்.

10. அக்னி அல்லது தேஜஸ் ஸம்பந்தமான பொருள் "ஆக்நேயதிரவ்ம்" எனப்படுகிறது.

11. வாயவ்யதிரவ்யம்—வாயு என்னும் பூதத்தினாலான பொருள்.

12. ரௌக்ஷ்யம்—எண்ணெய்ப் பசையற்ற குணம்.

13. இலாகவம்—இலகுவாயிருத்தல் ; இலேசு.

14. வைசத்யம்—விசதமாயிருத்தல். (7—வது பக்கம் பார்க்க).

15. நபஸ் என்றால் ஆகாயம் ; ஆகாய ஸம்பந்தமுள்ளது "நாபஸம்."

களை அமைத்தல், இலகுத்தன்மை யுண்டாக்கல் இக்காரியங்களைச் செய்யும்.—$9\frac{1}{4}$.

எல்லாத்திரவ்யமும் ஔஷதமாகக்கூடியதே:—இவ்வாறு பலவித மான உபயோகத்தையும் பிரயோக முறையையும் கொண்டு கவனித்தால், உலகத்தில் ஔஷதமா யில்லாத திரவ்யம் எதுவும் இல்லை.-10.

மேல்நோக்குவதும் கீழ்நோக்குவதுமான திரவ்யம் :—(1) அக்னி, வாயுஇவ்விரண்டு பூதங்களில் ஏதேனும் ஒன்று(அல்லது இரண்டுமே) விசேஷமாகச் சேர்ந்து உண்டான திரவ்யம் பெரும்பாலும் மேல் நோக்கி யெழும்பும்.[1] (2) ப்ருதிவீ, அப் இவ்விரண்டும் விசேஷமாகக் கலந்துள்ள திரவ்யம் பெரும்பாலும் கீழ்நோக்குந் தன்மை யது.[2]—11.

இரஸங்களின் விஷயம்:—திரவ்யத்தைப் பற்றிய விஷயம் இவ் வாறு விவரிக்கப்பட்டது. இரஸமும் அதைப்பற்றிய பேதங்களும் பின்னால் கூறப்படப்போகின்றன.—$11\frac{1}{2}$.

எட்டுவிதமான வீர்யங்கள் :—குரு, ஸ்நிக்த்தம், சீதம், மிருது, இலகு, ரூக்ஷம், உஷ்ணம், தீக்ஷ்ணம் என்கிற இவ்வெட்டும் வீர்யம் என்று கருதப்படுவதாகச் சிலர்[3] கூறுவர்.—$12\frac{1}{2}$.

வீர்ய விஷயத்தில் சரகருடைய கொள்கை :— 'எந்த குணத்தினால் எந்த கார்யம் நிறைவேற்றப்படுகின்றதோ அக்குணமே வீர்ய மாகும்; எதுவும் வீர்யமில்லாமல் எக்கார்யத்தையும் செய்யமாட்டாது; எல்லாக் கார்யமும் வீர்யத்தினாலேயே செய்யப்படுகிறது;' என்று சரகர் கூறுகிறார். 'ஆகையினால் குரு முதலான குணங் களையே[4] வீர்யம் என்று விவஹரிப்பது பொருந்தும். ஏனெனில் அவை மற்ற எல்லாக் குணங்களுடைய ஸாராம்சங்களாகவும்,[5] சங்

1. அக்னி, வாயு இவ்விரண்டும் பூமி ஜலம் இவற்றைக் காட்டிலும் இலேசாகையால் மேலெழும்புவது இயல்பு ; இங்கு மேலெழும்புவது என்ப தற்குக் குடலிலுள்ள தோஷங்கள் மேலோங்கி வாந்தியாவது என்பதே முக் கியக் கருத்து.

2. ஜலம், பூமி இவ்விரண்டும் மற்றவைகளைவிட கனத்தில் விசே ஷித்தவை யாதலால் கீழே இறங்குவது ஸஹஜம் ; கீழிறங்குவது என்றால், இங்கு, குடலிலுள்ள தோஷம் முதலியவை குதமார்க்கத்தினால் வெளிவருவ தென்று பொருள். [அந்தந்த திரவ்யத்திற் சேர்ந்துள்ள பூதங்களின் அம் சங்களுக்கு ஏற்றவாறு சில பொருட்கள் வாந்தியையும், வேறு சில விரேச னத்தையும் உண்டுபண்ணுகின்றனவாம்.]

3. சிலர் என்பதால் வாக்படாசார்யருடைய கருத்து இதுவல்ல வென்று அறிக. சிலர் என்பதால் காநாதன் முதலியவர் குறிப்பிடப் படு கின்றனர்.

4. குரு முதலான என்றதால் முற்குறிப்பிட்ட எட்டுவித குணங்களும் கிரஹிக்கப்படுகின்றன.

5. இங்கு குறிப்பிட்டுள்ள எட்டுவித குணங்களைத் தவிர்த்து மற்றவை (7-ம் பக்கத்திலுள்ளவை) அவ்வளவு ஸாரமான குணங்களாகக் கருதப்படுவ தில்லை. ஆகவே இவ்வெட்டு குணங்களும் எல்லாக் குணங்களுடையவும் ஸாராம்சங்களென்று கூறப்பட்டது.

தியிற் சிறப்புற்றவைகளாகவும்[1] இருக்கின்றன ; மேலும் விவஹாரிப்பதற்கு முக்கியமானவை யாகவும்,[2] அநேக முறை ஆங்காங்கு முதலிற் கிரஹிக்கப்படுபவையாகவும்[3] இருக்கின்றனவல்லவா ?" என்றும் சரகமுனியிஞல் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இரஸம் முதலானவை முற்கூறிய காரணங்களுக்கு நேர் மாருக இருப்பதால், வீர்யம் என்று சொல்லக் கூடியவையாகத் தோற்றியபோதிலும் அவை அவ்வாறு வழங்கப்படுவதே யில்லை ; ஆகையினால் குரு முதலிய குணங்களே வீர்யம் என்று கூறப்படும்.[4] 13—16.

**வீர்யம் இரண்டுவிதம் :—** வேறு சிலர்[5] உஷ்ணம், சீதம் என்னும் இவ்விரண்டைமட்டும் "வீர்யம்" என்று கூறுகின்றனர். உலகம் பலவிதமாகக் காணப்படினும், புலப்படக் கூடிய ஸ்தூலப் பொருட்களையும், புலப்படாத ஸூக்ஷ்மப் பொருட்களையும் தவிர்த்து வேறொன்றும் கிடையாதது போலவே, திரவ்யம் பலவிதமாகக் காணப்படினும் அது மிகவும் வலிவுள்ளவையான உஷ்ணம் சீதம் என்னும் இவ்விருவித குணங்களையும் ஒருபொழுதும் விட்டு விலகுவதில்லை.—17, 17½.

**உஷ்ண வீர்யத்தின் செய்கைகள் :—** அவற்றுள் உஷ்ண வீர்யமானது தலைச்சுற்றல், நாவரட்சி, உடல் வாட்டம், வியர்வை, அழற்சி, விரைவிற் பசநம்[6] செய்வித்தல், வாதசமநம், கபஹரம் என்னும் இக் கார்யங்களைச் செய்யும்.—18¼.

**சீதவீர்யத்தின் செய்கைகள் :—** சீதவீர்யமோ மனக்களிப்பு, ஜீவநம், ஸ்தம்பநம் இவற்றைச் செய்யும் ; இரத்தம், பித்தம் இவ்விரண்டையும் நிர்மலமாக்கும்.—19.

---

1. இரஸாதிகளைப் பார்க்கினும் குரு முதலான எட்டுக் குணங்களுக்கும் ரோகம் முதலானதைப் பரிஹரிப்பதில் விசேஷ சக்தியிருப்பதால் அவ்வாறு கூறப்பட்டது.

2. இரஸம் முதலியவற்றை குணங்கள் என்று கூருமல் குரு முதலானதுகளையே குணம் என்னும் பெயரால் அழைப்பது வழக்கம்.

3. வாதாதி தோஷங்களை விவரிக்கையில் அததற்குள்ள குணங்களே முதலில் வர்ணிக்கப்பட்டுள்ளனவே யன்றி, இரஸாதிகள் முதலிற் கூறப்படவில்லை.

4. இரஸங்கள் என்னும் சுவைகள் ஸாரங்கள் என்று கூறக் கூடியவையல்ல ; ஏனெனில், பதார்த்தங்களுக்குள்ள இயற்கையான இரஸங்கள் ஒன்ருேடொன்று சேர்ந்து வேறு விதமாக மாறிவிடுகின்றன ; குரு முதலிய குணங்களோ அவ்வாறு மாறுவதில்லை. மேலும் இரஸம் முதலானவை குணங்கள் என்று வழங்கப்படுவதில்லை ; குரு முதலானவைகளுக்கே குணங்கள் என்று விவஹாரம். [இவ்வாறு சரக முனியின் கொள்கை கூறப்பட்டது.]

5. வேறு சிலர் என்பதால் ஸுச்ருதர் முதலானோர் குறிக்கப்படுகின்றனர்.

6. பசநம்—சூட்டின் ஸம்பந்தத்தாலுண்டாகும் பாகம் ; சமைத்தல் என்றும் கூறலாம்.

**விபாகம் என்பதின் விவரம்:**—உட்கொள்ளப்படும் பதார்த்தங்களில் அடங்கிய இரஸங்கள் குடலில் ஜாடராக்னியினுடைய [1] சேர்க்கையினால் பக்குவ மடைந்தபின்பு வேறுவித இரஸங்களாக மாறுதலடையும்; இரஸங்களுக்குண்டாகும் அவ்வித மாறுதலே விபாகம் என்று வழங்கப்படுகிறது.—20.

**ஆறு இரஸங்களும் விபாகமடையும் வகை:**—(1) மதுரரஸமும் இலவணரஸமும் குடலிற் சென்றபின் பெரும்பாலும் மதுரமாகவும், (2) அம்லரஸம் அம்லமாகவும் பக்குவமடையும். (3) கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு இம்மூன்றும் பெரும்பாலும் கடுரஸமாகவே மாறுதலடையும். விபாகத்தினால் உண்டாகும் இரஸங்களாலும் ஸாதாரண இரஸங்களால் ஏற்படக்கூடிய பயனே உண்டாகும் [2].—21¼.

**இரஸ-வீர்ய-விபாகாதிகளுள்ஒவ்வோன்று ஒவ்வொருதிரவ்யத்தின் கார்யத்தை நடத்தல்:**—அவற்றுள் சில திரவ்யம் இரஸத்தினாலும், சில திரவ்யம் விபாகத்தினாலும், சில திரவ்யம் அதிலடங்கிய வெவ்வேறு குணத்தினாலும், சில வீர்யத்தினாலும், மற்றும் சில பிரபாவத்தினாலேயும் [3] நன்மை அல்லது தீமையை விளைவிக்கும்.—22½.

**இரஸ-வீர்யாதிகளுள் வலிவுள்ளதே கார்யத்தை நிறைவேற்றும்:**—இரஸ-வீர்ய-விபாக-பிரபாவங்களுக்குள் எது திரவ்யத்தில் வலிவுள்ளதா யிருக்கின்றதோ அதுவே மற்றவைகளை அடித்துவிட்டு கார்யத்தை நிறைவேற்றுவதில் காரணமாய் அமைகின்றது.—23½.

**ஒற்றுமையில்லாக் குணங்களில் அதிகமானவை குறைந்தவைகளை ஜயிக்கும்:**—ஒன்றுக்கொன்று விரோதத் தன்மையுள்ள குணங்கள் ஒன்றுசேர்ந்திருந்தால், அப்பொழுது எண்ணிக்கையில் அதிகமாயிருப்பவை அவற்றினும் குறைவான குணங்களை வெல்லும் [4].—24.

---

1. ஜாடராக்னி—4-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

2. விபாகத்தில் உண்டாகும் இரஸம் ஸாதாரண இரஸத்திற்குச் சமானமான குணத்தையே உண்டு பண்ணும்; என்றால் அம்லரஸம் அம்லமாக விபாகமடைந்த பிறகும் அதற்கு அம்லரஸத்திற்குள்ள குணமே உண்டு; அவ்விதமே கைப்பு கடுரஸமாக விபாகமடைய, அதற்குச் சாதாரண கடுரஸத்தின் குணமே இருக்கும் எனக் கருத்து.

3. பிரபாவம் என்பதைப்பற்றி இதற்கு அடுத்தப்பக்கத்தில் 25½ 26½-வது பத்தியங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

4. ஒரு திரவ்யத்தில் ஒன்றோடொன்று விரோதத் தன்மையுள்ள குணங்கள் கலந்திருந்தால், அதிகமாயிருப்பவை குறைவான குணங்களை வென்று கார்யத்தை நிறைவேற்றும்; உதாரணமாக, பால் சீதவீர்யமுள்ளது; சீதவீர்யம் வாதத்தை அதிகப்படுத்தும்; ஆனால் பாலில் வாதத்தைத் தணிக்கக்கூடிய மதுரரஸம், ஸ்நிக்த்தம், குரு என்னும் குணங்கள் இருப்பதால், எண்ணிக்கையில் அதிகமான இக்குணங்கள் சீதவீர்யத்தின் சக்தியைப்போக்கி வாதத்தைக் குறைத்து விடுகின்றன.

**ஸம பல முள்ள இரஸாதிகளுள் எது எதை ஜயிக்கும்:**—இரஸம் முதலான அனைத்துக்கும் வலிமை ஒரே அளவாயிருக்குமாகுல், அப்பொழுது விபாகம் இரஸத்தின் சக்தியையும், வீர்யம் இரஸ-விபாகங்களின் சக்தியையும், பிரபாவம் இரஸ-விபாக-வீர்யங்களின் சக்தியையும் முறையே அடிக்கும்; இது இரஸாதிகளுக்கு இயற்கையிலேற்பட்ட பலமாம் [1].—25.

**பிரபாவத்தின் விவரணம்:**—இரஸ-வீர்ய-விபாகங்கள் இரண்டு திரவ்யங்களில் ஒரே அளவாயிருக்கையில், ஒரு திரவ்யம் இரஸாதிகளுக்கு ஏற்ற வேலையைச் செய்ய, மற்ருெரு திரவ்யம் இரஸாதிகளுக்குள்ள தன்மையை மீறி வேறுவகையில் விசேஷமான கார்யத்தைச் செய்தால், அக்கார்யம் பிரபாவத்திகுல் உண்டாவது என்று [2] அறிக.—25½.

**பிரபாவத்திற்குச் சில திருஷ்டாந்தங்கள் :**—நேபாளமானது இரஸம் முதலானவைகளால் சித்திர மூலத்திற்குச் சமானமாயிருந்தும், நேபாளம் விரேசநமுண்டுபண்ணும்; திராக்ஷையும் இரஸாதிகளால் அதிமதுரத்திற்கு ஏற்றதாயிருந்தும் திராக்ஷ விரேசநத்தையுண்டாக்கும்; நெய்யானது பாலின் இரஸாதிகளோடு ஸமானமாயிருக்கையிலும், நெய் தீபந குணத்திற் சிறந்தது [3].—26½.

---

1. (1) ஒரு சரக்கில் விபாகத்திற்கும் இரஸத்திற்கும் வலிமை ஒரே அளவாயிருந்தால், விபாகம் இரஸத்தை ஜயிக்கும்; உதாரணம்: தேன் சுவையில் மதுரமானது; ஆகுல் அந்த மதுரரஸம் விபாகத்தில் கடுவாக மாறிவிடுகிறது; ஆகவே தேன் மதுரரஸத்திகுல் வாதத்தைத் தணிக்காமல் கடுவிபாகத்தின் வலிமையிகுல் வாதத்திற்கு பிரகோபத்தையே உண்டுபண்ணுகிறது. (2) இரஸம், வீர்யம், விபாகம் மூன்றும் ஒருவஸ்துவில் ஸமஅளவாயிருந்தால், வீர்யம் என்பது இரஸவிபாகங்களை வெல்லும்; உதாரணமாக, எருமைக்கடாவின் இறைச்சி சுவையிலும் விபாகத்திலும் மதுரமாயிருந்தும், அதற்குள்ள உஷ்ணவீர்யமானது அவ்விரண்டின் சக்தியையும் அடித்துவிடும்; ஆகவே மதுரரஸ-மதுரவிபாகங்களுக்கு ஏற்றவாறு பித்தசமநம் செய்யாமல் அந்த மாம்ஸம் பித்தத்தைப் பிரகோபிக்கச்செய்கிறது. (3) இரஸவீர்யவிபாகங்களின் சக்தி ஒரே அளவாயிருந்தும், அவற்றின் அச்சக்தியை பிரபாவம் போக்கும்; ஸுரை யென்னும் கள் சுவையிலும் விபாகத்திலும் அம்லமானது; அது வீர்யத்திலும் உஷ்ணமானது; இருந்தும் அம்மூன்றுக்கும் எதிரிடையான குணங்களடங்கிய பாலை விருத்தி செய்கின்றது ; இது பிரபாவத்தின் கார்யம்.

2. திரவ்யங்களில் இரஸ-வீர்ய-விபாகங்களுடைய குணங்களை முற்றிலும் மீறி இருந்துவரும் விசேஷமான சுபாவம் யாதொன்ருே அது பிரபாவமாம்; அல்லது காரணம் கண்டறிய முடியாமல் ஓர் ஔஷதம் அல்லது சிகித்ஸையிகுல் ஏற்படும்குணம் அல்லது கார்யமே பிரபாவம் எனப்படுகிறது.

3. நேபாளத்திலும் (வாளத்தில்) சித்திர மூலத்திலும் இரஸ- வீர்ய-விபாகங்கள் ஒரே மாதிரியாயிருக்க, நேபாளம் விரேசந முண்டுபண்ணுவது நேபாளத்தின் பிரபாவம்; சித்திர மூலம் அவ்விதம் செய்வதில்லை. திராக்ஷையும் அதிமதுரங்களும் இப்படியே. நெய் ஜாடராக்னியை தீபநம் செய்வது அதன் பிரபாவம்; பால் அவ்வாறு செய்யாமல் மந்தப்படுத்தும்.

**விசித்ரப்ரத்யயா ரப்த்த கார்யம்:**—இங்ஙனம் திரவ்ய-ரஸ-வீர்ய-விபாக-பிரபாவங்களுடைய ஸாதாரணமான செய்கைகள் விவரிக்கப் பட்டன; மேலும் அச்செய்கைகள், அநேக வித காரணங்களால் அமைந்துள்ள அந்தந்த திரவ்யங்களுக் கேற்றவாறு வேறு விதமாகவும் வித்தியாஸப்படுவதுண்டு[1]. அவ்வித வஸ்துக்கள் "விசித்ர ப்ரத்யயாரப்த்தங்கள்" என்று வழங்கப்படும்.—27½.

**ஸமாந ப்ரத்யயாரப்த்த-விசித்ர ப்ரத்யயாரப்த்த திரவ்யங்களுக்கு திருஷ்டாந்தம்:**—கோதுமையானது மதுரரஸமும் குருகுணமுமுள்ளது; அதற்கேற்றவாறு கோதுமை வாதஹரமானது; அதே இரஸமும் அதே குணமுமுள்ள யவதானியமோ வாதத்தை விருத்தி செய்யக்கூடியது. மதுர ரஸமும் குருகுணமுமுள்ள மத்ஸியங்கள் உஷ்ண வீர்யமானவை; அதே இரஸமும் வீர்யமுமுடைய பாலானது சீதவீர்யமுள்ளது. மதுரரஸமும் குருகுணமுமுடைய சிங்கத்தின் மாம்ஸமானது கடுவிபாகமடையக் கூடியது; அதே இரஸமும் குணமும் பெற்ற பன்றியின் மாம்ஸம் மதுரமாகவே பக்குவமாகும்.[2] ஆகையினால் திரவ்யங்களின் இரஸத்தைக் கூறி விட்டதனாலேயே அகில திரவ்யங்களுடையவும் குணங்களையும் சொல்லி விட்டதாகக் கருதக்கூடாது.—28, 29.

---

1. திரவ்யங்கள் இங்கு இரண்டு வகுப்புகளாகப் பிரிக்கப்படுகின்றன; அவற்றுள் சில "ஸமாந ப்ரத்யயாரப்த்தங்கள்". வேறு சில "விசித்ர ப்ரத்யயாரப்த்தங்கள்." (1) பஞ்ச பூதங்களுள் எவற்றால் எவ்வாறு இரஸ-வீர்யாதிகள் ஆக்கப்படுகின்றனவோ, அதே பூதங்களால் அவ்வாறே இரஸாதிகளுக்கு ஆதாரமான திரவ்யங்களும் உண்டுபண்ணப்படும்; அவ்வித திரவ்யங்கள் **ஸமாந ப்ரத்யயாரப்த்தங்கள்** என்று கூறப்படும்; இந்த திரவ்யங்கள் அவற்றிலடங்கிய இரஸாதிகளுக்கு ஏற்றவாறு குணங்களையும் கார்யங்களையும் செய்பவைகளாயிருக்கும். (2) **விசித்ர ப்ரத்யயாரப்த்த திரவ்யங்களில்** இரஸ வீர்யாதிகளுண்டாவதற்கான பூதங்கள் வேறாகவும், திரவ்யோத்பத்திக்கு அவசியமான பூதாம்சங்கள் வேறாகவும் இருக்கும்; ஆகவே இந்த திரவ்யங்களுடைய கார்யம் அவற்றிலடங்கிய இரஸாதிகளுக்கு அநுரூபமாயில்லாமல் வேறு விதமாயிருக்கும்.

2. (1) மதுர ரஸமும் குருகுணமுமுடைய வஸ்துக்கள் இயற்கையிலேயே வாதஹரமாகவும், சீதவீர்யமாகவும், மதுரவிபாகம் அடையக் கூடியனவாகவும் இருக்கும்; ஆகவே கோதுமை வாதஹரமாயிருப்பதும், பால் சீதவீர்யமுள்ளதாயிருப்பதும், பன்றியின் மாம்ஸம் மதுர விபாகமடைவதும் அவற்றின் தன்மைகளுக்கு இயல்பேயாம்; இம்மூன்று திரவ்யங்களும் இங்கு இரஸ-வீர்ய-விபாகங்களால் **ஸமாநப்ரத்யயாரப்த்தங்களாயுள்ள** பதார்த்தங்களுக்கு திருஷ்டாந்தமாகும். (2) மதுர ரஸமும் குருகுணமுமுள்ள பதார்த்தம் வாதத்தை விருத்தி செய்வதும், உஷ்ணவீர்யமாயிருப்பதும், கடுவிபாகம் அடைவதும் விபரீதச் செயலாம்; யவதானியம் **வாதத்தை விருத்திசெய்வதும்**, மத்ஸியம் உஷ்ணவீர்யமாயிருப்பதும், சிங்கத்தின் மாம்**ஸம்** கடுவிபாகமடைவதும், அப்பதார்த்தங்கள் **விசித்ரப்ரத்யயாரப்த்தமாயிருப்பதால்** என்று அறிக.

# பத்தாம் அத்தியாயம்.

## இரஸ பேதீயம்.

இனி இரஸபேதீயம்[1] என்னும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுவோம் :—

**பூதங்களுக்கும் அறுசுவைகளுக்குமுள்ள ஸம்பந்தம் :**—(1) ப்ருதிவீ-அப் என்னும் இரண்டு பூதங்களுடைய அம்சங்களின் சேர்க்கையினால் மதுரரஸமும், (2) அக்னி-ப்ருதிவீ இவ்விரண்டின் அம்சங்களால் அம்லரஸமும், (3) அப்-தேஜஸ் இவற்றின் அம்சங்களால் இலவணரஸமும், (4) ஆகாயம்-வாயு இவற்றின் அம்சங்களால் கைப்பும், (5) தேஜஸ்-வாயு இவற்றின் அம்சங்களால் கார்ப்பும், (6) ப்ருதிவீ-வாயு இவற்றின் அம்சங்களுடைய சேர்க்கையினால் துவர்ப்பும்—இவ்வாறு இரண்டிரண்டு பூதங்களுடைய சேர்க்கையினால் ஒவ்வொரு இரஸமும்—உண்டாகின்றன.—1.

**மதுரரஸத்தின் தன்மைகள் :**—அவற்றுள் மதுரரஸமானது வாயினுள் ஒருவாறு பசையை உண்டுபண்ணும் ; அவ்வித வஸ்துவை அருந்தும்போது அது தேஹத்திற்கு ஒருவிதமான இன்பத்தைத் தருகின்றது ; புலன்களுக்குத் தெளிவையுண்டாக்கும் ; எறும்பு முதலானவைகளுக்கு அச்சுவையிலே விருப்பம் விசேஷமாய் உண்டு.—$2\frac{1}{4}$.

**அம்லரஸத்தின் தன்மைகள் :**—அம்ல ரஸம் முகத்தினுள் உமிழ் நீரைச் சுரப்பித்து வாயைக் கழுவுவதுபோல் நிர்மலமாக்கும் ; உரோமங்கள், பற்கள் இவற்றைச் சிலிர்க்கச் செய்யும் ; கண்களையும் புருவங்களையும் சுருங்கப்பண்ணும்.—3.

**இலவணரஸத்தின் தன்மைகள் :**—இலவணரஸம் வாயில் நீரொழுகச் செய்யும் ; வாயினுள் தவடைகளிலும், தொண்டையிலும் ஒருவாறு அழற்சியை யுண்டுபண்ணும்.—$3\frac{1}{2}$.

**திக்தரஸத்தின் தன்மைகள் :**—திக்தரஸம் அல்லது கைப்பானது முகத்தை ஒருவாறு சுத்தம் செய்யும் ; சுவையறியும் இந்த்ரியத்திற்குள்ள சக்தியையும் போக்கி விடும்.—4.

**கடுரஸத்தின் தன்மைகள் :**—கடுரஸம் என்னும் கார்ப்பு, நாக்கின் முனையில் சிமசிமா என்னும் ஒரு வித உணர்ச்சியை உண்டுபண்ணி, வெகுட்டலைத் தருகின்றது ; கண்களிலும், நாசியிலும், வாயிலும் நீர்களைச் சுரப்பிக்கும் ; தவடைகளை எரிப்பது போல் இருக்கும்.—5.

**கஷாயரஸத்தின் தன்மைகள் :**—கஷாயரஸம் என்னும் துவர்ப்பானது நாக்கில் திமிரை யுண்டுபண்ணும் ; தொண்டையினுள்

---

1. இரஸபேதீயம்—ஆறுவித இரஸங்களைப்பற்றிய விஷயங்களை விவரித்துக் கூறும் அத்தியாயம். இரஸங்களைப்பற்றி அதிகமாகக் கூற வேண்டியிருப்பதைக் கருதியே முன் அத்தியாயத்தில் "இரஸ விஷயம் பிறகு விவரிக்கப்படும்" என்று குறிப்பிடப்பட்டது.

ளிருக்கும் த்வாரங்களைச் சுருங்கச்செய்து தொண்டையைக் கட்டும். இரஸங்களுக்குள்ள இலக்ஷணங்கள் இங்ஙனம் விவரிக்கப்பட்டன; இவற்றின் செய்கைகள் இதனடியில் விவரிக்கப்படும்.—6.

**மதுரரஸத்தின் செய்கைகள் :**—மதுரரஸமானது, பிறந்தது முதல் ஸாத்மியமா யிருப்பதால்[1] தாதுக்களுக்கு மிகவும் வன்மையை யுண்டுபண்ணக்கூடியது; பாலர், வயது முதிர்ந்தவர், க்ஷதகாஸமுள்ளவர்,[2] க்ஷயரோகிகள் இவர்களுக்கும், தேஹநிறம், தலைமயிர், இந்த்ரியங்கள், ஓஜஸ்[3] இவற்றிற்கும் பிரசஸ்தமானது; மேலும் ப்ருஹ்மணம், கண்ட்யம்,[4] குரு, ஆயுஷ்யம்,[5] ஜீவநம், ஸ்நிக்த்தம், பித்தஹரம், வாதஹரம், விஷஹரம் இக்குணங்களும், முலைப்பாலை விருத்திசெய்யுந் தன்மையும் மதுரரஸத்திற்கு உண்டு. மதுரரஸம் அதிகமாய் உபயோகிக்கப்படுமானால் கொழுப்பு அதிகரித்தல், கபம் அதிகரித்தல் இவற்றால் உண்டாகும் சில வியாதிகளும், ஸ்த்தூலித்துப் போதல், அக்னி மாந்த்யம், ஸந்யாஸம் என்னும் ஒருவித மூர்ச்சை,[6] பிரமேஹம்,[7] கண்டம்,[8] அர்புதம்[9] முதலிய ரோகங்களும் ஸம்பவிக்கும். 7—9.

**அம்லரஸத்தின் செய்கைகள் :**—அம்லரஸமானது தீபநம்,[10] ஸ்நிக்த்தம், ஹ்ருத்யம், பாசநம்,[11] ரோசநம்,[12] ப்ரீணநம்,[13] பேதநம்[14] இச்செய்கைகளைப் பண்ணும்; உஷ்ணவீர்யம்; பரிசத்தில் சீதமானது; இலகு குணமுள்ளது; கபம், பித்தம், இரத்தம் இவற்றைப் பிரகோபப்படுத்தும்; வெளிவர முடியாமல் உள்ளடங்கிய வாயுவைத் தகுந்தவாறு வெளிப்படுத்தும். அந்த இரஸம் அதிகமாக உபயோகிக்கப்படுமானால் சரீரத்திற்குத் தளர்ச்சியைக்

---

1. ஸாத்மியம்—தேஹத்துக்கு ஹிதமாயிருப்பது.
2. க்ஷதகாஸம்—இரத்தத்துடன் கபம் வெளிவருமாறு இருமுதல்.
3. ஓஜஸ்—இது இரஸம் முதல் சுக்ரம் வரையிலுமுள்ள ஏழு தாதுக்களுடைய ஸாராம்சமான ஒரு தாது. ஆங்கிலத்தில் அல்ப்யூமென் என்று கூறப்படும் தாதுவென்று தெரியவருகிறது.
4. கண்ட்யம்—தொண்டைக்கு ஹிதமானது.
5. ஆயுஷ்யம்—ஆயுளை விருத்திசெய்யும் தன்மை.
6. ஸந்யாஸம்—இதை ஆங்கிலத்தில் அபாப்ளெக்ஸி என்பார்கள்.
7. பிரமேஹம்—நீரழிவு ரோகம்.
8. கண்டம்—கண்டமாலையைப்போன்ற ஒருவித கட்டி.
9. அர்புதம்—புரை குழல்.
10. தீபநம்—42-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
11. பாசநம்—42-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
12. ரோசநம்—இதையே 'ரோசிஷ்ணு' என்றும் கூறுவர். 45-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
13. ப்ரீணநம்—இதையே தர்ப்பணம் என்றும் வழங்குவர்.
14. பேதநம்—இறுகிய மலத்தை உடைக்கும் செய்கை.

கொடுக்கும் ; திமிரம்,[1] தலைச்சுற்றல், சொரி, பாண்டு, விஸர்ப்பம்,[2] சோகை, கொப்புளம், நாவரட்சி, ஜ்வரம் இவற்றையும் உண்டு பண்ணும். 10—11½.

**இலவணரஸத்தின் செய்கைகள்:—**இலவணரஸமானது அவயவங்களின் சுருக்கத்தையும், வரட்சியையும், மலச்சிக்கலையும் போக்கக்கூடியது ; ஸ்நேஹநம்,[3] ஸ்வேதநம்,[4] தீக்ஷ்ணம், ரோசநம், சேதநம், பேதநம் என்கிற செய்கைகளையும் உண்டுபண்ணும். இலவணரஸமுள்ள வஸ்துக்களை மிதமிஞ்சியுபயோகித்தால் வாதரக்தம், பொட்டைத் தலை, மயிர்நரைத்தல், உடற்சுருக்கம், நாவரட்சி, குஷ்டம், விஸர்ப்பம் இவற்றை யுண்டுபண்ணும் ; தேஹவன்மையையும் போக்கிவிடும். 12—13½.

**திக்த ரஸத்தின் செய்கைகள் :—**திக்தம் என்னும் கைப்பானது சுயம் அரோசகமாயிருக்கும் ; ஆனால் வேறு காரணங்களால் உண்டாகும் அரோசகத்தைப் போக்கும் ; கிருமிகள், விஷஸம்பந்தமான கோளாறு, குஷ்டம், மூர்ச்சை, ஜ்வரம், வாயில் நீர்க்கசிதல், அழற்சி, பித்தவிகாரம், கபவிகாரம் இவற்றையும் சமநம் செய்யும் ; எவ்வித நீர்க்கசிவையும், மிதமிஞ்சிய கொழுப்பையும், வஸா அல்லது ஊன் ஜலத்தையும், மஜ்ஜாவையும், மலத்தையும், மூத்திரத்தையும் சோஷணம் பண்ணும் ; இலகு, மேத்யம், சீதவீர்யம், ரூக்ஷம் இக்குணங்களும், முலைப்பாலைச் சுத்தம்செய்யும் தன்மையும், தொண்டையைச் சுத்தப்படுத்தும் குணமும் அதற்கு உண்டு. இச்சுவையுள்ள பதார்த்தங்களை அளவுக்குமேல் உபயோகித்தால் தாதுக்களுக்கு க்ஷயமும், ஆகவே வாதஸம்பந்தமான வியாதிகளும் உற்பத்தியாகும். 14—16.

**கடுரஸத்தின் செய்கைகள் :—**கடுரஸமானது தொண்டையிலுண்டாகும் வியாதிகள், உதர்தம்,[5] குஷ்டம், அலஸகம்,[6] சோகை இவற்றைப் போக்கும் ; விரணங்களை அழிக்கும் ; ஸ்நேஹத்தையும், கொழுப்பையும், கிலேதம் என்கிற ஒருவகையான துர்நீரையும் உலரச்செய்யும் ; தீபநம், பாசநம், ருச்யம், சோதநம் என்னும் குணங்களும், ஆஹாரத்தைச் சோஷணம் செய்யும் தன்மையும் அதற்கு உண்டு; உடலுக்குள் அந்தந்த மார்க்கங்களில் ஏற்பட்டுள்ள சிக்கல்களை அறுத்து, ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் குழாய்களை விசாலப்படுத்துமியல்புடையது ; கபதோஷத்தினு லுண்டாகும்

---

1. திமிரம்—கண்ணிலுள்ள திருஷ்டி யென்னும் பாகத்தை மறைக்கும் வியாதி.

2. விஸர்ப்பம்—பட்ட விடங்களிற் பரவும் துர்நீருள்ள ஒருவித சிரங்கு ; அக்கி யென்றும் கூறுவர்.

3. ஸ்நேஹநம்—4-ஸ்வேதநம் இவற்றை அதனதன் அத்தியாயத்தில் பார்த்துக் கொள்க.

5. உதர்தம்—தினவோடும் வீக்கத்தோடுங் கூடிய ஒருவித படை.

6. அலஸகம்—உணவு ஜீர்ணமாகாமல் உண்டாகும் ஒருவித வயிற்றுப் பொருமல்.

விகாரங்களைப் போக்கும். இச்சுவையுள்ள வஸ்துக்களை அதிகமாய் உபயோகித்தால் விசேஷ நாவரட்சியையும், சுக்ரக்ஷயத்தையும், பலக்குறைவையும், மூர்ச்சையையும், அவயவங்களுக்குச் சுருக்கத்தையும், நடுக்கத்தையும், இடுப்பு முதுகு முதலான விடங்களில் வலியையும் உண்டுபண்ணும். 17—19.

**கஷாய ரஸத்தின் செய்கைகள்** :—கஷாயரஸம் என்கிற துவர்ப்பானது பித்த கபங்களாலான கோளாறுகளைப் போக்கும்; குரு குணமுள்ளது; இரத்தத்தைச் சுத்தி செய்யும்; அவயவங்களைச் சுருங்கச் செய்யும்; ரோபணம்,[1] சீதவீர்யம், கிலேதமென்னும் நிணநீரையும் கொழுப்பையும் சோஷணம் செய்யும் சக்தி இவற்றையுடையது; ஆமதோஷத்தை[2] உள்ளடக்கி விருத்தி செய்யும்; கிராஹி, ரூக்ஷம் என்னும் குணங்களும், சர்மத்தை அதிகமாகப் பதன்படுத்துந் தன்மையும் இதற்கு உண்டு. இதை அதிகமாய் உபயோகித்தால் மிகவும் வயிற்றுப் பொருமலும், வயிற்றில் வாயுப் பிரகோபமும், இருதய ரோகமும், நாவரட்சியும, இளைப்பும், ஆண்மைக் குறைவும், ஸ்ரோதஸ்ஸுகள் அடைபடுவதும், மலச்சிக்கலும் ஸம்பவிக்கும். 20—21½.

**மதுரத்திரவ்ய வர்க்கம்** :—நெய், பொன், வெல்லம், மலையூவக்காய்,[3] வாழை, கொன்றை, ஈச்சு, தண்ணீர் விட்டான், காகோலீ, பலா, முரளஞ்செடி, சிற்றுமுட்டி, பேராமுட்டி. நாகபலா என்னும் ஒருவகையான சிற்றுமுட்டி, மேதா, மஹாமேதா, சிறு மல்லிகை, பெருமல்லிகை, நரிப்பயறு, பெரிவீடு கொள்ளி, திருநீற்றுப் பாலை, ஜீவகம், ருஷபகம், இலுப்பை, அதிமதுரம், கோவை, நிலப்பனங் கிழங்கு, சிராவணீ, மஹா சிராவணீ, வெளுத்த இரளி, மூங்கிலுப்பு, பாலை, பழமுண்ணிப்பாலை, பெருங்குமிழ், ஸஹா, மஹாஸஹா, பால், கரும்பு, நெரிஞ்சில், தேன், திராக்ஷை முதலியவை மதுரரஸமுள்ள பதார்த்த வகுப்பைச் சேர்ந்தவையாம்.[4] 22—24½.

**அம்லத்திரவ்ய வர்க்கம்** :—நெல்லிக்கனி, கொடிமாதளை, புளிவஞ்சி, மாதளை, வெள்ளி, சுக்தம் என்னும் ஒருவகைகாடி, கிச்சிலி, தயிர், மா, ஆம்ராதகம், இங்குணமரம், விளா, தகரை முதலானவை அம்லரஸமுள்ள பதார்த்த வகுப்பைச் சேர்ந்தவை. 25,26.

**இலவணரஸ வர்க்கம்** :—இந்துப்பு, அட்டுப்பு, கறுப்புப்பு, வளையலுப்பு, கறியுப்பு, பூனீறு, சவுட்டுப்பு, உழமண்ணுப்பு, காரீயம், க்ஷாரங்கள் இவை இலவணரஸமுள்ள வகுப்பைச் சேர்ந்தவையாம்.—27.

---

1. ரோபணம்—விரணங்களை ஆற்றுங்குணம்.

2. ஆமதோஷம்—43-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. ஆக்ஷோடம்—மலையூவக்காய். அக்ரோட் என்று ஹிந்தி-வால் நட் என்று இங்கிலீஷ்.

4. இவ்வகுப்பில் கூறியுள்ள காகோலீ, மேதா, மஹாமேதா, ஜீவகம், ருஷபகம், சிராவணீ, மஹாசிராவணீ, ஸஹா, மஹாஸஹா, என்பவைகளுக்கு வேறு பாஷையில் பெயர் கிடைப்பது அரிது.

**திக்தரஸ வர்க்கம்** :—பேய்ப்புடல், கழற்சிக்காய், குருவேர், வெட்டிவேர், சந்தனம், நிலவேம்பு, வேம்பு, கடுகரோஹிணீ, தகரை, அகில், வெட்பாலை, பச்சிலை, மஞ்சள், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, பெருங்குரும்பை, ஆடாதோடை, வட்டத்திருப்பி, நாயுருவி, வெண்கலம், அயம், சீந்தில், காஞ்சொரி, மஹாபஞ்சமூலம்,[1] கண்டங்கத்திரி, சிறிய கண்டங்கத்திரி, தும்மட்டி, அதிவிடயம் இவை திக்தரஸமென்னும் கைப்புக்கு ஆதாரமானவையாம். 28—29½.

**கடுரஸ வர்க்கம்** :—காயம், மிளகு, வாய்விடங்கம், பஞ்சகோலம்,[2] கஞ்சாங்கோரை முதலிய[3] சில பச்சிலைகளும், பித்தம், மூத்திரம், சேங்கொட்டை இவையும் கடுரஸமுள்ள வஸ்துக்களாகும்.—30½.

**கஷாயரஸ வர்க்கம்** :—கடுக்காய், தான்றிக்காய், வாகை, கருங்காலி, தேன், கடம்பு, அத்தி, நல்முத்து, பவளம், நீலாஞ்ஜநம், காவி, நன்கு முதிர்ச்சி பெறாத விளாங்காய், பேரீச்சு, தாமரைக் கிழங்கு, தாமரை, நெய்தல் முதலியவை கஷாயரஸமுள்ள பதார்த்தங்களாம்.—31, 32.

**தோஷாதிகளைப் பிரகோபிக்கச் செய்யும் பிரத்யேக சுவைகள்**:—(1) பழகிய சம்பா, சிறிய சம்பா, பழகிய வாற்கோதுமை, பயறு, கோதுமை, தேன், சர்க்கரை, ஜாங்கலமாம்ஸம், இவற்றைத் தவிர மற்ற **மதுரரஸமுள்ள** பதார்த்தங்கள் யாவும் பெரும்பாலும் கபத்தை விருத்தி செய்யுந்தன்மையுள்ளவையாம். (2) மாதுளை, நெல்லிக்கனி இவற்றைத் தவிர்த்து மற்ற எல்லா **அம்லரஸபதார்த்தங்களும்** பெரும்பாலும் பித்தத்தை அதிகப்படுத்தும். (3) இந்துப்பு ஒன்றைத் தவிர மற்ற **உப்பு வகை** எதுவும் பெரும்பாலும் கண்களுக்கு அநுகூலமானவையல்ல. (4) சீந்தில், பேய்ப்புடல் இவற்றைத் தவிர வேறு **திக்தரஸமுள்ள** பதார்த்தங்களும், (5) சுக்கு, திப்பிலி, வெள்ளுள்ளி இவற்றைத் தவிர **கடுரஸமுள்ள** வேறு வஸ்துக்கள் யாவும் பெரும்பாலும் விருஷ்யகுணத்திற்கு எதிரிடையான குணமுள்ளவையாகவும், வாதத்தை விருத்தி செய்பவையாகவும் இருக்கின்றன. (6) கடுக்காயைத் தவிர்த்து மற்ற எவ்வித **துவர்ப்பு வஸ்துவும்** பெரும்பாலும் சீதவீர்யமும் ஸ்தம்பநகுணமு முள்ளதாகும். 33—35½.

**உஷ்ணவீர்யத்திலும், சீதவீர்யத்திலும் சிறந்த இரஸங்கள்** :—கடுரஸம், அம்லரஸம், இலவணரஸம் இம்மூன்றும் முறையே மேன்

---

1. மஹாபஞ்சமூலம்—பில்வம், பெருவாகை, பெருங்குமிழ், பாதிரி, சிறுவழுதுணை இவ்வைந்தின் வேர்களாம்.

2. பஞ்சகோலம்—சுக்கு, திப்பிலி, சவ்வியம், மோடி, சித்திரமூலம் இவ்வைந்தின் பொதுப் பெயர்.

3. கஞ்சாங்கோரை முதலியது என்றதால் முருங்கை, கருந்துளஸி முதலிய குடோராதிகணத்தில் கூறப்படும் வஸ்துக்களும் குறிப்பிடப்படுகின்றன. (குடோராதி கணத்தைப்பற்றி 15-வது அத்தியாயம் பார்க்க.)

மேலும் உஷ்ணவீர்யத்தை அதிகமாகப் பெற்றவையாம். (2) திக்த ரஸம், துவர்ப்பு, மதுரரஸம் இம்மூன்றும் முறையே மேன் மேலும் சீதவீர்யத்தில் சிறந்தவையாம்.—36½.

மலங்களைக் கட்டுவதிலும், வெளிபடுத்துவதிலும், சிறந்த இரஸங்கள்:—(1) திக்தரஸம், கடுரஸம், கஷாயரஸம், இவை ஒன்றைவிட மற்றொன்று முறையே ரூக்ஷத்தன்மையிலும், மலத்தைக் கட்டுவதிலும் மேலானவை. (2) இலவணரஸம், அம்லரஸம், மதுரரஸம் இம்மூன்றும் அவற்றிற்கு நேர் மாறாக ஸ்நிக்தத்தன்மையிலும், மலங்களை வெளிப்படுத்துவதிலும் முறையே மேன்மேலும் உயர்ந்தவையாகும்.—37½.

குரு-லகு குணங்களிற் சிறந்த இரஸங்கள்:—இலவணரஸம் குருகுணமுள்ளது; அதைவிட கஷாயரஸம் குருகுணத்திற் சிறந்தது; மதுரரஸம் அினத்தினும் அதிக குருகுணமுள்ளது. (2) அம்ல இரஸம் இலகுகுணமுள்ளது; அதைவிட இலகு குணத்திற் சிறந்தது கடுரஸமாம்; திக்தரஸம் இலகு குணத்தில் அினத்தினும் மேலானது.—38½.

அறுபத்துமூன்றுவிதமான இரஸக்கூட்டு முறைகள்:— ஆறுவிதமான இரஸங்களுக்கும் யோகங்களில்[1] ஒன்றோடொன்று முறைப்படி சேர்க்கையுண்டாகும்போது ஸாதாரணமாய் அவற்றை ஐம்பத்தேழுவகைகளில் கூட்டலாம்; ஆறு இரஸங்களையும் தனித்தனியே இந்த வரிசைகளில் சேர்த்துக்கொண்டால் அறுபத்து மூன்று விதமான இரஸ வகுப்பு ஏற்படும். அவை இங்கு பெரும்படியாக அடியில் வருமாறு பிரிக்கப்படும்:—இரண்டிரண்டு இரஸங்கள்[2] வீதம் ஆறு சுவைகளும் ஒன்றை விட்டு மற்றொன்றோடு கிரமமாகச் சேர்ந்துவருமானால், அப்பொழுது பதினைந்து விதங்களாக அவற்றைக் கூட்டலாம். மும்மூன்று இரஸங்கள் அவ்விதமே ஒன்றோடொன்று சேர்ந்தால் அப்பொழுது மதுரரஸம் பத்துவகையான இரஸக் கூட்டுகளோடும், அம்லரஸம் ஆறு விதமான இரஸக் கூட்டுகளோடும், இலவணரஸம் மூன்று இரஸக் கூட்டோடும், திக்தரஸம் ஒன்றுடனும் சேர்க்கப்படக்கூடும். இவை நான்கு நான்காகச் சேர்ந்தால், மதுரரஸமானது பத்துவித இரஸக் கூட்டுகளோடும், அம்லரஸம் நான்கு இரஸக் கூட்டுகளோடும், இலவணம் ஒன்றோடும் சேரலாம். அவை ஐந்தைந்தாகச் சேருமானால், மதுரரஸம் ஐந்து வகையான இரஸக் கூட்டுகளிலும், அம்லரஸம் ஒரே இரஸக்கூட்டுப்பாட்டிலும் ஸம்பந்தம் பெறக்கூடும். அறுசுவைகளும் ஒருமிக்கச் சேர்வதும் இரஸஸம்யோக ஸம்பந்தமான எண்ணிக்கைகளில் ஒன்றாகக் கருதப்படும். ஒன்றோடொன்றுகலப்பில்லாமல்தனித்தனியே இருப்பவை ஆறுவித

1. யோகங்கள்—ஔஷத முறைகள், அல்லது ஔஷதக்கூட்டுகள்.
2. இங்கு இரஸங்கள் என்றால் இரஸங்களுக்கு ஆதாரமான வஸ்துக்கள் என்று கருத்து.

இரஸங்களாம். ஆகவே இரஸங்கள் ஐந்தைந்தாகக் கூடுவதால் ஆறு விதமான சேர்க்கைகளும், அவை தனித்தனியே இருப்பதால் ஆறு எண்ணிக்கைகளும், நான்கு நான்காகவும்—இரண்டிரண்டாகவும் கூடும் வகையில் தனித்தனியே பதினைந்துவித சேர்க்கைகளும், மும்மூன்றாகக் கூடுவதால் இருபதுவித சேர்க்கைகளும், அறுசுவைகளும் ஒருமிக்கக் கூடுவதால் ஒரேவித சேர்க்கையும் ஏற்படுமாகையால் [1], இவ்வனைத்தும் அறுபத்து மூன்று விதங்களாகக் கணக்கிடப்படுகின்றன.[2] 39½—43.

---

1. இரண்டு எண்ணிக்கையுள்ள இரஸச் சேர்க்கைகள் :—(1) மதுர-லவணங்கள், (2)மதுர-அம்லங்கள், (3) மதுர-திக்தங்கள், (4) மதுர-கடுக்கள், (5) மதுர-கஷாயங்கள், (6) அம்ல-லவணங்கள், (7) அம்ல-திக்தங்கள், (8) அம்ல-கடுகங்கள், (9) அம்ல-கஷாயங்கள், (10) இலவண-திக்தங்கள, (11) இலவண-கடுகங்கள், (12) இலவண-கஷாயங்கள், (13) திக்த-கடுகங்கள், (14) திக்த-கஷாயங்கள், (15) கடு-கஷாயங்கள்.

மூன்று எண்ணிக்கையுள்ள இரஸச் சேர்க்கைகள்:—(1) மதுர-அம்ல லவணங்கள், (2) மதுர-அம்ல-திக்தங்கள், (3) மதுர-அம்ல-கடுகங்கள், (4) மதுர-அம்ல-கஷாயங்கள் ; (5) மதுர-லவண-திக்தங்கள், (6) மதுர-லவண-கடுகங்கள், (7) மதுர-லவண-கஷாயங்கள் ; (8) மதுர-திக்த—கடுகங்கள், (9) மதுர—திக்த-கஷாயங்கள்; (10) மதுர—கடு-கஷாயங்கள். (11) அம்ல—லவண-திக்தங்கள். (12) அம்ல-லவண-கடுகங்கள், (13) அம்ல-லவண-கஷாயங்கள்; (14) அம்ல—திக்த-கடுகங்கள், (15) அம்ல-திக்த-கஷாயங்கள்; (16) அம்ல-கடு-கஷாயங்கள். (17) இலவண-திக்த-கடுக்கள், (18) இலவண-திக்த-கஷாயங்கள், (19)இலவண-கடு-கஷாயங்கள். (20)திக்த-கடு-கஷாயங்கள்.

நான்கு எண்ணிக்கையுள்ள இரஸச் சேர்க்கைகள்:—(1) மதுர-அம்ல-லவண-திக்தங்கள், (2) மதுர-அம்ல-லவண-கடுகங்கள், (3) மதுர-அம்ல-லவண-கஷாயங்கள், (4) மதுர-அம்ல-திக்த-கடுகங்கள், (5) மதுர-அம்ல-திக்த-கஷாயங்கள், (6) மதுர-அம்ல-கடு-கஷாயங்கள். (7) மதுர—லவண-திக்த-கடுகங்கள், (8) மதுர-லவண-திக்த-கஷாயங்கள், (9) மதுர-லவண-கடு-கஷாயங்கள். (10) மதுர-திக்த-கடு-கஷாயங்கள். (11) அம்ல-லவண-திக்த-கடுகங்கள், (12) அம்ல-லவண-திக்த-கஷாயங்கள், (13) அம்ல-லவண-கடு-கஷாயங்கள். (14) அம்ல-திக்த-கடு-கஷாயங்கள், (15) இலவண-திக்த-கடு-கஷாயங்கள்.

ஐந்து எண்ணிக்கையுள்ள இரஸச்சேர்க்கைகள்:-(1)மதுர-லவண-திக்த-கடு-கஷாயங்கள், (2) மதுர-அம்ல-திக்த-கடு-கஷாயங்கள், (3) மதுர-அம்ல-லவண-கடு-கஷாயக்கள், (4) மதுர-அம்ல-லவண-திக்த-கஷாயங்கள்,(5)மதுர-அம்ல-லவண-திக்த-கடுகங்கள். (6) அம்ல-லவண-திக்த-கடு-கஷாயங்கள்.

ஆறு எண்ணிக்கையுள்ள இரஸச் சேர்க்கை:—(1) மதுர-அம்ல-லவண-திக்த-கடு-கஷாயங்கள்.

தனித்தனியான இரஸங்கள்:—(1) மதுரம், (2) அம்லம், (3) இலவணம், (4) திக்தம், (5) கடு, (6) கஷாயம்.

2. ஆக இரண்டு இரஸங்களின் சேர்க்கையில் 15-ம், மூன்று இரஸச் சேர்க்கையில் 20-ம்,நான்கு இரஸங்களின் சேர்க்கையில்15-ம், ஐந்துஇரஸச் சேர்க்கையில் 6-ம். ஆறு இரஸச் சேர்க்கையில் 8-ம்,தனித்தனி இரஸங்களாக 6-ம் ஆகச் சேர்ந்து 63-இரஸ ஸம்யோகங்களாகும்.

இரஸக் கூட்டுகளின் முறை எண்ணிறந்தவையாம் :—அவ்வாறு அநேகவகையில் கூட்டக்கூடிய இரஸங்கள் இரஸங்கள் என்றும், அநுரஸங்கள் என்றும், அவற்றின் சேர்க்கையிலுள்ள தாரதம்யங்களின் விகற்பங்கள் என்றும் இவ்வாறு பலவகுப்புகளாகப் பிரிக்கப்படுவதால், அந்த இரஸங்களின் கூட்டுகள் எண்ணிறந்தவையாகும். அவ்வாறு எண்ணிறந்த வகையில் கூட்டப்படும் இரஸங்களையுடைய பதார்த்தங்கள் தோஷங்களின் கூறுபாடுகளையும், ஔஷதமுறைகளின் தன்மைகளையும் அநுஸரித்து சிகித்ஸாகிரமங்களில் பிரயோகிக்கக் கூடியவையாம்.—44.

---

## பதினேராம் அத்தியாயம்.

### தோஷாதி விஞ்ஞாநம்.

இப்பொழுது தோஷாதி விஞ்ஞாநீயம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது :—

சரீரத்திற்கு மூலாதாரங்கள் :—சரீரத்திற்கு தோஷங்களென்ன, தாதுக்களென்ன, மலங்களென்ன இவை எப்பொழுதும் மூலாதாரங்களாயிருக்கின்றன. (1) கோளாறடையாதஇயற்கைநிலைமையிலுள்ள வாயுவானது உத்ஸாஹமூட்டுவதாலும், உச்சுவாஸ-நிச்வாஸங்களாலும்,[2] சேஷ்டைகளாலும்,[3] வேகங்களை[4] வெளியிடுவதாலும், தாதுக்களுடைய இயற்கை வேலைகளைச் சரியாக நடத்துவதாலும், இந்திரியங்களை அதனதன் க்ரியைகளில் சுறுசுறுப்பாயிருக்கச் செய்வதாலும் சரீரத்தை ஆதரித்து வருகிறது. (2) பித்தமானது இயற்கைக்கு வேண்டிய வெப்பத்தை யுண்டு பண்ணியும், கண் பார்வையைக் கொடுத்தும், பசிதாஹங்களை யுண்டு பண்ணியும், பதார்த்தங்களின் சுவையறியும் சக்தியென்ன, தேஹக்காந்தியென்ன, விசேஷ மதியென்ன, ஸாதாரண புத்தியென்ன, பராக்கிரமமென்ன, தேஹமார்தவமென்ன இவற்றைக் கொடுத்தும் சரீரத்தைத் தாங்கி வருகிறது. (3) கபமானது திடத்தன்மையையும், ஸ்நிக்கதத் தன்மையையும், எலும்பு முதலானவற்றின் பூட்டுகளைக் கட்டியமைப்பதையும், பொறுமையையும் உண்டுபண்ணி உடலைக் காத்துவருகிறது. 1—3.

தாதுக்களின் பிரயோஜனங்கள்:—இரஸம், இரத்தம், மாம்ஸம், கொழுப்பு, எலும்பு, மஜ்ஜை, சுக்லம் இவ்வேழு தாதுக்களுக்கும்

---

1. தோஷங்கள், தாதுக்கள், மலங்கள் இவற்றின் தன்மைகளை அறியும் வகைகளை விவரிக்கும் அத்தியாயம்.

2. உச்சுவாஸ நிச்வாஸங்கள்—மூச்சு உட்கொள்ளுவதும், மூச்சு வெளிவிடுவதும்.

3. சேஷ்டைகள்—மனோ-வாக்-காய ஸம்பந்தமான வேலைகள்.

4. வேகங்கள்— மல-மூத்திராதிகளை வெளி விடுவதற்கான உணர்ச்சியும், பசிதாஹம் முதலியவையுமாம்.

இயற்கை நிலைமையில் ப்ரீணநம்,[1] ஜீவநம்,[2] லேபநம்,[3] ஸ்நேஹநம்[4], தாரணம்,[5] பூரணம்,[6] கர்ப்போத்பாதநம் என்னும் இவை முறையே முக்கியமான செயல்களாகக் கருதப்படுகின்றன.—4.

மலங்களின் பிரயோஜனங்கள் :—மலத்திற்கு உடலை வன்மையாக நிறுத்துவதும், மூத்திரத்திற்கு உடலினுண்டாகும் கழிவுப் பொருட்களை வெளியாக்குவதும், வியர்வைக்கு அக்கழிவுகளைத் தாங்குவதும் பிரதானமான இயற்கைப்பிரயோஜனங்களாம்.[7]—4¾.

தோஷங்களின் பிரகோபத்தாலுண்டாகும் விகாரங்கள் :—(1) வாததோஷம் விருத்தியடைந்தால் உடலுக்கு இளைப்பு, கருநிறம், உஷ்ணத்தில் விருப்பம், உடல் நடுக்கம், வயிற்றுப் பொருமல், மலச்சிக்கல், பலக்குறைவு, வாய்ப் பிதற்றல், நித்திரையின்மை, இந்த்ரிய நாசம், தலைச்சுற்றல், உத்ஸாஹமின்மை இவை யுண்டாகும். (2) பித்ததோஷம் விருத்தியானால் மலம், மூத்திரம், கண்கள், சர்மம் இவை மிக்க மஞ்சள் நிறமாகும்; பசி, தாஹம், நித்திரைக்குறைவு இவை ஸம்பவிக்கும். (3) கபம் விருத்தியானால் அக்னிமாந்த்யம், வாயில் நீர் சுரத்தல், சோம்பல், தேஹம் பாரமாயிருப்பதுபோல் தோற்றுதல், தேஹம் வெளிறிப் போதல், குளிர்ச்சி, அவயவங்கள் தளர்ச்சியுறுதல், ச்வாஸ காஸங்கள், அதிநித்திரை இவ்விகாரங்கள் உண்டாகும். 5—7½.

(1) தாதுக்கள் இயற்கைக்கு மேல் விருத்தி யாவதாலுண்டாகும் விகாரங்கள்:—(1) இரஸம் விருத்தியானால் அதனாலுண்டாகும் விகாரங்களும் கபம் விருத்தியாவதாலாகும் கோளாறுகளுக்குச் சமானமானவையே. (2) இரத்தம் இயற்கை யளவிலும் அதிகமானால் விஸர்ப்பம்[8], ப்லீஹவ்ருத்தி[9], வித்ரதி[10], குஷ்டம், வாதரக்தம்,[11] இரத்த பித்தம், குன்மம், உபகுசம்,[12] காமாலை, வியங்கம்,[13] அக்னி

1. ப்ரீணநம்—உடலையும் மனதையும் த்ருப்தியுறச் செய்தல்; தர்ப்பணம் என்றும் இதைக் கூறுவர்.
2. ஜீவநம்—40-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
3. லேபநம்—தேஹத்தை மேடுபள்ளமில்லாமல் ஒழுங்காக்கி வேலை செய்வதற் குற்றவாறு வைத்தல்.
4. ஸ்நேஹம்—51-ம் பக்கம் டிப்பிணியைப் பார்க்க.
5. தாரணம்—தரித்தல் அல்லது தாங்குதல்.
6. பூரணம்—நிரப்புதல்.
7. ஸாரத்தை உடலில் பரப்பியும், மலவஸ்துக்களை அப்புறப்படுத்தியும், தேஹம் தாங்கப்படுவதைக் கருதி ' மலம் உடலை வன்மையாக நிறுத்துகிறது' எனப்படுகிறது.
8. விஸர்ப்பம்—அக்னியம்மை யெனக் கூறப்படும் ஒருவித விரணம்
9. ப்லீஹவ்ருத்தி—மண்ணீரல் வீக்கம்.
10. வித்ரதி—சீழ்க்கட்டி (தமிழில் விப்புருதி என்பார்கள்.)
11. வாதரக்தம்—குஷ்டம் போன்ற ஒரு கடுமையன வியாதி.
12. உபகுசம்—ஒருவித பல் வியாதி.
13. வியங்கம்—வங்கு எனப்படும் ஒருவித சர்மவியாதி.

மாந்த்யம்,[1] மூர்ச்சை இவ்விகாரங்கள் உண்டாவதோடு சர்மமும், நேத்திரமும், மூத்திரமும் சிவப்பாகவும் ஆய்விடும். (3) மாம்ஸம் விருத்தியானால், கண்டமாலை, களகண்டம்,[2] அர்புதம்,[3] கிரந்தி, இவை உண்டாவதுடன், கன்னம்-துடை-வயிறு இவை மிகப் பருமனாதலும், கழுத்து முதலான அவயங்களில் மாம்ஸம் அதிகப்படுவதும் உண்டு. (4) மேதஸ் என்னும் கொழுப்பு அதிகமானாலும், மாம்ஸ விருத்தியினாலுண்டாவது போலவே விகாரங்கள் ஏற்படுவதுடன், அற்ப வேலையைச் செய்தபோதிலும் மேல் மூச்சு அதிகரித்து,சிரமமும் ஏற்பட்டு,ப்ருஷ்டபாகமும் ஸ்தநமும் வயிறும் அதிகமாகப் பருத்துத் தொங்கக்கூடும். (5) எலும்பு விருத்தியானால், அவ்வெலும்பு கரடு கட்டுவதும், பற்கள் ஒன்றுமேலொன்றாக முளைப்பதும் உண்டு. (6) மஜ்ஜை விருத்தியானால் நேத்திரமும் தேஹமும் பாரமாயிருப்பதாகத் தோற்றுதலும், எலும்புப் பூட்டுகளில் பருமனான விகாரமும், மிகவும் கஷ்டந்தரக் கூடிய அரும்ஷிகை யென்னும் புண்களும் உண்டாகும். (7) சுக்ரம் அதிகமானால் ஸ்த்ரீகளிடம் அதிக விருப்பமும், சுக்ராச்மரிரோகமும் உண்டாகும். 8—12.

மலங்கள் இயற்கையினும் அதிகமாவதா லுண்டாகும் விகாரங்கள்:—(1) மலம் இயற்கையினும அதிகமாய் விருத்தியானால் வயிற்றில் பொருமலும், ஒருவித இரைத்தலும், வயிற்றில் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சியும், வேதனையும் உண்டாகும். (2) மூத்திரம் விருத்தியானால் வஸ்தியில்[4] குத்தல் வலியும், மூத்திரம் வெளியான பிறகும் வெளியாகாதது போன்ற உணர்ச்சியும் இருக்கும். (3) வியர்வை விருத்தியானால் அது மிகுதியாக வெளிவரும்; ஒருவகையான துர்நாற்றமும் தினவும் உண்டாகும். (4) இவ்வாறே கண்களில் உண்டாகும் மலம் முதலியதின் விருத்தியையும் அவை அதிகமாயிருப்பதாலும் குருத்தன்மையினாலும் அறியலாம். 13, 14.

(1) தோஷங்கள் க்ஷீணிப்பதாலுண்டாகும் விகாரங்கள். :—(1) வாதம்க்ஷீணமானால் சரீரம் இளைக்கும்; பேசுவதில் அதிகப் பிரியமிராது;நினைவு தடுமாறிமூர்ச்சையும் ஸம்பவிக்கும்; மேலும் கபம் விருத்தியாவதா லுண்டாகக் கூடுமென்று கூறப்பட்டுள்ள வியாதிகளும் ஸம்பவிக்கும். (2) பித்தம் க்ஷீணமானால் அக்னி மாந்த்யம், சைத்யம், தேஹகாந்திக்குக் குறைவு இவ்விகாரங்கள் உண்டாகும். (3) கபம் க்ஷீணமானால் தலைச் சுற்றல், சிலேஷ்மாசயங்கள்[5] சூன்ய

---

1. அக்னிமாந்தயம்—பசிமந்தித்துப் போதல்.
2. களகண்டம்—கழுத்து முதலாள விடங்களிலுண்டாகும் கட்டி,
3. அர்புதம்— புரைகுழல்.
4. வஸ்தி— மூத்திரப்பை.
5. சிலேஷ்மாசயங்கள் — ச்வாஸாசயங்கள், சிரஸ், எலும்புகளின் பூட்டுகள் ஆகியவற்றில் கபம் தங்கியிருப்பது இயல்பாகையால், அவை சிலேஷ்மாசயங்கள் என்று வழங்கப்படுகின்றன.

மாதல், இருதயத்தில் படபடத்த சப்தம், ஸந்திகள் நழுவுதல் என்னும் இக்கோளாறுகள் உண்டாகும்.—15, 16.

தாதுக்கள் க்ஷீணித்தால் உண்டாகும் விகாரங்கள் :—(1) இரஸம் க்ஷீணமானால் ருக்ஷத் தன்மையும், சிரமமும், தாதுக்ஷயமும், தேஹ வாட்டமும், அதிக சப்தங்களைச் சஹிக்க முடியாத தன்மையும் ஏற்படும். (2) இரத்தம் க்ஷீணித்தால் அம்லரஸத்திலும் குளிர்ச்சியிலும் விருப்பமுண்டாகும்; ஸிரைகள்[1] தளர்ச்சியடைந்து தேஹமும் ருக்ஷமாகும். (3) மாம்ஸம் க்ஷீணமானால் இந்த்ரியங்களின் சக்தி மந்தமாதல், தவடையும் ப்ருஷ்டபாகமும் சுஷ்கமாதல், ஸந்திகளில் வேதனை இவை ஸம்பவிக்கும். (4) மேதஸ்[2] க்ஷீணமடைந்தால் அடி வயிறு அல்லது இடுப்பு மெலிவுறும்; ப்லீஹம் என்னும் மண்ணீரல் பருத்துப் போகும்; உடலெங்கும் இளைப்பும் தோன்றும். (5) எலும்பு க்ஷீணமானால், எலும்புகளில் குடைத்தல், பற்கள் மயிர்கள் நகங்கள் முதலானவை உதிர்தல் இக்குறிகள் உண்டாகும். (6) மஜ்ஜை க்ஷீணமடைந்தால் அஸ்த்திகளுக்குள் த்வாரங்கள் ஏற்படும்; தலைச் சுற்றல் உண்டாகும்; கண் பார்வை இருளடையும். (7) சுக்ரம் க்ஷீணமானால் அது வெளியாவதற்கு வெகு நேரம் செல்லும்; அல்லது இரத்தம் வெளிவரும்; பீஜங்களில் வேதனை மிகுதியாயுண்டாகும்; ஆண் குறியில் அழற்சி அதிகரிக்கும். 17—20.

மலங்கள் க்ஷீணிப்பதாலான விகாரங்கள் :—(1)மலம் க்ஷீணித்தால் வாயுவானது ஒருவித சப்தத்தோடு குடல்களை முறுக்குவது போல் தோற்றும்; இருதயத்தின் பார்சங்களை மிகவும் பீடித்துக் கொண்டு, வயிற்றினுள் அவ்வாயு சுழன்றுகொண்டு, மேல்நோக்கிக் கிளம்பும். (2) மூத்திரம் க்ஷீணித்தால் வெகு கஷ்டத்துடன் சிறிதளவு மூத்திரம் வெளி வரும்; அதுவும் நிறம் மாறி யிருக்கும்; அல்லது இரத்தங் கலந்தாவது வெளிவரும். (3) ஸ்வேதம்[3] க்ஷீணித்தால் உரோமங்கள் தடித்து நிற்பதோடு அவை உதிரவும் ஆரம்பிக்கும்; சர்மமும் வெடித்துப் போகும். (4) அதிக ஸூக்ஷ்மமான மற்றுமுள்ள மலங்கள்[4] க்ஷீணமானால், அவ்வித க்ஷயம் உணரக் கூடாத நிலைமையில் இருக்குமாகையால், அப்பொழுது அந்தந்த மலத்திற்கு ஆதாரமான ஸ்த்தானங்கள் சுஷ்கமாவதாலும், அவ்விடங்களில் உண்டாகும் வலியினாலும், அவ்வவயவங்கள் சூன்யமாவதாலும் அல்லது இலகுவாகப் போவதாலும் அவற்றின் க்ஷயங்களை அறியலாம். 21—23.

---

1. ஸிரைகள்—காரிரத்தக் குழாய்கள்.
2. மேதஸ்—கொழுப்பு.
3. ஸ்வேதம்—வியர்வை நீர்.
4. 'மற்றுமுள்ள மலங்கள்' என்பதால் கண், காது, நாசி முதலான அவயவங்களில் உண்டாகும் மலங்கள் குறிக்கப்படுகின்றன.

**தோஷாதிகளின் விருத்தி க்ஷயங்களை அறிவதற்குப் பொது விதிகள்:—**வைத்தியனானவன், தோஷம் முதலியவற்றிற்குச் [1] சம்பவிக்கும் விருத்தியையும், க்ஷயத்தையும் அடியிற் குறிப்பிடப்படும் உபாயத்தினால் அறியவேண்டும்:—அந்தந்த தோஷாதிகளுக்கு நேர் எதிரிடையான குணங்கள் க்ஷயித்தால் அந்தந்த தோஷாதிகளுக்கு விருத்தியும், அக்குணங்கள் விருத்தியாவதால் அவற்றிற்கு க்ஷயமும் உண்டாகும். [2] ஆனால் மலங்கள் மேன்மேலும் சேர்ந்து விருத்தியாவதால் அம்மலங்களுக்கு விருத்தியும், அவையே அதிகமாய் வெளி வருவதால் அவற்றிற்கு க்ஷயமும் ஏற்படும். 24—24½.

**மலத்தின் க்ஷயம் விருத்தியினும் கெடுதி :—**மலங்கள் விருத்தியாவதும், க்ஷீணிப்பதுமான இரண்டு நிலைமைகளும் ஆகாதவையே; ஆகிலும், தேஹத்தில் சிறிதளவு மலம் இருப்பது இயற்கைக்கு அவசியமானதாக வழக்கத்தில் வந்து விட்டதால், அவ்வாறு மலம் க்ஷீணித்துப் போவது விருத்தியைக் காட்டிலும் கெடுதியுண்டு பண்ணக்கூடியதாம்.—25.

**தோஷ-தாதுக்களின் ஸம்பந்தமும், விருத்தி க்ஷயமும் :—**அவற்றுள் வாபு எலும்பிலும், பித்தம் வியர்வை இரத்தம் இவ்விரண்டிலும், மற்ற தாதுக்களில் கபமும் இருந்துவருகின்றன. ஆகையினால், ஆதாரமாகவும் ஆதேயமாகவு [3] மிருக்கிற தாதுக்களென்ன, தோஷங்களென்ன இவற்றில் பரஸ்பரம் ஒன்றுக்கு விருத்தி ஹேதுவாகவோ க்ஷயஹேதுவாகவோ உள்ள ஔஷதமானது மற்றொன்றுக்கும் இவ்வாறே விருத்தி ஹேதுவாகவோ க்ஷயஹேதுவாகவோ ஆகும். ஆனால் அஸ்த்திக்கும் [4] வாயுவுக்கும் இவ்விதி பொருத்தமாகாது; ஏனெனில்: விருத்தியானது பெரும்பாலும் தர்ப்பண சிகித்ஸையினால் உண்டாகக் கூடியது; அவ்வித விருத்தியானது கபத்தினால் அநுஸரிக்கப்பட்டே நடந்தேறும். க்ஷயமோ அதற்கு மாறாக லங்கந சிகித்ஸையினால் ஆகக் கூடியதா யிருப்ப

---

1. 'தோஷம் முதலியவை' என்பதால் தோஷ-தாது மலங்கள் அனைத்தும் குறிக்கப்படுகின்றன.

2. வாயுவின் இயற்கைக் குணங்கள் ரூக்ஷ-லகு-சீதாதிகள்; அக்குணங்களுக்கு நேர் எதிரிடையா யிருப்பவை முறையே ஸ்நிக்த்தம்-குரு-உஷ்ணம் முதலியவை. ஸ்நிக்த்தாதிகள் க்ஷீணித்தால் வாயுவுக்கு விருத்தியும், ஸ்நிக்தாதிகள் விருத்தியானால் வாயுவுக்கு க்ஷயமும் உண்டாகும் என்பது கருத்து. இவ்விதமே கபம் முதலிய தோஷங்களுக்கும், இரஸாதி தாதுக்களுக்கும், மலங்களுக்கும் விவரம் அறிக.

3. ஆதேயம்—மற்றொன்றை ஆதாரமாகப் பெற்றிருப்பது. உதாரணம்—பாத்திரம் ஆதாரம்; அதிலுள்ள நீர், அல்லது வேறு எவ்வஸ்துவும் ஆதேயம் எனப்படும்.

4. அஸ்த்தி—எலும்பு.

தால், அது பெரும்பாலும் வாயுவினால் அநுஸரிக்கப்படுகின்றது.[1] 26—27½.

**தோஷ-தாதுக்களின் விருத்தி க்ஷயங்களாலான கோளாறுகளைப் பரிஹரித்தல்:**—தத்துவம் இவ்வாறிருப்பதால், தோஷ - தாதுக்களின் விருத்தியினா லுண்டாகும் கோளாறுகளை லங்கந சிகித்ஸையினாலும், அவற்றின் க்ஷயத்தினா லுண்டாகிற கோளாறுகளை ப்ருஹ்மண சிகித்ஸையினாலும் போக்கி ரோகியை சீக்கிரம் ஸ்வஸ்தப்படுத்தவேண்டும். ஆனால் வாயுவிஷயத்தில் அவ்வாறு செய்யக் கூடாது; அத்தோஷத்தினா லுணடாகும் கோளாறுகளில் மட்டும் முற்கூறிய சிகித்ஸாமுறைகளையே மாற்றிப் பிரயோகிக்க வேண்டும்.[2]—28, 29.

**தாதுக்களுடைய விருத்தி-க்ஷய சிகித்ஸைகளில் விசேஷவிதி:**— இதன் பிறகு சில விசேஷ விதிகள் கூறப்படுகின்றன; அவையாவன:—இரத்தம் விருத்தியாவதா லுண்டாகும் கோளாறுகளை இரக்த மோக்ஷணத்தினாலும்,[3] விரேசந சிகித்ஸைகளாலும் பரிஹரிக்க வேண்டும். மாம்ஸம் விருத்தியாய் உண்டாகும் வியாதிகளைச் சஸ்திர கர்மமென்ன,[4] க்ஷாரப் பிரயோக மென்ன,[5] அக்னிப் பிரயோகமென்ன[6] இச்சிகிதஸைகளாலும், மேதஸ் என்கிற கொழுப்பு விருத்தியா யுற்பத்தியாகும் வியாதிகளை ஸ்தூல தேஹிகளுக்குரிய சிகித்ஸையினாலும், அதன் க்ஷயத்தினாலான ரோகங்களை மிகவும் மெலிந்த தேஹிகளுக்கேற்ற சிகித்ஸையினாலும் உபசரிக்க வேண்டும். அஸ்திகள் மெலிவுறுவதால் ஏற்படும் பிணிகளை திக்த ரஸமுள்ள வஸ்துக்களைச் சேர்த்து பக்குவம்செய்த பாலென்ன, கிருதமென்ன, வஸ்திப் பிரயோகங்களென்ன, இவற்றாலும், மலம் அமிதமாக விருத்தியாய் உண்டாகும் வியாதிகளை அதிஸாரத்திற்குக் கூறப்படும் சிகித்ஸையினாலும், மலம் க்ஷயித்துப் போவதாலான ரோகங்களை வெள்ளாடு, செம்மறியாடு இவற்றின் குடலிறைச்சி யென்ன, காராமணி யென்ன, யவதானிய மென்ன, உளுந்தென்ன, மொச்சைப் பருப்பென்ன இவற்றாலும்

---

1. தேஹத்தின் எவ்விதமான விருத்தியம்சமும் கபத்திற்குச் சம்பந்தப்பட்டதென்றும், க்ஷயமெல்லாம் வாதத்திற்குச் சம்பந்தப்பட்டதென்றும் கோட்பாடு.

2. வாதவிருத்தியாலான கோளாறுகளை ப்ருஹ்மணத்தினாலும், வாதக்ஷயத்தினாலான கோளாறுகளை லங்கநத்தினாலும் சிகித்ஸிக்க வேண்டுமென்று கருத்து.

3. இரக்தமோக்ஷணம்—இரத்தத்தை வெளிப்படுத்தி செய்யப்படும் சிகித்ஸை.

4. சஸ்திரகர்மவிஷயங்கள் ஸூத்திர ஸ்த்தாநம் 26-வது 29-வது அத்தியாயங்களில் விவரிக்கப்படுகின்றன.

5. க்ஷாரப்பிரயோகம்—30-ம் அத்தியாயம் பார்க்க.

6. அக்னிப்பிரயோகம் என்றால் சுடுதல்—30-ம் அத்தியாயம் பார்க்க.

பரிஹரிக்க வேண்டும். மூத்திரம் விருத்தியாவதா லுண்டாகும் வியாதிகளை பிரமேஹ சிகித்ஸையினாலும், மூத்திரம் க்ஷயிப்பதா லான வியாதிகளை மூத்திரக்ருச்சிர சிகித்ஸையினாலும், ஸ்வேதம் க்ஷயிப்பதால் ஸம்பவிக்கும் பிணிகளை வியாயாமமென்ன, அப்யங்க மென்ன, வியர்வை யுண்டாகச் செய்யும் வேது பிடித்தல் முதலிய செய்கையென்ன, மதுபாநமென்ன இவற்றாலும் உபசரித்துப்போக்க வேண்டும். 30—33.

**உடற்சூட்டின் ஏற்றத்தாழ்வுகளுக்கு ஏற்றவாறு தாதுக்களின் விருத்தி-க்ஷயங்கள்:—** தன்னுடைய ஸ்த்தாநத்தில் இருந்து வருகிற உடற்சூட்டின் ஸூக்ஷ்மமான [1] அம்சங்கள் எல்லாத் தாதுக்களி லும் பரவியிருக்கின்றன. அந்த அம்சங்கள் இயற்கையினும் குறைவதால் தாதுக்கள் விருத்தியாகின்றன; அவை அதிகமாக விருத்தியானால் தாதுக்கள் க்ஷயிக்கத் தொடங்கும். [2]—34.

**தோஷ-தாது மலங்கள் பரஸ்பரம் கெட்டுப் போதல் :—** முன் னுள்ள தாதுவானது விருத்தியாலும் க்ஷீணித்தாலும் தனக்குப் பின்னுள்ள தாதுவையும் அதே விதமாகச் செய்து விடும்; தோஷங் கள், தகாத விதமா யுபயோகித்த உணவின் இரஸங்களால் கெட் டுப் போகும்; அவை கெட்டுப்போனால் தாதுக்களைத் தூஷிப்பிக் கும்; தோஷ-தாதுக்கள் இரண்டும் கெட்டால் மலங்களையும் அவை கோளாறடையச் செய்யும்.—35.

**மலமார்க்கங்களும் அவற்றின் கோளாறுகளும் :—** கீழே இரண்டு த்வாரங்களும், [3] சிரஸ்ஸில் ஏழு த்வாரங்களும், [4] உடலெங்கும் வியா பித்துள்ள வியர்வைத் துவாரங்களும் **மல மார்க்கங்கள்** அல்லது **மலாயநங்கள்** என்று வழங்கப்படும். கோளாறடைந்த மலங்கள் அம் மல மார்க்கங்களையும் தூஷிப்பிக்கும்; ஆகவே எந்தெந்த மலம் கோளாறடைகின்றதோ, அததற்குரித்தான மலாயநங்களிலும் வியாதிகள் ஸம்பவிக்கும்.—36.

---

1. உடற்சூடு—இது ஸம்ஸ்கிருத மூலக்கிரந்தத்தில் **காயாக்னி** என்று சொல்லப்பட்டிருக்கிறது; காயாக்னி என்றால் ஜாடராக்னி யென்று அருணதத்தன் எழுதுகிறார். உணவுகளைப் பக்குவம் செய்வதற்கான ஜாட ராக்னி யென்னும் பித்தம் வேறு, இரத்தத்தைத் தனக்கு முக்கிய இருப் பிடமாகப் பெற்ற உடற்சூடு வேறு என்று பகுத்தறிந்தவர், காயாக்னி யென்பதற்கு ஜாடாாக்னி யென்று பொருள் கூறுவது உசிதமென்று நினைக்கமாட்டார்.

2. தேஹச்சூடு அமிதமாய் விருத்தியாகத் தொடங்கினால் தாதுக்களை எரிக்க ஆரம்பிக்கும்; ஆகவே அப்பொழுது அவை மிகவும் க்ஷயமடையும்; தேஹச்சூடு குறைந்தால் எரிக்கப்படவேண்டிய அம்சங்கள் எரிக்கப்படாமல் அவை தோஷங்களாக உடலிற் சேர்ந்து தேஹம் பருத்துக் காணும்..

3. குதமும் மூத்திரமார்க்கமும் இதனால் குறிப்பிடப்படுகின்றன.

4. நேத்திரங்கள் இரண்டு, நாசியின் த்வாரங்கள் இரண்டு, செவிகள் இரண்டு, வாய் ஒன்று ஆக ஏழு த்வாரங்களாம்.

**ஓஜோ தாதுவும் அதன் தன்மைகளும் :—ஓஜஸ்** என்னும் தாதுவானது,[1] இரஸம் முதற்கொண்டு சுக்ரமீருக வுள்ள தாதுக்களுடைய மிகவும் ஸாரமான தேஜஸ்ஸாக இருக்கின்றது. அது இருதயத்தை முக்கிய ஸ்தானமாகப் பெற்றிருந்தாலும் உடலெங்கும் வியாபித்துளது; அது தேஹம் ஜீவித்து வாழ்வதற்குக் காரணமாகும்; அது ஸ்நிக்த்தமாகவும், மிகவும், சீத வீர்யமுடையதாகவும், மாசு மறுவில்லாததாகவும், சிறிது சிவந்த பொன்னிற முள்ளதாகவும் இருக்கும்; இந்த தாது அழிவுற்ருல் தேஹமும் நிச்சயமாய் அழியும்; இது நல்ல நிலைமையில் இருந்துவருவதால் தேஹமும் ஆரோக்கிய நிலைமையில் இருந்து வரும்; தேஹத்தை ஆதாரமாகப் பெற்றுள்ள அநேகவிதமான விஷயங்களும் கார்யங்களும் இதனுல் உண்டாகின்றன.—37, 38½.

**ஓஜஸ் க்ஷீணிப்பதும் அதற்குப் பரிஹாரமும் :—**(1) கோபம், பசி,சிந்தனை,மனத்துயரம்,சிரமம் இவைமுதலியவற்ருல் ஓஜோதாது க்ஷயமடையும். அவ்வாறு **ஓஜஸ் க்ஷீணித்துப் போனவன்** பலஹீனமாயிருப்பான்; அஞ்சி நடுங்குந்தன்மையனுவான்; அடிக்கடியும் துன்பமுற்ற இந்த்ரியங்களோடு ஏதோ சிந்தித்தவண்ணம் இருப்பான்; அவனுடைய முகத்தில் பொலிவு இராது; மனம் நொந்து, ரூக்ஷதேஹியாய், மிகவும் இளைத்துப் போவான். (2) அதில் ஜீவநீயகணத்தைச் சேர்ந்த ஔஷதங்களும், பாலும், மாம்ஸரஸமும், மற்றும் அவைபோன்ற வஸ்துக்களும் ஏற்ற ஔஷதங்களாம். (3) **ஓஜோதாது விருத்தியடைந்தால்,** தேஹத்திற்குப் புஷ்டியுண்டாம்; மனக்களிப்பு மேலிடும்; தேஹபலம் விருத்தியாகும். 39—41.

**தோஷங்களுடைய விருத்தி-க்ஷயங்களுக்கு ஏற்ற உணவு முதலியன :—**(1) எவ்விதமான உணவு வெறுக்கப்படுகின்றதோ அதை விலக்கியும், எவ்வித உணவு விரும்பப்படுகிறதோ—அது தீங்குண்டுபண்ணுததாயிருக்குமாகுல்—அதை உட்கொண்டும் வந்தால் தோஷங்களுடைய இயற்கைக்கு விரோதமான விருத்தியையும் க்ஷயத்தையும் முறையே பரிஹரித்து விடலாம். (2) தோஷங்கள் விருத்தியானுல், அவை அவற்றிற்கு எதிரிடையான குணங்களுள்ள பதார்த்தங்களில் விருப்பத்தையும், அவை க்ஷயமடைந்தால், அவற்றிற்குச் சமானமான குணமுள்ள பதார்த்தங்களில் விருப்பத்தையும் பெரும்பாலும் உண்டுபண்ணுவது இயல்பு. விஷயமறியாதவர் இத்தத்துவத்தைக் குறிப்பிட்டுணரமாட்டார்.—42, 43.

---

1. ஓஜஸ் ஏழு உபதாதுக்களில் ஒன்று. [**ஏழு உபதாதுக்களாவன**—முலைப்பால், மாதவிடாய் என்னும் இரஜஸ், வஸை, ஸ்வேதம், தந்தங்கள், மயிர், ஓஜஸ் என்பனவாம். இவற்றுள் ஒவ்வொன்றும் முறையே ஒவ்வொரு தாதுவுக்கும் உபதாதுவாம்.]

இயற்கை அல்லது விகாரமடைந்த நிலைமையிலுள்ள தோஷங்களின் சுபாவங்கள் :—(1) தோஷங்களில் ஏதேனும் விருத்தியானால் அந்தந்த தோஷமும் அதனதன் வன்மைக்கும் தன்மைக்கும் ஏற்றவாறு விசேஷமான ரூபங்களை உண்டுபண்ணும். (2) அவ்வாறே அவை க்ஷயமடைந்தால் அததற்குற்ற இலக்ஷணங்களை இழந்துவரும். (3) அவை ஸமநிலைமையிலிருந்தால் அததற்குற்ற இயற்கை வேலைகளைச் செய்யும்.—44.

தோஷங்களை விஷமிக்காமல் காக்கவேண்டும் :—எந்த தோஷங்கள், ஸமநிலைமையிலிருக்கும்போது தேஹத்தினுடைய விருத்திக்குக் காரணங்களாகின்றனவோ, அதே தோஷங்கள் ஏற்றக் குறைவடையும்போது சரீரத்திற்கு அபாயகரமாய் அமைகின்றனவாதலால், ஹிதமான காரியங்களைச் செய்துகொண்டே அவை விருத்தியாகாமல் இரக்ஷிக்கப்படுவது போல, க்ஷயமடையாமலும் அவற்றைக் காத்துவரவேண்டும்.—45.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

### தோஷ பேதீயம்.

பிறகு தோஷ பேதீயம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

**வாயுவின் ஸ்த்தாநங்கள் :**—பக்வாசயம்,[2] இடுப்பு, துடைகள், செவிகள், எலும்புகள், பரிசேந்த்ரியம்[3] என்கிற இவ்வாறும் வாதத்திற்கு ஸ்த்தாநங்களாம். இவற்றிலும் பக்வாசயம் அதற்கு முக்கிய ஸ்த்தாநமாகும்.—1.

**பித்தத்தின் ஸ்த்தாநங்கள் :**—நாபி, இரைப்பை, வியர்வை, நிணநீர், இரத்தம், இரஸம், நேத்திரம், பரிசம் இவை பித்தத்திற்கு இருப்பிடமாகும்; இவற்றுள் நாபி அதற்கு முக்கிய ஸ்த்தாநமாகிறது.—2.

**கபத்தின் ஸ்த்தாநங்கள் :**—மார்பு, தொண்டை, சிரஸ், க்லோமா,[4] தேஹத்தின் பூட்டுகள், இரைப்பை, இரஸம், கொழுப்பு, நாசி, நாக்கு இவை கபத்திற்கு ஸ்த்தாநங்களாகும்; இவற்றுள் மார்புதான் அதற்கு விசேஷித்த இருப்பிடமாம்.—3.

**பஞ்ச வாயுக்கள் :**—வாயுவானது, பிராணவாயு முதலிய பேதங்களைக்கொண்டு ஐந்துவிதமாகப் பிரிக்கப்படும். இவற்றுள் (1) பிராணவாயுவானது சிரஸ்ஸை இருப்பிடமாகக் கொண்டது; மார்பு, தொண்டை இவற்றில் ஸஞ்சரிக்கும்; புத்தி, இருதயம், இந்த்ரி

---

1. தோஷங்களுக்குள் பரஸ்பரமுள்ள பேதங்களையும், மற்றும் பல விவரங்களையும் கூறும் அத்தியாயம்.

2. பக்வாசயம்—70-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. பரிசேந்த்ரியம்—சர்மம்.

4. க்லோமா—பித்தநீரில் ஓர் அம்சத்தைச் சுரப்பிக்கும் நீண்டதோர் கிரந்தி. (Pancreas).

யங்கள், மனது இவற்றிற்கு ஆதாரமானது; சிந்தியுமிழ்தல், தும்மல், ஏப்பம், மூச்சுவிடுதல், உணவையுட்செலுத்தல் என்னும் இக்கார்யங்களைச் செய்யும். (2) உதாந வாயுவுக்கு மார்பு இருப்பிடமாகும்; அது நாசி, நாபி, தொண்டை இவற்றில் ஸஞ்சரிக்கும்; வாக்கின் பிரவ்ருத்தியென்ன, மற்றும் காரியங்களில் முயற்சியென்ன, உத்ஸாஹமென்ன, தேஹவன்மையென்ன, ஞாபக சக்தியென்ன, நிறங்களென்ன இவற்றைத் தனது இயற்கைக் கார்யங்களாயுடையது. (3) வியாநவாயுவுக்கு இருதயம் ஸ்த்தாநமாகும்; சரீரமெங்கும் மஹா வேகத்துடன் ஸஞ்சரிக்குந் தன்மையது; ஸஞ்சாரம், அவயவங்களைக் கீழே இறக்குதல், அவற்றை உயரத் தள்ளுதல், கண்களை மூடுதல், அவற்றைத் திறத்தல் என்னும் இவை முதலிய பிராணிகளுடைய தேஹத்தில் நடைபெறும் எல்லாக் கார்யங்களும் பெரும்பாலும் இவ்வாயுவுக்கு அதீனமாய் அமைந்துள்ளன. (4) ஸமாநவாயுவானது ஜாடராக்னிக்கு மிகவும் அருகிலுள்ளது; [1] குடலில் எல்லாவிடத்திலும் ஸஞ்சரிக்கும்; இது உணவைக் கிரஹிக்கின்றது; அதைப் பக்குவம் செய்கின்றது; இரஸம் வேறு திப்பி வேறாக அதைப் பிரிக்கின்றது; மலமூத்திராதி திப்பிகளை வெளியில் தள்ளுகின்றது. (5) அபாந வாயுவானது மலாசயத்தை ஸ்த்தாநமாகப் பெற்றுள்ளது; ச்ரோணி, [2] மூத்திரப்பை, ஆண்குறி அல்லது பெண்குறி, துடைகள் இவற்றில் நடமாடும் தன்மையது; சுக்ரம், ஆர்த்தவம், [3] மலம், மூத்திரம், கர்ப்பம் இவற்றை வெளிப்படுத்தும் கார்யமும் இதைச் சேர்ந்ததாம். 4—9.

பஞ்ச பித்தங்கள்:—பித்தம் ஐந்து வகைப்படும்; அவற்றுள் (1) பாசகம் என்னும் பித்தமானது பக்வாசயத்திற்கும் ஆமாசயத்திற்கும் இடையில் இருக்கின்றது; அது பஞ்சபூதமயமாயிருந்தும், தேஜோகுணம் விசேஷித்ததாகையால் திரவத்தன்மையை விட்டு பாகம் முதலிய கார்யக்களால் அக்னியென்று விவஹரிக்கப் படுகிறது; அது உணவைப் பக்குவம் செய்து இரஸத்தையும் திப்பியையும் வெவ்வேறாகப் பிரிக்கின்றது; அங்கு இருந்துகொண்டே மற்றும் வேறுவித பித்தங்களுக்கும் பலத்தைக் கொடுத்து உதவிசெய்கின்றது. (2) ஆமாசயத்திலடங்கிய பித்தமானது ஆஹார ரஸத்தை ஒருவாறு நிறம் மாற்றுவதால் அது இரஞ்ஜகம் என்று கூறப்படும். (3) இருதயத்திலுள்ள பித்தமானது புத்தியென்ன, மேதையென்ன, அபிமானமென்ன இவை முதலியவற்றால் இஷ்ட வேலையைச் செய்து

1. பக்வாசயம் அவ்வாயுவுக்கு ஸ்த்தாநம் எனக் கருத்து.

2. ச்ரோணி—இது பெரும்பாலும் இடுப்பைச் சேர்ந்த பாகம். துடையிடுக்குகள் முதற்கொண்டு நாபிக்குக் கீழே இரு புறங்களையும் குறிப்பிடும்.

3. ஆர்த்தவம்—மாதவிடாயிலுண்டாகும் சோணிதம் என்னும் தாது; இதற்கே இரஜஸ் என்றும் பெயர்.

முடிக்கும் இயல்புடையதாகையால் **ஸாதகம்** என்று சொல்லப்படும். (4) கண்களின் மத்தியிலுள்ள பித்தமானது உருவங்களை நோக்கி விஷயங்களை புணர்த்து மியல்புடையதுபற்றி **ஆலோசகம்** எனப்படுகிறது. (5) சர்மத்திற்கு ஒருவித காந்தியைக் கொடுத்து அதைப் பிரகாசிக்கச் செய்வதால், அதிலுள்ள பித்தம் **ப்ராஜகம்** என்று வழங்கப்படும். 10—14.

**பஞ்ச கபங்கள்:**—கபமும் ஐந்து விதமாம். (1) அவற்றுள் மார்பினுள் இருக்கும் கபமானது, தனது வீர்யத்தினால் பிடரி என்னும் பாகத்திற்கும், உணவின் வீர்யத்தினால் இருதயத்திற்கும், அதே இடத்தில் இருந்துகொண்டு நீர்த்தன்மைக்குள்ள வேலையினால் மற்ற கபஸ்த்தாநங்களுக்கும் அவலம்பநத்தைக்[1] கொடுத்து வருவதால் அது **அவலம்பகம்** என்று கூறப்படுகிறது. (2) யாதொரு கபம் ஆமாசயத்திலிருந்துகொண்டு, ஒருமிக்கத் திரண்டுள்ள கெட்டியான உணவுகளை உடைத்து நீர்க்கச் செய்கிறதோ அது அக்காரணத்தினாலேயே **க்லேதகம்** என்று சொல்லப்படுகிறது. (3) நாக்கிலுள்ள கபம் சுவைகளை புணரச் செய்வதால் **போதகம்** எனப்படுகிறது. (4) சிரஸ்ஸிலுள்ளது இந்த்ரியங்களைத் திருப்தியுறச் செய்வதால் **தர்ப்பகம்** என்று வழங்கப்படும். (5) ஆங்காங்கு ஸந்திபந்தங்களில் இருந்துவரும் கபம் அப்பாகங்களை ஒன்றோடொன்றுச் சேர்ப்பித்து நெகிழவிடாமற் செய்யுமியல்புள்ளதாகையால் அது **ச்லேஷகம்** என்று கூறப்படும். 15—17½.

**தோஷங்களுடைய போது ஸ்த்தாநங்களும் செயல்களும் :**— இவ்வாறு மேற்கூறியவைகளே, கோளாறடையாது ஆரோக்கிய நிலைமையிலுள்ள தோஷங்களுக்கு—அவை தேஹமெங்கும் வியாபித்திருந்தபோதிலும்—பெரும்பாலும் தனித்தனியாய் அமைந்துள்ள ஸ்த்தாநங்களாகவும், செயல்களாகவும் இருக்கின்றனவென்று அறிக.—18½.

**வாதம்-சயப்-பிரகோப-உபசமங்களை அடைதல் :**—ரூக்ஷம் முதலிய குணங்கள்[2] உஷ்ணத்துடன் சேர்ந்தால் வாயுவுக்கு சயாவஸ்த்தையை உண்டுபண்ணும்; சீதவீர்யவஸ்துக்களின் ஸம்பந்தத்தைப் பெற்றால் வாதம் பிரகோபமடையும்; ஸ்நிக்த்தம் முதலிய குணங்கள்[3] உஷ்ண வீர்யத்தோடு கலந்தால் அதற்கு உபசமமும் உண்டாகும்.—19½.

---

1. அவலம்பநம்—ஆதாரம் அல்லது தாங்குதல்.

2. முதல் அத்தியாயம் 11ம் ச்லோகத்தின் மொழிபெயர்ப்பில் வாத தோஷத்திற்குக் கூறப்பட்டுள்ள குணங்கள் யாவும் "ரூக்ஷம் முதலிய" என்பதால் குறிப்பிடப்படுகின்றன.

3. முதல் அத்தியாயம் 12-ம் ச்லோகத்தின் மொழிபெயர்ப்பில் கபத்திற்குக் குறிப்பிட்டுள்ள குணங்கள் யாவும் "ஸ்நிக்த்தம் முதலிய" என்பதால் குறிக்கப்படுகின்றன.

**பித்தம் சயப் பிரகோப-உபசமங்களை அடைதல்:**—தீக்ஷ்ணம் முதலிய குணங்கள்[1] சீதவீர்யமான பதார்த்தங்களுடன் அல்லது அவ்வித செய்கைகளுடன் கூடினால் பித்தத்திற்கு சயாவஸ்த்தையை யுண்டுபண்ணும்; அக்குணங்களே உஷ்ணத்தோடு கூடினால் அத்தோஷத்திற்குப் பிரகோப முண்டாக்கும்; மந்தம் முதலிய குணங்கள்[2] சீதவீர்யத்தோடு கலந்தால் அதற்கு உபசமத்தைத் தரும்.—20½.

**கபம் சயப் பிரகோப-உபசமங்களை அடைதல்.**—ஸ்நிக்த்தம் முதலிய குணங்கள்,[3] சீதவீர்யத்தோடு கலந்தால் கபத்திற்கு சயாவஸ்த்தையை யுண்டு பண்ணும்; அதே குணங்கள் உஷ்ணத்தோடு கலந்தால் கபத்திற்குப் பிரகோப முண்டாக்கும்; ரூக்ஷம் முதலிய குணங்கள்[4] அவ்வுஷ்ணத்தோடு கூடினால் அதற்கு உபசமத்தைத் தரும்.—21½.

**சயம் என்பதின் விவரணம்.**—தோஷமானது அதன் ஸ்த்தானத்திலேயே விருத்தியடையுமானால், அது **சயம்** என்று வழங்கப்படும். அப்பொழுது அத்தோஷத்தின் விருத்திக்குக் காரணமானவற்றில் வெறுப்புண்டாகும்; அத்தோஷத்திற்கு எதிரிடையான குணங்களுள்ள பதார்த்தங்களில் விருப்பமும் ஏற்படும்.—22¼.

**பிரகோபம் என்பதின் விவரணம்.**—தோஷம் மிகவும் விருத்தியடைந்து தன்னுடைய ஸ்த்தானத்தையும் மீறி வேறு ஸ்த்தானங்களில் பரவுமானால் அது **பிரகோபம்**[5] என்று கூறப்படும். அந்த நிலைமையில் தோஷங்கள் அவ்வவற்றின் குறிகளை யெல்லாம் காட்டத் தொடங்கும்; அமைதியின்மை யேற்பட்டு, வியாதியும் ஸம்பவிக்கும்.—23.

**மூன்று தோஷங்களுக்கும் சயப்-பிரகோப-உபசமாவஸத்தைகள் உண்டாகும் காலங்கள்:**—(1) கிரீஷ்ம ருது முதற்கொண்டு மூன்று ருதுக்களில் வாயுவுக்கு சயம், பிரகோபம், உபசமம் ஆகிய நிலைமைகள் முறையே உண்டாகும். (2) வர்ஷருது முதற்கொண்டு மூன்று ருதுக்களில் பித்தத்திற்கு முறையே சயம், பிரகோபம், உபசமம் என்கிற நிலைமைகள் ஏற்படும். (3) சிசிரருது முதற்கொண்டு மூன்று

---

1. முதல் அத்தியாயம் 11-வது ச்லோகத்து மொழிபெயர்ப்பில் பித்தத்திற்குக் கூறியுள்ள குணங்கள் "தீக்ஷ்ணம் முதலிய" என்பதால் குறிக்கப்படுகின்றன.

2. "மந்தம் முதலிய" என்பதால் கபத்தின் குணங்கள் குறிப்பிடப் படுகின்றன.

3. "ஸ்நிக்த்தம் முதலிய" என்பதால் கபத்தின் குணங்கள் யாவும் குறிக்கப்படுகின்றன.

4. "ரூக்ஷம் முதலிய" என்பதால் வாயுவின் குணங்கள் குறிக்கப் படுகின்றன.

5. பிரகோபம்—இதையே கோபம் என்றும் கூறுவர்.

ருதுக்களில் கபத்திற்கும் முறையே சயப்-பிரகோப-உபசமங்கள் ஸம்பவிக்கும்.—24.

**தோஷங்களின் சயாதிகளைப்பற்றிய விஷயங்கள் :**—(1) கிரீஷ்ம ருதுவில் இலகு-ரூக்ஷ குணங்களையுடைய ஓஷதிகளால் அதே குணங்களைப் பெற்ற வாயுவானது அவ்வித குணங்களுடன் கூடிய தேஹத்தில் சயாவஸத்தையை அடைகின்றது; ஆனால் காலத்திற்கு இயற்கையாயுள்ள உஷ்ணத்தன்மையினால் அத்தோஷம் பிரகோப மடைவதில்லை. (2) வர்ஷருதுவில் அம்லரஸமாக மாறிய ஜலத்தினாலும் ஓஷதிகளாலும் அவ்விதமேயுள்ள பித்தம் சயாவஸ்த்தையடையுமேயன்றி, காலம் குளிர்ச்சியாயிருப்பதால் பிரகோபநிலைமையடைவதில்லை. (3) சிசிரருதுவில் ஸ்நிக்த்தமாகவும் சீதவீர்யமாகவுமுள்ள தண்ணீராலும் ஓஷதிகளாலும் அதே குணமுள்ள கபமானது சயாவஸ்த்தையடைகின்றது; காலமும், பிராணி தேஹமும் அக்கபத்திற்குச் சமான குணமுள்ளவையா யிருந்தும், கபத்திற்குத் தோய்ந்துவிடும் தன்மையிருப்பதால் அத்தோஷம் பிரகோபிப்பதில்லை.25—27.

**தோஷங்கள் அகாலத்தில் சயாதிகளை யடைவதும், காலத்தில் அடையாமற் போவதும்:**—இங்ஙனம் தோஷங்களுக்குக் காலஸ்வபாவத்தினால் ஏற்படும் பலவித நிலைமைகள் குறிக்கப்பட்டன. அப்பால் அவரவர்கள் உபயோகிக்கும் ஆஹாராதிகளின் தன்மைகளுக்கேற்றவாறு அத்தோஷங்கள், அந்தந்த காலங்களை எதிர் பார்க்காமலே உடனே சயம்முதலிய பலவேறு நிலைமைகளை அடையக்கூடும்; அதனதன் சயாதிகளுக்கு ஏற்றதென்று குறிக்கப்பட்டுள்ள காலங்களில் அவ்வித நிலைமைகளை அவை அடையாமலும் இருக்கலாம்.—28.

**பிரகோபித்த தோஷம் வேகமாகப் பரவுவதும் மெதுவாகக் குறைவதும்:**—தோஷம் பிரகோபத்தையடைந்தால், உடனே ஜலப்பிரவாஹம்போல் பாதம் முதல் சிரஸ்ஸு வரையில் தேஹமெங்கும் வெகு சீக்கிரமாகப் பரவிவிடும்; அவ்வாறு பிரகோபித்த பிறகு அத்தோஷம் சிறுகச் சிறுகவே அந்நிலைமையிலிருந்தும் திரும்புவதியல்பு.[1]—29.

**தோஷங்களின் நிலைமாறுபாடுகள்:**—தோஷங்கள் அநேகவிதமாகவும் எண்ணிறந்தவையுமாயுள்ள விகாரங்களால் பிரகோபமடைந்து தேஹத்தைத் துன்பப்படுத்தும்; ஆகையால் அவற்றின் பிரகோபத்திற்கான காரணங்களையும் இலக்ஷணங்களையும் தனித்தனியாகக் கூறுவது அஸாத்தியமாகும்; ஆகவே அவ்விஷயம் இங்கே பொதுவாக மொழியப்படுகின்றது.—30, 30½.

---

1. ஜலத்தின் வெள்ளமானது கரைபுரண்டு வழிந்து வெளியில் ஓடிய பிறகு, அவ்வெள்ளத்தைத் தடுத்து மீண்டும் அதன் ஸ்த்தாநத்திற்குத் திருப்பிக் கொண்டுவருவது எவ்வளவு மெதுவாக சிரமத்தினால் ஸாதிக்கக் கூடியதோ, அவ்வளவு கஷ்டமாம், பிரகோபித்த தோஷத்தை இயற்கை நிலைமைக்குக் கொண்டுவருவது.

**தோஷங்களே எல்லா ரோகங்களுக்கும் காரணம்:**—தோஷங்களே ஸகல ரோகங்களுக்கும் முக்கிய காரணமாம். எப்படியானுல் ஒரு பக்ஷியானது பகற்காலமெல்லாம் எங்கும் ஓடியோடிப் பறந்தாலும் தனது நிழலைத் தனியாக விட்டு விலக முடியாததாயிருக்கின்றதோ, எப்படியானுல் பலவிதமான உருவங்களாயமைந்த மூலப்பிரக்ருதியின் விகாரமாயுள்ள உலகமனைத்தும் முக்குணங்களினின்றும் [1] விலகியிருக்கவில்லையோ, அப்படியே அநேக வியாதிஸமூஹமும் அதற்கேற்ற தாதுக்களுடைய கோளாறுகளைக் காரணமாகக் கொண்டதென்றாலும், எப்பொழுதும் மூன்று தோஷங்களுடைய ஸம்பந்தத்திலிருந்து விலகியிருக்க முடியாது. 31—33½.

**தோஷப் பிரகோப காரணங்களும் அவற்றின் பேதங்களும்:**—இந்திரியங்களுக்கு அஸாத்மியமான [2] விஷயங்களுடன் [3] உண்டாகும் சேர்க்கையும், காலமும், ஆரோக்கியத்திற்கும் ஆத்மாவுக்கும் தீங்கு விளைவிக்கும் கார்யமும் அத்தோஷங்களின் பிரகோபத்திற்குக் காரணமாகும். இக்காரணம் ஹீநயோகம், அதியோகம், மித்தியாயோகம் [4] என்கிற முறையில் மீண்டும் மூன்றுவிதமான பேதங்களையுடையதாகும்.—34½.

**இந்திரிய விஷயங்களுக்கு ஹீநயோக-அதியோக-மித்தியாயோகங்களின் விவரம்:**—இந்திரியங்களுக்கு அதனதன் விஷயத்தோடு சேர்க்கை சொற்பமாக ஆய்விட்டாலும், அல்லது முற்றிலும் ஸம்பந்தமொழிந்தாலும் அது **ஹீநயோகம்** என்றுகூறப்படும். அவற்றிற்கு அதனதன் விஷயத்தோடு சேர்க்கை அதிகமாயேற்பட்டால், அது **அதியோகம்** என்று வழங்கப்படும்.[5] ஸாதாரணமான உருவமானது இயற்கைக்கு விரோதமாய் ஸூக்ஷ்மமாகவோ, மிகப் பிரகாசமாகவோ, பயங்கரமாகவோ, மிகவும் அருகிலிருப்பது போலவோ,

---

1. முக்குணங்கள்—ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவை. இம்மூன்று குணத்தன்மையதான மாயையென்னும் மூலப்பிரக்ருதியையே உலகத்திற்கு மூலாதாரம் என்பர்.

2. அஸாத்மியம்—32வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. விஷயங்கள்—சப்தம், பரிசம், ரூபம், இரஸம், கந்தம் என்கிற இந்திரியங்களுக்கு இலக்காயிருக்கும் அம்சங்களாம்.

4. ஹீநயோகம்—இந்திரியம் முதலிய வற்றிற்கும் விஷயாதிகளுக்குமுள்ள ஸம்பந்தம் இயற்கையிலும் குறைதல்; அதியோகம்—அவ்விதமே அவற்றிற்குண்டாகும் அதிக ஸம்பந்தம்; மித்தியாயோகம்—இயற்கைக்கு நேர் எதிரிடையான ஸம்பந்தம்.

5. கண்ணின் பார்வையும், செவிக்குக் கேள்வியுறும் சக்தியும், நாசிக்கு முகரும் சக்தியும், நாக்குக்குச் சுவையறியும் சக்தியும், சர்மத்துக்குப் பரிசவுணர்ச்சியும் குறையுமானுல் அவற்றிற்கு அது ஹீநயோகம் எனப்படும். அவ்வாறே ஒவ்வொரு இந்திரியமும் ஒவ்வொரு விஷயத்தையும் அவற்றின் இயற்கைக்கு மாருக அதிக அளவாயிருப்பதுபோல் உணர்ந்தால் அது அதியோகமாகும்.

அதிக தூரத்திலிருப்பதுபோலவோ, அருவருப்பைத் தரக்கூடிய தாகவோ, அல்லது வேறு ஏதேனும் விகாரமான இலக்ஷணம் முத லியதை யுடையதாகவோ நேத்திரத்தினால் பார்க்கப்படுமானால், அது அவ்விந்திரியத்திற்கு **மித்தியாயோகம்** என்று கூறப்படும்; அது இம்மூன்றில் வெகு கொடியதெனக் கருதப்படுகிறது; இவ் வாறே அதிக உயரமாகவும், அதிக துர்நாற்றமுள்ளதாகவும், மற் றும் பலவித இயற்கைக்கு மாறுபாடான நிலைமையில் அதததற்கு ஸம்பந்தப்பட்ட இந்திரியங்களால் விஷயங்கள் உணரப்படுமானால் அவற்றையும் மித்தியாயோகம் என்று அறிக. 35—37.

**காலங்களுக்குள்ள மூன்று யோகங்கள்:**—காலமும் **சீதகாலம், உஷ்ணகாலம், வர்ஷாகாலம்** என்று மூன்று வகைப்படும்; அவற் றுள் அந்தந்த காலத்திற்குள்ள சீதாதிகளில் ஏதேனும் இய ற்கைத் தன்மை குறைவுடையுமானால், அது அக்காலத்திற்கு ஹீந யோகம் என்றும்,[1] அச்சீதாதிகள் இயற்கையினும் அதிகமானால் அது அதியோகம் என்றும்,[2] அந்தந்த காலத்தின் இயற்கைக்கு எதிரிடையான இலக்ஷணங்கள் ஸம்பவித்தால் அவை மித்தியா யோக மென்றும்[3] கூறப்படும்.—38, 38½.

**கர்மங்களுக்குள்ள மூன்று யோகங்கள்:**—கர்மத்தையும் **காயிக கர்மம்**[4] என்றும், **வாசிககர்மம்**[5] என்றும், **மாநஸிக கர்மம்** என்றும் மூன்று விதமாகப் பிரிக்கலாம். சரீரம், வாக், மனது இவற்றால் செய்யப்படும் வேலைகளுக்குஇயற்கையினும் குறைவான பிரவ்ருத்தி யுண்டானால் அல்லது சிறிதும் பிரவ்ருத்தியே யில்லாமற் போனால் அதற்கு **ஹீநயோகம்** என்று பெயர்; இயற்கையினும் அதிகப் பிர வ்ருத்தியுண்டானால்[6] அது **அதியோகம்** எனப்படும். வேகங்களை வலு வில் பிரவ்ருத்திக்கச் செய்வது, வேகங்களை அடக்குவது, ஒரு அவய வத்தால் செய்ய வேண்டிய வேலையை மற்றொரு அங்கத்தினால் செய்வது அல்லது விஷமமாகச் செய்ய முயல்வது, வீழ்தல், தடுக்கு தல் முதலியது என்னும் இவையும், போஜநம் செய்யும்போது இடை யில் பேசுதலும், விஷயவிருப்பமென்ன, த்வேஷமென்ன, பய மென்ன இவை முதலியவையும், ஜீவஹிம்ஸை முதலிய நிந்திக்கப்

---

1. சீத காலத்தில் குளிர்ச்சி குறைவதும், உஷ்ணகாலத்தில் உஷ் ணம் குறைவதும், வர்ஷா காலத்தில் மழை குறைவதும் அவ்வக்காலங்களின் ஹீநயோகம்.

2. சீத-உஷ்ண-வர்ஷா காலங்களில் குளிர்ச்சி, உஷ்ணம், மழை இவை அதிகப்படுவது அக்காலங்களின் அதியோகம் என்று கூறப்படுகிறது.

3. சீத காலத்தில் உஷ்ணம் அல்லது மழையும், உஷ்ணகாலத்தில் மழை அல்லது குளிரும் தோன்றினால் அது காலங்களின் மித்யாயோகமாம்.

4. காயிககர்மம்—தேஹத்தை உழைத்துச் செய்யும் வேலை.

5. வாசிக கர்மம்—வாயினால் செய்யப்படும் பிரஸங்கம் முதலியது.

6. வேகங்கள்—33-ம் பக்கம் பார்க்க.

பட்ட பத்துவிதமான கார்யங்களும்[1] ஆக இவை யாவும்—இந்த ஜன்மத்திலோ அல்லது ஜன்மாந்தரத்திலோ செய்யப்பட்டவையாயிருந்தாலும் மித்தியாயோகம் என்றே கருதப்படும். 39—42.

தோஷங்கள் பிரகோபித்து வியாதிகளை யுண்டுபண்ணும் :—தோஷங்கள் பிரகோபமடைவதற்கான காரணம் இங்ஙனம் தொகுத்துக் கூறப்பட்டது. அக்காரணங்களில் ஏதேனும் ஒன்றால் பலவாறு பிரகோபமடைந்த தோஷங்கள் வெவ்வேறு வகையான வியாதிகளை சாகைகளிலும், கோஷ்டத்திலும், அஸ்திகளிலும், ஸந்திகளிலும் உண்டுபண்ணுகின்றன.—43.

சாகைகளும் பாஹ்ய ரோகங்களும் :—இரத்தம் முதற்கொண்டுள்ள ஆறு தாதுக்களும்[2] சர்மமும் சாகைகள் என்று வழங்கப்படும்; அவை பாஹ்ய ரோகங்களுக்கு ஆதாரங்கள் ஆகும்; அவ்வாறு இவற்றை ஆதாரமாகக் கொண்டு ஸம்பவிக்கும் வியாதிகளாவன:—மஷகம், வியங்கம், கண்டமாலை, அலஜீ, அர்புதம், அர்சஸ், குன்மம், சோகை முதலிய வைகளாம்[3]; இவை முதலிய பிணிகளே பாஹ்ய ரோகங்கள் எனப்படுகின்றன.—44, 44½.

கோஷ்டமும் ஆந்தர வியாதிகளும் :—உடலின் உட்புறத்தில் கோஷ்டம்[4] என்கிறஅவயவம் இருக்கின்றது; அதற்கு அந்த்ரம்[5] என்றும், மஹாஸ்ரோதஸ்[6] என்றும் வேறு பெயர்களுண்டு; அது ஆமாசயம், பக்வாசயம் முதலியவற்றிற்கு ஆதாரமாகவும் இருக்கின்றது. வாந்தி, அதிஸாரம், காஸம், ச்வாஸம், மஹோதரம் அல்லது யக்ருத்தாலீ முதலிய உதர ரோகங்களும், ஜ்வரம், சோகை, அர்சஸ், குன்மம், விஸர்ப்பம், வித்ரதி என்னும் இவை முதலிய வியாதிகளும் அக்கோஷ்டத்தை ஆச்ரயித்து ஸம்பவிக்கின்றன; இந்த ரோகங்கள் ஆந்தர வியாதிகள் என்று கூறப்படும்.—45, 46.

மத்திம ரோகங்களும் அவற்றிற்கு ஆதாரமான அவயவாதிகளும்:—சிரஸ்,[7] இருதயம், வஸ்தியென்னும் மூத்திரப்பை முதலிய மர்மங்

---

1. பரிஹரிக்கவேண்டிய பத்துவித கார்யங்களின் (தோஷங்களின் விவரத்தை 19-வது பக்கத்தில் பார்க்க.

2. இரத்தம், மாம்ஸம், மேதஸ், அஸ்த்தி, மஜ்ஜை, சுக்ரம் என்பவை குறிக்கப்படுகின்றன.

3. மஷகம்—உளுந்து போன்றதாய் வேதனையுண்டு பண்ணுததான பரு. வியங்கம்—வங்கு. அலஜி ஒருவித சிலந்திப்புண்.

4. கோஷ்டம்—குடல்.

5. அந்த்ரம் என்பது குடலின் பெயர்களுள் ஒன்று; ஆனால் மூலத்தில் அந்த: என்று எழுதப்பட்டிருக்கிறது; ஆந்தர வியாதிகளுக்கு ஆச்ரயமாயிருப்பதால் "அந்த." என்று கூறப்பட்டதென்று கருதவேண்டியிருக்கிறது.

6. மஹாஸ்ரோதஸ்—ஸ்ரோதஸ் என்றால் குழாயைப் போன்ற அவயவம்; உடலினுள்ளிருக்கும் குழாய்களுள் குடலே மிகப் பெரிதாகையால் இப்பெயர் வந்தது.

7. சிரஸ் என்பதால், அதிலடங்கியுள்ள மர்மஸ்த்தானமான அதிபம் (மூளையின் முக்கியமான பாகம்) குறிக்கப்பட்டதென்றறிக.

களையும், அஸ்த்திகளுடைய ஸந்திகளையும், அவற்றிற் கட்டுண்ட ஸிரைகளென்ன,[1] ஸ்நாயுக்களென்ன,[2] கண்டரங்களென்ன[3] ஆகிய வற்றையும் ஆச்ரயித்து மத்திமரோக மார்க்கங்கள் இருக்கின்றன; அம்மார்க்கங்களை ஆச்ரயித்து உண்டாகும் வியாதிகள் அடியிற் குறிக்கப்படுகின்றன:—க்ஷயம், பார்ச்வவாயு, அர்திதம்,[4] சிரஸ்முதலான[5] மர்மங்களை ஆச்ரயித்து ஸம்பவிக்கக்கூடிய மற்றும் பல வியாதிகள், ஸந்திகள், அஸ்த்திகள் இவற்றின் சூலைகள், அவற்றின் பிடிப்புகள் என்னும் இவை முதலியனவாம்.—47, 48.

வாயுவின் செயல்கள்:—நெகிழ்வித்தல், விஸ்தாரப்படுத்தல், குடைத்தல், திமிர்த்தல், இளைத்தல், வலித்தல், குத்தல், பிளத்தல், சேர்த்தல், அங்கங்களைச் சிதைத்தல், சுருக்கல், புரளுதல், சிலிர்த்தல், வரட்சி, நடுக்கல், க்ரூரமாதல், த்வாரங்கள் அல்லது இடைவெளிகளை யமைத்தல், உலர்த்தல், அசைத்தல், சுற்றுதல், அசைவற்றுப்போதல் என்கிற இச்செயல்களும், துவர்ப்பான சுவையும், வெண்கறுப்பு அல்லது சிவப்பான நிறமும் வாயுவைச் சேர்ந்தவையாகும். 49—50¼.

பித்தத்தின் செயல்கள்:—எரித்தல், சுடுதல், சமைத்தல், சிவத்தல், வியர்த்தல், நீர்க்கசிதல், பெருகுதல், பதனழிதல், மெலிதல், மயக்கமுறுதல், வெறிபிடித்தல் என்னும் இச்செயல்களும், கடுரஸ அம்லரஸங்களும், வெண்மை வெண்சிவப்பு இவற்றைத் தவிர மற்ற வர்ணங்களும் பித்தத்திற்குச் சம்பந்தப்பட்டனவாம்.—51½.

கபத்தின் செயல்கள்:—எண்ணெய்ப் பசை யுண்டுபண்ணுதல், வன்மை, தினவு, குளிர்ச்சி, கனத்தல், கட்டுதல், பூசுதல், அசைவற்றுப்போதல், சோகை, பக்குவமாகாமை, அதிநித்திரை என்னும் இச்செயல்களும், வெண்ணிறமும், இனிப்பு உப்பு என்னும் சுவைகளும், வெகு மந்தமாக வேலை செய்தலும் கபத்திற்குச் சம்பந்தப்பட்டவையாம்.—52, 53.

தோஷலக்ஷணம், வியாதிபேதம் முதலியதை யறிவது அவசியம்:—இவ்வாறு எல்லாப் பிணிகளிலும் ஸம்பந்தப்பட்டிருப்பதாகக் கூறப்படும் தோஷங்களுடைய இலக்ஷணத்தை தர்சநம் முதலிய பரீக்ஷா முறைகளால்[6] ஜாக்கிரதையாக நன்கு உற்றுநோக்கவேண்டும்; வியாதிகளால் பீடிக்கப்படுகிறவர்களை அடிக்கடியும்

1. ஸிரைகள்—காரிரத்தக் குழாய்கள்.
2. ஸ்நாயு—அஸ்த்திகளை ஒன்றோடொன்று கட்டும் ஒருவித உரத்த தசைநார்.
3. கண்டரங்கள்—தசைநார்களை எலும்புகளுடன் கட்டும் தசைநார்.
4. அர்திதம்—16-ம் பக்கம் பார்க்க.
5. "சிரஸ்முதலான" என்பதால் இருதயம், வஸ்தி முதலான மர்மங்களும் கிரஹிக்கப்படுகின்றன வென்றறிக.
6. ஸ்பர்சநம், பிரச்நம் என்கிற மற்ற இரண்டு பரீக்ஷா முறைகளையும் குறிப்பிடுவதற்கு "தர்சநம் முதலிய" என்று கூறப்பட்டது.

பார்த்து, பிணிகளின் பற்பல நிலைமைகளுக்குள்ள பேதங்களை யறிந்து விஷயங்களைத் தீர்மானிக்க வேண்டும்.—54, 54½.

சிகித்ஸை செய்ய அப்யாஸம் அவசியம் :—சிகித்ஸை ஸித்தி யடையு மார்க்கத்தைத் தெளிவாக்கவல்ல அறிவானது அப்யாஸத்திஞல் ஏற்படுகின்றது; இரத்தினம் முதலியவற்றில் நல்லது பொல்லாததென்கிற அறிவு அப்யாஸத்திஞலேயேயன்றி, சாஸ்திரத்திஞல் மட்டும் உண்டாகமாட்டாது.—55½.

வியாதி மூன்று வகையில் உண்டாதல் :—(1) இப்பிறப்பிற் செய்யப்பட்ட அஹிதமான கார்யங்களால் உண்டாவது ஒன்றும், (2) முற்பிறப்பிற் செய்த தீவினைகளால் உண்டாவது மற்ருென்றும், (3) அவ்விரண்டாலும் உண்டாவது வேருென்றும் ஆக இங்ஙனம் வியாதி மூன்று விதமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இவை முறையே தோஷஜம் [1] என்றும், கர்மஜம்[2] என்றும், தோஷகர்மஜம் [3] என்றும் கூறப்படும். (1) தோஷங்களால் ஏற்படும் வியாதியானது, நூல்களில் கூறப்பட்டுள்ள நிதாநம் முதலியவற்றை மீருமல் கிரமப்படியுண்டாகும். (2) முற்பிறப்பிற் செய்த கர்மங்களாலுண்டாவது காரணம் அறிய முடியாமலே திடீரென்று வந்துதோன்றும். (3) தோஷ-கர்மங்களென்னும் இரண்டையும் காரணமாகக்கொண்ட வியாதியானது, காரணம் மிகவும் அற்பமாயிந்தாலும் அதிக உக்கிரமாய் உண்டாகும். 56—57½.

மூன்றுவித வியாதிகளுக்கும் பரிஹார கிரமம் :—இவற்றுள் முதலிற் கூறப்பட்ட வியாதி, அது உண்டாவதற்கான காரணத்திற்கு எதிரிடையான குணமுள்ள பதார்த்தாதிகளை உபயோகிப்பதாலும், கர்மஜமான வியாதி, அப்பிணியாளி கர்மத்தை அநுபவித்து அத்தீவினை முடிவடைவதாலும், இரண்டாலும் உண்டாவது தோஷ-கர்மங்கள் இரண்டும் ஒழிந்துவிட்டபிறகும் நிவ்ருத்தியடையும்.—58½.

சுதந்திர-பரதந்திர ரோகங்கள் :—வியாதிகள் சுவதந்திரங்கள் என்றும், பரதந்திரங்கள் என்றும் இருவகைப்படும். அவற்றுள் பிற்கூறிய பரதந்திரவியாதிகள் பூர்வரூபங்கள் என்றும், உபத்திரவங்கள் என்றும் இரண்டாகப் பிரிக்கப்படும்; வியாதி யுண்டாவதற்கு முன்னதாய் ஏற்படும் சில விகாரங்கள் பூர்வரூபங்கள் எனவும், ஒரு வியாதி யுண்டானபின்பு அதைக் காரணமாகக்கொண்டு ஸம்பவிக்கும் வேறு வியாதிகள் உபத்திரவங்கள் எனவும் வழங்கப்படுகின்றன. சுதந்திர ரோகங்கள், அததற்குரித்தான கிரமப்படி உற்பத்தியாய், அவ்வாறே அததற்குற்ற சிகித்ஸைகளால் உபசாந்தியடையுந் தன்மையன; மேலும் அவற்றின் இலக்ஷணங்களும் நன்கு வெளிப்படையாயிருக்கும். பரதந்திர ரோகங்களோ உற்பத்தி

1. தோஷஜம்—வாத-பித்த-கபங்களால் உண்டாவது.
2. கர்மஜம்—முன் ஜன்மத்திற் செய்த தீவினைகளால் ஆனது.
3. தோஷ கர்மஜம்—வாத-பித்த-கபங்களாலும், தீவினைகளாலும் ஸம்பவிப்பது.

யாவதிலும், சமநமடைவதிலும், இலக்ஷணங்களிலும் சுதந்திர[1] ரோகங்களுக்கு நேர் எதிரிடையாயிருக்கும். 59—60¼.

**தோஷங்களில் சுதந்திர-பரதந்திர பேதங்கள் :—**வாதாதி தோஷங்களையும் அங்ஙனமே அவற்றின் பிரகோபாதி விஷயத்தில் சுதந்திரங்கள் என்றும், பரதந்திரங்கள் என்றும் இருவகையாகப் பிரிக்கலாமென்று அறியவும்; ஒவ்வொரு வியாதியிலும் இத்தோஷங்கள் கோளாறடையும் வகைகளை வெகு ஊக்கத்துடன் கவனிக்கவேண்டும்.—61.

**சுதந்திர-பரதந்திர வியாதிகளைப் பரிஹரிக்கு முறை :—**அந்த சுதந்திர-பரதந்திரவியாதிகளுள் பிரதானமான சுதந்திர வியாதி நிவ்ருத்தியானால் மற்றவை அத்துடன் தானே நிவ்ருத்தியடையும்; நிவ்ருத்தியாகாவிட்டால் பரதந்திர வியாதிகளுக்கும் ஏற்ற சிகித்ஸை செய்யவேண்டும்; உபத்திரவம் பலமாயிருந்தால் அதற்கே முன்னதாகவாவது சிகித்ஸை செய்வது அவசியமாகும்; ஏனெனில், பிணியினால் ஏற்கனவே பீடிக்கப்பட்ட தேஹத்தையுடைய பிணியாளனுக்கு, அதன்மேல் உண்டாகும் உபத்திரவமானது இன்னும் அதிக துன்பத்தை யல்லவோ விளைவிக்கும்?—62, 62½.

**வியாதிகளின் நிலையில்லாத் தன்மையும் அவற்றின் பெயருக்குள்ள அவசியமின்மையும் :—**ஒவ்வொரு ரோகத்தினுடையவும் பெயரை அறிய வல்லமையற்ற வைத்தியன் எப்பொழுதும் அதற்காக அச்சமுறவேண்டிய அவசியமில்லை; ஆம்; எல்லா வியாதிகளுக்கும பெயரைக்கொண்டே நிச்சயமானதோர் நிலைமையை ஏற்படுத்துவது ஸாத்தியமில்லை; எந்த தோஷத்தினால் ஒரு வியாதி உண்டாயிற்றோ, அதே தோஷம் பின்னும் வேறு காரண விசேஷங்களால் பிரகோபமடைந்து, வெவ்வேறு ஸ்த்தாநங்களில் பிரவேசித்து அநேகம் இதர வியாதிகளையும் உண்டுபண்ணும். 63—64½.

**வியாதிகளையும் சிகித்ஸைகளையும் நிச்சயிப்பதில் கவனிக்க வேண்டிய அம்சங்கள் :—**ஆகையால் வியாதிகளின் இயற்கையான தன்மைகளை அல்லது வாதாதி தோஷங்களையும், அவற்றிற்கு ஆதாரமான பலவேறு அவயவங்கள் அல்லது தாதுக்களையும், மற்றும் காரணவிசேஷங்களையும் அறிந்து துரிதமாக சிகித்ஸையை ஆரம்பித்துச் செய்யவேண்டும். தோஷங்களால் தாக்கப்பட்ட தாது, தேசம், பிணியாளியின் தேஹபலம், காலம், ஜாடராக்னி

---

1. வாத-பித்த-கபங்களில் ஏதேனும் ஒன்றோ இரண்டோ மூன்றுமோ கோளாறடைந்து, அததற்குற்ற இலக்ஷணாதிகளோடு ஸம்பவித்து அததற்குக் கூறியுள்ள தகுந்த சிகித்ஸைகளால் நிவ்ருத்தியாகும் ரோகங்கள் **சுதந்திரங்கள்** என்றும், அவ்வாறின்றி, காரணம் இன்னதென்று அறிய முடியாமல், திடீரென்று வெவ்வேறு இலக்ஷணங்களோடு ஸம்பவித்து, கிரமமான சிகித்ஸை முறைகளால் நிவ்ருத்தியாகாத வியாதிகள் **பரதந்திரங்கள்** என்றும் கூறப்படும்.

யின் நிலைமை, பிணியாளியின் பிரக்ருதி, வயது, மனோநிலைமை, அவனுக்கு வழக்கமாகவும் ஹிதமாகவும் இருக்கும் வஸ்து அல்லது காரியம், உணவின் தன்மை இவைகளுடைய மற்றும் மிகவும் நுட்பமான வெவ்வேறு வகையாயுள்ள அவஸ்த்தைகளையும் நன்ருகப் பரீக்ஷித்து, தோஷ ஸ்வரூபங்களையும் அவற்றைப் பரிஹரிப்பதற்கான ஔஷதங்களையும் எவனொருவன் நிர்த்தாரணம் செய்கின்ருனோ, அவன் சிகித்ஸையை முறைப்படி நிறைவேற்றிப் பயன்பெறுவதில் ஒருபொழுதும் தவறமாட்டான். 65—67½.

**வியாதியின் நிலைமைகள் விபரீதமாகத் தோற்றல்:**—வியாதியின் மஹத்தான நிலைமையும், சொற்பமான நிலைமையும் அவரவர்களுடைய மனோபாவத்திற்கும், தேஹத்தினுடைய பலாபலங்களுக்கும் ஏற்றவாறு நேர் விபரீதமாகவும் தோற்றுவதுண்டு; [1] அவ்விஷயங்களில் வைத்தியன் விசேஷ கவனம் செலுத்தவேண்டும். —68½

**ரோகங்களை விபரீதமாகக் கருதுவதாலான தீமைகள்:**—பலமான வியாதியை பிரமையினுல் அற்ப வியாதியென்று நினைக்கும் மூட வைத்தியன், அதன் காரணமான தோஷமும் அற்பமானதென்றே கருதி, அவனுக்குச் செய்யவேண்டிய ஹிதமான சிகித்ஸா விஷயத்தில் தவறிப்போவான். பிறகு பலமான வியாதியில் அற்ப அளவான அல்லது அற்ப வீர்யமுள்ள சோதந ஔஷதத்தைப் [2] பிரயோகித்தால், அது தேஹம் சுத்தியடைவதற்குப் போதாதாகையால், அவ்வித சிகித்ஸையானது ரோகங்களை இன்னும் மேன்மேலும் கிளப்பிவிடும். அதற்கு மாருக அற்பமான வியாதியில் அதிக அளவாக அல்லது மஹாவீர்யமுள்ள சோதநௌஷதம் பிரயோகிக்கப்படுமானுல், அது மலங்களை மாத்திரம் வெளிப்படுத்துவதோடு நிற்காமல், சரீரத்திற்கே சிதைவை யுண்டுபண்ணும். ஆகையால் எப்பொழுதும் வைத்தியன் தத்துவங்களை யுணர்வதில் கருத்தாயிருந்து, ஸகலத்தையும் ஸந்தேஹமற நன்ருய் ஆலோசித்து, நிச்சயமாய் ஆரோக்கிய முண்டுபண்ணும் ஔஷதத்தைப் பிரயோகிக்க வேண்டும்.—69, 72½.

**தோஷங்களுக்கு வ்ருத்தி க்ஷயங்களால் ஏற்படும் அறுபத்து மூன்று பேதங்கள்:**—இதன் பிறகு தோஷங்கள் விருத்தியடைவதென்ன க்ஷயமடைவதென்ன இவற்றின் பேதங்களுடைய எண்ணிக்கைகள் கூறப்படுகின்றன:—**வ்ருத்தியான தோஷங்களின் விவரம்:**-தனி

---

1. வியாதி மஹத்தானதாயிருந்தும், பிணியாளி இயற்கையிலேயே பலவானுயிருந்தால், அவனுடைய தேஹத்தில் அவ்வியாதி மஹத்தாகத் தோற்ருமல் சொற்ப வியாதியாகவே காணப்படும்; அற்பமான வியாதியும் துர்ப்பல சரீரத்தில் மஹத்தான வியாதியைப் போலத் தோற்றும். இவ்வித பிரமையுண்டாவது ஸஹஜமாகையால், இதில் வைத்தியர்கள் மிகவும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று எச்சரிக்கை செய்யப்படுகிறது.

2. சோதந ஔஷதம்—வமநம், விரேசநம், வஸ்தி முதலிய சிகித்ஸைகளில் உபயோகிக்கப்படும் ஔஷதங்கள்.

த்தனியே வ்ருத்தியான தோஷங்கள் மூன்று[1]. வ்ருத்தியான தோஷங்களுக்கு மூன்று வகையான ஸம்ஸர்க்கம் உண்டு. அவற்றுள் ஸமமாக வ்ருத்தியடைந்த தோஷங்கள் மூன்று; ஒரு தோஷம் மட்டும் மற்றொன்றைவிட அதிகமாக வ்ருத்தியானால், அந்த இனத்தில் ஆறு வகையுண்டு; ஆக ஸம்ஸர்க்கத்தினால் ஏற்படுவது ஒன்பது விதமாம்[2]. ஸந்நிபாத ரூபமாய் தோஷங்கள் வ்ருத்தியானால், அதில் பதின்மூன்றுவித பேதங்கள் உண்டு; அதாவது இரண்டு தோஷங்கள் அதிகமாய் வ்ருத்தியாவதால் மூன்றும், ஒரு தோஷம்மட்டும் அதிகமாக வ்ருத்தியாவதால் மூன்றும் ஆக ஆறு பேதங்களும், எல்லாம் ஒரே அளவாய் வ்ருத்தியாவதால் ஒன்றும், தாரதம்ய கல்பனையினால் ஆறும் ஏற்படுகின்றன.[3] இவ்வாறு தோஷங்கள் வ்ருத்தியாகும் முறையைக் கொண்டு இருபத்தைந்து விதமான பேதங்களுண்டு. தோஷங்கள் க்ஷயமடைந்தால் அவற்றிற்கும் அவ்விதமேஇருபத்தைந்து வித பேதங்களைக் கல்பித்து[4], இதே கிரமத்

---

1. (1) வாத வ்ருத்தி. (2) பித்த வ்ருத்தி, (3) கபவ்ருத்தி என்பவையாம்.

2. (1) வாத-பித்தங்களின் வ்ருத்தி, (2) வாத-கபங்களின் வ்ருத்தி, (3) பித்த-கபங்களின் வ்ருத்தி; (4) வாதம் வ்ருத்தம், பித்தம் வருத்ததரம்; (5) பித்தம் வ்ருத்தம், வாதம் வ்ருத்ததரம், (6) கபம் வ்ருத்தம், பித்தம் வ்ருத்ததரம், (7) பித்தம் வ்ருத்தம், கபம் வ்ருத்ததரம், (8) கபம் வ்ருத்தம், வாதம் வ்ருத்தரம், (9) வாதம் வ்ருத்தம், கபம் வ்ருத்ததரம். ஆக ஒன்பது விதங்களாம். (**ஸம்ஸர்க்கம்** என்றால் கோளாறடைந்த இரண்டு தோஷங்களின் சேர்க்கை).

3. (1) கபம் வ்ருத்தம்-வாத பித்தங்கள் வ்ருத்ததரம், (2) பித்தம் வ்ருத்தம்-வாத கபங்கள் வ்ருத்ததரம், (3) வாதம் வ்ருத்தம்-பித்த கபங்கள் வ்ருத்ததரம், (4) பித்த கபங்கள் வ்ருத்தம்-வாதம் வ்ருத்ததரம், (5) வாத கபங்கள் வ்ருத்தம்-பித்தம் வ்ருத்ததரம், (6) வாதபித்தங்கள் வ்ருத்தம் கபம் வ்ருத்ததரம், (7) வாத-பித்த-கபங்கள் ஸம அளவில் வ்ருத்தியாதல், (8) வாதம் வ்ருத்தம்-பித்தம் வ்ருத்ததரம்-கபம் வ்ருத்ததமம், (9) வாதம் வ்ருத்தம்-கபம் வ்ருத்ததரம் பித்தம் வ்ருத்ததமம், (10) பித்தம் வ்ருத்தம், கபம் வ்ருத்ததரம்-வாதம் வ்ருத்ததமம், (11) பித்தம் வ்ருத்தம்-வாதம் வ்ருத்ததரம்-கபம் வ்ருத்ததமம், (12) கபம் வருத்தம்-வாதம் வ்ருத்ததரம்-பித்தம் வ்ருத்ததமம், (13) கபம் வ்ருத்தம்-பித்தம் வ்ருத்ததரம்-வாதம் வ்ருத்ததமம். ஸந்நிபாதத்தினால் இவ்வாறு 13 பேதங்கள் உண்டு. (**ஸந்நிபாதம்** என்பது கோளாறடைந்த மூன்று தோஷங்களின் சேர்க்கை.)

4. (1) வாதம் க்ஷீணம், (2) பித்தம் க்ஷீணம், (3) கபம் க்ஷீணம், (4) வாத-பித்தங்கள் க்ஷீணம், (5) பித்த-கபங்கள் க்ஷீணம், (6) வாத-கபங்கள் க்ஷீணம், (7) வாதம் க்ஷீணம்-பித்தம் க்ஷீணதரம், (8) பித்தம் க்ஷீணம்-வாதம் க்ஷீணதரம், (.) வாதம் க்ஷீணம்-கபம் க்ஷீணதரம், (10) கபம் க்ஷீணம்-வாதம் க்ஷீணதரம், (11) கபம் க்ஷீணம்-பித்தம் க்ஷீணதரம், (12) பித்தம் க்ஷீணம்-கபம் க்ஷீணதரம், (13) வாதம் க்ஷீணம்-பித்த கபங்கள் க்ஷீணதரம், (14) பித்தம் க்ஷீணம்-வாத கபங்கள் க்ஷீணதரம், (15) கபம் க்ஷீணம்-வாத

தில் பகுத்துக் கூட்டலாம். மேலும் மூன்று தோஷங்களுள் ஒன்று வ்ருத்தியடைந்தும், ஒன்று ஸம நிலைமை மாறாமலும், மற்றொன்று க்ஷயமடைந்தும் இருந்தால் அப்பொழுது ஆறுபேதங்களைக் கல்பிக்கலாம்.[1] ஒரு தோஷம் க்ஷயமடைந்து, இரண்டு தோஷங்கள் ஸமமாயிருந்து, ஒரு தோஷம் வ்ருத்தியாவதாலும் மீண்டும் ஆறு பேதங்களைக் கல்பனை செய்யலாம்.[2] இவ்விதமாய் அறுபத்திரண்டு பேதங்கள் குறிப்பிடப்பட்டன. அறுபத்து மூன்றாவது கல்பனை ஒன்று ஆரோக்கியத்திற்குக் காரணமாகும்.[3] 73—77.

**தோஷ-தாதுக்களின் சேர்க்கையினாலுண்டாகும் பேதங்கள்:—** இத்தோஷங்களுக்கு இரஸ-ரக்தாதிகளோடு வெவ்வேறு வகைகளில் சேர்க்கை யேற்படுவதாலும், அங்ஙனமே தோஷ-தாதுக்களுக்கு ஏற்படக்கூடிய க்ஷயமென்ன, ஸமநிலைமை யென்ன, வ்ருத்தியென்ன இவ்வித பேதங்களாலும், அவற்றிற்கே தர-தம விசேஷங்களைக் கல்பிப்பதாலும் அவை எண்ணிறந்தவையாகும்; அதற்குள்ள இலக்ஷணாதிகளில் வெகு ஊக்கத்துடன் மதியைச் செலுத்தி, இவ்விவரங்களை முற்கூறியுள்ள முறைகளை அநுஸரித்து அறிய வேண்டும்.—78.

---

பித்தங்கள் க்ஷீணதரம், (16) வாத-பித்தங்கள் க்ஷீணம்-கபம் க்ஷீணதரம், (17) பித்த-கபங்கள் க்ஷீணம்-வாதம் க்ஷீணதரம், (18) வாத-கபங்கள் க்ஷீணம்-பித்தம் க்ஷீணதரம், (19) கபம் க்ஷீணம்—பித்தம் க்ஷீணதரம்-வாதம் க்ஷீணதமம், (20) வாதம் க்ஷீணம்—கபம் க்ஷீணதரம், பித்தம்-க்ஷீணதமம், (21) பித்தம் க்ஷீணம்-கபம் க்ஷீணதரம்-வாதம் க்ஷீணதமம், (22) கபம் க்ஷீணம்-வாதம் க்ஷீணதரம்-பித்தம் க்ஷீணதமம், (23) கபம் க்ஷீணம் வாதம் க்ஷீணதரம்-பித்தம் க்ஷீணதமம், (24) வாதம் க்ஷீணம்-பித்தம் க்ஷீணதரம்-கபம் க்ஷீணதமம், (25) பித்தம் க்ஷீணம்-வாதம் க்ஷீணதரம்-கபம் க்ஷீணதமம். இவ்வாறு க்ஷீணதசையில் தோஷங்களின் சேர்க்கையில் 25 பேதங்கள் ஏற்படுகின்றன.

1. (1) வாதம் வ்ருத்தம், பித்தம் ஸமம், கபம் க்ஷீணம்; (2) பித்தம் வ்ருத்தம், வாதம் ஸமம், கபம் க்ஷீணம்; (3) கபம் வ்ருத்தம், பித்தம் ஸமம், வாதம் க்ஷீணம்; (4) கபம் வ்ருத்தம், வாதம் ஸமம், பித்தம் க்ஷீணம்; (5) வாதம் வ்ருத்தம், கபம் ஸமம், பித்தம் க்ஷீணம்; (6) பித்தம் வ்ருத்தம், கபம் ஸமம், வாதம் க்ஷீணம்; ஆக ஆறு விதங்களாம்.

2. (1) வாதம் க்ஷீணம், பித்த-கபங்கள் வ்ருத்தம்; (2) பித்தம் க்ஷீணம், வாத-கபங்கள் வ்ருத்தம்; (3) கபம் க்ஷீணம், வாத-பித்தங்கள் வ்ருத்தம்; (4) வாத-பித்தங்கள் க்ஷீணம், கபம் வ்ருத்தம்; (5) வாத கபங்கள் க்ஷீணம், பித்தம் வ்ருத்தம், (6) பித்த கபங்கள் க்ஷீணம், வாதம் வ்ருத்தம்; ஆக ஆறு விதங்கள்.

3. அறுபத்து மூன்றாவது வாத-பித்த-கபங்களின் கோளாறடையாத ஸம நிலைமையைக் குறிப்பிடுவதால், அது ஆரோக்கியத்திற்குக் காரணமாகும் என்று கூறப்பட்டது.

# பதின்மூன்றாம் அத்தியாயம்.

## தோஷோபக்ரமணீயம்.

இதன்பிறகு தோஷோபக்ரமணீயம்[1] என்கிற அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

**வாததோஷத்திற்கு சிகித்ஸா முறைகள்:**—வாததோஷத்திற்கு ஏற்றசிகித்ஸாமுறைகள்பின்வருமாறு:—ஸ்நேஹவிதி, ஸ்வேதவிதி,[2] மிருதுவான சோதநவிதி; மதுரரஸமும், அம்லரஸமும், இலவண ரஸமும்,உஷ்ணவீர்யமும்,உஷ்ணஸ்பரிசமுமுள்ள பக்ஷ்யங்கள்,அப்யங்கம், மர்த்தநம் செய்தல், மூறுக்குதல், திடீரென்று அச்சமுறச் செய்தல்,கஷாயாதிகளால் ஸேகம்செய்தல்,[3] மாப்பண்டங்களாலும் வெல்லத்திறைலும் பக்குவமான மதுவகைகளைப் பானம் செய்தல், ஸ்நிக்த்தமும் உஷ்ணவீர்யமுமுள்ள வஸ்திகள், முறைப்படி செய்யவேண்டிய வஸ்திவிதி, ஸுகங்களை அனுபவித்துக்கொண்டு காலங்கழித்தல், அநேக பதார்த்தங்களிலிருந்து உற்பத்தியாய் தீபநபாசந ஔஷதங்களால் பக்குவம் செய்யப்பட்ட ஸ்நேஹ வகைகள் என்பவையாம். சுத்தமான மாம்ஸம், மாம்ஸ ரஸம், தைலம், அநுவாஸநவஸ்தி[4] இவை விசேஷித்த சிகித்ஸைகளாம். 1—3.

**பித்ததோஷத்திற்கு சிகித்ஸா முறைகள்:**—பித்ததோஷ சிகித்ஸை என்னவென்றல்:—க்ருதபானம செய்தல், மதுரமும் சீதவீர்யமுமுள்ள வஸ்துக்களால் விரேசநம் செய்வித்தல்,இனிப்பு-கைப்பு-துவர்ப்பு இச்சுவைகளையுடைய ஆஹாரங்களும் ஔஷதங்களும் உபயோகித்தல்,நறுமணமும்சீதளமும் மனதுக்கு இன்பமுமாயுள்ள ஸுகந்தங்களை உபயோகித்தல், மந்திரமோதி சக்திபெற்ற கயிறுகளை அல்லது குளிசங்களையும் மற்றும் சிறந்த ஹாரங்களையும் கழுத்தில் தரித்தல், இரத்தினங்களை மார்பில் அணிதல், பச்சைக் கற்பூரம்-சந்தனம்-வெட்டிவேர் இவற்றை அரைத்து அடிக்கடியும் பூசிக்கொள்ளுதல் என்னும் இவைபும், அந்திப்பொழுது, சந்திரன், அழகிய மாடிமாளிகை, மனோஹரமான ஸங்கீதம், குளிர்ந்த காற்று, நிர்ப்பந்தமின்றி தாராளமாகக் கூடிப்பழகும் மித்திரன், அழ

---

1. தோஷங்களுக்கு (கோளாறடைந்த வாத-பித்த-கபங்களுக்கு)சிகித்ஸை செய்யும் முறைகளைக் கூறுவதற்கான அத்தியாயம் "தோஷோபக்ரமணீயம்" எனப் படுகிறது.

2. ஸ்நேஹவிதி, ஸ்வேதவிதி முதலியவற்றைப்பற்றி இதன்பின்னல் அததற்கென்று ஏற்பட்ட அத்தியாயங்களில் விவரம் காண்க.

3. ஸேகம்—பரிஷேகம் என்றும் கூறுவர். கஷாயம் முதலிய திரவ பதார்த்தங்களை சிரஸ் முதலானதின் மேல் ஊற்றுதல்.

4. அநுவாஸநவஸ்தி—வஸ்திவிதி அத்தியாயத்தில் விவரம் பார்க்க.

கழகாய் மழலைச் சொற்களைச் சொல்லும் குழந்தைப் பருவத்தி லுள்ள புதல்வன், பிரியமுள்ளவராகவும் நல்ல சீலங்களைப் பெரிய தோர் ஆபரணங்களாகப் பெற்றவராகவும், தனது மனப்போக்குக ளைப் பின்பற்றி நடக்கு மியல்பின ராகவுமுள்ள மனைவிகள், குளிர்ந்த நீர்த்தாரைகளைச் சொரியும் ஜலயந்திரங்களையுடைய மாளிகைகள், அழகிய சோலைகள், நடவாபிகள் இவற்றில் ஸுகாநுபவம் செய்வது, மிகவும் தெளிவான சிறந்த ஜலத்துடன் கூடிய விசாலமான மடு முதலிய ஜலாசயத்தின் மணற்குன்றில், தாமரை யோடைகளுடன் கூடிய ஜலக்கரையின் ஓரத்தில், நிழல்தரும் மரங்களடர்ந்த பிரதேசத்தில் நிர்மிக்கப்பட்டதோர் பந்தலில் வாஸம் செய்வதும், சீதளமும் மனதுக்குப் பிரியமுமாயுள்ள மற்றுமுள்ள விஷயங்களும் பித்தஹரமானவையாகும். பாலையும், நெய்யையும், விரேசநத்தையும் உபயோகிப்பதும் இதில் விசேஷ சிகித்ஸை யாகும். 4—9.

கபதோஷத்திற்குச் சிகித்ஸா முறைகள் :—கபதோஷ சிகித்ஸை களாவன:—முறைப்படி தீக்ஷ்ணமான வமந-விரேசநங்களைப் பிர யோகித்தல், ரூக்ஷமாகவும், அளவிற்குறைந்து வீர்யத்திலும் பரி சத்திலும் உஷ்ணமாகவும், தீக்ஷ்ணகுண முடையதாகவும்; கடு ரஸம், திக்தரஸம், கஷாயரஸம் என்கிற சுவைகளுடன் கூடிய தாகவும் இருக்கிற உணவு, வெகு நாட்கள் பழகிய மது, சிற்றின்ப விருப்பம், இரவுகளில் கண்விழித்தல், பலவிதமான தேஹ வுழைப்பு, மனக்கவலை, எண்ணெய் முதலியதை உபயோகிக்காமலே தேஹத்தை மர்த்தனம் செய்தல் என்பவையாம். வமநசிகித்ஸை, யூஷம்,[1] தேன், கொழுப்பைக் குறைக்கும் ஔஷதம் இவற்றை யுபயோகிப்பதும், தூமபானம் செய்வதும், உபவாஸமிருப்பதும், கண்டூஷ விதியும்,[2] ஸுகங்களை விலக்குவதும் கபத்திற்கு விசேஷ சிகித்ஸைகள் ஆகும். 10—12.

ஸம்ஸர்க்க-ஸந்நிபாத தோஷங்களுக்குச் சிகித்ஸா முறைகள் :— இங்ஙனம் ஒவ்வொரு தோஷத்திற்கும் தனித்தனியே யாதொரு சிகித்ஸா கிரமம் கூறப்பட்டதோ, அந்த முறையையே ஸம்ஸர்க்க தோஷங்களிலும், ஸந்நிபாத தோஷங்களிலும் அததற்குற்றவாறு பகுத்தறிந்து சேர்த்துப் பிரயோகிக்க வேண்டும்.—13.

ஸம்ஸர்க்க தோஷங்களில் விசேஷ சிகித்ஸா முறை :—வாயு-பித்தம் இவ்விரண்டும் ஒருமிக்கக் கோளாறடைந்தால் கிரீஷ்மருது சர்யையும், கபம்-வாயு இவ்விரண்டும் கோளாறடைந்தால் வஸந்த ருது சர்யையும் பெரும்பாலும் அநுகூலமாயிருக்கும்; ஏனெனில்

1. யூஷம்—30-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

2. கண்டூஷம்—22-ம் அத்தியாயத்தைப் பார்க்க

வாததோஷத்திற்கு யோக வாஹியென்னும்[1] விசேஷமானதோர் சக்தியுண்டல்லவா? கபம்-பித்தம் இவற்றின் கோளாறில் சரத்ருது சர்யை பெரும்பாலும் ஏற்றதாகும்.[2]—14.

தோஷங்களுக்கு சிகித்ஸை செய்யத் தகுந்த நிலைமை:—தோஷங்களுக்குச் சயாவஸ்த்தையிலேயே தகுந்த சிகித்ஸை செய்து அதைத் தணியச் செய்யவேண்டும்; ஒரு தோஷம் சயாவஸ்த்தையிலிருக்க, மற்றொன்று பிரகோப நிலைமையடைந்திருந்தால், அப்பொழுது பிரகோபித்த தோஷத்தினுல் தேஹத்திற்குக் கேடு நேரிடாவண்ணம் சயமடைந்த தோஷத்திற்குப் பரிஹாரம் செய்வது முறை[3]. எல்லாத் தோஷங்களும் பிரகோபித்திருந்தால், அப்பொழுது எது மிகவும் பலமா யிருக்குமோ அதற்குமட்டும் முதலில்—மற்றவைகளால் விரோத முண்டாகாமலிருக்குமாறு—சிகித்ஸை செய்யவேண்டும்.—15.

சிறந்த சிகித்ஸா முறை:—எந்த சிகித்ஸா முறையானது ஒரு குறிப்பிட்ட வியாதியைத் தணியச்செய்து, அடுத்தாற்போல் வேறு பல ரோகங்களைக் கிளப்பிவிடுமோ, அது தோஷமற்ற நல்ல சிகித்ஸா முறையாகாது; ஆனுல் எந்த சிகித்ஸை குறிப்பிட்ட ரோகத்தைப் பரிஹரித்து, வேறு எவ்வியாதியையும் புதிதா யுண்டுபண்ணுமலிருக்குமோ அதுவே சிறப்புற்றதாகும்.—16.

தோஷங்கள் கோஷ்டத்திலிருந்து சாகாதிகளை அடைதல்:—வியாயாமத்தினுலும்[4], உஷ்ணத்திற்குள்ள தீக்ஷ்ணத்தன்மையினு

---

1. யோகவாஹி—ஒரு வஸ்து வேறு பல வஸ்துக்களோடு தனித் தனியே சேரும்போது, அந்தந்த வஸ்துவின் குணங்களுக்கேற்ற தன்மைகளைப் பெறும் தன்மை. [கிரீஷ்மருதுவில் முற்றிலும் சீதோபசாரம் அவசியமென்றும், வஸந்த ருதுவில் தீக்ஷ்ணமான வமந-நஸ்யாதிகளைப் பிரயோகிப்பது நலமென்றும் கூறப்படுகிறது; அவ்விரண்டும் வாதத்திற்கு வ்ருத்தியையே உண்டுபண்ணும் என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்கு, யோகவாஹியென்கிற சக்தி வாயுவுக்கு உண்டென்பது குறிக்கப்பட்டது; வாயுவானது பித்தத்தோடு சேரும்போது பித்தகுணம் வ்ருத்தியாவதும், கபத்தோடு சேர்ந்தால் கபகுணம் வ்ருத்தியாவதும் இயல்பு: ஆகவே வாயுவும் பித்தமும் சேரும்போது பித்தத்தைத் தணிப்பதற்கேற்றவாறு கிரீஷ்மருது சர்யையும், அவ்வாயுவும் கபமும் சேரும்போது கபத்தைத் தணிப்பதற்கேற்றவாறு வஸந்தருது சர்யையும் யுக்தமென்று கூறப்பட்டதாய் அறிக].

2. கிரீஷ்மருது சர்யை, வஸந்தருது சர்யை, சரத்ருது சர்யை இவற்றின் விவரங்களை ருதுசர்யாத்தியாயத்தில் காண்க.

3. உதாரணம்: வாதம் சயாவஸ்த்தையடைந்து, பித்தம் பிரகோபாவஸ்த்தையிலிருந்தால், அந்த நிலைமையில் பித்தத்தினுல் தேஹத்திற்கு அபாயம் நேரிடாமல் அதைத் தணியச்செய்ய ஏற்ற சிகித்ஸையைப் பிரயோகித்துக்கொண்டே, வாதத்தை சயாவஸ்த்தையிலிருந்து பிரகோபாவஸ்த்தையடையாமலிருக்கும்படி அடக்குவதற்கு உபாயம் தேடவேண்டும்.

4. வியாயாமம்—17-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

லும், அஹிதமான ஆஹாராசாரங்களாலும்[1], வாயு மிகவும் நிலையில்லாத் தன்மையதாய் ஓடிக்கொண்டிருப்பதாலும் தோஷங்கள் கோஷ்டத்திலிருந்து[2] சாகைகளிலும்[3], எலும்புகளிலும், மர்மங்களிலும் இடம்விட்டுப் பெயர்ந்தோடுகின்றன.—17.

தோஷங்கள் சாகாதிகளிலிருந்து கோஷ்டத்தை யடைதல் :—அவ்வாறே ஸ்ரோதஸ்ஸுகளுடைய முகங்களைச்[4] சுத்தம் செய்து, மலாதிகளால் அவை அடைபடாமற் பண்ணுவதாலும், தோஷங்களை வ்ருத்தி செய்வதாலும், அபிஷ்யந்தியென்னுங் குணமுள்ள[5] பதார்த்தங்களை யுபயோகிப்பதாலும், ஆமாவஸ்த்தையிலுள்ள தோஷங்களைப் பக்குவம் செய்வதாலும், வாயுவை அடக்கியாளுவதாலும் சாகைகளிலிருந்து தோஷங்கள் கோஷ்டத்தை யடையும்.—18.

தோஷங்கள் கோஷ்டத்திலிருந்து பிரகோபமடையும் வகை :—அத்தோஷங்கள் அப்படியே கோஷ்டத்தி லிருந்தவாறு இன்னும் தமது வ்ருத்திக்கு வேண்டிய காரணங்களை எதிர்பார்த்தவண்ணம் தாமதித்துவரும். அவை காலம் முதலியவற்றின்[6] பலத்தைப் பெற்று, இதர தோஷங்களுடைய ஸ்த்தானங்களிலும் பரவி பிரகோபமடையும்.—19.

அன்னிய ஸ்த்தாநங்களிலுள்ள தோஷத்திற்குத் தகுந்த சிகித்ஸை :—அத்தோஷங்களுள் ஏதாவது ஒன்று வேறொரு தோஷத்திற் குரித்தான ஸ்த்தாநத்தில் வியாபித்திருந்து, அது அவ்விடத்தில் வேண்டியவளவு பலம் பெறுததாயிருந்தால், அந்த நிலைமையில் அந்த ஸ்த்தாநத்திற் குரித்தான தோஷத்திற்கே சிகித்ஸை செய்ய வேண்டும். அன்னிய ஸ்த்தாநங்களிலுள்ள தோஷத்திற்குத் தகுந்த பலமிருந்து, அதனால் வேறு தோஷங்கள் தாக்கப்படுமானால், அவ்வித பலமான தோஷத்திற்கு உரித்தான சிகித்ஸையையே முதலிற் செய்யவேண்டும்.—20.

---

1. அஹிதமான ஆசாரங்களைப்பற்றி நான்காம் அத்தியாயத்தையும், அஹிதமான ஆஹாரங்களைப்பற்றி ஆரும் அத்தியாயத்தையும் பார்க்க.

2. கோஷ்டம்—136-ம் பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.

3. சாகைகள்—136-ம் பக்கம் மூலத்தைப் பார்க்க.

4. ஸ்ரோதஸ்ஸுகளின் முகங்கள்—கண், காது, வாய், நாசி, நேத்திரம், குதம் முதலியவை அந்தந்த இந்த்ரிய மார்க்கத்திற்கு அல்லது அவயத்திற்கு வாயில்களைப்போல் இருப்பதால், அவற்றின் வாய்கள் ஸ்ரோதோ முகங்கள் எனப்படும். இரத்தக்குழாய் முதலியவற்றின் சுத்தியும் இதனுல் குறிக்கப்படும். 46-வது பக்கமும் பார்க்க.

5. அபிஷ்யந்தி—43-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

6. காலம் முதலிய-என்பதால் தேசம், தாதுக்கள், பிரக்ருதி, அபத்தியமான ஆஹாராதிகள் என்கிறவைகளும் குறிக்கப்படுகின்றன.

ஸ்த்தாநி தோஷத்திற்கும் ஆகந்து தோஷத்திற்கும் சிகித்ஸை செய்யும் முறை:—கோளாறடைந்த ஸ்த்தாநி தோஷத்திற்கு[1] முதலிற் பரிஹாரம் செய்து, அதன்பிறகாவது ஆகந்துக தோஷத்திற்கு[2] ஏற்ற சிகித்ஸையைச் செய்யலாம்.—20½.

சாகைகளை ஆச்ரயித்துண்டாகும் தோஷக் கோளாறுகளுக்குப் பரிஹாரம்:—தோஷங்கள் பிரகோபமடைந்து சாகைகளைப் பற்றியிருக்கும் நிலைமையில், பிணியாளிகளை நீடித்த காலம் அவை பெரும்பாலும் அதிகமாக வருத்தச் செய்வதுண்டு; தேஹம், அக்னி இவற்றிற்குள்ள பலாபலங்களையறிந்த வைத்தியன், அக்கோளாறுகளுக்குத் துரிதமாகத் தோன்றியவாறு சிகித்ஸையைச் செய்துவிடமாட்டான். அவ்விதம் கோளாறடைந்த தோஷங்களை முறைப்படி சிகித்ஸா பிரயோகத்தினால் மெதுவாக சமநம்[3] செய்யலாம்; அல்லது சாகைகளிருந்து ஸுகமாகக் கோஷ்டத்திற்காவது அதைக் கொண்டுவரலாம். தோஷங்கள் கோஷ்டத்தை வந்து அடைந்ததாகத் தெரிந்துகொண்ட பிறகு, எது ஸமீபமான மார்க்கமோ, அவ்வழியினால்[4] அவற்றை வெளிப்படுத்தவேண்டும். 21—22½.

தோஷங்களின் ஆம-பக்வாவஸ்த்தைகளின் குறிகள்:—ஸ்ரோதஸ்ஸுகள் அடைபடுதல், பலங்குறைதல், தேஹம் பாரமாயிருப்பதாகத் தோற்றுதல், அபாநவாயு வெளிப்படாமல் தடைபடுதல், சோம்பல், உணவு ஜீர்ணமாகாமலிருத்தல், கபம் முதலியதை அடிக்கடி உமிழ்ந்து வருதல், மலபந்தம், அரோசகம், உடல்வாட்டம் என்னும் இவை[5] தோஷங்கள் ஆமாவஸ்த்தையிலிருப்பதைக்

1. ஸ்த்தாநி தோஷம்—எந்த தோஷம் எந்த இடத்தில் இயற்கையில் இருப்பது வழக்கமோ, அந்த ஸ்தாநத்தில் அந்தோஷம் "ஸ்த்தாநி தோஷம்" எனப்படும்.

2. ஆகந்துக தோஷம்—இயற்கையில் தனக்குச் சம்பந்தமில்லாத ஸ்த்தாநத்தை (அதாவது மற்றொரு தோஷத்தின் ஸ்த்தாநத்தை) அடைந்துள்ள தோஷம் ஆகந்துக தோஷமாகும்.

3. சமநம்—7-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

4. குடலில் ஆமாசயத்திலோ அதற்கு அருகிலோ தோஷம் தங்கியிருந்தால் வமநரூபமாய் முகத்தினாலும், ஸூக்ஷ்மாந்திரத்தின் கடைசியிலாவது, ஸ்த்தூலாந்திரத்திலாவது, மலாசயத்திலாவது தங்கியிருந்தால் விரேசநரூபமாக குதத்தினாலும் தோஷங்களை வெளிப்படுத்தலாம் என்பது கருத்து.

5. இங்கு "விண்மூத்ர நகதந்த த்வக்சக்ஷுஷாம்" என்றும் "சிரோருக் ஜாயதே தீவ்ரா" என்றும் இரண்டு பத்தியங்கள் சில புஸ்தகங்களில் அதிகமாகக் காணப்படுகின்றன. [மலம், மூத்திரம், நகம், பல், சர்மம், நேத்திரம் இவை பசுமை நிறங்கொள்ளும்; அல்லது அதிக சிவப்பாகவும், அதிக கறுப்பாகவும் அவை காணப்படும்; முள்ளெலும்புகளிலும், இடுப்பிலும், கணுக்களிலும் வலியுண்டாகும்; சிரோவேதனை அதிகமாயுண்டாகும்; நித்திரை அதிகரிக்கும்; வாயில் அருசியுண்டாகும்; தேஹத்தில் எங்கேயாவது வீக்கமும், ஜ்வரமும், அதிஸாரமும், மயிர்க்கூச்சலும் காணுவதுண்டு.—என்பது அவ்விரண்டு பத்தியங்களின் பொருள்.]

குறிப்பிடும் இலக்ஷணங்களாம்; மேற்கூறியவற்றிற்கு எதிரிடையான குறிகள் ஏற்பட்டால், அவை ஆமதோஷமில்லாத ஸாதாரண இயற்கை நிலைமையைக் குறிப்பிடுகின்றன.—23, 24.

ஆமதோஷம்:—ஜாடராக்னி பலங்குன்றிப் போவதால் முதல் தாதுவான ஆஹாரரஸமானது பக்குவமாகாமல் பதனழிந்து ஆமாசயத்திலேயே தங்கி நிற்கும்; அவ்வித ரஸமே ஆமதோஷம் என்று கூறப்படுகிறது. மிகவும் கோளாறடைந்த வாதாதிதோஷங்கள் ஒன்றோடொன்று மிச்ரமாய்விடுவதால், அவற்றிலிருந்தே, பதனழிந்த கோத்ரவதானியங்களிலிருந்து[1] ஒருவகை விஷம்போல, ஆமதோஷம் ஸம்பவிப்பதாக வேறு சில சாஸ்திரவல்லோர் சொல்வதுண்டு.—25, 26.

ஆம தோஷப் பற்றுள்ள தோஷ-தாது-ரோகங்கள்:—அத்தகைய ஆமதோஷத்துடன் கலந்து விகாரமடைந்த வாதாதிதோஷங்களும், இரஸம் முதலிய தாதுக்களும் ஸாமங்கள்[2] என்று வழங்கப்படுகின்றன; ஆமதோஷத்துடன் கூடிய அவ்வாதாதி தோஷங்களால் எந்த வியாதிகள் ஸம்பவிக்கின்றனவோ அவையும் ஸாமங்கள் என்று கூறப்படும்.—27.

ஸாமமான தோஷங்கள் உடலெங்கும் பரவியிருக்கையில் சிகித்ஸை செய்வதாலான தீமை:—தேஹமெங்கும் பரவி, தாதுக்களில் ஊடுருவிப் பற்றி நிற்பவையும், இடம் விட்டுப் பெயரமுடியாமலிருப்பவையுமான ஸாமதோஷங்களுக்கு[3] சோதநசிகித்ஸைகளால் பரிஹாரம்செய்ய முயலக்கூடாது; அவ்விதம் செய்வது மிகவும் கஷ்டஸாத்தியமானதால், முதிர்ச்சி பெறாத பசுங்காயிலிருந்து இரஸம் பிழிய முயலுவதுபோல, அக்கார்யம் ஆதாரமாயுள்ள வஸ்துவுக்கே[4] தீங்கையுண்டுபண்ணும்.—28, 28½.

ஸாமமான தோஷாதிகளுக்குச் சிகித்ஸை செய்யுமுறை:—பாசநம் தீபநம்[5] என்கிற குணங்களைப் பெற்ற ஸ்நேஹங்களாலும், ஸ்வேதக்ரியைகளாலும் ஸாமமான தோஷங்களைப் பக்குவம்செய்து,

---

1. கோத்ரவம்—இதை வரகு தான்யம் என்று சிலர்.

2. ஸாமங்கள்—ஆமதோஷத்துடன் கூடியவை.

3. ஸாமதோஷங்கள்—ஆமம் என்கிற விஷத்துடன்கூடிய வாத-பித்த-கபங்கள்.

4. இங்கு பிராணிகளுடைய தேஹம் (அதற்கு உதாரணமாகக் கூறிய கனியாத காயும்) "ஆதாரமாயுள்ள வஸ்து" என்று குறிப்பிடப்படுகின்றது.

5. பாசநம் என்பதைப்பற்றி 37-ம் பக்கம் டிப்பணியிலும், தீபநம் என்பதைப்பற்றி 52-ம் பக்கம் டிப்பணியிலும் விவரம் காண்க.

அதன்பிறகு சோதநகுணமுள்ள சிகித்ஸாப் பிரயோகங்களால் ஏற்ற காலத்தில் எந்த மார்க்கம் ஸமீபமாயிருக்குமோ அம்மார்க்கத்தினால் அவற்றை வெளிபடுத்தவேண்டும்.—29½.

தேஹத்தினுள்ளிருந்து தோஷங்களை எளிதில் வெளிப்படுத்துவதற்கான மார்க்கங்கள்:—முகத்திலிட்டு உட்கொண்ட சோதநத்திரவ்யமானது, ஆமாசயத்திலுள்ள தோஷங்களை அதிசீக்கிரத்தில் வமனத்தின் மூலமாய் வெளிபடுத்தும்; கழுத்திற்கு மேற்பட்ட அவயவங்களிலுண்டான தோஷங்களை நாசியின்மூலமாய் உபயோகித்த சோதந ஔஷதம் சீக்கிரம் வெளியாக்கிவிடும்; குதமார்க்கத்தால் உபயோகித்த சோதந வஸ்து, பக்வாசய முதற்கொண்டு அதற்குக் கீழுள்ள அவயவங்களிலிருந்தும் தோஷங்களை எளிதில் வெளிப்படுத்துவதும் இயல்பு.—30½.

ஆமதோஷம் தானே வெளிவரும் போது செய்யக்கூடிய சிகித்ஸை:—கீழாகவோ மேலாகவோ கல்விக்கொண்டு தானாகவே வெளிவரும் ஆமதோஷங்களை ஔஷதப் பிரயோகங்களால் தடுத்து அடக்கக்கூடாது; அவற்றைத் தடுத்தால், அவை ரோகங்களை யுண்டு பண்ணும். ஆகையால் அவ்வாறு வெளிவரும் தோஷங்களை, முதலில் ஹிதமானவற்றை யுட்கொண்டு உபேக்ஷிக்க வேண்டும்; அப்பால் சிறிது தணிவடையுங்கால் அந்தந்த பாசந ஔஷதங்களால் உள்ளடங்கிய ஆமதோஷத்தைப் பக்குவம் செய்யலாம், அல்லது நன்கு வெளிப்படுத்தியும் விடலாம். 31—32½.

தோஷங்களுக்கு சோதநசிகித்ஸை செய்வதற்கேற்ற காலங்கள்:—கிரீஷ்மருதுவிலும், வர்ஷருதுவிலும், சிசிரருதுவிலும் சயமடைந்த வாதம் முதலிய தோஷங்களை [1] முறையே ஆவணி, கார்த்திகை, சித்திரை என்னும் ஸாதாரணமான மாஸங்களில் [2] தாமதமின்றி சோதந சிகித்ஸைகளால் வெளிப்படுத்தி விடவேண்டும்; கிரீஷ்மருது மிகவும் உஷ்ணமானது; வர்ஷருதுவில் மழை மிகுதியாயிருக்கும்; சிசிரருதுவில் குளிர்ச்சி மிகவும் அதிகம்; ஆகையால்; சயமடைந்த

---

1. கிரீஷ்மருதுவில் வாயுவும், வர்ஷருதுவில் பித்தமும், சிசிரருதுவில் கபமும் சயம் அடைவது இயல்பு என்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது.

2. ஆவணிமாஸம் பிறந்ததும் கிரீஷ்மம் முடிவடைந்து வர்ஷருது பிறப்பதால், அப்பொழுது உஷ்ணம் ஒருவாறு தணிந்து மழை ஆரம்பிப்பதால், அது கோடை மாரிகாலங்களுக்கு ஸந்தியாகின்றது; அதனால் அது **ஸாதாரணகாலம்** எனப் படுகிறது. அதிக வெயிலுமில்லாமல் அதிக குளிர்ச்சி அல்லது அதிக மழையுமில்லாமல் நடுத்தரமாயிருப்பதால் அக்காலம் ஸாதாரணம் என்று கூறப்படுகிறது. இவ்விதமே கார்த்திகை சித்திரைகளும் ஸாதாரண காலங்களில் சேர்க்கப்படுகின்றன.

தோஷங்களை ஸாதாரணகாலம் எனப்படும் அந்தந்த ருதுக்களின் ஸந்தியில் சோதநம் செய்யவேண்டும்[1]. 33—34½.

**வியாதி நிலைமையில் தோஷசோதநத்திற்கேற்ற காலஸம்பந்தமான விசேஷவிதி:**—முற்கூறிய விதியானது ஆரோக்கிய நிலைமையிலிருப்பவரைக் குறித்து சொல்லப்பட்டதாகும்; வியாதி ஏதேனும் ஸம்பவித்திருந்தால், அப்பொழுது அந்தந்த வியாதியின் நிலைமைக்குத் தகுந்தவாறு எந்த ஸமயத்திலும் சிகித்ஸைகளைச் செய்யவேண்டும்.—35.

**குளிர்காலம் முதலிய வற்றில் சிகித்ஸை செய்யுமுறை:**—குளிருக்கும், உஷ்ணத்திற்கும், மழைக்கும் அததற்கு ஏற்ற பரிஹாரத்தைச் செய்து,[2] அவ்வப்பொழுது நிறைவேற்றவேண்டிய சிகித்ஸையைச் செய்துவிடவேண்டும்; சிகித்ஸை செய்வதற்கு அவசியமாய் ஏற்பட்ட காலத்தை மாத்திரம் வீணிற் கழிக்கக் கூடாது.—36.

**ஔஷத முபயோகிப்பதற்கான பத்துவித காலங்கள்:**—ஔஷதம் உட்கொள்வதற்கான பல வேறு காலங்களாவன:—ஆகாரமில்லாமலும், ஆஹாரத்திற்கு முன்னதாகவும், ஆஹாரத்திற்கு இடையிலும், ஆஹாரத்திற்குப் பின்பும், ஒரு கபளத்திற்கும் மற்றொரு கபளத்திற்கும் இடையிலும், ஒவ்வொரு கபளத்திலும் கலந்தும், அடிக்கடியும், எல்லா உணவிலும் கலந்தும், உணவுக்கு முன்னும் அதற்குப் பின்னும், இரவிலும ஆகப் பத்துவகையான காலங்கள் ஔஷத முபயோகிப்பதற்கென்று ஏற்பட்டுள்ளன.—37.

**வியாதிகளுக்கேற்ற ஔஷதோபயோக காலங்கள்:**—கபம் அதிகரித்துண்டான வியாதியில் அந்த வியாதியும் ரோகியும் பலமாயிரு

1. (1) கிரீஷ்மருதுவில் பிராணிகளின் தேஹம் ஆதாநகாலத்தின் (இதைப்பற்றி 23 ம் பக்கம் மூலமும் டிப்பணியும பார்க்க) கடுமையினால் வாடியும், தீக்ஷ்ணமான வெயிலின் வெப்பத்தினால் தபிக்கப்பட்டும், நாவரட்சி-சிரமம் முதலியதால் சோர்வடைந்தும் விடுகின்றது; இந்த ஸமயத்தில் ஔஷதங்களும் காலஸ்வபாவத்திற் கேற்க மிக்க உஷ்ணமாகவும் தீக்ஷ்ணமாகவும் பரிணமித்து அதியோகம் என்னும் தோஷத்தைப் பெற்று உடலுக்கு ஹாநி விளைவிக்கும். (2) மாரிக்காலத்தில், மேகங்களால் ஆகாயம் மூடப்படுவதாலும் புதிய ஜலத்தையுபயோகிக்கவேண்டியிருப்பதாலும், ஜாடராக்னி குறைவடைந்து, ஆதாநகாலத்தின் இறுதியிலுள்ள பலஹீனத்தன்மையும் தொடருமாகையாலும் ஔஷதங்களும் ஜலத்தில் அமிழ்ந்து வீர்யமிழந்து விடுவதாலும் அயோகம் என்னும் தோஷத்தைப் பெற்று ஹாநியுண்டாக்கக்கூடியதாம். சிசிருதுவில், அபரிமிதமான குளிரால் வாதம் தேஹத்தில் கட்டுண்டு, அவயவங்கள் விறைத்துப்போய்விடுமாகையால் அதுவும் அயோகமாகவே ஆகின்றது.

2. குளிர் மழை இவற்றில் அதிக குளிர்ச்சியில்லாத உஷ்ணமான அறையில் படுத்திருக்கச்செய்வதும், மற்றவைகளுக்கும் ஏற்றவாறு ஏதாவது இவ்வித பரிஹாரம் செய்யவேண்டியதும் அவசியமென்று இதனால் குறிப்பிடப்பட்டதென்க.

ந்தால், ஆஹாரமில்லாமல் ஔஷதம் பிரயோகிக்கவேண்டும்; அபாநவாயு கோளாறடைந்தால் ஆஹாரத்திற்கு முந்தி ஔஷத முபயோகிக்கவேண்டும்; ஸமாநவாயு விகாரமடைந்தால் ஆஹாரத்தின் இடையில் ஔஷதத்தை யெடுத்துக்கொள்ளவும்; வியாநவாயுவின் கோளாறில் காலைப்போஜனமான பின்பும், உதாநவாயுவின் கோளாறில் மாலைப்போஜனத்திற்குப் பின்பும் ஔஷதம் உபயோகிப்பது நலம்; ப்ராணவாயு பிரகோபமடைந்தால் ஒவ்வொரு கபளத்திற்கலந்தும், ஒரு கபளத்திற்கும் மற்றொரு கபளத்திற்கும் நடுவிலும் ஔஷதமுட்கொள்ளலாம்; விஷம், வாந்தி, விக்கல், தாஹம், ச்வாஸ-காஸம் இவ்வியாதிகளால் வருந்துபவர் அடிக்கடி ஔஷதமுபயோகிப்பது அவசியமாகும். அரோசகத்தில், பலவகைப்பட்ட விசித்திரமான பக்ஷ்யங்களில் ஔஷதத்தை நன்றாகக் கலந்து பிரயோகிக்கவேண்டும்; நடுக்கம், ஆக்ஷேபகம் என்னும் இசிவு, விக்கல் இவற்றில் இலகுவான ஆஹாரங்களைப் புஜித்துக்கொண்டு ஔஷதத்தை ஆஹாரத்திற்கு முன்னும் அதற்குப் பிறகும் உபயோகிக்கவேண்டியது; கழுத்துக்கு மேற்பட்ட அவயவங்களிலுண்டான வியாதிகளில் இரவிற் படுக்கையில் ஔஷதமெடுத்துக் கொள்ளவேண்டும். 38—41.

## பதினொன்காம் அத்தியாயம்.

### த்விவிதோபக்ரமணீயம்.

இனி த்விவிதோபக்ரமணீயம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது:—

இரண்டுவித சிகித்ஸா முறைகள்:—சிகித்ஸை செய்துகொள்ளும் பிணியாளி இரண்டுவிதமாக இருப்பதால், சிகித்ஸையையும் இரண்டுவிதமாகப் பிரிக்கவேண்டியிருக்கிறது. அச்சிகித்ஸைகளுள் ஒன்று **ஸந்தர்ப்பணம்**[2] என்றும், மற்றொன்று **அபதர்ப்பணம்** என்றும்[3] வழங்கப்படும்; அவற்றுள் ஸந்தர்ப்பணத்திற்கு **ப்ருஹ்மணம்** என்றும், அபதர்ப்பணத்திற்கு **இலங்கநம்** என்றும் வேறு பெயர்களுண்டு.—1, 1½.

ப்ருஹ்மணலங்கநங்களின் விவரம்:—தேஹத்திற்கு எது ப்ருஹத்வத்தை—என்றால் புஷ்டியைத்—தரக்கூடியதோ அது **ப்ருஹ்மணம்** எனப்படும்; தேஹத்திற்கு எது இலாகவத்தை—என்றால்

---

1. இரண்டு விதமான (ப்ருஹ்மணம் இலங்கநம் என்னும்) சிகித்ஸா விசேஷங்களை முக்கியமாக விவரிக்கும் அத்தியாயம் "த்விவிதோபக்ரமணீயம்" எனப்படுகிறது. [த்விவிதம்—இரண்டுவிதம்; உபக்ரமணீயம்—சிகித்ஸை.]

2. ஸந்தர்ப்பணம்—தேஹத்திற்கும் மனத்துக்கும் த்ருப்தியையுண்டுபண்ணுவது எனப் பொருள்.

3. அபதர்ப்பணம்—க்லேசம் தரக்கூடிய சிகித்ஸை யென்று பொருள்.

இலேசாயிருக்கக்கூடிய நிலைமையை—உண்டுபண்ணக் கூடியதோ அது இலங்கநம் என்று வழங்கப்படும். அவற்றுள் முதலிற் கூறியது ப்ருதிவீ, அப் என்னும் இரண்டு பூதங்களின் அம்சங்களாலும், பின்னால் கூறப்பட்டது மற்ற பூதங்களின் அம்சங்களாலும் பெரும்பாலும் நிறைவேற்றப்படுகின்றனவென்றறிக[1].—2, 3.

**ஸ்நேஹந-ரூக்ஷணாதிகளும் ப்ருஹ்மண-இலங்கநங்களேயாம்.**—மஹாபூதங்கள் ஸந்தர்ப்பண-அபதர்ப்பண ரூபமான இரண்டு குணங்களையே உடையவையாகையால் ஸ்நேஹநம்,[2] ரூக்ஷணம்[3] என்னும் இவ்விரண்டு சிகித்ஸைகளென்ன, ஸ்வேதநம்[4], ஸ்தம்பநம்[5] என்பவை யென்ன ஆக இந்த நான்குங்கூட முற்கூறிய இரண்டுவிதமான சிகித்ஸைகளினும் வேறுபட்டவையல்ல.—3½.

**இலங்கநம் இரண்டுவிதம்** :—அவற்றுள் இலங்கந சிகித்ஸையானது **சோதநம்** என்றும, **சமநம்** என்றும் இருவகைப்படும்.—4.

**சோதந சிகித்ஸை ஐந்துவிதம்** :—தோஷங்களை உடலினின்றும் எது வெளிப்படுத்துமோ, அவ்வித சிகித்ஸையே **சோதநம்** என்று கூறப்படும். அந்த சோதந சிகித்ஸை ஐந்துவிதமானது ; அவையாவன:-வஸ்திசிகித்ஸை,[6] வமநசிகித்ஸை, காயவிரேசந சிகித்ஸை[7], சிரோவிரேசந சிகித்ஸை[8], இரக்தமோக்ஷணசிகித்ஸை[9] என்பனவாம்.—5.

**சமநசிகித்ஸை ஏழுவிதம்** :—யாதொரு சிகித்ஸையினால் தோஷங்கள் வெளிப்படுத்தப்படாமலும், ஸமமான நிலைமையிலுள்ள அவை அதிகரித்து இடம் விட்டுப்பெயர்க்கப்படாமலும், கோளாறடைந்திருப்பவை ஸமமான நிலைமைக்குக் கொண்டுவரப்

---

1. ப்ருதிவீ, அப் இரணடும் குருகுணமுள்ள பூதங்களாகையால், அதே குணந்தரக்கூடிய ப்ருஹ்மண சிகித்ஸைக்கும் அவை ஆதாரமாகின்றன ; அங்ஙனமே தேஜஸ், வாயு, ஆகாயம் என்னும் மூன்று பூதங்களும் இலகுவாகையால் அதே குணமளிக்கும் இலங்கந சிகித்ஸைக்கு அவை ஆதாரங்களாகின்றன.

2. ஸ்நேஹநம்—16-ம் அத்தியாயத்தில் விவரம் காண்க.

3. ரூக்ஷணம்—ஸ்நேஹசிகித்ஸைக்கு எதிரிடையான குணமுள்ள சிகித்ஸை.

4. ஸ்வேதநம்—17-ம் அத்தியாயத்தில் விவரம் காண்க.

5. ஸ்தம்பநம்—ஸ்வேதசிகித்ஸைக்கு எதிரிடையான குணமுண்டு பண்ணும் சிகித்ஸை.

6. வஸ்திசிகித்ஸை—19-ம் அத்தியாயத்தில் விவரங்களைக் காண்க.

7. காயவிரேசநம்—ஸாதாரணமாய் குடலிலிருந்து மலத்தை வெளிப்படுத்தும் விரேக சிகித்ஸையே காய விரேசநம் எனப் படுகிறது.

8. சிரோவிரேசநம்—தீக்ஷ்ணமான நஸ்யம், தூமபாநம், அஞ்ஜநம் முதலியவற்றால் சிரஸ்ஸில் சேர்ந்துள்ள தோஷங்களை வெளிப்படுதல்.

9. இரக்தமோக்ஷணம்—ஸிராவ்யத விதியென்னும் 27-ம் அத்தியாயத்தில் விவரம் காண்க.

பட்டும் குறிப்பிட்ட வியாதி நிவ்ருத்திக்கப் படுமோ அதுதான் **சமநம்** என்று கூறப்படுகிறது. அந்த சமநசிகித்ஸை ஏழுவிதம்; அது பின்வருமாறு:—பாசநம், தீபநம்,[1] பசியை அடக்குதல், நாவரட்சியை அடக்குதல்[2], வியாயாமம் செய்தல்,[3] வெயிலில் இருத்தல்[4], காற்றோட்டமுள்ளவிடங்களில் வஸித்தல்[5] என்பவையாம். -6½.

ப்ருஹ்மண சிகித்ஸை; அதற்குரியவர்:—வாததோஷமாவது வாத-பித்தங்களாவது பிரகோபித்தால், அவற்றிற்கு ப்ருஹ்மண சிகித்ஸை செய்ய வேண்டிவருகிறதல்லவா? அவ்வாறு செய்யப்படும் ப்ருஹ்மண சிகித்ஸையானது வாதத்திற்கும், வாத-பித்தங்களுக்கும் சமநசிகித்ஸையாகவே ஆகும்[6]. வெவ்வேறு வியாதிகளாலும், பலவித ஔஷதங்களை யுபயோகிப்பதாலும், மதுபானத்தினாலும், சிற்றின்பங்களில் பிரவ்ருத்திப்பதாலும், துயரத்தினாலும் எவர் இளைத்திருக்கின்றனரோ, அதிக சுமைகளைச் சுமப்பதாலும், வழி நடப்பதாலும், உரக்ஷதம் என்னும் வியாதியினாலும் எவர் க்ஷீணித்திருக்கின்றனரோ, எவர் ரூக்ஷமாகவும் துர்ப்பலமாகவும் வாததோஷம் மேலிட்டதாகவுமுள்ள நிலைமை யுடையவர்களோ அவர்களும், கர்ப்பிணியும, பிரஸவித்திருப்பவரும், பாலர்களும், வயது முதிர்ந்தவர்களும் ப்ருஹ்மண சிகித்ஸைக்கு ஏற்ற

1. பாசநம், தீபநம் என்னும் இவ்விரண்டுவித சமநசிகித்ஸைகளும் ஔஷதப்பிரயோகத்தினாலேயே நிறைவேற்றப்படும் என்று அறிக; இவ்விஷயம் அடுத்தாற்போல் குறிக்கப்படும் பசியையடக்குதல் முதலிய கிரியைகளால் நன்கு ஊஹிக்கக்கூடியது.

2. பசியையடக்குதல், நாவரட்சியை யடக்குதல் என்னும் இவ்விரண்டிலும் உபவாஸமுறை குறிப்பிடப்பட்டதென்றறிக.

3. வியாயாமம் என்பதால், முறைப்படி உடலை யுழைத்து வேலை செய்தே சில வியாதிகளைப் போக்கவேண்டும் என்பது அறிவிக்கப்படுகிறது.

4. வெயிலில் இருத்தல் என்பதால், இக்காலத்திய வைத்தியர்களாலும் ஆதரிக்கப்பட்டுவருகிற ஆதபசிகித்ஸை குறிப்பிடப்பட்டதென்க.

5. காற்றில் வஸிப்பது என்பதால், எப்பொழுதும் வீட்டுக்குள்ளேயே அடைந்திராமல், வீட்டுக்கு வெளியில் இருந்துகொண்டு வருவதால் தானகவே சில வியாதிகள் நிவாரணமாகும்.

6. பால்முதலிய ப்ருஹ்மண பதார்த்தங்களில் சில விரேசநாதி குணமுள்ளனவாயிருப்பதால், அப்பொழுது அவ்வித ப்ருஹ்மணமும் இலங்கந சிகித்ஸையைப் போன்றதாய் விடுமென்பதைக் கருதி, அவ்வஸ்துக்கள், தேஹத்திற்கு வாட்டந்தரக்கூடிய வாதம், வாத-பித்தங்கள் இவற்றைப் போக்கி, தேஹத்தைப் போஷிப்பிக்கும் என்பதைக் குறிப்பிடுவதற்காக இங்ஙனம் கூறப்பட்டதென்றறிக. ["ப்ருஹ்மணம் சமநந்த்வேவ வாயோ: பித்தாநிலஸ்ய ச" என்பதற்கு அடியில் வருமாறு பொருள்கூறுவது பொருந்தும். வாயுவையும், பித்த-வாதங்களையும் சமநம் செய்யக்கூடிய சிகித்ஸையாதொன்றுண்டோ அதுவே **ப்ருஹ்மணம்** என்று கூறப்படும்], ஸாதாரணமாய் வியாக்யாநப்படி மேலே மொழி பெயர்க்கப்பட்டது.

வராகின்றனர்; மேலும் கிரீஷ்மருதுவில் மேற்கூறியவர்களைத் தவிர மற்றவர்களுக்கும் இச்சிகித்ஸையைச் செய்யலாம்.—7, 8½.

ப்ருஹ்மண சிகித்ஸைக்கான வஸ்துக்களும் கார்யங்களும்:—மாம்ஸம், பால், சர்க்கரை, நெய் இவற்றுனும், மதுரரஸமும் ஸ்நிக்த்த குணமுமுள்ள பதார்த்தங்களால் செய்யப்படும் வஸ்திகர்மங்களாலும், நித்திரை, ஸாதாரணமாய் சயனித்திருத்தல், ஸுகமாக வாழ்தல், அப்யங்க ஸ்நானம் செய்தல், ஸாதாரணஸ்நானம், கவலையற்றிருத்தல், மனக்களிப் புறுவதற்கான கார்யம் இவைகளாலும் ப்ருஹ்மண சிகித்ஸையை நிறைவேற்றலாம்.—9½.

இலங்கந சிகித்ஸைக்கு உரியவர்:—மேஹரோகம், ஆமதோஷம், மிதமிஞ்சிய ஸ்நேஹம், ஜ்வரம், ஊருஸ்தம்பம், குஷ்டம், விஸர்ப்பம், வித்ரதி, ப்லீஹரோகம், சிரோரோகம், கண்டரோகம், நேத்திரரோகம் இவற்றால் பீடிக்கப்படுபவரும் மிகவும் ஸ்த்தூலித்திருப்பவரும் இலங்கந சிகித்ஸைக்கு உரியவராகின்றனர். மேலும் குளிர்காலங்களில் மேற்கூறியவர்களைத் தவிர மற்றவர்களுக்கும் இலங்கநசிகித்ஸையைச் செய்யலாம்.—10, 11.

பலவித இலங்கநசிகித்ஸைகளைச் செய்யு முறை:—விசேஷமான உடலின் பருமன், தேஹபலம், பித்தம், கபம், ஆமதோஷம், ஜ்வரம், வாந்தி, அதிஸாரம், இருதயத்தைப் பற்றிய வியாதிகள், மலபந்தம், குருகுணம், ஏப்பம், ஹ்ருல்லாஸம் என்னும் முறை கேடான இருதயத்துடிப்பு முதலிய வியாதிகளில் எவற்றாலேனும் ஒன்றால் அதிகமாய் வருந்துபவருக்கு சோதந சிகித்ஸைகளைச் செய்ய வேண்டும். உடற்பருமன் முதலிய விகாரங்கள் மத்திம நிலைமையில் இருந்தால் பெரும்பாலும் முதலில் தீபந-பாசந க்ரியைகளால் அப்பிணியாளிகளுக்குச் சிகித்ஸை செய்யலாம். தேஹம் ஸ்த்தூலித்திருத்தல் முதலான வியாதிகள் விசேஷ பலமில்லாதனவாயிருந்தால் அப்பிணியாளரைப் பசி-தாஹங்களை அடக்கச் செய்து ஸ்வஸ்த்தம் செய்யலாம். மத்திமபலமுள்ள வாதாதி தோஷங்களால் வருந்தும் பிணியாளிகள், இயற்கையில் தேஹபலமுள்ளவராயிருந்தால். அவர்களை வீட்டுக்கு வெளிப் புறத்திலிருக்கச் செய்து வாயுவாலும், வெயிலாலும், தேஹவுழைப்பைச் செய்விப்பதாலும் ஸ்வஸ்த்தம் பண்ண வேண்டும்; இயற்கையில் சரீரவன்மையுள்ளவர் அவ்வளவாய் பலம் பெறாத அதே தோஷங்களால் சிறிது வருந்த நேரிட்டால், அவர்களுக்கு வாயுவினாலும், வெயிலாலும், வியாயாமத்தினாலும் இலங்கநசிகித்ஸையைச் செய்யலாமென்பதைக் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை யல்லவா? 12—14½.

இலங்கநத்திற் குரியவருக்கு ப்ருஹ்மணமும், ப்ருஹ்மணத்திற் குரியவருக்கு இலங்கநமும் மாற்றிச் செய்வது:—இலங்கந சிகித்ஸைக்கு உரியவர்களான பிணியாளிகளுக்கு ப்ருஹ்மணசிகித்ஸை

செய்யக்கூடாது; ப்ருஹ்மண சிகித்ஸைக்கு உரியவர்களுக்கோ மிருதுவாக இலங்கந சிகித்ஸையையும் செய்யலாம்; அல்லது ஸந்தர்ப்பண-அபதர்ப்பண சிகித்ஸைகளை முறைப்படியே கலந்தும் பிரயோகிக்கலாம். ஆனால் அவ்வாறு செய்யும்போது தேசம், காலம் முதலியவற்றின் பலாபலங்களைக் கவனித்து அப்பிணியாளிகளை உபசரிக்க வேண்டும்.—15½.

ப்ருஹ்மணம் நிறைவேறியதன் குறிகள்:—ப்ருஹ்மணம் முறைப்படி நன்கு நிறைவேற்றப்படுமானால் தேஹத்தில் பலமும், புஷ்டியும், அச்சிகித்ஸையினால் பரிஹரிக்கக் கூடிய வியாதிக்கு நிவாரணமும் உண்டாகும்.—16,

இலங்கநம் நிறைவேறியதன் குறிகள்:—இலங்கநசிகித்ஸை நன்றாக நிறைவேறியதற்கு அறிகுறிகளாவன:—இந்த்ரியங்கள் யாவும் தெளிவுற்றிருக்கும்; மலங்கள் தாராளமாய் வெளியாகும்; தேஹம் இலகுவாயிருப்பதாகத் தோற்றும்; நாக்கின் அரோசகம் நீங்கும்; பசியும் தாஹமும் ஒரு மிக்க உண்டாகும்; ஏப்பம் தணியும்; இருதயமும் தொண்டையும் சுத்தமாகும்; எந்த வியாதிக்காக இலங்கநம் செய்யப்பட்டதோ அவ்வியாதி தணிவடையும்; உத்ஸாஹம் மேலிடும்; சோம்பலும் ஒழியும்.—17, 17½.

அதிப்ருஹ்மண - லங்கநங்களாலுண்டாகும் தீமைகள்:—ப்ருஹ்மண-லங்கநசிகித்ஸைகளை அளவு மீறி உபயோகித்தால் முறையே அதிஸ்த்தூலத்தன்மை முதலியவைகளையும், அதிக மெலிவு முதலிய விகாரங்களையும் அவை உண்டுபண்ணும்; அவற்றின் விவரமும், அவற்றிற்கான சிகித்ஸைகளும் இதன்கீழ் ஸங்கிரஹமாகக் கூறப்படுகின்றன. ப்ருஹ்மண சிகித்ஸையும் இலங்கந சிகித்ஸையும் மிதமிஞ்சிப் பிரயோகிக்கப்படுமாயின், அவற்றால் ஏற்படும் அதிஸ்த்தூலத்தன்மை முதலியவற்றாலும், அதிக இளைப்பு முதலியவற்றாலும் அததற்குள்ள இலக்ஷணங்கள் அறியக் கூடியனவாம்.—18, 19.

அதிப்ரும்ஹணத்தினலான அவக்குறிகள்:—தேஹம் மிகவும் ஸ்த்தூலித்தல், அபசீ, மேஹம், ஜ்வரம், உதரரோகங்கள், பகந்தரம் என்னும் பிளவை, காஸம், ஸந்நியாஸம் என்னும் மூர்ச்சை, மூத்திரக்ருச்சிரம் என்னும் நீர்ச்சுருக்கு, குஷ்டம் இவை முதலிய வியாதிகளை மிதமிஞ்சிப ப்ருஹ்மண சிகித்ஸை கடுமையாயுண்டாக்கும்.—20.

அதிப்ருஹ்மணத்தினலான கோளாறுகளுக்கு சிகித்ஸை:—அவ்வாறு ஸம்பவிக்கும் மிகவும் ஸ்த்தூலித்துப்போதல் முதலிய விகாரங்களில் கொழுப்பு, வாயு, கபம் இவற்றைப் பரிஹரிப்பதற்கேற்ற அன்ன-பான-ஔஷதம் எல்லாம் பிரயோகிக்கத் தகுந்தவையென்று அறிக. அவையாவன:—கொள், ஜூர்ணம் என்னும்

தானியம்,[1] சாமை, யவதானியம்,[2] பயறு, தேன் கலந்த ஜலம், தயிர், மோர் மேலுள்ள தெளிவு நீர், இவற்றை உபயோகிக்கலாம்; மனக்கவலை, சோதநசிகித்஼ஸை, இரவிற் கண்விழித்தல் இவையும் அநுகூலம் செய்யும்; த்ரிபலாசூர்ணம்,[3] சீந்தில், கடுக்காய், கோரைக்கிழங்கு இவற்றில் எதையாவது தேனிற் கூட்டி உட்கொள்ளலாம்; இரஸாஞ்ஜநம்,[4] மஹாபஞ்சமூலம்,[5] மஹிஷாக்ஷிக்குக்குலு, சிலாஜது இவற்றில் எதேனும் ஒன்றை அகிற்கட்டையின் க்வாதத்துடன் கலந்து பிரயோகிப்பதும் ஹிதமானது. 21—23.

அதிஸ்த்தூலத்திற்கு விடங்காதி யோகம் :—வாயுவிடங்கம், சுக்கு, யவக்ஷாரம், உருக்கிரும்பின் பஸ்மம், தேன், யவதானியம், நெல்லிக்கனி இவற்றின் சூர்ணம், ஆக இவ்வளைத்தையும் ஒருமிக்கக் கூட்ட அது விடங்காதியோகம் எனப்படுகிறது. இதை உட்கொண்டு வருவதால் அதிஸ்த்தூலத்தன்மை நீங்கும்.—24.

அதிஸத்தூலாதிகளுக்கு வியோஷாதி யோகம் :—த்ரிகடு,[6] மணத்தக்காளி, த்ரிபலை,[7] முருங்கை, வாயுவிடங்கம், அதிவிடயம், கோரைக்கிழங்கு, பெருங்காயம், வளையலுப்பு, ஜீரகம், குராசாணியோமம், கொத்தமல்லிவிதை, சித்திரமூலம், மஞ்சள், மரமஞ்சள், கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, கொட்டைக்கரந்தை, வட்டத்திருப்பி, கமுகு இவற்றைச் சமயெடை யெடுத்து நுண்மையாகச் சூர்ணம் செய்து, இவ்வளைத்துக்கும் ஸம அளவில் தேனையும், நெய்யையும், எண்ணெயையும் சேர்த்து, அச்சூர்ணத்திற்கு மொத்தத்தில் பதினாறு பங்கு வாற்கோதுமை மாவையும் கலந்து ஒருமிக்கக் கூட்டி உட்கொள்ளவேண்டும். இவ்வௌஷதம் அதிஸ்த்தூலத்தன்மை முதலிய முற்கூறிய ரோகங்களை யெல்லாம் நிவ்ருத்திசெய்வதுடன், அவைபோன்ற வேறு ரோகங்களையும், அதாவது இருதயத்தைப் பற்றிய வியாதிகள், காமாலை, வெண்குஷ்டம், ச்வாஸம், காஸம், தொண்டைக்கட்டு இவைகளையும் போக்கும்; புத்தியையும், மேதை யென்னும் விசேஷமான அறிவையும், ஞாபகசக்தியையும் தூண்டக்கூடியது; மந்தப்பட்டுள்ள ஜாடராக்னியையும் தீபநம் செய்யும். 25—28

1. ஜீர்ணம் என்பதை சேபளம் என்பார் சிலர்.

2. யவதானியம்—இதை வாற்கோதுமை யென்று இக்காலத்தில் வழங்குவர்.

3. த்ரிபலாசூர்ணம்—கடுக்காய் ஒரு பங்கு, தான்றிக்காய் இரண்டு பங்கு, நெல்லிக்காய் நான்குபங்கு ஆக இவற்றைச் சேர்த்து செய்த சூர்ணம்.

4. இரஞ்ஜநம்—16-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

5. மஹாபஞ்சமூலம்—84-ம் பக்கம் பார்க்க.

6. த்ரிகடு—83-ம் பக்கம் பார்க்க. இதையே வியோஷம் என்றும் கூறுவர்.

7. த்ரிபலை—83-ம் பக்கம் பார்க்க.

அதிலங்கநத்தினலுண்டாகும் தீமைகள் :—மிதமிஞ்சி இலங்கந சிகித்ஸையைச் செய்வதால் உண்டாகும் தீமைகளாவன :—அதிக இளைப்பு, தலைச்சுற்றல், காஸம், அதிக நாவரட்சி, அரோசகம், ஸ்நிக்த்தத் தன்மைக்கும்-ஜாடராக்னிக்கும்-நித்திரைக்கும்-நேத்திரத்திற்கும்-செவிக்கும்-சுக்ரத்திற்கும்-ஓஜோதாதுவுக்கும்-பசிக்கும்-குரலுக்கும் க்ஷயமுண்டாவது, வஸ்தியென்னும் மூத்திரப்பையிலும் - இருதயத்திலும்-சிரஸ்ஸிலும்-காலினும்-தொடையிலும் - இடுப்பின் பின்புறத்திலும் வலியேற்படுவது, ஜ்வரம், பிதற்றல், பார்ச்வ வாயு, உடல்வாட்டம், வாந்தி, ஸந்தியெலும்புகளைப் பிளப்பது போன்ற உணர்ச்சி, மல-மூத்திரங்களின் பந்தநம் இவை முதலான விகாரங்களாம். 29—30½.

ஸ்த்தூலத்தன்மையினும் மெலிந்திருப்பதே மேல் :—அமிதமான ஸத்தூலத்தன்மையைக் காட்டிலும் ஒருவாறு மெலிந்திருப்பதே மேலாம்; ஏனெனில் அதிக ஸ்த்தூலமாயிருந்தால், அவனுக்கு ஔஷதமே அரிது; ஆம்: ஸ்தூலித்தவனுக்கு ப்ருஹ்மணம் செய்தால் அச்சிகித்ஸையினல் கொழுப்பு அதிகரிக்குமே யன்றி குறையாது; ஜாடராக்னியும் வாததொஷமும் க்ஷீணிக்கும்; இலங்கந சிகித்ஸையே கொழுப்பைக் குறைக்கும்; ஆனல் ஜாடராக்னியையும் வாததோஷத்தையும் தகுந்தவாறு குறைக்கமாட்டாது. மேலும் கார்ச்யம் என்னும் இளைப்பானது மதுரமாகவும், ஸ்நிக்த்தமாகவும் உள்ள பதார்த்தங்களாலும், ஸுகாநுபவங்களாலும் மிகவும் எளிதாக நிவ்ருத்தியாகும்; ஸ்த்தூலத்தன்மையோ அவற்றிற்கு நேர் எதிரிடையான பதார்த்தங்களாலும் கார்யங்களாலுமே பரிஹரிக்கக் கூடியதா யிருக்கிறது. 31—32½.

அதிலங்கநத்தினலான கோளாறுகளுக்கு சிகித்ஸை :—அவ்வாறு இலங்கந சிகிச்ஸையினல் மெலிந்துபோனவருக்கு ப்ருஹ்மண குணமுள்ள பானங்களென்ன, ஆஹாரங்களென்ன, ஔஷதங்களென்ன இவ்வனைத்தையும் முறைப்படி உபயோகிக்கவேண்டும். இளைத்திருப்பவன் சிந்தையற்றிருப்பதாலும், ஸந்தோஷத்தினலும் தர்ப்பணமென்னும் போஷண சிகித்ஸையினலும், வேண்டிய வளவு நித்திரையுறுவதாலும் வராஹம்போல் விரைவில் புஷ்டியடைவான்.—33, 34.

மெலிந்தவருக்கு மாம்ஸமே புஷ்டி தரும் :—மாம்ஸத்தைப் போல் தேஹத்திற்குப் புஷ்டியைத் தரக் கூடியது வேறொன்றுமில்லை; இறைச்சியைத் தின்றுப் பிழைக்கும் பிராணிகளுடைய தேஹம் இறைச்சியினலேயே செழிக்குமாகையால், அப்பிராணிகளுடைய மாம்ஸம் இளைத்தவருக்கு விசேஷமாய் புஷ்டியுண்டாக்கக்கூடியதாம்.—35.

ஸ்த்தூலித்தவருக்கும் மெலிந்தவருக்கும் ஹிதமான சிகித்ஸை :—(1) ஸ்த்தூலித்திருப்பவனுக்கு எது குருவாகவும், அபதார்ப்பண

மாகவும்[1] இருக்குமோ அதுவே ஹிதமான சிகித்ஸையாம். மெலிந்திருப்பவனுக்கோ அவற்றிற்கு நேர் எதிரிடையான குணமுள்ள சிகித்ஸையே அனுகூலமானதாம்.[2] (2) ஸ்தூலதேஹிகளுக்கு யவதான்னியமும், மெலிந்திருப்பவருக்கு கோதூமதான்யமும், அவரவருடைய ப்ரக்ருதிக்கு ஏற்றவாறு பக்குவம்செய்து உணவுகளாக உபயோகிக்கப்படவேண்டும்.—36.

வியாதிகளும், சிகித்ஸைகளும் பொதுவில் இரண்டுவிதம்:— தோஷங்களுடைய பலவாறான போக்குகளை[3] அநுஸரித்து சிகித்ஸைகளும் கிராஹி[4] பேதி[5] யென்று பலவிதமான பேதங்களுள்ளவைகளாம்; ஆனால் அவை அவ்வாறு பலவித பேதங்களுள்ளவையென்றாலும், முக்கியமாய் வியாதிகளைப் போலவே[6] சிகித்ஸைகள் இரண்டுவிதமான பேதங்களினும் அதிகமாவதில்லை.—37.

---

## பதினைந்தாம் அத்தியாயம்.

### சோதநாதி கணங்கள்.

அப்பால் சோதநாதி கணஸங்கிரஹம்[7] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது:—

---

1. அபதர்ப்பணம்—இலங்கநம். [குருகுணமுள்ள பதார்த்தங்கள் அவ்வளவு சீக்கிரம் ஜீர்ணமாவதில்லை; அபதர்ப்பணத்தினால் கொழுப்பும் குறைந்துவரும்; இலங்கநத்தோடு அடுத்தாற்போல் இலகுவான ஆஹாரமும் உபயோகிக்கப்படுமானால் தேஹம் மிகவும் பலஹீனப்பட்டுவிடும் எனக் கருதி இவ்வாறு செய்ய வேண்டுமென்று விதியேற்பட்டது.]

2. முற்கூறியதற்கு எதிரிடையான குணங்கள்—இலகுவும் ஸந்தர்ப்பணமுமாயிருப்பவை. இலகுவான பதார்த்தம் எளிதில் ஜீர்ணமாகும்; தர்ப்பண சிகித்ஸை தேஹத்திற்கு விசேஷ ஊட்டந்தரும்.

3 வாத-பித்த-கபங்கள் தனித்தனியாகக் கோளாறடைவதாலும், ஸம்ஸர்க்க—ஸந்நிபாத ரூபமான சேர்க்கைகளால் ஏற்படும் கோளாறுகளாலும், அவற்றின் தாரதம்ய விகல்பநாரூபமான சேர்க்கைகளாலும் ஏற்படும் வெவ்வேறு விதமான போக்குகள் எண்ணிறந்தவை எனக் கருதப்படுகிறது.

4. கிராஹி—59-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

5. பேதி—இதை பேதநம் என்றும் கூறுவர்; 59-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

6. வியாதிகள் ஜ்வரம் என்றும், அதிஸாரம் என்றும், அர்சஸ் என்றும், க்ஷயம் என்றும் எண்ணிறந்தவைகளாயிருக்கின்றன; ஆனால் அவை யாவும் நிஜரோகங்கள், ஆகந்துக ரோகங்கள் என்று இருவகைப்படும். சிகித்ஸையிலும் ப்ருஹ்மண சிகித்ஸைக்கும் இலங்கந சிகித்ஸைக்கும் ஆக இவ்விரண்டுக்குத்தான் அவை உட்பட்டிருக்கின்றன. (நிஜரோகங்கள், ஆகந்துக ரோகங்கள் என்பவற்றைப்பற்றி 38-ம் பக்கத்திலும் 39-ம், பக்கத்திலும் டிப்பணியில் விவரம் காண்க.)

7. சரீரத்திற் சேரும் தோஷங்களை வெளிப்படுத்துங் குணமுடைய சரக்குகளின் கூறுகளையும், மற்ற ஔஷதச் சரக்குகளின் வகுப்புகளையும் தொகுத்துக் கூறும் அத்தியாயம் என்று பொருள்.

மதநாதி கணம்:—மறுக்காரை, அதிமதுரம், பேய்ச்சுரை, வேப்பு, கோவை, பேய்த்தும் மட்டி, வெள்ளரி, வெட்பாலை, பெருங் குரும்பை, தேவதாளீ, வாயுவிடங்கம், நீர்வஞ்சி, சித்திரமூலம், பேய்ப்புடல், பேய்ப்பீர்க்கு, புங்கை, திப்பிலி, உப்பு, வசம்பு, ஏலம், கடுகு இச்சரக்குகள் சர்தி என்னும் வாந்தியை உண்டு பண்ணக் கூடியவை.—1.

நிகும்பாதி கணம்:—நேபாளம், சிவதை, த்ரிபலை, தும்மட்டி, கள்ளி, சங்கங்குப்பி, அவிரி, வெள்ளிலோத்தி, கொன்றை, செறு கம்புல், பிரம்மதண்டு, பால், மூத்திரம் இச்சரக்குகள் விரேசந குணமுள்ளவையாம்.—2.

மதநாதி கணம் (இரண்டாவது):—மறுக்காரை, வெட்பாலை, கோஷ்டம், தேவதாளீ, அதிமதுரம், வசம்பு, தசமூலம்,[1] தேவ தாரு, சிற்றரத்தை, யவதானியம், ஜடாமாம்ஸி, நாயுருவி, கொள், தேன், உப்பு, சிவதைவேர் இவ்வஸ்துக்கள் நிரூஹவஸ்தியில் உப யோகிக்கக் கூடியவைகள்.—3.

வேல்லாதி கணம்:—வாயுவிடங்கம், நாயுருவி, த்ரிகடு, மரமஞ் சள், சிறந்த ஸர்ஜ விருக்ஷத்தின் பிசின், காட்டுவாகையின் விதை, கண்டங்கத்திரிவிதை, முருங்கவிதை, இலுப்பைப்பூவின் சாறு, இந்துப்பு, உயர்ந்த இரஸாஞ்ஜநம், ஏலம், சிற்றேலம், இங்குப்பத்திரி இச்சரக்குகள் சிரஸ்ஸைச் சுத்திசெய்யுங் குணமுடையவை. —4.

பத்ரதார்வாதிகணம்:—தேவதாரு, தகரம், கோஷ்டம், மூலம், சிற்றுமுட்டி, பேராமுட்டி இவையும், விதார்யாதி கணமும்,[2] வீரதராதி கணமும்[3] வாதஹரமான சரக்குகளாம்.—5.

தூர்வாதி கணம்:—அருகு, பெரும்புல், ஆடாதோடை, காஞ் சோறி, ஞாழல், தண்ணீர்விட்டான், சிற்றுமுட்டி, சாமை இவையும் ந்யக்ரோதாதி கணமும்,[4] பத்மகாதி கணமும்,[5] சிறுமல்லி, மேர் மல்லி, தாமரை, பெருங்கோரைக்கிழங்கு இவையும், சாரிபாதிகண மும்[6] பித்தஹரமான சரக்குகளாகும்.—6.

---

1. தசமூலம்—சிறுமல்லி, பெருமல்லி, கண்டங்கத்திரி, சிறுவழுதுணே, நெரிஞ்சி, பில்வம், தழுதாழை, பெருவாகை, குமிழன், பாதிரி.

2. விதார்யாதிகணம்—பிறகுவருகிற 9-வது 10-வது பத்தியங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

3. வீரதராதிகணம்—24, 25-வது பத்தியங்களின் மொழிபெயர்ப் பைப் பார்க்க.

4. ந்யக்ரோதாதி கணம்—41, 42-வது பத்தியங்களின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

5. பத்மகாதிகணம்—12-வது பத்தியத்தின் மொழிப்பொயர்க்கப் பார்க்க.

6. சாரிபாதிகணம்—11-வது பத்தியத்தின் மொழிபெயர்ப்பைப் பார்க்க.

ஏழு கணங்களின் கூட்டு:—ஆரக்வதாதிகணம், அர்க்காதி கணம், முஷ்ககாதிகணம், அஸநாதிகணம், ஸுரஸாதிகணம், முஸ்தாதிகணம், வத்ஸகாதிகணம் இவ்வேழுவிதமான வகுப்புகளிலும் கூறப்படும் ஔஷதச்சரக்குகள் கபஹரமான குணங்களுள்ளவையாம்.[1]—7.

ஜீவநீயகணம் :—ஜீவந்தி, காகோலீ, மேதா, மஹாமேதா, முத்கபர்ணீ, ருஷபகம், ஜீவகம், மதுகம் என்கிற இச்சரக்குகளின் கூட்டுக்கு, ஜீவநீயம் என்கிற குணம் உண்டு; ஆகவே இவற்றின் கூட்டுக்கு ஜீவநீயகணம் என்று பெயர்.[2]—8.

விதார்யாதி கணம் :—நிலப்பனங் கிழங்கு, ஆமணக்கு, ஆடு தீண்டாப்பாளை, சாறணை, தேவதாரு, முத்கபர்ணீ, மாஷபர்ணீ,[3] காஞ்சோறி, ஜீவந பஞ்சமூலம்,[4] இலகு பஞ்சமூலம்,[5] நன்னாரி, செருப்படை இவற்றின் கூட்டு "விதார்யாதி கணம்" எனப்படும். இதற்கு ஹ்ருத்யம், ப்ருஹ்மணம், வாதஹரம், பித்தஹரம் என்னும் குணங்களும், க்ஷயம், குன்மம், உடலிலுண்டாகும் ஒருவிதமான வலி, ஊர்த்வச்வாஸம், காஸம் இவற்றைப் போக்குந்தன்மையும் உண்டு.—9, 10.

சாரிபாதி கணம் :—நன்னாரி, நெல்லி, குமிழன், இலுப்பை, வெண்சந்தநம், செஞ்சந்தநம், அதிமதுரம், பேரீச்சு இவை அழற்சி, பித்தம், இரக்த பித்தம், நாவரட்சி, ஜ்வரம், இவற்றைத் தணிக்கும்.—11.

பத்மகாதி கணம் :—பத்மகமரச் சக்கை[6], தாமரைக் கிழங்கு, ருத்தி, மூங்கிலுப்பு, வ்ருத்தி, கர்க்கடகச்ருங்கி, சீந்தில், ஜீவநீய கணத்தைச் சேர்ந்த பத்துவித சரக்குகள் ஆக இவை முலைப்பாலை விருத்தி செய்யும்; வாதம், பித்தம் இவ்விரண்டின் கோளாறு

---

1. இதிற் குறிப்பிட்டுள்ள கணங்களை அடுத்தாற்போல் விபரமவை காணலாம்.

2. ஜீவநீயகண பதார்த்தங்களுக்குத் தேசபாஷைகளில் பெயர் கிடைப்பதில்லை.

3. முத்கபர்ணீ, மாஷபர்ணீ என்பவை ஜீவநீய கணத்தைச் சேர்ந்தவை.

4. ஜீவநபஞ்சமூலம் :—அபீரு, வீரா, ஜீவந்தீ, ஜீவகம், ருஷபகம் இவ்வைந்துக்கும் பொதுப் பெயர். [இவற்றிற்கும் ஜீவநீயகணத்தைப் போலவே பெயர் கிடைப்பதில்லை.]

5. இலகுபஞ்சமூலம் — கண்டங்கத்திரி, மல்லிகை, சிறுவழுதுணை தழுதாழை, நெரிஞ்சி என்பவற்றின் கூட்டு.

6. பத்மகச்சக்கை—பத்மகம் அல்லது பத்ம காஷ்டம்.

களையும் அகற்றும்; ப்ரீணநம்,[1] ஜீவநம்,[2] ப்ருஹ்மணம், விருஷ்யம்[3] என்கிற குணங்களையும் உடையது.—12.

பருஷகாதி கணம்:—பேரீச்சு, த்ரிபலை, திராக்ஷை, தேக்கு, தேற்றங்கொட்டை, கொன்றை, மாதளை, முருங்கை இவை நாவரட்சி, மூத்திரரோகம், வாதரோகம் இவ்வியாதிகளைப் போக்கும்.—13.

அஞ்ஜநாதி கணம்:—ஸௌவீராஞ்ஜநம்,[4] நாழல், ஜடாமாம்ஸி, தாமரை, நைதல், இரஸாஞ்ஜநம், ஏலம், அதிமதுரம், நாககேஸரம் இவை விஷத்தையும், உள் அழற்சியையும், பித்தத்தையும் போக்கும்.—14.

படோலாதி கணம்:—பேய்ப்புடல், கடுகரோஹிணீ, வெண்சந்தநம், சிறுபாலை, சீந்தில், வட்டத்திருப்பி இவற்றின் சேர்க்கையாலாகிய வகுப்பானது கபவிகாரம், பித்தவிகாரம், குஷ்டம், ஜ்வரம், விஷம், வாந்தி, அரோசகம், காமாலை இவற்றைப் பரிஹரிக்கும்.—15.

குடூச்யாதிகணம்:—சீந்தில், அல்லிக்கிழங்கு, வேம்பு, கொத்துமல்லி, செஞ்சந்தனம் இவை பித்தம், கபம் இவற்றாலுண்டாகும் கோளாறுகளையும், ஜ்வரம், வாந்தி, அழற்சி, நாவரட்சி இவற்றையும் போக்கும்; ஜாடராக்னியையும் விருத்தி செய்யும்.—16.

ஆரக்வதாதி கணம்:—கொன்றை, வெட்பாலரிசி, பாதிரி, நாயர்வேளை, வேம்பு, சீந்தில், பெருங்குரும்பை, கருமுருக்கை, வட்டத்திருப்பி, நிலவேம்பு, மருதோன்றி, பேய்ப்புடல், புங்கு, மணிப்புங்கு, ஏழிலம்பாலை, சித்திரமூலம், பாகல், கறுங்குறிஞ்சி, கமுகு இவற்றின் கூட்டுக்கு "ஆரக்வதாதிகணம்" என்று பெயர். இவ்வகுப்பிலுள்ள சரக்குகளை உபயோகிப்பதால் வாந்தி, குஷ்டம், விஷம், ஜ்வரம், கபத்தின் கோளாறு, சொரி-சிரங்கு, பிரமேஹம் இவை நிவ்ருத்தியாகும்; இவை கெட்டுப்போன விரணங்களையும் சுத்தி செய்யும்.—17, 18.

---

1. ப்ரீணநம்—த்ருப்தி யுண்டாக்குங்குணம்.

2. ஜீவநம்—ஆயுளை விருத்திசெய்யுந் தன்மை.

3. விருஷ்யம்—37-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க; 3-வது பக்கத்தில் வாஜீகரண சிகித்ஸை யென்பதையும் பார்க்க,

4. "அஞ்ஜநம் பலிநீ மாம்ஸீ ... ..." என்கிற விடத்தில் 'அஞ்ஜநம்' என்பதால் ஸௌவீராஞ்ஜநம், ஸ்ரோதோஞ்ஜநம் இரண்டும் குறிக்கப்படுவதாய் ஸர்வாங்கஸுந்தரீ வியாக்யாநம். அப்படியானால் அஞ்ஜநசப்தத்தை ஏகவசநத்தில் கூறாமல் "அஞ்ஜநே" என்று த்விவசநத்திலாவது கிரந்தகர்த்தா எழுதியிருக்கலாம். அப்படியெழுதாதவரையில் முக்கியமான ஒரு ஸௌவீராஞ்ஜநமே குறிக்கப்படுகிறதென்று அறியவேண்டும்.

அஸநாதி கணம் :—வேங்கை, தினிசை, பூர்ஜம், மருதமரம், புங்கை, கருங்காலி, வெண் கருங்காலி, காட்டுவாகை, சிம்சபா, ஆடு தீண்டாப்பாளை, வெண் சந்தனம், செஞ்சந்தனம், மரமஞ்சள், பனை, முருக்கை, அகில், முருங்கை, ஆச்சாமரம், கமுகு, படுகரணை, வெட்பாலரிசி, யக்ஷதூபம் என்னும் ஒருவித பிசின், மராமரம் இச்சரக்குகளின் வகுப்புக்கு "அஸநாதிகணம்" என்று பெயர். இக்கணம் வெண்குஷ்டம், குஷ்டம், கபதோஷம், கிருமிரோகம், பாண்டுரோகம், பிரமேஹம், கொழுப்பு அதிகரிப்பதாலுண்டாகும் வியாதி இவற்றை நிவ்ருத்தி செய்யும்.—19, 20.

வரணாதி கணம் :—மாவலிங்கை, செங்குறிஞ்சி, கருங்குறிஞ்சி, தண்ணீர் விட்டான், சித்திர மூலம், பெருங்குரும்பை, பில்வம், ஆடு தீண்டாப்பாளை, கத்திரி, கண்டங்கத்திரி, புங்கை, மணிப்புங்கை, பெருங்கடுக்காய், பிஞ்சுக்கடுக்காய், முருங்கை, தர்ப்பம், கோஷ்டம் இவ்வகுப்பு "வரணாதி கணம்" எனப்படும். இவ்வகுப்பிற் குறிப்பிடப்பட்டுள்ள பதார்த்தங்களால் கபத்தின் கோளாறு, மேதோ ரோகம், அக்னிமாந்த்யம், அபானவாயு, தலைவலி, குன்மம், அந்தர் வித்ரதி இவை நீங்கும்.—21, 22.

ஊஷகாதி கணம் :—முள்ளங்கி, மயில்துத்தம், பெருங்காயம், பாம்ஸுகாஸீஸம்[1], புஷ்ப காஸீஸம்[2], இந்துப்பு, சிலாஜது இச்சரக்குகள் மூத்திரக்ருச்சிரம் என்கிற நீர்ச்சுருக்கையும், மூத்திர மார்க்கத்திலுண்டாகும் கல்லடைப்பையும், குன்மத்தையும், மேதோரோகத்தையும், கபவிகாரங்களையும் அகற்றும்.—23.

வீரதராதி கணம் :—வெட்டிவேர், அகில், ஈச்வரமல்லி, ஆடாதோடை, கல்லுருவி, நெரிஞ்சி, இத்கடம்[3] என்னும் பூண்டு, மருதோன்றி, கருங்குறிஞ்சி, ஞாழல், சீந்தில், நெட்டுக்கோரை, தர்ப்பம், பெரும்புல், காவட்டம்புல், மூங்கில், பெருவாகை, பெருங்குரும்பை, செங்குறிஞ்சி, உத்தாமணி, மருதை இவ்வகுப்புக்கு "வீரதராதி கணம்" எனப் பெயர். இப்பதார்த்தங்கள் வாதத்தினால் உண்டாகும் ரோகங்களையும், மூத்திரமார்க்கத்திற் கல்லடைப்பதையும், சர்க்கரை யென்னும் மணல்களைப் போன்ற கல்லுகளை யுண்டுபண்ணும் மூத்திரவியாதியையும், நீர்ச்சுருக்கையும், மூத்திரங்கட்டிப் போவதையும் போக்குங் குணமுடையன.—24, 25.

ரோத்ராதி கணம் :—வெள்ளிலோத்தி, உதியன், முருக்கன், கறுத்த இலவன், தேவதாரு, தேக்கு, கடம்பு, வாழை, அசோகு,

1. பாம்ஸுகாஸீஸம்—சிறிது கரும்பசுமை நிறமான அன்னபேதி; மணல்களைப் போன்று அல்லது பஸ்மம் போன்றிருக்கும். இதுவே வாலுகா காஸீஸம் என்றும் வழங்கப்படும்.

2. புஷ்பகாஸீஸம்—சிறிது வெண்மையான அன்னபேதி.

3. இத்கடா அல்லது இத்கடம்—ஒருவாறு பழுத்துப் பசுமையாகவும் நீண்டுமிருக்கிற இலைகளையும், சிவந்த தண்டுகளை யுமுடைய ஒருவித செடி.

சிற்றேலம், பெருங்கோரைக்கிழங்கு, இலவன் இவ்வகுப்பு "ரோத்ராதிகணம்" என்று வழங்கப்படுகிறது. இச்சரக்குகள் மேஹரோகம், கபரோகங்கள், யோநிதோஷங்கள், விஷவிகாரம் இவற்றைப் போக்கும்; ஸ்தம்பநம்[1], வர்ண்யம்[2] என்னும் குணங்களையும் உடையன.—26, 27.

அர்க்காதி கணம்:—எருக்கு, அலரி, விஷமூங்கில், நீர்த்திப்பிலி, கண்டுபாரங்கி, சிற்றரத்தை, தேள்கொடுக்கு மரம், புங்கு, நாயுருவி, பிரம்மதண்டு, மணிப்புங்கு, சிவதை, கறுஞ்சிவதை, இங்குணமரம்[3], இவற்றின் கூட்டுக்கு "அர்க்காதிகணம்" எனப் பெயர்; இச்சரக்குகள் கபரோகங்கள், விஷவிகாரங்கள், கிருமி, குஷ்டம் இவற்றைப் போக்கும்; முக்கியமாக விரணங்களைச் சுத்தி செய்யுங் குணமுடையவை.—28, 29.

ஸூரஸாதி கணம்:—துளஸி, கருந்துளஸி, கிடாரை, டடுகரணை, வாய் விடங்கம், மறுக்காரை, மருவகம், எலிச்செவி, தேக்கு, பொன்னுவிதை, மறுக்காரை, தும்புருப்பத்திரி, கண்டுபாரங்கி, புங்கு, மணத்தக்காளி, ஒருவிதசுரை, எட்டி, புல், ஜடாமாம்ஸி இவற்றின் கூட்டு "ஸூரஸாதி கணம்" என்று கூறப்படும். இவை கபரோகங்கள், மேஹரோகம், கிருமி, ப்ரதிச்யாயம், அரோசகம், ச்வாஸம், காஸம் இவற்றைப் போக்கும்; விரணங்களைச் சுத்தி செய்யவும் உதவும்.—30, 31.

முஷ்ககாதி கணம்:—காட்டுப்பருத்தி, கள்ளி, த்ரிபலை, புலியுகிர் என்னும் பூண்டு, முருக்கன், கருங்காலி, சிம்சபா இவை குன்மம், மேஹம், மூத்திரமார்க்கத்தில் கல்லடைப்பு, பாண்டு, மேதோரோகம், அர்சஸ், கபரோகங்கள், சுக்லதோஷம் இவற்றைப் பரிஹரிக்கும்.—32.

வத்ஸகாதி கணம்:—வெட்பாலை, பெருங்குரும்பை, கண்டுபாரங்கி, கடுகரோஹிணீ, மிளகு, அதிவிடயம், கள்ளி, ஏலம், வட்டத்திருப்பி, ஜீரகம், பெருவாகை, ஓமம், வெண்கடுகு, வசம்பு, கருஞ்ஜீரகம், பெருங்காயம், வாயுவிடங்கம், ஆடுதீண்டாப்பாளை, பஞ்சகோலம்[4] இவற்றின் சேர்க்கை "வத்ஸகாதிகணம்" என்று கூறப்படும்; இவை வாதரோகங்கள், கபரோகங்கள், மேதோரோகம், பீநஸம், குன்மம், ஜ்வரங்கள், சூலம், மூலம் என்னும் இவ்வியாதிகளைப் போக்கும்.—33, 34.

வசாதி கணமும், ஹரித்ராதி கணமும்:—(1) வசம்பு, கோரைக்கிழங்கு, தேவதாரு, சுக்கு, அதிவிடயம், கடுக்காய் இவ்வகுப்புக்கு

1. ஸ்தம்பநம்—வாதத்தை விருத்தி செய்யுங்குணம்.
2. வர்ண்யம்—தேஹ நிறத்தைச் சிறப்பிக்குந் தன்மை.
3. இங்குதீ—இதைச் சிலர் வாதுமை யென்பார்கள்.
4. பஞ்சகோலம்—திப்பிலி, மோடி, சவ்யம், சித்திரமூலம், சுக்கு இவற்றின் கூட்டுக்குப் பெயர்.

"வசாதி கணம்" எனப் பெயர். (2) மஞ்சள், மரமஞ்சள், அதிமதுரம், பெருமல்லிகை, வெட்பாலரிசி இவற்றின் கூட்டுக்கு "ஹரித்ராதிகணம்" என்று பெயர். இவ்விரண்டு கணங்களுக்கும் ஆமாதி ஸாரத்தைப் போக்குங் குணமுண்டு; மேதோரோகம், கபரோகங்கள், ஊருஸ்தம்பம், முலைப்பால் ஸம்பந்தமான தோஷங்கள் இவற்றையும் பரிஹரிக்கும்.—35, 36.

ப்ரியங்க்வாதி கணமும் அம்பஷ்டாதி கணமும்:—(1) திணை, புஷ்பாஞ்ஜநம், ஸௌவீராஞ்ஜநம், ஓரிலைத்தாமரை, தாமரையின் தாது, மஞ்ஜிஷ்டி, அருகம் புல், இலவமரம், இலவம் பிசின், வரள்ச்சுண்டி, சுரப்புன்னை, சந்தனம், காட்டாத்தி இவ்வகுப்புக்கு "ப்ரியங்க்வாதிகணம்" எனப்பெயர். (2) புளியாரை, அதிமதுரம், மஞ்ஜிஷ்டி, நந்தியாவர்த்தம், முருக்கை, காஞ்சொறி, வெள்ளிலோத்தி, காட்டாத்தி, பில்வப் பழத்தின் உட்சதை, பெருவாகை, தாமரைத் தாது இவற்றின் கூட்டுக்கு "அம்பஷ்டாதிகணம்" என்று பெயர். இவ்விரண்டு கணங்களில் அடங்கிய சரக்குகளும், ஆமநிலைமையிலிருந்து பக்குவ நிலைமையடைந்த அதிஸாரத்தைப் போக்கும்; மலத்தைக் கட்டும்; பித்தத்தில் ஹிதமாயிருக்கும்; விரணங்களையும் சுத்திசெய்யும். 37—39.

முஸ்தாதி கணம்.—கோரைக்கிழங்கு, வசம்பு, சித்திரமூலம், மஞ்சள், மரமஞ்சள், கடுகரோஹிணீ, நிலவேம்பு, சேங்கொட்டை, வட்டத்திருப்பி, த்ரிபலை, வெண்ணொச்சி, கோஷ்டம், வெண்ணொச்சி, வெள்வசம்பு இவ்வகுப்பிலுள்ள வஸ்துக்கள் யோநிரோகங்களையும் முலைப்பாலைப்பற்றிய தோஷங்களையும் பரிஹரிக்கும்; அபக்குவமான தோஷங்களையும் பக்குவமான நிலைமைக்குக் கொண்டு வரும்.—40.

நியக்ரோதாதி கணம்:—ஆல், அரசு, அத்தி, வெள்ளிலோத்தி, உதியன், சிறுநாவல், பெருநாவல், மருதை, நீர்மஞ்சி, வெண்கருங்காலி, பூவரசு, மா, புளிவஞ்சி, முறளஞ்செடி, முருக்கன், நந்தியாவர்த்தம், இலந்தை, கடம்பு, தும்பை, அதிமதுரம், இலுப்பை இவற்றின் கூட்டுக்கு "நியக்ரோதாதி கணம்" என்று பெயர். இவற்றிற்கு விரண்யம்,[1] க்ராஹீ,[2] பக்நஸந்தாநக்ருத்,[3] மேதோஹரம், பித்தஹரம், இரக்தபித்தஹரம், த்ருஷ்ணாஹரம் என்னும் குணங்களும், தேஹ அழற்சியையும், யோனி ரோகங்களையும் போக்குந் தன்மையும் உண்டு.—41, 42.

ஏலாதிகணம்:—ஏலம், சிற்றேலம், மட்டிப்பால், கோஷ்டம், வாஸனைப்புல், ஜடாமாம்ஸீ, வெட்டிவேர், காவட்டம்புல், நாகப்பூ,

---

1. விரண்யம்—ரணங்களை ஆற்றக்கூடியது.
2. க்ராஹீ—45-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
3. பக்நஸந்தாநம்—ஒடிந்து போன எலும்பு முதலியதை மீண்டும் ஒருமிக்கச் சேர்க்குங் குணம்.

கச்சோரம், இலவங்கப்பட்டை, இலவங்கப் பத்திரி, கிரந்திதகரம் சாமந்தி, கறிய போளம், புலியுகிர் என்னும் வாஸனைத்திரவ்யம், தேவதாரு, அகில், ஸரளவிருக்ஷம், குங்குமப்பூ, கருங்கச்சோரம், குங்கிலியம், ஸர்ஜரஸம், குந்துருகம் என்னும் வாஸனை வஸ்து, சரக்கொன்றை, நாககேஸரம் இவற்றிற்கு "ஏலாதிகணம்" எனப் பெயர். இது வாதகபங்களின கோளாறுகளையும், வாதவிகாரத்தையும், விஷத்தையும் போக்கும்; தேஹநிறத்தைத் தெளிவுறச் செய்யும்; சொறி, சிறு கட்டிகள், கோடம் என்னும் தழும்பு இவற்றையும் பரிஹரிக்கும்.—43, 44.

ச்யாமாதிகணம்:— கருஞ்சிவதை, நேபாளம், எலிச்செவி, கழுகு, வெண்சிவதை, செங்கங்குப்பி, பொன்னுலமரம், பிரம்மதண்டு, பேய்த்தும்மட்டி, நாயுருவி, மஞ்சள், சீந்தில், புங்கை, ஆடுதீண்டாப்பாளை, பச்சிலை, கரும்பு, ஊவக்காய் இவற்றின் வகுப்புக்கு "ச்யாமாதி கணம்" என்றுபெயர்; இவ்வஸ்துக்கள் குன்மம், விஷம், அரோசகம், கரவிஷக்கோளாறு, இருதயத்தைப்பற்றிய ரோகங்கள், நீர்சுருக்கு இவற்றை நிவ்ருத்தி செய்யும்.—45.

ஒரு கணத்தில் கிடைக்காத வஸ்துவுக்குப் பதில் சேர்ப்பதும் பரிஹரிப்பதும் :—இங்ஙனம் முப்பத்துமூன்று விதமான ஔஷதச் சரக்குகளின் வகுப்புகள் கூறப்பட்டன; அவற்றுள் ஏதாவது ஒரு சரக்கு ஒரு வகுப்பில் கிடைக்காவிட்டால், அதற்கு ஏற்ற குணமுள்ள வேறொரு வஸ்துவைச் சேர்த்துக்கொள்ளலாம்; ஔஷத முறைக்கான வகுப்பில் ஏதேனும் ஒன்று அநுசிதமாகத் தோற்றினால் அதையும் பரிஹரித்து விடலாம்.—46.

ஔஷத கணங்களை உபயோகிக்கும் முறை:—இவ்வாறு மேற்கூறிய ஔஷதச் சரக்குகளின் வர்க்கங்களை தோஷங்களென்ன, தாதுக்களென்ன இவற்றின் நிலைமைகளுக்கு ஏற்றவண்ணம், கல்கம், க்வாதம், ஸ்நேஹம், லேஹ்யம் முதலியவற்றுள் எந்தமுறைப் படியாவது பக்குவம் செய்து பாநம் செய்யவும், நஸ்யமிடவும், அநுவாஸந வஸ்தியைச் செய்யவும், பூசிக்கொண்டு அப்யங்கம் முதலியவற்றால் உள்ளும் புறமும் வேறு வகையில் உபயோகித்துவந்தால் மிகவும் கஷ்டஸாத்தியமான வியாதிகளையும் இக்கணங்களில் கூறியுள்ள பதார்த்தங்கள் நிவாரணம் செய்யும்.—47.

---

## பதினாறும் அத்தியாயம்.
### ஸ்நேஹ விதி.

இதன் பிறகு ஸ்நேஹவிதி அத்தியாயம்[1] கூறப்படுகிறது:—

---

1. கிருதம் முதலிய நெய்ப்பசையுள்ள வஸ்துக்களை உள்ளும் புறமும் தேஹத்தில் உபயோகித்து உடலை ஸ்நிக்தமாகச் செய்வதற்கான முறைகளைக் கூறும் அத்தியாயம் என்பது பொருள். ஸ்நேஹம் என்பது-நெய், எண்ணெய், கொழுப்பு முதலியவற்றின் பொதுப் பெயர்.

**ஸ்நேஹந ரூக்ஷண செய்கைகள்:**—குரு, சீதம், ஸரம், ஸ்நிக்தம், மந்தம், ஸூக்ஷ்மம், மிருது, திரவம்[1] இத்தகைய குணமுள்ள ஔஷதம் பெரும்பாலும் ஸ்நேஹநம்[2] என்னும் வேலையைச் செய்யுந் தன்மையது. இக்குணங்களுக்கு நேர் எதிரிடையான குணங்கள்[3] ரூக்ஷணம்[4] என்னும் வேலையைச் செய்யுந் தன்மையதாகும்.—1.

**ஸ்நேஹபதார்த்தங்கள்:**—நெய், மஜ்ஜை, கொழுப்பு, தைலம் இவை ஸ்நேஹபதார்த்தங்களுள் சிறந்தவையென்று கருதப்படுகின்றன. அவற்றிலும் கிருதமே பலவிதமான முறைகளைக் கொண்டு பக்குவம் செய்த போதிலும் அப்பொழுதும் தனக்குள்ள குணங்களைப் பெற்றிருப்பது இயல்பாகையால்[5], அது உத்தம ஸ்நேஹமாகும்.—2.

**ஒவ்வொரு தோஷ பரிஹாரத்திலும் சிறந்த ஸ்நேஹங்கள் :**—முற்கூறிய நான்குவித ஸ்நேஹங்களுள் கடைசியிற் குறிப்பிடப்பட்டுள்ளதிலிருந்து ஆரம்பித்து முறையே முன்னுள்ள ஒவ்வொன்றும் பித்தஹரமான குணத்திற் சிறந்தவையாம்;[6] அவ்வாறே முதலிலிருந்து மேன்மேலுமுள்ள ஒவ்வொரு ஸ்நேஹமும் முறையே மற்ற இரண்டு தோஷங்களையும் பரிஹரிப்பதிற் சிறந்தவையாகும்.[7]—2½

**குருகுணத்திற் சிறந்த ஸ்நேஹங்கள் :**—கிருதத்தைவிட தைலமும், அதைவிட கொழுப்பும், கொழுப்பைவிட மஜ்ஜையும் குருகுணத்திற் சிறந்த ஸ்நேஹங்களாகும்.—3.

**யமகம், த்ரிவ்ருதம், மஹா ஸ்நேஹம் :**—இரண்டுவித ஸ்நேஹங்கள் ஒருமிக்கச் சேர்ந்தால் அக்கூட்டுக்கு **யமகம்** என்றும், மூன்று

---

1. இங்கு கூறப்பட்டுள்ள குரு சீதம் முதலானவற்றின் விவரங்களை 7-ம் பக்கம் டிப்பணியிற் காண்க.

2. ஸ்நேஹநம்—சரீரத்தை அநேகவிதமான எண்ணெய்ப்பசையுள்ள வஸ்துக்களின் பிரயோகத்தினால் ஸ்நிக்த்தமாகச் செய்தல்.

3. இலகு, உஷ்ணம், தீக்ஷ்ணம், ஸ்த்தூலம், கடினம், கனம் இவை முறையே குருமுதலிய குணங்களுக்கு நேர் எதிரிடையானவையாம்.

4. ரூக்ஷணம்—வரட்சி யுண்டாகுமாறு செய்யப்படும் சிகித்ஸை; பசை யின்மை.

5. கிருதத்தை அநேகவிதமான ஔஷதிகளோடுச் சேர்த்து பக்குவம் செய்தால், அப்பொழுது அவ்வௌஷதிகளின், குணங்களைப் பெறுவதோடு அது தனக்குள்ள இயற்கையான சில குணங்களை விடாமலே வைத்திருக்குமியல்புடையது; மற்ற எண்ணெய் முதலியவற்றிற்கு இச்சிறப்பு கிடையாது.

6. தைலத்தினும் வஸையும், வஸையைவிட மஜ்ஜையும், அதைவிட கிருதமும் பித்தஹரமான குணத்திற் சிறந்தவை யெனக் கருத்து.

7. கிருதத்தினும் மஜ்ஜையும், மஜ்ஜையைவிட வஸையும், அதைவிட தைலமும் வாத—கபங்களைச் சமநம் செய்வதில் சிரேஷ்டமானவை.

ஸ்நேஹங்கள் சேர்ந்தால் த்ருவ்ருதம் என்றும், நான்கு ஸ்நேஹங்களும் சேர்ந்தால் மஹாஸ்நேஹம் என்றும் பெயர் வழங்கப்படும்.—3½.

ஸ்நேஹ சிகித்ஸைக்கு ஏற்றவர்கள்:—ஸ்வேத சிகித்ஸைக்கு உரியவரும், சோதந சிகித்ஸைக்கு உரியவரும், மதுபானம் செய்பவரும், சிற்றின்பத்திற் பற்றுள்ளவரும், வியாயாமம் பண்ணுபவரும், சிந்தையுள்ளவரும், வயது முதிர்ந்தவர்களும், பாலர்களும், பலஹீனர்களும், சரீரம் மெலிவுற்றவரும், ரூக்ஷ தேஹிகளும், இரத்தம்-சுக்லம் இவை க்ஷீணித்துப் போனவர்களும், வாதவியாதியால் வருந்துபவரும், அபிஷ்யந்தம்-திமிரம் என்னும் நேத்திரவியாதிகளால் பீடிக்கப்படுபவரும், நித்திரை செய்தபிறகு நேத்திரங்களைத் திறக்கமுடியாமல் மிகவும் துன்பமனுபவிப்பவரும் ஸ்நேஹ சிகித்ஸைக்கு ஏற்றவராவர்.—4, 5.

ஸ்நேஹ சிகித்ஸைக்குத் தகாதவர்கள்:—அக்னிமாந்த்யம், மிதமிஞ்சிய பசி, ஸ்தூலத் தன்மை, பலக்குறைவு இவற்றால் அதிகமாய் வருந்துபவரும், ஊருஸ்தம்பம், அதிஸாரம், ஆமதோஷம், தொண்டையைப்பற்றிய வியாதி, கரம் என்னும் கிரித்ரிம விஷப்பற்று,[1] மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய வியாதிகள், மூர்ச்சை, வாந்தி, அரோசகம், கபக்கோளாறு, தாவரட்சி, மதுபானத்தினாலான விகாரங்கள் இவற்றால் பீடிக்கப்படுபவரும், முறைகேடாகப் பிரஸவித்தவர்களும், ஸ்நேஹ சிகித்ஸைக்குத் தகாதவர்களாம்; மேலும் நஸ்ய சிகித்ஸை, வஸ்தி சிகித்ஸை, விரேசந சிகித்ஸை இவற்றைச் செய்துவருகையிலும் ஸ்நேஹ சிகித்ஸையைப் பிரயோகிப்பது பிசகு.—6, 7.

கிருதம் எவருக்கு ஹிதமானது?—அந்த ஸ்நேஹ வஸ்துக்களுள் கிருதமானது புத்தி, ஸ்மரணம் என்னும் ஞாபகசக்தி, மேதையென்கிற புத்திவிசேஷம், ஜாடராக்னியின் விருத்தி இவற்றை விரும்புபவருக்கு சிலாக்யமாம்.—7½.

தைலம் எவருக்கு ஹிதமானது?—கிரந்தி,[2] நாடீவிரணம்,[3] கிருமிரோகம், கபரோகம், மேதோரோகம், வாதரோகம் இவற்றால் வருந்துபவருக்கும், சரீரத்தின் இலாகவம், திடத்தன்மை இவற்றை விரும்புபவருக்கும், கற்குடலுள்ளவருக்கும் தைலம் ஹிதமாம்.—8½.

வஸா-மஜ்ஜைகள் எவருக்கு ஹிதமானவை?—வாயுவாலும், வெயிலாலும், வழி நடப்பதாலும், சிற்றின்பத்தில் அதிகமாய் பிரவ்ருத்திப்பதாலும், வியாமம் விசேஷமாகச் செய்வதாலும் க்ஷீணித்

1. கரவிஷம்—88-ம் பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.

2. கிரந்தி—கழுத்து, அக்குள் முதலான விடங்களில் சிறிய உருண்டை வடிவமாயுள்ள அவயவங்கள் வீங்கியுண்டாகும் கட்டி.

3. நாடீவ்ரணம்— குழிப்புண், அல்லது புரையோடுவதான சிலந்திப்புண்.

துப்போன தாதுக்களை யுடையவர் எவரோ அவர்களுக்கும், ரூக்ஷமான தேஹமுள்ளவர்களுக்கும், கிலேசங்களைப் பொறுமையோடு தாங்குபவருக்கும், மிதமிஞ்சிய பசியுள்ளவருக்கும், வாயுவினால் அடைபட்ட ஸ்ரோதோமார்க்கங்களைப் பெற்றவர்களுக்கும் [1] வஸை, மஜ்ஜை யென்னும் மற்ற இரண்டு ஸ்நேஹங்களும் அனுகூலமானவை.—9½.

வஸையின் விசேஷ குணங்கள் :—வஸை யென்னும் கொழுப்புக்கு வேறு சில விசேஷ குணங்களும் உண்டு. அவையாவன :—பூட்டுகள், எலும்புகள், மர்மஸ்த்தானங்கள், [2] குடல்கள் இவற்றில் வலியுண்டானாலும், அக்னி முதலியதால் அழற்சி யேற்பட்டாலும், அடியுண்டானாலும், யோநி நெகிழ்ந்துவிட்டாலும், செவியிலும் சிரஸ்ஸிலும் நோவுண்டானாலும் வஸையை உபயோகிக்கலாம்.—10½.

எந்தெந்த ஸ்நேஹத்தை எந்தெந்த ருதுவில் உபயோகிக்கலாம்?—வர்ஷருதுவில் தைலமும், சரத் ருதுவில் நெய்யும், வஸந்த ருதுவில் வஸை மஜ்ஜை யென்னும் மற்ற இரண்டு ஸ்நேஹங்களும் உபயோகிக்கத் தகுந்தவையாகும்.—11.

ஸ்நேஹங்களை உபயோகிப்பதற்கான காலங்களைப்பற்றிய விசேஷ விதிகள் :—ஸாதாரண ருதுக்களில், [3] பகற்காலத்தில், சூர்யன் பிரகாசமாகக் காயும்பொழுது ஸ்நேஹப்பிரயோகம் செய்வது நலம். தைலத்தை உபயோகிக்கவேண்டியது அவசியமாக நேரிடுமானால் அப்பொழுது அது ஹேமந்த-சிசிர ருதுக்களா யிருந்தபோதிலும் அவற்றிலும் அதை உபயோகிக்கலாம்; அவ்வாறே கிருதத்தை கிரீஷ்மருதுவிலும் இராக்காலத்திலுங்கூட உபயோகிக்கலாம்; பித்தமாவது, வாயுவாவது, பித்தம் ஸம்பந்தப்பட்டுள்ள ஸம்ஸர்க்க தோஷங்களாவது [4] ஸம்பவித்திருந்தால் அப்பொழுது கிருதத்தை இரவிலேயே உபயோகிக்கவேண்டும் ; இவ்விதிகளுக்கு மாறாக கிருதம் முதலானதை இரவில் உபயோகித்தால் வாத-கபங்களுடைய கோளாறுகளாலும், தைலம் முதலானதைப் பகலில் உபயோகித்தால் பித்தத்தினாலும் வியாதிகள் ஸம்பவிக்கும்—12, 13.

ஸ்நேஹத்தைப் பிரயோகிப்பதற்கான உபாயங்கள் :—பலவகையான பக்ஷணங்கள், அன்னம், வஸ்திகர்மம், நஸ்யம், அப்யங்கஸ்நாநம், . கண்டூஷம் என்னும் வாய்க் கொப்புளித்தல், மூர்த்த தர்ப்

1. ஸ்ரோதஸ்—94-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
2. மர்மங்கள்—11-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.
3. வஸந்தருது, சரத்ருது, சிசிரருது இவை ஸாதாரண ருதுக்கள் எனப்படும்.
4. ஸம்ஸர்க்க தோஷங்கள்—இரண்டிரண்டு தோஷங்கள் ஸம்பந்தப்பட்ட விகாரங்கள் ; இங்கு வாத-பித்தம், பித்த-கபம் இரண்டும் குறிக்கப்படுகின்றன.

பணம், கர்ணதர்ப்பணம், நேத்திரதர்ப்பணம் இவற்றின் மூலமாய்[1] ஸ்நேஹத்தை முறைப்படி பிரயோகிக்கலாம்.—14.

ஸ்நேஹத்திற்கும் இரஸங்களுக்குமுள்ள அறுபத்திநாலுவித கூட்டு முறைகள்:—ஸ்நேஹத்திற்கு அறு சுவைகளின் அநேகவகையான சேர்க்கைகளைக்கொண்டும், ஒன்றோடும் சேர்க்காமல் தனியான நிலைமையைக் கொண்டும் அறுபத்திநாலுவிதமான கற்பனைகளை முறையே செய்யக்கூடுமெனப்படுகிறது; ஸ்நேஹத்தை வெவ்வேறு விதமான உணவுகளுடன் அல்லது அநேகவிதமான சுவையுள்ள வஸ்துக்களோடு கலந்தே உபயோகிக்க வேண்டியிருப்பதாலும், (மற்ற உணவுப் பொருட்களைப்போல் அதிகமாய் உபயோகிக்கமுடியாமல்) சொற்பமாகவே உபயோகிக்க வேண்டியிருப்பதாலும் அவ்விதமான [2] கற்பனைகள் சேர்க்கை முறைகளைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டன.—15.

அச்சபேயாவின் விசேஷம்: [3]—வேறு பதார்த்தங்களோடு கலக்காமல் தனியாக உட்கொள்ளப்படும் ஸ்நேஹமானது, முறைப்படி மொழியப்பட்டுள்ள ஹேதுக்களைப் பெருமையால் [4] அதற்கு விசாரணை அல்லது "கூட்டு முறை" என்னும் பெயர் கிடைக்க மாட்டாது. அது ஸ்நேஹசிகித்ஸைக்கான பலனை சீக்கிரத்தில் நிறைவேற்றுவதால், அவ்விதமான ஸ்நேஹமுறையே உத்தமமானது.—16.

ஸ்நேஹ முட்கொள்ளும் அளவுகள்:—ஸ்நேஹத்தைப் பிரயோகிப்பதற்குச் சிறிய மாத்திரை, மத்திம மாத்திரை, உத்தம மாத்திரையென்று அளவுகள் மூன்று உண்டு. (1) அவற்றுள் இரண்டு யாமங்களில் ஜீர்ணமாகக் கூடிய அளவு ஸ்வல்ப மாத்திரையென்றும்,

1. இங்கு குறிப்பிடப்பட்டுள்ள வஸ்திகர்மம் முதலாக நேத்திரதர்ப்பணம் ஈருகவுள்ள சிகித்ஸா விசேஷங்களின் விவரங்களை இதன்பிறகு வரும் அததற்கென்று ஏற்பட்ட அத்தியாயங்களில் காண்க.

2. இரஸபேதீயாத்தியாயத்தில் (119, 120-ம் பக்கங்களில்) "ஆறுவிதமான இரஸங்களுக்கும் யோகங்களில் ஒன்றோடொன்று" என்று ஆரம்பித்துக் கூறப்பட்டுள்ளவாறு அறுபத்து மூன்றுவிதசேர்க்கையும், ஸ்நேஹத்தை மற்றொரு வஸ்துவோடு கலக்காமல் தனியாக உபயோகிப்பது ஒன்றும் ஆக அறுபத்திநான்கு கூட்டு முறைகளுண்டு.

3. அச்சபேயா—வேறு பதார்த்தங்களோடு கலக்காத ஸ்நேஹம் அச்ச ஸ்நேஹம். அதையுட்கொள்ளும் முறை அச்சபேயா எனப்படும்.

4. வேறு பதார்த்தங்களோடு சேராமல் தனிப்பட உபயோகிக்கப்படுவதே அச்சபேயாவுக்கு விசாரணை என்னும் பெயர் வழங்கப்படாததற்கு முக்கிய ஹேது. அச்சபேயா—தனி எண்ணெய், நெய், கொழுப்பு முதலியது. விசாரணை; வேறு சரக்குகளோடு கலந்துள்ள தைல-கிருதாதிகளின் பொதுப் பெயர். பால் முதலியதோடு கலந்து உட்கொள்ளப் படுவது விசாரணை என்றும், தனியாக உட்கொள்ளப்படும் தைலாதிகள் அச்சபேயா என்றும் கூறப்படும்.

(2) நான்கு யாமங்களில் ஜீர்ணமாவது மத்திம மாத்திரை யென்றும், (3) எட்டு யாமங்களில் ஜீர்ணமாவது உத்தம மாத்திரை யென்றும் கூறப்படுகிறது. ஆனால், பிணியாளிகளுடைய தோஷங்கள் முதலானவற்றின் நிலைமைகளை உற்றுநோக்கிச் சிறிய அளவுக்குக் கூறப்பட்டதைவிட இன்னும் சிறிய அளவாகவே ஸ்நேஹத்தை முதலில் பிரயோகிக்கவேண்டும்.—17, 17½.

மூன்றுவித அச்சபேயாக்கள்[1]:—(1) வமந விரேசநங்கள் என்னும் சோதநத்துக்காக ஸ்நேஹம் ஏதாவது உபயோகிக்கப் படவேண்டுமானால், "அச்ச பேயா" என்னும் ஸ்நேஹத்தையே உத்தமமாத்திரை யெனப்படும் பெரிய அளவில், முதல் நாள் எடுத்துக்கொண்ட ஆஹாரம் நன்கு ஜீர்ணமாயிருக்கும்போது உபயோகிக்க வேண்டும். (2) சமநத்திற்காக உபயோகிக்க வேண்டுமானால், "அச்ச பேயா" என்னும் ஸ்நேஹத்தை நன்கு பசியெடுத்திருக்கையில் உணவுடன் கலக்காமல் உபயோகிப்பது நலம். (3) "அச்ச பேயா" என்னும் ஸ்நேஹத்தை மாம்ஸரஸம், மத்யம் முதலானவைகளோடும், அன்னத்தோடும் குறைந்த அளவில் ப்ருஹ்மணத்திற்காக உபயோகிக்கலாம்; அவ்வாறு உபயோகிக்கப்படும் ஸ்நேஹமானது பாலர், வயது முதிர்ந்தவர், நாவரட்சியினால் வருந்துபவர், ஸ்நேஹத்தினிடம் வெறுப்புள்ளவர், மதுபானம் செய்பவர், எப்பொழுதும் ஸ்திரீகளுடன் கூடிவருபவர், தினந்தோறும் ஸ்நேஹமுபயோகிப்பவர், அக்னிமாந்த்யமுள்ளவர், ஸுகிகள், கிலேசமனுபவிப்பவர், பயங்கொள்ளிகள், மிருதுகோஷ்டமுள்ளவர்,[2] தோஷங்களால் சொற்பமாகப் பீடிக்கப் படுபவர், மெலிந்த தேஹத்தையுடையவர் இவர்களுக்குப் பிரயோஜனமாகும்; உஷ்ணகாலத்திற் பிரயோகிக்கவும் அது ஏற்றதாகும். 18—20½.

ஸ்நேஹத்தை உபயோகிக்கும் தருணங்களும் பிரயோஜனங்களும்:—அந்த ஸ்நேஹம் ஆஹாரத்திற்கு முன்பாகவும், ஆஹாரத்தினிடையிலும், ஆஹாரத்திற்குப் பிறகும் உபயோகிக்கப்படுமானால், அது முறையே தேஹத்தின் கீழ் அவயவங்களின் வியாதிகளையும், மத்திம அவயவங்களிலுண்டாகும் வியாதிகளையும், மேல் அவயவங்களின் வியாதிகளையும் போக்கும்; கிரமமாக அந்தந்த அவயவங்களுக்கு வன்மையையும் உண்டாக்கும்.—21½.

அச்ச ஸ்நேஹத்திற்கு அநுபானமும் அதன் உபயோகமும்:—அச்சஸ்நேஹத்தை உட்கொள்ளும்போது, ஸ்நேஹம் எளிதில் நன்கு ஜீர்ணமாவதற்காகவும், வாயினுள் எண்ணெய்ப்பிசுக்கு விலகி முகம் சுத்தமாவதற்காகவும் வெந்நீரை அநுபானமாகப் பருக

1. சோதந அச்சபேயா, சமந அச்சபேயா, ப்ருஹ்மண அச்சபேயா என்று அச்சபேயாஸ்நேஹம் மூன்று விதம். [சமநம் முதலியதைப்பற்றி 10-ம் பக்கம் பார்க்க.]

2. மிருது கோஷ்டம்—4-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

வேண்டும். ஆனால் நீரடிமுத்துத் தைலத்திற்காவது, சேங்கொட்டைத் தைலத்திற்காவது உஷ்ணஜலம் அநுபானமாக உபயோகிக்கத் தகுந்ததல்ல[1]. உட்கொண்ட ஸ்நேஹபதார்த்தம் ஜீர்ணமானதும் ஆகாததும் ஸந்தேஹமாயிருந்தால் அப்பொழுது மீண்டும் உஷ்ணஜலத்தைப் பானம்செய்யலாம்; அதனால் முன் வந்து கொண்டிருந்த ஏப்பமும் நிவ்ருத்தியாகும்; பிறகு உடலுக்கு இலாகவமும் ஆஹாராதிகளில் ருசியும் விருப்பமும் உண்டாகும். 22—23½.

ஸ்நேஹபானத்தில் உபசாரகிரமங்கள்:—மறு நாள் ஸ்நேஹபானம் செய்யப்போகிறவனும், அன்றைய தினம் பானம்செய்திருப்பவனும், முன்பே ஸ்நேஹபானம் நிறைவேற்றியிருப்பவனும் பின்வருமாறு ஆஹாராசாரங்களை உபயோகிக்கத் தகுந்தவனாகிறான்:—திரவமும், உஷ்ணமும், அபிஷ்யந்தியென்னும்[2] குணத்தைப் பெறாததும், அதிக ஸ்நிக்த்தமல்லாததும், பத்தியமும் அபத்தியமுமான பலவகைப்பட்ட பதார்த்தங்கள் கலவாததுமான ஆஹாரம் புஜிக்கத் தகுந்தது; உஷ்ண ஜலத்தைக் கொண்டே எல்லாக் காரியங்களையும் நிறைவேற்றிக்கொள்ள வேண்டும்; பிரஹ்மசர்யவிரதமுடையவனாகவும், இரவில் உற்ற நேரத்திற் படுத்து நித்திரைசெய்து வருவதுடன் வேகங்களை அடக்காதவனாகவும் இருந்துவரவேண்டும்; வியாயாமம், கோபம், துயரம் இவற்றையும், பனி, வெயில், பெருங்காற்றுக்கு எதிரில் ஸஞ்சரிப்பது, வாஹன மேறுவது, வழி நடப்பது, அதிகமாகப் பேசுவது, அதிகநேரம் உட்கார்ந்திருப்பது, நிற்பது, மிக உயரமான அல்லது மிகத் தாழ்வான தலையணையுபயோகிப்பது, பகலில் தூங்குவது, புகை, புழுதி இவற்றையும் ஸ்நேஹம் எவ்வளவு நாட்கள் உபயோகிக்கப் படுகின்றதோ அவ்வளவு நாட்களும் விலக்க வேண்டும்; மேலும் ஸ்நேஹத்தை நிறுத்தியபிறகும் அவ்வளவு நாட்கள் அவற்றைவிலக்கிவிடவேண்டும்.[3] அந்த பத்தியமுறையானது ஸ்நேஹபானத்திற்கு மட்டுமல்ல, மற்றும் எல்லாச் சிகித்

---

1. நீரடி முத்துத்தைலமும், சேங்கொட்டைத் தைலமும் விஷகுணமுள்ளவைகளாதலால் உஷ்ணஜலம் ஆகாதென்று கூறப்பட்டது. [விஷகுணமுள்ள சரக்குகளுக்கு அல்லது ஔஷதங்களுக்கு உஷ்ணபதார்த்தம் அநுபானமாக உபயோகிக்கத் தகாது என்பது விதி. உஷ்ணம் விஷத்தை விருத்தி செய்யுமென்பது கொள்கை.]

2. அபிஷ்யந்தி—43-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

3. சிகித்஦ை செய்து கொள்ளப்படும் நாட்களில் அநுஸரிக்கப்படும் பத்தியக்கிரமங்கள் யாவும் சிகித்஦ைக்குப் பிறகும் அவ்வளவு நாட்கள்வரையில் அநுஸரிக்கப்படுவது அஸாத்மியத்தைக் கிரமமாக விடுவதும், ஸாத்மியத்தைக் கிரமமாக உபயோகிப்பதுமான முற்கூறியுள்ள விதியை அநுஸரித்துக் கூறப்பட்டதாகும். இது **மறுபத்தியம்** என்று தமிழரால் வழங்கப்படுகிறது.

ஷைகளிலும், வியாதியினால் இளைத்து பலஹீனமடைந்தவர்களுக்கும் பெரும்பாலும் அநுகூலமானது. 24—27½.

**சமாந ஸ்நேஹோபசாரம்:—** சமாந ஸ்நேஹத்தைப் பிரயோகிக்கும்போது, விரேசநசிகித்ஸை செய்து கொண்டவனுக்கு எவ்வித உபசாரம் செய்யப்படுமோ அவ்விதமான உபசாரம் பண்ணவேண்டும்.[1]—28.

**மிருதுகோஷ்ட-க்ரூரகோஷ்டங்களுக்கு ஏற்ற ஸ்நேஹபான முறை:—**(1) மிருதுகோஷ்டமுள்ளவன் அச்சஸ்நேஹத்தை மூன்று தினங்கள் உட்கொள்ளவேண்டும். (2) க்ரூரகோஷ்டமானால் ஏழு நாட்கள் அதை உட்கொள்ளுவது அவசியம்; அல்லது எவ்வளவு நாட்கள் உபயோகித்தால் நன்றாக ஸ்நிக்த்தமாகக்கூடுமோ[2] அவ்வளவு நாட்களும் உட்கொண்டுவரலாம்; அதற்கு மேல் ஸ்நேஹத்தை உபயோகித்தால் அது ஸாத்மியமாக[3] ஆய்விடும்.—29.

**ஸ்நிக்த்த-ரூக்ஷ-அதிஸ்நிக்த்தங்களின் குறிகள்:—**(1) வாதம் இயற்கையான நிலைமைக்கு வருவதும், ஜாடராக்னி உத்தீபநமாவதும், மலம் கெட்டியாயில்லாமல் இளகி எண்ணெய்ப் பசையோடு கூடியிருப்பதும், ஸ்நேஹத்தினிடம் வெறுப்புண்டாவதும், உடலில் வாட்டம் ஏற்படுவதும் நன்றாக **ஸ்நிக்த்தமானதற்கு** ஏற்ற அறிகுறிகளாகும். (2) **ரூக்ஷமாயிருந்தால்** இவற்றிற்கு நேர் எதிரிடையான குணங்கள் உண்டாயிருக்கும். (3) **அதிஸ்நிக்த்தமானால்** உடல் வெளிறிவிடும்; மூக்கிலிருந்தும், வாயிலிருந்தும், குதத்திலிருந்தும் ஒருவிதமான துர்நீர் கசியும்.—30, 30½.

**ஸ்நேஹத்தை முறைகேடாயுபயோகிப்பதாலான கெடுதிகள்:—** அளவுமீறியோ, அகாலத்திலோ உபயோகிக்கப்படும் ஸ்நேஹமும், எவனுக்கு எது ஆகாது என்று கூறப்பட்டிருக்கிறதோ அவ்வித ஸ்நேஹமும், பிரதிகூலமான ஆஹாரங்களோடும் ஆசாரத்தோடும்[4] உபயோகிக்கப்படும் ஸ்நேஹமும் பின்கூறப்படும் விகாரங்களையுண்டுபண்ணும்; அவையாவன:—சோகை, மூலம், சோம்பல், திமிர், மூர்ச்சை, சொரி, குஷ்டம், ஜ்வரம், குமட்டல், வயிற்றுவலி, வயிற்றுப்பொருமல், தலைச்சுற்றல் முதலியவையாம்.—31, 32.

---

1. விரேசநத்தில் செய்யப்படும் உபசாரகிரமங்களை 18-வது அத்தியாயத்தில் பார்க்க.

2. நன்றாக ஸ்நிக்த்தமாதல்—அடுத்தாற்போல் கூறப்படும் ஸ்நிக்த்த லக்ஷணங்களைப் படிக்க.

3. ஸாத்மியம்—91-ம் பக்கம் பார்க்க. [ஸ்நேஹம் ஸாத்மியமாய்விட்டால் மலத்தை வெளிப்படுத்தாது; அதிகமாயுபயோகிப்பதாலான அவக்குறிகள் அநேகம் உண்டாகும் என்று அஷ்டாங்க ஸங்கிரஹம்.]

4. இதற்குமுன் 24-முதல் 27½-வது ச்லோக மொழிபெயர்ப்பு வரையிலும் விவரிக்கப்பட்டுள்ள ஆஹாராசாரங்களுக்குப் பிரதிகூலமானவையென்று கருத்து.

முறைதவறான ஸ்நேஹப் பிரயோகத்தாலான கோளாறுகளுக்குப் பரிஹாரம் :—*முறைதவறாக ஸ்நேஹத்தைப் பிரயோகிப்பதாலுண்டாகும் கோளாறுகளில் அடியில் வருமாறு பரிஹாரங்களைச் செய்ய வேண்டும் : அவையாவன :—பசியையும் தாஹத்தையும் அடக்குதல், வாந்தியுண்டாக்குதல், ஸ்வேத சிகித்ஸை, ரூக்ஷகுணமுள்ள அன்ன-பான-ஔஷதங்களை உபயோகித்தல், மோர், அரிஷ்டங்கள்,*[1] *கலம்-உத்தாலம்*[2] *-வாற்கோதுமை-சாமை-வரகு என்னும் தானியங்கள், திப்பிலி, த்ரிபலை, தேன், கடுக்காய்,*[3] *பசுவின் மூத்திரம், மஹிஷாக்ஷி குக்குலு இவைகளேயாம் ; மேலும் ஸ்நேஹத்தை முறைதவறாக உபயோகித்து உண்டாகும் வியாதி எவ்வெவ்விதமானதோ அந்தந்த வியாதிக்கு ஆங்காங்கு மொழியப்பட்டுள்ள சிகித்ஸைகளையும் செய்யலாம்.*—33, 34.

ரூக்ஷசிகித்ஸையினுலுண்டாகும் குறிகள் :—*ரூக்ஷ சிகித்ஸை*[4] *நன்றாக நிறைவேறிய திலும், அதை அதிக அளவாகச் செய்வதிலும் உண்டாகக்கூடிய குறிகள், நன்றாக நிறைவேற்றப்பட்ட அல்லது அதிக அளவாகச் செய்யப்பட்ட லங்கந சிகித்ஸைகளின்*[5] *குறிகளுக்கு முறையே ஸமானமாயிருக்கும்.*—34½.

ஒரு முறை ஸ்நிக்த்தமானதும் செய்யக்கூடிய சிகித்ஸா கிரமம்:—*ஸ்நேஹ சிகித்ஸையினுல் ஸ்நிக்த்தமானவன், பிறகு ஸ்நிக்த்தமாகவும் திரவமாகவும் பரிசத்திலும் வீர்யத்திலும் உஷ்ணமாகவுமுள்ள ஜாங்கல ஜந்துவின் மாம்ஸ ரஸத்தை உட்கொண்டு ஸ்வேத சிகித்ஸையைச் செய்துகொள்ளவேண்டும் ; அப்பால் மூன்று நாட்கள் சுகமாயிருந்து விரேசநம் செய்துகொள்ளவேண்டும் ; பின்பு மற்றொரு தினம் பொறுத்திருந்து கபத்தை விருத்திசெய்யும் வஸ்துக்களை யுபயோகித்து கபதோஷத்தைத் தூண்டிக்கொடுத்து வமநத்தை யுண்டுபண்ணவேண்டும்.*—35, 36.

ஸ்நேஹ சிகித்ஸையினுல் கெடுதி யுண்டாகாமற் செய்யுமுபாயம் :—*சதை பருத்தும், கொழுத்தும், அதிக கபத்துடன் கூடி*

---

1. *அரிஷ்டம்—53-ம் பக்கம் பார்க்க.*

2. *கலம் என்பதே கரம் என்றும் கூறப்படும். கரம், உத்தாலம் என்னும் தானியங்களைப்பற்றி 58-ம் பக்கத்தில் "மஹாவ்ரீஹி" வகுப்பைப்பார்க்க.*

3. *இங்கு முன்பே த்ரிபலையென்று குறிக்கப்பட்டு அதில் கடுக்காயும் சேர்ந்திருக்க, மறுபடியும் கடுக்காயைப் பிரயோகிக்க வேண்டுமென்று கூறுவதற்குக் காரணம், த்ரிபலையையாவது அல்லது நெல்லிக்காய் தான்றிக்காய்களைத் தவிர்த்து கடுக்காயை மட்டுமாவது உபயோகிக்கலாமென்னும் கொள்கையேயாம்.*

4. *ரூக்ஷசிகித்ஸை—முன் குறிப்பிட்ட பசி-தாஹம் முதலியதை அடக்குவதேயாம்.*

5. *லங்கந சிகித்ஸையின் குறிகளை 154-157-ம் பக்கங்களில் 'லங்கநம் நிறைவேறியது, அதிலங்கநம்' என்பவற்றின் குறிகளைப்பற்றிய விவரங்களில் காணலாம்.*

யும், ஜாடராக்னி விஷமித்தும் இருக்கிற மனிதர்களும், முன்னமே ஸ்நேஹ சிகித்ஸையை அப்யஸித்திருப்பவர்களும், ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்துகொள்ளத் தகுந்தவராகவும் இருப்பவர் எவரோ அவர்களுக்கு முதலில் ரூக்ஷண சிகித்ஸையைச் செய்து, பிறகு நன்கு ஸ்நேஹ சிகித்ஸையையும் செய்து, அப்பால் சோதந சிகித்ஸையையும் பண்ணவேண்டும்; இவ்வாறு செய்தால் ஸ்நேஹ சிகித்ஸையினால் சில ஸமயம் ஸம்பவிக்கக்கூடிய கெடுதிகள் [1] நேரிட மாட்டா.—37, 37½.

**ஸ்நேஹம் அஸாத்மியமாவதாலான பயன்**:—ஸ்நேஹம் அஸாத்மியமாக ஆய்விடுமானால், [2] அது வாதாதி தோஷங்களையும் மலங்களையும் அதிகமாய் வெளிப்படுத்துவதற்குப் போதுமான சக்தியுடையதாகும்.—38.

**அச்சஸ்நேஹம் ஸஹியாதவருக்கு ஸத்யஸ்நேஹமான உணவுகள்**:—ஸ்நேஹத்தைப் பிரயோகித்துச் செய்யப்படும் சிகித்ஸையைச் ஸஹிக்கமுடியாதவரான பாலர்களுக்கும் கிழவர்முதலானவர்களுக்கும் உடனே ஸ்நேஹகாரியத்தை நிறைவேற்றவல்லவையான அடியிற் கூறப்படும் யோகங்களைப் பிரயோகிக்கலாம்: அவையாவன:—ஏராளமான மாம்ஸரஸங்கள், ஸ்நேஹ பதார்த்தங்களைச் சேர்த்துத் தாளித்த பேயா, [3] நெய் முதலிய ஸ்நேஹமும் கற்கண்டு அல்லது வெல்லப்பாகும் கூடிய எள்ளுப்பொடி, அவ்வாறே [4] பக்குவம் செய்த க்ருஸரா [5], கிருதம் நிரம்பிய உஷ்ணமான பால் சேர்த்த பேயா [6], வெல்லம் சேர்த்த தயிரின் மேலுள்ள தெளிவுநீர், நெய்-எண்ணெய்-கொழுப்பு-வஸா-அரிசி ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பலம் சேர்த்துப் பக்குவம் செய்த பேயா, என்கிற இவ்வேழுவிதமான ஸ்நேஹ குணமுள்ள உணவு வகைகளை வேண்டியவளவு உப்பையும் சேர்த்து உட்கொண்டால் அவை உடனே தேஹத்தில் ஸ்நிக்த்த குணத்தை விருத்தி செய்யும்; ஆகவே **ஸத்யஸ்நேஹநங்கள்** என்றும் இவை வழங்கப்படும், இலவணமானது அபிஷ்யந்தியாகவும், ரூக்ஷகுணமற்றதாகவும்,

---

1. ஸ்நேஹத்தினாலுண்டாகக்கூடிய கெடுதிகள் இதற்கு முன் 31, 32-வது பத்தியங்களின் மொழிபெயர்ப்பில் குறிப்பிடப்பட்டன.

2. ஸ்நேஹம் தேஹத்தில் பற்றுதலடையாமற்போவது அஸாத்மியம் என்பதால் குறிக்கப்படுகிறது.

3. பேயா—இதைப்பற்றி 62-ம் பக்கத்தில் விவரம் காண்க.

4. அவ்வாறேயென்பதால், வெல்லப்பாகும் அல்லது கற்கண்டும். ஸ்நேஹமும் சேர்ந்தது எனப் பொருள்.

5. க்ருஸரா—அரிசி, பயறு, உளுந்து, எள் இவற்றில் எதையாவது பொடித்து, அதற்கு ஆறுபங்கு ஜலம் சேர்த்து, சிறிது குழம்பாகக் காய்ச்சிய ஒருவித கஞ்சி; இதையே **யவாகூ** என்றும் கூறுவர்.

6. "பால் சேர்த்த பேயா" என்றதால், முன் கூறப்பட்டது மோர் சேர்த்த பேயா என்று அறிக.

ஸூக்ஷ்மம்-உஷ்ணம்-வ்யவாயி என்னும் குணங்களுடையதாகவும் இருக்கிறதாகையால், ஸ்நேஹம் நிரம்பிய இவ்வேழு உணவுகளிலும் அதை விசேஷமாகச் சேர்க்கவேண்டுமென்று கூறப்பட்டது. 39—42.

குஷ்டப்-பிரமேஹாதிகளில் உதவாத ஸ்நேஹங்கள் :—வெல்லம், ஆநூபமாம்ஸம்,[1] பால், எள், உளுந்து, ஸுரை,[2] தயிர் இவற்றை குஷ்டரோகத்திலும், சோகையிலும், பிரமேஹத்திலும் ஸ்நேஹ சிகித்ஸையின் பொருட்டு உபயோகிக்கக் கூடாது.—43.

குஷ்டப்-பிரமேஹாதிகளில் உபயோகிக்கக்கூடிய ஸ்நேஹ முறைகள் :—த்ரிபலை, திப்பிலி, கடுக்காய்,[3] ம்ஹிஷாக்ஷிகுக்குலு முதலியவற்றால் பக்குவம் செய்யப்பட்ட ஸ்நேஹங்களை குஷ்டம், சோகை, பிரமேஹம் என்னும் இவற்றில் அந்தந்த வியாதிக்குத் தகுந்தவாறு உபயோகிக்க வேண்டும்.—44.

பிணிகளால் மெலிந்தவருக்கு ஏற்ற ஸ்நேஹங்கள் :—வியாதிகளால் வருந்தி மெலிவடைந்து பலங் குன்றியிருப்பவருக்கு ஜாடராக்னியைத் தூண்டக் கூடியவையும், தேஹத்தைப் போஷிக்கத் தகுந்தவையுமான ஸ்நேஹங்களைப் பிரயோகிக்க வேண்டும்.—45.

ஸ்நேஹமுபயோகிப்பதாலான பிரயோஜனங்கள்:—ஸ்நேஹத்தை அடிக்கடியும் தவறாமல் உபயோகித்து வரும் மனிதனுக்கு ஜாடராக்னி நன்கு உத்தீபனமாகும்; குடல்கள் சுத்தமாகும்; தாதுக்கள் யாவும் பழுதடையாமல் செழிப்படையும்; தேஹத்தில் பலமும் நிறமும் இயற்கைக்கு ஏற்றவாறு விருத்தியடையும்; இந்திரியங்கள் பலங்கொள்ளும்; கிழத்தனம் எளிதில் வாராததோடு வயது சென்றபிறகும் கிழத்தனக் குறிகள் அதிகமாகத் தோன்றா; நூறாண்டு காலம் சுகவாழ்க்கை அநுபவிக்கும் நிலைமையுமுண்டாகும்.[4]—46.

---

1. ஆநூபமாம்ஸம்--ஆநூபதேசத்தில் உண்டாய், அவ்விடத்திலேயே வளர்ந்து ஜீவித்துவரும் பிராணிகளுடைய மாம்ஸம். "ஆநூபம்" என்பதைப்பற்றி 10-ம் பக்கம் பார்க்க.

2. ஸுரை—இதைப்பற்றி 53-வது பக்கம் பார்க்க.

3. இங்கு "த்ரிபலை" என்று கூறியதாலேயே கடுக்காயும் கிரஹிக்கப்பட்டிருக்க, மறுபடி "கடுக்காய்" என்று கூறியதால், த்ரிபலையில்லாமல் கடுக்காயை மட்டும் தனியாகவும் இந்த யோகத்தில் உபயோகிக்கலாமென்பது கருத்து.

4. இங்கு கூறப்பட்டுள்ள பலன்களின் வரிசையைக் கிரமமாக உற்றுப்பார்த்தால் அடியில் குறிப்பிடப்படும் அபிப்பிராயத்தைக் கொண்டு இங்ஙனம் கூறப்பட்டதாக அறியலாம்: அதாவது :—ஸ்நேஹத்தின் குணத்தினால் ஜாடராக்னி விருத்தியாகுமென்று கூறப்பட்டது. ஜாடராக்னி விருத்தியாய் உணவு நன்கு ஜீர்ணமானால், மலங்களும் தானே நன்றாக வெளியாய்விடும்; ஆகவே அடுத்தாற்போல் குடல் சுத்தி குறிப்பிடப்பட்டது. குடலில் பழைய மலங்கள் சேராமல் ஆஹாரமும் நன்கு ஜீர்ணமானால்

# பதினேழாம் அத்தியாயம்.

## ஸ்வேத விதி.

இவ்வத்தியாயத்தில் ஸ்வேதவிதி[1] யென்னும் விஷயம் விவரிக்கப்படுகிறது :—

**ஸ்வேதம் நான்கு விதம் :**—ஸ்வேத சிகித்ஸையானது தாப ஸ்வேதம், உபநாஹ ஸ்வேதம், ஊஷ்ம ஸ்வேதம், திரவ ஸ்வேதம் என்று நான்கு பிரிவுகளாகப் பகுக்கப்பட்டிருக்கிறது.—½.

**தாபஸ்வேதம் :**—அக்னியினால் சூடுண்டாக்கப்பட்ட வஸ்திரத்தினாலோ, ஏதேனும் ஓடுகளாலோ, கரத்தினாலோ, அல்லது வேறு வஸ்துக்களாலோ ஒற்றடம்கொடுப்பது ' தாபஸ்வேதம் '[2] எனப்படும்.—1

**உபநாஹம் அல்லது ஸால்வணஸ்வேதம் :**—உபநாஹஸ்வேதத்தை மூன்று தோஷங்களில் மூன்று வகையான முறைகளைக் கொண்டு நிறைவேற்ற வேண்டும் ; எப்படியெனில் :—(1) வசம்பு, கிண்வம்,[3] சதகுப்பி, தேவதாரு, மற்றும் பல தானியங்கள், ஸமஸ்தமான ஸுகந்த வஸ்துக்கள்,[4] சிற்றரத்தை, ஆமணக்கு, ஜடாமாம்ஸி, இறைச்சி இவற்றில் விசேஷமாக உப்பைக் கலந்து, ஸ்நேஹத்தையும் சுக்ரத்தையும்,[5] மோரையும் சேர்த்து நனைத்து, வாததோஷத்தினால் மட்டும் உண்டான விகாரங்களில் ஸ்வேதத்தின் பொருட்டுப் பிரயோகிக்க வேண்டும். கபத்துடன்கூடிய வாதத்தில் ஸுரஸாதி கணத்திற்[6] கூறியுள்ள சரக்குகளாலும், பித்தத்துடன் கூடிய வாதத்தில் பத்மகாதிகணத்திற் குறிப்பிட்டுள்ள சரக்குகளாலும்[7] உபநாஹம் செய்ய வெண்டும்; இதற்கே ஸால்வண ஸ்வேதம் என்றும் மற்றொரு பெயருண்டு. மேற்கூறிய வஸ்துக்களை இளஞ்சூடாகச் செய்து

---

தாதுக்களும் செழித்துப் புதியவையாகும் ; தாதுக்கள் செழிப்பதால் தேஹ பலமும் நிறமும் விருத்தியாகும் ; அதனால் இந்த்ரியங்களும் சுறுசுறுப்பாய் வன்மையடையவே கிழத்தனம் எளிதில் உண்டாகாது ; கிழத்தனம் சீக்கிரம் நேரிடாமற் போகவே ஆயுளும் விருத்தியாகின்றது.

1. வியர்வையை உண்டாக்கி, வியாதிகொண்ட அவயவங்களை அல்லது முழுத்தேஹத்தையும் ஸ்வஸ்த்த நிலைமைக்குக் கொண்டுவரும் சிகித்ஸா கிரமங்களைக் கூறும் அத்தியாயம்.

2. தாபஸ்வேதம்—சூடுண்ட தவிடு ஓடு முதலியவற்றால் தேஹத்தில் ஒற்றடம் கொடுப்பது.

3. கிண்வம்—ஸுரையென்னும் மதுவின் அடியில் தங்கி நிற்கும் திப்பிகள்.

4. கோஷ்டம், அகில், சந்தனம் முதலிய ஸுகந்த வஸ்துக்கள்.

5. சுக்ரம்—ஒருவாறு பதனழிந்து நன்றாகப் புளித்துப்போன தேன் முதலிய இனிப்பான வஸ்துக்களாலான ஒருவித மது.

6. ஸுரஸாதி கணம்—இதைப்பற்றி 163-ம் பக்கம் பார்க்க.

7. பத்மகாதிகணம்—இதைப்பற்றி 160-ம் பக்கம் பார்க்க.

அவற்றால் அந்தந்த அவயவங்களில் பலமுறை ஒற்றடம் கொடுத்து, அவற்றின் சாற்றைப் பூசி[1] ஸ்நிக்த்தமாகவும், உஷ்ணவீர்யமுள்ளவையாகவும், மிருதுவாயிருப்பவையும் துர்நாற்றமுண்டாகாமல் பதன் செய்யப்பட்டவையுமான மிருதுவான சர்மங்களால் அவ்வவயவங்களைக் கட்ட வேண்டும்; அவ்விததோல் இராவிட்டால், வாதஹரமான இலைகளாலோ, பட்டுவஸ்திரத்தினாலோ, கம்பளத்தினாலோ, ஸாதாரண வஸ்திரத்தினாலோ அவ்வவயவங்களைச் சுற்றிக் கட்டலாம்; இராத்திரியில் இடப்படும் கட்டை மறுநாள் உதயத்திலும், பகலில் கட்டுவதை இரவிலும் அவிழ்த்து விடவேண்டும். 2—5.

**ஊஷ்ம ஸ்வேதம்** :—உத்காரிகை,[2] மண்கட்டி, ஓடு, கல், மண், தழை, தானியம், வரட்டி, மணல், உமிஇவற்றிற்கு அநேகவிதமான உபாயங்களால் சூடுண்டாக்கி, அவற்றால் தேசகாலங்களை அநுஸரித்து ஊஷ்ம ஸ்வேதத்தைப் பிரயோகிக்க வேண்டும்[3].—6, 6½.

**திரவஸ்வேதம்** :—முருங்கை, விளாமிச்சை, ஆமணக்கு, புங்கை, செந்துளஸி, வெள்ளைக் கஞ்சாங் கோரை, வாகை, ஆடாதோடை, மூங்கில், எருக்கு, ஜாதி யென்னும் ஜாஜி, பெருவாகை இவற்றின் இலைகளையும், வசாதி கணத்திற் குறிக்கப்பட்டுள்ள சரக்கு

---

1. "அந்தந்த அவயவங்களில் பலமுறை ஒற்றடம் கொடுத்து, சாற்றைப் பூசி" என்னும் விஷயம் அஷ்டாங்கஸங்கிரஹத்தை அநுஸரித்து குறிப்பிடப்பட்டது.

2. உத்காரிகை—யவதானியம், உளுந்து, ஆமணக்கு விதை முதலியவற்றை இடித்து வேகவைத்து எடுக்கப்படும் பிண்டம் போன்ற கல்கம். இதைக் கொண்டு ஒற்றடம் கொடுக்கலாம்.

3. மண்கட்டி, ஓடு, கல் முதலானவற்றைப் பழுக்கக் காய்ச்சி, இடுக்கியாலெடுத்து, ஜலத்திலோ, காடியிலோ, கஷாயத்திலோ சேர்த்து, அதிலிருந்துவரும் ஆவியைச்சயநத்திற் படுத்திருக்கும் பிணியாளியின் தேஹத்தில் பரவச் செய்யலாம்; இதையே **பாஷ்ப ஸ்வேதம்** என்பார்கள். பசுவின் சாணம், அல்லது இடித்துக் கல்கமாகச் செய்த ஔஷதி முதலியவற்றை வெதுப்பி, வஸ்திரத்திற் கட்டி ஒற்றடம் கொடுக்கலாம்; இதற்கு **பிண்ட ஸ்வேதம்** என்று பெயர். ஆமணக்கிலை முதலியவற்றோடு யவதானியாதிகளைக் கலந்து, காடி அல்லது அம்லவஸ்துக்களையும் கூட்டி, ஒரு பானையில் விட்டு வாயைமூடி வேகவைத்து, அதிக காற்றில்லாத அறையில் கனத்த வஸ்திரத்திற் பரப்பி, அதன்மேல் கம்பளங்களையோ வேறு கனத்த வஸ்திரங்களையோ விரித்து, அதில் பிணியாளியைப் படுக்கச் செய்து, மேலே வஸ்திரங்களால் போர்த்து விடவும்; இந்த விதமாகச் செய்யப்படுவதற்கு **ஸம்ஸ்தர ஸ்வேதம்** என்று பெயர். அல்லது முன்போல் ஸ்வேதநத்திற்கு உபயோகமான வஸ்துக்களைப் பெரியதோர் கலத்தில் சமைத்து எடுத்து, அதன் அருகில் பிணியாளியை உட்காரச் செய்து, கலத்தையும் பிணியாளியையும் சேர்த்து வஸ்திரத்தினால் போர்த்து வியர்வை யுண்டாகச் செய்யலாம்; இவ்வாறு தோஷ-தாதுக்களின் கோளாறுகளால் ஸம்பவிக்கும் வியாதிகளின் நிவாரணத்திற்காக திரவஸ்வேதம் அநேக முறைகளின்படி பிரயோகிக்கப்படும்.

களையும், [1] ஆநூபதேசத்திலும் ஜலத்திலும் உண்டான ஜந்துக்களுடைய மாம்ஸங்களையும், தசமூலத்தையும் அந்தந்த தோஷங்களுக்குத் தகுந்தவாறு வெவ்வேறாகவோ ஒன்றாகச் சேர்த்தோ ஸ்நேஹத்தையும் கூட்டி, ஸுரை, சுக்தம், ஜலம, பால் முதலியவற்றால் பக்குவம் செய்து கொள்ளவும்; அவ்வித கஷாயத்தை ஏதேனும் கலயங்களிலாவது, திரவம் வடிக்கக்கூடிய குழாய்களையுடைய பாத்திரங்களிலாவது நிரப்பி, வியாதியினால் பீடிக்கப்படும் அவயவத்தில் ஸ்நேஹம் ஏதாவது தடவி, வஸ்திரத்தினால் அவயவத்தை மறைத்து, தாங்கக்கூடிய சூட்டுடன் அந்த திரவத்தினால் ஒற்றடம் கொடுக்கலாம்; அல்லது அவ்வவயவத்தின் மீது அத்திரவத்தை ஊற்றலாம். [2] தேஹமனைத்தையும் பற்றியுண்டாகும் வாதரோகத்திலும், அர்சஸ்-மூத்திரக்ருச்சிரம் என்னும் நீர்ச்சுருக்கு முதலான வியாதிகளிலும், பிணியாளி முற்கூறிய அநேக திரவபதார்த்தங்களை ஒரு கொப்பரையில் நிரப்பி, அதில் மூழ்கி வரலாம். [3] 7—11.

ஸ்வேதம் செய்து கோள்ளும் முறை:—உள்ளும் புறமும் நன்றாக ஸ்நிக்த்தமான பின்பு, அதற்கு முன்பு உட்கொண்ட உணவு நன்கு ஜீர்ணமானதும், காற்று வீசக்கூடாத விடத்தில் இருந்து கொண்டு, ஸ்வேத சிகித்ஸையைச் செய்து கொள்ள வேண்டும்.—11½.

வியாதி முதலானதின் நிலைமைகளுக்கேற்ற மூன்றுவித ஸ்வேதங்கள் :—வியாதியினுடையவும், பிணியாளியினுடையவும், வலிக்கும் இடத்தினுடையவும், ருதுவினுடையவும் தன்மைகளை அநுஸரித்து உத்தம ஸ்வேதம, மத்யம ஸ்வேதம், ஹீநஸ்வேதம் என்கிற இவற்றில் ஏதேனும் ஒன்றைப் பிரயோகிக்க வேண்டும்.—12.

கபத்திலும், கப வாதங்களிலும் செய்யக் கூடிய ஸ்வேதங்கள்:—(1) கபத்தின் கோளாறால் பீடிக்கப்படுபவன் தேஹத்தை ரூக்ஷமாகச்செய்து கொண்டு, ரூக்ஷகுணமுள்ள பதார்த்தங்களைக் கொண்டே ஸ்வேத சிகித்ஸையைச் செய்து கொள்ள வேண்டும். (2) கபத்தினாலும் வாயுவினாலும் வருந்துபவன் சில அவயவங்களில் ரூக்ஷமாகவும், வேறு சில அங்கங்களில் ஸ்நிக்த்தமாகவும் உள்ள ஸ்வேதத்தைப் பிரயோகிக்க வேண்டும்.—12½.

வாதம் ஆமாசயத்திலும் கபம் பக்வாசயத்திலும் இருக்கும் போது செய்யக்கூடிய ஸ்வேதம் :—(1) வாததோஷம் ஆமாசயத்தை யடைந்திருக்கையில் முதலில் ரூக்ஷகுணமுள்ள ஸ்வேதத்தைச் செய்து, பிறகு ஸ்நிக்த்த ஸ்வேதம் பண்ண வேண்டும். (2) கபதோ

1. வசாதிகணம்—இதைப்பற்றி 163-ம் பக்கம் பார்க்க.

2. இவ்வாறு திரவபதார்த்தை வியாதி கொண்ட அவயவங்களில் ஊற்றுவது என்னும் இவ்வித திரவஸ்வேதத்திற்கு **பரிஷேக ஸ்வேதம்** என்று பெயர்.

3. பலவகையான சரக்குகளைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயம் முதலிய சூடான திரவத்தில் மூழ்கச் செய்வது என்னும் இந்த திரவஸ்வேதத்திற்கு **அவகாஹ ஸ்வேதம்** என்று பெயர்.

ஷம் பக்வாசயத்தை யடைந்தால் அப்பொழுது முதலில் ஸ்நிக்த்த குணமுள்ள ஸ்வேதத்தையும், அப்பால் ரூக்ஷஸ்வேதத்தையும் செய்ய வேண்டும். ஸ்வேதசிகித்ஸையை இவ்வாறு ஸ்த்தாந பேதங்களை அநுஸரித்து நிறை வேற்றுவது முறை[1].—13½.

ஸ்வேதத்தைச் சொற்பமாகச் செய்யக் கூடிய அல்லது விலக்கக் கூடிய அவயவங்கள் :—வங்க்ஷணங்கள் என்னும் துடையிடுக்குகளில் ஸ்வேதத்தைச் சொற்ப அளவாகச் செய்யவேண்டும்; கண்கள், பீஜங்கள், இருதயம் இவற்றில் மிகவும் சொற்பமாகச் செய்ய வேண்டும்; அல்லது இம்மூன்று இடங்களிலும் ஸ்வேதம் செய்யாமலே இருக்கலாம்.—14.

ஸ்வேதம் நிறை வேறியதன் இலக்ஷணம் :—உடம்பில் உண்டாயிருந்த குளிர் அல்லது சைத்தியமும் வலியும் நிவ்ருத்தியாய், அவயவங்கள் அனைத்தும் மிருதுத் தன்மையை அடைந்திருந்தால், அப்பொழுது ஸ்வேதசிகித்ஸை நன்கு நிறைவேறியதாகக் கருத வேண்டும்.—14½.

ஸ்வேதம் நிறைவேறியதும் செய்ய வேண்டிய உபசாரம் :—பிறகு தேஹத்தை மெதுவாக மர்த்தநம் செய்வித்துக்கொண்டு, ஸ்நானம் பண்ணி, அப்பால் முறைப்படி ஸ்நேஹ சிகித்ஸையைப் பெற வேண்டும்.—15.

மிதமிஞ்சிய ஸ்வேதத்தினுலுண்டாகும் தீங்குகளும் பரிஹாரமும் :—ஸ்வேதசிகித்ஸை மிதமிஞ்சிச் செய்யப்படுமானுல் அடியில் கூறப்படும் அவசகுறிகள் உண்டாகும்; அவையாவன :—இரக்த பித்தம் உண்டாய் விருத்தியாகும்; நாவரட்சி, மூர்ச்சை, குரல் கம்மிப்போதல், தேஹம் இளைத்துப்போதல், தலைச்சுற்றல், கீல்களில் வேதனை, ஜ்வரம், ஒருவாறு கறுத்தும் சிவந்துமுள்ள தழும்புகள் தோன்றுதல், வாந்தி இவைகளேயாம். இவ்விகாரங்கள் தோன்றினுல், அவற்றிற்கு ஸ்தம்பந குணமுள்ள[2] ஔஷதத்தைப் பிரயோகிக்கவேண்டும். விஷஸம்பந்தத்தினுலும், க்ஷாரப்பிரயோகத்தினுலும், தாஹ சிகித்ஸையினுலும், அதிஸாரத்தினுலும், வாந்தியினுலும், மூர்ச்சையினுலும் வருந்துபவருக்கும் ஸ்தம்பந ஔஷதம் கொடுப்பது நலம்.—16, 17.

ஸ்வேதந-ஸ்தம்பநங்களுக்கு ஏற்ற வஸ்துக்கள் :—குருகுணமும், தீக்ஷ்ணத்தன்மையும், உஷ்ண வீர்யமும் உள்ள வஸ்து அல்லது

1. வாததோஷத்திற்குப் பக்வாசயமும் அதற்குக் கீழுள்ள பாகமும் ஸ்த்தாநமென்றும், கபத்திற்கு ஆமாசயமும் அதற்கு மேலுள்ள பாகங்களும் ஸ்த்தாநம் என்றும் முன்பே கூறப்பட்டிருக்கிறது; அவை அவ்வாறு இயற்கை ஸ்த்தாநங்களை விட்டு ஒன்றன் ஸ்த்தாநத்தில் மற்றொன்றுசேரும்போது தோஷத்தைப்பற்றியும் ஸ்த்தாநத்தைப் பற்றியும் விகாரங்கள் ஸம்பவிப்பது இயல்பாகையால், அங்கு ஸ்த்தாநத்தை அநுஸரித்தா, தோஷத்தை அநுஸரித்தா சிகித்ஸை செய்வது என்கிற ஸந்தேஹம் இதனுல் விலக்கப்பட்டது.

2. ஸ்தம்பநம்—152-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

காரியம் பெரும்பாலும் ஸ்வேதநமாக இருக்கும்; இவற்றிற்கு நேர் எதிரிடையான குணமுள்ள பதார்த்தம் அல்லது காரியம் ஸ்தம்பந சிகித்ஸைக்குத் தகுந்ததாம். மேலும் திரவம், ஸ்திரம், ஸரம், ஸ்நிக்த்தம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம் என்னும் இக்குணங்களை யுடைய வஸ்து ஸ்வேதநமாக இருக்கும்; ச்லக்ஷ்ணம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம், ஸரம், திரவம் இக்குணங்களையுடையது ஸ்தம்பந மாகும்.—18, 18½.

**ஸ்தம்பநகுணமுள்ள வஸ்துக்களின் சுருக்கம்** :—கைப்பு, துவர்ப்பு, இனிப்பு என்னும் இச்சுவைகளையுடைய பதார்த்தங்கள் பெரும்பாலும் ஸ்தம்பநகுணமுள்ளவையென்று சுருக்கமாகக் கூறலாம்.—19.

**ஸ்தம்பநம் முறைப்படி நிறைவேறியதன் குறிகள்** :—தேஹத் திற்கு இயற்கையான பலம் உண்டாய் குறிப்பிட்ட வியாதிகளும் நிவ்ருத்தியானால் அப்பொழுது "ஸ்தம்பநம்" என்னும் சிகித்ஸை நன்கு நிறைவேறியதென்று அறியலாம்.—19½.

**அதிஸ்தம்பநக் குறிகள்** :—ஸ்தம்பந சிகித்ஸை அதிக அளவாகச் செய்யப்படுமானால், அடியில் குறிப்பிடப்படும் கோளாறுகள் ஸம்ப விக்கும்: அவயவங்களை அசைக்க முடியாமற்போதல், சர்மமும் ஸ்நாயுவும் சுருக்கங்கொள்ளல், தேஹத்தில் நடுக்கம், மார்புப்பிடிப்பு, பேசமுடியாற் போதல், முகவாய்க் கட்டைப் பிடிப்பு, பாதம்-உதடு-சர்மம்-கை இவை கறுத்துப்போதல் என்பவையாம். 20½.

**ஸ்வேத சிகித்ஸைக்குத் தகாதவர்கள்** .—அதிக ஸ்த்தூலதேஹி கள், ரூக்ஷமாயிருப்பவர், பலஹீனர்கள், மயக்க முண்டவர், ஸ்தம் பந சிகித்ஸை செய்யக்கூடியவர், க்ஷதகாஸத்தினால் வருந்துபவர், மெலிந்திருப்பவர், மதுபானம் செய்து அதனாலுண்டான விகாரங் களுடன் கூடியவர், திமிரம் என்னும் கண்ணோயுள்ளவர், மஹோ தரம் முதலிய வயிற்றைப்பற்றிய வியாதிகளாலும்-விஸர்ப்பத்தி னாலும்-குஷ்டத்தினாலும்-க்ஷயத்தினாலும்-வாதரக்தத்தினாலும் வருந் துபவர், பால்-தயிர்-ஸ்நேஹம்-மது இவற்றைப் பானம் செய்தவர் கள், விரேசநம் செய்துகொண்டவர்கள், குதம் நெகிழ்ந்து வெளிப் பட்டோ அழற்சிகொண்டோ கஷ்டப்படுபவர், உடல் வாட்ட முற் றவர், கோபித்துக்கொண்டிருப்பவர், பயந்திருப்பவர், பசியினாலும் -தாஹத்தினாலும்-காமாலையினாலும்-பாண்டுரோகத்தினாலும்-மேஹ ரோகத்தினாலும்-பித்த விகாரங்களாலும் பீடிக்கப்படுபவர், கர்ப்பிணிகள், மாதவிடாய் நேரிட்டிருப்பவர், பிரஸவித்திருப்பவர் ஆகிய இவர்கள் யாவரும் ஸ்வேத சிகித்ஸைக்குத் தகாதவராவர். இவர்களுக்கு அபாயம் விளைவிக்கக்கூடிய வியாதி நேரிடுமாயின், அப்பொழுது அவசியமானால் ம்ருதுஸ்வேதம் செய்யலாம். 21—24.

**ஸ்வேதசிகித்ஸைக்கான பிணியாளிகள்** :—ச்வாஸம், காஸம், ப்ரிதிச்யாயம் என்கிற நாசியைப்பற்றிய ஒருவித வியாதி, விக்கல், வயிற்றுப் பொருமல், மலச்சிக்கல், குரல் கம்மல், வாதரோகங்கள்,

கபரோகங்கள், ஆமதோஷத்தினாலான கோளாறுகள், அவயவங்களின் பிடிப்பு,குருகுணம் மேலிட்டிருக்கும் நிலைமை, உடம்பெல்லாம் உண்டாகும் ஒருவித கடுப்பு, இடுப்பு-விலாப்புறம்-முதுகு-வயிறு-முகவாய்க் கட்டை இவற்றின் பிடிப்பு, பீஜங்கள் பருத்துப் போதல், கல்லி யென்னும் வாதநோய், ஆயாமம் என்னும் வலிப்பு, வாதகண்டகம் என்கிற ஒருவித வாயுதோஷம், நீர்ச்சுருக்கு, அர்புதம், கிரந்தி, சுக்ரம் வெளிவராமல் தடையுறுதல், வாதரக்தம் இவ்வியாதிகளில், அந்தந்தப் பிரகரணத்தில் குறிப்பிடப்பட்டுள்ளபடி [1] அததற்கு ஏற்ற ஔஷதங்களைப் பகுத்தறிந்துப் பிரயோகித்து ஸ்வேத சிகித்ஸையைச் செய்யலாம். 25—27.

அநாக்நேயஸ்வேதமும் அதற்குரிய நிலைமையும் :—வாததோஷமானது மேதஸ் என்னும் கொழுப்பாலும் கபத்தினாலும் சூழப்படுமானால் [2] அக்னி ஸம்பந்தமில்லாத ஸ்வேதசிகித்ஸை அநுகூலமானதாகும்; ஆகவே அவ்வித சிகித்ஸை அநாக்நேய ஸ்வேதம் எனப்படும். அதிக காற்றோட்டமில்லாத அறையில் இருத்தல், தேஹவுழைப்பு, கனமான வஸ்திரங்களால் போர்த்தல், திடீரென்று பயமுண்டுபண்ணுதல், வசம்பு, கிண்வம் முதலியதைக்கொண்டு செய்யப்படும் உபநாஹ ஸ்வேதம், யுத்தம்செய்தல், கோபமுண்டாதல், பான வகைகளை அதிகமாகப் பருகுதல், பசி, வெயிலில் உலாவுதல் ஆகிய இவை அக்னிஸம்பந்தமில்லாமலே ஸ்வேதமுண்டாக்குவதற்கான உபாயங்களாம்.—28, 28½.

ஸ்வேத சிகித்ஸையின் பயன் :—முதலில் ஸ்நேஹசிகித்ஸையினால் ஒருவாறு சதுப்பாகக் கசியும் நிலைமையை யடைந்த தோஷங்கள் கோஷ்டத்திலிருந்தாலும், தாதுக்களைப்பற்றி யிருந்தாலும், ஸ்ரோதஸ்ஸுகளில் மறைந்து வியாபித்திருந்த போதிலும், கைகால்களில் சேர்ந்திருப்பினும், அஸ்த்திகளில் இருந்தாலும் அவற்றை ஸ்வேத சிகித்ஸையிற் கூறியுள்ள முறைகளால் திரவமாகச் செய்து, மீண்டும் கோஷ்டம் என்னும் குடலுக்குள் கொண்டுவரலாம். இவ்வாறு செய்தபின்பு சோதந சிகித்ஸைகளால் [3] நன்றாக அத்தோஷங்களை எளிதில் வெளிப்படுத்தி விடலாம்.—29.

---

1. அந்தந்த வியாதிக்கு ஏற்ற பரிஹார முறைகள் சிகித்ஸா ஸ்தாநத்திலும் உத்தரஸ்தாநத்திலும் விவரிக்கப்படும்.

2. ஒரு தோஷத்தினால் அல்லது தாதுவினால் மற்றொரு தோஷம் ஆவரணம் செய்யப்படுமானால் அது ஆவரண தோஷம் என்று வழங்கப்படும்.

3. சோதந சிகித்ஸை—அடுத்த அத்தியாயங்களில் விவரிக்கப்படப் போகிற வமந-விரேசந-வஸ்திகர்மங்கள் முதலியன.

# பதினெட்டாம் அத்தியாயம்.

## வமந-விரேசந விதி.

இனி வமந-விரேசநவிதி [1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப் படும்:—

வமந-விரேசநங்களுக்கு ஏற்ற நிலைமைகளைப் பற்றிய போது விதிகள்:—(1) கபதோஷம் கோளாறடைந்த நிலைமையிலாவது, கபம் அதிகரித்துள்ள ஸம்யோகதோஷங்களிலாவது [2] வமநம் செய்விக்கலாம். (2) அவ்விதமே பித்தத்தில் விரேசநம் செய்விக்கலாம். [3]—$\frac{1}{2}$.

வமநத்திற்கு ஏற்றவர்களைப் பற்றிய விசேஷ விதி :—விசேஷித்து அடியிற் குறிப்பிடப்படும் பிணிகளால் பீடிக்கப்படுகிறவர்கள் வமந சிகித்ஸைக்கு ஏற்றவராவர் ; அவையாவன:—நவஜ்வரம், [4] அதிஸாரம், கீழ் நோக்கும் இரத்தபித்தம், க்ஷயம், குஷ்டம், பிரமேஹம், அபசீ, கிரந்தி, யானைக்கால், பித்துப்பிடித்தல், காஸம், ச்வாஸம், இருதயத்தின் கோளாறடைந்த துடிப்பு, விஸர்ப்பம், ஸ்தன்ய தோஷம், மார்புக்கு மேலுள்ள அவயவங்களில் உண்டாகும் ரோகங்கள் இவைகளேயாம். 1—2$\frac{1}{2}$.

வமந சிகித்ஸைக்குத் தகாதவர்கள் :—கர்ப்பிணி, ருக்ஷதேஹமுள்ளவன், [5] பசித்தவன், எப்பொழுதும் மனத்துயரமுற்றவன், பாலர், கிழவர், மெலிந்த தேஹமுடையவர், ஸ்தூலித்திருப்பவர், இருதயரோகமுள்ளவர், க்ஷதகாஸமுள்ளவர், துர்ப்பலர், வாந்தி செய்து கொண்டிருப்பவர், ப்லீஹமென்னும் மண்ணீரல் வியாதியுடையவன், திமிரம் என்னும் நேத்திரரோகமுள்ளவன், குடலில் கிருமி சேர்ந்திருப்பவன், வாயுவும் இரத்தமும் மேல்நோக்கி வாயினால் அல்லது நாசி முதலியதால் வெளியாய்க் கொண்டிருக்கும் பிணியாளி, வஸ்திசிகித்ஸை செய்து கொண்டவன், தொண்டைக் கம்மலுள்ளவன், மூத்திரம் அடைப்பட்டவன், மஹோதரம் முத

---

1. வமநம்—வாந்தியாவது ; விரேசநம்—குதமார்க்கத்தினால் மலத்தை வெளிப்படுத்தல்; இவற்றிற்கு வேண்டிய சிகித்ஸா கிரமங்களைக் கூறும் அத்தியாயம்.

2. 'ஸம்யோகம்' என்பதால் ஸம்ஸர்க்க ஸந்நிபாதங்கள் கூறப்பட்டன. கபம் சேர்ந்த இரண்டு தோஷங்களோ மூன்று தோஷங்களோ விருத்தியாயிருந்தால், அவற்றுள் கபம் மற்றதைவிட அதிகமாக விருத்தியாயிருக்கும் நிலைமையில் வமநம் ஏற்றதாம்.

3. இங்கு 'அவ்விதமே' யென்றதால்—பித்தக்கோளாறிலும், பித்தம் அதிகரித்த ஸம்யோகதோஷங்களிலும் விரேசநம் செய்விக்கவேண்டும் என்று கருத்து.

4. நவஜ்ரம்—ஆரம்பஜ்வரம் ; அல்லது ஆமஜ்வரம் என்றும் கூறலாம்;ஜ்வரம் உண்டானது முதல் ஏழுநாள்வரையில் அது நவஜ்வரம் என்று விவஹரிக்கப்படும்.

5. 'ருக்ஷதேஹமுள்ளவன்' என்றதால், ஸ்நேஹ சிகித்ஸையைச் செய்து கொள்ளாதவன் எனப் பொருள்.

தர்ப்பண புடபாகங்களுக்குப் பிறகு செய்ய வேண்டிய பத்திய சிகித்ஸை :—*தர்ப்பண-புடபாக சிகித்ஸைகள் எவ்வளவு நாட்கள் செய்யப்பட்டு வருகின்றனவோ அவற்றிற்கு இரு மடங்கு நாட்கள் பத்தியமான ஆஹாராதிகள் உபயோகிக்கப்படவேண்டும். மல்லிப் பூக்களையும் முல்லைப்பூக்களையும் இரவில் கண்களில் கட்டிக் கொண்டு வரவேண்டும்.*—21.

பல உபாயங்களாலும் நேத்திரத்தைப் பாதுகாக்கவேண்டிய அவசியம் :—*நஸ்ய சிகித்ஸை, அஞ்ஜந சிகித்ஸை, தர்ப்பண சிகித்ஸை முதலியவற்றால் எல்லாவகையாலும் நேத்திரத்திற்குப் பலமுண்டாவதன் பொருட்டு முயற்சி செய்யவேண்டும். நேத்திரம் நஷ்டமானால் பற்பல விதமான வஸ்துக்களாலான உலகமனைத்தும் ஒரே இருள்மயமாகவன்றோ ஆய்விடுகின்றதது !*—22.

---

# இருபத்தைந்தாம் அத்தியாயம்.

## யந்திர விதி.

*இதன் கீழ் யந்திரவிதி*[1] *என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—*

யந்திரம் என்றால் என்ன ?—*பற்பல வகையான அவயவங்களில் பிரவேசித்துத் துன்பமளிக்கும் வெவ்வேறு விதமான சல்யங்களை வெளிப்படுத்துவதற்கு உபயோகமாய் அமைந்தவையும், அர்சஸ்ஸுகளையும் பகந்தரம் முதலியவற்றையும் காண்பதற்கு உபயோகமானவையும், அவற்றில் சஸ்திரங்களையும் க்ஷாரம் முதலிய காரவஸ்துக்களையும் பிரயோகிப்பதற்கு ஏற்றவையும், அவ்வாறு க்ஷாராதிகளைப் பிரயோகிக்கையில் அவற்றால் அருகிலுள்ள மற்ற அவயவங்களுக்குத் தீங்கு நேரிடாவண்ணம் காப்பதற்குத் தகுந்தவையும், வஸ்தி சிகித்ஸை முதலியவற்றையும் செய்வதற்கு உபயோகமானவையுமான கருவிகள் இங்கு* யந்திரங்கள் *எனப்படுகின்றன ; மேலும் குடுவை, சுரைக் குடுக்கை, ச்ருங்கம் என்கிற கொம்பு அல்லது பீச்சாங் குழாய், ஜாம்பவோஷ்டம் முதலியவைகளும்*[2] *யந்திரங்களேயாம். ஆகவே அநேகவிதமான உருவங்களையுடையவையும், பலவிதமான காரியங்களில் உபயோகிக்கக் கூடியவையுமான வெவ்வேறு யந்திரங்களை ஆலோசித்துப் பகுத்தறிந்து நிர்மாணம் செய்யவேண்டும். அவ்விதம் செய்யக்கூடிய யந்திரங்*

---

1. *யந்திரம்—ஔஷதாதிகளைப் பிரயோகிப்பதற்கும், சஸ்திர சிகித்ஸை முதலியவற்றில் மற்ற அவயவாதிகளைக் காப்பது முதலிய காரியங்களுக்கும் உதவும் கருவிகளையும் அவற்றைப் பிரயோகிக்கும் முறைகளையும் கூறும் அத்தியாயம்.*

2. *ஜாம்பவோஷ்டம்—நாவற்கொட்டையைப் போன்ற உதடு அல்லது முகத்தையுடைய சலாகை.*

களில் முக்கியமான சிலவற்றை மாத்திரம் இதன்கீழ் விவரிப்போம். 1—2½

யந்திரங்களின் பொதுவான உருவங்களும் பெயர்களும்:—பருந்து, சிங்கம், கரடி, காகம் முதலிய மிருகங்களுடையவும் பக்ஷிகளுடையவும் முகங்களைப் போலவே யந்திரங்களுடைய முகங்களையும் நிர்மிப்பதோடு, அதனதன் உருவத்திற்கேற்க அந்தந்த மிருகப்க்ஷிகளுடைய பெயர்களையும் அவற்றிற்கு இடவேண்டும்.—4½.

ஸ்வஸ்திக யந்திரங்கள்:—(1) அவற்றுள் ஸ்வஸ்திக யந்திரம் பதினெட்டு அங்குலம் நீளமாகவும், பெரும்பான்மையான பாகம் இரும்பால் நிர்மிக்கப்பட்டும், அதன் கழுத்தில் சிறு கடலையைப் போல் வழுமுண்ட முளைகளையுடைய கீலத்தினால் இணைக்கப்பட்டும், அடிப்புறம் அங்குசம்போல் வளைந்தும், மிகவும் கெட்டியாகவும் இருக்கும். (2) இந்த யந்திரம் எலும்புகளில் பற்றியுள்ள சல்யங்களைப் பிடுங்கி யெடுப்பதற்கு உபயோகப்படுகின்றது.[1] 5—6½.

ஸந்தம்ச யந்திரங்கள்:—(1) கீலத்தினால் கழுத்தில் இணைக்கப்பட்டு, முகத்தின் தாள்கள் இரண்டும் ஒன்றோடொன்று சேர்க்கப்படாமல் விடப்பட்டுமுள்ளது ஸந்தம்ச யந்திரம் என்று கூறப்படுகிறது; அது நீளத்தில் பதினாறு அங்குலமிருக்கும். எப்பொழுதும் இவ்வாயுதம் வைத்தியர்களிடம் இரண்டு இருக்கவேண்டும். சர்மத்திலும், ஸிரைகளிலும், ஸ்நாயுக்களிலும், மாம்ஸ பேசிகளிலும் பற்றியுள்ள சல்யங்களை இழுப்பதற்கு இது உபயோகமானது. (2) ஆறு அங்குலம் நீளமாகவும், மற்றெல்லாவற்றிலும் முற்கூறிய உருவமேயுள்ளதாய் வேறொரு ஸந்தம்ச யந்திரம் சிறியதாய் உண்டு. அது ஸூக்ஷ்மமான சல்யங்களையும், இமையினுள் உண்டாகும் உபபக்ஷ்மா என்கிற சிறிய முளைகளையும் எடுப்பதற்கு உதவக்கூடியதாம்.—7, 8.

முசுண்டீ யந்திரம்:—(1) முசுண்டீ என்னும் யந்திரத்தின் முகத்தினுள் சிறிய பற்கள் அமைக்கப்பட்டிருக்கும்; வளையாமல் நீண்டும் அடிப்புறத்து முனைகளில் மோதிரம் போன்ற வளையங்களுடையதுமாயிருக்கும். (2) இது அதிக ஆழமான புண்களிலுள்ள துஷ்டமாம்ஸங்களை இழுத்து வெளிப்படுத்துவதற்கும், களையப்பட்டு மிகுந்துள்ள கண் இமை முளைகளை எடுப்பதற்கும் உதவுகின்றது.—9.

தாள யந்திரங்கள்:—(1) பன்னிரண்டு அங்குலம் நீளமாகவும், மத்ஸியத்தின் தவடையைப் போல் இரண்டு தகடுகளையுடையதாகவுமுள்ள ஒரு யந்திரமும், ஒரு தகட்டையுடையதான மற்றொரு யந்திரமும் ஆக இரண்டு தாளயந்திரங்கள் உண்டு. (2) இவை காதுக்குள்ளிருக்கும் சல்யங்களை இழுப்பதற்கு உபயோகமானவை.—10.

1. ஸ்வஸ்திகயந்திரம் வைத்தியர்களிடம் எப்பொழுதும் மூன்று அல்லது நான்கு உருப்படி இருக்கவேண்டுமாம்.

நாடீ யந்திரங்கள்:—(1) நாடீ யந்திரங்கள் அநேகம் உண்டு. அவை உள்ளே த்வாரமுள்ளவையா யிருக்கும்; அவற்றிற்கு ஒரு முகமோ அல்லது பல முகங்களோ உண்டு. இவற்றின் நீளமும் பருமனும் உட்புற அகலமும் அந்தந்த ஸ்ரோதஸ்ஸின் அளவுக்குத் தக்கபடி அமைக்கப்பட வேண்டும். (2) ஸ்ரோதஸ்ஸுகளில் பற்றியுள்ள சல்யங்களையும் வியாதிகளையும் காண்பதற்கும், அந்தந்த அவயவங்களில் வேலைகளை எளிதாகச் செய்வதற்கும், ஸ்ரோதஸ் முதலானவற்றில் சேர்ந்துள்ள தோஷங்களை உறிஞ்சுவதற்கும் இந்த யந்திரங்கள் பிரயோஜனப்படுகின்றன. தொண்டையினுள் பற்றியிருக்கும் சல்யத்தைப் பார்ப்பதற்கு ஏற்றவாறு பத்து அங்குலம் நீளமாகவும் ஐந்து அங்குலம் பருமனுள்ளதாகவும் மற்றொரு நாடீ யந்திரம் செய்யப்படுவதுண்டு. 11—12½.

வாரங்க யந்திரங்கள்:—(1) வாரங்கம் என்கிற யந்திரத்தின் குழலுக்குள் ஐந்து முகத்வாரங்களும், நான்கு காதுகளும் அமைக்கப்பட்டிருக்கும். இரண்டு காதுகளையுடைய மற்றொரு வாரங்கத்திற்கு அதன் பிரமாணத்திற்குத் தகுந்தவாறு மூன்று த்வாரங்களை அமைக்கப்படும். (2) இவை கெட்டியாகக் கிரஹித்துக் கொள்வதற்கு உதவும் யந்திரங்கள்.—13½.

வேறு சில நாடீயந்திரங்கள்:—வாரங்க யந்திரத்தின் காதுகளுக்குச் சமானமான உருவமுள்ளவையும், அவற்றிற்கு ஏற்ற பருமனும நீளமும் உடையவையுமான இத்தகைய வேறு நாடீயந்திரங்களையும் சல்யங்களைக் காண்பதற்காக நிர்மித்துக் கொள்ளலாம்.—14½.

சல்ய நிர்க்காத நாடீ:—தாமரைப்பூவின் உட்புறமுள்ள தாது போன்ற தலையுள்ளதும், பன்னிரண்டு அங்குலம நீளமானதும், அதில் நாலில் ஒரு பங்கு ஆழமுள்ள த்வாரமுடையதுமான நாடீ யந்திரம், சல்யங்களை இடிப்பதற்கு உபயோகப்படுவதால் அது சல்யநிர்க்காத நாடீ என்று வழங்கப்படும்.—15½.

அர்சோயந்திரம்:—(1) அர்சோயந்திரம என்பது[1] பசுவின் ஸ்தநம் போன்றதாய் நாலு அங்குலம் நீண்டதாயிருக்கும்; புருஷர்களுக்கு உபயோகப்படுத்தும் யந்திரத்தின் பருமன் ஐந்து அங்குலமளவாகவும், ஸ்திரீகளுக்கு ஆறு அங்குலம் பருமனுள்ளதாகவும் இருக்கும்; இக்குழாய்போன்ற யந்திரத்தின் மத்தியிலுள்ள த்வாரமானது மூன்று அங்குலம் அகன்று பெரு விரலின் மத்திய பாகம் உழலும்படியான விஸ்தாரமுடையதாய் அமைக்கப்பட்டிருக்கவேண்டும்; மத்தியிலுள்ள த்வாரத்திற்கு இரு புறங்களிலும் வேறிரண்டு த்வாரங்களும் இருக்கவேண்டும். (2) இவ்விரண்டு த்வாரங்களும் வியாதி கொண்ட பாகத்தைப் பார்ப்பதற்கும், மத்தியிலுள்ளது வேலை செய்வதற்குத் தகுந்த வழியாகவும் அமைக்கப்பட்டனவென்றறிக; இந்த யந்திரத்தின்மேல் சுற்றிலும்

1. அர்சோயந்திரம்—மூல முளைகளைச் சிகித்ஸை செய்வதறகு உபயோகமாயுள்ள கருவி.

அரை அங்குலம் கனமாக வட்டமாய் வரம்பொன்று அமைக்கப்படும். 16—18.

சமீயந்திரம் :—(1) உருவத்தில் ஒருவாறு முற்கூறிய யந்திரம் போன்றதாய், த்வாரங்கள் மட்டும் இல்லாமல் யந்திரம் ஒன்றுண்டு ; அதற்குச் சமீயந்திரம்[1] எனப் பெயர். (2) இந்த யந்திரம் அர்சஸ் என்னும் மூளைகளை நசுக்குவதற்கு உபயோகப்படுகின்றது.—18½.

பகந்தர யந்திரம்:—அர்சோயந்திரம்போலவே பகந்தர யந்திரம் என்பதும்[2] செய்யப்படும்; ஆனால் த்வாரத்திற்கு மேற்புறத்தினுள்ள உதடுபோன்ற வரம்பை முற்றிலும் விலக்கவேண்டும்.—19.

க்ராண நாடீ யந்திரம் :—நாசியினுள் உண்டாகும் அர்புதத்தையும் அர்சஸ்ஸுகளையும் பார்த்து சிகித்ஸை செய்வதற்கு உதவும் சிறிய குழல்போன்ற யந்திரம் க்ராணநாடீ யந்திரம்[3] ; அது இரண்டு அங்குலம் நீளமானது ; ஆள்காட்டிவிரலுக்குச் சமமான பருமனுள்ளது ; ஒரு த்வாரமே அதற்கு உண்டு.—20.

அங்குலித்ராணகம் :—(1) தந்தத்தினாலாவது மரத்தினாலாவது நாலு அங்குலம் நீளமாகவும், இரண்டு த்வாரமுடையதாகவும், பசுவின் ஸ்தநம்போன்ற உருவமுள்ளதாகவும் அங்குலித்ராணகம்[4] என்னும் கருவியைச் செய்யவேண்டும். (2) இது பிணியாளிகளுடைய வாயை எளிதில் திறப்பதற்கு உபயோகமாயிருக்கும்.—21.

யோநிவ்ரணேக்ஷண யந்திரம்:—யோநிவ்ரணேக்ஷணம்[5] என்னும் யந்திரம் பின்வருமாறு:—இதற்குப் பதினாறு அங்குலம் நீளத்தில் நாலு சலாகைகள் உண்டு[6] ; இந்த சலாகைகளுக்கு மத்தியில் த்வாரம் அமைக்கப்பட்டிருக்கும் ; இந்த த்வாரங்களில் குமிழ்போன்ற ஆணியிடப்பட்டுச் சலாகைகள் உழலும்படியாகப்பிணைத்துக் கட்டப்பட்டிருக்கும் ; ஒவ்வொரு சலாகையும் நாற் சதுரமாய், முனைகளில் தாமரை மொட்டுபோல வழுவழுப்பாய் அமைக்கப்பட்டிருக்கும் ; அடியில் தாள்களைப் பிடித்து அழுத்தினால் முகத்தாள்கள் விரியும்படி இச்சலாகைகள் அமைக்கப்பட்டிருக்கும்.—22, 22½.

---

1. சமீயந்திரம்—கடைவதற்கு அல்லது நசுக்குவதற்கு உதவும் கருவி.

2. பகந்தர யந்திரம்—குதத்தில் உண்டாகும் பவுத்திரம் என்னும் பிளவையை சிகித்ஸை செய்வதற்கான கருவி.

3. க்ராணநாடீ—நாசியினுள் உபயோகிக்கக்கூடிய சிறிய குழாயைப் போன்ற கருவி.

4. அங்குலித்ராணகம்—விரலை இரக்ஷிக்கக்கூடியது எனப் பொருள். பிணியாளிகளுடைய வாயைத் திறக்கும்போது அவர்களுடைய பற்களால் விரல் கடிபடாமலிருப்பதற்காக இந்த யந்திரம் உபயோகிக்கப்படும்.

5. யோநிவ்ரணேக்ஷணம்—யோநியிலுள்ள விரணம் முதலியதைப் பார்ப்பதற்கு ஏற்றவாறு அவ்வவயவத்தை விசாலப்படுத்தும் யந்திரம்.

6. நாலு சலாகைகள் என்றால் நாலு தாளகள் என்று பொருள். இரண்டு சலாகைகளை இடையில் பிணைத்தால் நான்கு தாள்களாகும்.

**நாடீவ்ரண யந்திரங்கள்:**—(1) குழிப்புண்களை அல்லது புரையோடும் புண்களை அலம்புவதற்கும், அவற்றில் ஸ்நேஹம் முதலியதை விட்டு நனைப்பதற்கும் உதவுமாறு பார்வைக்கு வஸ்தியந்திரம் போன்றவைகளாய் இரண்டு யந்திரங்கள் உண்டு. (2) இவை ஆறு அங்குலம் நீளமுடையவை; இவற்றின் அடிப்புறத்து த்வாரம் பெருவிரல் அளவாகவும், முனையிலுள்ளது கிரமமாகச் சிறுத்துச் சிறு கடலையளவாகவும் இருக்கும்; ஆனால் முனையில் வஸ்தியந்திரத்தைப் போல் இவற்றிற்கு வரம்பு அமைக்கப்பட்டிராது; அடியில் மிருதுவான சர்மத்தினாலான துருத்தி கட்டப்பட்டிருக்கும்; இவற்றிற்கு "நாடீவ்ரண யந்திரங்கள்" எனப் பெயர்.—23, 24.

**நளிகா யந்திரம்:**—(1) "நளிகாயந்திரம்[1]" என்பது அடியிலும் முனையிலும் த்வாரமுள்ளதான குழல்மாதிரியான யந்திரம்; இதற்குப் பதிலாக மயில் முதலிய பக்ஷிகளின் இறகிலுள்ள குழாய் போன்றதாளையும் உபயோகிக்கலாம். (2) இது ஜலோதரரோகத்தில் வயிற்றில் சேர்ந்துள்ள நீரை வடிப்பதற்கு உதவக்கூடியது.—24½.

**தூம-வஸ்தியாதி யந்திரங்கள்:**—தூமயந்திரம்[2], வஸ்தியந்திரம்[3] முதலிய வேறு சில யந்திரங்களின் சுரூபங்களும் முன்னமே ஆங்காங்கு நிரூபிக்கப்பட்டன.—25.

**ச்ருங்க யந்திரம்:**—(1) பதினெட்டு அங்குலம் நீண்டு மூன்று அங்குலம் அளவான முகமுடையதாய், முனையில் வெண்கடுகு நுழையும்படியான த்வாரமுடையதுமான "ச்ருங்கம்[4]" என்கிற யந்திரம் ஒன்றுண்டு; இந்த யந்திரத்தின் உடல்-முகம் முதலிய பாகங்கள் இடையில் பிளவு நேரிடாவண்ணம் நன்கு கெட்டியாக அமைக்கப்பட்டிருக்கவேண்டும்; இதன் முனை முலைக்காம்புபோல் அமைக்கப்படவேண்டும். (2) இது சூஷணம் எனனும் உறிஞ்சும் வேலைக்கு உபயோகப்படும்.—26.

**அலாபூ யந்திரம்:**—(1) நீளத்தில் பன்னிரண்டு அங்குலமும், சுற்றளவில் பதினெட்டு அங்குலமும் உள்ளதாய் அலாபூ யந்திரம்[5] அமைக்கப்படும்; நான்கு அல்லது மூன்று அங்குலம் சுற்றளவுள்ளதாய் முகம் இருக்கவேண்டும். (2) இதன் உட்புறத்தில் சிறிது

---

1. திரவபதார்த்தங்களை வெளியில் வடியச்செய்யும் எவ்வித குழாயும் "நளிகாயந்திரம்" எனப்படும். இதற்கே ஜலோதர யந்திரம் என்றும் பெயர்.

2. தூமயந்திரம்—215-ம் பக்கம் பார்க்க.

3. வஸ்தி யந்திரம்—194, 195, 205 பக்கங்களைப் பார்க்க.

4. ச்ருங்கம்—பீச்சாங்குழல், இப்பொழுது ஸிரிஞ்ஜ் (Syringe) என்று வழங்கப்படும் கருவி. மாட்டுக் கொம்பு முதலியதாலும் இது செய்யப்படுவதுண்டு.

5. அலாபூ என்றால் சுரைக்குடுக்கை; இதனால் செய்யப்படும் யந்திரம் "அலாபூ யந்திரம்" எனப்படுகிறது. சுரைக்குடுவை போன்றதும் அலாபூ யந்திரம் எனப்படும்.

தீயிட்டு ஜ்வலிக்கச் செய்து, அதைக்கொண்டு மிதமிஞ்சிய இரத்தத்தையும் கபத்தையும் இழுக்கலாம்[1].— 27.

**கடீ யந்திரம் :**—அலாபூ யந்திரத்திற்குச் சமானமான அளவுள்ளதாகவே கடீ யந்திரம்[2] என்பதும் செய்யப்படும்; இந்த யந்திரம் குன்மத்தைக் கரைப்பதற்கும், அதை இடம்விட்டுப் பெயர்த்து இழுப்பதற்கும் உபயோகமாகின்றது.—27½.

**சலாகா யந்திரங்கள் :**—காரியத்திலும் உருவத்திலும் வெவ்வேறுவகையாயுள்ள சலாகாயந்திரங்கள் என்னும் கருவிகள் அநேகமுண்டு; அவற்றின் உபயோக முறைகளுக்கு ஏற்றவாறு அவை அளவிலும் அநேகவிதமாயிருக்கும். அவை பின்வருமாறு:—28¼.

**கண்டூபதமுக யந்திரங்கள் :**—மண்ணுணிப் பாம்பின் முகம் போன்ற முனையுடைய கண்டூபதமுகம்[3] என்னும் இரண்டு சலாகைகள் வேண்டும்; அவை ஏஷணம் என்கிற துழாவும் வேலையில் உபயோகமாகின்றன.—28¾.

**மஸூரதள யந்திரங்கள் :**—செவி-நாசி முதலிய ஸ்ரோதோமார்க்கங்களில் பற்றியுள்ள சல்யங்களை மாட்டியிழுத்து வெளிப்படுத்துவதற்காகச் சிறு கடலைப்பருப்பின் முனை போல் சிறிது வளைந்துள்ள முகமுடையவையான இரண்டு சலாகாயந்திரங்கள் வேண்டும்; அவற்றில் ஒன்று எட்டு அங்குலம் நீண்டதாகவும், மற்றொன்று ஒன்பது அங்குலம் நீண்டதாகவும் இருக்கவேண்டும். இவை மஸூரதள யந்திரங்கள்[4] எனப்படும்.—29, 29½.

**சங்கு யந்திரங்கள் :**—ஆறு வகையான சங்குயந்திரங்கள்[5] உண்டு. அவற்றுள் இரண்டு வ்யூஹநம் என்னும் சுறண்டும் வேலைக்கு உபயோகமானவை; அவற்றின் முகம் ஸர்ப்பத்தின் படம் போல் அகன்று சிறிது வளைந்து இருக்கும்; அவ்விரண்டில் ஒன்று பதினாறு அங்குலமும், மற்றொன்று பன்னிரண்டு அங்குலமும் நீண்டிருக்கும்; இவ்விரண்டும் ஸர்ப்பபணயந்திரங்கள்[6] எனப்படும்; பத்து அங்குலம் நீளத்திலும், பன்னிரண்டு அங்குலம் நீளத்திலும் அம்புக் கழிபோன்று இரண்டு சங்குயந்திரங்கள் உண்டு;

---

1. சுரைக்குடுக்கையினுள் அக்னி ஜ்வாலையை விட்டு உள்ளிருக்கும் வாயுவை நீக்கிவிட்டு, அதை வியாதிகொண்ட இடத்தில் கவிழ்த்துவைக்க, அது அவ்விடத்திலுள்ள கபதோஷத்தை அல்லது இரத்தத்தை உறிஞ்சும்.

2. கடீயந்திரம்—சிறு குடுவையைப்போன்ற பாத்திரரூபமான யந்திரம்.

3. கண்டூபதம்—மண்ணுணிப் பாம்பு; அதன் முகம் போன்ற முனையையுடையது 'கண்டூபதமுகயந்திரம்' எனப்படுகிறது.

4. சிறு கடலைப் பருப்பு போன்ற முகமுடைய யந்திரம் "மஸூரதளமுகயந்திரம்" எனப்படுகிறது.

5. சங்கு என்றால் கூச்சு அல்லது முளை; அது போன்ற உருவமுள்ளவை "சங்கு யந்திரங்கள்" எனப்படும்.

6. ஸர்ப்பத்தின் படம் போன்றதாயிருப்பதுபற்றி "ஸர்ப்பபணயந்திரம்" என்று கூறப்படுகிறது.

ஆகவே இவை சரபுங்கமுக யந்திரங்கள்[1] எனப்படும்; இவை கெட்டியாகப் புதைந்துள்ள சல்யங்களை ஆட்டியெடுப்பதற்கு உதவக்கூடியவை. சல்யங்களை இழுப்பதற்கு உதவக்கூடிய இரண்டு சங்குயந்திரங்கள் தூண்டுமுள் போன்றிருக்கும்; அவை படிசயந்திரங்கள்[2] என்று கூறப்படும்.—30, 31.

**கர்ப்ப சங்கு யந்திரம்**:—முனையில் வளைவாகவும், மற்ற உருவத்தில் சங்குயந்திரம் போன்றதாகவும், எட்டு அங்குலம் நீளமுடையதாகவும் செய்யப்படுகிற ஒரு யந்திரம் **கர்ப்பசங்கு**[3] என்று வழங்கப்படும்; அதனால் ஸ்திரீயின் கர்ப்பாசயத்திலிருந்து மூடகர்ப்பம்[4] என்னும் நிலைமையிலுள்ள கர்ப்பத்தை வெளிப்படுத்தலாம்.—32.

**ஸர்ப்பபண யந்திரம்**:—மூத்திர மார்க்கத்திலுண்டாகும் அச்மரீ என்னும் ஒரு வித கல்லை வெளியில் இழுப்பதற்கு உதவக்கூடிய யந்திரம் ஸர்ப்ப பணம் என்று சொல்லப்படும்; அது முனையில் ஒருவாறு விரிந்து வளைந்திருக்கும்.—32½.

**சரபுங்க முகம்**:—கெட்டுப்போன பற்களைக் குத்தி வீழ்த்துவதற்கு உபயோகமான மற்றொரு யந்திரம் சரபுங்க முகம் என்று கூறப்படும்; அது நாலு அங்குலம் நீள முடையதாய் அம்புபோன்ற உருவமுள்ளதாயிருக்கும்.—33.

**மார்ஜந சலாகைகள்**:—(1) ஆறு சலாகைகளை எடுத்து, அவற்றில் ஒவ்வொன்றிலும் தலையில் பஞ்சுகளைச் சுற்றிவைத்துக்கொள்ள வேண்டும்; இவை அழுக்குகளை அல்லது ஈரம் முதலியவற்றைத் துடைப்பதற்கு உதவக்கூடிய மார்ஜந சலாகைகள்[5] எனப்படும். (2) ஆஸநத்வாரத்தில் அருகில் உபயோகிப்பதற்குப் பத்து அங்குலம் நீளமான சலாகையும், சற்றுத் தூரத்தில் உபயோகிப்பதற்குப் பன்னிரண்டு அங்குலம் நீளமான சலாகையும் தேவை. நாசியினுள் உபயோகிப்பதற்கு ஆறு அங்குலத்தில் ஒன்றும், ஏழு அங்குலத்தில் மற்றொன்றும் ஆக இரண்டு சலாகைகள் வேண்டும். செவியினுள் உபயோகிப்பதற்கு எட்டுஅங்குலம் நீளத்தில் ஒன்றும், ஒன்பது அங்குலம் நீளத்தில் மற்றொன்றும் ஆக இரண்டு மார்ஜந சலாகைகள் அவசியமானவையாம்.—34, 34½.

**கர்ண சோதந சலாகை**:—அரசிலையின் விளிம்புபோன்ற ஓரங்களையுடையதாகவும், ஸ்ருவம் என்னும் கரண்டிபோன்ற முகத்தை

---

1. சரபுங்கமுக யந்திரம்— அம்பு முனைபோன்ற யந்திரம்.
2. படிசயந்திரம்—தூண்டுமுள் போன்ற யந்திரம்.
3. கர்ப்பசங்கு—கர்ப்பத்தை இழுப்பதற்கு உபயோகமான யந்திரம்.
4. மூடகர்ப்பம்—பிரஸவ ஸமயத்தில் இயற்கைக்கு விரோதமான நிலைமையில் திரும்பியிருக்கும் கர்ப்பம்; அதாவது கால்கள் கீழாகவோ, ஒரு கால் அல்லது ஒரு கை வெளியாகும்படியாகவோ, உடம்பு உழல் மரம் போல் குறுக்கிட்டோ பலவிதத்தில் கர்ப்பம் ஒழுங்கீனமாக நிற்கும் நிலைமை.
5. மார்ஜந சலாகை— துடைப்பதற்கு உதவக்கூடிய சலாகை.

புடையதுமாய் காதுகளைச் சுறண்டி சுத்தம் செய்வதற்கு உபயோக மான கர்ணசோதநம் என்னும் சலாகை அமைக்கப்படும்.—35.

பலவகையான சலாகாயந்திரங்கள்:—(1) க்ஷாரங்களைப் பிரயோகிப்பதற்குத்[1] தகுந்தவைகளாய் மூன்றுவித சலாகைகளும், அக்னியிற் காயச்சிச் சுடுவதற்கு[2] உபயோகமான மூன்றுவித உருவமுள்ள ஜாம்ப வோஷ்டங்கள்[3] என்னும் சலாகைகளும் வேண்டும். முற்கூறிய சலாகைகளும், பிற்கூறிய ஜாம்பவோஷ்டங்கள் என்னும் சலாகைகளும் தனித்தனியே பருமன், சிறுமன், நீண்டது என்று மூவகைப்படும்[4]. (2) அந்த்ரவர்த்மா என்கிற குடலிறக்கத்தில் உபயோகிக்கக்கூடிய சலாகையானது அதன் மத்திய பாகத்திலிருந்து மேற்புறமாக முனைவரையில் திரண்டு உருண்டும், அடியில் அர்த்த சந்திரன்போல வளைந்தும் இருக்கும்படி அமைக்கப்படவேண்டும். (3) நாசியினுள் உண்டாகும் அர்சஸ்ஸுகளையும் அர்புதத்தையும் சுடுவதற்கு, இலந்தங்கொட்டைப் பருப்புக்குச் சமானமான முகமுள்ளதாய் சலாகை அமைக்கப்படவேண்டும். (4) க்ஷாரரூபமான ஔஷதங்களை எடுப்பதற்கு உதவக்கூடிய வேறு சலாகைகளும் உண்டு; சுண்டுவிரல் நகத்திற்கும், பவித்திரவிரல் நகத்திற்கும், நடுவிரல் நகத்திற்கும் ஸமானமாய் முகத்தில் சிறிது பள்ளத்துடன் கூடியவையாய் முறையே மூன்று சலாகைகள் வேண்டும்; இவை எட்டு அங்குலம் நீண்டவையாயிருக்கும். 36—38.

அநுயந்திரங்கள் :—ஆண்குறி முதலியதைச் சுத்தம் செய்வதற்கும்,[5] அஞ்ஜநமிடுவது முதலிய காரியங்களுக்கும் உபயோகமாகக் கூடிய யந்திரங்களும் ஆங்காங்கு முன்னமே மொழியப்பட்டன. அடியிற்கூறப்படுபவை அநுயந்திரங்கள்[6] ஆக உபயோகப்படும். அவை

---

1. க்ஷாரங்கள் என்னும் காரமான ஔஷத நிர்மாணத்தைப்பற்றிய விவரம் 30-வது அத்தியாயத்தின் இறுதியில் கூறப்படும்.

2. க்ஷாரப்பிரயோகம், அக்னியினால் சுடுதல் இவை 30-வது அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன.

3. ஜாம்பவோஷ்டம்—நாவற்கொட்டையைப் போன்ற உதட்டையுடைய சலாகை.

4. பருமன், சிறுமன், நீண்டது என்னும் சலாகைகள் அடியில் வருமாறு கணக்கிடப்படும் :—(1) ஸ்தூல சலாகை, (2) ஸூக்ஷ்ம சலாகை, (3) தீர்க்க சலாகை என்று சலாகை மூன்றுவிதம். (1) ஸ்தூல ஜாம்பவோஷ்ட சலாகை, (2) ஸூக்ஷ்ம ஜாம்பவோஷ்ட சலாகை, (3) தீர்க்க ஜாம்பவோஷ்ட சலாகை என்று ஜாம்பவோஷ்டம் மூன்றுவிதமாம்.

5. ஆண்குறியைச் சுத்தி செய்தல் என்பது உத்தரவஸ்தியைச் சேர்ந்த சிகித்ஸை; இவ்வாறு சுத்தம் செய்வதற்கான கருவியைப்பற்றி 204, 205-ம் பக்கங்கள் பார்க்க. அஞ்ஜநமிடுவதற்கான சலாகையைப்பற்றி 223-ம் பக்கம் பார்க்க.

6. அநுயந்திரங்கள்—இயந்திரங்களுடைய வேலைக்கு உதவியாகவோ அல்லது அவற்றினும் குறைந்த வேலையைச் செய்வதற்கோ உபயோகப்படும் யந்திரங்கள். இவற்றை உபயந்திரங்கள் என்றுங் கூறுவர்.

யாவன:—அயக்காந்தம், கயிறு, வஸ்திரம், கல், உலக்கை, தோல்வார், நரம்புகள், உரோமங்கள், நாக்கு, கிளைகள், நகம், வாய், பற்கள், கை, கால் என்னும் இவைகளேயாம்; இவையன்றி காலமும், வியாதி அல்லது உட்புகுந்த சல்யங்கள் வெளிப்படுவதற்கான பக்குவ நிலைமை, பயம், ஸந்தோஷம் என்பவையும் சில ஸமயம் அந்த யந்திரங்களைப்போலவே வேலைசெய்யக்கூடியன. உபாயங்களை உணர்ந்த வைத்தியன் அவ்வந்த யந்திரங்களுடைய காரியங்களை நுட்பமாய் ஆலோசித்துப் பகுத்தறிவானாக. 39—40½.

**யந்திரங்களுடைய பொதுவான வேலைகள்:**—இடித்தல், கடைதல், நிறைத்தல், மார்க்கங்களைச் சுத்திசெய்தல், சுறண்டுதல், இழுத்தல், கட்டுதல், நசுக்குதல், உறிஞ்சுதல், உயரத் தூக்குதல், கீழே தாழ்த்துதல், அசைத்தல், ஒடித்தல், புரட்டுதல் அல்லது திருப்புதல், நேர்மையாகச் செய்தல் என்னும் இவை பொதுவாக யந்திரங்களால் செய்யும் வேலைகளாகும்.—41.

**கங்கமுக யந்திரத்தின் விசேஷம்:**—"கங்கமுக யந்திரம்" என்னும் கருவியானது,[1] நன்றாகப் புரண்டு திரும்புமாகையாலும், ஆழமான ஆசயங்களில் எளிதில் நன்றாக உட்புகக்கூடியதாய் இருப்பதாலும், பற்றிக்கொள்ள வேண்டியதை கெட்டியாகப் பற்றி யிழுக்கத் தகுந்ததாயிருப்பதாலும் யந்திரங்கள் அனைத்திலும் இதுவே பிரதானமாயிருக்கின்றது; மேலும் எல்லா அவயவங்களிலுமே உபயோகிப்பதற்கு இதுதான் ஏற்ற கருவியாகும்.—42.

---

## இருபத்தாறும் அத்தியாயம்.

### சஸ்திர விதி.

அப்பால் **சஸ்திர விதி**[2] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—

**சஸ்திர நிர்மாணத்திற்கான பொது விஷயம்:**—ஆயுத நிர்மாணங்களில் திறமை வாய்ந்த வேலைக்காரரால் செய்யப்பட்டு, சிகித்ஸையில் உபயோகிப்பதற்கு ஏற்றவைகளான சஸ்திரங்கள் பொதுவாக இருபத்தாறும்; அவை உரோமங்களைச் சிரைக்கக்கூடிய கருக்குள்ளவைகளாக இருக்க வேண்டும். அச்சஸ்திரங்களில் பெரும்பான்மையானவை ஆறு அங்குலம் நீளமுடையன; அவை பார்ப்பதற்கு அழகாகவும், நல்ல கருக்குள்ளவையாகவும், அழகாகக் கரத்தினுள் அடங்கக் கூடிய பிடிகளுள்ளவையாகவும் செய்யப்பட வேண்டும்;

1. கங்கமுக யந்திரம்—பருந்தின் அலகைப் போன்ற உருவமுள்ள கருவி.

2. சஸ்திரவிதி—தேஹத்தில் வித்ரதி முதலியதை அறுப்பது முதலிய காரியங்களில் உபயோகிக்கும் ஆயுதம் இங்கு சஸ்திரம் எனப்படுகிறது. அவ்வித ஆயுதங்களையும், அவற்றின் உபயோக முறை முதலியவற்றையும் விவரிக்கும் அத்தியாயம்.

அவை நன்றாக ஊதப்பட்ட சுத்தமான எஃகை உருக்கி வார்த்து, ஆகவே காடுகட்டாதவாறு ஒழுங்காக அமைக்கப்பட்டு, நன்றாகத் திரட்டி சாணையிடப்பட்டு, கருநெய்தல் மலர்களைப்போன்ற காந்தியுடையவைகளாகவும் இருக்க வேண்டும்; அவற்றின் உருவங்கள் அதனதன் பெயருக்கு ஏற்ற வண்ணம் அமைந்திருக்க வேண்டும்; அவற்றின் கருக்கானது சஸ்திரத்தினுடைய அகலத்தில் எட்டில் ஒரு பங்காகவும் இருக்க வேண்டும்; எந்தெந்த ஸ்த்தாநத்தில் எந்தெந்த சஸ்திரம் உபயோகிக்க வேண்டுமோ அததற்குத் தகுந்தபடி ஒவ்வொரு சஸ்திரத்திலும் இரண்டோ மூன்றோ வேண்டியிருக்கும். சஸ்திரங்களை வைத்தியர் எப்பொழுதுமே அருகில் ஆயத்தமாய் வைத்திருப்பது அவசியம். 1—4.

மண்டலாக்ரம் :—(1) அவற்றுள் மண்டலாக்ரம் என்னும் சஸ்திரம்[1] ஆள்காட்டி விரலுடைய நகத்தின் உட்புறம்போல வளைந்து கூர்மையான கருக்குடன் கூடியது. (2) இந்த சஸ்திரம் போதகீ, சுண்டிகா முதலிய[2] வியாதிகளைக் கீறுவதற்கும், அறுப்பதற்கும் உபயோகிக்கப்படும்.—5.

வ்ருத்தி பத்திரம் :—(1) க்ஷுரம் என்னும் கத்திபோல் வ்ருத்தி பத்திரம் என்கிற சஸ்திரத்தை[3] அமைக்க வேண்டும். இது அறுத்தல், வெட்டுதல், கிழித்தல் என்னும் வேலைகளில் உதவும். (2) வீக்கம் மேலாக உயர்ந்திருந்தால் அதில் வளைவில்லாமல் நீண்ட முனையுடன் கூடிய விருத்தி பத்திரமும், அதற்கு மாறாக ஆழமான வீக்கத்துடன் கூடிய விரணத்தில் பின்புறமாக வளைந்த முனையையுடைய வ்ருத்தி பத்திரமும் உபயோகிக்கத் தகுந்தவையாம்.—6.

உத்பலபத்திரமும் அத்யர்த்ததாரையும் :—உத்பலபத்திரம் என்றும்,[4] அத்யர்த்ததாரை என்றும்[5] இரண்டு சஸ்திரங்கள் உண்டு; இவற்றுள் முதலிற் கூறியது சிறிது நீண்ட முகமுடையது; சேதநம் என்கிற அறுக்கும் வேலையில் உபயோகிக்கக் கூடியது. இரண்டாவது சஸ்திரமோ குறுகிய முகமுடையதாய் பேதநம் என்னும் பிளக்கும் வேலையில் பிரயோகிக்கத் தகுந்ததாம்.—6¾.

ஸர்ப்ப முகம் :—(1) ஸர்ப்பமுகம்[6] என்னும் சஸ்திரம் நாசியிலும் செவியிலும் உண்டாகும் அர்சஸ்ஸுகளை அறுப்பதற்கும்

1 மண்டலாக்ரம்—சிறிய வாள்.

2. போதகீ, சுண்டிகா என்பவை நேத்திரத்திலுண்டாகும் சில வியாதிகள்.

3. வ்ருத்தி பத்திரம்—அகன்ற தளமுள்ள கத்தி.

4. உத்பல பத்திரம்—நெய்தல்மலரைப்போன்ற தளத்தையுடைய சஸ்திரம்.

5. அத்யர்த்ததாரை—உத்பலபத்திரத்திலும் ஒன்றரைப் பங்கு குறைந்த அகலமான கூர்மையுடைய சஸ்திரம்.

6. ஸர்ப்பமுகம்—ஸர்ப்பத்தின் முகம்போன்ற முனையையுடைய சஸ்திரம்.

வெட்டுவதற்கும் உதவும்; (2) இதன் கருக்கு அரை அங்குலம் அகலமுடையதாயிருக்கும்.—7½.

**ஏஷணீ** :—(1) விரணம் முதலியவற்றில் புரையோடும் வழியைத் துழாவுவதற்கு உபயோகமான சஸ்திரம் ஏஷணீ[1] என்று வழங்கப்படும். (2) அது கரடுமுரடாக இல்லாமல் வழுமுண்டு மண்ணுணிப்பாம்பு போன்ற முகமுடையதாய் அமைக்கப்பட வேண்டும்.—8.

**ஸூசீமுக ஏஷணீயும் வேதஸ பத்திரமும்** :—பேதகம் என்னும் பிளக்கும் வேலையில் உபயோகமாகக் கூடியதும், ஊசி முனைபோன்ற முகமுடையதுமான மற்றொரு ஏஷணீ[2] உண்டு; இதற்கு அடியில் ஒரு த்வாரமும் அமைக்கப் பட்டிருக்கும். வஞ்சியிலை போன்ற கருக்கும் உருவமுமுள்ளதாய் வேதஸ பத்திரம் என்னும் சஸ்திரம்[3] நிர்மிக்கப்படும்; இது குத்துவதற்கு உதவும்.—8¾.

**சராரீமுகம், த்ரிகூர்ச்சம், குசாடா** :—சராரி யென்னும் பக்ஷியின் முகம்போன்ற முகமுடையதாம் அமைக்கப்பட்ட சஸ்திரத்திற்கு **சராரீ முகம்**[4] என்று பெயர். அவ்வாறே மூன்று முனைகளுடன் கூடியதாய் செய்யப்படும் சஸ்திரத்திற்கு **த்ரிகூர்ச்சகம்**[5] என்று பெயர்; இவ்விரண்டு சஸ்திரங்களும் ஸ்ராவ்யம் என்கிற இரத்தத்தைப் பெருக்கும் வேலைக்கு உபயோகப்படுகின்றன. வாயினுள் இரத்தம் ஸ்ரவிக்கச் செய்வதற்கு **குசாடா**[6] என்னும் சஸ்திரம் பிரயோகிக்கப்படும்; சராரீமுகத்தினுடையவும், குசாடாவினுடையவும், கருக்கு முனைகள் இரண்டு அங்குலம் அளவாகச் செய்யப்பட வேண்டும்.—9, 9½.

**அந்தர்முகமும் அர்த்த சந்திர முகமும்** :—அந்தர்முகம்[7] என்னும் சஸ்திரமும் ஒருவாறு குசாடாவைப்போன்றதாகவே இருக்கும்; அதனுடைய கருக்கு ஒன்றரை அங்குலம் அளவுள்ளதாகும்.

---

1. ஏஷணீ—இது "ஸாதாரண ஏஷணீ" அல்லது "கண்டுபத முக ஏஷணீ" என்று கூறப்படும்.

2. ஊசிமுனைபோன்ற முகமுடையதாகையால் ஸூசீமுகைஷணீ என்று இது கூறப்படுகிறது.

3. வேதஸபத்திரம்—நீர்வஞ்சியிலை போன்றதாயிருப்பதால் இப்பெயர் வந்தது.

4. சராரீயென்பது மிக்க நீண்டும் அடியில் ஆழமாக விரிந்துமுள்ள அலகையுடைய பக்ஷி; அவ்வித பக்ஷியின் அலகுபோன்ற முனையுடைய சஸ்திரம் சராரீமுகம் என்று கூறப்படுகிறது.

5. மூன்று முனைகளிருப்பதால் த்ரிகூர்ச்சகம் எனப்படுகிறது.

6. குசாடா—தர்ப்பம்போல் நீண்டும் அதுபோல் கூர்மையாகவுமுள்ள சஸ்திரம்.

7. அந்தர்முக சஸ்திரம்—கத்தரி முதலியவற்றிற்கு இருப்பதுபோல் உட்புறமாகக் கருக்கையுடைய சஸ்திரம்.

அர்த்த சந்திரமுகம்[1] என்னும் சஸ்திரமும் ஒருவாறு அந்தர்முகம் போலவே இருக்கும்.—10¼.

வ்ரீஹிமுகம் :—வ்ரீஹிமுகம்[2] என்னும் சஸ்திரம் முனையில் ஒன்றரை அங்குலம் அளவுடையதாயிருக்கும்; அதை ஸிரைகளென்னும் இரத்தக் குழாய்களையும், வயிற்றையும் கீறுவதற்குப் பிரயோகிக்கவேண்டும்.—11.

குடாரீ:—பசுவின் பல்லைப்போன்ற உருவமுள்ளதாய் அரை அங்குலம் அளவுள்ள முகமுடையதாக குடாரீ[3] என்னும் சஸ்திரம் பெரிய உருவாகச் செய்யப்படவேண்டும்; இச்சஸ்திரம் ஒரு தண்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கும்: இதை உயரநிமிர்த்தியவாறு அஸ்த்திகளின்மேல் அமைந்துள்ள ஸிரையைக் கீறவேண்டும்.—12.

த்விமுக சலாகை :—செம்புக்கம்பியினால் இரண்டு முனையிலும் முகமுடையதாகச் சலாகை ஒன்று செய்யவேண்டும்; அதன் முகம் சிவந்த மருதோன்றிச் செடியின் மொட்டுபோன்றதாயிருக்க வேண்டும்; இது த்விமுக சலாகை எனப்படும்; இதனால் லிங்கநாசம்[4] என்னும் நேத்திரத்திலுண்டாகும் வியாதியைக் கீறலாம்.—12¾.

அங்குலி சஸ்திரம் :—அங்குலிசஸ்திரம்[5] என்பதை அடியில் வருமாறு அமைக்கவேண்டும்: மோதிரம் மாதிரி வலயம் செய்யப்பட்டு, அதிலிருந்து இச்சஸ்திரத்தின் முகம் ஆரம்பிக்கப்பட்டு நீண்டிருக்க வேண்டும்; இதன் கூரான பாகம் அரை அங்குலம் நீண்டிருக்கவேண்டும்; இதன் உருவம் வ்ருத்திபத்திரம் போன்றதாகவோ மண்டலாக்ரம் போன்றதாகவோ இருக்கும்; ஆள்காட்டி விரலின் முதற்கணுவில் பிடிக்கக்கூடிய அளவுள்ள மோதிரமுடையதாய் இரண்டு தாள்களும் ஒன்றோடொன்று இணைந்திருப்பதற்காக ஸூத்திரத்தினால் கட்டப்பட்டிருக்கும். இது தொண்டையிலுண்டாகும் ரோகங்களைச் சேதநம் செய்யவும் பிளக்கவும் உபயோகிக்கப்படும். 13—15.

படிசம் :—படிசம்[6] என்னும் சஸ்திரமானது களசுண்டியென்னும் தொண்டையினுள் வீங்கிய கிரந்திகளையும், அர்மம் முதலிய

---

1. அர்த்த சந்திரமுகம்—முனையில் அஷ்டமீ சந்திரனைப்போன்ற உருவமுள்ளது.

2. வ்ரீஹிமுகம்—வ்ரீஹியென்றால் நெல்; அது போன்ற முகமுடைய சஸ்திரம்.

3. குடாரீ—சிறிய கோடாரியைப்போன்ற சஸ்திரம்.

4. லிங்கநாசம்—தர்சந சக்தியை முற்றிலும் போக்கி நேத்திரத்தில் வெளிச்சம் சிறிதும் உட்புகாவண்ணம் செய்துவிடும் நேத்திர வியாதி.

5. அங்குலி சஸ்திரம்—விரலில் மாட்டிக்கொண்டு தொண்டையில் சஸ்திர சிகித்ஸை செய்வதற்கு உபயோகமான சஸ்திரம்.

6. படிசம்—தூண்டுமுள்.

மற்ற வீங்கிய பாகங்களையும் பற்றிக் கொள்வதற்கு உபயோகமான சஸ்திரம்; இதன் முகம் நன்றாக வளைந்திருக்கும்.—15½.

**கரபத்திரம்** :—அஸ்திகளை அறுப்பதற்கு உபயோகமானது கரபத்திரம்[1] என்னும் சஸ்திரம்; இதன் கருக்கு மிகவும் கடினமாயிருக்கும்; இது நீளத்தில் பத்து அங்குலமும், அகலத்தில் இரண்டு அங்குலமுமாயிருக்கும்; பற்கள் சிறியவைகளாய் வரிசையாய் அமைந்திருக்கும்; கைப்பிடி முதலிய பந்தகங்கள் கெட்டியாக இணைக்கப்பட்டிருக்கும்.—16½.

**கர்த்தரி**:—ஸாதாரண கர்த்தரியைப்போலவே இன்னும் தீக்ஷ்ணமாக கர்த்தரீ என்னும் சஸ்திரம் அமைக்கப்படும்; இது ஸ்நாயுக்களையும்[2], நூல்களையும், மயிர்களையும் அறுப்பதற்கு உபயோகிக்கப்படும்.—17.

**நக சஸ்திரம்** :—ஒன்பது அங்குலம் நீளத்தில் இரண்டு முகங்களுடையதாய் நகசஸ்திரம்[3] என்னும் கருவியைச் செய்யவேண்டும்; அதில் ஒரு பக்கத்து முனை நகம்போல் வளைவாகவும், மற்றொரு பக்கத்து முனை நேர்மையாகவும் உள்ள கருக்குகளுடன் கூடியதாயிருக்கும். இக்கருவி ஸூக்ஷ்மமான முள் முதலிய சல்யங்களை வெளிப்படுத்தவும், அறுத்தல், குத்தல், சொரிதல், கீறல் என்னும் வேலைகளைச் செய்யவும் உபயோகமானது.—18.

**தந்தலேகநம்** :—ஒரே பக்கத்தில் கருக்குடையதாகவும், நாற்சதுரமான நாளமுள்ளதாகவும், மற்றொரு பக்கத்தில் கட்டுள்ளதாகவும் தந்தலேகநம்[4] என்னும் சஸ்திரம் நிர்மிக்கப்படும்; இதனைல் பற்களின் பின்புறத்திலுண்டாகும் தந்தசர்க்கரைகளைத்[5] தேய்த்துச் சுத்தி செய்யலாம்.—19.

**ஸூசிகள்** :—சஸ்திரகர்மத்தில் தைப்பதற்கு உதவக் கூடிய மூன்று விதமான ஊசிகள் உண்டு; அவை நூல்கள் புகுந்து அடங்கக் கூடியவையாகவும், எளிதில் ஒடியாவண்ணம் திடமாகவும் இருக்கவேண்டும்; சதை பருத்த இடங்களைத் தைப்பதற்கு வேண்டிய ஊசிகள் மூன்று பட்டைகளுள்ளனவாய் மூன்று அங்குலம் நீண்டிருக்கவேண்டும். சதை குறைந்து எலும்பு அடர்ந்த இடங்களிலும் ஸந்திகளிலும் உள்ள விரணங்களைத் தைப்பதற்கு இரண்டு அங்குலம் நீண்டதாயிருக்கவேண்டும். பக்வாசயம் ஆமாசயம் முதலிய விடங்களைத் தைக்கவேண்டுமானல், நெல்லைப் போன்ற முக

1. கரபத்திரம்—சிறிய கைவாள்.

2. ஸ்நாயு—தசை நார்கள் என்னும் மாம்ஸ பேசிகளை எலும்புகளுடன் சேர்த்துப் பிணைக்கும் தசைநார்.

3. நகசஸ்திரம்—முள்வாங்கியைப்போன்ற கருவி.

4. தந்தலேகநம்—பற்களைச் சுறண்டும் கருவி.

5. தந்த சர்க்கரை—பற்களின் பின்புறங்களிலும் இடுக்குகளிலும் சுண்ணும்புபோல் காடு கட்டியிருக்கும் காரை யெனப்படும் செதில்கள்.

முடையதாகவும், வில்லைப்போல் வளைந்ததாகவும், இரண்டரை அங்குலம் நீண்டதாகவும் ஊசி இருக்கவேண்டும்.—20, 21½.

**கூர்ச்சம்** :—அவ்வூசிகள் முற்றிலும் திரண்டுருண்டவைகளாய் நாலு அங்குலம் நீண்டும் இருக்குமானால் அதற்குக் கூர்ச்சம்[1] என்று பெயர்; வட்டமான சிறியதோர் பீடத்தில் இவ்விதமான ஏழெட்டு ஊசிகளை வைத்து அனைத்தையும் ஒன்றாகக் கட்டி விடவேண்டும். இக்கூர்ச்சத்தை - நீலிகா-வியங்கம் என்கிற வியாதிகளிலும், மயிர்களை உதிர்ப்பது-கொந்துவது என்னும் வேலைகளிலும் உபயோகிக்கலாம்.—22, 22½.

**கஜம்** :—அரை அங்குலத்திற்கு உட்பட்ட முகமுடைய எட்டு முட்களை வட்டமானத் தன் சிகரத்தைச் சுற்றிலுமுடையதான சஸ்திரம் கஜம்[2] எனப்படும்; இதை நாசியினுள் மெதுவாகச் செலுத்தி இரண்டு கைகளாலும் கடைந்து துஷ்ட ரத்தத்தை அங்கிருந்து வெளிப்படுத்தலாம்.—23½.

**யூதிகா** :—கர்ணபாளீ யென்னும் காதிலுண்டாகும் விரணங்களைக் குத்தி ஸ்வஸ்தம் செய்வதற்கு யூதிகா[3] என்னும் சஸ்திரம் உபயோகிக்கப்படும்; அது மொட்டுபோன்ற முகமுடையதாயிருக்கும்.—24.

**ஆரா** :—ஆரா[4] என்னும் சஸ்திரம் முகத்தின் வட்டத்தில் அரை அங்குலம் அளவுள்ளதாயிருக்கும்; விரணம் முதலியவற்றில் உட்செல்லக் கூடிய அதன் மேற்பாகமும் அரை அங்குலம் அளவாகவே அமைக்கப்பட்டிருக்கும்; நான்கு பட்டைகள் தீர்ந்த இச்சஸ்திரத்தினால் பக்குவமாயிற்றா ஆமநிலைமையில் இருக்கிறதாயென்று நிச்சயிக்க முடியாத வீக்கத்தையும், அதிகமாய் விருத்தியான கர்ணபாளீ யென்னும் காதிலுண்டாகும் விரணத்தையும் கொந்தி யெடுக்கலாம்.—25¼.

**கர்ணவேதநீ** :—கர்ணவேதநீ யென்னும் ஒருவித ஊசியானது மூன்று அங்குலம் நீண்டிருக்கும்; அதில் முனைக்குக் கீழே மூன்றில் ஒரு பங்கு தூரத்தில் த்ராமம் அமைக்கப்பட்டிருக்கும்; இது காது குத்துவதற்கும், கர்ணபாளிகளைக் கொந்துவதற்கும் உதவும்.—26.

**அநுசஸ்திரம் முதலியவை** :—அட்டை, க்ஷாரங்கள், அக்னி, காசம் என்னும் கண்ணாடித்துண்டு, சிலைகள், நகம் முதலிய லோஹ

---

1. கூர்ச்சம்—நீண்ட அநேகம் தாள்களைப்போன்ற ஊசிகள் சேர்ந்து கூர்ச்சம்போல் அமைந்ததால் கூர்ச்சம் எனப் பெயர் வந்தது.

2. கஜம்—துடுப்பு என்று பொருள்; ஆனால் இது ஒருவாறு மத்தைப் போல் இருக்கும்.

3. யூதிகா—முல்லைப் பூவைப்போல் இருப்பதால் இப்பெயர் வந்தது.

4. ஆரா—ஒருவிதமான அரம் என்னும் கருவி.

ஸம்பந்தமற்ற வஸ்துக்கள் அநுசஸ்திரங்கள்[1] எனப்படும். இவ்வாறே வைத்தியர் அவரவருடைய யுக்தியையும் யோசனையையும் உபயோகித்து இன்னும் அநேக சஸ்திரங்களையும், வேறு வகையான யந்திரங்களையும் சிகித்ஸா முறைகளுக்கு உதவுமாறு அமைத்துக் கொள்வார்களாக.—27, 27½.

சஸ்திரங்களுடைய ஸாதாரண வேலைகள் :—வெளியில் பிடுங்கியெடுத்தல், பிளக்குதல், தைத்தல், துழாவல், கீறுதல், கொந்துதல், குத்துதல், அறுத்தல், வெட்டுதல், கடைதல், பற்றிக்கொள்ளுதல், சுடுதல் என்னும் இவை இச்சஸ்திரங்களுடைய வேலைகளாம்.—28½.

சஸ்திரங்களுக்குப் பொதுவான எட்டு தோஷங்கள் :—கூர்மையின்மை, கருக்கில் சிதைவு, வேண்டிய அளவினும் மிக மெல்லியதாயிருத்தல், மிகப் பருமனாயிருத்தல், குறுகியிருத்தல், மிகவும் நீண்டிருத்தல், வளைந்திருத்தல், கருக்கு மழுக்கங் கொண்டிருத்தல் என்னும் இவை சஸ்திரங்களுக்குப் பொதுவாய் ஏற்படக்கூடிய எட்டு தோஷங்களாம்.—29½.

சஸ்திரங்களைப் பிடிக்கும் வகை :—அறுத்தல், பிளத்தல், கீறுதல் என்னும் இக்காரியங்களைச் செய்வதற்குச் சஸ்திரத்தை அதன் கணுவுக்கும் கருக்குமுனைக்கும் இடையில் ஆள்காட்டிவிரல், நடுவிரல், பெருவிரல் இவற்றால் அசைவற்றதாய் திடமாகப் பிடிக்க வேண்டும். ஸ்ராவணம் என்னும் இரத்தத்தைக் கசியவிடவேண்டிய வேலைகளில் சஸ்திரத்தை அதன் கணுவின் முடிவில் ஆள்காட்டிவிரலாலும் பெருவிரலாலும் கிரஹிக்க வேண்டும். விரீஹிமுகம் என்னும் ஆயுதத்தைக் கரதலத்தில் அதன் கணுப்பிரதேசம் வரையில் மறைந்திருக்குமாறு பிடித்துக்கொண்டு முகத்தைக் கிரஹித்து வேலை செய்ய வேண்டும். ஆஹரணம் என்னும் பிடுங்கியெடுக்கும் வேலையில் சஸ்திரங்களை அடிப்பிரதேசங்களில் பிடிக்க வேண்டும். மற்ற வேறு சஸ்திர சிகித்ஸைகளில் ஸௌகரியப்படி கருவிகளைப் பிடித்துக் கொள்க. 30—32.

சஸ்திரகோசம் என்னும் கருவிப்பெட்டி :—சஸ்திரங்களை வைப்பதற்கான கோசம் என்னும் பெட்டி அடியிற் கூறப்படுமாறு அமைக்கப்படும் : பெட்டியானது ஒன்பது அங்குலம் அகலமும், பன்னிரண்டு அங்குலம் நீளமுமுள்ளதாய் தகுந்தவாறு பருமனாக இருக்கவேண்டும் ; முகமற்பட்டு, மயிரிழை முனைகள் மேல் தூக்கி நிற்கும் ஒருவிதப் பட்டு, ஸாதாரணப்பட்டு, வெண் பட்டு, மிருதுவான சர்மம் இவ்வஸ்துக்களால் அது அமைக்கப்பட வேண்டும் ; தையல் கெட்டியாகவும் பார்ப்பதற்கு விகாரமில்லாமல் அழகாக

1. அநுசஸ்திரங்கள்—சஸ்திரங்களுக்கு உதவியான கருவிகள் என்றும், அவற்றினும் சிறிது குறைவான வேலைகளைச் செய்யக்கூடியவையென்றும் கருதி இவை அநுசஸ்திரங்கள் எனப்படுகின்றன ; இவை உப சஸ்திரங்கள் என்றும் கூறப்படும்.

வும் அமைந்திருக்க வேண்டும்; சஸ்திரங்கள் வைப்பதற்கு ஏற்ற வாறு இடையிடையில் பட்டு அல்லது மயிரிழைகள் வைத்து இடை வெளி ஏற்படுத்தப் பட்டிருக்கும்; பெட்டியின் உள்ளே சஸ்திரங் கள் வைக்குமிடத்தில் அடியில் நெடுக ஒரு நூல் அல்லது மிருது வான மெல்லிய கயிறை வைத்திருக்க வேண்டும்; இதன் மேல் மூடியைப் பூட்டுவதற்கு அநுகூலமான தாழ்ப்பாள் இடப்படவேண் டும்; கோசமானது முற்றிலும் அழகாகவும் ஏந்துவதற்கு ஏற்ற வாறும் அமைக்கப்பட்டிருக்க வேண்டும்.—33, 34.

**அட்டைகளின் பிரயோகத்திற்கு ஏற்றவர்கள்** :—கஷ்டங்களைத் தாங்கமுடியாத ஸுகதேஹிகளுடைய சரீரத்திலிருந்து இரத் தத்தை ஸ்ராவிக்கச் செய்யவேண்டுமானால் அட்டைகளைப் பிர யோகிக்கவேண்டும்.—35.

**விஷகுணமுள்ள அட்டைகள்** :—கெட்டுப்போன ஜலத்திலும், மத்ஸியம்-தவளை-ஸர்ப்பம் இவை முதலியவற்றின் சவங்கள் அழுகி யும் மற்றும் பலவித அழுக்குகள் சேர்ந்துமுள்ள இடங்களிலும் உற்பத்தியான அட்டைகளும், சிவப்பாகவோ வெண்மையாகவோ மிகவும் கறுப்பாகவோ இருப்பவையும், வெகு சபலமாக அசைப வையும், பருத்துப் பசையுள்ளவையும், இந்திர தநுஸ்ஸைப் போல் பலவர்ணங்களான வெவ்வேறுவரிகளை மேலே அமையப் பெற்றவை யும், மயிர்கள் அடர்ந்தவையுமான அட்டைகளும் விஷகுணமுள்ள வையாகையால் அவற்றை இச்சிகித்ஸையில் உபயோகிக்கக் கூடாது.—36, 36$\frac{3}{4}$.

**விஷகுணமுள்ள அட்டைகளாலுண்டாகும் தீங்குகளும், பரி ஹாரமும்** :—அவ்வித விஷகுணமுள்ள அட்டைகளைப் பிரயோகிப் பதால் சொரி, சிறங்குகள், அழற்சி, ஜ்வரம், தலைச்சுற்றல் என்னும் இவ்விகாரங்கள் ஸம்பவிக்கும். அவ்வித நிலைமையில் விஷஹரமாக வும் இரத்தபித்தவிகாரங்களைப் பரிஹரிக்கத்தகுந்ததாகவும் உள்ள சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—37$\frac{1}{4}$.

**சுத்தமான அட்டைகள்** :—சுத்தமான ஜலத்தில் உற்பத்தியான அட்டைகள் விஷத்தன்மை நீங்கியவைகளாகவும், பாசிபோல் ஒரு வாறு கறுநிறமுள்ளவைகளாகவும், திரண்டுருண்டு நீலமான மேல் வரிகளுடன் கூடியவையாகவும், ஒருவாறு மங்கல் நிறமான பிருஷ்ட பாகமுடையவையாகவும், வயிற்றில் மட்டும் சிறிதளவு பொன்னிற மாகவும், மெலிந்த தேஹமுள்ளவையாகவும் இருக்கும்.—38, 38$\frac{1}{2}$.

**இரத்தமதங்கொண்ட அட்டைகள்** :—சுத்தமான அவ்வித அட்டைகளையும் அவை குடித்த இரத்தத்தை நன்றாகக் கக்கச் செய்யாமல் விடுவதாலும், அடிக்கடியும் அவற்றையே மீண்டும இரத்தமுறிஞ்சுவதற்குப் பிரயோகிப்பதாலும் ஜலத்தில் விடும் போது அவை கஷ்டப்பட்டு உறங்கி அசையக் கூடாமலிருக்கும்; அத்தகைய ஜந்துக்கள் இரத்தத்தினால் மதமேறிவிட்டதாக அறிந்து அவற்றை உபயோகிக்காமல் பரிஹரிக்க வேண்டும்.—39$\frac{1}{2}$.

அட்டைகளைப் பிரயோகிக்கும் வகை :—*எவ்வித தோஷமுமில்லாத மற்ற அட்டைகளை, மஞ்சள் அரைத்துக் கரைத்த ஜலத்தில் மிதக்க விடவும்; அல்லது காடியிலாவது, மோரிலாவது விடவேண்டும்; மறுபடியும் எடுத்து சுத்த ஜலத்தில் விட்டு அவைகளுக்குத் தேறுதலுண்டு பண்ணவும். பிறகு அட்டைவிடவேண்டிய இடத்தில் நெய்யைத் தடவி, சஸ்திரத்தினால் கீறி இரத்தத்தை ஒரு சிறிது கசியச்செய்து, அட்டைகளை அவ்விடத்தில் கடிக்கவிடவும். அவை தலையை நீட்டிக்கொண்டு இரத்தத்தை உறிஞ்சும்; அப்பொழுது மிருதுவான வஸ்திரத்தினால் அவற்றை மறைத்து வைக்கவும்.*[1] 40—41½.

அட்டை அசுத்தரக்தத்தை மாத்திரம் கிரஹிப்பது :—*அன்னப்பறவை ஜலம் கலந்த பாலிலிருந்து பாலை மட்டும் பிரித்துக் குடிப்பது போல, தேஹத்தில் அசுத்த ரக்தத்தோடு கூடவே சுத்த ரக்தமும் கலந்திருந்த போதிலும், அதிலிருந்து அட்டை அசுத்தமான இரத்தத்தை மாத்திரம் முதலில் பிரித்துக் குடித்துவிடும்.*—42½.

அட்டையை விடுவிக்க வேண்டிய ஸமயமும் அதைக் கக்கச்செய்வதும் :—(1) *கடித்த இடத்தில் குத்தல் வலியாவது, தினவாவது உண்டானால், உடனே அட்டையை இழுத்து விட்டு, அதன் முகத்தில் சிறிது உப்பையும் எண்ணெயையும் தடவி, பிறகும் மிருதுவான அரிசிமாவால் ரூக்ஷமாகவும் செய்து, இரத்தத்தைக் கக்கச் செய்யவும் வேண்டும்.* (2) *அவ்வாறு ஒரு முறை இரத்தங்குடித்து விட்ட அட்டைகளுக்கு இரத்தவெறி உண்டாகாமல் இருப்பதற்காக, அவற்றைப் பிடித்து மறுபடியும் வேறு காயங்களின் வாயில் இரத்தம் உறிஞ்சுவதற்கு விடக்கூடாது.*—43, 44.

ஸம்யக்வாந்த-அதிவாந்த-துர்வாந்தமான அட்டைகளின்[2] இலக்ஷணங்கள் :—(1) *அட்டைகள் குடித்த துஷ்ட ரக்தத்தை நன்கு கக்கிய பிறகு, அவற்றிற்கு மீண்டும் முன் போலவே சுறுசுறுப்பும், பலமும் உண்டாகும்.* (2) *மிதமிஞ்சி இரத்தத்தைக் கக்கினால் அதிக வாட்டமுண்டாகும், அல்லது அவை இறந்துவிடும்.* (3) *வேண்டியவளவு துஷ்ட இரத்தத்தைக் கக்காவிட்டால் அட்டைகள் திமிர்த்துப்போய் மதங்கொண்டும் இருக்கும்.*—45.

அட்டைகளைக் காப்பாற்றும் வகை :—*அட்டைகளின் வாயிலிருந்து ஊறும் சொள்ளு நீரும், மற்றும் எச்சிலும் வஸ்துக்களும், ஜலத்தில் விழுந்து அழுகிய பதன் கெட்டுப்போய், அவற்றிற்கு*

---

1. *இரத்தத்தைக் குடிக்கும்போது பிசாசியாகிய மூதேவியவர் மனதில் அச்சங்கொள்வர் என்று அட்டையை மூடவேண்டும் எனப் படுகிறது.*

2. *ஸம்யக் வாந்தம்—நன்றாக வமனம் செய்விக்கப்பட்டது. அதிவாந்தம்—அதிகமாக (மிதமிஞ்சி) வமனம் செய்விக்கப்பட்டது. துர்வாந்தம்—போதுமாறு வமனம் செய்விக்கப்படாதது.*

கெடுதியுண்டு பண்ணுமலிருப்பதன் பொருட்டு, அந்த அட்டைகளை, மண்ணும் தண்ணீரும் நிரம்பிய வெவ்வேறு தொட்டியில் அப்போதைக்கப்போது மாற்றி மாற்றி விட்டுவர வேண்டும்; இல்லையேல், அவ்வாறு பதன் கெட்ட ஜலத்தின் ஸம்பந்தத்தினுல் அட்டைகள் விஷப்பற்றுள்ளவைகளாய் விடும்.—46.

அட்டைகளை விட்டும் இரத்தம் அசுத்தமாயிருந்தால் செய்யவேண்டிய உபசாரம்:—இரத்தம் இன்னும் அசுத்தமாயிருப்பதாகத் தெரியவந்தால், மஞ்சள், வெல்லம், தேன் இவற்றைக் கடித்த விடத்தில் நன்ருகத் தேய்த்து, அவ்விடத்திலிருந்தும் இரத்தம் நன்கு வெளிப்படும்படிச் செய்யவும். அப்பால், "சததௌத க்ருதம்" என்னும் நெய்யைக்கொண்டு[1] ஒற்றடம் கொடுத்து, சீதளமான களிம்புகளையும் அக்கடிகளின்மேல் பூசலாம்.—47.

அசுத்த ரத்தம் வெளியானதும் உண்டாகும் குணங்கள்:—அசுத்தமான இரத்தம் வெளிப்படுத்தப்பட்டதும், உடனே வியாதியும் நிவ்ருத்தியாகும்; உடம்பிலுண்டான வலி முதலியவைகளும் சாந்தமாய்விடும்.—47½.

ஸ்த்தாநம் விட்டுப் பெயர்ந்த இரத்தத்தை நன்கு வெளிப்படுத்தல்:—அசுத்தமான இரத்தம் அதன் ஸ்த்தாநத்திலிருந்து கிளப்பப்பட்டு, விரணத்தின் முகத்தில் வந்து நின்றுவிடுமாலுல், அப்பொழுது அந்த இரத்தம் பழுகிப்போய் அம்லமாக ஆய்விடும். அவ்வாறு நேரிடாமலிருப்பதன்பொருட்டு அந்த இரத்தத்தை மறுபடியும் வடியச்செய்ய வேண்டும்.—48½.

அலாபு-கடிகைகளை உபயோகிக்கக் கூடாத நிலைமைகள்:—சுரைக்குடுக்கைகளையாவது, கடிகைகள் என்னும் குடுவைகளையாவது, இரத்தம் பித்தத்தினுல் தூஷிக்கப்பட்டிருக்கும்போது அதை வெளிப்படுத்துவதற்காக உபயோகிக்கக் கூடாது; அக்கருவிகளில் அக்னியை உபயோகிக்கவேண்டியிருப்பதால், அவை இந்த நிலைமையில் தகாதவைகளாம்.[2] ஆனல் இரத்தம் கபத்தினுலாவது வாயுவினுலாவது கோளாறடைந்திருக்கும் நிலைமையில் அக்கருவிகளை உபயோகிக்கலாம்.—49½.

ச்ருங்கத்தினுல் இரத்தம் வெளிப்படுத்தக்கூடாத நிலைமைகள்:—கபத்தினுல் கோளாறடைந்த இரத்தம் இறுகிப்போகுமாதலால், அதை ச்ருங்கம் என்னும் பீச்சாங்குழலால் வெளிப்படுத்தக் கூடாது. ஆனல் வாத-பித்தங்களால் கோளாறடைந்துள்ள இரத்தத்தை ச்ருங்கத்தினுல் வெளிப்படுத்தலாம்.—50½.

---

1. சததௌத க்ருதம்—நூறு தடவை ஏதேனும் கஷாய வகைகளில் கடைந்தெடுத்து பக்குவம் செய்த நெய்.

2. பித்தத்தை உஷ்ணவீர்யமான பதார்த்தங்கள் அல்லது சிகித்சைகள் விருத்தி செய்யுமாகையால், அக்னி ஸம்பந்தமுள்ள அலாபு-கடிகைகள் தகாதவையென்று கூறப்பட்டது.

**துஷ்ட இரத்தத்தை வெளிப்படுத்தும் பலவித முறைகள் :—** இரக்தமோக்ஷணம் செய்யவேண்டிய அவயவத்திற்குச் சிறிது மேலே கயிற்றாலாவது வஸ்திரத்தினாலாவது மேடு பள்ளமில்லாமல் கெட்டியாகக் கட்டி, இரத்தம் வெளிவருமாறு கீண்டிவிடவும்; ஸ்நாயுக்கள், ஸந்திகள், எலும்புகள், மர்மஸ்தானங்கள் இவற்றில் சஸ்திரம் படக்கூடாது. கொந்தும் வாட்டமானது மேலிருந்து கீழ்முகமாகச் சாய்ந்ததுபோலவும், முதலில் கீழே ஆரம்பித்து கிரமமாக மேலேயும் சஸ்திரத்தினால் கொந்திக்கொண்டு போகவேண்டும்; கொந்துதல் அதிக ஆழமாகவாவது, ஒன்றுக்கொன்று வெகு நெருக்கமாகவாவது, நீளத்தில் குறுக்காகவாவது விழக்கூடாது; மேலும் ஒருமுறை கொந்திய இடத்திலேயே மற்றொரு முறை கொந்துவதும் தகாது. ஒரே இடத்தில் தங்கியுள்ள துஷ்ட இரத்தத்தைக் கொந்தியெடுத்துவிடலாம்; கட்டிப்போய் அல்லது தோய்ந்துள்ள இரத்தத்தை அட்டைகளைக் கொண்டு வெளிப்படுத்லாம்; உணர்ச்சியற்ற அவயவத்திலுள்ள இரத்தத்தைப் பீச்சாங்குழலால் வெளிப்படுத்திவிடலாம்; உடலெங்கும் வியாபித்துள்ள துஷ்ட இரத்தத்தை ஸிராவ்யதைகளால்[1] வெளிப்படுத்தலாம்; ஓரிடத்தில் அதிகமாகச் சேர்ந்துள்ள இரத்தத்தையும் கொந்தியெடுத்துவிடலாம்; ஆழமான ஸ்தலங்களிலுள்ள இரத்தத்தை அட்டைகளால் வெளியிடலாம்; சர்மத்தைப் பற்றியுள்ள இரத்தத்தை ச்ருங்கத்தினாலாவது, குடுவையினாலாவது, சுரைக் குடுக்கையினாலாவது வெளிப்படுத்தலாம்; அகில சரீரத்திலும் வியாபித்துள்ள துஷ்ட இரத்தத்தை வெளிப்படுத்துவதற்குமட்டும் ஸிராவ்யதை ஒன்றே சிறந்த சிகித்ஸையாகும். அல்லது வாத-பித்த-கப ஸ்தானங்களிலுள்ள துஷ்ட இரத்தத்தை முறையே ச்ருங்கத்தினாலும், அட்டைகளாலும், சுரைக் குடுக்கைகளாலும் வெளிப்படுத்தவுங் கூடும். 51—55.

**இரத்தஸ்ராவத்தில் உண்டாகும் உபத்திரவத்திற்குப் பரிஹாரம்:—** எவனுடைய தேஹத்திலிருந்து இரத்தம் வெளிப்படுத்தப்பட்டதோ, அவனுக்குக் குளிர்ச்சியான பலவித பூச்சுகளால் வாயு பிரகோபம் அடையும்; அதனால் இரத்தம் வெளிப்படுத்தப்பட்ட விடத்தில் குத்தலும், தினவும், வீக்கமும் ஸம்பவிக்கும். அவ்வாறு கோளாறு ஸம்பவிக்கும் இடத்தை உஷ்ணமாகச்செய்து நெய்யால் ஒற்றடம் கொடுத்து மெதுவாக நனைக்கவேண்டும்.—56.

---

1. ஸிராவ்யதை—அடுத்த அத்தியாயம் பார்க்க.

# இருபத்தேழாம் அத்தியாயம்.

## ஸிராவ்யத விதி.

இனி ஸிராவ்யத விதி[1] என்னும் விஷயத்தை விவரிக்கும் அத்தியாயம் கூறப்படுகிறது:—

**சுத்த இரத்தத்தின் இலக்ஷணங்கள்:**—சுத்தமாக இயற்கை நிலைமையிலுள்ள இரத்தம் சிறிது மதுரமும் சிறிது இலவணரஸமும் கலந்த சுவையுள்ளதாகவும், சீதமுமில்லாமல் உஷ்ணமுமில்லாமல் நடுத்தரமாகவும், உறைந்துபோகாமல் திரவமாகவும் இருக்கும்; செந்தாமரைப்பூ, பட்டுப்பூச்சி, செம்பொன், முயல்ரத்தம் இவற்றைப்போல் சிவந்த நிறமுள்ளது. இவ்வித இரத்தத்தினுலேயே தேஹம் நிலைத்திருக்கின்றது.—$1\frac{1}{2}$.

**இரத்தம் கெட்டுப்போவதற்கான முகாந்தரங்கள் :**—அவ்வித சுத்தமான இரத்தம் பித்த-கபங்களைக் கோளாறடையச்செய்யும் வஸ்துக்களால் அல்லது அவ்வித விஷயங்களால் பெரும்பாலும் தூஷிக்கப்படுகின்றது.—2.

**தூஷிக்கப்பட்ட இரத்தத்தினுல் உண்டாகும் வியாதிகள் :**—அவ்வாறு தூஷிக்கப்பட்ட இரத்தமானது விஸர்ப்பம், வித்ரதி யென்னும் சீழ்க்கட்டி, ப்லீஹவிக்கம், குன்மம், அக்னிமாந்தியம், ஜ்வரம், முகரோகம், நேத்திரரோகம், சிரோரோகம், வெறி, நாவரட்சி, வாயில் ஒருவகையான உப்புநீர் சுரத்தல், குஷ்டம், வாதரக்தம், இரத்தபித்தம், கார்ப்பும் புளிப்புமாக ஏப்பம் விடுதல், பிரமம் என்னும் தலைச்சுற்றல் என்கிற வெவ்வேறு விதமான வியாதிகளை ஸாதாரணமாய் உண்டுபண்ணுவது வழக்கம். மேலும் சீதளசிகித்ஸை, உஷ்ணசிகித்ஸை, ஸ்நிக்த்தசிகித்ஸை, ரூக்ஷசிகித்ஸை இவை முதலியவற்றை முறைதவறுமல் செய்தும், நன்கு ஸாத்தியமான நிலைமையிலிருப்பதாகத் தெரிந்தும் எவை நிவ்ருத்தியாவதில்லையோ அந்த வியாதிகளும் இரத்தம் பிரகோபிப்பதால் ஸம்பவிப்பவையாகும். 3—$4\frac{1}{2}$.

**விருத்தியான இரத்தத்தைக் குறைக்க ஸிராவ்யதை :**—முற்குறிப்பிட்ட வியாதிகளில் இரத்தம் பிரகோபித்திருக்குமாகையால், அவ்வாறு விருத்தியடைந்துள்ள இரத்தத்தை வெளியில் வடியச்செய்வதற்கு ஸிரையைக் கீறிவிடவேண்டும்.—5.

**ஸிராவ்யதைக்குத் தகாதவர்களும் தகாத நிலைமைகளும் :**—(1) பதினுறு வயதுக்குக் குறைந்த வயதினர், எழுபது வயதுக்கு மேற்பட்டவர், இரத்தமோக்ஷணம் செய்துகொண்டவர், ஸ்நேஹ சிகித்ஸையை முன்னதாகச் செய்துகொள்ளாதவர், அவ்விதமே

---

1. ஸிராவ்யத விதி—ஸிரை என்றால் காரிரத்தக்குழாய்; அவ்வித இரத்தக்குழாய்களைக் கீறி இரத்தம் வெளிப்படுத்தும் முறைகளைக் கூறும் அத்தியாயம் எனப் பொருள்.

ஸ்வேதசிகித்ஸை செய்துகொள்ளாதவர், மிதமின்றி ஸ்வேதசிகித்ஸை செய்துகொண்டவர், வாதரோகமுள்ளவர், கர்ப்பிணிகள், பிரஸவித்தவர்கள், அஜீர்ணரோகிகள், இரக்தபித்தரோகிகள், ச்வாஸகாஸரோகிகள், அதிஸாரம்-உதரரோகம்-சர்த்தியென்னும்வாந்தி-பாண்டு-ஸர்வதேஹமும் வியாபித்த சோகை இவ்வியாதிகளால் பீடிக்கப்படுபவர் இவர்கள் யாவருக்கும் ஸிராவ்யதை செய்யக்கூடாது. மேலும் ஸ்நேஹபானம் செய்திருக்கையிலும், அவ்விதமே பஞ்சகர்மங்கள் பிரயோகிக்கப்பட்டிருக்கையிலும் ஸிராவ்யதை செய்வது பிசகு. (2) ஸிராவ்யதை செய்யவேண்டிய விடத்தைத் தகுந்தவாறு கட்டாமல் ஸிராவ்யதை செய்யக்கூடாது; குறுக்குவாட்டிலும் செய்யக்கூடாது; ஸிரையென்னும் இரத்தக்குழாய் கையில் அகப்படும்படி பருத்துக் கொள்ளாதிருக்கையிலும் அதைக் கீறக்கூடாது. அதிக குளிரும் அதிக சூடுமுள்ள காலங்களிலும், விசேஷமாகக் காற்று வீசும் போதும், மேகங்களால் ஆகாயம் மூடப்பட்டிருக்கையிலும் அபாயகரமான வியாதியாயிருந்தாலேயொழிய ஸிராவ்யதை செய்யக்கூடாது. 6—8½.

வியாதிகளுக்கு ஏற்றவாறு ஸிராவ்யதை செய்வதற்கான ஸ்த்தாநங்கள் :—(1) சிரஸ்ஸைப்பற்றிய வியாதிகளிலும், நேத்திர ரோகங்களிலும் நெற்றியிலுள்ள ஸிரையையாவது, கன்னத்து ஸிரையையாவது, நாசிக்கு அருகிலுள்ள ஸிரையையாவது கீண்டுவிடவேண்டும். (2) செவியிலுண்டாகும் வியாதிகளில் காதிலுள்ள ஸிரையையும், (3) நாசியிலுண்டாகும் வியாதிகளில் மூக்கின் முனையிலுள்ள ஸிரையையும், (4) பீநஸத்தில் நாசியிலுள்ள அல்லது நெற்றியிலுள்ள ஸிரையையும், (5) வாயினுள் உண்டாகும் வியாதிகளில் நாக்கு-உதடு-முகவாய்க்கட்டை-தவடை இவற்றிலுள்ள ஸிரைகளில் ஏதேனும் ஒன்றையும் கீண்டு இரத்தத்தை வடியச் செய்ய வேண்டும். (6) தோளுக்கு மேற்பட்டுள்ள கிரந்திகள் கோளாறடைந்தால், அவற்றில் கழுத்திலும், காதிலும், கன்னத்திலும், சிரஸ்ஸிலும் உள்ள ஸிரைகளைக் கீண்டு இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். (7) உன்மாதம் என்னும் பைத்தியரோகத்தில் மார்பிலும் கடைக்கண்ணிலும் நெற்றியிலுமுள்ள ஸிரைகளைக் கீற வேண்டும். (8) அபஸ்மாரரோகத்தில் ஹநுஸந்தி யென்னும் முகவாய்க்கட்டையின் பூட்டிலாவது, முகவாய்க்கட்டையில் வேறெந்த விடத்திலாவது ஸிராவ்யதை செய்யவேண்டும்; புருவங்களுக்கு இடையில் ஓடும் ஸிரையையாவது கீண்டு இரத்தத்தை வடியச் செய்யலாம். (9) வித்ரதி யென்னும் சீழ்க்கட்டியிலும், பக்கச் சூலையிலும் தேஹத்தின் வலது இடது பாரிசங்களிலும், அக்குளிலும் மார்பின் மத்தியிலுள்ளவையுமான ஸிரைகளைக் கீண்டு விடவேண்டும். (10) த்ருதீயகம் என்னும் ஒருநாள் விட்டு மூன்றாவது நாள் உண்டாகும் முறைக்காய்ச்சலில் தோள்களுக்கு நடுவில் இரத்த

ஸ்ராவம் செய்யவேண்டும். (11) இடையில் இரண்டு நாட்கள் விட்டு நான்காவது நாள் உண்டாகும் சாதுர்த்திகம் என்கிற ஜ்வரத்தில் தோளுக்குக் கீழே இரத்தத்தை வெளிப்படுத்தலாம். (12) சீத பேதியிலும், வயிற்றுவலியிலும் இடுப்பின் பின் புறத்தில் இரண்டு அங்குலத்தில் இரத்தஸ்ராவம் செய்விக்கலாம். (13) சுக்ரமேஹம் என்கிற வெள்ளை நோயிலும், ஆண்குறியிலுண்டாகும் வியாதிகளிலும் ஆண்குறியின் மேலேயே இரததஸ்ராவம் செய்யலாம். (14) களகண்டம், கண்டமாலை இவற்றில் துடையிலுள்ள ஸிரையைக் கீண்டு இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். (15) க்ருத்ரஸீ என்னும் காலிலுண்டாகும் வாத ரோகத்தில்[1] முழங்காலுக்கு நாலு அங்குலம கீழேயாவது மேலேயாவது இரத்தஸ்ராவம் செய்வது முறை. (16) அபசீயென்கிற வியாதியில்[2] இந்திரவஸ்தி யென்னும் காலிலுள்ள மர்மஸ்த்தாநத்திற்கு இரண்டு அங்குலம் கீழே இரத்தஸ்ராவம் செய்யவேண்டும். (17) துடையில் நோயுண்டானல் கணுக்காலுக்கு நாலு அங்குலம் மேலே இரக்தமோக்ஷணம் செய்ய வேண்டும். (18) க்ரோஷ்டுகசீர்ஷம் என்னும் முழங்காலிலுண்டாகும் வாதவியாதியிலும்[3] அவ்வாறே கணுக்காலுக்கு மேலே இரத்த ஸ்ராவம் செய்யவேண்டும். (19) பாததாஹம் என்னும் உள்ளங்காலிலுண்டாகும் எரிச்சலிலும், குடம்,[4] ஹர்ஷம்[5] என்கிற வாத ரோகங்களிலும், பாதவெடிப்பிலும், வாதகணடகத்திலும்,[6] சிப்பத்திலும்[7] க்ஷிப்ரமர்மத்திற்கு இரண்டு அங்குலம் மேலே இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். (20) விச்வாசீ யென்னும் கையிலுண்டாகும் வாதவியாதியில்[8] க்ருத்ரஸீ யென்னும் வியாதிக்குச் செய்தது போலவே இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டும். 9—16¼.

குறிப்பிட்ட ஸிரை புலப்படாவிட்டால் இரக்த மோக்ஷணம் செய்யும் விதி :—சாஸ்திரத்தில் எந்த ஸிரையைக்[9] கீறி இரத்தத்தை வெளிப்படுத்தவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறதோ அந்த

---

1. க்ருத்ரஸீ—முழங்காலுக்குமேல்துடையிலுண்டாகும் வாதவியாதி.
2. அபசீ—ஒன்றன்பின் ஒன்றாக உண்டாகும் கிரந்திகள் போன்ற கட்டிகள்.
3. க்ரோஷ்டுக சீர்ஷம்—முழங்காலிலுண்டாகும் வீக்கம்; இது தமிழில் நரித்தலைவாயு என்று கூறப்படும்.
4. குடம்—முடமாகப் போதல்.
5. ஹர்ஷம்—அல்லது பாதஹர்ஷம்; கால் மரத்துப்போய் உண்டாகும் சிலிர்க்கை.
6. வாதகண்டகம்—குதிகால்களை ஊன்றி நடக்க முடியாமலுண்டாகும் நோய்.
7. சிப்பம்—இதை நகச்சுற்று என்பார்கள்.
8. விச்வாசீ—தோளில் ஆரம்பித்து முழங்கையிலும் அதற்குக் கீழேயும் பரவும் ஒருவித வலியுடன் கூடிய வாதநோய்.
9. ஸிரை—காரிரத்தக்குழாய்.

ஸிரை புலப்படாவிட்டால், மர்மஸ்தான மல்லாததும், குறிப்பிட்ட இடத்திற்குச் சமீபத்தில் இருப்பதுமான வேறொரு ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தலாம்.—17, 17½.

ஸிராவ்யதை செய்வதற்கு முன் அவசியமான ஏற்பாடு :—அப்பால் பிணியாளி தனது தேஹத்தை ஸ்நிக்த்தமாகச் செய்து கொள்ளவேண்டும்; முன்னதாகவே ஸிராவ்யதைக்கு வேண்டிய எல்லா உபகரணங்களையும் தயார்செய்து வைத்துக்கொள்ள வேண்டும். இரக்த மோக்ஷணம் செய்துகொள்பவன் பலசாலியா யிருப்பதும் அவசியம். அப்பிணியாளிக்கு முன்னதாய் ஸ்வஸ்தி வாசநம் முதலிய மங்களச்சடங்குகளையும் செய்துவைத்து, ஸ்நிக்த்த மான மாம்ஸரஸத்தையும் அன்னத்தையும் புஜிக்கச்செய்யவும். பிறகு அக்னிதாபத்தினாலும் வெயிலாலும் வியர்வை யுண்டாகும்படி ஸ்வேத சிகித்ஸையைச் செய்து, முழங்காலளவு உயரமான ஆஸனத்தில் உட்காரச்செய்யவும். மிருதுவான பட்டு வஸ்திரத்தினால் அப்பிணியாளியின் கேசமுனையைக் கட்டி, முழங்காலின் மேல் தனது முழங்கையை வைத்துக்கொள்ளச்செய்து, வஸ்திரமடங்கிய இரண்டு முஷ்டிகளாலும் மந்யா என்னும் நாடிகளைக்[1] கெட்டியாக அழுத்திப் பிடிக்கச் சொல்லவேண்டும். அந்த ஸமயத்தில் பற்களைக் கடிப்பதும், வலிய இரும்புவதும், கண்டத்தைப் பருக்கச் செய்வதும் அநுகூலமாகும். தோள்களின் மேல் வஸ்திரத்தை விட்டு, அதைப் பின்புறமாக இழுத்து, இடது கையின் ஆள்காட்டி விரலால் இடையில் அதைக் கௌவச்செய்து பின்புறத்தில் கட்டி விடவேண்டும். வாயின் உட்புறத்திலுள்ள ஸிரைகளைத் தவிர மற்ற வெளிபபுறத்து ஸிரைகளைக் கட்டுவதற்கான முறை இங்ஙனம் கூறப்பட்டதாகும்.[2] 18—22.

ஸிராமோக்ஷம் செய்யவேண்டிய பொதுவிதி :—பிறகு வைத்தியன் தனது பெருவிரலால் நடுவிரல் முனையை இழுத்து வேகமாய் அந்த ஸிரையின்மேல் தாக்கும்படி அடிக்க வேண்டும். அப்பால் ஸிரையைப் பெருவிரலால் அழுத்தியோ அல்லது ஸாதாரணமாகப் பரிசித்தோ அது பருத்திருப்பதாகத் தெரிந்துகொண்டு, இடது கையில் குடாரீயென்னும் ஆயுதத்தை யெடுத்து, அதன் கருக்கு முனையினால் பருத்துக் காணும் ஸிரையின் மத்தியபாகத்தைக் கை நடுங்காமல் கீண்டுவிடவும். மறுபடியும் வ்ரீஹிமுகம் என்னும் சஸ்திரத்தினால் அந்த ஸிரையைத் தட்டி நன்றாகக் கீறிவிடவும் வேண்டும்.—23, 24½.

1. மந்யா—கழுத்தின் பின்புறத்தில் காதுக்குக் கீழே இரு புறங்களிலும் ஓடும் ஸிரைகள். இவ்விடத்தைக் கெட்டியாகப் பிடித்தால், இந்த ஸிரைகளில் இரத்த வோட்டம் தடுக்கப்பட்டு அவை பருத்துக் காணும்.

2. ஸிரைகளை உத்தாபநம் (பருத்து எழும்பச்) செய்வதற்காக இவ்வாறு பந்தநம் அவசியமென்று கூறப்பட்டது.

வெவ்வேறு அவயவங்களிலும் செய்யக்கூடிய ஸிராமோக்ஷண முறைகள் :—(1) நாசி முனையைப் பெருவிரலால் உயர நிமிர்த்தி, உபநாஸிகை யென்னும் நாசியின் உட்புறத்து அவயவத்திலுள்ள ஸிரையைக் கீறவேண்டும். (2) நாக்கின் முனையை உயரத் தூக்கிப் பல்லால் அழுத்திப் பிடித்துக்கொண்டு, அதன் கீழுள்ள ஸிரையைக் கீறவேண்டும். (3) கழுத்திலுள்ள ஸிரையைக் கீறவேண்டுமானால் மார்பில் ஸ்தநங்களுக்கு மேற்புறத்தில் பந்தநம் செய்யவேண்டும்; கையினுள் சிலையை அடக்கிக்கொண்டு முழங்காலின்மேல் கையை நன்றாக நீட்டிவிடவும்; வயிறு முதற்கொண்டு மார்பு வரையில் கிரமமாக அழுத்திப் பிடித்து வந்து, மார்பின்மேல் வஸ்திரத்தைக் கட்டிவிடவும்; இவ்வாறு கட்டியபிறகே கழுத்திலுள்ள ஸிரையைக் கீறவேண்டும். (4) கையிலுள்ள ஸிரையில் இரக்தமோக்ஷணம் செய்யவேண்டுமானால், முழங்கையை மடிக்காமல் புயத்தை நன்றாக நீட்டி, பிணியாளியை அமைதியாக உட்காரச்செய்து, பெருவிரலை உள்ளடக்கி முஷ்டிபந்தநம் செய்வித்து, சஸ்திரம் பிரயோகிக்க வேண்டிய இடத்திற்கு நான்கு அங்குலம் மேலே வஸ்திரத்தினால் பந்தநமிட்டு, அப்பால புயத்திலுள்ள ஸிரையைக் கீறவேண்டும். (5) உயரத்தில் எதையாவது இரண்டு புயங்களாலும் பிடித்துக் கொண்டு பிணியாளியைத் தொங்கச்செய்து, அப்பால் தேஹத்தின் பாரிசங்களிரண்டிலுமுள்ள ஸிரைகளைக் கீறவேண்டும். (6) ஆண் குறியானது நிமிர்ந்து எழும்பியிருக்கையில் அதிலுள்ள ஸிரையைக் கீறவேண்டும். (7) முழங்காலுக்குக் கீழுமுள்ள பாகத்தில் ஏதாவது ஸிரையைக் கீறவேண்டுமானால், முழங்காலை மடிக்காமலே செய்யவேண்டும். (8) பாதத்தில் ஸிராவ்யதை செய்யவேண்டு மானால், பாதத்தை நன்றாகப் பூமியில் ஊன்றிவைத்து, இரு கரங்களாலும் முழங்கால் முதற்கொண்டு கணுக்கால் வரையில் அழுத்தமாகப் பிடித்து உருவிவிட்டு, அக்காலின்மேல் மற்றொரு பாதத்தை ஒருவாறு மடக்கி வைத்துக்கொள்ளவேண்டும்; பிறகு புயத்தில் பந்தநம் செய்து ஸிராவ்யதையை நிறைவேற்றுவதற்குக் கூறிய விதமாகவே காலிலும் ஸிராவ்யதையைச் செய்யவேண்டும். (9) உபாயங்களை நன்குணர்ந்த வைத்தியன், இன்னும் இங்கு குறிப்பி டாத விடங்களிலும் அதற்கேற்றவாறு பந்தநங்களையிட்டு, ஸிராவ் யதையை நிறைவேற்ற வேண்டும். 25—32.

வ்ரீஹிமுகமும் குடாரிகையும் பிரயோகிக்கவேண்டிய அளவு கள் :—வ்ரீஹிமுகம் என்னும் சஸ்திரத்தின் முனை நன்கு சதை பருத்த அவயவத்தில் நெல் அளவு மாத்திரம் பிரவேசிக்கும்படியாக வும், குடாரிகை யென்னும் சஸ்திரத்தின் முனை எலும்புகளின்மேல் அரை யவப் பிரமாணம் புதையும்படியாகவும் பிரயோகிக்கப்பட்டு ஸிராவ்யதையை நிறைவேற்ற வேண்டும்.—33.

ஸிராவ்யதை நன்கு நிறைவேறியதன் குறிகள் :—ஸிராவ்யதை வேண்டியவளவு நன்றாகச் செய்யப்படுமானால், தாரைபோல்

இரத்தம் நன்றாக வெளிவரும்; பந்தநத்தை அவிழ்த்து விட்டால் இரத்தமும் தானே நின்றுவிடும்.—33½.

தாறுமாறாக ஸிராவ்யதை செய்வதனாலான தீமைகள்:—வேண்டியவளவு நன்கு ஸிராவ்யதை நிறைவேற்றப்படாமற்போனால், இரத்தம் சொற்பமாக வெளி வருவதுடன் சொற்ப நேரமே கசிந்து வரும்; தைலம் அல்லது ஏதேனும் சூர்ணத்தை அவ்விடத்தில் தடவினாலும் அந்த இரத்தப்பெருக்கு சீக்கிரம நின்றுவிடும். மிதமிஞ்சிய ஸிராவ்யதையினால் இரத்தம் ஒருவிதமான சப்தத்தோடு வெளிவரும்; அதை மிகவும கஷ்டப்பட்டுத் தடுக்கவேண்டி வரும்.—34½.

ஸிராவ்யதையில் இரத்தம் நன்றாக ஸ்ரவிக்காததற்குக் காரணங்கள்:—பயம், மூர்ச்சை, கட்டுத தளர்ந்துபோதல், கூர்மையில்லாத சஸ்திரங்களைப் பிரயோகித்தல், பிணியாளி அதிக திருப்தியடைந்து இன்பமுற்றிருத்தல், இளைத்துப் போயிருத்தல், மலமூத்திராதி விஸர்க்கங்களைச் செய்யவேண்டிய நிலைமையிலிருத்தல், ஸ்வேத சிகித்ஸையைச் செய்யாமலே ஸிராவ்யதையைச் செய்தல் என்னும் இவை இரத்தம் நன்றாகப் பெருகாமற் போவதற்குக் காரணங்களாம்.—35½.

ஸிராவ்யதையில் செய்யும் சிகித்ஸை:—(1) இரத்தம் தகுந்தவளவு நன்றாகப் பெருகாமற்போனால் அப்பொழுது வாய்விடங்கம், த்ரிகடுகம், மஞ்சள், புலியுகிர், ஓட்டடை, உப்பு, தைலம் இவற்றை ஒன்றாகக் குழப்பி, கீறப்பட்டுள்ள ஸிரையின் வாயில் தேய்க்கவும். (2) இரத்தம் நன்றாக வெளிவருமானால் இளஞ்சூடான தைலத்தினாலும் இலவணத்தினாலும் அவ்விடத்தைத் தேய்க்கலாம்.—36, 37.

துஷ்டரத்த சுத்த ரத்தங்கள் வெளிவருவதன் குறிகள்:—குஸும்ப புஷ்பத்திலிருந்து முதன்முதல் மஞ்சள்நிறமான திரவம் வெளிவருவதுபோல, ஸிராவ்யதையில் முதலில் கெட்டுப்போன இரத்தமே வெளியாகும். இரத்தம் நன்றாகக் கசிந்து அப்பால் அது தனக்குத்தானே நின்றுவிடுமாயின், அசுத்தரத்தம் நின்றுபோய் சுத்த ரத்தமே இனி மிகுந்திருப்பதாய் அறிந்து கொண்டு, அதை அதற்குப் பிறகு வெளிப்படுத்தக் கூடாது.—38.

ஸிராவ்யதையில் மூர்ச்சையுண்டானால் அதை நிறைவேற்றும் வகை:—இரக்தஸ்ராவம் செய்யப்படுகையில் மூர்ச்சை உண்டானால், கட்டியுள்ள பந்தநத்தை அவிழ்த்துப்போட்டு, விசிறிகளால் வீசிய பிணியாளியைத் தேற்றிய பின்பு, மறுபடியும் இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். அப்பொழுது மீண்டும் மயக்கமுண்டாய் விட்டால் அன்றைய தினம் அதைச் செய்யாமல் அதற்கு மறு நாளாவது மூன்றாவது நாளாவது செய்யலாம்.—39.

வாதாதி தோஷங்களால் விகாரமடைந்த இரத்தத்தின் குறிகள்:—(1) வாததோஷத்தினால் இரத்தம் விகாரப்பட்டிருந்தால், அது ஒருவாறு கறுஞ்சிவப்பாகவும், தடிப்பின்றி நுரைத்தும், ரூக்ஷ

மாகவும் இருப்பதுடன், வேகமாகவும் வெளியாகும். (2) பித்தத்தினுல் விகாரப்பட்டிருந்தால் இரத்தம் கருமஞ்சள் நிறமாகவும், வஸேநாற்றமுடையதாகவும், உஷ்ணத்தினுல் தோய்ந்துவிடுந்தன்மையற்றதாகவும், சந்த்ரகங்கள் என்னும் பலவிதமான புள்ளிகளுடன் கூடியதாகவும் இருக்கும். (3) கபத்தினுல் கோளாறடைந்த இரத்தம் ஸ்நிக்த்தமாகவும், வெளிறிய நிறமுடையதாகவும், நூலிழைகளைப் போன்ற தோஷங்களுடன் கூடியதாகவும், பிசுபிசுப்புடன் தடித்த நிலைமையைப் பெற்றதாகவும் இருக்கும். (4) ஸம்ஸர்க்கதோஷங்களால் கோளாறடைந்த இரத்தத்தில், விகாரமடைந்த இரண்டு தோஷங்களுடைய அந்தந்தக் குறிகளும் கலந்திருக்கக் காணலாம். (5) ஸந்நிபாத தோஷத்தினுல் கோளாறடைந்த இரத்தம் மூன்று தோஷங்களுடைய இலக்ஷணங்களையும் பெற்றதாயிருக்கும்.—40, 40½.

வெளிப்படுத்த வேண்டிய இரத்தத்தின் அளவு :—இரத்தம் அசுத்தமாயிருக்கையில், பிணியாளி நல்ல பலசாலியாயிருந்த போதிலும், ஒரு பிரஸ்த்தப் பிரமாணத்திற்குமேல் அதை வெளிப்படுத்தக் கூடாது.—41½.

மிதமிஞ்சி இரத்தஸ்ராவம் செய்வதில் அபாயமும் பரிஹாரமும் :—(1) இரத்தத்தை அளவுமீறி வெளிப்படுத்திவிட்டால், மரணமாவது ஸம்பவிக்கும்; மிகக் கடுமையான வாதரோகங்களாவது உண்டாகும். (2) அபாயகரமான அவ்வித நிலைமையில் அப்யங்கம் செய்வித்தலும், மாம்ஸரஸம்-பால்-இரத்தம் இவற்றைப் பானம் செய்வித்தலும் ஏற்ற சிகித்ஸையாகும்.—42.

இரத்த மோக்ஷணமானதும் செய்யவேண்டிய சிகித்ஸை :—இரத்தமோக்ஷணம் தகுந்தவளவு செய்து முடிந்தபிறகு, கட்டியிருக்கும் பந்தநத்தை மெதுவாக அவிழ்த்து, கீறப்பட்ட ஸிரையின் முகத்தைக் குளிர்ந்த ஜலத்தினுல் நன்ருகக் கழுவி, தைலத்தில் நனைத்த வஸ்திரத்தினுல் அதன்மேல் ஒரு பந்தநம் செய்யவேண்டும்.—43, 43½.

மிச்சமுள்ள அசுத்த ரத்தத்தை மீண்டும் வெளிப்படுத்துங்காலம்:—ஒருமுறை ஸிராவ்யதை செய்தபிறகும் இரத்தத்தில் அசுத்தம் மிச்சமிருக்குமாஞல், அவ்வித இரத்தத்தை மறுபடியும் மாலை நேரத்திலாவது, மறு நாளாவது வெளிப்படுத்திவிடலாம். இரத்தம் ஒருவனுக்கு மிகவும் கெட்டுப்போயிருந்தால், அவனுடைய தேஹத்திற்கு ஸ்நேஹசிகித்ஸையினுல் ஸம்ஸ்காரங்களைச் செய்து, பதினைந்து நாட்கள் கழித்தாவது ஸிராவ்யதையை முறைப்படி நிறைவேற்றலாம்.—44½.

சொற்பம் மிச்சமுள்ள துஷ்ட ரத்தத்தைச் சுத்தம்செய்யும்வகை:—தோஷமுள்ள இரத்தம் சொற்ப அளவு மிச்சமிருந்தால், ரோகம் அதிக்ரமித்துவிடாது. ஆகவே துஷ்ட இரத்தம மிச்சமிருக்கும்படி விட்டுவிட்டாலும் விடலாம்; ஆஞல் இரத்தத்தை அமிதமாக

மாத்திரம் வெளிப்படுத்தக்கூடாது. சொற்பம் மிச்சமுள்ள இரத்தத்தை ச்ருங்கம் முதலியவற்றால் வெளிப்படுத்திவிடலாம். அல்லது சீதோபசாரத்தினாலாவது, இரத்தபித்தசிகித்ஸையினாலாவது, சோதந சிகித்ஸையினாலாவது, இலங்கநாதி சோஷண சிகித்ஸையினாலாவது சுத்தமாகச் செய்யலாம். மிதமிஞ்சிக் கெட்டுப்போகாத நிலைமையிலுள்ள அசுத்த ரத்தத்தையும் இவ்விதமே நிர்மலமாகச் செய்யவேண்டும். 45—47.

மிதமிஞ்சிப் பெருகும் இரத்தத்தைத் தடுக்கும் வகை :—இரத்தஸ்ராவம் செய்கையில் வெளியாகும் இரத்தம் நிற்காமலே ஸ்ரவித்துக் கொண்டிருந்தால், சீக்கிரத்தில் ஸ்தம்பநசிகித்ஸையைச் செய்யவேண்டும்.—47½.

ஸிராவ்யதை செய்தவிடத்து விரணத்தில் உபயோகிக்கும் ஔஷதம் :—வெள்ளிலோத்தி, ஞாழல், செஞ்சந்தனம், உளுந்து, அதிமதுரம், காவிக்கல், மண்ணுலாகிய வறட்டோடு, இருந்தை, பட்டு, அஞ்ஜநம், பாலுள்ள மரங்களின் சர்மம், அவற்றின் குருத்து அல்லது விழுதுமுனை இவற்றை உலர்த்தி, சூர்ணம்செய்து, கீறி விரணமாக்கியவிடத்தில் தூவவேண்டும். பிறகு பத்மகாதிகணத்திற்[1] கூறியுள்ள சரக்குகளால் பக்குவம் செய்த ஹிமகஷாயத்தைப்[2] பானம் செய்யவேண்டும். அப்படியும் இரத்தப் பெருக்கு நிற்காவிட்டால் அதே ஸிரையை, முன் கீறிய விடத்திற்கு அடுத்தாற்போல் கீறலாம். உடனே ஒரு சலாகையைக் காய்ச்சி, அந்த ஸிரையின் முகத்தைச் சுட்டுவிடவேண்டும். 48—50.

ஸிராவ்யதையில் பத்தியக்கிரமம் :—(1) யந்திரணம் என்னும் பந்தநம் முதலியவற்றால் இரத்தத்திலுள்ள தோஷங்கள் அதனதன் ஸ்தாநத்தைவிட்டு வேறு மார்க்கங்களிலும் சென்றிருக்குமாகையால், அத்தோஷங்கள் மீண்டும் அதனதன் ஸ்தாநத்தில் எதுவரையில் வந்து சேரவில்லையோ, அவ்வளவு நாட்கள் வரையில் பத்தியமான ஆஹாரங்களையும் ஆசாரங்களையும் செய்துவரவேண்டும். (2) இரத்த மோக்ஷணம் செய்தபிறகு அதிக உஷ்ணமல்லாததும், அதிக குளிர்ச்சியாயிராததும், இலகு குணமும் தீபநீய குணமுமுள்ளதுமான அன்னபானங்கள் பத்தியங்களாம். இரக்தமோக்ஷணம் செய்துள்ள ஸமயத்தில் சரீரத்தில் இரத்தத்தின் நிலைமை சீர்குலைந்திருக்கும்; ஆகவே இதைக் கருதி ஜாடராக்னியை நிலை குலையாவண்ணம் பாதுகாக்கவேண்டும்.—51, 52.

இரக்த மோக்ஷணம் நன்கு நிறை வேறியதன் குறிகள் :—தேஹ நிறமும் இந்த்ரியங்களும் பிரஸன்னமாயிருக்கும்; இந்த்ரியங்களால்

1. பத்மகாதி கணம்—160-ம் பக்கம் பார்க்க.

2. ஹிமகஷாயம்—இதையே சீதகஷாயம் என்றும் கூறுவர். அவசியமான சரக்குகளைப் பொடித்து, ஒன்றுக்கு ஆறு மடங்கு ஜலம் சேர்த்து, ஓர் இரவு முடிய ஊறவைத்து, அப்பால் வடிகட்டி யெடுக்கப்படும் திரவம் ஹிமகஷாயம் எனப்படுகிறது.

அவ்வவற்றிற்கு இயல்பான விஷயங்கள்[1] நன்கு விரும்பப்படும்; ஜீர்ணசக்தியின் நடை தடைப்படாமலிருக்கும்; தேஹம் ஆரோக்கிய நிலைமையடைந்து, புஷ்டியும் பலமும் பெற்றிருக்கும். இவ்வித நிலைமையிலுள்ள புருஷன் ஆரோக்கியமாயிருப்பதாகக் கூறப்படுவான்.—53.

---

## இருபத்தெட்டாம் அத்தியாயம்.

### சல்யாஹரண விதி.

இனி சல்யாஹரண விதி[2] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**சல்யங்கள் ஐந்து விதமாய் தேஹத்தில் பிரவேசித்தல் :—**சல்யங்கள் தேஹத்தில் வக்ரமாகவும், நேராகவும், குறுக்காகவும், மேல் நோக்கியும், கீழ்நோக்கியும் ஐந்து விதமாகப் பிரவேசிக்கக் கூடும். ½.

**உள்ளே சல்யத்துடன் கூடிய விரணத்தின் குறிகள் :—**கன்றிப் போன வீக்கமுள்ளதும், வலியுடன் அடிக்கடி இரத்தப்பெருக்குடையதும், குமிழியைப் போல மேலெழுந்து அநேகம் சிறிய கொப்புளங்களுடன் கூடியதும், மிருதுவான மாம்ஸத்தையுடையதுமான விரணம் உள்ளே சல்யத்துடன் கூடியதென்று அறிக.—1, 2.

**சர்மம் முதலியவற்றில் சல்யம் தங்கியிருக்கும் விசேஷக்குறிகள்:—**(1) சல்யம் சர்மத்தில் அடங்கியிருந்தால், அவ்விடத்திலுள்ள வீக்கம் ஒருவாறு கறுநிறமாகவும், கடினமாகவும், விஸ்தாரமாகவும் இருப்பது விசேஷக்குறியாகும். (2) அவ்வாறே சல்யம் மாம்ஸத்தைப்பற்றியிருந்தால், அங்கு அழற்சியும், பரிசித்துப் பிடிக்க முடியாத வலியும் இருப்பதோடு பழுத்தும் இருப்பதாக வீக்கம் காணப்படும்; சல்யம் உட்புகுந்துள்ள வழியும் எளிதில் ஆறுவதில்லை. (3) தசைநார்களுடைய உள்ளே சல்யம் ஊடுருவிச் சென்றுவிட்டால், மாம்ஸத்தில் பிரவேசித்ததாலுண்டாகும் குறிகளே உண்டாகும்; ஆனால், வீக்கம் மாத்திரம் தென்படாது. (4) ஸ்நாயு[3] என்னும் அஸ்திபந்தநார்களில் பிரவேசித்து விட்டால், அவற்றில் இசிவு பலமாய் உண்டாகும்; பொறுக்கமுடியாத வேதனையும், பரபரத்துத் தீவிரமான உணர்ச்சியும், அசைக்க

---

1. நேத்திரத்திற்குப் பார்வையும், செவிக்குக் கேள்வியும், நாசிக்கு வாஸனையும், நாக்குக்குச் சுவையும், சர்மத்திற்குப் பரிசமும் விஷயங்கள் ஆகும்.

2. சல்யம் என்பதால் தேஹத்திலுள் எவ்விதமாகிலும் பிரவேசித்து அல்லது தேஹத்திலுள்ளேயே ஏற்பட்டுத் துன்பம் விளைவிக்கும் எப்பொருளும் குறிக்கப்படும்; அவ்வித வஸ்துவை வெளிப்படுத்துவதற்கான காரியம் சல்யாஹரணம் எனப்படும்.

3. ஸ்நாயு—எலும்புகளை ஒன்றோடொன்று இணைத்துக் கட்டும் நார். ஆங்கிலத்தில் லிகமெண்டு என்பார்கள்.

*முடியாத நிலைமையும் ஸம்பவிக்கும்; அதில் அகப்பட்டுக் கொண்ட சல்யத்தைப் பிடுங்கி யெடுப்பதும் கஷ்டம். (5) ஸிரையினுள் பிரவேசித்திருந்தால், அந்த ஸிரை ஊதிப் பொருமலையும், (6) தொண்டை, காது முதலிய ஸ்ரோதஸ்ஸுகளில் பிரவேசித்து விட்டால், அந்தந்த ஸ்ரோதஸ்ஸின் காரியங்களுக்கும் குணங்களுக்கும் ஹானியுண்டாகும். (7) சல்யம் தமனியில்*[1] *தங்கியிருந்தால், வாதமானது நுரையுடன் இரத்தத்தை வேகமாக வெளிப்படுத்தும்; இரத்தம் ஒருவித சப்தத்தோடு வெளிப்படும்; இருதயத்தில் இயற்கையினும் அதிகமான துடிப்பும், உடம்பில் வேதனையும் உண்டாகும். (8) எலும்புகளின் இடையில் சல்யம் புகுந்திருந்தால் மிகவும் பலமான தேய்வும், இரண்டு எலும்புகளுக்கும் இடையில் அஸ்த்தி நிரம்பியிருப்பது போன்ற உணர்ச்சியும் உண்டாகும். (9) எலும்பிலேயே சல்யம் பிரவேசித்துவிட்டால், சொல்ல முடியாத பலவிதமான வேதனையும் வீக்கமும் உண்டாகும். (10) அஸ்த்திகளுடைய பூட்டில் சல்யம் அகப்பட்டிருந்தால், எலும்பில் பிரவேசித்தது போன்ற வலி முதலியது உண்டாவதோடு, பூட்டு அசைக்கமுடியாமலும் போய்விடும். (11) சல்யம் குடலில் பற்றியிருந்தால் வயிற்றில் சப்தமும், பொருமலும் உண்டாய், விரணத்தின் முகத்தில் உணவு-மலம்-மூத்திரம் இவை வெளிப்படுவதும் உண்டு. (12) மர்மஸ்த்தானங்களில் சல்யம் பிரவேசிக்குமாயின், மர்மஸ்த்தானங்களில் அபிகாதமுண்டாவதால் ஏற்படக்கூடிய குறிகள் உண்டாகும் என்றும் அறிக. அங்கங்கிருந்து ஸ்ரவிக்கும் நீர்களைக்கொண்டு, சர்மம் முதலிய விடங்களில் சல்யம் தங்கியிருப்பதாகவும் ஒருவாறு அறியலாம்.* 3.—9½.

**அநுகூலமார்க்கத்தில் தங்கியுள்ள சல்யமும் அதை அறியும் உபாயமும்:—***அச்சல்யமானது குறுக்காயில்லாமல் ஸ்ரோதஸ் முதலியவற்றில் நேர்மையாக நெடுகவே தங்கியிருந்தால், சோதந சிகித்ஸை முதலியவற்றால் சுத்தியடைந்த தேஹமுடையவருக்கு அப்பாகம் தானே ஆறிப்போய், சல்யமிருப்பதான உணர்ச்சியும் அற்றுப் போகும். ஆனால் தோஷங்கள் பிரகோபிப்பது, அபிகாதமுறுதல் முதலிய க்ஷோபங்களால் அச்சல்யம் மறுபடியும் தொந்தரவளிக்கும்.*—10½.

**சர்மாதிகளில் சல்யம் மறைந்திருப்பதை அறிதல் :—**(1) *சல்யம்* **சர்மத்தில்** *எவ்விடத்திலேனும் மறைந்து அது இருக்கிறவிடம் அறியமுடியாமலிருந்தால், அப்போது அப்யங்கம், ஸ்வேதநம், மர்த்தநம் இவற்றால் எவ்விடத்தில் சிவப்பும், வலியும், அழற்சியும், விசேஷக் கடுப்பும் உண்டாகின்றனவோ, எவ்விடத்தில் நெய் உருகிவிடுமோ, பூசப்படும் லேபநௌஷதம் எவ்விடத்தில் சீக்கிரம் உலர்ந்து விடுகின்றதோ அவ்விடம் சல்யமுடையது என்று அறியலாம்.*

---

1. *தமனீ—சாரீர ஸ்த்தாநம் பார்க்க.*

(2) மாம்ஸத்தில் எங்கேயாவது சல்யம் மறைந்துகிடக்குமானால் சோதநம் செய்வதாலும், தேஹத்தை இளைக்கச்செய்து அதை இடம் விட்டு நழுவச்செய்வதாலும், அவ்விடத்தில் க்ஷோபமுண்டு பண்ணி சிவப்பு முதலியவை ஏற்படுவதாலும் அச்சல்யம் இன்ன விடத்தில் இருக்கிறதென்று அறியலாம். (3) தசைநார்களிலும், எலும்புகளுடைய பூட்டுகளிலும், குடல்களிலும் மறைந்துள்ள சல்யங்களின் இருப்பையும் மாம்ஸத்தில் மறைந்துள்ளதற்கான பரீக்ஷைகளைக் கொண்டே அறியவேண்டும். (4) எலும்புகளில் சல்யம் மறைந்திருந்தால், அவ்வஸ்த்திகளில் சேர்ந்து விடுமாறு அப்யஞ்ஜனம் செய்வது, ஸ்வேதநம் செய்வது, பந்தநம் செய்தல், மர்த்தநம் செய்தல், பிடித்தல், நீட்டுதல், மடக்குதல் இக்காரியங்களைச்செய்து அச்சல்யம் மறைந்துள்ள பாகத்தைக் கண்டறியலாம். (5) ஸ்நாயு-ஸிரைகள், ஸ்ரோதஸ்ஸூகள், தமநிகள் இவற்றில் மறைந்திருந்தால் பிணியாளியைப் பற்களுள்ள சக்கரம் பூட்டிய வண்டியில் ஏற்றிவைத்து, குதிரையைக் கட்டி மேடும் பள்ளமுமான மார்க்கத்தில் அவ்வண்டியை வேகமாகச் செலுத்த வேண்டும்; அப்பொழுது எவ்விடத்தில் கடுப்பும் வலியும் உண்டாகின்றதோ அவ்விடத்தில் சல்யம் இருப்பதாகக் கூறலாம். (6) மர்மஸ்த்தாநங்களில் மறைந்துள்ள சல்யங்களை அறியும் வகை இங்குப் பிரத்தியேகமாகக் கூறப்படவில்லை; ஏனெனில் அந்த மர்மஸ்த்தாநங்கள் மாம்ஸம் முதலியவற்றை ஆச்ரயித்தே இருக்கின்றன. 11—16½.

**சல்யமிருப்பதை அறிய பொதுவான பரீக்ஷை:**—பொதுவாகக் கூறுமிடத்து, சல்யத்துடன் கூடிய பிரதேசத்தில் தேய்ப்பது முதலிய க்ஷோபமுண்டு பண்ணும் காரியத்தினால் வலியுண்டாவது வழக்கம். காணக்கூடாதவாறு தேஹத்தில் எங்கேயாவது தங்கியிருக்கும் சல்யத்தினுடைய நிலைமையை, வட்டமாகவும், பருத்துப் பிதுங்கியும், நாலு கோணமாகவும், முக்கோணமாகவும் ஸம்பவித்துள்ள விரணங்களின் உருவங்களைக் கொண்டு உணரவேண்டும்; இவையே காணமுடியாத சல்யங்களின் இருப்பை அறியக் கூடிய சுருக்கமான குறிகளாகும்.—17, 18.

**சல்யங்களை வெளிப்படுத்துவதற்கு இரண்டு உபாயங்கள்:**—அச்சல்யங்களை வெளிப்படுத்துவதற்கு இரண்டு உபாயங்கள் உண்டு; அவற்றுள் ஒன்று—'சரீரத்தில் எவ்வழியாய் சல்யம் பிரவேசித்ததோ அவ்வழியாகவே அதை எடுத்தல்; மற்றொன்று, அது பிரவேசித்த வழியால் எடுக்காமல் ஸூலபமாயுள்ள வேறு ஏதேனும் எதிரிடையான வழியால் வெளிப்படுத்தல்.' இவற்றுள் முதலிற் கூறிய வகைக்கு அநுலோமமான உபாயமென்றும், இரண்டாவதற்கு பிரதிலோமமான உபாயமென்றும் பெயர். சல்யம் மேல் நோக்கிச் சென்று அவ்வாறே மேல்முகமாக அமைந்திருந்தால், அதைப் பிரதிலோமமாகவும், சல்யம் கீழ்நோக்கியிருந்தால் அதை அநுலோமமாகவும் எடுக்கவேண்டும். குறுக்காகப் பாய்ந்துள்ள

சல்யத்தை, எவ்வழியினால் எடுத்தால் எளிதில் வெளிப்படுத்தலாமோ அவ்வழியினால், அவசியமானால் மாம்ஸபேசி முதலியவை அறுத்து வெளிப்படுத்த வேண்டும்.—19, 19½.

இடிக்கக் கூடாதவையும், அறுத்தெடுக்கக் கூடியவையுமான சல்யங்கள்:—மார்பு, அக்குள், அடைப்பிடுக்கு, பக்கம் இவற்றில் தங்கியுள்ள சல்யத்தை இடித்து அல்லது குத்தியெடுக்கக் கூடாது; பிரதிலோமமாகவும், வெளியில் அநேக முகமுள்ளதாகக் காணப்படுவதும், விசாலமான முகமுடையதாகத் தோற்றுவதுமான எச்சல்யம் உண்டோ அதை அறுத்து எடுக்கவேண்டும்.—20½.

வெளிப்படுத்தத் தகாத சல்யங்கள்:—விசல்யக்நம்[1] என்கிற சல்யத்தையாவது, ஏதேனும் அவயவத்தில் உட்புகுந்து மறைந்து உள்ளே ஒரு வெளிப்பொருள் இருப்பதாகவே உணரப்படாமலிருப்பதையாவது களைந்தெடுக்கக் கூடாது.—21.

கையாலும் ஸிஹ்மமுகம் முதலியதாலும் எடுக்கக்கூடிய சல்யங்கள்:—அப்பால், கையினால் களைந்தெடுக்கக்கூடிய சல்யத்தைக் கையாலேயே எடுத்து விடலாம்; அப்படிக்கின்றி வேறுவிதமாய் உடலிற் பாய்ந்துள்ளதும், வெளியில் காணப்படுவதுமான சல்யத்தை ஸிஹ்மமுகம், ஸர்ப்பமுகம், மத்ஸியமுகம், கிருமிமுகம், கர்க்கடக முகம் என்னும் ஆயுதங்களால் வெளிப்படுத்த வேண்டும்.—22.

புலப்படாமலிருக்கும் சல்யத்தை வெளிப்படுத்தும் முறை:—கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்துள்ள சல்யத்தை விரணத்தின் நிலைமைக்குத் தகுந்தவாறு கங்கமுகம், காகமுகம், குரரமுகம், சராரீமுகம் என்னும் ஆயுதங்களில் எதனால் வெளிப்படுத்துவது எளிதாயிருக்குமோ அவ்வாயுதத்தினால் எடுக்க வேண்டும்.—23.

சர்மம் முதலியதிலுள்ள வெவ்வேறு வித சல்யங்களை யெடுக்கும் முறை:—சர்மம் முதலியவற்றில் பிரவேசித்துள்ள சல்யத்தை ஸந்தம்சயந்திரங்களால் வெளிப்படுத்தவேண்டும். அநேக இடங்களில் பிரவேசித்துள்ள சல்யம் த்வாரமுள்ளதாயிருந்தால், தாளயந்திரங்களால் எடுக்கலாம். த்வாரமுள்ள பிரதேசங்களில் பாய்ந்துள்ள சல்யத்தை நளகம் என்னும் ஆயுதங்களால் எடுக்கவேண்டும். மற்றச் சல்யங்களை அதனதன் தன்மைக்குத் தகுந்த வேறு ஆயுதங்களைக் கொண்டு வெளிப்படுத்தலாம்.—24.

சல்யத்தை அறுத்து எடுத்தல்:—சல்யம் புகுந்துள்ள பாகத்தைச் சஸ்திரத்தினால் முதலில் அறுத்து சல்யத்தை வெளிப்படுத்தி, அப்பால் விரணத்தில் இரத்தப் பெருக்கு இல்லாதபடி அதைச் சுத்தம்செய்து, கிருதத்தினால் ஸ்வேதநம செய்வித்து, பந்தநம்

1. விசல்யக்நம்—உட்புகுந்துள்ள சல்யத்தைச் சில விடங்களிலிருந்து வெளிப்படுத்தும்போது, அப்படி வெளிப்படுத்துவதாலேயே மரணம் ஸம்பவிக்கும்; அவ்விதமான இடங்களில் பாய்ந்துள்ள சல்யம் விசல்யக்நம் எனப்படுகிறது.

*செய்துவிடவேண்டும். அதன் பிறகு அநுகூலமான ஆஹாராதிகளை உபயோகித்து வரவேண்டும்.*—25.

ஸிரை முதலியவற்றில் பற்றியுள்ள சல்யங்களை எடுத்தல் :— (1) ஸிரைகள் *என்னும் காரத்தக் குழாய்களிலும், ஸ்நாயுக்களிலும் பற்றியுள்ள சல்யத்தை மெதுவாகச் சலாகையினால் அசைத்து, வெளிப்படுத்துவது நலம்.* (2) மார்பினுள் *பற்றியுள்ள சல்யத்தை யெடுப்பதற்கு அப்பிணியாளியின் மீது குளிர்ந்த ஜலத்தைத் தெளித்துத் திடுக்கிடச் செய்யவும்; அவ்விதம் செய்வதால் அச்சல்யம் இடம்விட்டுப் பெயர்ந்து வேறிடத்தில் நெகிழ்ந்துவிடும்; அப்பால் எந்த மார்க்கத்தினால் வெளிப்படுத்துவது அநுகூலமாயிருக்குமோ அவ்வழியினால் வெளிப்படுத்திவிடவேண்டும். வேறு அவயவங்களிலும் இங்ஙனமே எளிதில் வெளிப்படுத்த முடியாத சல்யத்தை, எந்த வழியினால் எளிதில் கொண்டுவரக் கூடுமோ அவ்வழியினால் வெளிப்படுத்தி விடலாம்.* (3) எலும்பில் *பிரவேசித்திருப்பதாகக் காணப்படும் சல்யத்தை, பிணியாளியை வைத்தியன் தனது பாதங்களால் அழுத்தி அமுக்கிக் கொண்டு வெளிப்படுத்தலாம். இப்படியும் ஸாத்தியப்படாவிட்டால், மிகவும் பலசாலிகளான வேலைக்காரர்களைக் கொண்டு பிணியாளியைப் பிடித்துக்கொள்ளச் செய்தாகிலும் சல்யத்தை எலும்பிலிருந்து இழுக்க வேண்டும். அவ்விதம் செய்தும் இழுக்க முடியாவிட்டால், அஸ்தியில் பிரவேசித்துள்ள சஸ்திரம் முதலியதின் முனையை ஒருவாறு வளைத்து, ஞாண்கயிற்றின் ஒரு முனையை அவ்வாறு வளைத்த சல்யமுனையில் கட்டி, அக்கயிற்றின் மற்றொரு முனையை வெகு ஜாக்கிரதையாகக் குதிரையின் கடிவாளத்தில் முடிந்துவிடவும்; அக்குதிரையையும் நான்கு கால்களிலும் கழுத்திலும் கட்டி அசைவொட்டாமல் செய்யவேண்டும். அவ்விதமுள்ள குதிரையின் கடிவாளத்தில் ஞாண்கயிற்றைக் கட்டியதும், கசையினால் குதிரையை ஓங்கி அடிக்கவும்; அப்பொழுது வேகமாக அது தன் தலையை நிமிர்த்தித் தூக்கி விடுமாகையால், அதனால் சல்யமும் வெளிப்படுத்தப்படும். இவ்வாறே குதிரையின் கடிவாளத்திற்குப் பதிலாக ஒரு மரக்கிளையையாவது மெல்லென இழுத்து, அதில் அந்த ஞாண்கயிற்றின் மற்றொரு முனையைக் கட்டிவிட்டுக் கிளையை உயரக் கிளம்பி விடும்படியாகச் செய்யலாம். உட்புகுந்துள்ள சல்யம் அவ்வளவு வலிவுள்ளதா யிராவிட்டால் அதன் முனையைத் தர்ப்பங்களால் கட்டி சல்யத்தை வெளியில் இழுத்துவிடலாம்.* 26—31.

வீக்கத்தினால் மூடப்பட்ட சல்யத்தை வெளிப்படுத்தல் :— *சஸ்திர ரூபமான சல்யம் வீக்கத்தினால் மூடப்பட்டிருக்குமானால், முறைப்படி வீக்கத்தை அழுத்திப் பிதுக்க, அதன் உள்ளே அடங்கியுள்ள சல்யம் வெளியாய் விடும்.*—31½.

கிரஹிக்கக் கூடாத விடங்களில் ஒடிந்துள்ள சல்யங்களை வெளிப்படுத்தல் :—*கருவி முதலியவற்றிற்குப் பிடிபடாமல் ஒடிந்து*

உள்ளே தங்கியிருக்கும் சல்யத்தின்மீது நாடீ யந்திரத்தை வைத்து, அதைக் கொட்டாப்புளியினால் அடித்து, மெதுவாக அச்சல்யத்தை அசைத்து அசைத்து வெளிப்படுத்த வேண்டும். கிரஹிப்பதற்கு அநுகூலமில்லாத வழிகளில் பிரவேசித்துள்ள சல்யத்தையும் அநேக உபாயங்களால் வெளிப்படுத்தி விடலாம்.—32½.

காதுகளுள்ள சல்யங்களை வெளிப்படுத்தும் முறை :—காதுகளைப் போன்ற அவயவங்களையுடைய சல்யங்கள் உட்புகுந்திருந்தால், அச் சல்யங்களின் காதைக் கெட்டியாகப் பிடித்து நசுக்கியோ, நாடீயந்திரத்தின் முகத்தினால் கெட்டியாகப் பற்றிக் கொண்டோ அவற்றை வெளிப்படுத்தவும்.—33.

காதுகளில்லாத சல்யங்களை வெளிப்படுத்தும் முறை :—காதுகளில்லாமல், வாயைத் திறந்துகொண்டு, நேராகப் பாய்ந்து நிற்கும் சல்யத்தை அயக்காந்தமென்னும் இரும்பையிழுக்கும் லோஹக் கருவியினால் வெளிப்படுத்தவேண்டும்.—33½.

பக்வாசயத்திலுள்ள சல்யத்தை வெளிபபடுத்தும் முறை :—பக்வாசயமென்னும் ஜீர்ணகோசத்தினுள் பிரவேசித்துள்ள சல்யத்தை விரேசநத்தைக் கொண்டு வெளிப்படுத்தி விடலாம்.—34.

நச்சுக்காற்று, நீர்ப்பொருள் முதலியதை வெளிப்படுத்தல் :—கெட்டுப்போன நச்சுக்காற்று, விஷப்பொருள், விஷமித்த முலைப் பால், இரத்தம், ஜலம் முதலியதை வாயால் உறிஞ்சி வெளிப்படுத்த வேண்டும்.—34½.

தொண்டைக்குள் புகுந்துள்ள சல்யத்தை வெளிப்படுத்தும் உபாயங்கள்:—(1) தொண்டையினுள் சல்யம் பிரவேசித்திருந்தால், தாமரைத் தண்டின் நூல்களையெடுத்துத் தொண்டையினுள் விடவேண்டும்; அப்பால் அந்த நூல் சல்யத்தில் பற்றிக்கொண்டதும், நூலையும் சல்யத்தையும் ஒருமிக்கச் சேர்த்து இழுக்கவேண்டும். (2) தொண்டையில் சிக்கியுள்ள சல்யம் அரக்கு ஸம்பந்தமான வஸ்துவாயிருந்தால், நெருப்பிற் காய்ச்சிய சலாகா யந்திரத்தை ஒரு நாடீ யந்திரத்தின் மூலமாகத் தொண்டையினுள் விட்டு, அப்பால் ஜலத்தை விட்டு அந்த அரக்கை அல்லது அரக்குபோன்ற வஸ்துவை கெட்டியாகச் செய்து வெளியில் இழுக்கவேண்டும். (3) அரக்குமாதிரியில்லாத சல்யத்தைச் சலாகை முதலியவற்றில் அரக்கைப் பூசி வெளிப்படுத்தலாம். (4) தொண்டையினுள் ஏதாவது முள் அகப்பட்டிருந்தால், மயிர்ச்சுரணையை ஒருநூலில் கட்டி, அந்நூலின் மற்றொரு முனையைக் கையில் பிடித்துக்கொண்டு, மயிர்ச்சுரணையை ஜலம் முதலிய திரவப்பொருட்களோடு விழுங்கிவிடவும்; உடனே வாந்தி செய்யும் போது, அம்மயிர்ச்சுரணையில் சிக்கிக்கொண்ட சல்யத்தை அச்சுரணையோடு ஜாக்கிரதையாக இழுத்து வெளிப் படுத்தவேண்டும். (5) அவ்விதமே தொண்டையில் அகப்பட்டுள்ள மயிரை முள்ளினால் வெளிப்படுத்துக. 35—37½.

முகம் முதலியதிலிருந்து சல்யத்தை வெளிப்படுத்தல்:—*முகத்திலிருந்தாவது, நாசியிலிருந்தாவது இழுத்து வெளிப்படுத்த முடியாத சல்யத்தை அவ்வவயவங்களுக்குப் பின்புறமாகத் தள்ளிவிடவேண்டும்.—38.*

தோண்டையிற் சிக்கிய கபளத்தை உட்செலுத்தல் :—*அன்னம் முதலியவற்றின் கபளம் அன்னவாஹியென்னும் நாளத்தினுள் சிக்கிக்கொண்டால், அவ்வித சல்யத்தை ஜலங்குடித்தாவது, தோளில் குத்தி அடித்தாவது உட்செலுத்திவிடலாம்.—38½.*

நேத்திரத்திலும் விரணத்திலுமுள்ள ஸூக்ஷ்மமான சல்யங்களையெடுத்தல்:—*நேத்திரத்திலும் விரணத்திலும் உள்ள ஸூக்ஷ்மமான சல்யங்களைப் பட்டுநூல், மயிர், ஜலம் இவற்றைக்கொண்டு வெளிப்படுத்தலாம்.—39.*

உடலிற் புகுந்துள்ள ஜலத்தை வெளிப்படுத்தல்:—*வயிறு நிரம்பவும் மார்பு நிரம்பவும் தண்ணீரைக் குடித்த மனிதனைத் தலைகீழாக எடுத்து, உடலை நீட்டிக் குலுக்கவும்; அல்லது வாந்தியாவது செய்விக்கலாம்; பெரிய சாம்பர்க்குவியலில் வாயளவும் அவனைச் சற்று நேரம் புதைத்தாவது வைக்கலாம்.—40.*

காதில் புகுந்த ஜலம் முதலியதை வெளிப்படுத்தல்:—(1) *செவியினுள் ஜலம் புகுந்து நிரம்பிவிட்டால், கையால் குடைந்து, தைலத்தையும் ஜலத்தையும் உட்செலுத்தி வெளிப்படுத்தலாம்; அல்லது காதைக் கவிழ்த்தும் குலுக்கலாம்; அல்லது அதை உறிஞ்சும் வெளிப்படுத்தலாம். (2) செவியினுள் ஏதாவது பூச்சி புகுந்துவிட்டால், உப்புக் கரைத்த ஜலத்தைச் செவியினுள்விட்டு நிரப்பலாம்; அல்லது இளஞ்சூடான காடியையாவது உட்செலுத்தலாம். இவ்வாறு செய்து பூச்சி அழிந்துவிட்டால், பிறகு க்லேதஹரமான* [1] *சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—41, 42.*

அரக்கு,பொன் முதலிய சல்யங்கள் தேஹத்திலிருந்து அழிவது :—*அரக்கு ஸம்பந்தமான சல்யமும், பொன் வெள்ளி முதலிய தாதுப் பொருட்கள் ஸம்பந்தமான சல்யமும் தேஹத்திலேயே வெகு நாட்களாயும் தங்கியிருந்தால், அவை உடலின் இயற்கைச்சூட்டின் ஸம்பந்தத்தினாலேயே பெரும்பாலும் உருகித் தேய்ந்து உருமாறிப் போய்விடும்.—43.*

மண், மரம் முதலியவற்றின் சல்யங்களின் தன்மை :—*மண், மூங்கில், மரம், மாடு முதலியவற்றின் கொம்பு, எலும்பு, பல், மயிர், கல் என்னும் இவ்விதமான சல்யங்கள் சரீரத்தில் தங்கியிருந்தால், அவை எப்பொழுதும் தாமாகவே அழிவதில்லை; மண்ணாற் செய்த ஓடு செங்கல் முதலியவற்றின சல்யங்களும் அப்படிப்பட்டவையே*

1. *க்லேதஹரம்—க்லேதம் என்றால் பூச்சி அல்லது தேஹதாதுக்கள் பதனழிந்து மாறுவதாலுண்டாகும் ஒருவிதமான அர்நீர்; அவ்வித தோஷத்தை அகற்றும் சிகித்ஸை அல்லது ஔஷதம் க்லேதஹரம் என்ப்படும்.*

*யாம். கொம்பு, மூங்கில், இரும்பு, மயிர், மரம் இவை முதலிய சல்யங்கள் வெகு நாட்கள் சென்ற பிறகுகூட பெரும்பாலும் சிதறி உரு மாறுவதில்லை; அவ்வித சல்யம் சீக்கிரத்தில் மாம்ஸத்தையும் இரத்தத்தையும் அழுகச்செய்து தின்றுவிடும்.*—44, 45.

**மாம்ஸத்தில் புகுந்து மறைந்துள்ள சல்யத்தை வெளிப்படுத்தல்** :—*ஏதாவது சல்யம் மாம்ஸத்தினுள் புகுந்து மறைந்துகிடந்தால், அவ்விடம் எரிக்கப்படுவதில்லை. ஆகவே அவ்விடத்தில் மர்த்தநம் செய்வித்து ஸ்வேதசிகித்ஸை-சோதந சிகித்ஸை-லங்கந சிகித்ஸை-பிருஹ்மண சிகித்ஸை இவற்றுள் ஏதேனும் ஒன்றாலாவது, தீக்ஷ்ணமும் சூடுமுள்ள வஸ்துக்களால் உபநாஹஸ்வேதம் செய்தாவது, தீக்ஷ்ணமும் உஷ்ணமுமான அன்னபானாதிகளை உபயோகித்தாவது, ஆழமாக சஸ்திரத்தினால் குத்தியாவது அவ்விடத்தைப் பக்குவம் செய்து சல்யத்தை வெளிப்படுத்தலாம்; அல்லது அவ்விடத்தைக் கீண்டும், ஏஷணீ யந்திரத்தினால் துளாவியும், அறுத்தும் சல்யத்தை வெளியில் கொண்டுவரலாம்.*—46, 47.

**பலவாறான சல்யங்களின் நிலைமையும் அவற்றை வெளிப்படுத்துவதும்** :—*சல்யங்களும், அவை பிரவேசிக்கும் அவயவங்களும், யந்திரங்களும் அநேகவிதமான உருவங்களுள்ளவை யென்பதைக் கண்டறிந்து, விசேஷ அறிவுள்ள வைத்தியன் முற் குறிப்பிட்டவைகளைத் தவிர இன்னும் பலவாறான அந்தந்த உபாயங்களால் சல்யம் தங்கியிருக்கும் நிலைமையைத் தெரிந்துகொண்டு, அதை வெளிப்படுத்துவதற்கும் உபாயம் தேடவேண்டும்.*—48.

---

# இருபத்தொன்பதாம் அத்தியாயம்.

## சஸ்திர கர்மவிதி.

*அப்பால்* **சஸ்திர கர்மவிதி**[1] *யென்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது* :—

**விரணமும் அதைப் பாதுகாப்பதும்** :—*விரணமென்பது பெரும்பாலும் முன்னதாக வீக்கம் ஏற்பவித்து, அப்பால் அது பழுத்து ஏற்படும் ஒருவித கோளாறு. மிகவும் குளிர்ச்சி பொருந்திய லேபங்கள், ஜலம் முதலியதை ஊற்றுவது, இரக்த மோக்ஷணம் செய்வது, சோதநசிகித்ஸை இவை முதலியவற்றைக் கொண்டு அந்த விரணத்தைப் பழுத்துப் பதன் கெடாதவாறு பாதுகாத்து சிகித்ஸை செய்துவர வேண்டும்.*—1, 1½.

**ஆமமான வீக்கத்தின் குறிகள்**:—*பழுக்காமல் ஆமமாயிருக்கும்*[2] *விரணம் அற்ப வீக்கமுள்ளதாய், அற்ப சூடும் வலியும் உள்ளதா*

---

1. *சஸ்திர கர்மவிதி—சஸ்திரங்கள் எனப்படும் கருவிகளைக்கொண்டு செய்யப்படும் சிகித்ஸாமுறையைக் கூறுவதற்கான அத்தியாயம்.*

2. *ஆமம்—என்றால் பழுக்காத நிலைமையிலுள்ளது எனப் பொருள்.*

யிருக்கும்; அதற்குச் சுற்றுப்புறத்திலுள்ள ஸாதாரண நிறத்திற்குச் சமானமான நிறமுடையதாய், கடினமாகவும், உள்ளே சீழ் முதலியதால் அசைவு கொடுக்காததாகவும் இருக்கும்.—2.

பழுத்துவரும் வீக்கத்தின் குறிகள்:—பழுத்து வருகிற நிலைமையிலுள்ள வீக்கம், ஒருவாறு மங்கல் நிறமுடையதாகவும், சிவப்பாகவும், காற்று நிறைந்த துருத்தியைப்போல் இரண்டு நான்கு பக்கமும் பரவியும் இருக்கும்; குத்தலும், பரபரப்பான வேதனையும், விறித்து உடைந்துவிடுவது போன்ற உணர்ச்சியும் உண்டாகும்; உடம்பில் பலவிதமான ஸங்கடமும், அருவருப்பும், தாபமும், அழற்சியும், ஜ்வரவேகமும், நித்திரையின்மையும் அநுஸரித்துவரும். தோய்ந்துபோன நெய்யை அவ்விடத்தில் விட்டால் நன்றாக உருகிவிடும்; விரணத்தைப்போல் பரிசித்தாலும் பொறுக்கக் கூடாத வலியுண்டாகும்.—3, 4.

நன்றாகப் பழுத்த வீக்கத்தின் குறிகள்:—வீக்கம் நன்றாகப் பழுத்துவிட்டால் அதிலுண்டாயிருந்த வேதனை முதலியது குறைந்துவிடும்; அவ்விடத்தில் வாட்டமுண்டாகும்; வெளுத்துப்போய் அப்பாகம் சுருக்கங்கொள்ளும்; சுற்றிலும் விளிம்புகளில் பள்ளம் விழுந்து நடுவில் மேலெழுந்து நிற்கும்; அரிப்பும் வீக்கமும் மற்றுமுள்ள வேதனை முதலியதும் மட்டுப்படும்; அவ்விடத்தைப் பரிசித்தால் உட்புறமுள்ள சீழானது, துருத்தியில் அடங்கிய ஜலத்தைப்போல இங்குமங்குமாய் அசைந்தாடுவதாகக் காணப்படும்.—5, 5½.

வீக்கம் பழுப்பதற்கு ஆதாரமான கூறுகள்:—வாயுவின் ஸம்பந்தமில்லாமல் வலி அல்லது குத்தல் உண்டாகாது; பித்த ஸம்பந்தமின்றி அழற்சி ஸம்பவிக்காது; கபத்தின் ஸம்பந்தமில்லாமல் வீக்கம் உண்டாவதில்லை; இரத்தத்தின் ஸம்பந்தமின்றியே சிவப்பு நிறமும் ஏற்படுவதில்லை. ஆகவே மூன்று தோஷங்களும் இரத்தமும் ஒரு மிக்கச் சேருவதாலேயே வீக்கம் பழுத்துவரும்.—6½.

மிதமிஞ்சிப் பழுத்துப் பதன் கெடுவதாலான குறிகள்:—பழுத்த நிலைமை உபேக்ஷிக்கப்பட்டு அதிக்ரமித்துவிட்டால், அவ்வீக்கமுண்டானவிடத்தில் த்வாரம் விழுந்து புரையோட ஆரம்பிக்கும்; அவ்விடத்திலுள்ள சர்மம் மிருதுவாய்விடும்; அப்பிரதேசத்தைத் தோஷங்கள் தின்றுவரும்; பலவாறு சுருக்கங்கொண்டு, மங்கல் நிறமாக மாறிவிடும்; அவ்விடத்தில் மயிர்கள் உதிர்ந்தும் வரும்—7½.

வீக்கத்தில் இரக்தபாகம் என்னும் நிலைமை:—கபத்தினால் உண்டாகும் வீக்கங்களில் இரத்தமானது வெகு தூரம் வரையில் ஆழத்தில் பழுக்க ஆரம்பிக்கும்; ஆகவே அதில் வீக்கம் பழுப்பதற்கான குறிகள் நன்றாகப் புலப்படமாட்டா. ஆனால் அவ்விடத்தில் வீக்கம் சூடாயிருப்பதற்குப் பதிலாகக் குளிர்ச்சியுள்ளதாகவும், மற்றச் சர்மத்திற்குச் சமானமான நிறமுடையதாகவும், வலி குறைவாகவும், கல்லைத் தொடுவதுபோல் பரிசிப்பதற்குக் கெட்டியா

*கவும் இருக்கும். தத்துவ மறிந்த வைத்தியர் அதை ஸந்தேஹ மின்றி "இரக்தபாகம்"*[1] *எனக் கூறுவர்.—8, 9½.*

**உடைப்பதற்கும் கீண்டுவிடுவதற்கும் ஏற்ற வீக்கங்கள் :—** *மனோ தைரியம் குறைந்தவர்களுக்கும், பலஹீனர்களுக்கும், பாலர்களுக் கும், பழுத்த நிலைமை மிகவும் அதிகரித்த பிணியாளிகளுக்கும், மர்மஸ்த்தானங்களிலும் - ஸந்திகளிலும் - மற்றும் அவைபோன்ற விடங்களிலும் உண்டான வீக்கமுடையவர்களுக்கும் வீங்கிய பாகத் தை உடையச் செய்வதும், மற்றதில் சஸ்திரங்களால் கீண்டுவிடு வதும் தகுந்த முறைகளாகும். 10½.*

**ஆமமான வீக்கத்தை அறுப்பதலான அவக்குறிகள் :—** *ஆமநிலை மையிலுள்ள வீக்கத்தைச் சஸ்திரத்தினால் கீண்டுவிட்டால் ஸிரை களும் ஸ்நாயுக்களும் சேதமடையலாம் ; இரத்தம் அதிகமாக வெளி வந்துவிடும் ; வலியும் அதிகமாய் உண்டாகும் ; வீக்கத்தில் தகாத விதமாய் பிளவையும் ஏற்படும் ; அல்லது அறுத்த விடத்திலுள்ள விரணத்திலிருந்து, அங்குள்ள தோஷங்களின் ஸம்பந்தத்தினால் விஸர்ப்பம் என்னும் விஷப்புண்கள் ஸம்பவிக்கும்.—11½.*

**சீழ் உள்ளேயே தங்கியிருப்பதாலான தீமைகள் :—** *உள்ளேயே சீழ் அடிக்கடியும் அதிகமாகத் தங்கியிருக்குமானால், அது கிரமமாக விருத்தியாய், அக்னியானது உலர்ந்த புற்குவியலை எரிப்பதுபோல, ஸிரைகளையும் ஸ்நாயுக்களையும் மாம்ஸங்களையும் எளிதில் எரித்து விடும்.—12½.*

**ஆமசோதையை அறுப்பதும், பழுத்திருப்பதை உபேக்ஷிப்பதும் தப்பாம் :—** *எவனொருவன் அறியாமையினால் ஆமமான வீக்கத்தை அறுத்து விடுகிறானோ, எவன் பழுத்துப் பக்குவமான வீக்கத்தை அறுக்காமல் உபேக்ஷித்திருக்கிறானோ, அவ்வாறு ஆலோசனையின்றி யே சஸ்திர சிகித்ஸை செய்யும் அவ்விருவரும் சண்டாளரென்று கருதக்கூடியவராவர்.—13½.*

**சஸ்திரப் பிரயோகத்திற்கு முன் உணவுண்பதும் மதுபானம் செய்வதும் :—** *சஸ்திர சிகித்ஸை செய்வதற்கு முன்பு பிணியாளியை அவனுக்குப் பிரியமானதைப் புஜிக்கச் செய்யலாம். சஸ்திர சிகித் ஸையினாலுண்டாகும் வலியைத் தாங்க முடியாதவன் மதுபானம் செய்யும் வழக்கமுள்ளவனாயிருந்தால், அவனை தீக்ஷ்ணவீர்யமுள்ள மதுவைப் பருகச் செய்யலாம். ஏனெனில், அன்னம் புஜித்தால் அவனுக்குச் சஸ்திரசிகித்ஸை செய்கையில் மூர்ச்சை யுண்டா காது ; மதுபானத்தினால் மதிமயக்கங் கொண்டவன் வேதனை அறி யான்.—14, 15.*

**சஸ்திரசிகித்ஸையில் மயக்கமுண்டுபண்ணத் தகாதவர் :—** *ஆனால் மூடகர்ப்பத்தினால்*[2] *வருந்துபவரும், அச்மரீயென்னும் மூத்*

---

1. இரத்தம் ஆழமான விடத்தில் உறைந்து, கட்டியைப்போல் பக்கு வமாய் வீக்கமுண்டானால் அது இரக்த பாகம் எனப்படுகிறது.

2. மூடகர்ப்பம்—சாரீரஸ்த்தானம் பார்க்க.

திரமார்க்கத்திலுண்டாகும் கல்லடைப்பினால் வருந்துபவரும், வாயிலுண்டான வியாதிகளால் கஷ்டப்படுபவரும், உதரரோகத்தினால் துன்பப்படுபவரும் மதுபானம் முதலியவற்றால் மயக்கம் பெறுவைதற்குத் தகுந்தவராகார்.—15½.

**வீக்கங்களில் சஸ்திரத்தைப் பிரயோகிப்பதற்கான போது விதி:—** (1) பிறகு வைத்தியன் பிணியாளிக்குவேண்டிய உபகரணங்களையெல்லாம் ஆயத்தமாயிருக்கும்படி ஏற்ற ஏற்பாடுகளைச் செய்வித்து, அவனைக் கிழக்குமுகமாக உட்காரச்செய்து, தான் அவனுக்கு எதிர்முகமாய் நின்றுகொண்டு, மர்மஸ்த்தானங்கள் எனப்படும் பிரதேசங்களையும் அவற்றைப்போன்ற வேறு இடங்களையும் விலக்கிவிட்டு, பந்தனம்செய்து, சஸ்திரத்தை அநுலோமமாக வீக்கத்தினுள் சீழ் நன்கு வெளிப்படுமாறு ஜடிதியில் பிரயோகிக்கவேண்டும். அதை ஒரே தடவையில் வேண்டியவளவு உட்செலுத்தி யெடுத்துவிடவேண்டும். (2) மிகவும் பெரியதாகப் புறப்பட்டுப் பழுத்துள்ள வீக்கத்தில் நன்றாக இரண்டு அங்குலம் ஆழம்வரையில் சஸ்திரத்தை உட்செலுத்தி, அப்பால் இரண்டு மூன்று அங்குல தூரத்தில் மற்றொரு தடவை அவ்வாறே கீண்டுவிடவும். அவ்விதம் கீண்டுள்ள விரணத்தினுள் ஏஷணீயென்னும் கருவியைச் செலுத்தி, விரணத்தின் உட்புறம் எவ்வளவு தூரம் வியாபித்துப் புரையோடியிருக்கிறதென்பதை நன்றாக அறிந்து கொள்ளவும்; விரணம் உண்டாயிருக்கிற இடங்களுக்கும் அதன் உட்புறங்களில் ஏற்பட்டுள்ள குழி போன்ற த்வாரங்களுக்கும் தகுந்தவாறு ஏஷணிகளைக்கொண்டோ, அல்லது விரல்களையிட்டோ, ஏதாவது நாளங்கள் அல்லது கனமான மயிர்களை உட்செலுத்தியோ புரையோடும் மார்க்கங்களைத் துழாவிப் பார்க்கலாம். அவ்வாறு உட்செலுத்தப்படும் ஏஷணீ முதலியது எவ்வெவ்விடங்களில் தாராளமாகப் பிரவேசிக்கின்றதோ அவ்வவ்விடங்களிலெல்லாம் விரணம் புரையோடியிருப்பதாய் அறியவும். எங்கெங்கே வீக்கம் மேலெழுந்து நிற்கிறதோ அவ்வவ்விடங்களில் நன்றாக தோஷங்கள் வெளிவருமாறு வகுத்துக் கீறி விரணமுண்டு பண்ணவேண்டும்; அந்த விரணத்தை எவ்வளவு விசாலமாகவும் ஆழமாகவும் செய்தால் உள்ளே அழுக்குகள் நிற்காமல் வெளியாய் விடுமோ அவ்வாறு செய்து, குழிப்புண்ணுக்கு அவகாசமில்லாமலும் சஸ்திரத்தினால் அறுத்து விரணசிகித்சையைச் செய்யவேண்டும். 16—20½.

**சஸ்திர சிகித்ஸையில் வைத்தியனுக்கும் சஸ்திரத்திற்கும் அவசியமான குணங்கள் :—** சஸ்திர சிகித்ஸையை நன்றாக நிறைவேற்றும் விஷயத்தில் (1) வைத்தியனுக்கு தைரியமும், வெகு சீக்கிரத்தில் எளிதாகக் காரியத்தைச் செய்து முடிக்கும் திறமையும், உடம்பில் வியர்வையாவது நடுக்கமாவது உண்டாகாமலிருக்கக்கூடிய தன்மையும், மனதில் கலவரமுண்டாகாத நிஸ்ஸம்சயமான அறிவும் அவசிய

பாகும். (2) உபயோகிக்கப்படும் சஸ்திரமோ ஏற்றவாறு கூர்மை யாய் அமைந்திருக்க வேண்டும்.—21½.

சஸ்திரத்தைக் குறுக்காகப் பிரயோகிக்கத் தகுந்த அவயவங்கள்:—நெற்றிக்கட்டு, புருவம், பல்லீறு, தோள், வயிறு, அக்குள், நேத்திரத்தின் கீழ்-மேற்-புறங்கள், உதடுகள், கன்னம், கழுத்து, துடையிடுக்கு இவ்விடங்களில் சஸ்திரம் பிரயோகிக்கவேண்டி நேரிட்டால், குறுக்குவாட்டில் பிரயோகிக்க வேண்டும்; இவ் விடங்களைத் தவிர்த்து மற்ற விடங்களில் குறுக்குவாட்டில் சஸ்திரப்பிரயோகம செய்தால் ஸிரைகளும் ஸ்நாயுக்களும் அறுந்துவிடக் கூடும்.—22, 23.

சஸ்திரத்தினால் கீண்ட விடத்தைக் கழுவுவதும் தூபமிடுவதும்:— சஸ்திரப் பிரயோகம் செய்து முடிந்ததும், உபசார வார்த்தைகளைச் சொல்லியும, குளிர்ந்த ஜலத்தை முகத்தில் தெளித்தும், பிணியாளிக்குத் தேருதல் செய்து, அப்பால் சஸ்திரத்தினால் கீண்ட விடத்தை விரலால் நாற்புறமும் அழுத்தி, கஷாயத்தினால் கழுவி[1], ஈரமில்லாத மிருதுவான வஸ்திரத்தினால் ஈரத்தை நன்றாகத் துடைத்துவிடவும். குங்குலியம், அகிற்கட்டை, வெண்கடுகு, காயம், மட்டிப்பால், இந்துப்பு, திப்பிலி, வேப்பிலை இவற்றை நெய்யால் நனைத்து அக்னியிலிட்டு தூபம் போடவேண்டும்; அந்த தூபம் விரணத்தின் மேல் படியும்படிச் செய்ய வேண்டும்.[2] 24—25½.

விரணத்தில் வர்த்தியிட்டு பந்தநம் செய்யு முறை:—திலகல்கம் என்னும் அரைத்த எள், நெய், தேன் இவற்றுள் ஏதேனும் ஒன்றிலோ, அல்லது அனைத்திலுமோ, அல்லது வேறு ஔஷதத்திலோ யுக்தப்படி ஒரு வர்த்தியை நனைத்து, அதை அந்த விரணத்தினுள் செலுத்தி, அதைக் கொண்டே விரணத்தை மறைத்து விடவும். அதன்மேல் நெய்யிற் பிசைந்த ஒருவித பிஷ்டத்தை வைத்து, அதன்மேல் பருமனாக ஒரு கவலிகையை[3] யிட்டு, வஸ்திரத்தினால் பிணியாளிக்கு ஸௌகரியமாயிருக்குமாறு, எளிதில் தளராதவிதமாய் முறைப்படி யோசித்து பந்தநமிடவேண்டும்; அந்த பந்தநத்தின் முடியை விரணத்திற்கு வலது புறமாகவாவது இடது புறமாகவாவது இடவேண்டுமேயன்றி, அதற்குக் கீழோ அல்லது மேலோ அதற்கு நேர் இரேகையில் முடியக்கூடாது. 26—28.

---

1. பாலுள்ள மரங்களான நியக்ரோதாதி கணத்திற் கூறியுள்ளவைகளின் கஷாயத்தினால், அல்லது அவ்வித வேறு வஸ்துக்களின் கஷாயத்தினால் கழுவ வேண்டும். இவ்விதம் கழுவுவதால் விரணம் சீக்கிரம் ஆறிவிடும்.

2. இவவாறு தூபம்போடுவது, விரணத்தில் சீழ் முதலியது பிடிக்காதபடி அதில் தோஷங்கள் சேராமலிருப்பதற்காகவென்று அறிக.

3. கவலிகை—பஞ்சு, விண்டு எனப்படும் பஞ்சுத்துணி, இவற்றைக் கொண்டு செய்யப்படும் மெத்தைபோன்ற பந்தநத்திற்கு உபயோகமான வஸ்திரம்.

விரணபந்தநத்திற்கான வஸ்திரங்கள் இருக்கவேண்டிய வகை: பந்தநம் செய்வதற்கான பட்டைவஸ்திரங்கள் நிர்மலமாகவும், மெல்லிதாகவும், கெட்டியாகவும் இருக்கவேண்டும். கவலிகை யென்பவை மயிர் முளைகளைப் போன்ற மிருதுவான பஞ்சுகளையுடை யவைகளாகவும், தூபங்களால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்டவை யாகவும், மிருதுவாகவும், மழமழப்பாகவும், மடிப்புகளில்லாதவை யாகவும் இருந்தால் விரணங்களில் உபயோகிக்க அநுகூலமான வையாகும்.—29.

சஸ்திரசிகித்ஸையில் ரக்ஷாக்நவிதி:—அதன் பிறகு அப் பிணியாளிக்கு இரக்ஷஸ் என்னும் பூதங்களைத் தூர விலக்குவதற் காக இரக்ஷை செய்யவேண்டும்; [1] அவ்வித பூதங்களுக்கு ஏற்ற வாறு பலியையும் படைக்கவேண்டும். ஓரிலைத்தாமரை, பெரு மல்லி, மேர்மல்லி, ஜடாமாம்ஸி, பிரஹ்மதண்டு என்னும் ஓஷதி, வசம்பு, சதகுப்பி, குடைபோன்ற ஒருவித புல், அறுகம்புல், வெண் கடுகு இவற்றையும் சிரஸ்ஸில் எப்பொழுதும் அணிந்திருக்கலாம். 30, 31.

விரண சிகித்ஸை செய்துகொண்டவனுக்கு ஏற்ற ஆசாரம்:— பிறகு, ஸ்நேஹபாநம் செய்த தினத்தன்று நிறைவேற்ற வேண்டிய தென்று கூறப்பட்டுள்ள ஆசாரத்தையே இப்பிணியாளியும் அநு ஸரித்து நடக்க வேண்டும். விரணசிகித்ஸை செய்துகொண்டி ருக்கையில் பகலில் தூங்குவதால், விரணத்தில் அரிப்பும், சிவப்பும், வலியும், வீக்கமும் உண்டாகும். ஸ்த்ரீகளை நினைப்பதாலும், பரி சிப்பதாலும், பார்ப்பதாலும் சுக்ரம் என்னும் தாது அதன் இடம் விட்டுப் பெயர்ந்து வெளியாய் விட்டாலும், ஸ்த்ரீகளோடு சேர்க் கையில்லாமலிருக்கையிலும் புணர்ச்சியினு லுண்டாகக் கூடிய தோ ஷங்களைப் பெறுவான்.—32, 33.

விரணம் ஆறுவதற்கு அநுகூலமான பத்தியாஹாரம்:—பவ தானியம், கோதுமை, கார் அரிசி, சிறுகடலை, பயறு, துவரை, சிறு பாலை, ஆரை, முதிர்ச்சிபெறாத முள்ளங்கி, கத்திரி, அம்மான் பச்சரிசி, சிறுகீரை, பாகல், வெள்ளிரி, புடல், சிறுதேக்கு, இந்துப்பு, மாதுளை, கடுக்காய், நெய், கொதித்து ஆறிய ஜலம், பழைய சம்பா அரிசியினாலான அன்னம் இவற்றை ஸ்நிக்த்தமாகவும், அளவிற் குறைவாகவும், உஷ்ணமாகவும், அதிக திரவமாகவும் [2] உள்ள நிலை மையில் ஜாங்கலமாம்ஸங்களோடு உட்கொண்டு வருபவனுக்கு

---

1. இரக்ஷஸ் என்னும் பூதங்கள் என்பவை சில ஸூக்ஷ்மசரீரிகளான ஜீவவர்க்கங்களைக் குறிப்பிடுகின்றன. இவை அருகில் (விரணங்களின் மேல்) அணுகாதபடி செய்வதற்கான ஸம்ஸ்காரம் ரக்ஷாக்நம் எனப்படும்.

2. திரவோத்தரம் என்கிற மூலத்திலுள்ள பதத்திற்கு, முதலில் ஸா தாரண உணவும், முடிவில் திரவமான உணவும் உபயோகிப்பது என்றும் பொருள் கூறலாம்; ஆனால் பிணியாளிகளுக்குப் பொதுவாகத் திரவம் அதிகமாயுள்ள உணவே எப்பொழுதும் பத்தியமாகும்.

விரணம் சீக்கிரம் ஆறிவிடும். ஏற்ற காலத்தில் அளவறிந்து அவர வருடைய தேஹ நிலைமைக்கு அநுகூலமான ஆஹாரத்தை உபயோகித்து வந்தால் அது ஸுகமாய் ஜீர்ணமாகும். 34—37.

**விரணமிருக்கையில் அஜீர்ணமுண்டாவதாலான கெடுதிகள் :—** சஸ்திரசிகித்ஸை செய்திருக்கையில் அஜீர்ணமுண்டானால், வாயு முதலிய தோஷங்கள் பலமாகக் கலக்கமடைந்து விடும். அதனால் பிறகு விரணத்தில் வீக்கமும், வலியும், பதனழியக் கூடியவாறு அழுன்ற பரிணாமமும், எரிச்சலும், பொருமலும் உண்டாகும்.—38.

**விரணமுள்ளவர் உபயோகிக்கத் தகாத நவதான்யாதி வர்க்கம்:—** புதிதான தானியம், எள், உளுந்து, மது, ஆநூபமாம்ஸம், பாலால் உண்டாகும் வஸ்துக்கள்,[1] கருப்பஞ்சாற்றாலான வஸ்துக்கள்,[2] புளி, உப்பு, காரம் இவற்றை விரணமுள்ளவர் விலக்கி விடவேண்டும். மேலும் வேறு எந்தெந்த வஸ்து வயிற்றுப் பொருமலுண்டாக்கக் கூடியதாகவும், தக்த்த பாகம் அடையக் கூடியதாகவும்,[3] குருவாகவும், சீதளமாகவும் இருக்கின்றதோ அதையும் உபயோகிக்கக் கூடாது. நவதானியம்[4] முதலிய இவ்வகுப்பைச் சேர்ந்த வஸ்துக்கள் விரணமுடையவருக்கு எல்லாத் தோஷங்களையும் கோளாறடையச் செய்யும இயல்புடையன. மதுவானது தீக்ஷ்ணகுணமும், உஷ்ணவீர்யமும், ரூக்ஷத்தன்மையும், அம்லரஸமுமுடையதாகையால், அது விரணத்தை வெகு சீக்கிரத்தில் கெடுத்துவிடும. 39—40½.

**விரணசிகித்ஸைக்குப் பின் அதைக் காப்பாற்றும் முறை :—** அந்த விரணத்தை வெட்டிவேராலான சிற்றாலவட்டங்களால் மெதுவாக வீசவும்; அதை அசைக்கவுங்கூடாது; குத்தவுங்கூடாது; சொறிதலும் பிசகு; அசைந்து வேலை செய்யும்பொழுது அதற்கு அதிர்ச்சியுண்டாகாவண்ணம் அதைக் காப்பாற்றவேண்டும். நண்பர்களாயும், வயோதிகர்களாயும், பிராமணர்களாயுமுள்ளவர்கள் மனதுக்கு இன்பமாகக் கூறும் கதைகளைக் கேட்டுக்கொண்டு, வியாதி நிவ்ருத்தியாய் விடுமென்று ஆசையுடன் இருந்துவருபவன் சீக்கிரத்தில் விரணத்தைப் போக்கிக்கொள்கிறான். 41—42½.

**விரணத்தை மீண்டும் சுததம்செய்து சிகித்ஸை செய்யும் தினம்:—** மறுபடியும் மூன்றாவது தினத்தன்று முன் செய்ததுபோலவே கழுவுதல் முதலிய விரணசிகித்ஸையைச் செய்யவேண்டும்; ஆனால் இரண்டாவது நாள் விரணங்களைக் கழுவுவது முதலிய காரியங்களைச்

---

1. தயிர், வெண்ணெய், நெய் முதலியன பாலால் ஆகுபவை.
2. வெல்லம், கற்கண்டு, சர்க்கரை முதலியன.
3. தக்த்தபாகம்—மிகவும் அம்லமாகவும் குடலில் மூறிவையும் பெறும் உணவின் தகாத பாகவிசேஷம். 171-ம் பக்கமும் பார்க்க.
4. நவதானியம்—புதியதானியம்; ஒன்பது விதமான தானியங்கள் என்கிற பொருள் இங்கே குறிப்பிடப்படவில்லை.

செய்யக்கூடாது; அவ்வாறு செய்தால் வலி தீவ்ரமாகப்போய், விரணமும் கரடுகட்டி வெகு மெதுவாக ஆறிவரும்.—43, 44.

நூற்சிலும்பை-கல்கங்களை முறைதவருக உபயோகிப்பதாலான தீங்குகள் :—ஸ்நிக்த்தமாகவோ அதிக ரூக்ஷமாகவோ உள்ள நூற்சிலும்பையையும்,[1] கல்கத்தையும் விரணத்திற்குள் உபயோகிக்கக்கூடாது; மேலும் அவற்றை வெகு கெட்டியாகவாகிலும் தளரவாகிலும் விரணத்தினுள் வைப்பது தகாது; அவற்றை வேறு எவ்விதத்திலும் முறைகேடாகப் பிரயோகிக்கக்கூடாது. அவை அதிக ஸ்நிக்த்தமாயிருந்தால் விரணத்தில் ஊன் தண்ணீர்முதலிய கசிவுகள் விருத்தியாகும். அவை அதிக ரூக்ஷமானல் தசைநார்கள் அறுக்கப்படுவதுபோன்ற உணர்ச்சியும், அதிகவலியும், வெடிப்பும், இரத்தப்பெருக்கும் ஸம்பவிக்கும். நூற்சிலும்பை முதலியவை அதிக தளர்ச்சியாகவோ அதிக கெட்டியாகவோ இருந்தாலும், அவை முறைதவருகச் செலுத்தப்பட்டாலும் விரணத்தினுள் உள்ள மார்க்கத்தில் தேய்வு உண்டாய் வலியதிகரிக்கும்.—45, 46.

விகேசிகை விரணத்தினுள் தங்கியிருப்பதாலான குணங்கள் :—விகேசிகை யெனப்படும் நூற்சிலும்பையானது விரணத்தினுள் இருந்துவந்தால், துர்நாற்றம்வீசும் மாம்ஸத்துடன் கூடியதும், கொப்புளம்போல் பிதுங்கி வந்திருப்பதும், உள்ளே புரையோடிக் கொண்டிருப்பதும், சீழை உள்ளடக்கிக்கொண்டிருப்பதுமான விரணத்தைத் துரிதமாய் ஆற்றிவிடும்.—47.

தக்த்தபாகமான வீக்கத்திற்கு சிகித்ஸை :—வீக்கம் தக்த்தபாகமடைந்திருக்கையில்[2] விரணங்களுக்கு விரோதமில்லாத பாசகுணமுள்ள போஜனவகைகளாலும், அவ்விதமான உபநாஹ ஸ்வேதங்களாலும் சிகித்ஸை செய்யவேண்டும்.—48.

உடனே தைக்க வேண்டிய விரணங்கள்:—அடிமுதலியவை தாக்குவதால் திடீரென்று ஸம்பவிக்கும் ஸத்யோவ்ரணங்கள்[3] என்னும் புண்கள் வாய் திறந்து இருக்கையில், அவற்றை உடனே தைத்துவிடவேண்டும். மேலும் மேதஸ் என்னும் கொழுப்பு அதிகரித்து உண்டாகும் கிரந்திகளைச் சஸ்திரத்தினுல் கீறி உடனே தைக்கவேண்டும். காதுகளிலுண்டாகும் சிறிய பாளீவ்ரணங்கள் என்னும் பிளவுபட்ட விரணங்களையும், சிரஸ், நேத்திரங்களின் வரம்பு, நாசி, உதடு, கன்னம், செவிகள், துடைகள், புயங்கள், கழுத்து, நெற்றி, பீஜங்கள், பிருஷ்ட பாகங்கள், ஆண்குறி, குதபாகம், வயிறுமுதலிய மிகக் கதுப்பான கனமுள்ள அவயவங்கள்

1. நூற்சிலும்பை—இதுவே விகேசிகையென்று ஸமஸ்கிருதத்தில் வழங்கப்படும். ஆங்கிலத்தில் lint எனப் பெயராம்.

2. தக்த்தபாகம்—விரணத்தை ஏற்ற காலத்தில் சஸ்திரத்தினுல் அறுத்துச் சுத்தம் செய்யாமற்போவதால் அது மிதமிஞ்சி முதிர்ந்துவிடுதல்.

3. ஸத்யோவ்ரணம்—அப்பொழுதே ஸம்பவித்த விரணம்.

இவற்றிலும் அவ்வாறே சஸ்திரத்தினால் கீண்டு உடனே அவற்றைத் தைத்துவிடவேண்டும்.—49, 50½.

**தைக்கத் தகாத விரணங்கள்:**—அற்ப தசைநார்களையுடையவையும் அசையக்கூடியவையுமான வங்க்ஷணம் என்னும் தொடையிடுக்கு, அக்குள் முதலிய விடங்களிலுள்ளவையும், வாயு ஸஞ்சரிக்கக்கூடிய அவயவங்களை ஆச்ரயித்தவையும், உள்ளடங்கிய சல்யங்களையுடையவையும், க்ஷாரங்கள்-விஷங்கள்-அக்னி இவற்றால் எரிக்கப்பட்டவையுமான விரணங்களைத் தைக்கக் கூடாது.—51½.

**விரணங்களைத் தைப்பதில் விசேஷ விதிகள்.**--சிதைவுற்று இடம் விட்டு வேறிடத்தில் விழுந்துள்ள சிறிய எலும்புச் சில்லியையும், உலர்ந்து கெட்டியாகப்போன இரத்தத்தையும், மற்றும் புற்பூண்டுகளோ மயிர்களோ உள்ளடங்கியிருந்தால்அவற்றையும் வெளிப்படுத்திவிட்டு, அறுபட்டுத் தொங்கும் தசைநாரையும், ஸந்திகளிலிருந்து விலகிய அல்லது ஒடிந்த எலும்பையும் அதனதன் ஸ்தானத்தில் தகுந்தவாறு அமையச்செய்து, இரத்தப்பெருக்கும் நின்றபிறகு, நூலினாலாவது, நார்களாலாவது, நரம்புகளாலாவது தைக்க வேண்டும்; தையல்களை ஒன்றுக்கொன்று தூரத்திலாவது, வெகு நெருக்கத்திலாவது போடக்கூடாது; மேலும் சதைகளை வெகு ஓரத்திற் பிடித்தாவது, வெகு அதிகமாகப் பிடித்தாவது தைக்கக் கூடாது. 52—53½.

**விரணங்களைத் தைத்த பிறகு செய்யவேண்டிய உபசாரம்:**—பிறகு வியாதிக்ரஸ்தனுக்குத் தேறுதல் கூறி, அஞ்ஜநம், வெண்பட்டை எரித்தெடுத்த மை, குப்பமேனி, ஆனைவணங்கியின் கனி, வெள்ளிலோத்தி, அதிமதுரம் இவற்றைத் தேனிலாவது நெய்யிலாவது குழைத்து விரணத்தின்மேல் தடவிவிட்டு, முன்போலவே பந்தநம் முதலியதைப் பிரயோகிக்க வேண்டும்.—54, 55.

**இரத்தக்கசிவு இல்லாத விரணங்களைத் தைத்தல்:**—விரணத்தின் உதடுகளில் இரத்தக்கசிவு இல்லாமலிருந்தால், அதைச் சிறிது மாத்திரம் கீறி, அங்கு இரத்தம் கசிந்ததும் அதைத் தைத்துவிட வேண்டும்; ஏனெனில் அவ்விடத்தில் விரணத்தின் உதடுகளை ஒன்று கூட்டி ஆறச்செய்வது இரத்தமேயாம்.—56.

**தேச காலாதிகளை அநுஸரித்து பந்தநம் பிரயோகித்தல்:**--அந்தந்த தேசகாலாதிகளின் தன்மைகளைக் கவனித்து, அந்தந்த விரணங்களில் வெவ்வேறு விதமான வஸ்துக்களைக் கொண்டு பந்தநங்களைப் பிரயோகிக்க வேண்டும். (1) ஆட்டுரோமத்தினாலான வஸ்திரங்கள், சர்மங்கள், நூற்சிலும்புகளுள்ள ஒருவகையான வஸ்திரங்கள் என்னும் இவை உஷ்ணகுணமுள்ளவை. (2) பட்டுத்துணிகள் சீதளகுணமுள்ளவையாம். (3) இலவம்பஞ்சுத்துணி, பருத்திப்பஞ்சுத்துணி, நரம்புகளாலான ஒருவித துணி, மரவுரி

இவற்றாலான பந்தநங்கள் சீதளமாகவும் உஷ்ணமாகவும் இருக்கும். 57, 57½.

**சில விரணங்களில் லோஹசலாகையும் அஸ்த்திபங்கத்தில் பலகை முதலியதும் உபயோகிக்கும் முறை:**—மேதஸ்ஸாவது கபமாவது அல்லது இரண்டுமாவது எந்த விரணத்தில் அதிகரித்திருக்கின்றனவோ அதில் செம்பு, அயம், பித்தளை, ஈயம் இவற்றாலாகிய சலாகை அல்லது சஸ்திரங்களைப் பிரயோகிக்க வேண்டும். அஸ்த்திபங்கம் எனப்படும் எலும்பு முறிவு நேர்ந்திருக்கையில் அவ்வவயவங்களைத் தாங்கி பந்தநம் செய்வதற்காகப் பலகையையும், தர்ப்பம் முதலியவற்றையும் பிரயோகிக்கவேண்டும்.—58½.

**பந்தந முறைகள்-பதினைந்து விதம்:**—அதனதன் பெயருக்குத் தகுந்த உருவங்களையுடையவைகளாய் பதினைந்து வகையான பந்தந முறைகள் உண்டு. அவையாவன: கோசபந்தநம், ஸ்வஸ்திகபந்தநம், முத்தோலீபந்தநம், சீநபந்தநம், தாமபந்தநம், அநுவேல்லிதபந்தநம், கட்வா பந்தநம், விபந்தபந்தநம், ஸ்த்தகிகாபந்தநம், விதாநபந்தநம், உத்ஸங்கபந்தநம், கோபணபந்தநம், யமகபந்தநம், மண்டலபந்தநம், பஞ்சாங்கபந்தநம் என்பனவாம். புத்திமானுள்ள வைத்தியன், மேற்கூறிய பந்தநமுறைகளில் எது எந்த அவயவத்தில் நன்றாக அமைந்து நிற்கக் கூடுமோ அவ்வவயவத்தில் அதனைப் பிரயோகிப்பானாக.[1] 59—61.

---

1. **கோச பந்தநம்**-வஸ்திரத்தைப் பைபோலச் செய்து விரல்முதலியவைகளில் பிரயோகிக்கும் பந்தநம். **ஸ்வஸ்திகம்**—ஒன்றன்மேல் ஒன்றாகக் குறுக்காகப் பிரயோகிக்கப்படும் கட்டு; துடையிடுக்கு மற்றுமுள்ள ஸந்திபாகங்கள் முதலியவற்றில் பிரயோகிக்கப்படுவது. **முத்தோலீ**—ஸாதாரணமாகச் சுற்றிக் கட்டும் பந்தநம்; இது கழுத்திலும் ஆண்குறி முதலியவற்றிலும் பிரயோகிக்கத் தகுந்தது. **சீந பந்தநம்**—பந்தவஸ்திரத்தை இடையில் கிழித்து கண்முதலியவற்றைச் சுற்றிலும் அமையும்படிச் செய்யப்படும் ஒரு வித பந்தநம். **தாம பந்தநம்**—முறுக்கிக் கட்டும் பந்தநம்; இது பெரியதமனிகள் முதலியது அறுபட்டுபோயிருக்குமிடங்களில் பிரயோகிக்கத் தகுந்தது. **அநுவேல்லிதம்**—மரங்களில் ஒரு கொடியேறிப் படருவது போல் கை கால்களில் கட்டப்படும் பந்தநம். **கட்வா பந்தநம்**—எந்தானம் போன்ற கட்டு; இது முகவாய்க்கட்டை முதலியதில் பிரயோகிக்கப்படுவது. **விபந்த பந்தநம்**—மிக்க விசாலமாகப் பரப்பிக் கட்டும் பந்தநம்; இது வயிற்றிலும், மார்பிலும், முதுகிலும் உபயோகிக்கத் தகுந்தது. **ஸ்த்தகிகா பந்தநம்**—த்வாரங்களை அடைக்கும்படியான பந்தநம்; இதை மூத்திரவஸ்திக்கு அடிப்புறத்திலும் குதத்திலும் பிரயோகிக்கலாம். **விதாந பந்தநம்**—பரவினாற்போல் கட்டும் பந்தநம்; இது சிரஸ் முதளியவிடங்களில் பிரயோகிக்கத் தகுந்தது. **உத்ஸங்க பந்தநம்**—பலவித மடிப்புகள் விழும்படியாகத் தோள்முதலியவிடங்களிள் பிரயோகிக்கப்படுவது. **கோபணா**—பசுவின் முகம் அல்லது ஸர்ப்பத்தின் படம்போல் பிரயோகிக்கப்படுவது; இதை நாசிமுனை உதடுமுதலிய அவயவங்களில் பிரயோகிப்பார்கள். [எலும்புகள் ஒடிந்தாலும், விரணங்கள் ஸம்பவித்தாலும், அவற்றின் சிகித்ஸைக்காக இந்த பந்தநங்கள் பிரயோகிக்கப்படும்.]

காட-ஸம-ச்லத பந்தநங்களைப் பிரயோகிக்கும் அவயவங்கள் முதலியன :—(1) *துடையிலும், உட்காரும் அவயவபாகங்களிலும், அக்குளிலும், துடையிடுக்கிலும், சிரஸ்ஸிலும் பந்தநங்களை காடம் அல்லது கெட்டியாகப் பிரயோகிக்கவேண்டும். (2) சாகைகள் என்னும் கைகால்களிலும், முகத்திலும், காதுகளிலும, மார்பிலும், பிருஷ்டபாகத்திலும், பக்கங்களிலும், கன்னங்களிலும், வயிற்றிலும், ஆண்குறியிலும், பீஜத்திலும் ஸமபந்தநம் எனனும் அதிக கெட்டியாக இல்லாத பந்தநத்தைப் பிரயோகிக்க வேண்டும். (3) நேத்திரத்திலும், ஸந்திகளிலும் ச்லதம் என்னும் தளர்ந்திருக்கும் பந்தநங்களை யிடவேண்டும்.*[1] *ஆனால் (4) சிதிலம் என்கிற தளர்ச்சியான பந்தநம் இடுவதற்கான அவயவங்களில் வாதத்தினாலாவது கபத்தினாலாவது விரணம் ஸம்பவித்தால் அவ்விடங்களில் ஸமபந்தநத்தைப் பிரயோகிக்கவேண்டும். (5) ஸமபந்தநம் இடவேண்டிய அவயவங்களில் அத்தோஷங்களாலேயே விரணமுண்டானால் அவ்விடங்களில் காடபந்தநத்தையே பிரயோகிக்கவேண்டும். (6) காடபந்தநம் இடவேண்டிய அவயவங்களில் அதே தோஷங்களால் விரணம் ஸம்பவித்தால், அவ்விடங்களில் அதிக கெட்டியாகப் பிரயோகிக்கவேண்டும்.* 62—63½

வாத-கபங்களாலான விரணங்களில் பந்தநங்களை அவிழ்க்கும் காலம் :—*வாத-கபங்களால் ஸம்பவிக்கும் விரணங்களின்மீது இடப்பட்ட பந்தநங்களை ஹேமந்த-சிசிரருதுக்களிலும், வஸந்தருதுவிலும் மூன்று நாட்களுக்கு ஒரு முறையாக அவிழ்க்கவேண்டும்.*—64.

பித்த-ரக்தவிரணங்களில் காட-சிதில-ஸமபந்தநங்களிடுதல் :—(1) *காட பந்தநம் இடவேண்டிய அவயவத்தில் பித்தத்தினாலாவது இரத்தத்தினாலாவது விரணம் ஸம்பவித்தால், அவ்விடத்தில் ஸமபந்தநத்தைப் பிரயோகிக்கவேண்டும். (2) ஸம பந்தநமிடவேண்டிய அவயவத்தில் அத்தோஷங்களால் விரணம் உண்டானால் அவ்விடத்தில் சிதிலபந்தநத்தை யிடலாம். (3) சிதில பந்தநத்திற்கான அவயவத்தில் அத்தோஷங்களாலேயே விரணம் ஸம்பவித்தால், அவ்விடத்தில் பந்தநமிடவே கூடாது. அவ்வித பந்தநங்களை கிரீஷ்மருதுவிலும் சரத்ருதுவிலும் காலையிலும் மாலையிலும் ஆக தினத்திற்கு இரண்டு முறை வீதம் அவிழ்க்கவேண்டும்.*—65, 65½.

விரணங்களுக்கு பந்தநமிடாவிட்டால் நேரிடும் கெடுதிகள் :—*விரணங்களை பந்தநங்களைக்கொண்டு கட்டாமல் விட்டுவிட்டால், ஏதேனும பூச்சிகளும் கொசுக்களும் அவற்றைக் கடிக்க நேரிடு மாகையால் அதனாலும், வாயுமுதலியவற்றாலும் விரணங்*

---

[1] காடபந்தநம்—*கெட்டியான பந்தநம்.* ச்லத பந்தநம்—*இதையே சிதில பந்தநம் என்றும் கூறலாம்; என்றால், தளர்ச்சியான பந்தநம்.* ஸம பந்தநம்—*அதிக கெட்டியாகவுமில்லாமல் அதிக தளர்ச்சியாகவும் இல்லாமல் நடுத்தரமாகப் பிரயோகிக்கப்படும் கட்டு.*

கள் பீடிக்கப்பட்டுப் பதனழியத் தலைப்படும். அவற்றில் உபயோகிக்கப்படும் ஸ்நேஹவஸ்துவாவது வேறு ஔஷதமாவது வெகுநேரம் நிலைத்துமிருக்க முடியாது. அந்த விரணங்கள் பிறகு சுத்தியடைவதும் கஷ்டம். ஆகவே எளிதில் ஆறுவதுமில்லை. ஒருக்கால் ஆறினாலும் அவ்விடம் நிறவேற்றுமையடைந்து ஒருவாறு விகாரமாய்விடும்.—66, 67.

விரணங்களை பந்தநம் செய்வதாலான குணங்கள் :—எலும்பு முதலியவை பலவாறு உடைந்து சிதறியிருந்தாலும், முறிவுபட்டிருந்தாலும், இடம் விட்டு நழுவினாலும், தசைநார் முதலியது அறுபட்டிருந்தாலும், ஸிரைகளும் ஸ்நாயுக்களும் அறுந்திருந்தாலும் பந்தநத்தினால் அவை எளிதில் சேர்ந்து ஆறிவிடும். மேலும் எழுந்திருத்தல், படுத்தல் முதலிய எல்லாவிதமான காரியங்களிலும் அவ்விடங்களுக்கு அதிக தீங்கு நேரிடாமல் பந்தநங்கள் அந்த விரணங்களைக் காப்பாற்றும். மேலும் உதடுகள் பிதுங்கித் தடித்திருப்பதும், கொப்புளம்போல் மேலெழுந்து நிற்பதும், மேடுபள்ளமாயிருப்பதும், கடினமானதும், அதிகவலியுடன் கூடியதும், மேலுக்கு ஸமமாயிருப்பதும், மிகவும் மிருதுவானதும், வலியில்லாததும் ஆக இவ்விதமான இலக்ஷணங்களையுடைய விரணங்களும் எளிதில் பந்தநத்தினால் சுத்தமாக்கப்பட்டு ஆறிவிடும். 68—69½.

சில விரணங்களின்மேல் இலைகளை உபயோகித்தல் :—கடினமாகவும், அற்பமாம்ஸமுள்ள அவயவங்களில் ஸம்பவித்ததும், ரூக்ஷத்தன்மையினால் எளிதில் ஆறாததுமான விரணங்களில் ஔஷதமிட்டு, அந்தந்த தோஷங்களுக்கும் அந்தந்த ருதுக்களுக்கும் ஏற்றவாறு பழமுண்ணிப்பாலை, பூர்ஜமரம், மருதமரம், கடப்பமரம் இவற்றின் இலைகளால் சுற்றுபுறமும் நன்கு மூடிவிடவும்; அந்த இலைகள் முதிர்ந்தவையாகவும், த்வாரங்களுடன் சிதைந்தவையாகவும், தடித்துக் கடினமாகவும் இராமல் நடுத்தரமாய் முதிர்ந்திருப்பதுடன், நன்றாகக் கழுவப்பட்டும் இருக்கவேண்டும். 70—71½.

பந்தநமிடத்தகாத விரணங்கள் :—குஷ்டரோகிகள், அக்னியினால் தேஹம் எரிக்கப்பட்டவர், பிடகை யென்னும் பிளவைகளுடையவர், மதுமேஹரோகமுள்ளவர்கள் இவர்களுக்கு விரணங்களின் மேல் பந்தநம் செய்யக்கூடாது; மூஞ்சூறுவின் விஷத்தினால் வட்டமாயுண்டாகும் தடிப்புகளையும், க்ஷாரத்தினால் எரிக்கப்பட்டு உண்டாகும் விரணங்களையும், விஷப்பற்றுள்ளவையும், சிதைவுற்று அறுந்து விழுபவையும், வலியும் எரித்தலுமுள்ளவையும், வீக்கங்கொண்டு விஸர்ப்பங்களுடன் கூடியவையுமான விரணங்களையும் பந்தநம் செய்யக்கூடாது. தசைநார்கள் அழுன்றுபோய் எரிக்கப்படுகையிலும், குதத்தில் கடுமையாய் உண்டாகும் அழுன்ற விரணத்திலும் பந்தநம்செய்வது தகாது. 72—73½.

பாதுக்காக்கப் படாத விரணத்தில் ஈக்களாலுண்டாகும் தீமையும் பரிஹாரமும் :—(1) தகுந்தவாறு பாதுக்காக்காமையால் எந்த

விரணத்தில் ஈயானது கிருமிகளைக் கொண்டுவைக்கின்றதோ, அக்கிருமிகளால் பக்ஷிக்கப்படுமிடம் வலியையும், வீக்கத்தையும், இரத்தம் முதலியவற்றின் பெருக்கையும் உண்டுபண்ணும். (2) அவ்வாறு கிருமிகளால் கெட்டுப்போகும் விரணத்தைக் கழுவுவதற்கும், விரணத்வாரத்தை நிரப்புவது அல்லது பூரணம் செய்வதற்கும்[1] ஸுரஸாதி கணத்திலுள்ள[2] சரக்குகளை உபயோகிக்கலாம். (3) எழிலம்பாலை, புங்கமரம், எருக்கு, வேம்பு, பழமுண்ணிப்பாலை இவற்றின் பட்டைகளைப் பசுமூத்திரத்திலால் ஆட்டி அந்த விரணத்தின் மேல் லேபநம் செய்யலாம். (4) க்ஷாரங்கள் என்னும் உப்புவகைகளை ஜலத்திற் கரைத்து, அந்த திரவத்தைக் கிருமிகளுடன் கூடிய விரணத்தில் தெளித்து வருவதும் ஹிதமாகும்; அல்லது தசைநார்களால் விரணத்தை மறைத்து, க்ஷார ஜலத்திலால் நனைத்துவருவதும் நலம். இவ்வித சிகித்ஸைகளால் கிருமிகளைச் சீக்கிரம் அழித்து விடலாம். 74—76½.

தோஷம் மிச்சமிருக்கையில் விரணத்தை ஆற்றக் கூடாது :—விரணத்தினுள் தோஷம் மிச்சம் இருக்கையிலேயே துரிதப்பட்டு விரணத்தை ஆற்றிவிடக் கூடாது; ஏனெனில், உள்ளடங்கிய அத்தோஷமானது பிரதிகூலமான சொற்ப காரணத்தினாலும் மறுபடியும் தீங்குண்டுபண்ணும். 77½.

விரணம் ஆறியபிறகு அவசியமான உபசாரம்:—விரணம் நன்கு ஆறியபிறகுகூட அஜீர்ண போஜநம், வியாயாமம், புணர்ச்சி முதலியவற்றையும், அமிதமான மனக்களிப்பு, கோபம், பயம் இவற்றையும் சரீரத்தில் திடனுண்டாகும் வரையில் விலக்கி விடவேணடும். விரணம் ஆறிவருதுமுதற்கொண்டு ஆறு அல்லது எழு மாஸங்கள் வரையில் அப்பிணியாளியை ஆதரவுடன் உபசரித்து வரவேண்டும். விரணசிகித்ஸைக்கான பொதுவாயுள்ள விதி இதுவேயாம். 78, 79.

விரணசிகித்ஸையைப் பற்றிய முடிவுரை :—இன்னும் பலவாறாக உற்பத்தியாய்வரும் அந்தந்த நிலைமைகளில் வாதாதிதோஷங்களுடைய அல்லது விரணமுண்டாவதற்கான குறிகள் ஸம்பவிக்கையில் சிகித்ஸை செய்பவர், பிறகு உத்தர ஸ்தாநத்தில் கூறப்போகிற விவரத்தைப்பற்றி நன்றாக ஆலோசித்து, வெகு கருத்துடன் இன்னும் வெவ்வேறாகப் பலவிதமான முறைகளைக் கொண்டு சிகித்ஸை செய்க.—80.

---

1. பூரணம்—விரணம் குழிப்புண்ணாக விருந்தால் அதனுள் ஆற்றுங் குணமுடைய திரவத்தை நிரப்புதல்.

2. ஸுரஸாதிகணம்—163-ம் பக்கம் பார்க்க.

## முப்பதாம் அத்தியாயம்.

### க்ஷாராக்னிகர்ம விதி

இனி க்ஷாரக்னி கர்மவிதி[1] யென்னும் அத்தியாயம் விவரிக்கப் படுகிறது :—

க்ஷாரப்பிரயோகத்தின் சிறப்பு :—சஸ்திரங்களென்ன, அநுசஸ்திரங்களென்ன இவை யெல்லாவற்றினும் க்ஷாரம் சிரேஷ்டமானது. ஏனெனில் எவ்வித ஒழுங்கினமான அவயவங்களிலும் க்ஷாரப்பிரயோகம் செய்தே அறுத்தல் உடைத்தல் முதலிய காரியங்களைச் செய்யலாம். மேலும் மிகவும் சிரமப்பட்டு சஸ்திரங்களைப் பிரயோகிக்க வேண்டிய அவயவங்களிலும், சஸ்திரத்தினால் பயனில்லாமற் போய்விடுகையிலும், மிகவும் கஷ்டஸாத்தியான வியாதிகளிலும் க்ஷாரப் பிரயோகம் பயன் தரக்கூடியதாம். அன்றியும் உட்கொண்டு வியாதிநிவாரணம் செய்து கொள்ளவும் இது ஏற்றதாயிருக்கிறது. 1, 2.

க்ஷாரம் உட்கோள்வதற்கான வியாதிகள் :—அர்சோரோகம், அக்னிமாந்தியம், அச்மரீ, குன்மம், மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய வியாதிகள், கிருத்ரிமவிஷப் பற்றுதலாலான கோளாறுகள் முதலியவற்றில் க்ஷாரம் உட்கொள்ளத் தகுந்ததாம். 2½.

க்ஷாரத்தை மேலுக்கு உபயோகிப்பதற்கான வியாதிகள் :—மஷகம், வெண்குஷ்டம், வெளிப்புறத்தில் உண்டாயிருக்கும் அர்சஸ்ஸுகள், குஷ்டம், ஏதேனும் அவயவம் சுரயணையற்றுப் போதல், பகந்தரம், அர்புதம், கிரந்தி, கெட்டுப்போன நாடீவிரணம் முதலியவற்றில் க்ஷாரத்தை நேராகவே அந்தந்த விடத்திற் பிரயோகிக்கலாம்.—3½

க்ஷாரப்பிரயோகம் செய்யத் தகாத நிலைமைகள் :—பித்தக் கோளாறு, இரத்தத்தின் கோளாறு, வேண்டியளவு பலம்பெற்றிருத்தல், துர்ப்பலத்தன்மை, ஜ்வரம், அதிஸாரம், இருதயரோகம், சிரோரோகம், பாண்டுரோகம், அரோசகம், திமிரம் என்னும் நேத்திர வியாதி, சோதந சிகித்ஸை செய்து கொண்டிருக்கும் நிலைமை, ஸர்வாங்கசோதை இவற்றில் க்ஷாரத்தை முற்கூறிய இருவகைகளிலும் உபயோகிக்கக் கூடாது. மேலும் பயந்தவன, கர்ப்பிணீ, ருதுமதி, பலக்கிரந்திகளின் கோளாறால்[2] நிலைகுலைந்த கருப்பையையுடையவள், சிசுக்கள், கிழவர் இவர்களும் க்ஷாரப்பிரயோகத்திற்கு ஏற்றவர்களல்லர். அன்னம் ஜீர்ணமாகாமலிருக்கையிலும் பிரயோகிக்கக் கூடாது. தமனிகளென்னும் செவ்விரத்தக்குழாய்கள், அஸ்தி

---

1. க்ஷாரம் என்பதையே காரம் என்பார்கள்; அது அழற்சி தரும் ஒருவித வஸ்து. அவ்வித க்ஷாரத்தையும் அக்னியையும் பிரயோகித்துச் செய்யும் சிகித்ஸைகள் க்ஷாராக்னி கர்மவிதி எனப்படும்.

2. பலக்கிரந்திகள்—கருப்பையின் பக்கங்களிலுள்ள மாதவிடாய பீஜங்களுற்பத்தியாகும் சிறிய கோளங்கள்.

முதலியவற்றின் ஸந்திகள், மர்மஸ்த்தானங்கள், தருணாஸ்த்திகளென்னும் முருந்துகள், காரிரத்தக்குழாய்கள், ஸ்நாயுக்கள், ஸேவநீ,[1] தொண்டை, நாபி அற்ப தசைநார்களையுடைய பிரதேசம், ஆண்குறி, பீஜம், ஸ்ரோதஸ்ஸுகள் என்னும் நாசிமுதலிய த்வாரங்கள், நகங்களின் உட்புறங்கள் இவற்றிலும் க்ஷாரம் பிரயோகிக்கக் கூடாது. வர்த்மரோகம் இருந்தாலேயொழிய நேத்திரங்களிலும் க்ஷாரம் பிரயோகிப்பது பிசகு; ஹேமந்த-சிசிரருதுக்களிலும், வர்ஷருதுவிலும், கிரீஷ்மருதுவிலும் க்ஷாரம் எவருக்கும் உபயோகிக்கத் தகுந்ததல்ல. 4—7½.

மத்திமக்ஷாரம் பக்குவம் செய்யப்படும் முறை:—காட்டுப்பருத்தி, கொன்றை, வாழை, வேம்பு, மாமரம், கள்ளி, முருக்கமரம், விஷ்ணுக்ராந்தி, மருதமரம், வெட்பாலை, எருக்கு, மணிப்புங்கு, புங்கு, அலரி, தக்காளி, நாயுருவி, அரணி, சித்திரமூலம், வெள்ளிலோத்தி இவற்றை வேர் கிளைகள் முதலியவற்றோடு ஈரமாகவே கிரஹித்து, சிறு துண்டுகளாகத் துண்டித்து, நான்கு பங்கு உலர்ந்த பீர்க்குகளையும், யவதானியத்தின் சுணையென்னும் முட்களையும் கிரஹித்து, காற்றோட்டமில்லாத இடத்தில், ஒரு பாறையின்மேல் காட்டுப்பருத்தியைப் பரப்பி, அதில் முற்கூறிய சரக்குகளைத் தனித்தனியே குவித்து, சுண்ணாம்புக் கற்களை அவற்றின்மீது போட்டு, எள்ளுத் தாள்களையிட்டு எரித்துவிடவேண்டும். அவற்றிற் பற்றிய அக்னி ஆறியபிறகு, எரிந்துள்ள வஸ்துக்களைத் தனித் தனியாகப் பிரித்தெடுத்துக்கொள்ளவும். இவற்றுள் சுண்ணபஸ்மம் மட்டும் ஒரு திரோணப் பிரமாணமும்[2], மற்றவையெல்லாம் சேர்ந்து ஒரு திரோணப்பிரமாணமும் இருக்கவேண்டும்; ஆனால் காட்டுப்பருத்தியின் பஸ்மம் இரண்டு திரோணம் அளவில் எடுத்துக் கொள்ளப்படவேண்டும். பிறகு அரை பாரம்[3] அளவில் ஜலத்தையும், அவ்வளவு பசுவின் மூத்திரத்தையும் எடுத்து, அவற்றில் சுண்ணாம்பு நீறுகளுடன் மேற்கூறிய பஸ்மங்களைக் கொட்டி நன்றாகக் கலக்கி, விசாலமான வஸ்திரத்தினால் அச்சாம்பர்க்குழம்பை வடிக்கட்டவும். அந்த திரவம் பிசுபிசுப்பும் செந்நிறமும் பெற்றுத் தெளியும் வரையில் வடிக்கட்டிவந்து, அது தீக்ஷ்ணகுணம் அடைந்திருப்பதாகத் தெரியவந்ததும், ஒரு இரும்புத் தொட்டியில் சேர்த்துத் துடுப்பினால் துழாவிக்கொண்டே, அக்னியிட்டு பக்குவம் செய்ய வேண்டும்; இவ்வாறு பக்குவமாய் வருகையில் முதலிற்கூறியுள்ள சுண்ணபஸ்மக் கற்களையும், நத்தையோடு, யவக்ஷாரம் இவற்றின் குழம்பையும், சங்கின் உட்புறத்து நாபிபோன்ற பாகத்தையும் ஒரு இரும்புப் பாத்திரத்திலிட்டு, அக்னி வர்ணமுண்டாகுமாறு அநேக

1. ஸேவநீ—நாக்கின் அடிப்புறம், பீஜகோசத்தின் மத்தியபாகம் முதலியவற்றில் தைக்கப்பட்டதுபோன்ற குறிகளடங்கிய பாகம்.

2. திரோணம்—32 சேர்கள் கொண்ட அளவு.

3. பாரம்—2000 பலங்கள் கொண்ட அளவு.

முறை எரித்து, முற்றிலும் க்ஷாரமாவதற்கு ஏற்ற நிலைமையடைந்திருக்கையில், நத்தையோடு முதலியவற்றின் குழம்பை ஒரு குடவப்[1] பிரமாணம் முற்கூறிய சாம்பர்க்குழம்பில் கல்கமாகச்சேர்த்துக் கலக்கவும்; பிறகு கள்ளிக்காக்கை, மயில், கழுகு, பருந்து, புறா இவற்றின் மலங்களையும், நாற்கால் ஜந்துக்களுடைய பித்தத்தையும், தாளகத்தையும், மனச்சிலையையும், இந்துப்பையும் நுண்ணிய சூர்ணமாகச் செய்து, அவற்றுடன் கலந்து, எல்லாம் ஒருமிக்கக் கலந்துவிடும்படி ஒரு துடுப்பினால் நாற்புறமும் நன்றாகக் கலக்கிக் குழப்பவேண்டும். ஆவியும் குமிழிகளும் உண்டாய் கெட்டியாய் லேஹ்யம்போல் அக்குழம்பு மேல்நோக்கிப் பொங்கி வருகையில் அதை இறக்கிவிடவும்; ஆறிய பிறகு அதை இருப்புப்பாத்திரத்தில் இட்டு, யவதானியக் களஞ்சியத்தில் பழகுவதற்காகச் சேமித்து வைக்கவேண்டும். இவ்வாறு பக்குவம் செய்யப்படுவது மத்திம க்ஷாரம் எனப்படும். $8—19\frac{1}{4}$.

மிருதுக்ஷாரம் பக்குவம் செய்யு முறை:—மிருதுக்ஷாரம் பக்குவம் செய்யவேண்டுமானால் முற்கூறிய திரவ்யங்களைக் கல்கமாக அரைத்துச் சேர்க்கக்கூடாது; ஆனால் அதில் ஸாதாரணமாகச் சேர்த்து, அப்பால் அவற்றை அப்புறப்படுத்தி விடவேண்டும்.—$19\frac{3}{4}$.

தீக்ஷ்ணக்ஷாரம் பக்குவம் செய்யு முறை:—தீக்ஷ்ணக்ஷாரம் பக்குவம் செய்யவேண்டுமானால், அதற்கு மத்திமக்ஷாரத்தில் கூறியிருப்பதுபோலவே சரக்குகளைக் கல்கமாகச் செய்து உபயோகிக்கவேண்டும்; மேலும் நீர்த்திப்பிலி, நேபாளம், சித்திரமூலம், அதிவிடயம், வசம்பு, ஸர்ஜக்ஷாரம், பிரம்மதண்டு, காயம், புங்கந்தளிர், தாளிசபத்திரி, கல்லுப்பு இவற்றையும் அச்சரக்குகளோடு சேர்த்து க்ஷாரத்தைப் பக்குவம் செய்யவேண்டும். பிறகு ஏழு நாட்கள் வரையில் பழகியபின் அதைச் சிகிச்சைகளில் உபயோகிக்கலாம்.[2] $20—21\frac{1}{2}$.

தீக்ஷ்ண - மத்திம - மிருதுக்ஷாரங்களைப் பிரயோகிக்கக்கூடிய வியாதிகள்:—வாதம், கபம், மேதஸ் என்னும் கொழுப்பு இவற்றினால் உண்டாகும் அர்புதம் முதலிய வியாதிகளில் "தீக்ஷ்ண க்ஷாரத்தையும்," அதே தோஷங்களால் அதிக உக்கிரமில்லாமல் உண்டாகும் வியாதிகளில் "மத்திம க்ஷாரத்தையும்," பித்தத்தினாலும் கபத்தினாலும் உண்டாகிற அர்சோரோகங்களில் "மிருது க்ஷாரத்தையும்" பிரயோகிக்கலாம்.—$22, 22\frac{1}{2}$.

---

1. குடவம்—அரைச் சேர்.

2. க்ஷாரங்கள் திரவமாகவும் இருப்பதுண்டு; உப்புகளைப்போல் திரவமில்லாத நிலைமையிலும் இருக்கும். வீர்யத்தில் அதிக காரமாயிருப்பது தீக்ஷ்ணக்ஷாரம் என்றும், குறைவான காரமாயிருப்பது மிருதுக்ஷாரம் என்றும், நடுத்தரமான காரமுள்ளது மத்திமக்ஷாரம் என்றும் சொல்லப்படுகிறது.

திரவக்ஷாரத்தில் குறைந்த ஜலத்தை மீண்டும் சேர்ப்பது :— *திரவமாயுள்ள க்ஷாரத்தில் ஜலபாகம் வற்றிப்போகுமானால், அதற்கு வீர்யத்தை விருத்தி செய்வதன்பொருட்டு மறுபடியும் க்ஷாரஜலத்தை* [1] *அதில் தகுந்தவளவு ஊற்றலாம்.—23.*

க்ஷாரங்களின் இயற்கைத் தன்மைகள் :—*அதிக தீக்ஷ்ணமல்லாதது,* [2] *மிருதுவானது, ச்லக்ஷ்ணமானது,* [3] *பிசுபிசுப்புள்ளது, சீக்ரம் உடலில் வியாபிக்குந்தன்மையது, வெளுப்பானது,* [4] *சிகரம்போல் மேடான வரம்புகள் கட்டிக்கொள்ளுந்தன்மையது,* [5] *எளிதில் குளிரச்செய்யத் தகுந்தது, நீர்க்கசிவுகளை யுண்டாக்காதது, அதிக வலியையும் உண்டுபண்ணாதது ; இவ்வாறு க்ஷாரம் பத்துவிதமான இயற்கைக் குணங்களையுடையதாகும். ஆகவே சஸ்திரத்தினுடையவும் அக்னியினுடையவும் காரியங்களை க்ஷாரம் ஒன்றைக்கொண்டே நிறைவேற்றலாம்.—24, 24½.*

க்ஷாரங்களின் பொதுவான செய்கைகள் :—*க்ஷாரமானது, பிரயோகித்த ஸமயத்தில் விசேஷமான க்ஷோப முண்டுபண்ணி, அது ஸம்பந்தப்பட்ட அவயவத்தை உறிஞ்சுவிடுவதுபோலவும், அவ்விடத்தை அழுத்தி நசுக்குவதுபோலவும் வேலைசெய்து, அவ்வவயவமெங்கும் பரவி, தோஷங்களையெல்லாம் வேருடன் களைந்துவிடும் ; அப்பால் தனது வேலையைச் செய்து, பிணியாளிக்கு நோய் நீங்கியதும், இதன் செய்கை தனக்குத் தானே தணிவடைந்து விடுகின்றது.—25, 26.*

க்ஷாரத்தைப் பிரயோகிக்கும் முறை:—*க்ஷாரப்பிரயோகத்தினால் நிவாரணம் செய்யக்கூடிய வியாதியில் எந்தவிடத்தில் க்ஷாரத்தை உபயோகிக்கவேண்டுமோ அங்கு ஒரு சிறிது அழுத்தோ, கீறியோ, அல்லது இரத்தங்கசியுமாறு கீண்டிவிட்டோ வேண்டும் ; பிறகு உலர்ந்த சல்லாத்துணியினால் சுற்றப்பட்ட சலாகையினால் க்ஷாரத்தையெடுத்து, அவ்விடத்தில் பிரயோகிக்கவேண்டும். பிறகு அது முதல் நூறு மாத்திராகாலம்* [6] *அவ்விடத்தை ஒன்றும் செய்யாமல் சும்மாயிருக்கச் செய்ய வேண்டும்.—27¼.*

க்ஷாரத்தை எந்தெந்த அவயவத்தில் எவ்விதம் பிரயோகிப்பது :— *அவற்றுள் "அர்சஸ்" என்னும் மூலமுளைகளில் க்ஷாரத்தைப் பிரயோகித்ததும், குதத்தில் வைத்திருக்கிற யந்திரத்தின் முகத்*

1. *க்ஷாரஜலம்—முறைப்படி க்ஷாரங்களிலிருந்தோ க்ஷாரங்களைக் கலந்தோ செய்யப்படும் திரவம்.*

2. *சஸ்திரப் பிரயோகத்தினால், அல்லது அக்னியின் ஸம்பந்தத்தினால் ஏற்படும் தீக்ஷ்ணமான வலியைப் போல் இந்த க்ஷாரப்பிரயோகததினால் ஏற்படாது.*

3. *ச்லக்ஷ்ணமானது—பட்டு முதலியதைப்போல் மழமழப்பானது.*

4. *க்ஷாரங்கள்பொதுவாகச் சற்றேறக்குறைய வெண்மையாயிருக்கும்.*

5. *உப்புகள் உண்டாகும்போது நீறுபூத்து, அப்பால் கட்டி கட்டுவது போல் க்ஷாரங்களிலும் சிகரங்கள் உண்டாவது இயல்பு.*

6. *மாத்திராகாலம் 210-ம் பக்கம் பார்க்க.*

தை[1] நன்றாகக் கையினால் மறைத்துப்பிடித்துக்கொண்டு, நூறுமாத்திராகாலம் அமைதியாயிருக்கவேண்டும். "வர்த்மரோகங்களில்"[2] இமைகளை வெளிப்புறமாக மடித்துப் பிடித்துக்கொண்டு, கருவிழி முதலிய மற்றப்பாகத்தைப் பஞ்சு முதலியதால் நன்கு மறைத்துவிட்டு, க்ஷாரம் தாமரையிதழளவு மெல்லியதாகப் படும்படி வர்த்மங்களினுள் தடவலாம். நாசியினுள் உண்டாகும் "கிராணார்புதம்" என்கிற பிளவைகளிலும் வர்த்மரோகத்தில் பிரயோகிப்பதுபோலவே தடவவேண்டும். சூரியனிருக்கும் திசையை நோக்கிப் பிணியாளியை உட்காரச் செய்து, நாசிமுனையை நிமிர்த்திப் பிடித்துக்கொண்டு, க்ஷாரத்தை நாசியினுள் தடவிவிட்டு, ஐம்பது மாத்திராகாலம் அமைதியாயிருக்கவேண்டும். "செவியினுள்" உண்டாகும அர்சஸ் என்னும் முளையைப் போக்குவதற்கும் அவ்விதமே க்ஷாரப்பிரயோகம் செய்யவேண்டும். 28—30.

க்ஷாரம் பிரயோகித்தவிடத்தில் அழற்சி முதலியதைத் தணிக்குமுபாயம் :—அவ்வாறு பிரயோகித்த பிறகு மிருதுவான வஸ்திரம் முதலியதால் க்ஷாரத்தைத் துடைத்து, அவ்விடம் முறைப்படி நன்றாகச் சுடப்பட்டதா வென்பதை அறிந்துகொண்டு, அவ்விடத்தில் நெய்யையும் தேனையும்தடவி, பாலையும், கழுவு நீரையும், காடியையும் ஊற்றி அவ்விடத்திலுண்டாகும் அழற்சியைத் தணியச்செய்யவும்; பிறகு இனிப்பும் குளிர்ச்சியுமுள்ள வஸ்துக்களோடு நெய்யையும் கலந்து லேபநம் பண்ணவேண்டும்.—31, $31\frac{1}{2}$.

க்ஷாரப்பிரயோகத்திற்குப் பிறகு உட்கொள்ளத் தகுந்த உணவுகள் :—அபிஷ்யந்திகள் என்னும் நீர்க்கசிவுகளை உண்டுபண்ணும் உணவுகளை, சுட்டவிடத்திலிருந்து நீர்க்கசிவு உண்டாய் அவ்விடம் ஆறும் பொருட்டு உட்கொள்ளலாம்.—32.

க்ஷாரதக்தப் பிரதேசம் ஸாதாரணமாய் ஆறவிட்டால் செய்யும் சிகித்ஸை :—க்ஷாரத்தினால் சுடப்பட்ட இடத்தில் விரணமானது வேரூன்றிப்போய் எளிதில் ஆறி உதிராமற்போனால், காடி, கொடிமாதுளை, அதிமதுரம், எள் இவற்றைக் கல்கம்போல் ஆட்டி, அதன் மேல் லேபநம் செய்யலாம். அதிமதுரத்தையும் எள்ளையும் கல்கமாக அரைத்து நெய்யிற் கலந்து உபயோகித்தாலும் விரணம் ஆறும்.—33, $33\frac{1}{2}$.

க்ஷாரப்பிரயோகத்தில் ஸம்யக்தாஹ - துர்த்தாஹ - அதிதாஹக் குறிகள்:—க்ஷாரத்தினால் நன்றாகச் சுடப்பட்ட பிரதேசம் நன்கு கனிந்த நாவற்பழம்போல் கருநிறமாகவும், ஒருவாறு குழி விழுந்திருப்பதாகவும் காணப்படும். தகுந்த வாறு சுடப்படாமற்போனால், அவ்விடம் சிவந்தும், குத்தல் வலி, தினவுமுதலிய துர்க்குணங்க

1. யந்திரம் என்பதால் யந்திரவிதி அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ள அர்சோயந்திரம் எனக் கருத்து.

2. வர்த்மா—கண் இமைகளின் உட்புறத்திலுள்ள மாம்ஸபாகம்.

ளோடு கூடியதாகவும் இருக்கும்; அவ்வாறு நன்ருகச் சுடப்படாத விடத்தை மறுபடியும் சுடவேண்டும். மிதமிஞ்சி ஓரிடத்தை க்ஷாரத்திஞல் சுட்டால் இரத்தப் பெருக்கு எடுப்பதுடன், மூர்ச்சையும் அழற்சியும், ஜ்வரம் முதலிய வேறு துர்க்குணங்களும் உண்டாகும். இவற்றுள் முதலிற் கூறியது "ஸம்யக் தக்த்தம்" என்றும், இரண்டாவது கூறியது "துர்த் தக்த்தம்" என்றும், மூன்ருவது கூறியது "அதிதக்த்தம்" என்றும் வழங்கப்படும்.—34, 35.

க்ஷாரதாஹங்களால் ஒவ்வொரு அவயவத்திலுண்டாகும்விசேஷக் குறிகள் :—விசேஷமாக குதத்தைச் சுடும்போது அது அதிதக்த்தமாகப்போஞல், மல-மூத்திரங்கள் இருகிக் கட்டிப்போம்; அல்லது அவை அதிகமாவாவது இறங்கும்; ஆண்தன்மையாவது போய் விடும்; அல்லது மரணமாவது ஸம்பவிக்கும். நாசியில் க்ஷாரப்பிரயோகத்திஞல் அதிதக்த்தம் செய்யப்படுமாஞல் மூக்கில் பிளவுகள் ஸம்பவிக்கலாம்; அவ்வவயவம் சுருக்கங்கொள்ளலாம்; மணமறியும் உணர்ச்சியும் போய்விடும். செவி முதலிய அவயவங்களிலும் அதிதக்த்தத்திஞல் நாசியிலுண்டான கோளாறுகளைப்போலவே கெடுதிகள் ஸம்பவிக்கும்.—36, 37.

க்ஷாரத்திஞல் அதிதக்த்தமானதின் விசேஷசிகித்ஸை:—க்ஷாரப் பிரயோகத்திஞல் இவ்வாறு மிதமிஞ்சி சுடப்பட்ட விடத்தை ஏதேனும் அம்லரஸமுள்ள காடி முதலியவற்ருல் நனைக்கலாம்; தேன், நெய், எள் இவைகளைக் கல்கமாய் அரைத்து லேபம் செய்யலாம். மேலும் வாத-பித்தஹரமான சிதோபசாரமுள்ள எல்லாவித சிகித்ஸையும் செய்வது அனுகூலமானதாகும். இந்நிலைமைக்கு இவ்விதம் செய்வது விசேஷ சிகித்ஸையாம்.—38.

க்ஷார தக்த்தத்தை அம்லத்திஞல் ஆற்றுவதன் காரணம் :—அம்லரஸமானது இயற்கையில் பரிசிப்பதற்குக் குளிர்ச்சியாயிருக்கும்; அத்துடன் க்ஷாரம் ஒன்று கூடுமாஞல் உடனே சுவையில் இனிப்பாக ஆய்விடுகிறது. ஆகையால் க்ஷாரதக்த்தமான பிரதேசங்களை அம்லரஸமுள்ள பதார்த்தங்களால் குளிரச்செய்து நன்ருக ஆற்றி விடலாம்.—39.

## அக்னியிஞல் சுடும் முறை.

அக்னியிஞல் சுடுவதும் அதன் மேன்மையும் :—க்ஷாரத்தைவிட அக்னியிஞல் சுடுவது சிரேஷ்டமாகும்; ஏனெனில் அக்னியிஞல் சுடப்படும் வியாதிகள் மீண்டும் ஸம்பவிக்காதபடி பற்றறவே ஒழிந்துவிடுகின்றன; மேலும் ஔஷதங்களைக் கொடுப்பதாலும், க்ஷாரங்களைப் பிரயோகிப்பதாலும், சஸ்திரசிகித்ஸை செய்வதாலும் பரிஹரிக்க முடியாத வியாதிகளும் அக்னியைக்கொண்டு சுடுவதால் நிவ்ருத்தியாகின்றன.—40.

அக்னியிஞல் சுடுவதற்கான தாதுக்கள்:—அக்னிதாஹம்என்னும் சுடும் சிகித்ஸையை சர்மத்திலும், மாம்ஸத்திலும், ஸிரைகளிலும்,

ஸ்நாயுக்களிலும்,ஸந்திகளிலும், எலும்புகளிலும் பிரயோகிக்கலாம். (1)மஷகம் என்னும் ஒருவிதமான பரு, தேஹவாட்டம், சிரஸ்ஸைப் பற்றியநோய், அதிமந்தம் என்னும் நேத்திரவியாதி, கிலம் என்னும் குதத்தில் உண்டாகும் பிளவை, திலம் என்கிற மறு இவை முதலியவற்றில் சர்மத்தில் சூடுபோட வேண்டும்; வர்த்தி, பசுவின் பால், ஸூரியகாந்தக்கல், அட்டிமூனை முதலியவைகளைக் காய்ச்சி சர்மத்தைச் சுடலாம். (2) அர்சஸ்,பகந்தரம, கிரந்தி, நாடீவிரணம், கெட்டுப்போன விரணம் முதலியவைகளில் மாம்ஸபாகத்தில் சுட வேண்டும்; அதில் தேன்,ஸ்நேஹவஸ்து, ஜாம்பவோஷ்டம் என்னும் கருவி, வெல்லம் இவை முதலியவற்றைக் காய்ச்சி அவற்றால் சுடவேண்டும். (3) கண்களின் இரப்பைகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்கையிலும், இரத்தப்பெருக்கு நேரிட்டிருக்கையிலும், நீலிகா யென்னும் சர்மவியாதியிலும், ஸிரை முதலியவற்றைச் சுடவேண்டும்; மாம்ஸதாஹத்திற்கூறியுள்ள உபகரணங்களையே ஸிரைகளைச் சுடுவதற்கும் உபயோகிக்கவேண்டும். 41—43¼.

அக்னிதாஹத்திற்குத் தகாதவர்கள்:—க்ஷாரப் பிரயோகத்தினால் தாஹமென்னும் சூடு இடுவது எவர்களுக்குத் தகாதென்று கூறப்பட்டிருக்கிறதோ, அவர்களே அக்னி ஸம்பந்தமான சூடுப் பிரயோகிப்பதற்கும் தகாதவராவர்; மேலும் இரத்தமோ அல்லது வேறு சல்யமோ உள்ளே தங்கியிருக்கும்போது அவ்விடத்தையும், சிதைவுண்ட குடல்களையும், அநேகம் விரணங்களால் பீடிக்கப்படுகிறவர்களுடைய அவயவங்களையும் அக்னிதாஹத்தினால் சிகித்ஸை செய்யக்கூடாது.—44.

அக்னியினால் சுடப்பட்ட அவயவத்தில் லேபநம் செய்தல்:—அக்னிப்பிரயோகத்தினால் நன்றாகச் சூடு இடப்பட்டு நிறைவேறியிருந்தால், அவ்விடத்தில் தேனையும் நெய்யையும் தடவி, ஸ்நிக்த்தமும் குளிர்ச்சியும் பொருந்திய லேபநவஸ்துக்களால் பூச்சிட வேண்டும்.—44½.

நன்றாக ஆறும் அக்னிதாஹவிரணத்தின் குறிகள்:—இரத்தக்கசிவு முற்றிலும் நின்றுபோய், ஒரு விதமான சப்தமும் நிணநீரும் உண்டாய், கனிந்த பனம்பழம் அல்லது மாடப்புறாவின் நிறமுடையதாய், அதிக வேதனையில்லாததாகவும் இருந்தால் அவை நன்கு ஆறக்கூடிய விரணம் என்பதற்கு ஏற்ற குறிகளாம்.—45½.

பிரமாத தக்த்தம்:—(1) நன்கு சூடு நிறைவேறாததற்கும், மிதமிஞ்சி சுடப்பட்டதற்கும் குறிகள், அஜாக்கிரதையினால் சுடப்படும்போது ஸம்பவிக்கும் குறிகளைப்போல முற்றிலும் உண்டாகும். அஜாக்கிரதையினால் சுடப்படுவதை "பிரமாத தக்த்தம்" என்பார்கள். (2) அஜாக்கிரதையினால் ஸம்பவிக்கும் பிரமாத தக்த்தம் என்பது, துர்த் தக்த்தம் என்னும் சூட்டையும் கூட்டினால் நான்கு

விதமாகப் பகுக்கப்படும்; அதாவது:—துத்த தக்த்தம், துர்த்தக்த்தம், அதி தக்த்தம், ஸம்யக் தக்த்தம் [1] என்பனவாம்—46¼.

**துத்த தக்த்தாதிகளின் குறிகள்:**—(1) துத்த தக்த்தம் என்பது அஜாக்கிரதையினால் சுடப்பட்ட ஒருவித நிறத்துடன் அவக்தியாகும், அதன் இலக்ஷணங்கள்:—சர்மம் மங்கல் நிறமாகும்; அழற்சி மிகுதியா யுண்டாகும்; அவ்விடம் கொப்புளிக்கமாட்டாது. (2) துர்த்தக்த்தத்தின் குறிகளாவன:—சுடப்பட்டவிடம் கொப்புளித்திருக்கும்; எரித்தல் அதிகம் உண்டாகும்; தாபம் மிகுதியாயிருக்கும். (3) அதி தக்த்தம் என்னும் மிதமிஞ்சிய சூட்டைப் பிரயோகிப்பதால் உண்டாகும் குறிகளாவன:—தசைநார் அறுபட்டுத் தொங்குதல், ஓர் அவயவம் அல்லது தசைநார் சுருக்கங்கொள்ளல், அழற்சி யுண்டாதல், புகைந்து வெப்பம் அதிகரிப்பதுபோன்ற உணர்ச்சி யேற்படுதல், வேதனை அதிகரித்தல், ஸிரைமுதலிய இரத்தக் குழாய்கள் சிதைவுறுதல், தாவரட்சியும் மூர்ச்சையும் உண்டாதல், விரணம் மிகவும் ஆழமாய் ஏற்பட்டுவிடுதல், மரணம் ஸம்பவித்தல் என்பனவாம். 47—48½.

**துர்த்தக்த்தாதிகளின் சிகித்ஸை முதலியன:**—(1) தகாத விதமாகச் சுடப்பட்ட **துர்த்தக்த்தம்** என்னும் சூடு இடப்பட்ட விடத்தில், மறுபடியும் அக்னியினால் அவ்விடத்தை நன்றாகச் சுடவேண்டும்; உஷ்ணகுணமுள்ள ஔஷதத்தையும் உபயோகிக்கவேண்டும். சுடப்பட்ட அல்லது அபிகாதப்பட்ட அவயவத்தில் இரத்தம் கட்டிக்கொண்டிருந்தால் வேதனை மிகவும் அதிகரிக்கும். அவ்வாறு கட்டிக்கொண்ட இரத்தமானது கரைந்துபோனால் வேதனையுங்குறைவடையும். (2) முறைதவறாகச் சுடப்பட்ட **துர்த் தக்த்தத்தில்** முதலில் சீதளமும் உஷ்ணமுமான குணங்களையுடைய ஔஷதத்தையே உபயோகித்து, பிறகு சீதளமான ஔஷதத்தையே உபயோகிக்கவேண்டும். (3) முறைப்படி நன்றாகவே தாஹசிகித்ஸை நிறைவேறியிருந்தால், மூங்கிலுப்பு, பூவரசு, சந்தனம், காவி இவற்றைச் சூர்ணம் செய்து, நெய்யையும் சீந்திற்கொடியின் சாற்றையும் விட்டு நன்றாக ஆட்டி, அவ்விடத்திற் பூசவேண்டும்; பிறகு பித்தவித்ரதிக்குச் செய்யப்படுவது போன்ற சிகித்ஸையையும் [2] செய்ய வேண்டும். (4) மிதமிஞ்சி சுடப்பட்ட **அதிதக்த்தம்** என்பதில் பித்தஸம்பந்தமான விஸர்ப்பத்திற்கேற்ற சிகித்ஸையை [3] யெல்லாம் வெகு சீக்கிரம் செய்ய வேண்டும். 49—51½.

---

1. ஸம்யக் தக்த்தம் என்பது, முறைப்படி சுடப்பட்டு நன்கு நிறைவேறிய தாஹசிகித்ஸையைக் குறிப்பிடுவதாயிருந்தும், அஜாக்கிரதையினால் செய்வதில் ஒரு ஸமயம் முறைப்படியும் சுடப்படலாம் ஆகையால், இவ்வாறு ஸம்யக்தக்த்தம் பிரமாத தக்த்தக்துடன் சேர்த்து கூறப்பட்டது.

2. பித்தவித்ரதி சிகித்ஸை—சிகித்ஸாஸ்தானத்தில் விவரிக்கப்படும்.

3. பித்தவிஸர்ப்ப சிகித்ஸை—சிகித்ஸாஸ்தானத்தில் விவரிக்கப்படும்.

**காய்ச்சிய ஸ்நேஹத்தினால் சுடப்பட்டதற்கு சிகித்ஸை :**—*காய்ச்சிய எண்ணெய் முதலிய ஸ்நேஹம் ஏதாவது தேஹத்தில் விழுந்து அவயவம் அழன்று விட்டால், மிகவும் ரூக்ஷகுணமுள்ள ஔஷதத்தை அதில் பிரயோகிக்கவேண்டும்.*—52.

**ஸூத்திர ஸ்தாநத்தின் முடிவுரை :**—*அருமையான இரஹஸ்யார்த்தங்கள் அடங்கிய இருதயத்தின் ஒரு பாகம் போன்ற “அஷ்டாங்க ஹ்ருதயம்” என்னும் இக்கிரந்தத்தின் ஸூத்திர ஸ்தாநமானது இத்துடன் முடிவு பெறுகின்றது. இந்த ஸ்தாநத்தில் நுட்பமாகக் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களே மற்ற எல்லாப் பாகங்களிலும் இனி விரிவாகக் கூறப்படும்.*—53.

# இருபத்தைந்தாம் அத்தியாயத்திற் கூறியுள்ள இயந்திரங்களின் உருவப்படங்கள்.

## ஸ்வஸ்திக யந்திரங்கள்.

(இரண்டு அலகுகள் இணைந்த கௌவிப் பிடிக்கக்கூடிய கருவிகள்)
(231-ம் பக்கம் பார்க்க.)



ஸிஹ்மமுக யந்திரம்.



தரக்ஷுமுக யந்திரம்.
(சிவங்கிமுகம் போன்றது.)



ருக்ஷமுக யந்திரம்.
(கரடிமுகம் போன்றது.)



காகமுக யந்திரம்.



கங்கமுக யந்திரம்.
(பருந்துமுகம் போன்றது.)

---

## ஸந்தம்ச யந்திரங்கள்.

(இரண்டு அலகுகளையுடைய கடித்துப் பிடிக்கும் கருவிகள்.)
(231-ம் பக்கம் பார்க்க.)



ஸந்தம்ச யந்திரம்





முசுண்டி யந்திரங்கள்.

---

## தாளயந்திரங்கள்.

(மத்ஸ்யம் முதலியவற்றிற்கு இருப்பவைபோன்ற தாள்களையுடைய கருவிகள்.)
231-ம் பக்கம் பார்க்க.



தாளயந்திரங்கள்.
(ஒற்றைத்தாள்-மேலேயிருப்பது.
இரட்டைத்தாள்-கீழேயிருப்பது.)

---

நாடீயந்திரங்கள்.

(குழாய்கள்போன்ற கருவிகள்.)

(232-ம் பக்கம்.)



கண்டசல்யாவலோகிநீ

(தொண்டையிலுள்ள சல்யம் முதலியதைப் பார்த்துப் பரீக்ஷிக்கும் இயந்திரம்.)



பஞ்சமுக நாடீ.

(ஐந்து த்வாரங்களையுடைய ஒருவித வாரங்க யந்திரம்.)

(232-ம் பக்கம்).



அர்சோ யந்திரங்கள்.

(232-ம் பக்கம் பார்க்க.)



சமீ யந்திரம்.

(233-ம் பக்கம் பார்க்க.)



பகந்தர யந்திரம்.

(233-ம் பக்கம்.)







ஸாதாரண நாடீ யந்திரங்கள்.

(நாசி, சிறிய த்வாரமுள்ள விரணங்கள் முதலியதில் உபயோகிக்கத் தகுந்தவை.)

(232-233-ம் பக்கங்கள்.)





த்மாந நாடிகள்.

ஏகமுகநாடீ-மேலேயிருப்பது.

த்விமுகநாடீ-கீழேயிருப்பது.

(208-ம் பக்கம்.)



அங்குலித்ராணகம்.

(233-ம் பக்கம்.)



யோநி-வ்ரணேக்ஷணம்.
(233-ம் பக்கம்.)



நளிகா யந்திரம்.
(ஜலோதர யந்திரம்)
(234-ம் பக்கம்)

## வஸ்தி யந்திரங்கள்.
(துருத்தி அல்லது பையிணைத்த நாடீ யந்திரங்கள்.)





நாடீ விரண யந்திரங்கள்.
(234-ம் பக்கம்)



வஸ்தி யந்திரம்.
(அநுவாஸந-நிரூஹங்களுக்கு)
(194, 195-ம் பக்கங்கள்)



உத்தர வஸ்தி யந்திரம்.
(205-ம் பக்கம்)



ஆம யந்திரம்.
(மல்லக ஸம்புடம்)
(216-ம் பக்கம் செ. 21½.)



ச்ருங்க யந்திரம்.
(234-ம் பக்கம்)



அலாபு யந்திரம்.
(234-ம் பக்கம்.)

## சலாகா யந்திரங்கள்.
(கம்பிகள் போன்ற கருவிகள்.)
(235-ம் பக்கம்)





கண்டேபதமுகசலாகைகள்.

(235-ம் பக்கம்.)





சரபுங்கமுக சலாகைகள்.
(236-ம் பக்கம்)



மார்ஜந சலாகை.
(236-ம் பக்கம்.)



ஜாம்பவோஷ்ட சலாகை.
(237-ம் பக்கம்)



கர்ப்ப சங்கு.
(236-ம் பக்கம்)



கர்ப்ப சங்கு.
(மற்றொரு வகை)
(236-ம் பக்கம்)



ஸர்ப்ப பண யந்திரம்.
(236-ம்பக்கம்.)

---

## இருபத்தாறும் அத்தியாயத்திற் கூறியுள்ள சஸ்திரங்களின் உருவப்படங்கள்.



மண்டலாக்ரம்.
(239-ம் பக்கம்)



ஸூசீமுக ஏஷணீ.
(240-ம் பக்கம்)



நீண்டமுனையுள்ள வ்ருத்திபத்ரம்.
(239-ம் பக்கம்)



அங்குலி சஸ்திரம்.
(241-ம் பக்கம்)



வ்ருத்தி பத்திரம்.
(மற்றொரு வகை)



அங்குலி சஸ்திரம்
(மற்றொரு விதம்)
(241-ம் பக்கம்)



பின்புறமாக வளைந்த வ்ருத்திபத்திரம்.
(239-ம் பக்கம்)



அத்யார்த்த தாரை.
(239-ம் பக்கம்)



கண்டூபதமுக ஏஷணிகள்.
(மண்ணுணிப் பாம்புபோன்ற ஏஷணீ.)
(240-ம் பக்கம்)



ஸர்ப்பமுக சஸ்திரம்.



மற்றொருவித ஏஷணீ.



உத்பலபத்திரம்.
(239-ம் பக்கம்)



சராரீ முகம்.
(240-ம் பக்கம்)



அர்த்த சந்திரமுகம்.
(240-ம் பக்கம்)



ஆடீமுகம்.



குசாடா (குசபத்திரம்)
(240-ம் பக்கம்)



வ்ரீஹிமுகம்.
(241-ம் பக்கம்)



அந்தர்முகம்.
(240 ம் பக்கம்)



(241-ம் பக்கம்.)



வேதஸ பத்திரம்.
(240-ம் பக்கம்)



த்விமுக சலாகை.
(241-ம் பக்கம்)



படிசம்.
(241-ம் பக்கம்)



கரபத்திரம் (கைவாள்)

(242-ம் பக்கம்)



தந்த லேகநம்.

(தந்த சங்கு)

(242-ம் பக்கம்)



கர்த்தரீ 1

(242-ம் பக்கம்)



கூர்ச்சம்.

(243-ம் பக்கம்)



கர்த்தரீ 2

(242-ம் பக்கம்)



ஸூசீ. 1

(242-ம் பக்கம்)



கர்த்தரீ 3

(242-ம் பக்கம்)



ஸூசீ. 2

(242-ம் பக்கம்)



நகசஸ்திரம்.

(242-ம் பக்கம்)



ஸூசீ. 3

(242-ம் பக்கம்)



ஸூசி. 4
(242-ம் பக்கம்)



ஆரா.
(243-ம் பக்கம்)



கஜம்.
(243-ம் பக்கம்)



கர்ணவேதநீ.
(243-ம் பக்கம்)



யூதிகா.
(243-ம் பக்கம்)




சஸ்திரகோசம்.
சஸ்திர-யந்திரங்கள் வைக்கும் கருவிப்பெட்டி.
(244-ம் பக்கம்)

# பலவித பந்தந முறைகள்.

(29-ம் அத்தியாயம் 273-ம் பக்கம்.)



கோசபந்தநம்



சோசபந்தநம்



ஸ்வஸ்திக பந்தநம்.





முத்தோலீ பந்தநங்கள்.



சிர பந்தநம்.





தாம பந்தநங்கள்.



அநுவேல்லித பந்தநம்.



கட்வா பந்தநம்.



விதாந பந்தநம்.



விபந்த பந்தநம்.




உத்ஸங்கபந்தநம்.



கோபண பந்தநம்




பஞ்சாங்க பந்தநம்.



பலகை

(273-ம் பக்கம்.)





ஸிராவ்யதை முறைகள்.

(250, 251-பக்கங்கள்)



சிரோ வஸ்தி

(221-ம் பக்கம்)

# சாரீர ஸ்தாநம்.

## முதல் அத்தியாயம்

### கர்ப்பாவக்ராந்தி சாரீரம்.

இனி ஆத்திரேயர் முதலிய மஹரிஷிகள் மொழிந்துள்ள முறைகளையநுஸரித்து கர்ப்பாவக்ராந்தி சாரீரம்[1] என்னும் அத்தியாயத்தை விவரித்துக் கூறுகிறோம்:—

**சுக்ர - ஆர்த்தவங்களும் ஜீவனும் கூடி கர்ப்பமாதல்:—** தோஷம் நீங்கி நிர்மலமாயுள்ள சுக்ரமும்,[2] அதே விதமான ஆர்த்தவமும்[3] ஒன்று கூடும்போது, ஜீவனானது பூர்வஜன்மத்தில் தான் செய்த சுபாசுப கர்மங்களாலும், அவித்யை முதலிய கிலேசங்களாலும்[4] ஏவப்பட்டு, அகிற்கட்டையில் அக்னியைப்போல, ஸாதநங்களின் கூட்டு முறைக்கு இணங்க[5] கர்ப்பமாகப் பரிணமிக்கின்றது.—1.

**பஞ்ச பூதங்களின் கூட்டுறவால் கர்ப்பம் வளருதல்:—** மிகவும் ஸூக்ஷ்மமாகவும், சுக்ர-ஆர்த்தவங்களின் ரூபமாகவும், மனஸ்தத்துவத்துடன் கூட அதைப் பின்பற்றியவையாகவும், மாதாவினுடைய ஆஹாரத்தின் ஸாராம்சங்களால் உண்டானவையுமான பஞ்சமஹா பூதங்களின் கூட்டுறவினால் அந்த ஜீவன், மாதாவின் வயிற்றில் கிரமமாக கர்ப்ப ரூபமாய் வளர்ந்து வருகின்றது.—2.

**ஜீவாத்மா கர்ப்பாசயத்தினுள் பிரவேசிக்கும் வகை:—** சூரிய கிரணங்களின் ஒளியானது ஒரு படிகமணியினால் மறைக்கப்பட்ட போதிலும், அம்மணியை ஊடுருவி கட்டைமுதலியதில் அக்கிரணம் பற்றி எரிவது போலவும், ஒரு விதமான குறியும் காணமுடியாமல்

---

1. சுக்ரம், ஆர்த்தவம், ஜீவன் இவற்றின் சேர்க்கையினால் ஏற்படும் வஸ்து கர்ப்பம் எனப்படுகிறது; அதன் உற்பத்தி வகையைக் கூறுவது கர்ப்பாவக்ராந்தி அந்தியாயம் எனப்படும். "சாரீரம்" என்றால் சரீர ஸம்பந்தமான தத்துவத்தைக் கூறுவதென்று பொருள். கர்ப்பாவக்ராந்தியென்னும் சரீரதத்துவம் இவ்வத்தியாயத்தில் விவரிக்கப்படுகிறது எனப் பொருள்.

2. சுக்ரம்—இரேதஸ் என்னும் புருடர்களுடைய ஏழாவது தாது.

3. ஆர்த்தவம்—ருதுகாலத்தில் ஸ்திரீகளுக்கு உண்டாகும் ஒருவித தாது; இதுவே இராஜஸ் என்றும் கூறப்படும். மாத விடாயில் காணும் இரத்ததாது.

4. அவித்யை, அஸ்மிதை, இராகம், த்வேஷம், அபிநிவேசம் இவை "கிலேசங்கள்" என்று பாதஞ்ஜல யோக ஸூத்திரம்.

5. அகிற்கட்டையும், கடையுங் கருவியும், கடையும் வேலையும் சேர்ந்தால் அக்னியுண்டாவதுபோல கர்ப்பமும் உண்டாகின்றது.

அப்படிக மணியினுள் ஊடுறுவிப்பாய்வது போலவும், ஜீவாத்மாவும் கர்ப்பாசயத்தினுள் பிரவேசித்து விடுகின்றது.—3.

ஜீவாத்மா மனிதவுருவம் முதலியதை யெடுப்பதற்குக் காரணம்:- காரியங்கள் யாவும் காரணங்களை அனுஸரித்தே [1] ஏற்படவேண்டி யிருப்பதால், அக்காரியங்களுக்குக் காரணங்களின் தன்மையே உண்டாகின்றது ; ஆகையால் உருக்கி வார்க்கப்படும் உலோஹமானது அந்தந்த அச்சின் உருவங்களுக்கேற்றவாறு பற்பல ரூபங்களை அடைவதுபோல, ஜீவாத்மாவும் எந்தெந்த பிராணியின் கர்ப்பத்தில் பிரவேசிக்கின்றதோ அதற்கேற்ற உருவங்களையே பெற்றுவிடுகின்றது.—4.

கர்ப்பம் ஆண் பெண் முதலிய உருவங்களைப் பெறுதல் :— காரியம் காரணத்திற்கு அநுரூபமாயிருக்குமென்னும் விதியை அனுஸரித்தே, சுக்ரம் அதிகமானால் ஆணும், ஆர்த்தவம் அதிகரித்தால் பெண்ணும், அவ்விரண்டும் ஸமமாக விருந்தால் நபும்ஸகமான கர்ப்பமும் ஸம்பவிக்கின்றன.—4¾.

கர்ப்பத்தில் அநேக சிசுக்கள் உண்டாவது :—வாயுவின் சக்தி விசேஷத்தினால் சுக்ரார்த்தவங்கள் பலவாறு சிதறிப் பிரிக்கப்படுமானால், அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு கர்ப்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட சிசுக்களும் உற்பத்தியாவதுண்டு.—5½.

உருவத்தில் விகாரமான கர்ப்பங்கள் உண்டாவது :—ஸ்திரீ-புமான்களுடைய சுக்ரார்த்தவங்கள், கோளாறடைந்த வாதாதி தோஷங்களால் விகாரமடைந்து விட்டால், வெவ்வேறு விதமான பிராணிகளின் உருவங்களும், அல்லது விகாரமான ஸ்வரூபங்களும் கர்ப்பத்திற்கு உண்டாகின்ற.—6.

ஆர்த்தவம் வெளிப்படும் காலநியமம் :—ஸ்திரீகளுக்கு அவர்களுடைய உணவின் ஸத்துவத்தினால் உண்டாகும் "இரஜஸ்" என்னும் தாதுவானது சோணிதம் என்னும் இரத்தத்தின் உருவமாக மாதந்தோறும் மூன்று நாட்கள் வெளிப்படுகின்றது. இவ்வாறு பன்னிரண்டாவது வயதில் அல்லது அதற்கு மேல் ஆர்த்தவம் வெளிப்பட ஆரம்பித்து, ஐம்பதாவது வயதுக்குமேல் வெளிப்படாமல் நின்றுவிடுவது இயல்பு.—7.

வீர்யவானை பிள்ளையைப் பெறுவதற்கு ஆதாரமான விஷயங்கள் :—நன்றாகப் பதினாறு வயது நிரம்பிய ஸ்திரீயானவள், இருபது வயது நன்றாக நிரம்பிய புருஷனுடன் கூடி, அப்பொழுது கர்ப்பாசயமும், ஸ்திரீபுமான்களுடைய மர்மஸ்தானமார்க்கங்களும், இரஜஸ்ஸும், சுக்ரமும், வாததோஷமும், இருதயமும் நிர்மலமாயிருக்குமானால் பிறக்கும் பிள்ளை நல்ல வீர்யமுள்ளவனாயிருப்பான்.—8¼.

---

1. இங்கு காரியம் கர்ப்பத்தின் உருவம்; அந்தந்தப் பிராணியின் சுக்ரார்த்தவங்கள் காரணம்,

**யுக்த வயது வராத தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தையின் தன்மை**:—மேற் கூறியதற்குக் குறைந்த வயதுள்ள தம்பதிகள் கூடினார்களானால், அவர்களுக்குப் பிறக்கும் குழந்தை ரோகியாக வாவது, அற்பாயுளாகவாவது, எவ்வித சிறப்புமில்லாத துர்ப்பாக்கியனாகவாவது இருப்பான்; அல்லது கர்ப்பமுண்டானாலும் உண்டாகலாம், உண்டாகாமலேயும் இருந்து விடலாம்.—9.

**சுக்ரார்த்தவங்களின் ஒன்பது வித தோஷங்கள்**:—(1)சுக்ர தோஷம் ஒன்பது விதம். அது பின் வருமாறு: வாதசுக்ரம்,[1] பித்த சுக்ரம்,[2] கபசுக்ரம்,[3] குணப சுக்ரம்,[4] கிரந்தி சுக்ரம்,[5] பூய சுக்ரம்,[6] க்ஷீண சுக்ரம்,[7] மலசுக்ரம்,[8] மூத்திர சுக்ரம்[9] என்பனவாம். (2) இவ் விதமாகவே வாதார்த்தவம், பித்தார்த்தவம், கபார்த்தவம், குணபார்த்தவம், கிரந்த்யார்த்தவம், பூயார்த்தவம், க்ஷீணார்த்தவம், மலார்த்தவம், மூத்திரார்த்தவம் என்று ஒன்பது விதமான தோஷங்கள் ஆர்த்தவத்திற்கும் உண்டாகலாம்.[10] இந்த தோஷங் களையுடைய சுக்ரமும் ஆர்த்தவமும் கர்ப்பத்தை உற்பத்தி செய் வதில் சக்தியற்றவைகளாகும்.—9½.

**சுக்ரார்த்தவ தோஷங்களின் இலக்ஷணங்கள்**:—வாத-பித்த-கபங்களுக்கு இயற்கையாக என்ன குணங்கள் உண்டோ, அக்குணங்களையே அவற்றால் விகாரப்பட்ட சுக்ரார்த்தவங்களுக்கும் கூறவேண்டும்.[11] குணபதோஷமுள்ள சுக்ரார்த்தவங்கள் இரத்தம் கெட்டுப்போவதால் ஸம்பவிக்கும். கிரந்தியைப் போன்ற சுக்ரார்த் தவங்கள் வாத-கபங்களுடைய பிரகோபத்தினாலும், பூயம் போன்ற சுக்ரார்த்தவங்கள் இரத்த-பித்தங்களின் பிரகோபத்தினாலும், க்ஷீண சுக்ரார்த்தவங்கள் வாத-பித்தங்களின் பிரகோபத்தினாலும்

---

1. வாதசுக்ரம்—வாத தோஷத்தினால் கெட்டுப் போன சுக்ரம்.
2. பித்த சுக்ரம்—பித்ததோஷத்தினால் கெட்டுப் போன சுக்ரம்.
3. கப சுக்ரம்—கபதோஷத்தினால் கெட்டுப் போன சுக்ரம்.
4. குணபசுக்ரம்—குணபம் என்றால் சவம்; சவத்தைப் போன்ற நாற்றமுள்ள சுக்ரம் எனப் பொருள்.
5. கிரந்தி சுக்ரம்—கட்டிக் கட்டியாகத் தோயந்துபோன சுக்ரம்.
6. பூயசுக்ரம்—சீழ்மாதிரியான சுக்ரம்.
7. க்ஷீண சுக்ரம்—அளவில் குறைந்து வற்றிப் போன சுக்ரம்.
8. மலசுக்ரம்—மலம்போன்ற நாற்றமுள்ள அல்லது அவ்வித உருவமுள்ள சுக்ரம்.
9. மூத்திர சுக்ரம்—மூத்திரம்போன்ற உருவமும் அதற்குச் சமானமான நாற்றமும் உடைய சுக்ரம்.
10. சுக்ரங்களுக்குக் கூறப்பட்டுள்ள விகாரங்களே இங்கு ஆர்த்தவத் திற்கும் பொதுவென்று அறிக.
11. வாதாதி தோஷங்களால் கோளாறடைந்த சுக்ரார்த்தவங்களுக்கு 5-ம் பக்கத்திற் கூறப்பட்ட (ஸூத்திரஸ்த்தாநம் 1—வது அத்தியாயம்) வாதாதிகளின் இலக்ஷணங்களே உண்டாகும்.

கோளாறடைந்தவை யென்றறியவும்; ஆகவே குணபசுக்ரம், குணபார்த்தவம் முதலிய கோளாறடைந்த சுக்ரார்த்தவங்களில் அந்தந்த தோஷங்களுக்கு இயல்பான குறிகளையும் அவ்வவற்றில் காணலாம். மூத்திரம் போலவும் மலம் போலவும் உள்ள சுக்ரார்த்தவங்கள் ஸந்நிபாத தோஷத்தினுல் கோளாறடைந்ததாகக் கருதுக. 10, 11.

சுக்ரார்த்தவதோஷங்களில் ஸாத்தியாஸாத்தியங்கள் :—வாத சுக்ரம் முதல் க்ஷீணசுக்ரம் வரையிலுமுள்ள ஏழு விதமான சுக்ர தோஷங்களும் க்ருச்சிர ஸாத்தியங்கள்[1]. ஸந்நிபாத தோஷங்களால் கோளாறடைந்த மூத்திரசுக்ரமும், மலசுக்ரமும் அஸாத்தியங்களாகும். இவ்விதமே ஆர்த்தவ தோஷங்களிலும் ஸாத்தியா ஸாத்திய தன்மைகளை அறிந்துகொள்ளவேண்டும்.—$11\frac{1}{2}$.

சுக்ரதோஷங்களுக்கு சிகித்ஸை :—வாத-பித்த-கபங்களால் கோளாறடைந்த சுக்ரதோஷங்களில், அந்தந்த தோஷத்திற்குப் பரிஹாரமான சிகித்ஸையைச் செய்யவேண்டும்.[2] (1) குணபசுக்ரத்திற்குக் காட்டாத்திப்பூ, கருங்காலி, மாதுளை, மருதை இவற்ருல் பக்குவம் செய்யப்பட்ட கிருதத்தையாவது, அஸநாதிகணத்தைச் சேர்ந்த[3] வஸ்துக்களால் பக்குவம் செய்த கிருதத்தையாவது உட்கொள்ளச் செய்யவேண்டும். (2) கிரந்தி சுக்ரத்தில் பலாசங்கட்டையின் பஸ்மத்தையும் கல்லுருவியையும் உபயோகித்து சிகித்ஸை செய்யவேண்டும். (3) பூய சுக்ரத்தில் பருஷகாதிகணத்திலும்[4], நியக்ரோதாதிகணத்திலும்[5] கூறப்பட்டுள்ள பதார்த்தங்களால் பக்குவம் செய்யப்பட்ட கிருதத்தைப் பருகச்செய்ய வேண்டும். (4) க்ஷீணசுக்ரத்தில், சுக்ரம் நன்ருகச் செழிக்கக்கூடிய சிகித்ஸையைச் செய்ய வேண்டும்; மேலும் இப்பிணியாளிக்கு ஸ்நேஹ சிகித்ஸை, வமநசிகித்ஸை, விரேசகசிகித்ஸை, நிரூஹவஸ்தி, அநுவாஸநவஸ்தி இவற்றைச் செய்வித்து, அப்பால் உத்தரவஸ்தியையும் நன்ருகப் பிரயோகிக்கவேண்டும். (5) மலசுக்ரத்தில் பிணியாளிக்கு முதலில் சோதந சிகித்ஸைகளைச் செய்து, பிறகு பெருங்காயம், எலுமிச்சை வேர் இவற்ருல் பக்குவம் செய்த கிருதத்தைப் பானம்செய்து வரச் செய்யவும். $12—15\frac{1}{2}$.

ஆர்த்தவ தோஷ சிகித்ஸை :—(1) கிரந்திகளைப்போல ஆர்த்தவம் விகாரமடைந்தால், அப்பிணியாளிக்கு வட்டத்திருப்பி, த்ரி

1. க்ருச்சிர ஸாத்தியம்—மிகவும் சிரமப்பட்டு சிகித்ஸை செய்யக் கூடிய வியாதி.

2. வாதாதி தோஷங்களுக்கு எதிரிடையான குணமுள்ள வஸ்துக்களால் சிகித்ஸை செய்யவேண்டும் எனக் கருத்து.

3. அஸநாதிகணம் 162-ம் பக்கம் பார்க்க.

4. பருஷகாதிகணம்—161-ம் பக்கம் பார்க்க.

5. நியக்ரோதாதி கணம்—164-ம் பக்கம் பார்க்க.

கடுகம்[1], வெட்பாலரிசி இவற்றால் பக்குவம் செய்த கஷாயத்தைக் கொடுக்கலாம். (2) குணபார்த்தவம் என்னும் சவநாற்றமுள்ள ஆர்த்தவ தோஷத்திலும், பூயார்த்தவத்திலும் சந்தநம் சேர்த்து பக்குவம்செய்த கஷாயத்தையும், குஹ்யரோகப்ரதிஷேதாத்தியாயத்தில்[2] கூறப்போகிற எல்லாவிதமான சிகித்ஸைகளையும் உத்தர வஸ்தியோடு கூடவே பிரயோகிக்கவேண்டும்.—16, 17.

சுத்த சுக்ரத்தின் இலக்ஷணங்கள்.—சுக்ரமானது வெண்ணிறமாகவும், குருகுணமுள்ளதாகவும், ஸ்நிக்த்தமாகவும், பெரும்பாலும் மதுரமாகவும், அளவில் அதிகமாகவும், நெய்-தேன்-தைலம் இவற்றைப் போன்றதாகவும் இருந்தால் அதுவே நல்ல கர்ப்பத்தை உண்டுபண்ணக் கூடியதாகும்.—18.

சுத்த ஆர்த்தவத்தின் இலக்ஷணங்கள் :—ஆர்த்தவமோ, செவ்வரக்குநீர், முயலின் இரத்தம் இவற்றிற்கேற்ற நிறமுள்ளதாகவும், கழுவப்படும்போது வஸ்திரம் முதலியவற்றில் எவ்வித சாயமும் உண்டுபண்ணாமல் நன்கு விலக்கக்கூடியதாகவும் இருக்குமானால், அது நல்ல கர்ப்போற்பத்திக்குத் தகுந்ததாகும்.—18½.

கர்ப்பாதாநம் ஆகவேண்டிய தம்பதிகளுக்குப் போதுவான சோதந சிகித்ஸை :—(1) சுக்ரம் - ஆர்த்தவம் இவை சுத்தமாய், ஆரோக்கிய நிலைமையைப் பெற்று, ஒருவருக்கொருவர் மனமொப்பி அன்பு மேலிட்டுள்ள தம்பதிகளுக்கு, அவரவருடைய விருப்பத்தின்படி ஆண் கர்ப்பமோ பெண் கர்ப்பமோ உண்டாவதற்கு அநுகூலமான பிரபாவம் வாய்ந்த[3] ஸ்நேஹ வஸ்துக்களால் அவர்களை ஸ்நிக்த்தமாகச் செய்து வைத்து, வமந—விரேசநங்களாலும், வஸ்தி கர்மங்களாலும் அவர்களுடைய தேஹத்தைச் சுத்தி செய்யவேண்டும். (2) புருஷனுக்கு விசேஷமாகச் செய்யக்கூடிய உபசாரமாவது : மதுர ரஸமுள்ள ஔஷதங்களால் பக்குவம் செய்யப்பட்ட பால்-நெய் இவைகளை அதிகமாய் உபயோகிக்கவேண்டும். (3) ஸ்த்ரீக்கு விசேஷமாகத் தைலத்தினாலும், பித்தத்தை விருத்தி செய்யக்கூடிய உளுந்து முதலியவற்றாலும் உபசாரம் செய்யவேண்டும். 19—20½.

ருதிமதியின் இலக்ஷணங்கள் :—ஒருவாறு இளைத்தும் தெளிவுற்றதுமான முகமுடையவளாகவும், பிருஷ்டபாகமும் ஸ்தநங்களும் துடித்தும் பருத்துமிருக்க, சிறிது தளர்ந்து மடிப்பு விழுந்த கண் இமைகளென்ன, வயிறென்ன இவற்றையுடையவளும், புருஷ

---

1. த்ரிகடுகம்—சுக்கு, திப்பிலி, மிளகு இவற்றின் கூட்டு.
2. குஹ்யரோகப்ரதிஷேதம் — உத்தரஸ்த்தாநம் 34-ம் அத்தியாயம்.
3. சில ஔஷதிகளாலும், ஔஷதிகளால் பக்குவம் சேய்யப்பட்ட ஸ்நேஹங்களாலும் ஸ்த்ரீ புருஷர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்தால், அவற்றின் பிரபாவத்தினால் அவரவர்களுடைய விருப்பப்படி ஸ்த்ரீப் பிரஜையாவது புருஷப் பிரஜையாவது பிறக்கக்கூடுமென்பது கொள்கை.

ரிடம் விருப்பம் மேலிட்டவளுமான ஸ்த்ரீயை ருதுமதி யென்றறிக[1].—21½.

**ருதுகாலம் முதலியவற்றில் ஸ்த்ரீகளுடைய மர்மஸ்த்தானத்தின் நிலைமை :**—பகற்பொழுது போய் இராக்காலம் வருகையில் தாமரைப் பூவானது எவ்வாறு மூடிக்கொண்டு விடுமோ, அவ்விதமே ஸ்த்ரீக்கு ருதுகாலம் அதிக்ரமித்ததும் மர்மஸ்த்தானம் சுருக்கங்கொள்ளும்; ஆகவே அதன் பிறகு அவ்வவயவம் சுக்ரத்தை அவ்வளவாய் ஏற்றுக் கொள்வதில்லை.[2]—22½.

**ஆர்த்தவம் வெளிவரும் முறை :**—ஆர்த்தவ ஜநகங்களான இரண்டு குழாய்களின் மூலமாய்[3] ஒருமாத காலத்தில் மேன்மேலும் அபிவ்ருத்தியடைந்து, சிறிது கருநிறமாகவும் ஒருவித துர்நாற்றமுடையதாகவுமிருக்கிற இரத்தத்தை வாயுவானது மர்மஸ்த்தானத்திலிருந்து வெளியில் கொண்டு செலுத்துகின்றது.[4]—23½.

**ருது தினங்களில் பிரஹ்மசர்ய விரதம் :**—(1) அவ்வாறு புஷ்பமென்னும் ஆர்த்தவம் வெளிவந்ததைக் கண்டபிறகு, அந்த ஸ்த்ரீ மூன்று நாட்கள் வரையில் மங்களகரமான விஷயங்களையே மனத்தில் நினைத்துக்கொண்டு, தேய்த்துக் குளித்தலையும் அலங்காரங்களையும் விலக்கி, தர்ப்பைகளைப் பரப்பி அதன்மேல் படுத்துவரவேண்டும். குடல்களைச் சுத்திசெய்து, அதிக போஷணையைத் தராததான பால், வாற்கோதுமை இவற்றாலான உணவை, ஏதேனும் இலையிலாவது அகலிலாவது கரத்திலாவது மிதமாகக் கிரஹித்து உட்கொண்டு வரவேண்டும். அத்தினங்களில் பிரஹ்மசாரிணியாகவும் இருந்து வரவேண்டும். (2) பிறகு நான்காவது தினத்தில் ஸ்நானஞ்செய்து, வெண்மையான வஸ்திரத்தையும் புஷ்பத்தையும் அணிந்துகொண்டு, உள்ளும் புறமும் பரிசுத்தமாயிருந்தவளாய், தன் கணவனுக்கொப்பான புத்திரனைப் பெறவேண்டுமென விரும்பி, முதன்முதல் பர்த்தாவைப் பார்ப்பாளாக.24—26½.

---

1. பிறகு 27, 28 இப்பத்தியங்களில் குறிப்பிடும் வண்ணம் ருதுவான தினம் முதல் 12 நாட்கள் வரையில் ருதுகாலம் எனப் படுகிறபடியால், அத்தருணத்தில் ஸ்த்ரீக்கு இவ்வித இலக்ஷணங்கள் ஸம்பவிக்கும் என்றறிக. இக்குறிகள் இருந்தால் அது கர்ப்போற்பத்திக்கு ஏற்ற நிலைமையாகும்.

2. ருதுகாலம் தப்பின பிறகு ஸ்த்ரீ புருஷர்கள் கூடினாலும், அதனால் கர்ப்பம் ஜனிக்காதென்று இதனால் அறியவேண்டும்; அப்பொழுது கர்ப்பாசயத்தின் முகம் ஸங்கோசம் அடைகிறதென்றறிக.

3. இந்த இரண்டு குழாய்களுக்கும் ஆர்த்தவ வாஹிதமநிகள் என்று ஸம்ஸ்கிருதத்திலும், ஆங்கிலத்தில் பெல்லோபியன் ட்யூப்ஸ் என்றும் பெயர்.

4. கர்ப்பாசயத்துத் தசைநார் முதலியவற்றின் அசைவு முதலிய வேலையைச் செய்விக்கும் நரம்புகளின் சக்தி வாயுவென்று இங்கு கூறப்படுகிறது.

**ருதுகாலமும் கூடுவதற்கேற்ற தினங்களும்:**—ஸ்த்ரீகள் ஒவ்வொரு முறையும் ருதுவாகும்போது, அவர்களுக்கு ஆர்த்தவம் வெளியானது முதல் பன்னிரண்டு நாட்களும் **ருதுகாலம்** எனப்படும். அவற்றுள் முதலில் மூன்று நாட்களும், பிறகு பதினோராவது தினமும் அதற்குப் பிறகும் தம்பதிகள் கூடுவதற்குத் தகாதவைகள்; மற்ற நாட்களில் அவர்கள் சேருவதால் பயனுண்டாகும். அவற்றிலும் ருதுகாலத்தில் இரட்டைப்பட்ட நாட்களில் கூடுவதால் புத்திரனும், ஒற்றைப்பட்ட நாட்களிலானால் பெண்ணும் பிறக்குமெனப்படுகிறது.[1]—27½.

**தம்பதிகள் சேருவதற்கான ஸம்ஸ்கார முறை:**—(1) அப்பால் புரோஹிதர், ஸ்த்ரீக்கு புத்திரோற்பத்திக்கு அநுகூலமான சடங்குகளைச் சாஸ்த்திரமுறை தவறாமல் செய்துவைக்கவேண்டும். முதல் மூன்று வர்ணங்களைத் தவிர நான்காவது வர்ணமான சூத்திர ஸ்த்ரீயை நமஸ்காரம் செய்யச் செய்து, மந்திரமின்றியே மற்றச் சடங்குகளை அவளுக்குச் செய்விக்கவேண்டும். இவ்விதம் செய்வதால் தம்பதிகளின் சேர்க்கை ஸபலமாவதுடன், அவரவருக்குப் பிரியமான ஆண்பிள்ளையோ பெண்பிள்ளையோ பிறக்கக்கூடும். தம்பதிகள் முறைப்படி ஏகாந்தத்தில் இங்ஙனம் மக்கட் பேறை விரும்பி ஒன்று சேரவேண்டுமென்று சான்றோரும் கூறுகின்றனர். மிகச் சிறப்புற்ற குலத்திலும் அஸத்தான பிள்ளையொன்று பிறக்குமானால், அவன் அக்குலத்திற்குக் கொடிய தீமை விளைவிப்பதற்கு ஹேதுவாவான். தம்பதிகளுக்கு எவ்விதமான குழந்தை வேண்டுமென்று விருப்பம் உண்டாகின்றதோ, அதேவிதமான ரூபமும் நடத்தையுமுடைய மனிதரை அவர்கள் கூடும்போது மனதில் நினைத்துக்கொள்ளவேண்டும்; அவ்விதமான பரிஜன பரிவாராதிகளையும் ஆசார விவஹாரங்களையுமுடைய தேசத்து ஜனங்களையும் அவர்கள் மனத்தில் எண்ணவேண்டும். தம்பதிகளுக்கு முதலிற் செய்யவேண்டிய ஸம்ஸ்காரங்கள் முடிவுபெற்றதும், புருஷன் நெய்யும் பாலும் கலந்த சம்பா அரிசியினாலான அன்னத்தைப் புஜித்துவிட்டு, ஜ்யோதிச் சாஸ்திரவல்லோருடைய அனுமதியைப் பெற்று, முதலில் வலதுகாலை வைத்துச் சயனத்தில் ஏறவேண்டும். ஸ்திரீயானவள் எண்ணெயும் உளுந்தும் அதிகமாகக் கலந்த உணவை உட்கொண்டுவிட்டு, முதலில் இடது காலை வைத்து அவளது கண

---

1. ஸ்த்ரீகளுடைய சோணிததாது அதிகமானால் பெண்குழந்தையும், புருஷர்களுடைய சுக்ரதாது அதிகமானால் ஆண்குழந்தையும் பிறக்குமென்று கூறப்படுகிறதல்லவா? ஸ்த்ரீ ருதுவானதினம் முதல் 5, 7, 9, 11 இந்த ஒற்றைப்பட்ட நாட்களில் கூடுவதால், அவர்களுக்கு இயற்கையிலேயே சோணிதம் அந்த நாட்களில் அதிகரித்திருக்குமாதலால் ஸ்த்ரீ பிரஜையும், 4, 6, 8, 10, 12 இவற்றில் சோணிதம் குறைவதால் சுக்ராதிக்யத்தால் புருஷ ப்ரஜையும் பிறக்குமாம்.

வனுக்கு இடது பக்கமாகச் சயனத்திற் சென்று உட்காரவேண்டும். அதன்பிறகு அடியில் வரும் மந்திரத்தைப் பிரயோகிப்பாராக: (2) "அஹிரஸி ஆயுரஸி ஸர்வதஃ ப்ரதிஷ்டாஸி, தாதா த்வாம் ததாது, விதாதா த்வாம் ததாது, ப்ரஹ்மவர்ச்சஸா பவேதி. ப்ரஹ்மா ப்ருஹஸ்பதிர் விஷ்ணுஸ் ஸோமஸ் ஸூர்யஸ் ததாச்விநௌ. பகோத மித்ராவருணௌ வீரம் ததாது மே ஸுதம்." (3) பிறகு தம்பதிகள் ஒருவரோடொருவர் ப்ரியவசனங்களைக் கூறி, மனமகிழ்ச்சியோடு சயனிக்கவேண்டும். ஸ்த்ரீயானவள் அங்கங்களை ஏற்றவாறு அமைதியாக அமர்த்திக்கொண்டு நிமிர்ந்த நிலையில் படுக்கவேண்டும். அப்படிச்செய்தால்தான், அதது இயல்பான ஸ்தானங்களில் நிற்கும் வாதாதிதோஷங்களின மூலமாய் சுக்ரமென்னும் பீஜத்தை கர்ப்பாசயம் கிரஹிக்கின்றது. 28—34½.

கருத்தரித்த க்ஷணத்தில் உணரக்கூடிய குறிகள்:—கர்ப்பாதானம் நிறைவேறி கருத்தரிக்கப்படுமானால், அப்பொழுது உடனே ஸம்பவிக்கும் குறிகளாவன: யோனியானது பீஜம் அல்லது சுக்ரத்தை நன்றாகக் கிரஹித்துக் கொள்ளும்; அச்சமயம் செய்த செயலில் திருப்தியுண்டாகும்; வயிற்றில் உடனே ஏதோ ஒருவாறு பாரமுண்டானதுபோன்ற உணர்ச்சியும் துடிப்பும் உண்டாகும்; சுக்ரமும் சோணிதமும் கருப்பையை விட்டு மீண்டும் வெளிப்படாமல் ஒருமிக்கச் சேர்ந்துவிடும்; இருதயம் துடிக்கும்; சோம்பலுண்டாகும்; நாவறட்சியும், தேஹவாட்டமும், மயிர்ச்சிலிர்க்கையும் காண்பதுண்டு.—35, 36.

முதல் மாஸத்தில் கர்ப்ப நிலைமை:—கர்ப்பம் தரித்த முதல் மாஸத்தில், ஒரு வாரத்திற்குப் பிறகு கர்ப்பமானது "கலலம்" என்னும் நிலைமையைப் பெறுகின்றது;[1] ஆனால் ஒரு வாரத்திற்கு முன் அதன் உருவம் இன்னவிதமானதென்று விளங்காததாயிருக்கும்.—37.

பலமான புருஷப்பிரயத்தனம் தைவச் செயலையும் மீறலாம்:—புருஷப் பிரயத்தனமானது பலமானதாயிருந்தால், துர்ப்பலமான தைவச்செயலையும் மீறி தனது காரியத்தை நிறைவேற்றுவதுண்டு.[2] அதற்கான ஸம்ஸ்கரம் பின்வருமாறு:—பொன்னாலாவது வெள்ளி

1. கலலம்—சுக்ரார்த்தவஸம்யோகத்தினால் ஒரு வாரத்திற்குப் பின்பு சிறிது கனமாகப் பரிணமமடைந்த மிருதுவாகவும் வழவழப்பாகவுமுள்ள கர்ப்ப பிண்டம்.

2. ஜன்மாந்தரத்திற் செய்த சொற்பமான வினைப்பயன்களை முறைப்படி நிறைவேற்றப்படும் ஸம்ஸ்கார விசேஷங்களால் வென்றுவிடலாம் எனக் கருத்து. அடுத்துவரும் விஷயம் அந்த ஸம்ஸ்காரமுறைகளையே விவரிக்கின்றது.

யினாலாவது, செப்பினாலாவது, அதுவுமில்லாவிட்டால் இரும்பினாலாவது புருஷனைப்போன்ற ஓர் உருவத்தை நிர்மித்து, அதை அக்னியிலிட்டுப் பழுக்கக் காய்ச்சி, பாலில் தோய்க்கவும்; பிறகு அதில் ஒரு அஞ்ஜலியளவு எடுத்து கர்ப்பிணி உட்கொள்வது நலம். ஸுவர்ண கதளீயென்னும் பொன்னிற வாழையின் தண்டு, நாயுருவி, ஜீவகம், ருஷபகம், மருதோன்றி இவற்றில் ஏதேனும் ஒன்றையோ, இரண்டுச் சரக்குகளையோ, அனைத்தையும் ஒருமிக்கவோ ஜலத்தில் அரைத்து, புஷ்யநக்ஷத்திரங்கூடிய தினத்தில் உட்கொள்ளலாம். ஆண் குழந்தை வேண்டுமோனால் வெள்ளைக் கண்டங்கத்திரிவேரைப் பாலில் அரைத்து, வலது நாசியினுள் கணவன் பிழியவேண்டும். பெண் குழந்தை வேண்டுமேன்றால், அதையே இடது நாசியினுள் பிழியவேண்டும். கண்டங்கத்திரிவேரைப் பாலில் அரைத்து, நாசியினால் உறிஞ்சாலும், வாயால் பருகினாலும் கர்ப்பம் புருஷபிரஜையாக ஆவதுடன், தகுந்தவாறு பலத்தையும் பெறும். அவ்விதமே ஆலமரத்தின் எட்டு மொட்டுகளை எடுத்துப் பாலில் அரைத்து மூக்கினாலாவது வாயாலாவது உட்கொள்வதும் நலம். ஜீவநீய கணத்திற் கூறியுள்ள [1] மூலிகைகளையும் தேஹத்தின் மேலும் உட்புறமும் உபயோகித்து வரலாம். 38.—42.

**கர்ப்பிணிக்குச் செய்யவேண்டிய உபசாரம்.**—கர்ப்பிணிக்குப் பிரியமாகவும் ஹிதமாகவுமுள்ள உபசாரத்தை அவளது கணவனும் வேலைக்காரர்களும் நன்றாகச் செய்துவந்தால், அக்காரியம் கர்ப்பத்திற்கு வன்மையைக் கொடுத்து அதைத் தாங்கக் கூடியதாகும். வெண்ணெய், நெய், பால் இவற்றைக் கொண்டு எப்பொழுதும் கர்ப்பிணியைப் போஷித்து வரவேண்டும்.—43

**கர்ப்பிணிக்கு ஆகாத வஸ்துக்களும் காரியங்களும் :**—கர்ப்பிணிக்கு அடியில் வருபவை ஆகாத விஷயங்களாம். அதிகமான புணர்ச்சி, வியாயாமம், ஆயாஸம், சுமையெடுத்தல், கனமான போர்வை அல்லது உடுப்பு, அகாலத்தில் கண் விழித்தல், அகால நித்திரை, கடினமான ஆஸனத்தில் உட்காருதல், நிர்ப்பந்தமாய் உடலை ஒடுக்கிக்கொண்டு உட்காருதல், மனத்துயரம், கோபம், பயம், திகில், மலவிஸர்க்கம் முதலிய வேகங்களை அடக்குதல், ஆசை முதலியவற்றை அடக்குதல், உபவாஸம், வழிநடத்தல், தீக்ஷ்ணமும் உஷ்ணவீர்யமும் குருகுணமும் மல மூத்திராதிகளைக் கட்டக் கூடியவையுமான உணவுகளைப் புஜித்தல், ஒருவருமில்லாத ஏகாந்த ஸ்த்தாநத்தில் வஸித்தல், ஆழமான பள்ளம் கிணறு இவற்றைக் கவிழ்ந்துப் பார்த்தல், மதுபானம் செய்தல், இறைச்சி புண்ணுதல், மல்லாந்துப்படுத்தல் என்னும் இவைகளேயாம். மேலும் அனுபவசாலிகளான ஸ்த்ரீகள் வேறு எவை ஆகாதவையென்று அபிப்பிராயப் படுகிறார்களோ அவற்றையும் விலக்கிவிட

1. ஜீவநீயகணம் 160-ம் பக்கம் பார்க்க

வேண்டும்; அன்றியும் இரக்தமோக்ஷணம், வமந-விரேசநங்கள், வஸ்தி முதலிய சோதநசிகித்ஸைகள், ஆகியவற்றையும் எட்டாவது மாதம் வரையில் செய்யக்கூடாது. முற்கூறியவற்றை ஒரு கர்ப்பிணிக்குச் செய்தால், அவற்றால் கர்ப்பம் பக்குவமாகாமலே ஸ்ரவித்துவிடும்; வயிற்றிலேயே சுஷ்கித்தும் வரலாம்; அல்லது இறந்துவிடவுங்கூடும். வாயுவை விருத்தி செய்யக்கூடிய வஸ்துக்களால் அல்லது செய்கைகளால் கர்ப்பமானது கூன் விழுந்தும், குருடாகவும், சுறு சுறுப்பற்றதாகவும், குள்ளமாகவும் ஆகும்; பித்தம் விருத்தியாகக் கூடியவைகளால் கர்ப்பத்தின் தலையில் மயிர்கள் உண்டாகாமலும், பொன்னிறமாகவும் இருக்கும்; கபம் விருத்தியாகக் கூடியவற்றால் கர்ப்பம் வெண் குஷ்ட முள்ளதாகவும், மிகவும் வெண்ணிறமாகவும் ஆய்விடும். 44—48.

**கர்ப்பிணிக்கு உபயோகிக்கத்தகுந்த ஔஷதத் தன்மை:**—கர்ப்பிணிக்கு ஸம்பவிக்கும் வியாதிகளைப் போக்குவதற்கு மிருதுவாகவும், ஸுகமாகவும், தீக்ஷ்ணகுணமில்லாதவையுமான ஔஷதங்களை உபயோகிக்கவேண்டும்.—48½.

**கநம் - பேசீ - அர்புதம் என்னும் கர்ப்ப பரிணாமங்கள் :**—கலலம் என்கிற நிலைமையிலுள்ள கர்ப்பமானது இரண்டாவது மாஸத்தில் கநமாகவோ, பேசியாகவோ, அர்புதமாகவோ பரிணாமம் அடையும்;[1] இவற்றுள் கர்ப்பம் **கநம்** என்கிற பரிணாமத்தை அடைந்தால் புருஷக் குழந்தையும், **பேசியாக** ஆனால் பெண் குழந்தையும் **அர்புதமானால்** இரண்டுமில்லாமல் நபும்ஸகமாகவும் பிறக்குமென்று அறிக.—49¼.

**கர்ப்பக் குறிகள் :**—அதில் கர்ப்பம் நன்றாக ஏற்பட்டிருப்பதற்கான குறிகள் பின்வருமாறு: உடம்பில் ஒருவித வாட்டம், வயிற்றில் மாத்திரம் பாரம் அதிகரித்தல், மயக்கமாயிருத்தல்: வாந்தி, அரோசகம், கொட்டாவி, வாயில் உமிழ்நீர் ஊறுதல், இளைத்தல், வயிற்றில் உரோமம் கொடிபோல் பிரகாசமாகத் தோன்றல், அம்லரஸத்தில் விருப்பம், ஸ்தநங்கள் பருத்துப் பாலுடன் கூடியவைகளாய் முனையிற் காம்புகளில் கருத்துவருதல், பாதங்களில் வீக்கமுண்டாதல், உணவு தக்கபாகம் அடைதல், பலவிதமான விருப்பங்கள் மேலிடுதல் என்பவையாம். 50—51½.

**கர்ப்பிணியின் விருப்பத்தை அடக்கக் கூடாதென்பதற்கு முகாந்தரம்:**—(1) கர்ப்பத்திலுள்ள சிசுவின் தேஹத்தில் இருதயம் என்னும் அவயவமானது தாயாருடைய தாதுக்களின் அம்சங்களால் முக்கியமாய் அமைக்கப்பட்டுள்ளது; மேலும் தாயாருடைய இருதயத்துடன் சிசுவின் இருதயமும் ஒருவாறு பிணைக்கப்பட்டிருக்

---

1. கநம் என்றால் பிண்டரூபமான ஒருவித உருவம். பேசியென்றால் நாற்சதுரமான கனத்த உருவம். அர்புதம் என்றால் திரளாக நீண்ட உருவமுள்ள கர்ப்பம்,

கிறது [1]; அதனால் கர்ப்பிணியினுடைய விருப்பங்களை அடக்கச் செய்தல் சரியல்ல. (2) அவள் ஏதேனும் அஹிதமான வஸ்துவை விரும்பினால் அதையும் சொற்ப அளவில் ஹிதமான வஸ்துவோடு கலந்து அவளுக்குக் கொடுத்து வரலாம். (3) மசக்கை யெனப்படும் விருப்பத்தைத் தடுத்து அடக்கி வருவதால், கர்ப்பத்திற்கே ஏதேனும் விகார முண்டாகலாம்; அல்லது அது அகாலத்தில் வெளிப்பட்டு விடக்கூடும். 52—53½.

**மூன்றும் மாஸத்தில் கர்ப்பத்தின் அபிவ்ருத்தி:**—மூன்றுவது மாஸத்தில் கர்ப்பத்திலுள்ள சிசுவுக்கு சிரஸ்ஸு, இரண்டு கால்கள், இரண்டு கைகள் என்னும் இவ்வைந்து பெரிய அவயவங்களும், மற்றுமுள்ள அவயவங்களின் ஸூக்ஷ்மமான பாகங்களும் உற்பத்தியாகின்றன. சிரஸ்ஸு முதலிய அவயவங்களோடு இன்ப-துன்பங்களை அறிவதற்கான உணர்ச்சியும் உண்டாகின்றது.—54, 55.

**நாபிக்கொடியின் மூலமாய் கர்ப்பம் போஷிக்கப்படுதல்:**—கர்ப்பத்தின் நாபியிலுள்ள தொப்புட் கொடியானது தாயாருடைய இருதயத்தோடு ஒருவாறு பிணைக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலமாய் சிசுவானது, வாய்க்காலால் வயல்களைப்போல் போஷிக்கப் படுகின்றது. [2]—56.

**நான்காவது முதல் ஏழாம் மாஸம் வரையில் கர்ப்ப விருத்தி:**—நான்காவது மாஸத்தில் சிசுவின் அவயவங்கள் நன்கு விளங்கும்படி விருத்தியாகின்றன. ஐந்தாவது மாஸத்தில் உணர்ச்சியும் வியக்த்தமாய உண்டாகின்றது. ஆறுவது மாஸத்தில் ஸ்நாயுக்கள், ஸிரைகள், உரோமங்கள், சரீரவன்மை, நிறம், நகம், சர்மம் இவைகள் விருத்தியாகும். ஏழாவது மாஸத்தில் எல்லாவித வஸ்துக்களாலும், எல்லா அவயவங்களும் பூர்த்தியாய் புஷ்டியடைந்து வருகின்றன. 57, 57½.

**கர்ப்பிணிக்கு எட்டாம் மாஸத்தில் உண்டாகும் சில குறிகள்:**—(1) எட்டாம் மாஸத்தில் வாதாதி தோஷங்கள் கர்ப்பத்தினால் நெருக்கப்பட்டு, கர்ப்பிணியின் இருதயத்தை அடைந்து, தினவையும் ஒருவித அழற்சியையும் உண்டுபண்ணுகின்றன; அப்பொழுது ஸ்தநங்களைச் சுற்றிலும் தொடைகளிலும் கறுப்பான சில இரேகைகளையும் அத்தோஷங்கள் உண்டாக்குகின்றன. (2) அப்பொழுது

1. கர்ப்பிணியினுடைய வயிற்றினுள் இரத்தக்குழாய்கள் மாயையெனப்படும் அபராவில் கலந்து, அங்கிருந்து நாபிக்கொடி மூலமாய் சிசுவின் உடம்பில்—முக்கியமாய் இரத்தக்குழாய்களோடு கலப்பதால் இங்ஙனம் கூறப்பட்டதென்றறிக.

2. தாயாருடைய இருதயத்திலிருந்து உணவின் ஸாரமான சில அம்சங்கள் தமனிகளின் மூலமாய் அபராவென்னும் மாயையினுள் சேர, பிறகு அங்கிருந்து நாபிக்கொடியினூடே சிசுவின் வயிற்றிற் சென்று, அங்கிருந்து அநேகம் சிறிய இரத்தக் குழாய்களின் மூலமாய் சிசுவின் தேஹமெங்கும் பரவி அதைப் போஷிக்கின்றது எனக் கருத்து.

தினவு முதலியதைப் போக்குவதற்கு வெண்ணெய் ஹிதமான வஸ்துவாம்; புளியாரையினாலும் மதுரமான ஔஷதங்களாலும் பக்குவம் செய்யப்பட்டு, சிறிதளவு உப்பும் ஸ்நேஹமும் கலந்துள்ள இனிய சுவை பொருந்தியதும், எளிதில் ஜீர்ணமாகக் கூடியதுமான உணவை உட்கொள்ளவேண்டும். சந்தனம், வெட்டிவேர் இவற்றைக் கல்கமாக ஆட்டியெடுத்துத் தொடையிடுக்குகளிலும் ஸ்தனங்களின் இடையிலும் பூசவேண்டும். மேலும் வெள்ளை மான், கருப்பு மான், முயல் இவற்றின் இரத்தத்தினால் ஆட்டிய த்ரிபலாகல்கத்தையும் அவ்விடங்களில் பூசலாம். அலரியிலைகளைச் சேர்த்துக் காய்ச்சிய தைலத்தினால் அவ்வவயவங்களைத் தேய்த்து நன்றாகப் பிடித்து மர்த்தனம் செய்யலாம். மறுபடியும் பேய்ப்புடல், வேம்பு, மஞ்ஜிஷ்டை, கருந்துளஸி இவற்றின் கஷாயத்தினால் அவ்வவயவங்களைத் தேய்த்துக் கழுவவேண்டும். 58—61½.

எட்டாம் மாஸத்தில் பிரஸவிப்பதன் கெடுதி :—எட்டாவது மாஸத்தில் ஓஜஸ் என்னும் தாதுவானது[1] மாதாவினிடமும் சிசுவினிடமும் மாறி மாறி அடிக்கடியும் கிரமமாக ஓடிக்கொண்டிருக்கின்றது. அதனால், அவர்கள் மாறி மாறி அடிக்கடி வாடியும் களிப்புடன் செழித்தும் வருவதால், அந்த நிலைமையில் சிசு வெளிப்பட்டால் ஜீவிக்கமாட்டாது. ஓஜஸ் மாதாவினிடமிருந்து சிசுவினிடமும் மாறிப் பிரவேசிக்கக் கூடுமாகையால், அத்தருணத்தில் பிரஸவமானால் ஸ்த்ரீ ஜீவித்திருப்பதும் ஸந்தேஹமாம்.—62, 63.

கர்ப்பிணிக்கு எட்டாம் மாஸத்தில் செய்யவேண்டிய உபசாரம்:—இத்தருணத்தில் நெய் கலந்த பால் ஸம்பந்தமான பேயா என்னும் திரவாஹாரமே[2] விசேஷமாகப் பருகத் தகுந்தது. திராக்ஷை முதலிய மதுர ரஸமுள்ள வஸ்துக்களால் பக்குவம்செய்த கிருதத்தை அநுவாஸநவஸ்தியாக உபயோகிக்கலாம். அங்ஙனமே, உலர்ந்த முள்ளங்கி, இலந்தம்பழம், புளி இவற்றைக் கஷாயமாகக் காய்ச்சி, அதில் சதகுப்பியைக் கல்கமாகச் சேர்த்து, தைலம், நெய், இந்துப்பு இவற்றையும் கூட்டி, பழைய மலங்களை வெளியாக்கிக் குடலை சுத்தம் செய்வதற்காக நிரூஹவஸ்தியையும் பிரயோகிக்கலாம். 64, 65.

பிரஸவத்திற்கு உசிதமான காலம் :—(1) எட்டாவது மாஸம் முடிந்து ஒருநாள் கழிந்தபோதிலும், அதன் பிறகு எந்த தினமும் பிரஸவத்திற்கு ஏற்ற காலமாகவே கருதப்படும். (2) கர்ப்பமானது, பிரகோபமடைந்த வாததோஷத்தினால் வெளிவரக் கூடாமல் அடக்

---

1. ஓஜஸ்—115, 128-ம் பக்கங்களைப் பார்க்க.

2. சுமார் ஒருபலம் அளவான கோதுமை முதலியதைப் பொடித்து, அறுபத்திநான்கு பலம் ஜலத்தில் பக்குவம் செய்து, அரைப்பங்கு நீர் குறைந்தபிறகு, அடுப்பிலிருந்து இறக்கி யெடுத்துக் கொள்ளப்படும் ஒருவித திரவமான உணவு பேயா எனப்படும்.

கப்பட்டு, ஒரு வருஷத்திற்குப் பிறகும் பிரஸவமாகாமற் போனால், வயிற்றினுள் அக்கர்ப்பம் கோளாறுகளை யுண்டுபண்ணும்.—66.

**கர்ப்பிணிக்கு ஒன்பதாம் மாஸத்தில் உபசாரக் கிரமம் :**—ஒன்பதாவது மாஸத்தில் ஸ்நிக்த்த குணமுள்ள மாம்ஸரஸம் கலந்த அன்னத்தை உபயோகிப்பது நலம்; அல்லது அதிக ஸ்நேஹ வஸ்துக்கள் கலந்த யவாகூ என்னும் கஞ்சியையாவது[1] உபயோகிக்கலாம். அத்துடன் முற்கூறியுள்ள அநுவாஸந வஸ்தியையும் பிரயோகிக்க வேண்டும். பிறகு மிருதுவான சிறிய துணித்துண்டுகளாலான நிர்மலமாயுள்ள பிசு என்னும் நூற்சிலும்பையை யோனியில் தினந்தோறும் வைத்து வரவேண்டும்; மேலும் வாதஹரமான இலைகளை அல்லது தழைகளைப் போட்டுக் காய்ச்சப்பட்டு, அப்பால் தானே குளிர்ந்த ஜலத்தைப் பிரதிதினமும் ஸ்நாநத்திற்கு உபயோகிப்பது உசிதமாம். ஒன்பதாவது மாஸம் முதற்கொண்டு கர்ப்பிணியின் தேஹத்திற்கு ஸ்நேஹோபசாரம் இல்லாமல் அவளை ரூக்ஷசரீரமுடையவளாக இருக்கச் செய்யக்கூடாது. 67—68½.

**ஆண்-பெண்-நபும்ஸகக் குழந்தைகள் பிறப்பதற்கான முற்குறிகள் :**—(1)முதலில் வலது பக்கத்து ஸ்தநத்தில் பால் ஊற ஆரம்பித்தாலும், அதே பக்கத்தில் அசைவு முதலியவை யேற்பட்டாலும், ஆண் பாலான பெயர்களையுடைய பதார்த்தங்களில் மசக்கையுடையவளா யிருந்தாலும், புருஷர்களை ஸ்வப்னத்திற் கண்டாலும், வயிற்றின் வலது பக்கம் உயர்ந்திருந்தாலும், கர்ப்பம் வட்டமாகப் பருத்திருந்தாலும் அக்கர்ப்பிணி ஆண் பிள்ளையைப் பெறுவள். (2) இதற்கு எதிரிடையா யிருந்தாலும், புருஷருடன் சேருவதில் விருப்பமுள்ளவளாயினும், நர்த்தநம், வாத்தியம், நாகரிகமான சிருங்காரவேஷம், நறுமணமுள்ள வஸ்து, புஷ்பம் இவற்றில் விருப்பமுள்ளவளாயிருந்தாலும் அவள் பெண் குழந்தையைப் பெறுவள். (3) முற்கூறிய இரண்டு வகையான குறிகளும் கலந்து கண்டால் பிறக்கும் குழந்தை நபும்ஸகமாயிருக்கும். 69—71.

**இரட்டைப் பிள்ளைப் பிறப்பதற்கான முற்குறிகள் :**—வயிற்றின் இரு புறங்களும் தாழ்ந்து செறிந்து, மத்தியபாகம் உயர்ந்து பருத்திருந்து, அது ஒரு சாலைப்போல் காணப்படுமானால், அப்பொழுது இரட்டைப் பிள்ளைப் பிறக்குமென்று அறியலாம்.—72.

**ஸூதிகாக்ருஹமும் அதில் பிரவேசமும் :**—ஒன்பதாவது மாஸத்திற்கு முன்பாகவே கர்ப்பிணியானவள் **ஸூதிகாக்ருஹம்** எனப்படும் பிரஸவ அறையிற் பிரவேசித்து, அவ்விடத்திலேயே இருந்து வரவேண்டும். அந்த கிருஹம் எவ்விதத்திலும் மிகச் சிறந்ததாகவும், பிரஸவகாலத்திற்கு வேண்டிய எல்லா உபகரணங்கள் அல்லது

---

1. நாலு பலங்கொண்ட அரிசிமுதலியவற்றை அறுபத்திநான்கு பலம் ஜலத்திற் சேர்த்து, அரைவாசி வற்றுகிறவரையில் காய்ச்சி யெடுக்கப்படும் கஞ்சி யவாகூ எனப்படும்.

ஸாமக்ரிளால் நிரம்பியதாகவும் இருக்க, அதில் சிறந்த சுபதினத்தில் கர்ப்பிணி பிரவேசிக்கவேண்டும். அவ்விடத்தில் பிரஸவிக்கப் போகிற ஸ்திரீயானவள், ஸகல உபசாரமும் செய்வதில் திறமைவாய்ந்த பரிசாரிகைகளால் சூழப்பட்டு, பிரஸவம் சீக்கிரம் எளிதில் உண்டாகுமென்று எதிர்பார்த்த வண்ணம் இருந்துவரவேண்டும்.—73, 73½.

**பிரஸவிக்கையில் உண்டாகும் குறிகள்** :—இன்றைக்கோ நாளைக்கோ பிரஸவம் நேரிடுமென்று இருக்கையில், உடம்பில் வாட்டமும் அசக்தியும் உண்டாகும்; கண்களும் வயிறும் தளர்ந்துவிடும்; அடிவயிற்றில் பாரம் அதிகரிக்கும்; அரோசகமும், வாயில் உமிழ் நீரும் உண்டாகும்; மூத்திரம் அதிகரிக்கும்; தொடைகள், வயிறு, இடுப்பு, பிருஷ்டபாகம், இருதயம், மூத்திரப்பை, தொடையிடுக்குகள் இவற்றில் வேதனையுண்டாகும்; அடுத்தாற்போல யோனி அகன்று, அதில் குத்தல் வலியெடுத்துத் துடிக்க ஆரம்பித்து, அதிலிருந்து சில திரவமும் கசியத் தொடங்கும்; அப்பால் பிரஸவத்திற்கு இயல்பான வேதனைகள் உண்டாய், பிறகு கர்ப்பாசயத்திலிருந்து கர்ப்பநீரின் பொசிவும் காணும். 74—76.

**பிரஸவிப்பதற்கு முன் செய்யவேண்டிய உபசாரம்** :—கர்ப்பத்திலுள்ள சிசு வெளியாகப் போகிறதென்கிற விஷயம் தெரிந்தவுடனே, அவளுக்கு ரக்ஷாபந்தநம் முதலிய மங்களகரமான சடங்குகளைச் செய்வித்து, அவளுடைய கையில் ஆண்பாலான பெயர்களுடைய கனி வர்க்கங்களைக் கொடுத்து, நன்றாக அப்யஞ்ஜநம் செய்து உஷ்ண ஜலத்தினால் குளிப்பாட்டி, நெய் கலந்த பேயா என்னும் திரவமான உணவைப் பருகச் செய்யவேண்டும்.—77¼.

**பிரஸவிக்கும் போது ஸ்திரீ இருக்கவேண்டிய நிலைமை முதலியது** :—(1) பிரஸவிக்கும் ஸ்திரீயை, பூமியிற் பரப்பிய மிருதுவான படுக்கையில் தொடைகளை உயர்த்தி மடக்கிக் கொண்டு மல்லாந்து சயனிக்கச் செய்து, நாபிக்குக் கீழே தைலம் முதலியதைத் தடவி திரும்பத் திரும்ப உருவிவிடுவதோடு, மூச்சை அடக்கிப் பொருமலுடன் வயிற்றில் அழுக்கத்தை உண்டுபண்ணி, இங்குமங்குமாய் உடம்பைப் புரட்டச் செய்யவேண்டும். (2) முற்கூறியவாறு செய்ய, கர்ப்பமானது தலைகீழாக மேலிருந்து கீழ் நோக்கி வரும். இக்காரியம் நடக்கும்போது ஸம்பவிக்கும் குறிகளாவன :—மாதாவுக்கும் சிசுவுக்கும் இருந்துவந்த இருதயப்பற்றுதல் விடுபட்டுப் போக, [1] அப்பால் கர்ப்பமானது அடிவயிற்றில் இறங்கி மூத்திரப்பைக்கு மேற்புறமாய் நிற்கும். (3) பிரஸவத்திற்கு இயல்பான வேதனைகள் ஸ்திரீயைத் துரிதப்படுத்தித் தூண்டும்; அப்பொழுது மெதுவாக மஞ்சத்தின்மீது ஏற்றிவிடவேண்டும். அப்பால்

---

1. கர்ப்பிணியின் கருப்பையிலுள்ள இரத்தக் குழாய்களின் மூலமாய் அபராவென்னும் மாயைக்கும் ஸ்திரீயின் இருதயத்திற்கும் ஒரு பற்றுதல் உண்டு. சிசு வெளிப்படுகையில் அப்பற்றுதல் விலகிவிடுவது இயல்பு.

கர்ப்பம் பலமாக அழுத்தப்படும்போது, அவளுடைய யோனியில் தைலம் முதலியவற்றைப் பிரயோகித்து அவ்விடத்தை ஸ்நிக்த்த மாக்கவேண்டும். முதலில் மெதுவாகவும், சிசுவானது சிறுது வெளிப்பட ஆரம்பித்ததும் பிரஸவம் முடியும் வரையில் வெகு பலமாகவும் அழுத்தி அமுக்க வேண்டும். 'உனக்கு அருமைப் புதல்வன் இதோ பிறந்துவிட்டான்' என்று சொல்லியும், ஜலத்தினால் முகத்தைக் கழுவியும், சிற்றாலவட்டத்தினால் வீசியும் அடிக்கடி அவளை உத்ஸாஹப்படுத்தவும் வேண்டும். அவ்விதம் செய்வதால், பிரஸவிக்கும்போது உண்டாகும் கிலேசத்தினால் களைத்துப்போன உடலில் மீண்டும் தகுந்தவாறு சக்தியுண்டாகும். 78—82.

கர்ப்பம் அல்லது அபரா தடை யுறுவதற்குப் பரிஹாரம் :—(1) கர்ப்பம் வெளிவராமல் தடையுறுமானால், கருநாகத்தின் உரிந்த மேற்புறணிகளால் யோனியில் தூபம் போடலாம். கொனறையின்[1] வேரைக் கைகால்களில் வைத்துக் கட்டலாம்; ஸுர்யகாந்தி யென்னும் மூலிகையையாவது, விசல்யை யென்னும் மூலிகையையாவது அவ்விதம் செய்யலாம்; மாயை முதலியது வெளியில் விழாமற் போனால் அப்பொழுதும் இந்த மூலிகைகளை இவ்வாறு உபயோகிக்கலாம். மேலும் அவளைக் கைகளில் ஏந்தி ஒருவாறு குலுக்கலாம்; இடுப்பில் மெதுவாக அடிக்கடியும் முஷ்டியினால் குத்தலாம்; பிருஷ்டபாகங்களைக் கைகளால் நன்கு அழுத்தி உருகலாம்; மயிர்ச் சுரணையினால் வாயையும் தொண்டையையும் பரிசிக்கலாம்; சிரஸ்ஸில் எருக்கம்பாலைத் தடவலாம்; பூர்ஜப்பட்டை, நீர்த்திப்பிலி, சுரைவேர், பாம்புத்தோல், கோஷ்டம், கடுகு, இவற்றைத் தனித்தனியாகவோ, இரண்டிரண்டாகவோ, அனைத்தையும் ஒருமிக்கச் சேர்த்தோ கல்கமாக அரைத்து, யோனியில் லேபநம் செய்யலாம்; அல்லது அவற்றைக்கொண்டு தூபம் போடலாம்; அல்லது கோஷ்டம், தாளிசபத்திரி இவற்றைக் கல்கமாகச் செய்து தெளிந்த கள்ளோடு உட்கொள்ளச் செய்யலாம்; அல்லது அதே கல்கத்தைக் கொள்ளுக் கஞ்சியோடாவது, பில்வப்பழத்தினால் செய்த ஆஸவத்தோடாவது உட்கொள்ளச் செய்யலாம். (2) அபராவென்கிற மாயை வெளிவருவது தடையுறுமானால், அடியில் வரும் சிகித்ஸையைச் செய்யவேண்டும் :—சதகுப்பி, கடுகு, ஓமம், முருங்கை, மிளகு, சித்திரமூலம், பெருங்காயம், கோஷ்டம், மருக்காரை இவற்றைப் பசுவின் மூத்திரத்திலும் பாலிலும் சேர்த்துக் காய்ச்சி, அதில் கடுகெண்ணெயைச் சேர்த்துப் பக்குவம் செய்யவும்; இத்தைலத்தை குதத்திலாவது, யோனியிலாவது அநுவாஸநமாக அல்லது உத்தரவஸ்தியாகப் பிரயோகிக்கலாம். சதகுப்பி, வசம்பு, கோஷ்டம், திப்பிலி, கடுகு இவற்றைக் கல்கமாகப் பக்குவம் பண்ண கஷாயத்தில் ஸ்நேஹவர்க்கங்களையும் இந்துப்பையும் சேர்த்து, நிரூஹவஸ்தி

1. ஹிரண்யபுஷ்பீ—இதைச் சிலர் சவிந்தியென்றும் கூறுவர்.

யாகப் பிரயோகித்தால், அபரா வென்பது சீக்கிரம் வெளியாய் விடும்; கோளாறடைந்த வாயுவானது மாயையின் தடைக்குக் காரணமாயிருக்கும்; இச்சிகித்ஸைகளால் வாயு கண்டிக்கப்பட்டுப் போகுமாதலால், மாயையும் பிறகு தானே வெளியாய்விடும். அல்லது பிரஸவிக்கச் செய்யும் வேலையில் திறமையுள்ளவள் தன் கைவிரல்களிலுள்ள நகங்களையெடுத்துக் கொண்டு, தைலம் முதலியதைக் தடவிக்கொண்டு, மெதுவாக மாயையைக் கையினாலும் இழுத்துவிடலாம். 83—90½.

சிசுவும் அபராவும் வெளியானதும் செய்ய வேண்டிய ஸ்நேஹோபசாரம்:—சிசுவும், அபராவென்னும் மாயையும் கர்ப்பாசயத்தையும் யோனியையும் விட்டு வெளியாய் விட்டபிறகு, யோனியையும், மற்ற அவயவங்களையும் தைலத்தைத் தடவி மெதுவாக உறுவி விடுவது நலம்.—91.

மக்கல்லமும் அதற்குப் பரிஹாரமும்:—இந்த நிலைமையில் பிரஸவித்த ஸ்திரீக்கு, மக்கல்லம் என்கிற ஒரு வித நோய்[1] உண்டாவதுண்டு: அதில் தலைவலி, மூத்திரைப்பை வலி, குடலில் விசேஷமான வேதனை இவை ஸம்பவிக்கும். அப்பொழுது யவக்ஷாரத்தை நன்றாகப் பொடிசெய்து, நெய் அல்லது ஜலத்தில் அநுபானமாக உட்கொள்ளச் செய்யவேண்டும். த்ரிகடு,[2] த்ரிஜாதகம்[3] இவற்றின் சூர்ணத்தையும் வெல்லத்தையுட் சிறிதளவு காடியில் சேர்த்து உபயோகிக்கச் செய்யலாம். 92, 92½.

சிசுவைப் பரிபாலித்தல்:—பிறகு குழந்தையை ஓர் அநுபவசாலியான ஸ்த்ரீ யெடுத்து, பாலர்களுக்குரிய முறைப்படியேற்பட்ட உபசாரத்தினால்[4] அதைப் பரிபாலித்து வரவேண்டும். 93.

ஸூதிகைக்கு வாயு பிரகோப மடையாமலிருக்கச் செய்யும் சிகித்ஸை:—பிரஸவித்த ஸ்த்ரீ ஸூதிகை யெனப்படுவாள்; ஸூதிகைக்கு நல்ல பசியுண்டானதும், தைலத்தையாவது கிருதத்தையாவது யெடுத்து, அதில் பஞ்சகோலங்களைப்[5] பொடித்துச் சேர்த்து, உத்தம மாத்திரை யெனப்படும் பெரிய அளவில்[6] அதை உபயோகித்து, அதற்கு அநுபாநமாகச் சூடான வெல்லம் கரைத்த

1. மக்கல்லம்—பிரஸவித்த ஸ்திரீக்குக் கருப்பையிலிருந்து அழுக்குகள் நன்கு வெளிப்படாமையால் உண்டாகும் ஒரு வித விஷ நோய்.

2. த்ரிகடு—83-ம் பக்கம் பார்க்க.

3. த்ரிஜாதகம்—83-ம் பக்கம் பார்க்க.

4. உத்தரஸ்த்தானத்தில் 'பாலோபசாரணீயம்' என்கிற முதல் அத்தியாயத்தில் பாலோபசாரத்தைப் பற்றிய விவரங்கள் விஸ்தாரமாகக் கூறப்படுகின்றன.

5. பஞ்சகோலம்—84-ம் பக்கம் பார்க்க.

6. ஸ்நேஹத்திற்கு உத்தம மாத்திரை, மத்திம மாத்திரை, ஹ்ருஸ்வ மாத்திரைகளைப்பற்றி 169, 170-ம் பக்கங்கள் பார்க்க.

நீரை உட்கொள்ளச் செய்யலாம். அல்லது வாதஹரமான வஸ்துக்களால் பக்குவம் செய்யப்பட்ட கஷாயத்தையாவது பருகச் செய்யலாம்; அவ்விதம் செய்வதால் வாதம் பிரகோபமடையாமலிருக்கும்; கெட்டுப்போன இரத்தமும் நன்றாக வெளிவந்து கருப்பை சுத்தமாகும். இம்முறையை இரண்டு மூன்று நாள் தொடர்ந்து நடத்தவேண்டும். ஸ்நேஹபானம் செய்யத்தகாதவள், தைலம் கிருதங்கள் இவற்றைத் தவிர்த்து மற்றப்படி இச்சிகித்ஸாமுறையையே செய்து கொள்ளலாம். இவ்வாறு கஷாயாதிகளைப் பாநம் செய்தபிறகு அவளுடைய வயிற்றை யமகஸ்நேஹத்தில்[1] நனைத்த வஸ்திரத்தினால் சுற்றிக் கட்டிவைக்கவேண்டும். 94—96.

ஸூதிகைக்கு ஹிதமான ஆஹாரங்களும் அவற்றிற்கு ஏற்ற காலங்களும்:—உட்கொண்ட ஸ்நேஹம் அல்லது கஷாயம் முதலியது நன்கு ஜீர்ணமான பிறகு, ஸ்நாநம் செய்து, முற்கூறிய ஔஷதச் சரக்குகளால்[2] பக்குவம் செய்யப்பட்ட பேயாவென்னும் திரவமான ஆஹாரத்தை உட்கொள்ளவேண்டும். மூன்று நாள் சென்றதும் விதார்யாதி கணத்திற்[3] கூறிய வஸ்துக்களாலான கஷாயத்தில் பக்குவம் செய்த யவாகூ வென்னும் கஞ்சியில் ஸ்நேஹவஸ்துக்களை வேண்டியளவு சேர்த்து அருந்துவது நலம்; அல்லது அவரவருடைய வழக்கம் அல்லது தேஹக்கூறை அநுஸரித்து, பாலிற் பக்குவம் செய்த யவாகூவையாவது உட்கொள்ளலாம். ஏழாம் நாள் சென்றதும், இவளுக்குக் கிரமமாக ப்ருஹ்மணசிகித்ஸையைச் செய்யலாம். பன்னிரண்டு நாட்கள் கழிவதற்கு முன்பு மாம்ஸாஹாரத்தை உபயோகிக்கக் கூடாது. 97—98½.

ஸூதிகைக்குக் கருத்துடன் உபசாரம் செய்யவேண்டிய அவசியம்:—ஸூதிகைக்குக் கருத்துடன் ஜாக்கிரதையாக உபசாரம் செய்ய வேண்டும்; ஏனெனில் சர்ப்பம் விருத்தியானதாலும், அது பிரஸவத்தில் வெளிவரவேண்டியதானதாலும், பிரஸவவேதனையினாலும், மலினமான நீர்கள் கசிவதாலும் இரத்தப் பெருக்காலும், அமுக்கம் அல்லது முக்கல் அதிகரிப்பதாலும் அவளுக்குண்டாகும் வியாதிகள் எளிதில் பரிஹரிக்கக் கூடாதவைகளாய் விடுகின்றன.—99½.

ஸூதிகை யென்னும் நிலைமையின் கால அளவு முதலியது:— இங்ஙனம் முற்கூறியவாறு ஒன்றரை மாஸம் வரையில் உபசரிக்கப்பட்டு, அப்பால் கிரமமாக ஆஹாரம் முதலியவற்றைப் பற்றிய நிர்ப்பந்தங்களை மெதுவாக விலக்கி விடலாம். இதன்பிறகு ஸூதிகையென்னும் நிலைமை ஸ்த்ரீக்கு நீங்கி விட்டதாகக் கருதப்படும்; ஆனால் மறுபடியும் மாதவிடாய் உண்டாகும் வரையில் அவளுக்கு

1. யமகஸ்நேஹம்—166-ம் பக்கம் பார்க்க.
2. முற்கூறிய ஔஷதச் சரக்குகள் பஞ்சகோலம் முதலியவை.
3. விதார்யாதிகணம்—160-ம் பக்கம் பார்க்க.

ஸூதிகை யென்கிற விவஹாரம் உண்டென்றும், மறுபடி ஆர்த்தவம் காணப்பட்ட பிறகே அந்த நிலைமையிலிருந்து அவள் நீங்கியவளாவாள் என்றும் சிலரது கொள்கை.—100.

---

## இரண்டாம் அத்தியாயம்.

### கர்ப்பவ்யாபத் சாரீரம்.

இதன் பிறகு கர்ப்பவ்யாபத் சாரீரம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படுகிறது :—

மூன்றும் மாஸத்துக்கு மேல் கர்ப்பிணிக்கு ஆர்த்தவம் வெளி வந்தால் செய்யும் பரிஹாரங்கள்:—கர்ப்பிணியான ஸ்த்ரீ பரிஹரிக்கத் தகுந்த வஸ்துக்களை உபயோகிப்பதாலோ, அவ்வித வேலைகளைச் செய்வதாலோ, அல்லது ஏதேனும் வியாதியினாலோ அவளுக்குப் புஷ்பம் என்னும் மாதவிடாய் தோன்றக் கூடும்; சூலம் என்கிற வேதனையாவது உண்டாகக்கூடும். அப்பொழுது தேஹத்திற்கு உள்ளும் புறமும் ஸ்நிக்த்தமும் சீதளமுமாயுள்ள வஸ்துக்களைக் கொண்டு உபசாரம் செய்யவேண்டும். விளாமிச்சை, தாமரை, பனிநீர், பாலுள்ள மரங்களின் பட்டைகள் இவற்றைக் கல்கமாய் அரைத்து, நெய்விட்டுக் குழப்பி, பிசுவென்னும் நூற்சிலும்பை களையும் மிருதுவான சிறிய சீலைகளையும் அக்கல்கத்தில் தோய்த்து, ஈரம் கசியக் கசிய அவற்றை யோனியிலும் மூத்திரப்பையின் மீதும் வைத்திருக்க வேண்டும். மேலும் ஸ்த்ரீயின் உடம்பில் சததௌதக் ருதத்தைப்[2] பூசி, முற்கூறிய விளாமிச்சை முதலியவற்றாலான கஷாயஜலத்தினால் ஸ்நாநம் செய்விக்கவும். சர்க்கரை, தேன், ஆம்பல்மலர், தாமரைப்பூ, நெய்தல், நாககேஸரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை நன்றாகக் கடைந்தெடுத்து, அதிலிருந்து வரும் நெய்யை உட்கொள்ளலாம். தாமரைக் கிழங்கு, அல்லிக்கிழங்கு முதலியதையும் மென்று விழுங்காலம். வாஸனைப்புல், தாமரை, அல்லி முதலியவற்றின் கிழங்குகள், அத்தியின் இளங்காய் இவற்றால் பக்குவம் செய்த பாலையாவது பருகலாம். சம்பாப்பயிர், காகோலி யென்கிற மூலிகை, சிற்றுமுட்டி, பேராமுட்டி, அதிமதுரம், கரும்பு இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைச் சிவப்புச் சம்பா அரிசியினாலான அன்னத்துடன் கலந்து புஜிக்கலாம்; அல்லது அதே அன்னத்தைத் தேன் சர்க்கரைகளோடும், ஜாங்கலமாம்ஸ ரஸத்

---

1. கர்ப்பத்திற்கு உண்டாகும் அபாயங்கள் காப்பவ்யாபத் எனப்படும்; அது விஷயமான தத்துவங்களும், அவ்வித அபாயங்களுக்குப் பரிஹார முறைகளும் விவரிக்கப்படும் அத்தியாயம் எனப் பொருள்.

2. வெளிப்புற சீதோபசாரம்—குளிர்ந்த பூச்சுகள், ஸ்நாநம் முதலியன; உட்புற சீதோபசாரம்—சீதளமான வஸ்துக்களைப் புஜிப்பது, பாநம் செய்வது முதலியன.

தோடும் கூட்டி உண்ணலாம். சோதநம் செய்வதைத் தவிர்த்து இரக்த பித்தத்திற்குக் கூறப்படும் விதிகளை அநுஸரித்து உபசாரங்களைச் செய்யலாம்.[1] மூன்று மாஸங்கள் பூர்த்தியாகாத கர்ப்பிணியையும்,[2] அதற்கு மேற்பட்ட மாஸங்களில்கூட ஆமதோஷத்துடன் கூடிய ஆர்த்தவம்[3] வெளிவரும் கர்ப்பிணியையும் விலக்கி, மற்றவருக்கே முற்கூறிய சிகித்ஸைகளைச் செய்யலாம். 1—6¼.

**கர்ப்பிணிக்கு ஆமதோஷமுள்ள ஆர்த்தவம் வெளியாகையில் செய்யும் பரிஹாரம்:**—அவ்வாறு ஆமதோஷத்துடன் கூடிய ஆர்த்தவம் வெளிப்படும்போது அடியிற் கூறப்படும் சிகித்ஸை ஹிதமாயிருக்கும்: ரூக்ஷகுணத்துடன் கூடியதும் சீதவீர்யமுள்ளதுமான சிகித்ஸை அநுகூலமானது; லங்கநம் செய்ய வேண்டும்; கோரைக் கிழங்கு, வெட்டிவேர், சீந்தில், பெருவாகை, கொத்து மல்லிவிதை, காஞ்சோறி, பர்ப்பாடகம், சந்தனம், அதிவிடயம், சிற்றுமுட்டி இவற்றை ஜலத்தில் சேர்த்துக் கஷாயமாகக் காய்ச்சி உட்கொள்ளலாம்; இச்சிகித்ஸையைச் செய்து கொண்டு வருகையில், திருணதாணியம் முதலியவற்றை[4] ப் பயறு முதலானவைகளின்[5] யூஷங்களோடு கலந்து புஜித்து வரவேண்டும். இவற்றால் ஆமதோஷம் பரிஹரிக்கப்பட்டதும், முன்போலவே ஸ்நிக்த்தம் முதலிய குணங்களையுடைய வஸ்துக்களை உபயோகித்து வரலாம். 7—8½.

**கர்ப்ப பாதத்தில் செய்யுமுபசார முறைகள்:**—கர்ப்பம் பதநமாய் விட்டால்,[6] அப்பொழுது செய்ய வேண்டிய பரிஹாரம் பின்வருமாறு: கர்ப்பாசயம் சுத்தியாவதற்காகவும், அப்பொழுது உண்டாகும் வேதனையை உணராமலிருப்பதற்காகவும் கூடுமானவரையில் மதுவை அருந்தச் செய்யலாம். பிறகு இலகு பஞ்சமூலத்தினால்[7] பக்குவம் செய்யப்பட்டு ரூக்ஷமாயுள்ள பேயாவைப் பருகக் கொ

---

1. சிகித்ஸாஸ்த்தாநத்தில் இரண்டாம் அத்தியாயத்திற் கூறப்போகிற இரக்தபித்த சிகித்ஸையில் இவ்விவரங்களைக் காணலாம்.

2. மூன்று மாஸம் பூர்த்தியாவதற்குள் ஆர்த்தவம் வெளியானால் சிகித்ஸை செய்தாலும் கர்ப்பம் நிலை நிறுத்தப்படுவது அஸாத்தியமாகையால், அதற்கு முன்னால் இச்சிகித்ஸைகள் பயன்படமாட்டாவெனக் கருத்து.

3. இங்கு ஆமதோஷம் என்றால், வெண்மையான பெரும்பாடு போன்ற தோஷம் குறிப்பிடப்படுகிறது.

4. சென்னெல், சாமை, கேழ்வரகு முதலிய தாணியங்கள் குறிப்பிடப்படுகின்றன.

5. பயறு முதலிய என்பதால் கடலை, காராமணி முதலியவைகளும் கிரஹிக்கப் படுகின்றன.

6. கர்ப்ப பதநம் அல்லது கர்ப்பபாதம்—மூன்றாவது மாஸத்திற்குப் பிறகு 8-வது மாஸத்திற்கு முன் வெளியாகும் அகாலப்பிரஸவம்.

7. இலகுபஞ்சமூலம்—84-ம் பக்கம் பார்க்க.

டுக்கவேண்டும். மதுபானம் செய்யாத ஸ்த்ரீ பஞ்சகோல கல்கத்தில்[1] பக்குவம் செய்த பேயாவை உட்கொள்வது நலம்; அவ்விதமே மஹாபஞ்சமூல கஷாயத்தில்[2] எள், உத்தாலகம் என்னும் ஒருவித நெல்[3], ஸாதாரண சம்பா அரிசி இவற்றைப் பக்குவம் செய்து புஜித்து வரலாம். இவ்வாறு இலகு குணமுள்ளதும், ஸ்நேஹமாவது உப்பாவது கலக்காமல் தீபனசக்தியுள்ள வஸ்துக்களுடன் கூடியதுமான பேயா முதலிய ஆஹார முறையே ஒரு மாஸ காலம் வரையில் கர்ப்பம் பதிதமான ஸ்த்ரீக்கு ஹிதமானதாம். கோளாறடைந்த வாதாதி தோஷங்கள், இரஸாதி தாதுக்கள், மற்றுமுள்ள துர்நீர்களின் கசிவுகள் இவற்றைச் சோஷணம் செய்வதற்கு இந்த முறை இங்ஙனம் விதிக்கப்பட்டதாகும். இதன் பிறகு பல்யமாகவும், ஜீவனீய குணமுள்ளவையாகவும், தீபனகுணமுள்ளவையுமான ஸ்நேஹங்களையும், ஆஹாரங்களையும், வஸ்திகர்மங்களையும் பிரயோகிக்கவேண்டும். 9—13.

**உபவிஷ்டக-நாகோதர கர்ப்பங்கள் :—**(1) கர்ப்பத்திற்கு நன்றாக பலம் உண்டாய் பருத்திருந்தும், ஆர்த்தவம் முதலியது கசிந்து கொண்டிருந்தால் கர்ப்பமானது நன்கு விருத்தியடையாமல் கருப்பையிலேயே ஒருவாறு துடித்துக் கொண்டிருக்கும். இவ்விதமான கர்ப்பத்தை **உபவிஷ்டகம்** என்பார்கள்; இதனால் வயிறு கர்ப்பிணிகளுக்குள்ள இயற்கைப்படி நன்றாகப் பருத்து வருவதில்லை. (2) மனத்துயரம், லங்கனம், ரூக்ஷமான ஆஹார விஹாரங்கள் இவை முதலியவற்றால், அல்லது யோனியிலிருந்து அதிகமாய் நீர்கள் கசிவதால் வாத தோஷம் பிரகோபமடைந்து விட, கர்ப்பம் சிறுத்துப் போய் சுஷ்கித்துவரும். முதலில் வயிறு இந்த நிலைமையில் பருத்துக் காணப்பட்டாலும், பிறகு தானே குறைந்துவிடும். வயிற்றிலுள்ள சிசுவின் சலனம் அல்லது துடிப்பு வெகு நீடித்த காலத்திற்கு ஒரு முறையே காணும். இவ்வித கர்ப்பத்திற்கு **நாகோதரம்** என்று பெயர். 14—16.

**உபவிஷ்டக-நாகோதரங்களுக்குச் சிகித்ஸை :—**உபவிஷ்டகம், நாகோதரம் என்கிற நிலைகளில் ப்ருஹ்மணமாகவும், வாதஹரமாகவும், மதுரமாகவுமுள்ள வஸ்துக்களைச் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட கிருதங்களாலும் பால்களாலும் தர்ப்பண சிகித்ஸை செய்ய வேண்டும்; மிருகங்களுடைய பக்குவ நிலைமையடையாத கருக்களையெடுத்து அவற்றையும் புஜிக்கச் செய்யலாம். இவற்றால் நன்றாகத் திருப்தியடைந்த பிறகு வண்டி முதலியவற்றிலும் இதர வாஹனங்களிலும் ஏற்றி கர்ப்பிணியின் உடம்பு குலுங்கும் வண்ணம் அவற்றை ஓட்டலாம்.—17, 17½.

1. பஞ்சகோலம்—84-ம் பக்கம் பார்க்க.
2. மஹாபஞ்சமூலம்—84-ம் பக்கம் பார்க்க.
3. உத்தாலகம்—58-ம் பக்கம் 7, 8 ச்லோகங்களின் மொழிபெயர்ப்பைப் பார்க்க.

**லீந கர்ப்பமும் அதன் சிகித்ஸையும்** :—துடிப்பு அல்லது எவ்வித அசைவுமற்றதான லீநம் என்கிற கர்ப்பவிகாரத்தில்[1] பருந்து, மத்ஸ்யம், அழுகுரல் பக்ஷி இவற்றின் மாம்ஸரஸத்தை வேண்டிய வளவு நெய் சேர்த்து உட்கொள்ளச் செய்யலாம்; அவ்விதமே உளுந்து, முள்ளங்கி இவற்றை ஜலத்தில் பக்குவம் செய்தெடுத்த இரஸத்தையும் நெய் கலந்து உட்கொள்ளக் கொடுக்கலாம். பில்வப் பிஞ்சு, எள், உளுந்து, ஸக்து என்னும் மாப்பண்டம் இவற்றை அனைத்தையுமோ தனித்தனியாகவோ பாலில் கலந்து உட்கொள்ளலாம். கொழுப்பை விருத்தி செய்யக்கூடிய மாம்ஸத்தையும் தேனையும் உபயோகிக்கலாம். இடுப்பில் தைலம் முதலியதைப் போட்டு நன்றாகத் தேய்த்து உறுகச் செய்யலாம். 18—19½.

**உபவிஷ்டக-நாகோதர - லீநகர்ப்பங்களுக்குப் பொதுவான சிகித்ஸை** :—(1) இவ்வாறு உபவிஷ்டக-நாகோதர-லீநங்களென்கிற கர்ப்பவிகாரங்கள் ஏதேனும் உண்டாயிருக்கையில் ஸ்த்ரீயை எப்பொழுதும் ஸந்தோஷப்படுத்தி வரவேண்டும்; இவ்வாறு செய்தால் கர்ப்பம் விருத்தியடையும். (2) முற்கூறிய சிகித்ஸைகளைச் செய்யாவிடில் உபவிஷ்டகாதி கர்ப்பங்கள் பல வருஷங்கள் வரையில் வயிற்றில் ஏதோ ஒருவாறு வளர்ந்துகொண்டு, வெகு கஷ்டப்பட்டு பிறந்தாலும் பிறக்கும்; பிறக்காமலே இருந்து விடவும் கூடும்.—20½.

**கர்ப்பிணிக்கு உண்டாகும் உதாவர்த்தம்** :—கர்ப்பிணிக்கு உதாவர்த்தம்[2] உண்டானால், அதை ஸ்நேஹங்களாலும், அந்தந்த நிலைகளுக்குத் தகுந்த ஸ்நேஹவஸ்திகளாலும் பரிஹரிக்கவேண்டும். இல்லையேல், அவ்வுதாவர்த்தமானது கர்ப்பம் கர்ப்பிணி ஆக இருவரையும் கொன்று விடும்.—21½.

**கருப்பையில் சிசு இறந்து விடுவதும் அதன் குறிகளும்** :—கருப்பையிலுள்ள சிசுவானது தோஷங்கள் மேன்மேலும் விருத்தியானதாலும், அபத்தியமான ஆஹாராதிகளை உபயோகிப்பதாலும், தைவச்செயலாலும் இறந்துவிடுமானால், ஸ்த்ரீயின் வயிறு குளிர்ச்சியதிகரித்ததாகவும், அசைவற்றதாகவும், பொருமலுள்ளதாகவும், அதிக வேதனையுடையதாகவும் ஆய்விடும்; சிசு துடிப்பதும் நின்று விடும்; நாவரட்சியும், உடல்வாட்டமும், புரட்டலும், தலைச்சுற்றலும் அதிகரிக்கும்; மூச்சுவிடுவதும் சிரமமாயிருக்கும்; கண்கள் குழி விழுந்து சோர்ந்துவிடும்; பிரஸவத்திற்கு இயல்பான வேதனைகளும் உண்டாகா. 22—23½.

---

1. லீநகர்ப்பம்—"வாதத்தினால் கர்ப்பமார்க்கம் முதலிய ஸ்ரோதோமார்க்கங்கள் அடைபட்டுப் போக, கருப்பையினுள் கர்ப்பம் விருத்தியாக முடியாமல் வயிற்றில் ஒட்டிக் கிடக்கும்; அது லீநகர்ப்பம் எனப்படும்." அஷ்டாங்க ஸங்கிரஹம்.

2. உதாவர்த்தம்—33-ம் பக்கம் பார்க்க.

இறந்த சிசுவை வெளிப்படுத்தும் உபாயங்கள் :—முதலில் இளஞ்சூடான ஜலத்தை அந்த ஸ்த்ரீயின் மேல் தெளிக்கவும்; பிறகு வெல்லம், மத்யத்தின் அடி வண்டல், உப்பு இவற்றை ஒன்றாகப் பிசைந்து யோனியின்மேல் லேபநம் செய்யலாம். மேலும், இலவம்பிசின், காசாம்பிசின், இவற்றை நன்றாக ஆட்டியெடுத்து நெய் கலந்து அடிக்கொரு முறையாக யோனியினுட் செலுத்தலாம்; அந்த நிலைமைக்குப் பரிஹாரமுண்டுபண்ணும் பிரபாவமுள்ள மந்திரங்களையும் பிரயோகிக்கலாம். இப்பரிஹார முறைகளைச் செய்தும் மூடகர்ப்பம்[1] வெளிவராவிட்டால், வைத்தியன் அதிகாரிகளுடைய உத்தரவைப் பெற்று, தன் கையிலும் யோனியிலும் இலவம்பிசின் நெய் இவற்றைத் தடவிக்கொண்டு, வெகு ஜாக்கிரதையாக, ஸாத்தியமானால் கையை உட் செலுத்தி கர்ப்பத்தை மெதுவாக வெளிப்படுத்திவிடலாம். 24—26½.

மூடகர்ப்பத்தை வெளிப்படுத்தும்முறை:—இயற்கைக்கு மாறாக முரண்பட்டு நிற்கும் சிசுவின் தேஹத்தை ஒழுங்காக நீட்டியும், தகுந்தவாறு மேற்புறமாக உயர்த்தித் தள்ளியும், அதை நாற்புறமும் அழுத்திக் குறுகச் செய்தும், குறுக்கு நெடுக்காகத் திருப்பி வசப்படுத்தியும், வெளியில் வருவதற்குத் தகுந்த நிலைமையில் நிறுத்தி, யோனி மார்க்கத்திற்கு நேர் வழியில் ருஜுவாக வந்திருக்கையில் அதை வெளியில் இழுத்து விடவேண்டும்.—27, 28.

விஷ்கம்பங்கள் என்னும் மூடகர் பங்கள் :—சிசுவின் உடல் வளைந்து அதன் கையாவது, காலாவது, தலையாவது அல்லது மூன்றுமாவது யோனியில் பிரவேசித்து வெளிவர முடியாமல் அடைபட்டிருந்தாலும், சிசுவின் தேஹம் வளைந்து அதன் ஒரு காலும் ஒரு கையும் யோனியில் பிரவேசித்து வெளிவர முயன்றாலும் அவ்விரண்டும் விஷ்கம்பங்கள் எனப் படுகின்றன.[2] இவ்விதமான மூடகர்ப்பங்களில் சிசுக்கள் சஸ்திரங்களால் அறுக்கப்பட்டே வெளிப்படுத்தவேண்டியவையாம்.—29, 29½.

விஷ்கம்ப கர்ப்பங்களைச் சேதிப்பதற்கான கருவிகள் :—விஷ்கம்பம் என்கிற நிலைமையில் செய்யவேண்டிய சஸ்திரசிகித்ஸையில் மண்டலாக்ரம்[3], அங்குலி சஸ்திரம்[4] என்னும் கருவிகளைப் பிரயோகிக்கவேண்டும். மிகக் கூர்மையான முனையையுடைய வ்ருத்திபத்

1. மூடகர்ப்பம்—கர்ப்பாசயத்தில் சிசுவானது இறந்துபோய்விட்டாலும், அல்லது உயிருடன் இருந்து இயற்கைக்கு மாறான நிலைமையில் ஒழுங்கீனமாக நின்றாலும் மூடகர்ப்பம் எனப்படுகிறது.

2. விஷ்கம்பம்—உழல்மரம்போல் குறுக்காகத் தடையுண்டுபண்ணுவதால் இப்பெயர் வந்தது.

3. மண்டலாக்ரம்—239-ம் பக்கம் பார்க்க.

4. அங்குலிசஸ்திரம்—241-ம் பக்கம் பார்க்க.

திரம்[1] என்கிற சஸ்திரத்தை யோனியில் பிரயோகிக்கக் கூடாது.—30½.

மூடகர்ப்பத்தில் சிசுவைச் சேதித்து வெளிப்படுத்தும் முறைகள் :—முதலில் நிபுணனான வைத்தியன் சிரஸ்ஸின் கபாலங்களைப் பிளந்து, வழியில் தடையுண்டு பண்ணாமல் சுத்தப்படுத்தவேண்டும். பிறகு சிசுவின் அக்குள், மார்பு, தவடை, முகவாய்க்கட்டை இவ்வவயவங்களில் ஏதேனும் ஒன்றைக் கெட்டியாக கர்ப்பசங்குவினால்[2] பற்றிக்கொண்டு இழுக்கவேண்டும். சிரஸ்ஸின் கபாலம் உடைக்கப்படாவிட்டால், கண்களின் மூலைகளிலும் கன்னங்களிலும் பற்றியிழுக்கலாம். தோள்கள் குறுக்காக மாட்டிக்கொண்டிருந்தால் கையை அறுத்து கர்ப்பத்தை வெளிப்படுத்தவேண்டும்; வாதத்தினால் சிசுவின் வயிறு பொருமிப் பருத்திருந்தால் அதன் வயிற்றைக் கீறி, குடல்களை வெளியில் இழுத்து, அதன் பிறகாவது சிசுவின் மற்ற அவயவங்களையும் வெளிப்படுத்தவேண்டும். சிசுவின் இடுப்புத் தடையுண்டுபண்ணால், அவ்விடத்திலுள்ள எலும்புகளை அவ்வாறே வெட்டியெடுத்துவிடவேண்டும். வாயுவின் கதிக்குத் தக்கபடி கர்ப்பத்தினுடைய எந்தெந்த அவயவம் கர்ப்பாசயத்தில் தடையாக நிற்கின்றதோ அந்தந்த அவயவத்தையும் துண்டு துண்டாக வெட்டி முற்றிலும் வெளிப்படுத்தி வெகு ஜாக்கிரதையாயிருந்து ஸ்த்ரீயை இரக்ஷிக்கவேண்டும். 31.—35.

பிரஸவத்தில் கர்ப்பம் பலவாறு திரும்புதல் :—ஒழுங்கீனமான வாயுவானது, பிரஸவகாலத்தில் கர்ப்பத்தை முறைகேடாய் அநேக விதமாகத் திரும்புமாறு செய்கின்றது. ஆகையால் அதில் விசேஷமான அறிவும் அநுபவமுமுள்ள வைத்தியன், அந்தந்த நிலைமைக்கு ஏற்றவாறு சிசுவை வெளிப்படுத்துவதற்கான சிகித்ஸையைச் செய்யவேண்டும்.—36.

உயிருள்ள சிசுவையும் உயிரிழந்ததையும் வெளிப்படுத்தல் :—(1) சிசு உயிருடன் இருந்தால், அதைச் சேதநம் செய்து வெளிப்படுத்த முயலக்கூடாது; அப்படிச் செய்தால், அது தன்னோடு கூட தாயாரையும் கொன்றுவிடக் கூடும். (2) ஆனால் உயிரிழந்த சிசுவை ஒரு க்ஷணங்கூட கருப்பையிலிருந்து வெளிப்படுத்தாமல் உபேக்ஷிக்கக்கூடாது.—37.

பிரஸவத்தில் அபாயக் குறிகள் :—யோனிமார்க்கம் மறைக்கப்படுதல், யோனி நெகிழ்ந்து வெளிவருதல், மக்கல்லம் என்னும் வியாதி,[3] சுவாஸரோகம் இவற்றால் பீடிக்கப்படுபவளும், துர்க்கந்தமாக ஏப்பம் விடுபவளும், மிகவும் குளிர்ந்துபோன தேஹமுடைய

1. வ்ருத்திபத்திரம்—239-ம் பக்கம் பார்க்க.
2. கர்ப்பசங்கு—236-ம் பக்கம் பார்க்க.
3. மக்கல்லம்—312-ம் பக்கம் மூலமும் டிப்பணியும் பார்க்க.

வளும், மூடகர்ப்ப முடையவளுமான ஸ்த்ரீக்கு பிரஸவம் பிராணாபாயமுண்டுபண்ணுவதாயிருக்கும்.—38.

**தடையுண்ட அபரா முதலியதை வெளிப்படுத்தல் முதலியது :—** *அப்பால் அபராவானது வெளிவராவிட்டால், அதை முற்கூறிய முறைப்படி வைத்தியன் வெளிப்படுத்துவானாக. இவ்வாறு கருப்பையில் ஒழுங்கீனமாய் சல்யம்போலிருந்த அபரா முதலியது[1] வெளிப்படுத்தப்பட்ட பிறகு, உஷ்ணஜலத்தை முகம் முதலியவற்றில் தெளிக்கவேண்டும். பிறகு தேஹத்தில் தைலம் தேய்த்து, யோனியில்* ஸ்நேஹபிசு *என்கிற தைலத்தில் நனைத்த துண்டுச் சீலையை வைக்கவேண்டும்; அதனால் மர்மஸ்தானம் மிருதுவாக ஆவதோடு, பிரஸவத்தினால் ஏற்பட்டிருந்த வலியும் நிவ்ருத்தியாகும்.—39, 40.*

**மூடகர்ப்பத்திற்கான ஔஷதப்பிரயோகங்கள்:—(1)** *குராசானி யோமம், அதிவிடயம், சிற்றரத்தை, காயம், ஏலம், பஞ்சகோலம்[2] இவற்றைச் சூர்ணம் செய்து ஸ்நேஹத்துடன் உட்கொள்ளக் கொடுக்கலாம்; அச்சரக்குகளையே கல்கமாகச் செய்தும் உபயோகிக்கலாம்; அவற்றை க்வாதமாகக் காய்ச்சியும் பருகச் செய்யலாம். (2) கடுகரோஹிணீ, அதிவிடயம், வட்டத்திருப்பி, தேக்கம்பட்டை, காயம், மூங்கிலுப்பு இவற்றையும் முன்போலவே சூர்ணமாகவாவது, கல்கமாகவாவது, க்வாதமாகவாவது பக்குவம் செய்து, கருப்பையிலிருந்து தோஷங்கள் வெளிப்படுவதற்காகவும், வேதனைகள் நிவ்ருத்தியாவதற்காகவும் உபயோகிக்கலாம். இவ்விதம் மூன்று நாட்கள் செய்து, பிறகு ஏழு நாட்கள் வரையில் கஷாயாதிகளைத் தவிர்த்து ஸ்நேஹத்தை மாத்திரம் உட்கொள்ளச் செய்யலாம்; மாலை நேரத்தில் ஏதேனும் அரிஷ்டத்தையாவது, நன்றாகப் பக்குவம் செய்துள்ள ஆஸவத்தையாவது பானம் செய்விக்கலாம். (3) காட்டுவாகைப்பூவின் க்வாதத்தில் நனைத்த பிசுவென்னும் சீலைகளை மர்மஸ்தானத்தில் வைக்கலாம். வேறு எந்த உபத்திரவங்கள்[3] உண்டானபோதிலும், அவற்றிற்கும் அதனதன் நிலைமைகளுக்குத் தகுந்தவாறு சிகித்ஸை செய்யவேண்டும்.* 41—44.

**மூடகர்ப்பத்தில் ஹிதமான உணவு முதலியவை.—** *பிறகு வாதஹரமான வஸ்துக்களால்[4] பக்குவம் செய்யப்பட்ட பாலை, போஜ*

---

1. *தேஹத்திற்குக் கெடுதி செய்யுமாறு உடலுக்குள் தங்கி நிற்கும் எவ்வஸ்துவும் சல்யம் என்று விவஹரிக்கப்படுமாகையால், ஒழுங்கீனமான நிலையிலுள்ள அபராவும் சிசுவுங்கூட சல்யங்களாகவே கருதப்படுகின்றன.*

2. பஞ்சகோலம்—84-ம் பக்கம் பார்க்க.

3. உபத்திரவம்—12-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

4. *வாதஹரமான வஸ்துக்கள்—பத்ரதார்வாதி கணத்தைச் சேர்ந்த சரக்குகள் (159-ம் பக்கம் பாரக்க) முதலியன.*

னத்தில் பத்து நாட்கள் உபயோகித்துவர வேண்டும்; அதற்குப் பிறகு மாம்ஸரஸம் பத்து நாட்கள் உபயோகிக்கத் தகுந்தது. அப்பால் அந்த ஸ்திரீ இலகுவாகவும், ஹிதமாகவும் உள்ள ஆஹாரங்களைச் சொற்பமாக உபயோகித்துக் கொண்டுவந்து, ஸ்வேத சிகித்ஸையைச் செய்துகொண்டு, அப்யங்கமும் பண்ணியவளாய், அடியிற் கூறப்படும் பலாதைலம் முதலிய ஸ்நேஹங்களை உட்கொள்ளலாம். நான்கு மாஸங்களுக்குமேல் அந்த ஸ்திரீ கிரமமாக இஷ்டமான அன்ன-பான-விஹாராதி ஸுகங்களைத் தடையின்றி அநுபவிக்கலாம்—45, 46.

பலாதைலம் பக்குவம் செய்யுமுறை:—சிற்றாமுட்டிவேரின் கஷாயம் ஆறு பங்கு; பால் ஆறு பங்கு; யவதானியம், இலந்தை, கொள் இவற்றினுடையவும், தசமூலங்களுடையவும்[1] கஷாயம் ஒரு பாகம்; தைலம் பதினொன்கில் ஒரு பங்கு; மேதா, மஹாமேதா, தேவதாரு, மஞ்ஜிஷ்டி, காகோலீ, க்ஷீரகாகோலீ, செஞ்சந்தனம், நன்னாரி, கோஷ்டம், தகரவேர், ஜீவகம், ருஷபகம், இந்துப்பு, கல்மரப்பட்டை, கருஞ்சந்தனம், வசம்பு, அகில், சாறணை, அமுக்கிறாங்கிழங்கு, தண்ணீர் விட்டாங்கிழங்கு, வெளுத்த இராளி, அதிமதுரம், த்ரிபலை, போளம், சதகுப்பி, நரிப்பயறு, ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவற்றை வெகு மிருதுவாக இடித்துக் கல்கமாகச் செய்து, முற்கூறிய தைலத்திற் சேர்த்து, சிறுகச் சிறுக எரித்தல் போட்டு, தைலத்தைப் பக்குவம் செய்யவும்.[2] இது எல்லா விதமான வாதரோகங்களையும் போக்கும்; ஸூதிகைகளுக்குப்,

1. தசமூலம் 84-வது பக்கத்திற் கூறப்பட்டுள்ள இலகு பஞ்சமூலங்களுடையவும் மஹா பஞ்சமூலங்களுடையவும் சேர்க்கை.

2. தைலம் 1-பங்கு, சிற்றாமுட்டியின் கஷாயம் 6-பங்கு, பால் 6-பங்கு, யவதானியம் முதலியவற்றின் கஷாயம் 1-பங்கு. ஆகவே தைலத்தைத் தவிர மற்றவை 13 பங்கும், தைலம் 1-பங்கும் (அதாவது 14-வது பங்கும்) ஆகிறது. இவ்விஷயத்தையே இன்னும் நன்கு விவரித்துக் கூறுகிறோம்:— தைலம் 16 பலம் காய்ச்ச வேண்டுமானால், 24-பலம் சிற்றாமுட்டி வேரை 384-பலம் ஜலத்தில் சேர்த்துக் கஷாயம் காய்ச்ச வேண்டும்; அக்கஷாயத்தை $\frac{1}{4}$ பங்காகச் சுண்டக் காய்ச்சி யெடுத்தால், 96-பலம் கஷாயம் தேறுகிறது. இவ்விதமே பாலும் 96-பலம் சேர்க்கவேண்டும். பிறகு யவதானியம் முதலியதை வகைக்கு 4-பலமும், அதில் 64-பலம் ஜலமும் சேர்த்து, அதை $\frac{1}{4}$ பங்காக வற்றும்படிக் காய்ச்சி யெடுக்க, அக்கஷாயம் 16-பலம் ஆகிறது. மேதா, மஹாமேதா முதலிய கல்கத்திரவ்யங்களில் ஒவ்வொன்றும் $\frac{1}{3}$ பலம் தேவையானது; இவற்றைச் சேர்த்து பலாதைலம் பக்குவம் செய்யப்படுகிறது. இதில் யவம், இலந்தங்கொட்டை, கொள் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலமும், தசமூலத்தில் ஒவ்வொரு சரக்கும் ஒவ்வொரு பலமும் ஆக மொத்தம் 13-பலம் சேர்க்கவேண்டியது முறை. "கல்பயேத் ஸத்ருசாந் பாகாந் ப்ரமாணம் யத்ர நோதிதம்" (எவ்விடத்தில் வஸ்துக்களுக்குக் குறிப்பிட்டு அளவுகள் சொல்லப்படவில்லையோ, அங்கு ஒவ்

பாலர்களுக்கும் வெகு உபயோகமானது; மர்மரோகங்களிலும், அஸ்த்தி ஸம்பந்தமான கோளாறுகளிலும், க்ஷதகாஸத்துடன் கூடிய க்ஷயரோகத்திலும் ஹிதமானது; மேலும் ஜ்வரம், குன்மம், கிரஹாவேசம்[1], உன்மாதம், மூத்திராகாதம், அந்த்ர விருத்தி யென்னும் குடலிறக்கம் இவற்றையும் நிவ்ருத்தி செய்ய வல்லது; யோனிரோகங்களையும், க்ஷயரோகங்களையும் தீர்க்க வல்லது; இது தன்வந்தரியினால் கொண்டாடப்பட்டதாகும். 47—52.

**பிரஸவத்தால் இறந்தவளுடைய வயிற்றிலிருந்து சிசுவை யெடுத்தல்:**—பிரஸவ ஸமயத்தில், கர்ப்பிணி திடீரென்று இறந்துவிட்டு, அப்பொழுது தாயின் வஸ்தி யென்னும் மூத்திரப்பைக்கு நேராக வயிறு மாத்திரம் துடிக்குமானால், உடனே தாமதம் செய்யாமல் அவ்விடத்தைச் சஸ்திரத்தினால் கீண்டு சிசுவை வெளிப்படுத்தி விடவேண்டும்.—53.

**கர்ப்பஸ்ராவத்தில் ஏழு மாஸங்களுக்கும் ஏழு வகையான ஔஷதங்கள்:**—முதல் மாஸம் முதற்கொண்டு ஏழாவது மாஸம் வரையில் எப்பொழுதாவது கர்ப்பஸ்ராவம் எனப்படும் கர்ப்பம் கரைந்து வெளிப்படுதல் நேரிடுமானால், அடியிற் கூறப்படும் ஔஷத யோகங்களை முறையே ஏழு மாஸங்களிலும் பிரயோகிக்கவேண்டும்:—(1) அதிமதுரம், வாலுளுவை, க்ஷீரகாகோலீ, தேவதாரு இவற்றின் கூட்டு முதல்யோகமாம். (2) கல்லுருவி, கறுப்பு எள், மஞ்ஜிஷ்டி, தண்ணீர்விட்டாங்கிழங்கு இவற்றின் கூட்டு இரண்டாவது யோகம். (3) சிந்திற்கொடி, க்ஷீரகாகோலீ, ஞாழல், கருநெய்தல் இவற்றின் கூட்டு மூன்றாவது யோகமாகும். (4) அறுகம்புல், நன்னாரி, சிற்றரத்தை, ஓரிலைத் தாமரை, அதிமதுரம் இவற்றின் கூட்டு நான்காவது யோகமாகும். (5) கண்டங்கத்திரி, வெள்ளைக் கண்டங்கத்திரி, குமிழன், பாலுள்ள மரங்களின் மொட்டுகளுடைய பட்டை, நெய் இது ஐந்தாவது யோகமாம். (6) சிறுமல்லி, சிற்றுமுட்டி, முருங்கை, நெரிஞ்சி, சிறு குமிழன் இவை ஆறாவது யோக

வொரு பதார்த்தமும் ஓரே அளவாகப் பிரயோகிக்கப்படும்) என்கிற பிரமாணத்தைக்கொண்டு, தசமூலம் இவ்வளவு என்று குறிப்பிடப்படவில்லையாகையால், மற்றச் சரக்குகள் எவ்வளவு இந்த யோகத்தில் சேர்க்கப்படுகின்றனவோ அதே அளவில் தசமூலத்தில் அடங்கிய ஒவ்வொரு வஸ்துவும் பிரயோகிக்கப்படவேண்டும்.

1. கிரஹாவேசம்—பேய்ப்பிடித்தல் என்று வழங்கப்படும் விகாரங்கள் பெரும்பாலும் மனதைப்பற்றிய வியாதிகளாகவே இருக்குமாதலால், அவற்றில் வாதஸம்பந்தமான சேஷ்டைகள் விசேஷமாய் உண்டாவது இயல்பு; ஆகவே வாதஹரமான பலாதைலம் கிரஹாவேசத்திற்குத் தகுந்தது என்று கூறப்பட்டது.

மாகும். (7) சவுட்டுக்கோரைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, திராக்ஷை, சிறு கோரைக்கிழங்கு, அதிமதுரம், சர்க்கரை இவை ஏழாவது யோகமாகும். இவற்றிற்குப் பாலை அநுபானமாய் உட்கொள்ளவேண்டும். 54—57½.

எட்டு-ஒன்பது-பத்து இம்மாஸங்களில் உபயோகிக்கக் கூடிய சரக்குகள் :—(1) விளா, பில்வம், கண்டங்கத்திரி, பேய்ப்புடல், கரும்பு, வெள்ளைக் கண்டங்கத்திரி இவற்றின் வேர்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை எட்டாவது மாஸத்தில் உட்கொள்ளச் செய்யலாம். (2) நன்னாரி, அறுகம்புல், க்ஷீரகாகோலீ, அதிமதுரம் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலை ஒன்பதாவது மாஸத்திற் பருகக் கொடுக்கலாம். (3) க்ஷீரகாகோலியையாவது, அதிமதுரம், சுக்கு, தேவதாரு இவற்றையாவது சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பத்தாவது மாஸத்தில் உட்கொள்ளச் செய்யலாம். 58—60.

கர்ப்பமல்லாததை கர்ப்பமென்று பிரமித்தல் :—கோபமடைந்த வாதத்தினால், ஸ்திரீக்கு ஆர்த்தவம் என்னும் மாதவிடாயில் வரும் இரத்தமானது வெளிப்படாமல் தேஹத்திலேயே தங்கியிருந்து விடுமானால், அதை அறியாதவர்கள் கர்ப்பம் எனக் கூறுவர். ஏனெனில் அப்பொழுது கர்ப்பமுண்டாயிருப்பதற்கான குறிகள் ஏற்பட்டிருக்கும். காரம், உஷ்ணவீர்யம், தீக்ஷ்ணம் இக்குணங்களையுடைய வஸ்துக்களை யுபயோகிப்பதால் மறுபடியும் ஸாதாரண ஆர்த்தவஸம்பந்தமான இரத்தமே வெளிப்படுமாயின், மூடர்கள் கர்ப்பத்தை பூதங்கள் அபஹரித்து விட்டதாகக் கூறுவர். எவ்வுருவம் பூதங்களால் அபஹரிக்கப் படுவதாகக் கூறுகின்றனரோ, அவ்வித உருவமே காணப்படாமலிருக்க, அதை பூதங்கள் அபஹரிப்பதென்பதற்கு ஆதாரமேயில்லை. அல்லாமலும், திவ்ய வஸ்த்தையற்றவையான அவ்வித பூதங்கள் ஓஜஸ் என்னும் உத்தம தாதுவைப் பக்ஷிக்குந்தன்மை யுள்ளவையாதலால், அவை சிசுவை அபஹரித்து மாதாவைமட்டும் உபேக்ஷித்து விட்டுவிட வேண்டிய அவசியமில்லையே [1].—61, 62.

---

1. சிசுவுக்கு 9-வது மாஸத்திற்கு முன்பு ஓஜஸ் என்னும் தாது உற்பத்தியாவதில்லை யாதலால், ஓஜஸ் அற்ற சிசுவை அப்பூதங்கள் அபஹரிக்க வேண்டிய அவசியமில்லை யெனப்படுகிறது.

## மூன்றும் அத்தியாயம்.

### அங்கவிபாக சாரீரம்.

அப்பால் அங்க விபாகசாரீரம்[1] என்கிற அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

**ஷடங்கங்களும் பிரத்யங்கங்களும்.**—(1) சரீரமானது சிரஸ், உடல், இரண்டு கைகள், இரண்டு கால்கள் என்று ஸங்கிரஹமாய் ஆறு அங்கங்களாகப் பிரிக்கப்படும். (2) அவ்விதம் பிரிக்கப்பட்ட அங்கங்களுக்கு நேத்திரம், இருதயம் முதலியவை பிரத்யங்கங்களாக ஏற்பட்டிருக்கின்றன.[2]—1.

**பஞ்சபூதங்களும் அவற்றின் குணங்களும் :**—ஆகாயம், வாயு, அக்னி, ஜலம், பூமி என்னும் இவ்வைந்து பூதங்களுக்கும் முறையே சப்தம், பரிசம், ரூபம், இரஸம், கந்தம் இவை இயற்கைக் குணங்களாகும்[3]. இவற்றுள் முதலிற் கூறப்பட்ட பூதத்திலிருந்து ஐந்தாவது பூதம் வரையிலும் ஒவ்வொன்றிலும் கிரமமாக ஒவ்வொரு குணம் அதிகமாகச் சேர்ந்திருக்கும்.[4]—2.

**தேஹம் பஞ்ச பூத மயமானது :**—(1) அந்த பஞ்ச பூதங்களுள் ஆகாயத்திலிருந்து இத்தேஹத்திலுள்ள எல்லா த்வாரங்களும், செவியும், சப்தத்தைக் கிரஹிக்கும் சக்தியும், சூன்யமாகத் தோற்றும் பாகங்களும் உண்டாகின்றன. (2) வாயுவிலிருந்து பரிச உணர்ச்சியும், சர்மமும், ச்வாஸ வேலையும் உற்பத்தியாகின்றன. (3) அக்னியிலிருந்து நேத்திரமும், ரூபக்கிரஹண சக்தியும், பசநம் என்னும் ஜீர்ணம் அல்லது எரித்துப் பக்குவம் செய்யும் வேலையும் ஏற்படுகின்றன. (4) ஜலத்திலிருந்து நாக்கும், சுவையறியும் சக்தியும், திரவப்பொருட்களும் உண்டாகின்றன. (5) ப்ருதிவியிலிருந்து

---

1. சரீரம் ஆறு அங்கங்களுடையதென்றும், அநேகம் பிரத்யங்கங்களுடையதென்றும், இரஸ ரக்தாதி தாதுக்கள் அடங்கியதென்றும், தத்துவங்களைக் குறிப்பிட்டு விஷய விவரணம் செய்யும் அத்தியாயம் "அங்கவிபாக சாரீரம்" எனப் படுகிறது.

2. வெளி அங்கங்களில் மிகப் பிரதானமானது கண். உட்புற அங்கங்களில் பிரதானமானது இருதயம்; ஆகையால் இவ்விரண்டும் குறிக்கப்பட்டன.

3. சரீரம் பஞ்சபூதங்களால் ஆக்கப்பட்டதென்று அடுத்தாற்போல் குறிப்பிடப்போவதால், பஞ்சபூதங்களுடைய விஷயமும் சிறிது விவரிக்கப் படுகிறது.

4. மேன்மேலும் ஒவ்வொரு பூதத்திலும் ஒவ்வொரு குணம் விருத்தியாவது என்றால்; ஆகாயத்திற்கு சப்தகுணம் ஒன்றுதான்; வாயுவுக்கு சப்தமும் பரிசமும் குணமாம்; அக்னிக்கு சப்தம்-பரிசம்-ரூபம்-இவை குணங்களாகும்; ஜலத்திற்கு சப்த-பரிச-ரூப-ரஸங்கள் குணங்கள்; பூமிக்கு ஐந்து குணங்களும் உண்டு.

நாசியும், வாஸனையறியும் உணர்ச்சியும், எலும்பும் உற்பத்தியாகின்றன.—3, 3½.

தேஹத்தில் மாதா-பிதாக்களுடையவும் ஜீவாத்மாவினுடையவும் அம்சங்கள் :—இத்தேஹத்திலுள்ள (1) இரத்தம், மாம்ஸம், மஜ்ஜை, குதம் முதலிய மிருதுவான அம்சமெல்லாம் மாதாவின் தேஹாம்சங்களிலிருந்து உண்டானவையாம். (2) சுக்ரதாது, தமனி என்னும் இரத்தக்குழாய் முதலியது, எலும்பு, உரோமம் முதலிய கடினமான பாகங்கள் யாவும் பிதாவின் அம்சங்களாம். (3) மனது, இந்த்ரியங்கள், பற்பல வகையான ஜீவராசிகளின் வயிற்றிற் பிறப்பது என்னும் இவை ஜீவாத்மாவின் ஸம்பந்தத்தினால் ஸம்பவிப்பவையாம்.—4, 5.

ஸாத்மியத்தினாலும் இரஸத்தினாலும் ஏற்படும் அம்சங்கள் :—(1) ஆயுள், ஆரோக்கியம், சுறுசுறுப்புடன் கார்யங்களில் பிரவ்ருத்தி, காந்தி, தேஹமனோபலம் இவை ஸாத்மியத்தினால்[1] ஏற்படுபவை.[2] (2) தேஹத்திலுள்ள எல்லா அவயவங்களின் உற்பத்தியும், ஜீவிதகாலம் நடைபெறுதலும், சரீரத்தின் அபிவிருத்தியும், சஞ்சலத்தன்மையின்றி ஒழுங்கான நிலைமையில் இருத்தலும் ஆகியவை ஆஹாரரஸத்தினால் ஏற்படுபவையாம்.[3]—6.

தேஹத்தில் ஸத்வ-இரஜஸ்-தமஸ்ஸுக்களால் உண்டாகும் அம்சங்கள் :—(1) தேஹம்-வாக்-மனது இவற்றில் சுத்தமாயிருத்தல், ஆஸ்திகனாயிருத்தல்,[4] சிறந்த தர்மங்களில் விருப்பம், புத்தி இவை ஸத்வகுணத்தின் அம்சங்களாம். (2) மிதமிஞ்சி எப்பொழுதும் பேசுதல், கர்வம், கோபம், டம்பம், த்வேஷம் இவை இரஜோகுணத்தினால் உண்டான அம்சங்களாகும். (3) பயம், அஞ்ஞானம், நித்திரை, சோம்பல், துயரம் இவை தமோகுணத்தின் அம்சங்களாம்.—7, 7½.

---

1. ஸாத்மியம்—வழக்கத்தில் தேஹத்தற்கு அநுகூலமாகப்போன பதார்த்தமும் கார்யமும் ஸாத்மியம் எனப்படுகிறது. [ஸாத்மியம் என்பதால் வியாதிஸாத்மியம், தேசஸாத்மியம், தேஹஸாத்மியம் என்கிற மூன்றும் கிரஹிக்கபடுமாயினும், பிரந்தவுடனே தேஹத்தின் இயற்கை நிலைமையே நிரூபிக்கப்படுவது அவசியமாதலால், இயற்கைக்கு விரோதமான வியாதி ஸாத்மியத்தைத் தவிர்த்து மற்ற இரண்டு ஸாத்மியங்கள் மட்டுங் இங்கு குறிக்கப்பட்டன வென்றறிக.]

2. மேற்கூறியவை திருஷ்டாந்தத்திற்காகவாதலால், ஸாத்மியஜம் என்பதனால் இந்த்ரியங்கள் தெளிவுடன் இருத்தலும், ஸ்வரம், நிறம், வீர்யம், மனக்களிப்பு முதலியவையும் கிரஹிக்கப்படுகின்றனவென்று அறிக.

3. ஆஹாரமில்லாவிட்டால் பஞ்சபூதாம்சமான தேஹம் அழிந்து விடுமாகையால், ஆஹார ரஸத்தினாலும் தேஹம் உற்பத்தி விருத்திகளைப் பெறுகிறதென்று கூறப்படுகிறது.

4. ஆஸ்திக்யம்—கடவுளும், லோகாந்தரமும்; ஆத்மாவும் உண்டென்கிற கொள்கை.

சர்மங்கள் :—தேஹம் மேற்கூறியவாறு பஞ்சபூதமயமானது. அத்தேஹத்தில் தாதுக்களுடைய சூட்டினால் பக்குவம் செய்யப் படுகிற இரத்தத்திலிருந்து ஏழு வகையான சர்மங்கள்,[1] பாலி லிருந்து ஆடையைப்போல்[2] உண்டாகின்றன.—8½.

கலைகள் :—தாதுக்களுடைய ஆசயங்கள் என்னும் பைபோன்ற பாகங்களின் உட்புறத்தில் இயற்கையிற் சேர்ந்துள்ள ஒரு வகையான கசிவு நீரானது அந்தந்த ஸ்தாநத்து வெப்பத்தினால் பக்குவம் செய்யப்பட்டும், ஒருவகையான கபமென்ன, நரம்புகளைப் போன்ற வஸ்துவென்ன, சவ்வுப்போர்வையென்ன இவற்றால் மறைக்கப்பட்டுமுள்ள பாகம் கலையென்று வழங்கப்படும்; அது மரங்களின் மத்தியில் ஏற்பட்டுள்ள ஸாரமென்னும் வைரத்திற்கு ஒப்பானது. அந்தக் கலைகள் ஏழாம்.[3]—9½.

ஆசயங்கள் :—இரத்தாசயம், கபாசயம், ஆமாசயம், பித்தாசயம், பக்வாசயம், வாதாசயம், மூத்ராசயம் என்று ஏழுவித ஆசயங்கள் உண்டு.[4] மேலும் ஸ்திரீகளுக்கு கர்ப்பாசயம் என்கிற எட்டாவது ஆசயம் ஒன்று உண்டு; அது பித்தாசய-பக்வாசயங்களுக்கு இடையில் அமைந்துள்ளது.—10, 11.

கோஷ்டாங்கங்கள் :—முற்கூறிய ஏழு ஆசயங்களிலும் கோஷ்டாங்கங்கள் எனப்படும் அடியிற் கூறப்படும் அவயவங்கள் அடங்கியிருக்கின்றன; அவையாவன :—இருதயம், க்லோமா, புப்புஸம்,

---

1. ஏழு சர்மங்கள்—(1) முதல் சர்மம் 1/18 நெல் அளவு உடையது; அதற்கு அவபாஸிநீ எனப் பெயர். (2) லோஹிதா என்னும் இரண்டாவது சர்மம் நெல்லில் 1/16 பங்கு பருமனுள்ளது. (3) ச்வேதா யென்கிற மூன்றாவது சர்மம் 1/12 நெல்லளவு உள்ளது. (4) தாம்ரா யென்கிற நான்காவது சர்மம் ⅛ நெல்லளவு உள்ளது. (5) வேதிநீ யென்னும் ஐந்தாவது சர்மம் ½ நெல்லளவுள்ளது. (6) ரோஹிணீ யென்கிற ஆறாவது சர்மம் 1 நெல்லளவுடையது. (7) மாம்ஸதரா என்கிற ஏழாவது சர்மமானது இரண்டு நெல்லளவுள்ளது.

2. காய்ச்சப்படுகிற பாலில் ஆடைபடிவதுபோலவே, தேஹோற்பத்தி ஸமயத்தில் இரத்தத்திலிருந்து சர்மங்கள் உண்டாகின்றன எனக் கருத்து.

3. மாம்ஸதரா, இரக்ததரா, மேதோதரா, ச்லேஷ்மதரா, புரீஷதரா, பித்ததரா, சுக்ரதரா என்று கலைகள் ஏழாம்.

4. இரத்தத்திற்கு ஆதாரமானது இரத்தாசயம் எனப்படுகிறது; இவ்விதமே கபாசயம் முதலியவற்றிற்கும் அறிக. இரத்தாசயமென்பது இருதயம்; கபாசயம் என்பது புப்புஸங்கள் என்னும் நுரையீரல்கள்; ஆமாசயம் என்பது இரைப்பை; பித்தாசயம் என்பது பித்தப்பை; பக்வாசயம் என்பது இரைப்பைக்குக் கீழுள்ள சிறு குடல்; வாதாசயம் என்பது குதத்திற்கு மேற்பட்டுள்ள அபாநஸ்தாநம்; மூத்ராசயம் என்பது வஸ்தியென்னும் மூத்திரப்பை. ஆசயங்களே கோஷ்டங்கள் என்றும் கூறப்படும்.

யக்ருத், ப்லீஹம், உந்துகம், வ்ருக்கங்கள், நாபி, சிசு, குடல், வஸ்தி என்பவைகளாம். [1]—12.

உயிருக்கு ஆதாரமான பத்து ஸ்த்தாநங்கள்:—சிரஸ், நாக்கின் பந்தநபாகம், தொண்டை, இரத்தம், இருதயம், நாபி, வஸ்தியென்னும் மூத்திராவயவம், சுக்ரம், ஓஜஸ் என்னும் தாதுவிசேஷம், குதம் இந்த பத்து ஸ்த்தாநங்களும் ஜீவனுக்கு ஆதாரமான அவயவங்களாம்.—13.

ஜால கண்டராதிகள்:—ஜாலங்கள் [2] பதினாறு; கண்டரங்கள் [3] பதினாறு; கூர்ச்சங்கள் [4] ஆறு; ஸீவநீகள் [5] ஏழு; இந்த ஸீவநிகளில் ஆண்குறியில் ஒன்றும், நாக்கில் ஒன்றும், சிரஸ்ஸில் ஐந்தும் அமைந்திருக்கின்றன; இந்த ஸ்த்தாநங்களில் சஸ்திரங்களைப் பிரயோகிக்

1. கோஷ்டாங்கங்கள்—இரத்தம் முதலியவை தங்கியிருப்பதற்கு ஆதாரமாய் உட்புறம் குழியுடன்கூடிய அவயவங்கள் கோஷ்டங்கள் எனப்படும்; அவையே இருதயம் முதலியவையாம். ஹ்ருதயம் அல்லது இருதயம்; க்லோமா—கணையம்; புப்புஸம்-நுரையீரல்; யக்ருத்—கல்லீரல்; ப்லீஹம்—மண்ணீரல்; உந்துகம்—குடலின் ஒரு பாகமான மலாசயம் அல்லது பெருங்குடல் எனப்படுகின்றது; வ்ருக்கங்கள்—மூத்திரக்குண்டிக்காய்கள்; நாபியென்பதால் நாபி நாடீயென்னும் தொப்புட்கொடியும், சிசு என்பதால் கர்ப்பாசயத்தில் அடங்கிய சிசுவும் குறிக்கப்படுவதாய் அறிக; குடல் என்பதால் சிறு குடல் பெருங்குடல் எல்லாம் கிரஹிக்கப்படுகின்றன; வஸ்தி—மூத்திரப்பை.

2. மாம்ஸஜாலங்கள், ஸிராஜாலங்கள், ஸ்நாயுஜாலங்கள், அஸ்த்தி ஜாலங்கள் என்கிற நான்கு வகையான ஜாலங்களுள் ஒவ்வொன்றும் நான்கு ஆகையால் பதினாறு ஜாலங்கள் ஆகும். அந்த ஜாலங்கள் மணிக்கட்டிலும், குதிகாலிலும் சேர்ந்து ஒன்றோடொன்று சிக்கிக்கொண்டிருக்கின்றன. [ஜாலம் என்றால் வலையெனப் பொருள்; வலையைப்போல் மணிக்கட்டு முதலியவிடங்களில் ஒன்றோடொன்று பின்னிக்கொண்டிருப்பதால் இப்பெயர் வந்தது.]

3. கண்டரங்கள்—மாம்ஸபேசிகளை அஸ்த்திகளோடு பிணைப்பதற்கு உபயோகமான பந்தநவஸ்துக்கள். அவற்றுள் பாதங்களில் நான்கு; கைகளிலும், தொண்டையிலும், பிருஷ்ட பாகத்திலும் தனித் தனியே நான்கு; ஆகப் பதினாறு. கைகால்களிலுள்ள இக்கண்டரங்களின் முனைகளே கிரமக்கிரமமாக நகங்களாக மாறி முளைக்கின்றன என்று ஸுச்ருதர் கூறுகிறார்.

4. கூர்ச்சங்கள்—ஒவ்வொரு கையிலும் ஒவ்வொன்று, ஒவ்வொரு காலிலும் ஒவ்வொன்று, கழுத்தில் ஒன்று, ஆண்குறியில் ஒன்று ஆக ஆறு கூர்ச்சங்கள். [மாம்ஸபேசிகள் அநேகம் ஒரு கற்றையைப்போல் கூடி கைகளின் முனையிலும், பாதங்களின் முனையிலும் குச்சுகளைப்போல் அமைந்து இருக்கும்; கழுத்திலும், ஆண்குறியிலுங்கூட அவ்விதமே யிருக்கும்; ஆகவே அவ்வித குச்சுகள் இங்கு கூர்ச்சங்கள் எனப்படுகின்றன.]

5. ஸீவநீ—சிரஸ்ஸில் ஒவ்வொரு கபாலாஸ்த்தியும் ஒன்றோடொன்று சேருமிடங்களிலும், நாக்கின் அடிப்புறத்து மத்தியபாகத்திலும், ஆண் குறியின் அடிப்புறத்திலும் தைக்கப்பட்டவைபோல் காணப்படும் இரேகைகள்.

கக் கூடாது. மாம்ஸரஜ்ஜுக்கள் [1] நான்கு; அஸ்த்தி ஸங்காதங்கள் [2] பதினான்கு; ஸீமந்தங்கள் [3] பதினெட்டு; அஸ்த்திகளும் பற்களும் நகங்களும் சேர்ந்து மொத்தத்தில் முன்னூற்று அறுபது எண்ணிக்கையுள்ளன. [4]—14, 15.

அஸ்த்தி ஸந்திகளின் ஸங்க்யை :—(1) தன்வந்தரியானவர் முன்னூறு அஸ்த்திகளே உண்டென்று கூறுகிறார் [5]. (2) இருநூற்றுப் பத்து ஸந்திகள் என்னும் பூட்டுகள் உண்டென்றும் அவர் கூறு

1, மாம்ஸரஜ்ஜுக்கள்—முதுகிலும் மற்றப் பாகங்களிலுமுள்ள எல்லா மாம்ஸ பேசிகளுக்கும் பலமுண்டு பண்ணுவதற்காக முள்ளந்தண்டிக்கு இருபுறமும் உட்பக்கமாகவும் வெளிப்பக்கமாகவும் அமைந்துள்ள மிகப் பெரிய கயிறுகள்போன்ற தசைநார்கள்.

2. அஸ்த்தி ஸங்காதங்கள்—ஒவ்வொரு கணுக்கால், முழங்கால், வங்க்ஷணஸந்தியென்னும் துடையிடுக்கு இவற்றிலும், ஒவ்வொரு மணிக்கட்டு, முழங்கை, தோள் இவற்றிலும், பிடரியிலும், சிரஸ்ஸிலுமாகப் பதினான்கு ஸங்காதங்கள். அநேகம் அஸ்த்திகள் ஓரிடத்திற் கூட்டமாகச் சேருவதால் ஸங்காதம் எனப் பெயர் வந்தது.

3. எங்கெங்கு அஸ்த்தி ஸங்காதங்கள் உண்டோ அங்கெல்லாம், அவை சேருமிடங்களுக்கு இடையில் சில ரேகைகள் உண்டு; அவை ஸீமந்தம் எனப்படும். [அஸ்த்தி ஸங்காதம் 14-ஆக இருப்பதால், ஸீமந்தங்களும் 14-என்பது ஸுச்ருதருடைய அபிப்பிராயம்.]

4. தற்காலத்திய வைத்தியர்களின் அபிப்பிராயப்படி 210 எலும்புகளே தேஹத்தில் உண்டு. ஆகிலும் பற்கள், முருந்துகள் முதலியவற்றையும் கூட்டினால் 300 அஸ்த்திகளாகும். ஸுச்ருதருடைய அபிப்பிராயப்படி அஸ்த்திகள் 300; ஸுச்ருதருடைய அபிப்பிராயமே தன்வந்தரியின் அபிப்பிராயமுமாகும்.

5. முன்னூறு அஸ்த்திகள்—காலில்நான்கு விரல்களில் ஒவ்வொன்றிலும் 3 எலும்புகள். பெருவிரலில் இரண்டு எலும்புகள். கணுக்காலில் 7 எலும்புகள். ஜங்காயென்னும் காலில் இரண்டு. முழங்காலில் ஒன்று. துடையில் ஒன்று. பாதத்தில் 5. ஆக ஒரு காலில் 30 எலும்புகள். இவ்விதமே மற்றொரு காலில் 30 எலும்புகள். ஒவ்வொரு கையிலும் 30. ஆகக் கை கால்களில் மொத்தம் 120 எலும்புகள் உண்டு. இடுப்பில் ச்ரோணீயஸ்த்தி ஒவ்வொன்றும் 3; ஆக அவை ஆறு. த்ரிகாஸ்த்தியென்பது 10. வம்சாஸ்த்திகள் என்னும் முள்ளந்தண்டெலும்புகள் 33. தோளில் 4-எலும்புகள். விலா எலும்புகள் 24. மார்பு எலும்பு ஒன்று. விலா எலும்பு முனைகளிலுள்ள தருணாஸ்த்திகள் என்னும் முருந்தெலும்புகள் 18. நாக்குக்குக் கீழே ஒரு எலும்பு. முகத்தில் 14 எலும்புகள். மண்டையெலும்புகள் 9. மார்பு எலும்பு 5 பிரிவுகள் உள்ளதாகக் காணப்படுவதால் அவை 5 என்றும், நாசியில் 3 தருணாஸ்த்திகள் உண்டென்றும் சில ஆயுர்வேத நூல்கள் சொல்லுகின்றன. அப்பொழுது இது வரையில் மொத்தம் 248 எலும்புகள் ஆயின. பற்கள் 32. நகங்கள் 20. ஆக மொத்தம் ஆயுர்வேத நூல்களின் இலக்கப்படி 300 அஸ்த்திகள் விவரிக்கப்பட்டன.

கிறார். (3) ஆத்ரேயர் இரண்டாயிரம் ஸந்திகள் இருப்பதாகக் கூறுகிறார் [1].—16½.

ஸ்நாயு-பேசிகளின் ஸங்க்யை.—ஸ்நாயுக்கள் தொள்ளாயிரம் [2]; மாம்ஸபேசிகள் என்னும் தசைநார்கள் புருஷர்களுக்கு ஐந்நூறு [3]; ஸ்த்ரீகளுக்கு ஐந்நூறு மாம்ஸ பேசிகளோடு யோனியிலும் ஸ்தநங்களிலும் ஆக இருபது மாம்ஸபேசிகள் அதிகமாய் ஏற்பட்டிருக்கின்றன.—17½.

ஸிரைகளின் ஆரம்ப பாகம். :—பத்து மூல ஸிரைகள் இருதயத்திலிருந்து ஆரம்பித்து, உடம்பெங்கும் பரவி, இரஸரூபமான ஓஜஸ் என்னும் தாதுப்பொருளை அகில தேஹத்திலும் பரப்புகின்றன. ஸிரைகளின் மற்றப் பாகங்களுக்குண்டான அசைவானது

1. இருநூற்றுப்பத்து ஸந்திகள் என்பது எலும்புப்பூட்டுகளை மாத்திரம் குறிப்பிடும். இரண்டாயிரம் ஸந்திகள் என்றால், ஸ்நாயு, பேசீ முதலியவற்றின் ஸந்திபாகங்களும் குறிக்கப்படுகின்றனவென்று அறிக.

2. தொள்ளாயிரம் ஸ்நாயுக்கள்:—ஒரு காலின் ஒவ்வொரு விரலிலும் 6 ஸ்நாயுக்கள்; ஆக அவை 30. பாதத்தின் மேற்புறத்திலும் அடிப்புறத்திலுமாக 20. கணுக்காலில் 10. ஜங்கையென்னும் காலில் 30, முழங்காலில் 10, அடையில் 40, அடையிடுக்கில் 10, ஆக ஒரு காலில் 150. இவ்விதமே மற்றொரு காலிலும் கைகளிலும் இருக்கின்றன. ஆக மொத்தம் கை-கால்களில் இருப்பவை 600. இடுப்பில் 40; பீஜம், குடல்கள், ஆண்குறி, மூத்திரப்பை இவற்றில் 20; முதுகில் 80; விலாப்புறங்களில் 60; அக்குள்களில் 4; மார்பில் 18; தோளில் 8; இவ்வாறு உடலில் 230 ஸ்நாயுக்களாம். பிடரியில் ஒவ்வொரு பக்கத்திலுமாக 4; நேத்திரத்தில் 2; தவடையில் 2; உதட்டில் ஒவ்வொன்றிலும் 2; தோளில் 30; முகவாய்க்கட்டையில் 4; நாக்கில் 5; பற்களின் அடிப்புறத்தில் 12; தலையில் 6. இவ்விதம் ஸ்நாயுக்கள் 900.

3. ஐந்நூறு பேசிகள்—காலில் ஒவ்வொரு விரலிலும் 3 வீதம் 5 விரல்களிலும் 15. பாதத்தின் அடியிலும் மேற்புறத்திலும் தனித்தனியே 10; ஆக அவை 20; கணுக்காலில் 10, காலில் 30, முழங்காலில் 5, அடையில் 20. இவ்வாறு ஒரு காலில் மட்டும் 100 பேசிகள் உண்டு. இவ்விதமே மற்றொரு காலிலும், இரண்டு கைகளிலுமாக மொத்தம் 400 பேசிகள் ஆகின்றன. ஆண்குறியில் ஒரு பேசி; ஸீவனீயென்னும் குறியுள்ள இடத்தில் ஒரு பேசி; பீஜங்களில் இரண்டு; பிருஷ்டபாகத்தில் 10; குதத்தில் 3; மூத்திரப்பையின் மேல் 2; குடலில் 4; நாபியில் 1; இருதயத்தில் 1; இரைப்பையில் 6; கல்லீரல், மண்ணீரல், உந்துகம் இவற்றில் 4; முதுகில் 10; தோள்பக்கத்தில் 4; இவ்விதம் உடலில் 60 பேசிகள் இருக்கின்றன. கழுத்தில் 10 பேசிகள்; கன்னத்தில் 8; முகவாய்க்கட்டையின் பக்கத்தில் 8; தவடையில் ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொன்று; நாக்கில் 1; தலையில் 1; தொண்டையில் 2; நெற்றியில் 1; உட்புறத்தவடையில் ஒவ்வொன்று; உதடுகளில் 2; காதுகளில் 2; நாசியில் 2; ஸ்த்ரீகளுக்கு ஒவ்வொரு ஸ்தநத்திலும் 5; கருப்பையில் 10. ஆக 500பேசிகள்.

இந்த மூலஸிரைகளை ஆதாரமாயுடையது[1]. இந்த மூலஸிரைகள், இலைகளில் அநேகம் நாடிநரம்புகள் படர்ந்திருப்பதுபோல் அடியிற் பருத்து, மேலே போகப் போகக் கிரமமாகச் சிறுத்து, மிக ஸூக்ஷ்மமான முனைகளை யுடையவைகளாய், அநேகம் கிளைகளாகவும் பிரிந்துவிடுகின்றன; அவ்விதம் எழுநூறு கிளைகளாகப் பிரிந்திருப்பதாய் எண்ணப்படுகிறது. 18—19½.

**கை-கால்களில் உள்ள ஸிரைகள்** :—அவற்றுள் கை-கால்களில் ஒவ்வொன்றிலும் நூறு ஸிரைகள் உண்டு. அவைகளில் ஜாலந்தராவென்னும் ஸிரை ஒன்று; இந்த ஜாலந்தரா[2] என்னும் ஸிரையிலும், ஆழமானப் பிரதேசத்தில் ஓடும் வேறு மூன்று ஸிரைகளிலும் இரக்த மோக்ஷணம் முதலியது செய்வதற்காகச் சஸ்திரப் பிரயோகம் செய்யக்கூடாது.—20½.

**ச்ரோணி ஸிரைகள்** :—ச்ரோணியென்னும் இடுப்பில் முப்பத்திரண்டு ஸிரைகள் உண்டு. அவற்றுள் துடையிடுக்கின் இரண்டு பாகத்திலுமுள்ள இரண்டிரண்டு ஸிரைகளும், கடீகதருணம்[3] என்னும் மர்மஸ்தானங்களிலுள்ள இரண்டிரண்டு ஸிரைகளும் சஸ்திரப்பிரயோகத்திற்குத் தகுந்தவையல்ல.—21½.

**விலாப்பக்கத்து ஸிரைகள்** :—விலாப்பக்கங்களில் பதினாறு ஸிரைகள் உண்டு. அவற்றுள் ஒவ்வொரு பக்கத்திலும் மேல் நோக்கிச் செல்லும் இரண்டு ஸிரைகளையும் சஸ்திரப்பிரயோகஸமயத்தில் விலக்கிவிடவேண்டும்.—22.

**முதுகிலுள்ள ஸிரைகள்** :—முதுகுப் பக்கத்தில், இருபத்தினாலு ஸிரைகள் இருக்கின்றன. முள்ளந்தண்டிக்கு இரு புறங்களிலும் மேல் நோக்கிச் செல்லும் இரண்டிரண்டு ஸிரைகள் சஸ்திரத்தினால் பரிசிக்கத்தகாதனவாம்.—23.

**வயிற்று ஸிரைகள்** :—முதுகில் இருப்பதுபோலவே வயிற்றிலும் இருபத்திநான்கு ஸிரைகள் இருக்கின்றன. அவற்றுள் ஆண்குறிக்கு மேலே வயிற்றில் உரோமரேகைக்கு இரு புறங்களிலும் உள்ள இரண்டிரண்டு ஸிரைகளில் சஸ்திரத்தைப் பிரயோகிக்கக் கூடாது.—24.

**மார்பிலுள்ள ஸிரைகளும் அவற்றில் சஸ்திரப்பிரயோகத்திற்குத் தகாதவையும்** :—மார்பில் நாற்பது ஸிரைகள் உண்டு; அவற்றுள்

---

1. சுத்தாரத்தம் ஓடுகிற இரத்தக்குழாய்களுக்குள்ள தன்மை இதனால் விளங்குகிறது. தமநிகளுடைய பர்யாயநாமமாக இங்கே ஸிரை வியவஹரிக்கப்படுகிறது. 35-ம் ச்லோக மொழிப்பெயர்ப்பையும் பார்க்க.

2. ஜாலந்தரா—அநேகம் ஸிரைகளின் கூட்டம் ஒன்று கூடியிருப்பதால் இப்பெயர் வந்தது.

3. கடீகதருணம்—முள்ளந்தண்டுக்கு இரண்டு பக்கங்களிலும் இடுப்பிலுள்ள எலும்பின் சில பாகங்கள்.

ஸ்தநரோஹிதம்[1], ஸ்தநமூலம்[2], இருதயம் இந்த மர்மஸ்த்தாநங்களில் ஒவ்வொன்றிலும் தனித் தனியே இரண்டிரண்டு ஸிரைகளும், இரண்டு அபஸ்தம்பங்களில்[3] இரண்டு ஸிரைகளும், இரண்டு அபலாபங்களில்[4] இரண்டு ஸிரைகளும் ஆகப் பதினான்கு ஸிரைகள் மார்பில் சஸ்திரசிகித்ஸைக்குத் தகாதவையாம்.—25, 25½.

கழுத்திலுள்ள ஸிரைகள் :—கழுத்திலும முதுகில் இருப்பதைப் போலவே இருபத்திநான்கு ஸிரைகள் உண்டு. அவற்றுள் நீலா இரண்டு,[5] மந்யா இரண்டு,[6] க்ருகாடிகா இரண்டு,[7] விதுரா இரண்டு,[8] மாத்ருகைகள் எட்டு,[9] ஆகப் பதினாறு ஸிரைகளில் சஸ்திரம் பிரயோகிக்கக் கூடாது.—26½.

முகவாய்க்கட்டை ஸிரைகள் :—முகவாய்க்கட்டையின் இருபுறங்களிலும் பதினாறு ஸிரைகள் உண்டு. அவற்றுள் முகவாய்க்கட்டையின் பூட்டுகளைக் கட்டுவதற்கான இரண்டு ஸிரைகளில் சஸ்திரம் பிரயோகிக்கக் கூடாது.—27.

நாக்கிலுள்ள ஸிரைகள் :—நாக்கிலும் பதினாறு ஸிரைகள் உண்டு. அவற்றுள் சுவை யுணரும்பொருட்டு நாக்கின் அடியில் அமைந்துள்ள இரண்டு ஸிரைகளையும், பேசும் வேலையை நடத்துபவையான இரண்டு ஸிரைகளையும் சஸ்திரப் பிரயோகத்தினின்றும் விலக்கிவிட வேண்டும்.—27¾.

நாசியின் ஸிரைகள் :—நாசியில் இருபத்திநான்கு ஸிரைகள் இருக்கின்றன. அவற்றுள் மணம் அறிவதற்கான இரண்டு ஸிரைகளிலும், தாடையிலுள்ள ஒரு ஸிரையிலும் சஸ்திரம் பிரயோகிக்கக் கூடாது.—28, 28½.

---

1. ஸ்தநரோஹிதம்—முலைக்காம்பின் சுற்றுப் பக்கங்களிலுள்ள மர்மங்கள்.

2. ஸ்தநமூலம்—ஸ்தநங்களின் அடிப்பாகத்திலுள்ள மர்மஸ்த்தாநங்கள்.

3. அபஸ்தம்பம்—மார்பினுள் வலது பக்கத்தில் ஒன்றும், இடது பக்கத்தில் ஒன்றும் ஆக இரண்டு மர்மஸ்த்தாநங்கள் எனப்படும் ச்வாஸக்காற்றை உட்செலுத்தி வெளிப்படுத்தும் இரண்டு நாடிகள். இவற்றை புப்புஸ சிகரங்கள் என்பார் சிலர்.

4. அபலாபம்—தோள்பட்டைக்குக் கீழே விலாப்பக்கங்களில் இருபுறத்திலும் உள்ள மர்மங்கள்.

5. நீலா—கண்ட நாடியென்னும் கண்ட நாளத்திற்கு இரு புறத்திலுமுள்ள கருநிறமான இரண்டு இரத்தக் குழாய்கள்.

6. மந்யா—நீலாவுக்குப் பக்கத்திலுள்ள செந்நிற இரத்தக் குழாய்கள்.

7. க்ருகாடிகா—சிரக்கபாலமும், கழுத்திலுள்ள முள்ளந்தண்டு எலும்பும் கூடுகிற பாகம்.

8. விதுரா—செவிகளுக்குப் பின்புறமாய் சிறிது கீழேயுள்ள மர்மஸ்த்தாநங்கள்.

9. மாத்ருகா—கழுத்தில் இரண்டு பார்சங்களிலுமுள்ள மர்மஸ்த்தாநங்கள்.

**கண்களிலுள்ள ஸிரைகள் :—** கண்களில் ஐம்பத்தாறு ஸிரைகள் உண்டு. அவற்றுள் கண்களை மூடித் திறப்பதற்கு உபயோகமான நான்கு ஸிரைகளிலும், கடைக்கண்களிலுள்ள இரண்டு ஸிரைகளிலும் ஆக ஆறு ஸிரைகளில் சஸ்திரப் பிரயோகம் செய்யக்கூடாது.—29½.

**நெற்றியிலுள்ள ஸிரைகள் :—** நெற்றியில் கண்களுக்கும் நாசிக்கும் ஸம்பந்தப்பட்டுள்ள ஸிரைகள் அறுபது. அவற்றுள் ஸ்த்தபநீயென்னும்[1] மர்மஸ்த்தானத்திலுள்ள ஒரு ஸிரையையும், ஆவர்த்தங்கள்[2] என்கிற மர்மங்களிலுள்ள இரண்டு ஸிரைகளையும், செவிப் பக்கத்து நான்கு ஸிரைகளையும் ஆக ஏழு ஸிரைகளைச் சஸ்திரப் பிரயோகத்தினின்றும் விலக்கிவிடவும்.—30, 30¾.

**காதுகளிலுள்ள ஸிரைகள் :—** காதுகளில் பதினாறு ஸிரைகள் உண்டு. அவற்றுள் ஓசையறிவிக்கும் இரண்டு ஸிரைகளும், சங்கமென்கிற கன்னங்களிலுள்ள இரண்டு ஸிரைகளும், அச்செவிகளிலேயே கன்னம் காது இவற்றின் ஸந்திகளைப்பற்றியுள்ள வேறிரண்டு ஸிரைகளும் சஸ்திரத்தினால் பரிஹரிக்கத்தக்கவை.—31, 31¾.

**சிரஸ்ஸின் ஸிரைகள் :—** சிரஸ்ஸில் பன்னிரண்டு ஸிரைகளாம். அவற்றுள் உத்க்ஷேபம், ஸீமந்தம், அதிபதி[3] என்னும் மர்மஸ்த்தானங்களின் ஸம்பந்தமான ஒவ்வொரு ஸிரையும் சஸ்திரசிகித்ஸை செய்யாமல் பரிஹரிக்கத் தகுந்ததாகும்.—32½

**பொதுவாகச் சஸ்திரப் பிரயோகத்திற்குத் தகாத ஸிரைகள் :—** சஸ்திரப் பிரயோகம் செய்யத் தகாதவைகளைப் பகுத்தறிவதன் பொருட்டு இவ்வாறு ஒவ்வொரு அவயவத்திலுமுள்ள ஸிரைகள் விவரிக்கப்பட்டன. சரீரத்திலுள்ள ஸிரைகளில் மொத்தம் தொண்ணூற்றெட்டு ஸிரைகளில் சஸ்திரம் பிரயோகிக்கக் கூடாதென்று இதுவரையில் கூறப்பட்டது. மேலும், சஸ்திரசிகித்ஸைக்குத் தகாத ஸிரைகளோடு கலந்திருப்பவையும், கிரந்திகளைப் போல் கரடுமுரடாயிருப்பவையும், மிகவும் சிறியவையும், ஸந்திகளில் இருப்பவையுமான இதர ஸிரைகளுங்கூட சஸ்திரப் பிரயோகத்திற்குத் தகாதனவாம்.—33, 34.

**நான்குவித ஸிரைகள் :—** (1) முற்கூறப்பட்ட எழுநூறு ஸிரைகளுள் நூற்றெழுபத்தைந்து ஸிரைகள் **வாததோஷம் கலந்த இரத்**தத்தைச் செலுத்துகின்றன. (2) வேறு நூற்றெழுபத்தைந்து ஸிரைகள் **பித்தம் கலந்த இரத்தத்தையும்**, (3) வேறு நூற்றெழுபத்தைந்து ஸிரைகள் **கபம் கலந்த இரத்தத்தையும்** செலுத்துகின்றன. (4)

---

1. ஸ்த்தபநீ—இரண்டு புருவங்களுக்கும் நடுவிலுள்ள ஒரு மர்மம்.
2. ஆவர்த்தம்—புருவங்களுக்கு மேல் நெற்றியிலுள்ள மர்மங்கள்.
3. உத்க்ஷேபம், ஸீமந்தம், அதிபதி (அதிபம்) இவற்றைப்பற்றி அடுத்த 4-ம் அத்தியாயம் பார்க்க.

பிரசமுள்ள நாற்றமுடைத்திலும் தோஷங்களுடைய கலப்பில்லாத சுத்தமான இரத்தம் ஓடுகின்றது. தோஷங்கள் இவ்வாறு தேஹத்தில் பரவியிருந்தவைகளாய் உடலைப் போஷிக்கச் செய்கின்றன. இத்தோஷங்களும் இரத்தமும் இயற்கைக்கு மாறான நிலைமையடைந்தால் தேஹத்தை வருந்தச் செய்கின்றன. அவற்றுள் (1) இரத்தத்தில் வாததோஷ ஸம்பந்தமுள்ள ஸிரைகள் அருவாறு கருநிறங்கலந்த சிவப்பாகவும், கனத்திற் சிறியவையாகவும், க்ஷணத்திற்கு க்ஷணம் இரத்தம் நிரம்பி உடனே இரத்தம் வற்றியவையாகவும், விசேஷமாக நெகிழ்ந்தோடுபவையாகவும் இருக்கின்றன. (2) பித்ததோஷங் கலந்த இரத்தத்துடன்கூடிய ஸிரைகள் பரிசிப்பதற்குச் சூடாகவும், வேகமாய் இரத்தத்தைச் செலுத்துபவையாகவும், கருநிறங்கலந்த பொன் வர்ணமுள்ளவையாகவும் இருக்கும். (3) கபதோஷம் கலந்த இரத்தத்துடன்கூடிய ஸிரைகள் வெண்மையாகவும், ஸ்நிக்த்தங்களாகவும், அதிக வேகமில்லாதவையாகவும், குளிர்ந்தவையாகவும் இருக்கும். (4) மேற்குறிப்பிட்ட குறிகளில் அநேகம் ஒன்றோடொன்று கலந்திருக்குமானால், அவை இரண்டு விதமான அல்லது மூன்றுவிதமான தோஷங்கள் ஒன்றோடொன்று கலந்திருப்பதாய் அறிக. 35—37.

சுத்தரத்த ஸிரைகள் :—சுத்தரத்தம் ஓடுவதற்கான ஸிரைகள் ஸமமாகவும், கெட்டியாகவும், ஸ்நிக்த்தங்களாகவும், செந்நிறமாகவும் இருக்கும்; அவை ஆழமான பிரதேசங்களில் ஓடும். [1]—38.

தமநிகள் :—இருபத்திநாலு தமநிகள் நாபியில் [2] தொடுக்கப்பட்டிருக்கிறன [3]. சக்கரத்தின் நாபி யென்னும் மத்தியபாகம் ஆரக்கால்களால் சூழப்பட்டிருப்பதுபோல் தமநிகளால் நாபியும் சூழப்பட்டிருக்கிறது. இத்தமநிகள் தேஹத்தில் மேலேயும்,

---

1. இங்கு வாக்படாசாரியர் சுத்த இரத்தம், காரிரத்தம், வாயு இவைகள் முறையே ஓடுவதற்கான செவ்விரத்தக் குழாய்களையும், காரிரத்தக் குழாய்களையும், நாடிகள் என்கிற நரம்புகளையும் ஒருமிக்க ஸிரைகள் என்றே கூறுகிறார். ஆனால் சுத்தரத்தம் ஓடும் குழாய்கள் தமநிகள் என்றும், கருப்பு ரத்தம் ஓடும் குழாய்கள் ஸிரைகள் என்றும், வெண்மையான கபம்போன்ற திரவம் ஓடும் குழாய்கள் இரஸாயனிகள் என்றும், வாயு அல்லது வாதம் ஓடுவதற்கான கோடிகள் நாடி அல்லது நரம்புகள் என்றும் பிரித்துக் கூறுவது முறை.

2. நாபியென்றால் இங்கு தொப்புளல்ல ; மூலஸ்த்தானம் எனப் பொருள் ; ஆகவே தமநிகள் என்கிற இரத்தக்குழாய் ஆரம்பிக்கும் மூலஸ்த்தானமே இங்கு நாபியெனப் படுவதாய் அறிக.

3. தமநிகள்—இரத்தத்தை உடலெங்கும் இரைத்துப் பரப்புவதால் சுத்த இரத்தக்குழாய்கள் இப்பெயரால் அழைக்கப்படுகின்றன. இதற்கு முன் அடுத்தாற்போல் கலப்பில்லாத சுத்த இரத்தமோடும் குழாய்களைக் கூறியதும், அடுத்தாற்போல தமநிகளின் விஷயம் குறிக்கப்படுவதால், இந்த தமநிகளை சுத்த இரத்தக்குழாய்கள் என்று அபிப்பிராயப்படுவதாய் அறிக.

*கிழேயும், குறுக்கிலும் எங்கும் வியாபித்து உடலனைத்தையும் போஷிக்கின்றன.*—39, 39½.

**வெளிப்புற ஸ்ரோதஸ்ஸுகள்:**—*நாசித்வாரங்கள் இரண்டு, இரண்டு செவிகள், கண்கள், குதம், முகம், ஆண்குறி அல்லது யோனியென்பவை ஒன்பது* ஸ்ரோதஸ்ஸுகள் *எனப்படும். ஸ்தநங்கள் இரண்டும், ஆர்த்தவம் வெளிவரும் மார்க்கம் ஒன்றும் ஆக ஸ்திரீகளுக்கு வேறு மூன்று ஸ்ரோதஸ்ஸுகளும் உண்டு.*—40½

**உட்புற ஸ்ரோதஸ்ஸுகள் :**—*சரீரத்திற்குள் உயிருக்கு மூலாதாரமாகப் பதின்மூன்று ஸ்ரோதஸ்ஸுகள் இருக்கின்றனவாம். அந்த ஸ்ரோதஸ்ஸுகள் பிராணனுக்கு ஆதாரமான ஸத்துவங்களையும், இரஸம் முதலிய தாதுக்களையும், மலங்களையும், மற்றும் நீர்ப்பொருளையும், அன்னத்தையும் செலுத்துவதற்கு உபயோகமாயிருக்கின்றன.*[1]—41½.

**ஸ்ரோதஸ்ஸுகள் ரோகாரோக்கியங்களுக்கு ஆதாரமாயிருத்தல்**—*அஹிதமான ஆஹார விஹாரங்களால் அந்த ஸ்ரோதஸ்ஸுகள் கெட்டுப்போய் ரோகங்களை யுண்டுபண்ணும்; அவையே நன்கு சுத்தமாக இருந்தால் ஆரோக்கியத்திற்கு ஆதாரமாகும்.*—42.

**ஸ்ரோதஸ்ஸுகளின் பலவித உருவங்கள் :**—*ஸ்ரோதஸ்ஸுகள், அவ்வவற்றில் ஓடும் தாதுப்பொருட்களுக்குச் சமமான நிறங்களுடையவையாகவும், திரண்டுருண்டு பருத்தவையாகவும், சிலவிடங்களில் மெல்லியவையாகவும், சில விடங்களில் நீண்டவையாகவும், வேறு சில விடங்களில் கொடிகளைப்போல் கப்பும் கிளையுமாகப் படர்ந்தவையாகவும் உருவத்தில் பலவாறாகக் காணப்படும்.*—43.

**ஆஹாரவிஹாரங்களால் ஸ்ரோதஸ்ஸுகள் தூஷிக்கப்படுதல் :**—(1) *எந்த ஆஹாரமும்*[2] *எந்த விஹாரமும்*[3] *தோஷங்களுடைய குணங்களுக்கு ஏற்ற குணமுள்ளதாயிருக்கின்றதோ, தாதுக்களு*

---

1. **பிராணவஹமான** *ஸ்ரோதஸ்ஸுகளுக்கு ஹ்ருதயம் மூலம்;* **மஹாஸ்ரோதஸ்** *என்னும் பெரிய மூல தமனியும் அதற்கு மூலாதாரமாம். வேறு நீர்ப்பொருள் ஓடும் ஸ்ரோதஸ்ஸுகளுக்கு (உமிழ்நீர் முதலியன) தாலுமூலத்திலுள்ள கிரந்திகள் மூலாதாரமாம்.* **அன்ன வாஹியான** *ஸ்ரோதஸ்ஸுக்கு ஆமாசயமும் மற்றக் குடல்களும் மூலாதாரமாம்.* **இரஸ வாஹியான** *ஸ்ரோதஸ்ஸுகளுக்கு ஹ்ருதயமும் வயிற்றிலுள்ள பெரிய கபவாஹிகளான குழாய்களும் மூலாதாரங்களாம். இரத்தத்திலுள்ள முக்கியமான சோணிதாம்சம் உண்டாவதற்கு மூலாதாரம்* **ப்லீஹம்** *என்னும் மண்ணீரலாம்; ஆனால் அக்குழாய்களுக்கு ஹ்ருதயம் மூலம்.* **மாம்ஸவாஹம், மேதோவஹம், அஸ்த்திவஹம், மஜ்ஜாவஹம்** *என்கிற ஸ்ரோதஸ்ஸுகளும் ஒவ்வொரு கிரந்தத்தில் கூறப்பட்டுள்ளன.* **சுக்ரவஹமான** *ஸ்ரோதஸ்ஸுகளுக்கு பீஜம் மூலஸ்த்தானம்.*

2. *ஆஹாரம் என்பதால் அன்ன பானாதிகள் குறிக்கப்படுகின்றன.*

3. *விஹாரம் என்பதால் தேஹம், வாக், மனது இவற்றின் ஸம்பந்தமான எல்லாக் காரியங்களும் குறிக்கப்படுகின்றன.*

டைய குணங்களுக்கு எதிரிடையான குணமுள்ளதாகவும் ஆகுமோ, அவ்வித ஆஹாரமும் விஹாரமும் ஸ்ரோதஸ்ஸுகளைத் தூஷிப்பிக்கும் தன்மையுடையனவாம்[1]. (2) எந்தெந்த ஸ்ரோதஸ்ஸிலிருந்து எந்தெந்த பதார்த்தம் வெளிவருவது வழக்கமோ[2] அதிலிருந்து அந்தந்த பதார்த்தம் மிதமின்றி வெளியாவதும், அல்லது வெளிவராமல் கட்டப்படுவதும், அல்லது இயற்கையில் வெளிவரக் கூடிய மார்க்கத்தை விட்டு வேறு மார்க்கத்தில் செல்லுவதும், ஸிரைகள் கிரந்திகளைப்போல் கரடு கட்டுவதும் ஸ்ரோதஸ்ஸுகள் கோளாறடைந்திருப்பதன் குறிகளாம்.—44, 45.

உட்புற ஸ்ரோதஸ்ஸுகளின் உபயோகம் :—தாமரைக் கொடிகளிலிருப்பதுபோல, ஸ்ரோதஸ்ஸுகளுடைய த்வாரங்கள்[2] ஸூக்ஷ்மமாகவும், தேஹத்தில் வெகு தூரம் நீண்டு பரவியும் இருக்கின்றன. இந்த ஸ்ரோதஸ்ஸுகளின் மூலமாகவே இரஸம்[3] தேஹத்திற் செழித்துப் பரவுகின்றது.—46.

ஸ்ரோதஸ்ஸுகள் அபிகாதப்பட்டால் உண்டாகும் தீமையும் பரிஹாரமும் :—(1) ஸ்ரோதஸ்ஸுகள் சல்யம் முதலியவற்றால் தாக்கப்படுமானால் மூர்ச்சை, நடுக்கல், பொருமல், வாந்தி, ஜ்வரம், பிதற்றல், வயிற்றுவலி, மலமூத்திரங்கள் கட்டப்படுதல் என்னும் இக்கோளாறுகள் உண்டாகும்; மரணமாவது ஸம்பவிக்கும். (2) ஆகையினால் வைத்தியன் ஸ்ரோதஸ்ஸில் தாக்குண்ட பிணியாளியினிடம் அவனுக்குண்டாயுள்ள நிலைமை பிராணாபாயமுண்டுபண்ணக்கூடியதென்றும், ஆகவே சிகித்஁ஸை செய்கையில் திடீரென்று பிராணாபாயம் நேரிடக்கூடுமென்றும் வெளிப்படையாகச் சொல்லி, அதன் பிறகே ஜாக்கிரதையாகச் சிகித்ஸை செய்ய முயலவேண்டும்; அப்பொழுது ஊக்கத்துடன் சல்யத்தை வெளிப்படுத்தி, அபிகாதத்தினால் அப்பொழுதே நேர்ந்த விரணத்திற்கு எவ்வித உபசாரம் செய்யப்படுமோ அவ்வித உபசாரத்தையே இதற்கும் பிறகு செய்யவேண்டும்.[4]—47, 48.

1. குதத்திலிருந்து வெளிவருவது மலம்; வஸ்தி த்வாரத்திலிருந்து வெளிவருவது மூத்திரம்; தாலு மூலங்களிலிருந்து வெளிவருவது உமிழ்நீர்; என்று இவ்வாறு மற்ற ஸ்ரோதஸ்ஸுகளுக்கும் கவனித்துக்கொள்க.

2. ஸ்ரோதஸ்ஸுகள் என்பதால் இங்கு உட்புற ஸ்ரோதஸ்ஸுகள் குறிக்கப்படுகின்றன. ஆங்கிலத்தில் லாக்டியல்ஸ் என்று கூறப்படுகிற குடலைச் சேர்ந்த இரஸாயனிகள் என்னும் ஸூக்ஷ்மமான குழாய்களும், லிம்பாடிக் வெஸல்ஸ் எனகிற பெரிய இரஸாயனிகளும் முக்கியமாய் இங்கு உட்புற ஸ்ரோதஸ்ஸுகளாகக் கொள்ளப்படுவதாய் அறிக.

3. இரஸம் குடலில் நன்றாகப் பக்குவமாய், இரத்தமாக மாறுவதற்கு ஆயத்தமாயுள்ள உணவின் மிகவும் ஸாரமான வெண்ணிறத் திரவம்

4. ஸூத்ரஸ்த்தாநத்தில் ஸத்யோவ்ரண ப்ரதிஷேதம் என்கிற அத்தியாயம் பார்க்க.

**பாசகபித்தம்-முதலியவற்றின் சுரூபங்களும் உபயோகங்களும்:—** (1) உணவைப் பக்குவம் செய்வது பாசக பித்தமென்று முன்னமே கூறப்பட்டிருக்கிறது [1]. தோஷங்களுடையவும், தாதுக்களுடையவும், மலம் முதலியவற்றினுடையவும் இயற்கைச் சூடு எதுவோ அதுவே ஆஹாரத்தைப் பக்குவம் செய்யும் பித்தம் என்று ஆத்ரேயருடைய அபிப்பிராயமாகும். (2) அப்பாசக பித்தத்திற்கு ஆதாரமாயிருப்பது கிரஹணீயென்னும் அவயவமாம். ஆமாசயத்தில் பக்குவமாகிற வரையில் உணவு சிறு குடலுக்குள் போகாதபடி அதைப் பிடித்துவைக்குந் தன்மையுடையதாகையால் இதற்கு கிரஹணீ யென்கிற பெயர் வந்தது. (3) தன்வந்தரியின் கொள்கைப்படி இக்கிரஹணியே [2] **பித்ததராகலா** என்று வழங்கப்படுகிறது. இந்த கிரஹணீயென்னும் அவயவம், ஆயுள் விருத்திக்காகவும், ஆரோக்கியாபிவிருத்திக்காகவும், வீர்யவிருத்தியின் பொருட்டும், ஓஜோதாது [3] விருத்தியாவதற்கும், பஞ்சபூதங்களின் அம்சங்கள் அபிவிருத்தியாவதற்கும், பாசகபித்தம் செழிப்பதற்கும் பக்வாசயத்தின் வாயிலில், உணவு நெகிழ்ந்தோடவேண்டிய வழியைத் தடுத்துக்கொண்டு நிற்கின்றது. கிரஹணியானது பலமுள்ளதாயிருந்தால், உட்கொள்ளப்பட்ட உணவை ஆமாசயத்திலேயே தடுத்து, அவ்விடத்தில் ஏற்றவளவு பக்குவமாகச் செய்து, பிறகு கீழே சிறு குடலில் அவ்வுணவைப் பிரவேசிக்கச் செய்கின்றது. அக்கிரஹணியே துர்ப்பலமாயிருந்தால், தனது இயற்கை வேலையைச் செய்ய வகையற்றதாய், உணவை ஆமாசயத்திற் பக்குவமாகாமலே சிறு குடலில் பிரவேசிக்குமாறு விட்டுவிடுகின்றது [4]. ஜாடராக்னியானது கிரஹணிக்கு வலிவையுண்டு பண்ணக்கூடியது; கிரஹணியும் ஜாடராக்னிக்கு வலிவைக் கொடுக்கின்றது. ஆகையினால் ஜாடராக்னி கோளாறடையுமானால், கிரஹணியும் விகாரப்பட்டு ரோகத்தை உண்டு பண்ணக்கூடியதாகும். எந்த உணவானது தேஹத்திலுள்ள ஸப்ததாதுக்களையும், ஓஜஸ்ஸையும் செழிக்கச் செய்து, தேஹபலம் தேஹநிறம் முதலியவற்றையும் விருத்தி செய்யக்கூடியதோ, அவ்வுணவு பக்குவமாவதற்கு ஜாடராக்னி முக்கிய ஹேதுவாயிருக்கின்றது; ஏனெனில் உணவானது பக்குவமாகாவிட்டால், அதிலிருந்து இரஸம் முதலிய தாதுக்கள் உண்டாகமாட்டாவல்லவா? 49—54.

1. பாசக பித்தத்தைப்பற்றியும், பொதுவில் பித்தத்தைப்பற்றியும் விவரங்கள் 130-ம் பக்கம் பார்க்க.

2. கிரஹணீ—ஆங்கிலத்தில் பைலோரஸ் என்றும், டியோடினம் என்றும் கூறப்படும் பாகங்கள்.

3. ஓஜஸ்—128-ம் பக்கம் பார்க்க.

4. கிரஹணீ துர்ப்பலமாயிருந்தால் அப்பொழுது கிரஹணீயென்கிற அஜீர்ணபேதி உண்டாகிறது.

ஆஹாரம் குடலிற் சோஷிக்கப்பட்டு தேஹத்திற் சேரும்வகை:— ஏற்ற காலத்தில்[1] உண்ணப்பட்ட ஆஹாரம் பிராணவாயுவால்[2] கோஷ்டத்திற்குக்[3] கொண்டுவரப்பட்டு, பலவிதமான திரவங்ளால்[4] ஒருமித்து கெட்டியாயிருக்குந்தன்மை நீங்கி, நெய் முதலிய ஸ்நேஹ வஸ்துக்களால் மிருதுத்தன்மை யடைந்துவரும்; ஆமாசயத்தில் வந்திருக்கும் அவ்வித உணவை ஸமாநவாயுவினால்[5] தூண்டப்பட்ட ஜாடராக்னியானது, ஸாதாரணமாய் நெருப்பு ஒரு கலயத்தில் தண்ணீருடன் இருக்கும் அரிசியைச் சமைப்பதுபோல் பக்குவம் செய்கின்றது. (1) முதலில் உட்கொள்ளப்படும்போது உணவு ஆறுவிதமான சுவையுள்ளதாயிருந்தபோதிலும், ஆமாசயம் செல்லுகிறவரையில் மதுரமாகவும் நுரையுடன் கூடியதாகவும் ஆவதுடன், கபத்தின் தன்மையையும் அடைகின்றது. (2) பிறகு ஜாடராக்னியினால் அவ்வுணவு எரிக்கப்பட்டு அம்லத்தன்மையை அடைந்து, பித்தத்துடன் கூடி, ஆமாசயத்திலிருந்து நெகிழ்ந்து சிறு குடலுக்குள் வந்து கொண்டிருக்கையிலேயே பித்தத்திற்குள்ள தன்மைகளைப் பெறுகின்றது. (3) அப்பால் சிறு குடலில் வந்துள்ள அவ்வுணவு அவ்விடத்திலுற்பத்தியாகும் பித்த வெப்பத்தினால் பக்குவமாய், சோஷணம் செய்யப்பட்டு ஜீர்ணமாவதுடன், அதன் திப்பியைப்போன்ற வஸ்து பிழியப்பட்டு இறுதியில் கடுரஸத்தையும் வாதத்திற்குள்ள தன்மையையும் பெறுகின்றது. பின்னர் பார்த்திவ உஷ்ணம், ஆப்ய உஷ்ணம், ஆக்நேய உஷ்ணம், வாயவ்ய உஷ்ணம், நாபஸ உஷ்ணம்[6] என்னும் ஐந்துவித உஷ்ணங்களும், முறையே பார்த்திவாதி குணங்களைப் பெற்ற ஐந்து வித ஆஹார ரஸங்களையும் அதததற்கேற்ற குணங்களின் ஸம்பந்தத்தினால் பக்குவம் செய்கின்றன. பஞ்சபூதங்களுடைய அக்குணும்சங்களும் கிரமமாக அதததற்குற்ற பூதகுணும்சங்களைப் பக்குவம் செய்து, தனித்தனியே ஒவ்வொன்றையும் தேஹத்தில் போஷிக்கின்றன. அதாவது பார்த்திவாம்சங்கள் பார்த்திவாம்சங்களையே போஷிப்பிக்கும்; மிச்ரமுள்ள பூதாம்சங்களும் தேஹத்திலுள்ள மற்றப்

1. ஏற்ற காலம்-105-ம் பக்கத்தில் கூறப்படும் போஜனம் செய்வதற்கான காலநியமம்.

2. பிராணவாயு—129-ம் பக்கம் பார்க்க.

3. கோஷ்டம் என்பதால் இவ்விடத்தில் குடல் குறிக்கப்படுகின்றது.

4. தண்ணீர், பால் முதலிய திரவாஹாரங்களும், உமிழ்நீர், பித்தநீர் முதலிய திரவங்களும் குறிக்கப்படுகின்றன.

5. ஸமாநவாயு—129-ம் பக்கம் பார்க்க.

6. பார்த்திவம்—ப்ருதிவீ ஸம்பந்தமானது; அதாவது பூமி ஸம்பந்தமானது. ஆப்யம்—நீர் ஸம்பந்தமானது. ஆக்நேயம்—அக்னி ஸம்பந்தமானது. வாயவ்யம்—வாயு ஸம்பந்தமானது. நாபஸம்—ஆகாய ஸம்பந்தமானது.

பூதங்களின் அம்சங்களையும் முறையே அவ்விதமே பக்குவம் செய்து போஷிப்பிக்கின்றன. (4) முற்கூறியவாறு பக்குவமான உணவானது கிட்டம்,[1] ஸாரம்[2] என்று முக்கியமாய் இரண்டு விதமாகப் பிரிகின்றது. அவற்றுள் அன்னத்தின் கிட்டமானது தெளிந்த திரவமாகவும், திப்பியாகவும் இரண்டு பிரிவுகளைப் பெறுகின்றது; தெளிந்த திரவாம்சம் மூத்திரமாகவும், கெட்டியான திப்பி மலமாகவும் மாறுகின்றன. (5) ஆஹாரத்தின் ஸாராம்சமானது ஏழு தாதுக்களிலுமுள்ள அந்தந்த வெப்பத்தினால் மறுபடியும் பக்குவம் செய்யப்பட்டு,[3] ஸப்த தாதுக்களின் பரிணாமத்தை அடைகின்றது. ஆகவே ஆஹாரத்தின் ஸாராம்சமான இரஸத்திலிருந்து இரத்தமும், அதிலிருந்து மாம்ஸமும், மாம்ஸத்திலிருந்து மேதஸ்ஸும், அதிலிருந்து எலும்பும், எலும்பிலிருந்து மஜ்ஜையும், மஜ்ஜையிலிருந்து சுக்ரமும் உற்பத்தியாகின்றன; இறுதியில் சுக்ரத்திலிருந்து கர்ப்பம் உற்பத்தியாகின்றது. 55—62½.

ஸப்த தாதுக்களுடைய மலங்கள் :—கபம் இரஸதாதுவுக்கும், பித்தம் இரத்த தாதுவுக்கும், செவி-நாசி முதலிய த்வாரங்களில் உண்டாகும் அழுக்கு மாம்ஸத்திற்கும், வியர்வை மேதஸ்ஸுக்கும், நகம் எலும்புக்கும், உரோமங்கள் மஜ்ஜாவுக்கும், கண்-சர்மம்-மலம் முதலியவற்றிலுள்ள ஸ்நேஹபாகம் சுக்ரத்திற்கும் முறையே மலங்களாகக் கூறப்படும். எல்லாத் தாதுக்களுடையவும் ஸாரபூதமான மலம் ஓஜஸ் என்னும் தாது. இவ்வாறு தாதுக்கள் மேன்மேலும் பக்குவமாய் வெவ்வேறு தாதுக்களாக மாறி வருகையில், அவற்றிற்கும் ஸாராம்சமென்றும் கிட்டாம்சமென்றும் இரண்டு நிலைமைகள் உண்டாகின்றன.—63, 64.

தாதுக்களில் மேன்மேலும் ஸ்நேஹம் அதிகரித்தல் :—ஸப்த தாதுக்களில் ஒவ்வொன்றும் மேன்மேலுமுள்ள தாதுக்களை விசேஷமாகப் போஷித்து வருவதால், தாதுக்களில் முதல் தாதுவிலிருந்து ஏழாவது தாதுவரையில் ஸ்நேஹாம்சம் மேன்மேலும் செழித்திருக்கும்.[4]—64½.

உணவு சுக்ரம் ஈறான தாதுக்களாகப் பரிணமிக்குங்காலபேதம்:—(1) புஜிக்கப்படும் உணவானது[5] ஓர் இராப்பகலிலேயே சுக்ரம்

1. கிட்டம்—திப்பி அல்லது கோது.

2. ஸாரம்—தாதுக்களாகப் பரிணாமமாகக் கூடிய ஸத்துவபாகம்.

3. முன்னம் ஜாடராக்னியினாலும், பஞ்சபூதங்களின் உஷ்ணத்தினாலும் பக்குவம் செய்யப்பட்டிருந்தும், தாதுக்களுடைய உஷ்ணத்தினாலும் பக்குவம செய்யப்படவேண்டியிருப்பதால் மறுபடியும் என்று கூறப்பட்டது.

4. இரஸத்தைவிட இரத்தத்திலும், அதைவிட மாம்ஸத்திலும், மாம்ஸத்திலும் மேதஸ்ஸிலும், மேதஸ்ஸைவிட அஸ்த்தியிலும், அதைவிட மஜ்ஜையிலும், மஜ்ஜையைவிட சுக்ரத்திலும் ஸ்நேஹபாகம் முறையே அதிகரிக்கும்.

5. தாதுக்களிலேயே ஒரு தாது மற்றொரு தாதுவை உண்டுபண்ணுவதால், ஒன்று மற்றொன்றுக்கு புஜிக்கப்படும் வஸ்துவாயுளதென்றும் அறிக.

வரையிலுமுள்ள தாதுக்களாகப் பக்குவமாய் மாறிவிடுவதாகச் சில ஆசாரியர்கள் கூறுகின்றனர். வேறு சிலர் ஆறு தினங்களில் அவ்விதம் முற்றிலும் கிரமமாகப் பரிணமிப்பதாகக் கூறுகின்றார்கள். சிலர் சுக்ரமாக மாறுவதற்கு ஒரு மாத காலம் ஆகும் என்பர்.[1] இவ்விதமாகப் புஜிக்கப்படும் பதார்த்தங்களும் தாதுக்களும் மேன்மேலும் சக்கரம்போல இடைவிடாமல் திரும்பத் திரும்ப பரிணாமம் அடைந்து சுழன்றுவருகின்றன. (2) ஆனால் வ்ருஷ்யம் முதலிய குணங்களையுடைய பதார்த்தங்கள் அவ்வவற்றிற்குள்ள பிரபாவத்தினால்[2] சுக்ரம் முதலிய தாதுக்களை உடனே உற்பத்தி செய்கின்றன. வேறு சில ஔஷதங்கள் ஓர் இராப்பகலுக்குள் பெரும்பாலும்[3] அவ்வவற்றின் காரியங்களைச் செய்ய வல்லவைகளாயிருக்கின்றன. 65—67.

இரஸதாது முதலியவை குறிப்பிட்ட ஓரிடத்தில் விகார முண்டு பண்ணும் காரணம் :—இரஸதாதுவானது, வீசித்தள்ளுமியல்புடைய வியாநவாயுவினால்[4] தேஹமெங்கும் எப்பொழுதும் ஒரே ஸமயத்தில் வீசித்தள்ளப்படுகின்றது. அவ்வாறு தள்ளிப் பரப்பப்படும்போது, ஸ்ரோதஸ்ஸுக்கு ஏற்பட்டுள்ள கோளாறால் அந்த இரஸம் எவ்விடத்தில் தங்கிவிடுகின்றதோ, அவ்விடத்தில், வாயு வேகத்தினால் மேகம் ஆகாயத்தில் மழை பொழிவதுபோல, ஏதேனும் விகாரத்தை உண்டுபண்ணுகின்றது. இதே வகையில் தோஷங்களுக்கும் தேஹத்தில் ஏதேனும் ஒரு பாரிசத்தில் பிரகோபம் ஸம்பவித்து விகாரமுண்டாகக் கூடும்.—68, 69½.

மூன்றுவித அக்னிகளின் காரிய நிர்ணயத்தின் முடிவுரை :—இங்ஙனம் ஆஹாரத்தினுடையவும், பஞ்சபூதங்களுடையவும், தாதுக்களுடையவும் அக்னிகளுக்கு இயல்பான காரியம் நிர்ணயித்துக் கூறப்பட்டது.[5]—70.

---

1. 'முதல்நாள் உபயோகிக்கப்பட்ட உணவின் ஸாரமானது மறு நாள் (அதாவது 60-நாழிகையில்) இரஸமாகவும், அதற்கு அப்பால் 120—வது நாழிகையில் இரத்தமாகவும், நான்காவது நாள் மாம்ஸமாகவும், ஐந்தாவது நாள் மேதஸ்ஸாகவும், ஆறாவது நாள் அஸ்த்தியாகவும், ஏழாவது நாள் மஜ்ஜாவாகவும், எட்டாவது தினத்தில் சுக்ரமாகவும் பரிணாமமடைகின்றது' என்று பராசரர் கூறுகிறார். ஆகவே உட்கொண்ட உணவு எட்டாவது தினத்தில் சுக்ரமாக மாறுகிறது என்பது பராசரரின் கொள்கை.

2. பிரபாவம்—112-ம் பக்கம் பார்க்க.

3. பெரும்பாலும் என்பதால், சில சரக்குகள் இராப்பகலுக்குப் பிறகும், சில அதற்குள்ளேயும் அதனதன் காரியத்தை நிறைவேற்றுமெனக் கருத்து.

4. வியாநவாயு—130-ம் பக்கம் பார்க்க.

5. இதற்கு முன் 55 வது ச்லோகமொழிபெயர்ப்பிற் கூறியவாறு காலத்திலுபயோகித்த உணவின் பசநசக்தியும், 59-வது ச்லோகத்தின்படி பார்த்திவாதி பூதங்களின் சூடும், 64-வது ச்லோகத்தின்படி தாதுக்களுடைய சூடும் ஆக மூன்று சூடுகள் குறிக்கப்பட்டன.

**ஜாடராக்னியே முக்யாக்னி:**—சரீரத்தில் ஒவ்வொன்றையும் பக்குவம் செய்வதற்கான அக்னிகள் அனைத்திலும் ஆஹாரத்தைப் பசநம் செய்யும் ஜாடராக்னியே மேலானதென்று நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில், மற்ற எல்லா அக்னிகளும் ஜாடராக்னியை மூலமாகப் பெற்று,[1] அதன் விருத்திக்கும் க்ஷயத்திற்கும் தகுந்தவாறு முறையே விருத்தியையும் க்ஷயத்தையும் அடையக் கூடிய சுபாவமுடையவைகள். ஆகையால் முறைதவறுமல் ஹிதமான அன்னபானங்களாகிற விறகுகளை உபயோகித்து, வெகு ஊக்கத்துடன் அவ்வக்னியைக் காத்துவரவேண்டும். ஜாடராக்னி நல்ல நிலைமையில் இருந்தால் ஆயுளும் தேஹவலிமையும் நிலைத்திருக்கும்[2].—71, 72.

**ஸமாநவாயுவும் ஜாடராக்னியும்:**—ஸமாநவாயு [3] அதன் சுயஸ்தாநத்தில் இருக்கும்போது ஜாடராக்னியும் ஸமமான நிலைமையில் ஒழுங்காயிருக்கும்; அவ்வாயு தன் ஸ்தாநம் விட்டு வேறு மார்க்கத்திற் பரவுமானால், அக்னியும் ஒழுங்கற்ற நிலைமையைப் பெறும்; அதே வாயு பித்தத்துடன் கலந்துவிடுமானால் ஜாடராக்னி தீக்ஷ்ணமான நிலைமையைப் பெறும்; அவ்வாயு கபத்தினால் தாக்கப்படுமானால் ஜாடராக்னி மந்தமாய் விடும்.—73.

**ஜாடராக்னியின் நான்கு வித நிலைமைகள்:**—அக்னியானது ஸமம், விஷமம், தீக்ஷ்ணம், மந்தம் என்று நான்கு வகைப்படும். (1) எந்த அக்னியானது யுக்தப்படி புஜித்த ஆஹாரத்தை நன்றாகப் பக்குவம் செய்துவிடுமோ அது **ஸமாக்னி** என்று வழங்கப்படும். (2) முறை தவறாக உபயோகித்த உணவையும் எது சீக்கிரம் ஜீர்ணம் செய்துவிடுமோ, முறைப்படி உபயோகித்ததையும் எது வெகு மெதுவாகப் பக்குவம் செய்யுமோ அது **விஷமாக்னி** யென்று கூறப்படும். (3) முறைகேடாக மிதமிஞ்சி உட்கொள்ளப்படும் உணவையும் எது எளிதில் பக்குவம் செய்துவிடுகிறதோ அது **தீக்ஷ்ணக்னி** யெனப்படும். (4) யுக்தப்படி உபயோகித்த ஆஹாரத்தையும் வெகு மெதுவாகப் பக்குவம் செய்வதோடு, அதற்கு முன் நாவரட்சியையும், வயிற்றுப் பொருமலையும்,

---

1. மூலம் என்பதால், ஒரு மரத்தின் வேரானது அந்த மரம் உற்பத்தியாய் வளருவதற்கும் நிலைத்துப் பலமாக நிற்பதற்கும் எவ்வளவு முக்கியமோ, ஜாடராக்னியும் மற்றவைகளுக்கு அவ்வளவு முக்கிய ஆதாரமானது என்று அறியப்படுகிறது.

2. "அக்நிமூலம் பலம் பும்ஸாம் பலமூலம் ஹி ஜீவிதம்"—"மனிதர்களுக்கு தேஹவலிமை ஜாடராக்னியை முக்கியாதாரமாயுடையது; அவர்கள் ஜீவித்து சுகமாய் வாழ்வதற்கு உடல் வலிமை மூலகாரணமாகும்" என்கிற விஷயம் இதனால் விவரிக்கப்பட்டதாகும்.

3. ஸமாநவாயு-130-ம் பக்கம் பார்க்க.

வயிற்றில் இரைத்தலேயும், வயிற்றில் பாரத்தையும் உண்டுபண்ணு வதான ஜாடராக்னியே மந்தாக்னி யென்று கூறப்படும். 74—76.

**தேஹபலம் மூன்றுவிதம்** :—ஸஹஜம் என்றும், காலத்தினுல் ஏற்பட்டதென்றும், யுக்தியினுல் ஆனதென்றும் இவ்வாறு தேஹபலம் மூன்றுவிதமாகும். (1) அவற்றுள் ஸத்வ-ரஜஸ்-தமஸ் என்னும் குணங்களால் தேஹத்தில் உற்பத்தியாயிருக்கும் பிரக்ருதி ஸம்பந்தம் பெற்றதான பலம் **ஸஹஜ பலம்** எனப்படும். (2) வயதினுலும் ருதுக்களுடைய மாறுதல்களாலும் ஸம்பவிப்பது **காலஜ பலம்** எனப்படும். (3) தகுந்த ஆஹார-விஹாரங்களாலுண்டானதும், அங்ஙனமே பல்யமான ஔஷதங்களை உபயோகிப்பதால் ஸம்பவிப்பதும் **யுக்திக்ருத பலம்** எனப்படும்.—77,78.

**தேசம் மூன்று விதம்.**—(1) ஜலம் மரங்கள் மலைகள் இவற்றை மிகச் சொற்பமாயுடைய பிரதேசம் **ஜாங்கலம்** எனப்படும்; அது அதிக ரோகமுண்டுபண்ணுவதில்லை. (2) அதிக ஜலத்துடன் கூடியதாய், விசேஷ மலைகளும் மரங்களும் அடர்ந்ததாயுள்ள பூமி **ஆநூபம்** என்று சொல்லப்படும்; இப்பிரதேசம் அதிக ரோகங்களை யுண்டுபண்ணக் கூடியது. (3) மரங்களும் மலைகளும் நடுத்தரமாயேற்பட்டு, மிதமிஞ்சாத ஜலத்துடன் கூடிய பிரதேசம் **ஸமபூமி** யெனப்படும்.—79.

**தேஹத்திலுள்ள அநேக தாதுக்களின் அளவுகள்**:—மனித தேஹத்திலுள்ள மஜ்ஜை, மேதஸ், வஸா என்னும் ஒருவித நிணநீர், மூத்திரம், பித்தம், கபம், மலம், இரத்தம், இரஸம், ஜலம் என்னும் ஒவ்வொரு பதார்த்தமும் மேன்மேலும் அளவில் ஒவ்வொரு அஞ்ஜலிப் பிரமாணம்[1] அதிகரித்ததாகும். ஓஜஸ், மஸ்திஷ்கம் என்கிற மூளை, சுக்ரம் இவை தனித்தனியே ஒவ்வொன்றும் அவரவருடைய கையளவின்படி ஒவ்வொரு பிரஸ்ருதமாகும்.[2] ஸ்த்ரீகளுக்கு முலைப் பால் இரண்டு அஞ்ஜலிப்பிரமாணமும், இரஜஸ் என்னும் ஆர்த்தவரக்தம் நான்கு அஞ்ஜலிப் பிரமாணமும் உண்டாகும். ஏழு தாதுக்களும் மூன்று தோஷங்களும் எவருக்கு இயற்கையான ஆரோக்கிய நிலைமையில் ஸமமாயிருந்துவருகின்றனவோ, அவர்களுடைய தேஹத்திலேயே தாதுக்கள் முதலியவை முற்கூறிய நிலைமையில் இருந்துவருகின்றனவென்றும், இவற்றைக் கொண்டு மேற்கூறிய தாது முதலியவை விருத்தி க்ஷயங்களை அடையும் வகைகளையும் தெரிந்துகொள்ளக் கூடுமென்றும் அறிக. 80—82.

---

1. அஞ்ஜலியென்றால் 4-பலம்கொண்ட ஓர் அளவு; மஜ்ஜை ஒரு அஞ்ஜலியானல் மேதஸ் இரண்டு அஞ்ஜலியாகும். வஸா மூன்று அஞ்ஜலியாம். இவ்விதமே ஒவ்வொன்றும் ஒவ்வொரு அஞ்ஜலி விதம் அளவில் அதிகரித்து, கடைசியிற் கூறிய ஜலம் 12 அஞ்ஜலியாம்.

2. பிரஸ்ருதம் என்பதற்கு இரண்டுபலம் அளவென்பது அர்த்தமானலும், இகே ஒரு கை நிரம்பிய அளவென்பதே பொருளாம்; ஆகையினலேயே 'அவரவருடைய கையளவின்படி' என்று கூறப்பட்டது.

**ஏழு வித பிரக்ருதிகள்** :—சுக்ரம், ஆர்த்தவம் இவைகளிலும், கர்ப்பிணியின் தேஹத்திலும், அவள் புஜிக்கும் உணவிலும், அவள் செய்யும் காரியத்திலும், கருப்பையிலும், வஸந்தாதி ருதுவிலும் எந்த தோஷம் அதிகரித்திருக்குமோ அவ்வித தோஷத்தை ஆதாரமாகப் பெற்று ஏழு வித பிரக்ருதிகள் உண்டாகும்.—83.

**வாததோஷம் அனைத்திலும் பிரபலமானது**:—ஸர்வவியாபியாயிருப்பதாலும், வேலைகளை வெகு துரிதமாகச் செய்வதாலும், விசேஷ வலிமையைப் பெற்றிருப்பதாலும், இதர தோஷம் முதலியவற்றைப் பிரகோபிக்கச் செய்வதாலும், சுதந்திரமாயிருப்பதாலும், அதிக ரோகங்களை உண்டுபண்ணுந் தன்மையுடையதாலும் வாயுவே தோஷங்களுக்குள் பிரபலமானதாம்.[1]—84.

**வாதப்பிரக்ருதிகளின் குணங்கள்** :—ஆகையினாலேயே, வாத தோஷத்தை இயற்கையிலேயே அதிகமாகப் பெற்ற மனிதர்கள் பொல்லாத குணமுடையவராகவும், உடலும் உரோமங்களும் வெடித்து மலினமாய் விகாரமடைந்தவராகவும், குளிர்ச்சியான வஸ்துக்களை வெறுப்பவராகவும், தைரியம்-நினைவு-புத்தி-நடத்தை-நட்பு-பார்வை-மனப்போக்கு அல்லது வெளிக்காரியத்தின் போக்கு இவற்றில் நிலைவற்றவராகவும், மிகவும் அதிகமாகப் பேசுமியல்பினராகவும் இருப்பர். மேலும் வாதப்ரக்ருதியாயிருப்பவருக்கு பித்தம், தேஹவலிமை, ஆயுள், நித்திரை இவை சொற்பமாயிருந்தும், அவர்கள் அற்பமாகவும், அடிக்கடி நிறுத்தியும், சிதறி முன் பின் ஸம்பந்தமற்றும் பேசுவர்கள். நாஸ்திகர்களாகவும், அதிக உணவுகளைப் புஜிப்பவராகவும், களித்து விளையாடுபவராகவும், ஸங்கீதம் - ஹாஸ்யம் - வேட்டை - பாபக்ருத்யங்கள் இவற்றில் மனதைச் செலுத்துபவராகவும் இருப்பர். மதுரரஸம், இலவணரஸம், கடுரஸம், உஷ்ணவீர்யம், மற்றும் ஸாத்மியமான விஷயங்கள் இவற்றில் விருப்பமுள்ளவர்களாகவும், இளைத்து ஒல்லியாக நீண்ட உருவங்களுள்ளவர்களாகவும், உரத்த சப்தமுண்டாகுமாறு நடந்துச் செல்லுபவராகவும் காணப்படுவர். அவர்களுக்கு உடலில் திடம் இராது. இந்திரியங்களை அடக்கியாள முடியாது. ஆர்யர் எனத் தகுந்த குணங்களும் அவர்களிடம் இரா. ஸ்திரீகளால் காதலிக்கக் கூடியவர்களா

---

1. தேஹத்தில் உள்ளும் புறமும் எல்லாப் பாகங்களிலும் வியாபித்திருப்பதாலேயே வாயுவை வி। ஃ என்பார்கள். பித்தமும் கபமும் வேலையில் மந்தமாயிருப்பதும், வாயு வெகு வலிவுடன் சுறுசுறுப்பாக வேலைகளைச் செய்வதும் வைத்தியசாஸ்திரம் அறிந்தவருக்குத் தெரிந்த விஷயமே. "பித்தம் பங்கு கப: பங்கு: பங்கவோ மலதாதவ:. வாயுநா யத்ர நீயந்தே தத்ர கச்சந்தி மேகவத்" என்னும் பிரமாணப்படி வாயு மற்றத் தோஷங்களைப் பிரகோபிக்கச் செய்வதாகவும் சுதந்திரம்பெற்றதாகவும் இருப்பதாகக் கூறப்பட்டது. கபம் இருபது வியாதிகளையும், பித்தம் நாற்பது வியாதிகளையும், வாயு எண்பது வியாதிகளையும் உண்டுபண்ணும்.

கவாவது, விசேஷமாகப் பிரஜைகளைப் பெறுபவர்களாகவாவது இருக்கமாட்டார். இவர்களுடைய கண்கள் பசையற்று மலினமாகவும், வட்டமாகவும், பார்ப்பதற்குப் பிரியப் படாதவையாகவும், சவத்தின் கண்களுக்கு ஒப்பிடக்கூடியவையாகவும், நித்திரையுறும்போது விழித்திருப்பவைபோலவே தோற்றுந் தன்மையனவாகவும் இருக்கும். தூங்கும்பொழுது பர்வதங்களின்மீதும், மரங்களின் மீதும், ஆகாயத்திலும் ஸஞ்சரிப்பதாக ஸ்வப்னங்களைக் காணுவர். மேலும் வாதப்பிரக்ருதியுள்ளவர், சீர்மையற்றவராகவும், பொறாமையுள்ளவராகவும், களவாடுபவராகவும், திரண்டுருண்டு மிகவும் கரடு கட்டிய ஆட்டுச் சதையுள்ளவராகவும் இருப்பர். இவர் நாய், நரி, ஒட்டகம், கழுகு, பெருச்சாளி, காகம் இவற்றின் இனத்தைச் சேர்ந்தவருமாவர். 85.—89.

பித்தப்பிரக்ருதிகளின் குணங்கள்:—பித்தம் என்பதே தேஹத்தில் அக்னியென்று வழங்கப்படுகிறது; அல்லது பித்தம் அக்னியிலிருந்து உண்டாகும் அதன் அம்சமான ஒரு தாதுவாகவும் கருதப்படுகிறது. அப்பித்தத்தைப் பிரதான தோஷமாகக்கொண்டு பிறந்தவன் பித்தப்பிரக்ருதி யெனப்படுவான். அவ்விதமான பிரக்ருதியுள்ளவனுக்கு நாவரட்சியும் பசியும் தீவ்ரமாயுண்டாகும்; அவனுடல் ஒருவாறு மஞ்சள் நிறமாகவும், சூடாகவும், செந்நிறமான கை கால் முகங்களுடன் கூடியதாகவும் இருக்கும்; அவனுடைய உரோமங்கள் சொற்பமாகவும் பொன்னிறமாகவும் இருக்கும்; அவன் சூரனாகவும் மானியாகவும் இருப்பான். புஷ்பங்கள், நறுமணமுள்ள பூச்சுகள், அலங்காரங்கள் இவற்றில் விருப்பமுள்ளவனாகவும், நன்னடக்கையுடையவனாகவும், பரிசுத்தனாகவும், தன்னை அடுத்திருப்பவரிடம் அன்பு பாராட்டுபவனாகவும், ஐச்வர்யம்-ஸாஹஸமான காரியங்களில் பிரவ்ருத்தி—புத்திவன்மை இவற்றுடன் கூடியவனாகவும், ஆபத்து நேரிடும் ஸமயங்களில் பகைவரையும் காத்து இரக்ஷிக்குந் தன்மையனாகவும் இருப்பான். மேதாவியாகவும், தளர்ச்சியடைந்த ஸந்திபந்தங்களையும் தசைநார்களையுமுடைய தேஹத்துடன் கூடியவனாகவும் இருப்பான். அவனுக்கு சுக்ரமும் காமமும் சொற்பமாயிருக்கும்; ஆகவே அவனை ஸ்த்ரீகள் காதலுடன் விரும்பமாட்டார்கள். நரை திரைகளென்ன, மச்சைகள் என்கிற மருக்களென்ன இவற்றிற்கு இருப்பிடமானவன். இனிப்பாகவும் துவர்ப்பாகவும் கைப்பாகவுமுள்ள உணவுகளைப் புஜிப்பதில் விருப்பமுள்ளவனுயிருப்பான். தர்மத்தில் வெறுப்புள்ளவனாகவும், விசேஷமாய் வியர்க்குமியல்பினனாகவும், சவர் நாற்றமுடையவனாகவும், பேசுதல் - கோபித்தல் - பானம் செய்தல்-உண்ணுதல் இவற்றில் அதிகமாகப் பிரவ்ருத்தியுள்ளவனாகவும், அமித பொறாமைக்காரனாகவும் இருப்பன். நித்திரை போகும்போது சரக்கொன்றை, பலாசு முதலிய மரங்களையும், திசைகள் எரிவதையும், கொள்ளிக்கட்டைகளையும்,

மின்னலையும், சூரியனையும், அக்னியையும் அவன் காண்பான். பித்தப்பிரக்ருதியான மனிதர்களுடைய கண்கள் சிறியவையாகவும், பொன்னிறமாகவும், எப்பொழுதும் நிலையற்று அசைபவையாகவும், குட்டையான சொற்ப இமை மயிர்களையுடையவையாகவும், குளிர்ச்சியை விரும்புபவையாகவும், கோபம் மதுபானம் சூரியவெளிச்சம் இவற்றால் எளிதில் சிவந்து விடுபவையாகவும் இருக்கும். பித்தப்பிரக்ருதிகளுக்கு ஆயுள் காலம் அதிகமாகவுமில்லாமல் குறைவாகவுமில்லாமல் மத்திமமாயிருக்கும்; தேஹவன்மையும் அவ்விதமே மத்திமமாயிருக்கும்; இவர்கள் பண்டிதர்களாகவும், கிலேசங்களைக் கண்டு அஞ்சுந்தன்மையராகவும் இருப்பர். குணத்தில் புலி, கரடி, குரங்கு, பூனை, காகம் இவற்றின் இனத்தைச் சேர்ந்தவராவர். 90—95.

**கபப் பிரக்ருதிகளின் குணங்கள்:**—கபமானது ஸோமஸ்வரூபமானது[1]; ஆகவே கபப்பிரக்ருதியாயிருப்பவன் ஸௌம்யகுணமுள்ளவனாயிருப்பான்.[2] இவனுடைய தேஹத்திலுள்ள பூட்டுகளும், எலும்புகளும், தசைநார்களும் முன்னுக்குப் பிதுங்கி வராமல் உள்ளடங்கியும், ஸ்நிக்தமாகவும், ஒன்றோடொன்று நன்கு இணைந்தவையாகவும் இருக்கும். பசி, தாஹம், துயரம், மற்றுமுள்ள கிலேசம் முதலிய தீவினைகளால் இவனுக்குத் துன்பமுண்டாவதில்லை; நற்புத்தியுடன் நன்கு விளங்குவான்; ஸாத்விககுணமுள்ளவன்; ஸத்தியந்தவறாதவன். ஞாழல், அறுகம்புற்றண்டு, வழற்றண்டு, நன்றாகத் தீட்டிய ஆயுதம், கோரோசனை, தாமரைப்பூ, பொன் இவற்றிற்குச் சமானமான நிறமுடையவனாய், நீண்ட கைகளையும், பருத்து விசாலமான மார்பையும், அகன்ற நெற்றியையும், கருத்து அடர்த்தியான தலைமயிரையும் உடையவனாயிருப்பான். அவனுடைய அவயவங்கள் மிருதுவாயிருக்கும்; உடம்பு மேடுபள்ளமில்லாமல் மிகவும் அழகாயிருக்கும்; ஓஜஸ் மிகவும் செழித்திருக்கும்; புணர்ச்சியில் ஆசையும், சுக்ரமும் அதிகமாயிருக்கும்; ஸந்தான விருத்தியையும் ஸௌகஸமூஹத்தையும் விசேஷமாகப் பெற்றிருப்பான்; அவன் தர்மாத்மாவாகவும் இருப்பான்; ஒருக்காலும் கடுமையாகப் பேசமாட்டான்; ஒருவரிடம த்வேஷமுண்டானால் அது திடமாகவும் ஒருவரும் அறிய முடியாததாகவும் அவனுடைய மனதில் வெகு நாள் நிலைத்துமிருக்கும். நன்கு மதங்கொண்ட மிகப் பெரிய யானையைப்போல நடப்பான். மேகம், கடல், மிருதங்கம், சிங்கம் இவற்றிற்கு இருப்பதுபோல கம்பீரமான தொனியுடைய

1. ஸோமஸ்வரூபம்—குளிர்ந்த சுபாவம். [ஸோமன் என்றால் சந்திரன்; குளிர்ந்த குணம் சந்திரனுக்கிருப்பதால் அவ்வித குணமுள்ள மற்றவையும் இங்கு ஸோமஸ்வரூபங்கள் எனப்படுகின்றன.]

2. ஸோமஸம்பந்தமானது ஸௌம்யம்; குளிர்ச்சியும் இன்பமும் பொருந்தியதெனப் பொருள்.

வன்; சிறந்த ஞாபகசக்தி யுடையவனுயிருப்பான்; பகைவரைத் தாக்குவதில் மிகத் திறமையுள்ளவன்; வணக்கமும் அதிகமாய் உண்டு; இளங்குழந்தைப் பருவத்திலும் அதிகமாய் அழுவது அரிது; சபல புத்தியுள்ளவனுகவும் இருக்கமாட்டான். கைப்பு, துவர்ப்பு, கார்ப்பு, இச்சுவைகளும் உஷ்ண வீர்யமும் தீக்ஷ்ண குணமுமுள்ள உணவுகளைச் சொற்பமாகப் புஜிப்பான்; ஆகிலும் நல்ல தேஹவலிமையுள்ளவனு யிருப்பான். இவனுடைய நேத்திரம் ஓரங்களிற் சிவந்தும், மிகவும் ஸ்நிக்த்தமாகவும், விசாலமாகவும், நீண்டும், மிகத் தெளிவுற்றதாகவும், வெண்ணிறம் பொருந்தியதாகவும், அடர்த்தியாகக் கருத்து வளர்ந்த புருவமயிர்களை யுடையதாகவும் இருக்கும். பேசுவது, கோபிப்பது, பானம் செய்வது, உண்பது, ஆசைப்படுவது இவை இவனிடம் சொற்பமாயிருக்கும்; ஆயுளும் செல்வமும் இவனுக்கு அதிகம்; வரப்போகிற விஷயங்களையெல்லாம் நன்ருக யோசித்து அறியுமியல்புடையவன்; நல்ல கொடையாளியாயிருப்பான்; செய்யவேண்டிய வேலைகளில் சிரத்தையுள்ளவன்; கம்பீரக் கொள்கையும், அதிக தானம் செய்வதில் ஆசையும் பொறுமையும் விசேஷமாய் உண்டு; ஆர்யன் என்று சொல்லக்கூடிய குணங்களுடையவனுகவும், அதிகமாய் நித்திரை யுறுபவனுகவும், வெகு மெதுவாக வேலைகளைச் செய்யுமியல்பினனுகவும், நன்றியறிவுள்ளவனுகவும் இருப்பான்; ருஜுவான மார்க்கத்திற் செல்பவன். நல்ல படிப்பாளியாயிருப்பான். ஸௌபாக்யம் நிறைந்தவன்; விசேஷ லஜ்ஜையுமுள்ளவன்; ஆசார்யர்களிடத்தில் பக்தியுள்ளவன்; நிலை குலையாத நட்பு பாராட்டுபவன்; ஸ்வப்னத்தில் தாமரைப்பூக்களும் நீர்வாழும் பக்ஷிகளும் நிரம்பிய நீரோடைகளையும் மேகங்களையும் காண்பான். கபப்பிரக்ருதியான மனிதர் குணத்தில் பிரம்மதேவன், சிவன், இந்திரன், வருணன், கருடன், அன்னப்பறவை, யானை, சிங்கம், குதிரை, விருஷபம் இவற்றின் இனத்தைச் சேர்ந்தவராவர். 96—103.

ஸம்ஸர்க்க-ஸந்நிபாதப் பிரக்ருதிகளின் குணங்கள் :—இரண்டிரண்டு தோஷங்களுடைய குணங்கள் எவரிடமாகிலும் ஒருமிக்கக் காணப்படுமாயின், அவர்களை த்வந்தவப் பிரக்ருதிகள் என்றும், [1] எல்லாத்தோஷங்களின் குணங்களும் காணப்படுமானுல் அவர்களை ஸந்நிபாதப் பிரக்ருதிகள் என்றும் அறிக.—103½.

ஸாத்விக ராஜஸ தாமஸப் பிரக்ருதிகள் :—மனோவாக்காயங்களால் பரிசுத்தமாயிருத்தல், ஆஸ்திகனுயிருத்தல் முதலிய குணங்

1. வாத-பித்தப் பிரக்ருதி, வாத-கபப் பிரக்ருதி, பித்த-கபப் பிரக்ருதி என்பவை த்வந்த்வ தோஷங்களாலான மூன்று பிரக்ருதிகள்: வாத-பித்த-கபங்களாலானது ஸந்நிபாதப் பிரக்ருதியாம்.

களாலும், அங்ஙனமே ஸாத்விக-ராஜஸ-தாமஸ குணங்கள் மயமான பிரக்ருதிகளையும் கூறவேண்டும். [1]—104.

வயதின் மூன்றுவித நிலைமைகளும் தாதுக்களின் விருத்தி க்ஷயங்களும் :—(1) பதினாறுவது வயதுவரையில் மனிதர் பாலர் எனப்படுவர்; அவ்வயதில் தாதுக்களுக்கும், இந்த்ரியங்களுக்கும், ஓஜஸ்ஸுக்கும் விருத்தியுண்டாகும். (2) எழுபதாவது வயதுவரையில் மத்திமவயதினர் எனப்படுவார்கள்; அவ்வயதில் தாது முதலியவைகள் விருத்தியாகமாட்டா. (3) அந்திம வயதான எழுபது வயதுக்குமேல் தாது முதலியவை க்ஷீணித்துவரும்.—105.

ஆரோக்கியத்துக்கு ஆதாரமான உடலின் அளவு :—ஒவ்வொருவருடைய தேஹமும் அவரவருடைய கையால் மூன்றரை முழம் உயரமுள்ளதாயிருக்கும. அத்தேஹமே சுகத்திற்கும், ஆயுளுக்கும் ஆதாரமாகின்றது.—105½.

ஆயுளாரோக்கியங்களுக்கு அநுகூலமாகாத உடலின் நிலைமை:—நிந்திக்கப்பட்ட எட்டுவிதமான மிதமிஞ்சிய இயற்கை இலக்ஷணங்கள் உண்டு; அவையான:—முற்றிலும் உரோமங்கள் இல்லாததும், அதிக உரோமங்களைப் பெற்றதும், அதிக கருப்பானதும், அதிக வெண்மையானதும், அதிக ஸ்தூலமானதும், மிகவும் மெலிந்ததும், அதிக உயரமானதும், அதிக குட்டையாயிருப்பதுமான யாதொரு தேஹமுண்டோ அது சுகத்திற்காவது ஆயுளுக்காவது அநுகூலமானதல்ல.—106½.

ஆரோக்கியசாலியின் அவயவங்களின் இலக்ஷணங்கள் :—தலைமயிர்கள் மிகவும் ஸ்நிக்த்தங்களாகவும், மிருதுவாகவும், மெல்லியவையாகவும், அநேகம் வேர்களுடையவையாகவும், உதிர்ந்து விடாமல் நன்கு நிலைபொருந்தியவையாகவும் இருக்கும். நெற்றியானது உயர்ந்து, கன்னங்கள் வரையில் நீண்டு, கன்னங்களிற் பள்ளமில்லாமல், எட்டாம் பிறைச்சந்திரனைப் போன்றதாயிருக்கும். காதுகள் அடியிற் சிறுத்து, மேற்புறம் பருத்து, பின்பக்கத்தில் அகன்று, கன்னத்துடன் அழகாய் இணைந்து, சதை பருத்திருக்கும். கண்கள் நன்கு விளக்கமான கருத்த பாகத்தையும் வெளுத்த பாகத்தையும் பெற்று, ஸந்திகளில் நன்றாக இணைக்கப்பட்டு, அடர்த்தியான இமை மயிர்களையும் புருவங்களையும் பெற்றிருக்கும். நாசியானது உன்னதமான முனையையுடையதாகவும், தாராளமாகப் பெருமூச்சுவிடக் கூடியதாகவும், நேர்மையாகச் சதைபருத்து நீண்டு மேடுபள்ள மற்றதாகவும் இருக்கும். உதடுகள் சிவந்து, அதிகமாகப் பிதுங்கி வெளிவராதவையாய் அழகாய்

1. வாதாதிப் பிரக்ருதிகளைப் போலவே, ஸாத்விகாதிப் பிரக்ருதிகளும் எழுவிதமாம். ஸாத்விகப் பிரக்ருதி, இராஜஸப் பிரக்ருதி, தாமஸப்பிரக்ருதி; ஸாத்விக—ராஜஸப் பிரக்ருதி, ஸாத்விக-தாமஸப்பிரக்ருதி, ராஜஸ-தாமஸப்-பிரக்ருதி, ஸாத்விக ராஜஸ தாமஸப்பிரக்ருதி என்பனவாம்.

அமைந்திருக்கும். தவடைகள் விசாலமாகவும், அதிக உயரமில்லாமல் பருத்தும் ஒழுங்காகக் காணப்படும். வாய் நன்கு விசாலமாயிருக்கும். பற்கள் கெட்டியாகப் பருத்தவையாகவும், ஸ்நிக்த்தங்களாகவும், வழுவழுப்புடையவையாகவும், வெண்மையாகவும், மேடுபள்ளமில்லாதவையாகவும் அமைந்திருக்கும். நாக்கு சென்னிறமாகவும், நீண்டதாகவும், மெல்லியதாகவும் இருக்கும். முகவாய்க்கட்டையானது சதைபருத்து விசாலமானதாயிருக்கும். கழுத்து அதிக உயரமில்லாமல் நன்றாகப் பருத்து வட்டமாயிருக்கும். தோள்கள் உயர்ந்து மிகச் சதைபருத்துக் காணும். வயிறானது வலது புறமாகச் சுழன்று ஆழமாய் அமைந்த நாபியுடன் கூடியதாய் மேலெழுந்து உயர்ந்து நிற்கும். கை கால்கள் மெல்லியவனாகவும், சிவந்தும் உன்னதமுமான நகங்களுடன் கூடியவையாகவும், ஸ்நிக்த்தமாகவும், ஒருவாறு சிவந்தவையாகவும், சதை பருத்தவையாகவும், நீண்டு இடையிடையில் த்வாரங்களில்லாமல் ஒழுங்காய் அமைந்துள்ள விரல்களுடன் கூடியவையாகவும், பெரிதாகவும் அமைந்திருக்கும். முள்ளந்தண்டு எனப்படும் வம்சாஸ்த்தியானது மேலுக்குத் தெரியாமல் மறைந்து, முதுகு விசாலமாகச் சதைபருத்துக் காணும். ஸந்திபாகங்கள் யாவும் திடமாகவும் மேடுபள்ளம் தெரியாமல் மறைந்து மிருக்கும். குரலானது கம்பீரமாகவும், எதிரொலியுண்டாக்குந் தன்மையதாகவும் இருக்கும். தேஹநிறம் ஸ்நிக்த்தமாகவும், நிலையான ஒளியுள்ளதாகவும் ஏற்பட்டிருக்கும். இயற்கையிலுண்டான தேஹமனோபலமானது அழிவுறாததாகவும், ஆபத்துக்களிலும் விகாரமடையாததுமாயிருக்கும். முற்கூறிய குணங்களுள் மேன்மேலுமுள்ள எல்லாக்குணங்களும் ஒருவனுக்குக் கிரமமாகக் கூடியிருந்தால், அவனுடைய தேஹம் மிகச் சிறந்ததாகும்[1]; அவ்விதமே கர்ப்பவாஸம் முதற்கொண்டு எப்பொழுதும் பிணியற்றிருக்கும் தேஹமும், உருவத்தில் உயர்வு-உலக அறிவு, சாஸ்திரஞ்ஞானம் இவை எவருக்குக் கிரமமாக மெள்ள மெள்ள விருத்தியாகின்றனவோ அவர்களுடைய தேஹமும் மிகவும் சிறந்ததாகும்.

1. சிறந்த தேஹம் சுபமானது, சுபதரமானது, சுபதமமானது என்று மூன்று விதமாகப் பகுக்கப்படும். அவற்றுள் 106-வது ச்லோகத்தின் மொழிபெயர்ப்பில் "ஒவ்வொருவருடைய தேஹமும் அவரவருடைய கையால் மூன்றரை முழம்" என்பது முதலாகக் கூறப்பட்ட விதமாய் அமைந்துள்ளது சுபதேஹம் என்றும், 107-வது முதல் 113-வது ச்லோகத்து மொழிபெயர்ப்பு வரையில் "தலைமயிர்கள் மிகவும் ஸ்நிக்த்தங்களாகவும்" என்பது முதலியதால் விவரிக்கப்பட்ட இலக்ஷணங்களும் முற்கூறிய குணங்களோடு சேர்ந்திருந்தால் அது சுபதர தேஹம் என்றும், 114-வது ச்லோகத்தின் மொழிபெயர்ப்பான "குரலானது கம்பீரமாகவும், எதிரொலியுண்டாக்கும் தன்மையதாகவும்" என்பது முதலியதால் விவரிக்கப்பட்ட இலக்ஷணங்களும் முற்கூறிய எல்லாக்குணங்களோடும் கூடியிருந்தால் அது சுபதம தேஹம் என்றும் வழங்கப்படும் என்பதே இதன் கருத்தாகும்.

முற்கூறியவாறு ஒருவனுடைய தேஹத்தில் ஸகல குணங்களும் நிரம்பியிருக்குமாயின், நூறுண்டளவும் ஆயுளும், ஐச்வர்யமும், மற்றும் இஷ்டமான ஸகல விஷயங்களும் அவனுக்குப் பொருந்தியிருக்கும். 107—116.

எட்டு வித ஸாரங்களைப் பெற்றவனுக்குள்ள மேன்மை :— பிராணிகளின் சர்மம் இரத்தம் இவை முதலாக ஸத்துவம் வரையிலுமுள்ள எட்டுவிதமான ஸாரங்களும்[1] மேன்மேலும் சிரேஷ்டமானவையாம்; தேஹவன்மையையும், ஆயுளின் அளவையும் அறிவதன்பொருட்டு இவை இவ்வாறு விவரிக்கப்பட்டன. இந்த ஸாரங்கள் அனைத்தையும் ஏற்றவாறு பெற்றிருப்பவன் மிகவும் கௌரவசாலியாய், எல்லா முயற்சிகளிலும் ஆசையுடையவனும், பொறுமையுள்ளவனும், மதியிற் சிறந்தவனும், செய்யும் காரியங்களில் திடமான நோக்கமுள்ளவனும் விளங்குவான்.—117, 118.

ஸாத்விக-ராஜஸ-தாமஸர்களின் விசேஷ குணங்கள் :—(1) ஸத்வ குணமுள்ளவன் 'தனக்குச் சுகம் நேரிட்டதானால் அதை அஹங்காரமின்றியும், துன்பம் ஸம்பவித்ததானால் அதை எளிமையை விளக்காமலும் அனுபவிப்பான். (2) இரஜோகுணமுள்ளவனே சுகத்தை அஹங்காரத்தோடும், துக்கத்தை மிகவும் பாராட்டிக்கொண்டும் அனுபவிப்பான். (3) தாமஸகுணமுள்ளவனே இன்பத்தை இன்பமாகவும் துன்பத்தைத் துன்பமாகவும் மிருதியாக நினைத்துப் பதறுவான்.[2]—119.

ஆயுளையும் புண்ணியத்தையும் விருத்தி செய்யுங் குணங்கள் :— கொடை, நன்னடைக்கை, மனவிரக்கம், உண்மையுரைத்தல், பிரம்மசர்யவிரதம், நன்றியறிதல், இரஸாயனங்களை உபயோகித்தல், அன்பு என்னும் இவையெல்லாம் அதற்குத் தகுந்தவாறு மனிதனுக்குப் புண்ணியத்தையும், ஆயுளையும் விருத்திசெய்யக் கூடிய குணங்களாகும்.—120.

---

1. சர்மம் இரத்தம், மாம்ஸம், மேதஸ் என்னும் கொழுப்பு, அஸ்தி, மஜ்ஜை, சுக்ரம், ஸத்துவம் என்பவை எட்டுவித ஸாரங்கள். ஸத்துவம் என்று இங்கு சொல்லப்படுவது ஓஜஸ் என்னும் தாதுவாகும்.

2. ஸாத்விகன் ஸுகத்தை ஸுகமாய் அறிந்து அனுபவித்தும் அதனால் அஹங்காரமடையான். துன்பத்தில் தனது எளிமையையும் காட்டான். இராஜஸப் பிரக்ருதி இதற்கு நேர எதிரிடையான சுபாவமுள்ளவனாய் இருப்பன். தாமஸப் பிரக்ருதியோ இன்பத்தை இன்பமாகவும் துன்பத்தைத் துயரமாகவும் கருதி அநுபவிக்கத் தெரியாதவனாயிருப்பான்.

# நான்காம் அத்தியாயம்.

## மர்மவிபாக சாரீரம்.

இனி மர்மவிபாக சாரீரம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும் :—

மர்மங்கள் நூற்றேழு :—மனித தேஹத்தில் நூற்றேழு மர்மங்கள் உண்டு. அவற்றுள் ஒவ்வொரு காலிலும் ஒவ்வொரு கையிலும் தனித்தனியே பதினொரு மர்மங்கள் இருக்கின்றன; கோஷ்டத்தில் மூன்றும், மார்பில் ஒன்பதும், முதுகில் பதினான்கும், தோளுக்கு மேலுள்ள அவயவங்களில் முப்பத்தேழும் உண்டு.—1, $1\frac{1}{2}$.

கால்களின் மர்மங்களும், அவற்றில் நேரிடும் அபாயங்களும் :—(1) பாதத்தின் உட்புறத்து மத்தியபாகத்தில் நடுவிரல் வரையில் அப்பாகங்களைச் சுற்றிலுமுள்ள மர்மம் தலஹ்ருதயம்[2] என்று வழங்கப்படும்; அந்த மர்மத்தில் அபிகாதமுண்டானால், வலி தாங்கக் கூடாமல் மரணம் ஸம்பவிக்கும். (2) பெருவிரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் இடையில் க்ஷிப்ரம்[3] என்கிற மர்மம் இருக்கிறது; இதில் அபிகாதமுண்டானால் ஆக்ஷேபகம் என்னும் இசிவு உண்டாய் அம்மனிதன் இறந்துவிடுவான். (3) க்ஷிப்ரமர்மத்திற்கு இரண்டு அங்குலம் மேலே கூர்ச்சம்[4] என்கிற மர்மம் உண்டு; அவ்விடம் அடியுண்டால் பாதம் சுழன்று நடுங்கும். (4) கணுக்காலின் பூட்டிற்குக் கீழே அடுத்தாற்போல் கூர்ச்சசிரஸ்[5] என்னும் ஸந்தியிருக்கின்றது; அவ்விடத்தில் அபிகாதமுண்டானால் வீக்கமும் வலியும் அதிகமாயுண்டாகும். (5) ஜங்கையென்னும் முழங்காலுக்குக் கீழுள்ள காலும் பாதமும் சேருமிடத்தில் குல்பம்[6] என்னும் மர்மம் இருக்கின்றது; அவ்விடம் தாக்கப்படுமானால் வலியுண்டாய் பாதம் அசைவற்றுப் போய்காலின் வேலையும் மந்தப்பட்டுவிடும். (6) முழங்காலுக்கும் கணுக்காலுக்கும் இடையில் இந்திரவஸ்தி என்னும் மர்மம் உண்டு; அவ்விடம் அடியுண்டால், இரத்தப்

---

1. அபிகாதத்தினால் அபாயம் விளைவிக்கக் கூடிய அவயவம் மர்மம் எனப்படும். வஸிரைகள், தமநிகள், நாடிகள் முதலியவற்றின் நுட்பமான முக்கிய பாகங்கள் ஒன்று கூடும் ஸ்தலம் மர்மஸ்த்தாநமாகும் என்று ஸுச்ருதம் முதலியதிலும், இவ்வத்தியாயத்திலேயே இதன் பிறகும் கூறப்படுகிறது. அவ்வித மர்மங்கள் தேஹத்தில் எவ்வெவ்விடங்களில் பரவியிருக்கின்றனவென்பதை விளக்கும் அத்தியாயம் மர்மவிபாகசாரீரம் ஆகும்.

2. தலஹ்ருதயம்—உள்ளங்காலின் மத்தியபாகக் குழி.

3. அதிசீக்கிரத்தில் பிராணாபாயமுண்டுபண்ணுவதால் க்ஷிப்ரம் எனப்படுகிறது.

4. கூர்ச்சம்—குச்சுபோன்ற அவயவம்.

5. கூர்ச்சசிரஸ்—கூர்ச்சத்தின் தலைப்பிரதேசம்.

6. குல்பம்—கணுக்கால்.

பெருக்கு அபரிமிதமாய் எடுத்து மரண முண்டாகும். (7) காலும் துடையும் கூடுமிடத்திலுள்ளது ஜாநு[1] என்னும் மர்மம்; அவ்விடம் அபிகாதப்பட்டால் உயிருக்கு அபாயமின்றியே முடவனாக ஆய் விடுவான். (8) முழங்காலுக்கு மூன்று அங்குலம் மேலே ஆணி என்னும் மர்மம் உண்டு; அது அடிபுண்டால் துடை அசைக்க முடியாமற் போவதுடன் வீக்கமும் உண்டாகும். (9) துடையின் மத்தியிலுள்ள மர்மம் உர்வீ யெனப்படும். இதில் அபிகாதமுண்டானால், இரத்தம் அபரிமிதமாய் வெளியாகுமாதலால், துடை மிகவும் சுஷ்கித்து அபாயம் நேரிடும். (10) துடையின் அடிப்புறத்திலிருக்கும் மர்மம் லோஹிதம் எனப்படும்; அது தாக்கப்படுமானால் இரத்தப்பெருக்கு விசேஷமாயுண்டாய், பார்ச்வவாயு அவ்வவயவத்திற்குச் சம்பவிக்கும். (11) வங்க்ஷணம் என்னும் துடையிடுக்குக்கும் பிஜகோசத்திற்கும் இடையில் விடபம் என்கிற ஸந்தியிருக்கின்றது; அதில் அபிகாதமுண்டானால் அம்மனிதன் நபும்ஸகனாய் விடுவான். கால்களில் உள்ள மர்மங்கள் இவையேயாம். 2—7.

கைகளின் மர்மங்களும் அவற்றில் உண்டாகும் அபாயங்களும்:— கால்களில் இருப்பதுபோலவே கைகளிலும் மர்மங்கள் அமைந்திருக்கின்றன. ஆனால் பேதமென்னவென்றால்—கணுக்கால் குல்பம் எனப்படுவதுபோல அதற்குப் பதிலாக மணிக்கட்டு மணிபந்தம் எனப்படும்; முழங்கால் ஜாநுவெனப்படுவதுபோல முழங்கை கூர்ப்பரம் எனப்படும். இவ்விரண்டு மர்மங்களிலும் அபிகாதமுண்டானால் கைகள் மொண்டியாய்விடும். துடையிடுக்கில் விடப மர்மம்போல அக்குளில் கக்ஷதரம் என்னும் மர்மம் அமைந்திருக்கிறது; அவ்விடம் தாக்கப்பட்டாலும் கை மொண்டியாய் விடும்[2]. —8, 9.

உடலின் மர்மங்களும் அவற்றில் ஸம்பவிக்கும் அபாயங்களும்:— (1) ஸ்த்தூலாந்த்ரம் என்னும் பெருங்குடலில் அபாந வாயு, மலம் இவற்றை வெளிப்படுத்துவதற்காக இணைக்கப்பட்டிருக்கும் மர்மம் குதம் எனப்படும்; அதில் அபிகாதமுண்டானால் உடனே உயிருக்கு அபாயம் நேரிடும். (2) வில்லைப்போல் வளைந்துள்ளதும், மூத்திரம் தங்கியிருப்பதற்கு அவசியமானதும், இரத்தம் மாம்ஸம் இவற்றைச் சொற்பமாயுடையதும், அடிப்புறத்தில் ஒரு முகம் அல்லது த்வாரத்தையுடையதுமான வஸ்தி என்னும் மர்மம் அமைந்திருக்கிறது; அது அபிகாதமுண்டால் உடனே பிராணாபாயமுண்டாகும்; ஆனால் அச்மரீ யென்னும் மூத்திரக்கற்களால் சிதைவுண்டால் அவ்

1. ஜாநு—முழங்கால்.

2. கையிலுள்ள மர்மங்கள் :—தலஹ்ருதயம், கூர்ச்சம், கூர்ச்ச சிரஸ், மணிபந்தம், இந்த்ரவஸ்தி, கூர்ப்பரம், ஆணி, உர்வீ, லோஹிதாக்ஷம், விடபம், கக்ஷதரம் என்பனவாம்.

வாறு அபாயம் ஸம்பவிக்காது; அதிலும் இரு புறங்களிலும் வஸ்தி சிதைவுறுமானால் பிராணாபாயம் ஸம்பவிக்கும்; ஒரு புறத்தில் அபிகாதமுண்டானால் மூத்திரம் கசிந்துகொண்டு பெருமுயற்சியின் மேல் விரணம் மெதுவாக ஆறும். (3) தேஹத்திற்கு மத்திய பாகத்தில், அதிலும் ஆமாசய-பக்வாசயங்களுக்கு இடையில், ஸிரைகளுக்கெல்லாம் ஆதாரமாய் நாபி யென்னும் மர்மம்[1] அமைந்திருக்கின்றது; இதுவும் அபிகாதத்தினால் உடனே பிராணாபாயம் விளைவிக்கக்கூடியது. (4) ஆமாசயத்தின் த்வாரத்திற்கு அருகில் இருப்பதும்,[2] மார்பறையினுள் இரண்டு ஸ்தநங்களுக்கும் இடையில் அமைந்துள்ளதும், ஸத்துவாதிகளுக்கு உறைவிடமாகவும் **இருதயம்** என்னும் மர்மம் உண்டு; இந்த மர்மமும் அபிகாதத்தினால் உடனே உயிருக்கு அபாயம் விளைவிக்குந் தன்மையது. (5) ஸ்தநங்களுக்கு இரண்டு அங்குலம் மேலே **ஸ்தநரோஹிதங்கள்** என்னும் மர்மங்களும், (6) ஸ்தநங்களுக்கு இரண்டு அங்குலம் கீழே **ஸ்தநமூலங்கள்** என்னும் மர்மங்களும் உண்டு; ஸ்தநரோஹிதங்களில் அபிகாதமுண்டானால் மார்பறையினுள் இரத்தம் நிரம்பி மரணமுண்டாகும்; ஸ்தநமூலாபிகாதத்தினால் மார்பறையில் கபம் அதிகரித்து பிராணாபாயம் உண்டாகும். (7) மார்பினுள் இரு புறங்களிலும், வாயு உட்சென்றுவருவதற்குபயோகமான இரண்டு குழாய்கள் **அபஸ்தம்பங்கள்** என்று கூறப்படும்; இதில் அபிகாதமுண்டானால் மார்பறையில் இரத்தம் நிரம்பி, ச்வாஸமும் காஸமும் அதிகரித்து மரணம் ஸம்பவிக்கும். (8) முள்ளந்தண்டுக்கும் மார்புக்கும் இடையில் அவற்றிற்கு இரு புறங்களிலும், தோள்களுக்குக் கீழே **அபலாபங்கள்** என்கிற மர்மங்கள் உண்டு; அவற்றில் அபிகாதமுண்டானால் மார்பறையில் இரத்தம் நிரம்பி, சீழ் பிடித்து மரணமுண்டாகும். (9) முள்ளந்தண்டுக்கு இரண்டு பக்கங்களிலும் கூபகச் செவிகள் என்னும் இடுப்பின் பக்கப்பிதுக்கங்கள் இரண்டு அமைந்திருக்கின்றனவல்லவா? அதாவது பிருஷ்டங்களுக்கு மேலே அடுத்தாற் போல் முள்ளந்தண்டுக்கு இரு புறங்களிலும் அதைப்பற்றிக்கொண்டிருக்கும் பாகங்களில் **கடீகதருணங்கள்** என்கிற இரண்டு மர்மங்கள் இருக்கின்றன; இவ்விடங்களில் அபிகாதமுண்டானால் அபரிமிதமாய் இரத்தப்பெருக்கு எடுத்து, பாண்டு ரோகமுண்டாய், இயற்கையுருவம் அழிந்து உயிர்துறப்பான். (10) இடுப்பின் பக்கங்களில் முள்ளந்தண்டுக்கு இரு புறங்களிலுமுள்ள பூட்டுகளில் பிருஷ்ட

1. சிசு கர்ப்பத்திலிருக்கையில் நாபியில் நாபிக்கொடியின் மூலமாகவே இரத்தக் குழாய்கள் சிசுவின் தேஹமெங்கும் பரவுவது இயல்பாகையால், அதை ஆதாரமாகக்கொண்டு ஸிரைகளுக்கெல்லாம் நாபி ஆதாரமானது என்று கூறப்படுவதாய் அறிக.

2 ஆமாசயத்தின் மேல்த்வாரம் இருதயத்தின் முனைக்கு அருகிலிருப்பதால் இங்ஙனம் கூறப்பட்டது.

ங்களுக்கு வெளியில் குகுந்தரங்கள் என்னும் மர்மங்கள் அமைந்திருக்கின்றன; இவை தாக்கப்படுமானால் கீழே கால்கள் அசைக்கமுடியாமற் போவதுடன் பரிசவுணர்ச்சியும் போய்விடும். (11) கூபகச் செவிகளுக்குமேல் இரு புறங்களிலும் உட்பக்கமாய் முருந்துகளை ஆச்ரயித்தவைகளாய் அவ்விடத்திலுள்ள ஆசயங்களையும் மறைத்துக் கொண்டு இருக்கும் மர்மங்கள் நிதம்பங்கள் எனப்படும்; இவற்றில் அபிகாதமுண்டானால், இவ்விடத்திற்குக் கீழுள்ள அவயவங்களில் வீக்கமுண்டாய், தேஹவலிமை குன்றிப்போய் மரணம் ஸம்பவிக்கும். (12) பிருஷ்டபாகங்களுக்கும் உடலின் பக்கங்களுக்கும் இடையில் பாரிசங்களுக்கு உட்புறமாய் குறுக்காகவும் மேல்நோக்கியவாறு அமைந்துள்ளவை பார்ச்வஸந்திகள் என்னும் மர்மங்களாம்; அவை தாக்கப்படுமானால் அவ்விடத்திலுள்ள கூபகக்குழியில் இரத்தம் நிரம்பி மரணமுண்டாகும். (13) முற்கூறிய ஸ்தநமூலங்கள் என்னும் மர்மங்களுக்கு நேர் இரேகையில் முள்ளந்தண்டுக்கு இரு புறங்களிலும் அதைச் சார்ந்தாற்போல இரண்டு மஹாஸிரைகள் உண்டு; அவற்றிற்கு ப்ருஹதீ எனப் பெயர்; இந்த மர்மஸ்தானங்கள் தாக்கப்பட்டால், அபரிமிதமாய் இரத்தப்பெருக்கு உண்டாய் இறந்துவிடுவான். (14) முள்ளந்தண்டுக்கு இரண்டு பக்கங்களிலும், புஜ மூலங்களில் அமைந்துள்ள அம்ஸபலகங்கள் என்னும் மர்மங்களில் அபிகாதமுண்டானால் புஜங்களில் பரிசவுணர்ச்சியிழந்துபோய் அவை சுஷ்கித்துப் போகும். 10—24½.

தோளுக்கு மேற்பட்டுள்ள மர்மங்களும் அவற்றிலுண்டாகும் அபாயங்களும் :—(1)கழுத்துக்கு இருபுறங்களிலும் கழுத்து, புஜம், சிரஸ் இம்மூன்றுக்குமிடையில், கழுத்தின் அடிப்புறத்தையும் தோள்ப்பட்டையையும் இணைத்துச் சேர்ப்பவையான இரண்டு ஸ்நாயுக்கள் அம்ஸங்கள் என்கிற மர்மங்களாம்; இவற்றில் அபிகாதமுண்டானால் புஜங்கள் அவற்றின் வேலையை இழந்துவிடநேரிடும். (2) கண்டநாடியென்னும் பெரிய நரம்புக் கொடிக்கு இரண்டு பக்கங்களிலும் முகவாய்க்கட்டையின் மூலப்பிரதேசங்களைப் பற்றிக்கொண்டு நான்கு மர்மங்கள் இருக்கின்றன; அவற்றுள் இரண்டு நீலா என்றும், இரண்டு மந்யா என்றும் வழங்கப்படும்; இவற்றில் அபிகாதமுண்டானால் குரல் கம்மிப்போய் அல்லது வேறுவித மாறுதலடைவதுடன், சுவையறியும் உணர்ச்சியும் குன்றிப்போகும். (3) கழுத்திலுள்ள நாடிக்கொடியின் இரு புறங்களிலிருந்தும் நாக்குக்கும் நாசிக்கும் தனித்தனியே இரண்டிரண்டாகப் போகிற நான்கு நாடிகள் மாத்ருகைகள் என்னும் மர்மங்களாம்; இவை அபிகாதப்பட்டால் தக்ஷணமே பிராணாபாயமுண்டாகும். (4)சிரஸஸும் கழுத்துமகூடுமிடத்திலுள்ள இரண்டு மர்மங்கள் க்ருகாடிகைகள் எனப்படும்; அவ்விடம் அபிகாதமுண்டால் தலை நிற்க முடியாமல் ஆடிப்போகும். (5) செவிகளுக்குக் கீழே அடுத்தாற்போல் இரண்டு பக்கங்களிலும்

விதுரைகள் என்கிற இரண்டு மர்மங்கள் உண்டு; அவை தாக்கப் படுமானால் சப்தமுணரும் சக்தி யிழக்கப்படும். (6) நாசியின் உட்புறப்பாதைக்கு இரண்டு பக்கங்களிலும், காதுகளுக்குச் செல் லும் பாதைகளை அநுஸரித்து ஓடுபவையான இரண்டு மர்மங்கள் தொண்டையினுள் மேற்புறமாய் அமைந்திருக்கின்றன; அவ்வி ரண்டுக்கும் பணங்கள் எனப் பெயர்; இவற்றின் அபிகாதத்தினால் நாசியானது மணமறியும் சக்தியை இழந்துவிடும். (7) கண்களுக்கு வெளியில், புருவங்களுடைய வால்முனைகளுக்குக் கீழே அபாங்கங் கள் என்று இரண்டு மர்மங்களும், (8) அவ்விதமே அவற்றிற்கு மேலே சிறு குழிபோன்றவையாய் ஆவர்த்தங்கள் என்று இரண்டு மர்மங்களும் உணடு; இந்த நான்கு மர்மங்கள் அபிகாதப்பட்டால் கண்கள் பார்க்கும் சக்தியை இழந்துவிடும். (9) நெற்றிக்கட்டின் முனைகளில், செவிகளின் பக்கமாய் ஒவ்வொரு பக்கத்திலும் சங் கங்கள் என்று இரண்டு மர்மங்கள் உண்டு; அவற்றில் அபிகாத முண்டானால் உயிருக்கு உடனே அபாயம் நேரிடும். (10) சங்கங் களுக்கு மேலே முன்னெற்றிமயிர்களின் இரேகைக்கு நேரில் உத் க்ஷேபங்கள் என்கிற இரண்டு மர்மங்களும், (11) புருவங்களுக்கு நடுவில் ஸ்த்தபநீ என்கிற ஒரு மர்மமும் உண்டு; இந்த மூன்று மர்மஸ்த்தாநங்களிலும் ஏதாவது சல்யம் உட்புகுந்தால் அச் சல்யம் வெளிப்படுத்தப் படாமலிருந்தால், அல்லது சல்யம் தானா கவே பழுத்து வெளிப்படுமானால் மனிதனுக்கு அபாயமொன்று மிராது; அச்சல்யத்தை வலிய இழுத்து வெளிப்படுத்தினால் பிராணா பாயம் நேரிடும்.[1] (12) தொண்டையாகிய மேல்வாயின் அடிப்புறத் தில், நாக்கு-நேத்திரம்-நாசி-செவி இவற்றின் த்வாரங்கள் ஒன்று கூடும் பிரதேசத்தில், இந்த நான்கு ஸ்ரோதஸ்ஸுக்களாகிற சிருங் காடகங்கள் என்னும் மர்மங்களின் நான்கு வாயில்கள் அமைந்திருக் கின்றன; அவற்றில் அபிகாதமுண்டானால் உடனே பிராணபாயம் நேரிடும். (13) சிரக்கபாலத்தில் குறுக்காகவும் நெடுகவும் ஐந்து கூட் டுப்பாகங்கள் உண்டு; அவ்வைந்துக்கும் ஸீமந்தங்கள் எனப் பெயர்; அவை அபிகாதப்படுமானால் தலைச்சுற்றலும், பித்துப்பிடித்தலும், மதிமயங்கிப்போவதும் ஆக இவ்வித விகாரங்கள் ஸம்பவித்து உயி ரிழக்க நேரிடும். (14) சிரஸ்ஸின் உச்சியில் ஸிரைகள்[2] ஒன்று கூடு

1. சல்யம் வலிய இழுத்து வெளிப்படுத்தப்படுவதால் பிராணபாய முண்டாவதாலே இந்த மர்மங்கள் "விசல்யக்நங்கள்" என்று வழங்கப்படும். விசல்யக்நம் என்றால்—சல்யம் வெளிப்படுவதால் பிராணனைப் போக்குவது எனப் பொருள்.

2. ஸிரைகள் என்பதற்கு இவ்விடத்தில் காரிரத்தக் குழாய்கள் என்று பொருளல்ல; இந்த மர்மஸ்த்தாநத்திற்குள்ள பிராதான்யத்தை உற்று நோக்கினால், கிரந்த கர்த்தா ஸிரைகள் என்பதால் நரம்புகள் என்னும் நாடி களின் தொகுதிகளைக் குறிப்பிடுவதாகக் கூறவேண்டும்.

மிடத்தில் மயிர்ச்சுழியுள்ள மத்தியபாகத்தின் உட்புறமாக அதிபம் என்கிற மர்மம் அமைந்திருக்கிறது ;[1] அது தாக்கப்படுமானால் உடனே உயிர் நீங்கிவிடும். 25—36½.

**மர்மங்கள் ஆறுவிதம் :**—தேஹத்தில் எவ்விடம் விஷமமாகத் துடிக்குமோ, எவ்விடம் அழுத்தப்படுவதால் விஷமமான வலியுண்டாகின்றதோ அது **மர்மஸ்த்தாநம்** ஆகும்.[2] மாம்ஸபேசிகள், அஸ்த்திகள், ஸ்நாயுக்கள், தமநிகள், ஸிரைகள், ஸந்திகள் இவற்றின் சேர்க்கை எங்கெங்கு இருக்கின்றதோ அவ்வவ்விடமும் மர்மமாகும்[3] ; ஆகையினாலேயே இவ்விடங்கள் உயிருக்கு ஆதாரமானவையாம். முதலில் மர்மங்கள் வெகு விதமாக விவஹரிக்கப்பட்டபோதிலும்,[4] இங்கு கூறப்பட்ட விதமாக அவற்றை ஆறு தொகுதிகளாகப் பிரித்து எண்ணலாம். அல்லது மர்மங்கள் அனைத்துமே உயிர் நிலைகளாயமைந்துள்ளவை யென்னும் பொதுவான விதியைக் கொண்டு, அவையனைத்தையும் ஒரே தொகுதியாகவும் எண்ணலாம். (1) நான்கு இந்திரவஸ்திகள், நான்கு தலஹ்ருதயங்கள், இரண்டு ஸ்தநரோஹிதங்கள் ஆக இப்பத்தும் **மாம்ஸ மர்மங்களாம்**. (2) எட்டு விதமான **அஸ்த்தி மர்மங்கள்** உண்டு ; அவையாவன ; சங்கங்கள் இரண்டு ; கடீகதருணங்கள் இரண்டு; நிதம்பங்கள் இரண்டு ; அம்ஸபலகங்கள் இரண்டு. (3) இருபத்திமூன்று **ஸ்நாயு மர்மங்கள்** இருக்கின்ற ; அவையாவன[4] ஆணிமர்மங்கள் நான்கு, கூர்ச்சங்கள் நான்கு, கூர்ச்ச சிரஸ்ஸுகள் நான்கு, அபாங்கங்கள் இரண்டு, க்ஷிப்ரங்கள் நான்கு, உத்க்ஷேபங்கள் இரண்டு, அம்ஸபலகங்கள் இரண்டு, வஸ்தி ஒன்று. (4) குதம் ஒன்று, அபஸ்தம்பங்கள்

---

1. அதிபம்—இதுவே மஸ்திஷ்கம் என்னும் மூளையின் முக்கியமான பாகமாகும். தேஹத்தில் ஸ்த்தூலமும் ஸூக்ஷ்மமுமான எல்லா அவயவங்களுடையவும் அகில காரியங்களையும் இவ்வவயவம் தனது அதிகாரத்தில் வைத்து நடத்து மியல்புடையதாகையால் இதற்கு அதிபம் எனப் பெயரிடப்பட்டது. [இவ்வாறே முற்கூறிய மர்மங்களுக்கும் அவ்வவற்றின் தன்மைகளுக்குத் தகுந்தவாறு பெரும்பாலும் பெயரிடப்பட்டிருக்கின்றன.]

2. விஷமமான துடிப்புகளைக் கொண்டு சில மர்மங்களையும், விஷமமான நோயைக்கொண்டு வேறு சில மர்மங்களையும் அறியலாம் எனக் கருத்து.

3. மாம்ஸபேசி முதலியது அததற்குச் சொந்தமான இனத்துடன் தனித் தனியாகக் கூடும் பாகம் மர்மம் என்று குறிக்கப்படுவதாகக் கருத்து. அதாவது—மாம்ஸபேசிகள் அநேகம் ஒருமிக்கக் கூடுமிடம் மாம்ஸமர்மமாகும் ; இவ்விதமே அஸ்த்திமர்மம், ஸ்நாயுமர்மம், தமநீமர்மம், ஸிராமர்மம், ஸந்திமர்மம் இவற்றையும் கவனிக்க வேண்டும் [ஸந்திமர்மம் என்றால், இரண்டு அஸ்திகள் கூடுமிடமல்ல ; இரண்டுக்கு மேற்பட்ட எலும்புகளின் பலவிதமான கூட்டுகள் உள்ள இடம் ஸந்திமர்மமாகும்.]

4. வெகு விதமாக என்பதால் நூற்றேழு விதமாகப் பிரிக்கப்பட்ட விஷயம் குறிக்கப்படுகிறது.

இரண்டு, விதுரைகள் இரண்டு, சருங்காடகங்கள் நான்கு; ஆக இவ்வொன்பதும் தமநீ மர்மங்கள் எனப்படும். முப்பத்தேழு ஸிரா மர்மங்கள் உண்டு; அவையாவன; இரண்டு ப்ருஹதிகள், எட்டு மாத்ருகைகள், இரண்டு நீலைகள், இரண்டு மந்யைகள், இரண்டு கக்ஷதரங்கள், இரண்டு பணங்கள், இரண்டு விடபங்கள், ஒரு இருதயம், ஒரு நாபி, இரண்டு பார்ச்வஸந்திகள், இரண்டு ஸ்தந மூலங்கள், இரண்டு அபலாபங்கள், ஒரு ஸ்த்தபநீ, நான்கு உர்வீக் கள், நான்கு லோஹிதாக்ஷங்கள். இருபது ஸந்திமர்மங்கள் உண்டு. அவையாவன; ஆவர்த்தங்கள் இரண்டு, மணிபந்தஙகள் இரண்டு, குகுந்தரங்கள் இரண்டு, ஐந்து ஸீமந்தங்கள், இரண்டு கூர்ப்பரங் கள், இரண்டு குல்பங்கள், இரண்டு க்ருகாடிகைகள், இரண்டு ஜாநுக்கள், ஒரு அதிபதி. 37—44½.

சில மர்மங்களுக்குப் பெயரில் விவஹார பேதம்:—இதர வைத் தியாசாரியர்களுடைய[1] கொள்கைப்படி குதம் மாம்ஸமர்மமாக வும், கக்ஷதரங்கள்-விடபங்கள் - விதுரங்கள் இவை ஸ்நாயுமர்மங் களாகவும், சருங்காடகங்கள் ஸிராமர்மங்களாகவும் கருதப்படு கின்றன; மேலும் அபஸ்தம்பங்களும் அபாங்கங்களும் தமநீமர் மங்களாகவும் அவ்வாசாரியர்களால் கருதப்படவில்லை.[2]—45, 46.

ஆறு விதமர்மங்களும் அபிகாதப் படுவதனுலுண்டாகும் அபா யங்கள்:—(1)மாம்ஸ மர்மம் தாக்கப்படுமாகுல் இறைச்சி கழுவிய நீர் போல் ஒருவாறு தெளிவுள்ளதாய் இரத்தம் இடைவிடாமல் கசிந்து கொண்டிருக்கும்; உடலெல்லாம் ஒருவாறு வெளிறிவிடும்; புலன் கள் விஷயமுணரும் சக்தியை இழக்கும்; இறுதியில் சீக்கிரத் திலேயே மரணம் ஸம்பவிக்கும்.[3] (2) அஸ்த்தி மர்மத்தில் அபிகாத முண்டானுல் அதில் ஏற்படும் இரத்தக்கசிவானது மஜ்ஜையுடன் கூடியதாகவும், தெளிவாகவும், இடை இடையே விட்டு விட்டும் பெருகிவரும்; வலியும் விசேஷமாயுண்டாகும். (3) ஸ்நாயுமர்மத் தில் அபிகாத முணடானுல் அவ்விடத்தில் விறைப்பும், கொறுக்கு வலியும், அசைக்கமுடியாமையும், அதிகமான வலியும் உண்டாகும்; வாஹநங்களில் ஏறுவதற்கும், நிற்பது அல்லது படுத்திருப்பதற்

1. தன்வந்தரி அல்லது ஸுச்ருதர் முதலியவர் இதர வைத்தியா சாரியர்கள்.

2. வாக்படர் அபாங்கமர்மத்தை தமநீமர்மமாகத் தாமே கூறுமலிருக்க (இவரால் ஸ்நாயுமர்மமாகக் கூறப்பட்டிருக்க) இதரர் அதை தமநீமர்மமாகக் கூறவில்லை யென்பதன் கருத்து விளங்கவில்லை.

3. இரத்தம் எப்பொழுதும் இடைவிடாமற் கசிந்து இரத்தம் தேஹத் தில் குறைந்து விடுவதால் உடல் வெளிறிவிடும்; தேஹபலம் குன்றிப்போய் இந்த்ரியங்கள் அவற்றின் சக்தியை இழக்க நேரிடுகிறது; இவ்வாறு பலங் குன்றிப்போய் இந்த்ரியங்களும் சக்தியிழக்கவே சீக்கிரம் உயிர் துறப்பதும் இயல்பானதே.

கும், உட்காருவதற்கும் திறமையில்லாமற் போகும்; அவயவங்கள் உருவத்திலும் வேலையிலும் ஒழுங்கின மடையும்; அல்லது மரண மாவது நேரிடும். (4) தமநீமர்மம் தாக்கப்படுமானால், தமநியி லிருந்து இரத்தம் ஒருவித சப்தத்தோடு உஷ்ணமாக நுரைத்துக் கொண்டு விசேஷமாய் வெளியாகும்; அம்மனிதனுக்கு மூர்ச்சையு முண்டாகும். (5) ஸிராமர்மத்தில் அபிகாதமுண்டானால், ஸிரை களிலிருந்து இரத்தம் தடிப்பாகவும், இடைவிடாமலும், அதிகமாக வும் பெருகும். அவ்விதம் இரத்தம் தேஹத்திலிருந்து வெளிப் பட்டுவிடுவதால் நாவரட்சியும், தலைச்சுற்றலும், மேல்ச்வாஸமும், மூர்ச்சையும், விக்கலும் கிரமமாக ஏற்பட்டு, இறுதியில் மரணமும் உண்டாகக்கூடும். (6) ஸந்திமர்மம் தாக்கப்படுமானால், தாக்கப் பட்ட இடத்தில் சூகங்கள் என்னும் சிறு முளைகள் வியாபித்திருப் பது போன்ற இலக்ஷணம் காணப்படும்; அவ்விடம் ஆறிவிடுமா கில் அவ்விடம் முடமாகப்போய்விடும்; அவ்வவயவத்தின் இயற் கை வன்மையும் சலனவேலையும் இழக்கப்படும்; மற்றப் பாகம் சுருங் கித்து, அபிகாதமுண்டான பூட்டில் மட்டும் வீக்கம் நிலைத்து நிற் கும். 47—51.

ஸத்யப்பிராணஹர மர்மங்கள்.—நாபி, இரண்டு சங்கங்கள், அதிபம், குதம், இருதயம், நான்கு ச்ருங்காடகங்கள், வஸ்தி, எட்டு மாத்ருகைகள் என்னும் இப்பத்தொன்பதும் ஸத்யப்பிராணஹர மர்மங்கள் எனப்படும்; உடனே யாவது, அபிகாதமுண்டான பிறகு ஏழு நாட்களுக்குள்ளாவது உயிருக்கு அபாயமுண்டாகும். 52, 52½.

காலாந்தரப் பிராணஹர மர்மங்கள்.—இரண்டு அபஸ்தம்பங் கள், நான்கு தலஹ்ருதயங்கள், இரண்டு பார்ச்வஸந்திகள், இரண்டு கடீகதருணங்கள், ஐந்து ஸீமந்தங்கள், இரண்டு ஸ்தநமூலங்கள், நான்கு இந்திரவஸ்திகள், நான்கு க்ஷிப்ரங்கள், இரண்டு அபலாபங் கள், இரண்டு ப்ருஹதீக்கள், இரண்டு நிதம்பங்கள், இரண்டு ஸ்த நரோஹிதங்கள் என்னும் இம்முப்பத்து மூன்றும் காலாந்தரப் பிரா ணஹர மர்மங்கள் எனப்படும்; என்றால் இவற்றில் அபிகாதமுண் டானால் ஒரு மாஸத்திலாவது ஒன்றரை மாஸத்திலாவது மரணம் ஸம்பவிக்கும். 53—54½.

விசல்யப் பிராணஹர மர்மங்கள்.—இரண்டு உத்க்ஷேபங்கள், ஸ்தபநீ ஆக இம்மூன்றும் விசல்யப் பிராணஹர மர்மங்கள் எனப் படும்[1]; இந்த மர்மங்களில் எதிலேனும் சல்யம் ஏதாவது பிரவே சித்து விட்டால், அவ்விடத்தில் வாயுவானது மாம்ஸபேசிகளையும்,

---

1. விசல்யப் பிராணஹரம்—தேஹத்திற் பாய்ந்துள்ள சல்யத்தை வெளிப்படுத்துவதால் பிராணாபாயமுண்டாக்கும் உயிர்நிலையெனப் பொருள். இதுவே **விசல்யக்நம்** என்றும் கூறப்படும்.

வஸையையும், மஜ்ஜையையும், நரம்பு நிணங்களையும்[1] சோஷணம் செய்து விட்டு, அவ்விடத்தில் வாயு மாத்திரம் சேர்ந்திருக்குமாகையால், சல்யத்தை வெளிப்படுத்தியதும், அவ்வாயுவும் வெளிப்பட்டு, ச்வாஸ-காஸங்களை உண்டாக்கி, உயிரைப் போக்கி விடுகிறது.—55, 56.

வைகல்யகரமர்மங்கள்.—இரண்டு பணங்கள், இரண்டு அபாங்கங்கள், இரண்டு விதுரங்கள், இரண்டு நீலைகள், இரண்டு மந்யைகள், இரண்டு க்ருகாடிகைகள், இரண்டுஅம்ஸங்கள், இரண்டு அம்ஸபலகங்கள், இரண்டு ஆவர்த்தங்கள், இரண்டு விடபங்கள், நான்கு உர்வீக்கள், இரண்டு குகுந்தரங்கள், இரண்டு ஜாநுக்கள், நான்கு லோஹிதாக்ஷங்கள், நான்கு ஆணிகள், இரண்டு கக்ஷதரங்கள், நான்கு கூர்ச்சங்கள், இரண்டு கூர்ப்பரங்கள் என்னும் இந்த நாற்பத்து நான்கும் வைகல்யகர மர்மங்கள் எனப்படும்;[2] இவற்றினும் அபிகாதம் மிக்க வலிவாகத் தாக்கினுல் அவையும் சில ஸமயம் பிராணனைப் போக்கும்.—57, 58½.

ருஜாகர மர்மங்கள்:—கூர்ச்ச சிரஸ்ஸுகள் நான்கு, குல்பங்கள் இரண்டு, மணிபந்தங்கள் இரண்டு ஆக இவ்வெட்டும் ருஜாகர மர்மங்கள்[3] எனறு வழங்கப்படும்.—59.

மர்மங்களின் அளவுகள்.—அவற்றுள் (1) விடபங்கள், கக்ஷதரங்கள், உர்வீக்கள், கூர்ச்ச சிரஸ்ஸுகள் என்னும் இப்பன்னிரண்டு மர்மங்களில் ஒவ்வொன்றும் விஸ்தீர்ணத்தில் ஒவ்வொரு அங்குலம் அளவுடையதாகும். (2) மணிபந்தங்கள், குல்பங்கள், ஸ்தநமூலங்கள் இவற்றில் ஒவ்வொன்றும் இரண்டிரண்டு அங்குலம் அளவான விஸ்தீர்ணமுடையன. (3) ஜாநுக்களும் கூர்ப்பரங்களும் தனித்தனியே மும்மூன்று அங்குலம் அளவுடையவையாம். (4) குதம், வஸ்தி, இருதயம், நாபி, நீலைகள், ஸீமந்தங்கள், மாத்ருகைகள், கூர்ச்சங்கள், ச்ருங்காடகங்கள், மந்யைகள் என்னும் இவ்விருபத்தொன்பது மர்மங்களும் அவரவருடைய கையால் ஒவ்வொரு உள்ளங்கை அளவுடையவையாம். (5) மிச்சமுள்ள ஐம்பத்தாறு மர்மங்களும் அவரவருடைய கையால் அரை அங்குலம் அளவுள்ளவையாகும். வேறு சில வைத்தியாசாரியர்களின் அபிப்பிராயப்படி இவை எள் அல்லது நெல் அளவுள்ளதாம். 60—62¾.

---

1. மஸ்துலுங்கம் என்பதால் மூளையும், மூளை ஸம்பந்தமான நரம்புகளின் அம்சமாயுள்ள நிணங்களும் குறிக்கப் படுகின்றன.

2. வைகல்யகர மர்மங்கள்—அபிகாதத்தினுல் அந்தந்த அவயவம் ஏதேனும் ஒரு குறிப்பிட்ட வகையில் ஸ்த்திரமான கோளாறை யடைந்து விடுமாகையால் இப்பெயர் வந்தது.

3. ருஜாகரங்கள்—அபிகாதத்தினுல் வேறு எவ்வித விகாரமுமுண்டாகாமல் வலிமாத்திரம் எப்பொழுதும் நிலைத்திருக்கும் உயிர் நிலைகளாம்.

மர்மங்கள் தாக்கப்படுவதால் மரணமுண்டாகும் வகை.—முன்னால் ஸிரைகள் நான்கு விதங்களாக விவரிக்கப்பட்டுள்ளன; அவை தேஹம் அனைத்தையும் போஷித்துத் திருப்தியுறச் செய்கின்றன. அதே ஸிரைகள் மர்மங்களையும் ஆச்ரயித்திருக்கின்றன; அவை தாக்கப்பட்டு விட்டால், இரத்தம் மிதமிஞ்சி வெளிப்படுமாகையால், அப்பொழுது தாதுக்கள் விரைவில் க்ஷயமடைய நேரிடும்; அதனால் வாயு விருத்தியடைந்து கடுமையான வலியையும் வேதனையையும் உண்டுபண்ணும்; அப்பொழுது பித்தமும் தூண்டப்பட்டு விருத்தியடைய, அப்பித்த வெழுச்சியால் நாவரட்சி, தாதுக்ஷயம், வெறி, தலைச்சுற்றல் இவை உண்டாகும்; அப்பால் அவனுடைய தேஹத்தில் வியர்வை அதிகரித்து அளவற்ற சிரமமும் தளர்ச்சியும் உண்டாய் அவன் இறுதியில் இறந்துவிடுகிறான். 63—65½.

மர்மம் தாக்கப்பட்டதும் செய்யவேண்டிய சிகித்ஸை.—மர்மஸ்தானத்தில் அபிகாதமுண்டானால், சீக்கிரம் அதற்குச் சமீபத்திலுள்ள ஸந்திவரையில் அவ்வவயவத்தை அறுத்து விலக்கிவிட வேண்டும்; ஏனெனில், ஸந்திப் பிரதேசம் வரையில் அறுக்கப்படுமானால், ஸிரைகள் சுருங்கிக் கொள்ளும்; ஆகவே இரத்தப் பெருக்கு நின்றுப் போய்விட, அதனால் பிராணாபாயத்தினின்றும் பிணியாளி தப்பிவிடுவான்.—66, 67.

மர்மஸ்த்தானங்களைக் காக்கவேண்டியதன் முக்கியம்.—மர்மஸ்த்தானமல்லாத விடத்தில் அபிகாதம் பலமாகத் தாக்கியபோதிலும் அம்மனிதன் பிழைப்பான்; பிராணஹரமெனக் கூறப்பட்டுள்ள மர்மத்திலோ சிறிதளவு தாக்கினாலும் பிழைக்க மாட்டான். எவனாவது ஒருவன் வைத்தியனுடைய திறமையினாலாவது, அபிகாதம் மிகச் சொற்பமாகத் தாக்கியதாலாவது பிழைத்து விட்டபோதிலும், தாக்கப்பட்ட இடத்தில் ஏதேனும் நிலையான கோளாறு உண்டாய் விடும். மர்மஸ்த்தானங்கள் இவ்வளவு அபாயகரமாயிருப்பதால், அவ்விடங்களில் க்ஷாரப்பிரயோகம், விஷகுணமுள்ள ஔஷதங்களின் பிரயோகம், அக்னிப் பிரயோகம் இவை முதலியவற்றைச் செய்யாமல் ஜாக்கிரதையோடிருந்து சிகித்ஸை செய்யவேண்டும். மர்மஸ்த்தானங்களில் தாக்கிய அபிகாதம் மிகச் சொற்பமாயிருந்தபோதிலும் பெரும்பாலும் அதிக துன்பமளிக்கும்; மர்மங்களைப்பற்றிய வியாதிகளும் அவ்விதமே பெரு முயற்சியோடு சிகித்ஸிக்கப்பட்டும், விசேஷமான கஷ்டங்களை யுண்டு பண்ணுகின்றன. 68—70.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

### விக்ருதி விஞ்ஞாந சாரீரம்.

இனி விக்ருதி விஞ்ஞாந சாரீரம்[1] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும்.—

**ரிஷ்டத்தின் விவரணம்.**—(1) இனியுண்டாகும் கனிக்கு மலர் போலவும், அக்னிக்குப் புகைபோலவும், மழைக்கு மேகம் போலவும், ஸம்பவிக்கப்போகிற மரணத்துக்கு **ரிஷ்டம்**[2] என்பது நிச்சயமான குறியாகக் கருதப்படுகிறது. ரிஷ்டமன்றியில் மரணம் உண்டாவதுமில்லை, உயிருடன் நீண்டகாலம் ஜீவித்திருக்க வேண்டியவனிடம் ரிஷ்டம் காணக்கூடியதுமில்லை. திறமையின்மையினால் ரிஷ்டமில்லாததை ரிஷ்டமாகவும், ரிஷ்டத்தை ரிஷ்டமல்லாததாகவும் பிரமிப்பதுண்டு. (2) சிலர் ரிஷ்டத்தை இரண்டுவிதமாகப் பிரித்துக் கூறுவர்; அவற்றுள் ஒன்று **ஸ்த்தாயி ரிஷ்டம்** என்றும், மற்றொன்று **அஸ்த்தாயி ரிஷ்டம்** என்றும் கூறப்படும். தோஷங்கள் அதிகமாகச் சேர்ந்து வியாதி ஸம்பவித்தால், போலி ரிஷ்டமும் உண்டாகக்கூடும்; இதுவே அஸ்த்தாயி ரிஷ்டம் என்றும் **ரிஷ்டாபாஸம்** என்றும் கூறப்படும்; விகாரமடைந்த தோஷங்கள் அடங்கிவிட்டால் அந்த அஸ்த்தாயி ரிஷ்டமும் அடங்கி மறைந்து விடும். ஸ்த்தாயிரிஷ்டம் என்பது அவசியம் மரணம் உண்டாகுமென்பதைக் குறிப்பிடுவதாகும். (3) உருவம் அல்லது நிறம், இந்த்ரியங்கள், குரல், சாயை, பிரதிச்சாயை யென்னும் பிரதிபிம்பம், செய்கை இவை முதலியவற்றிலும், மற்றுமுள்ள இயற்கைத் தன்மைகளிலும், காரணமறிய முடியாமலே விகாரம் உண்டானால், இவை சுருக்கமாக **ரிஷ்டம்** எனப்படும். 1—5.

**ஒவ்வோரு அவயவத்தைப் பற்றிய ரிஷ்டக் குறிகள்.**—(1) உடலிலும் சிரஸ்ஸிலுமுள்ள மயிர்கள் எண்ணெய் முதலிய ஸ்நேஹவஸ்து சேராமலே எண்ணெய்ப் பூசியதுபோல் காணப்படும். (2) கண்கள் மிகவும் உருண்டுருண்டு ஆடிக்கொண்டு அல்லது அசையாமல் இருந்துகொண்டு பள்ளத்தில் விழுந்து நிற்கும்; அல்லது கண்கள் மிகவும் அதிகமாய் வெளியிற் பிதுங்கி வந்திருப்பதாகத் தோற்றும்; வக்கிரமாயிருப்பதாகவாவது காணப்படும்; கண்கள் மூடப்படாமலே திறந்த நிலைமையிலும், மூடிய கண்கள் திறக்கப்படாமல்

1. இயற்கை நிலைமை பிரக்ருதி எனப்படும்; பிரக்ருதியின் மாறுபட்ட நிலைமை (அதாவது பிரக்ருதத்தில் மனிததேஹத்தின் இயற்கைக்கு மாறான நிலைமை) விக்ருதி யெனப்படுகிறது. அவ்விகாரங்களை அறிவதற்கான இலக்ஷணங்களை விளக்கும் அத்தியாயம் "விக்ருதி விஞ்ஞாநம்" என்று கூறப்படுகிறது.

2. ரிஷ்டம்—தேஹத்திற்கு வியாதி முதலியதால் உண்டாகப்போகிற அபாயங்களை அறிவிக்கும் முற்குறி.

மூடிய நிலைமையிலும் நிற்கும்; வஸ்துக்களை நன்றாகப் பார்க்க முடியாமல் தத்தளித்தப் பார்வையும், மந்தமான பார்வையும் ஏற்படும்; கிரிப்பிள்ளையின் கண்களைப் போலவும், மாடப்புறாவின் கண்களைப் போலவும், கொள்ளிக்கட்டையின் சாயலாகவும் தோற்றக்கூடும்; கண்களிலிருந்து அடிக்கடி ஜலம் பெருகும்; இமை மயிர்கள் உதிர்ந்துவிடும். (3) நாசியானது மிகவும் விரிந்த த்வாரங்களோடு கூடியதாகவும், மிகவும் சுருங்கிய த்வாரங்களுள்ளவை போலவும், கொப்புளங்கள் நிரம்பியதாகவும், மிகவும் விரிந்து வீங்கியதாகவும், வடிப்புள்ளதாகவும், வாடியதாகவும் காணப்படும். (4) உதடுகள் மேலிருப்பது கீழே தொங்கியும், கீழிருப்பது மேலுக்கு உயர்ந்தும் நிற்கும்; இரண்டு உதடுகளும் கனிந்த நாவற்பழங்களைப் போன்றவைகளாயிருக்கும். (5) பற்களில் சர்க்கரை யென்னும் காரை கட்டும். (6) நாக்கு வக்கிரமாகவும், விஸர்ப்பம் என்னும் புண்களுடன் கூடியதாகவும், மிக வெளுத்தும், உலர்ந்தும், தடித்துப் பெருத்தும், கருத்தும், ஏதோ மாப்பாண்டம் முதலியதால் பூசப்பட்டது போலவும், எப்பொழுதும் நீரொழுகிக் கொண்டும், முள்ளுகள் போன்ற முளைகளுடன் கூடியதுபோலவும்காணப்படும். (7) கழுத்தானது சிரஸ்ஸைச் சுமந்து நிற்கமுடியாததாகவும், (8) முதுகு தேஹத்தைத் தாங்கிக்கொண்டிருக்க வல்லமையற்றதாகவும் இருக்கும். (9) தவடைகள் அல்லது முகவாய்க்கட்டையின் பாரிசங்கள் வாயில் இடப்பட்ட கபளத்தைத் தாங்கி மெல்லுவதற்குத் திறமையற்றனவாகும். (10) அவயவங்கள் யாவும் திடீரென்று அதிக குருவாகவோ இலகுவாகவோ ஆய்விடும். (11) விஷப்பற்றுதல் ஏதுவும் இல்லாமலே நாசி, செவி முதலிய த்வாரங்களிலிருந்து இரத்தப் பெருக்கு உண்டாகும். (12) ஆண்குறியில் துர்நீர்க்கசிவு உண்டாகும். (13) பீஜகோசங்கள் அதிகமாகத் தாழ்ந்து தொங்கும். மேற்கூறிய குறிகளுக்கு விபரீதமான தோற்றங்கள் உண்டானால் அவையும் மிருத்யுவினால் ஏவப்பட்டு ஸம்பவித்த அவக்குறிகளேயாம்.[1] 6—13¼.

பல இந்த்ரிய ஸம்பந்தமான ரிஷ்டங்களுடைய குறிகளின் விவரங்கள்.—(1) ஒருவனுக்கு ஸிரைகள் நெற்றியிலாவது, வஸ்தியின் சிரஸ்ஸிலாவது கொடிகளைப் போலாவது, சந்திரனின் இளம்பிறையைப் போலவாவது, அதற்கு முன் காணப்படாத வகையில் விளக்கமாகக் காணப்பட்டால், அவன் ஆறு மாதங்களுக்கு மேல் ஜீவித்திருக்கமாட்டான். (2) ஒருவனுக்கு தேஹத்தில் விழுந்த ஜலமானது தாமரையிலையிலிருந்து நழுவுவதுபோல் சரீரத்தில் ஒட்டாமல்

1. நேர் விபரீதமான தோற்றங்கள் என்பதால், மயிர்களில் ஸ்நேஹம் பூசாமலே ஸ்நிக்த்தத் தன்மை முதலியவை காணப்படுவதற்கு நேர் எதிரிடையாக ஸ்நேஹம் பூசியும் ரூக்ஷமாகக் காணப்படுதல் முதலியவை குறிக்கப்படுகின்றன.

விழுந்துவிடுமானல் அவனும் ஆறு மாதங்களளவே ஜீவித்திருப்பான். (3) எவனொருவனுக்கு ஸிரைகள் இலைப்பசுமை நிறமாகவும் மயிர்க் கால்களின் முகங்கள் மூடப்பட்டவையாகவும் ஆய்விடுகின்றனவோ, அவன் பித்தப் பிரகோபமடைந்து, அம்லரஸத்திலும் விருப்பமதிகரித்தவனாய் சீக்கிரம் உயிர் துறப்பான். (4) ஒருவனுக்கு முகத்திலாவது சிரஸ்ஸிலாவது எண்ணெய்ப் பசையுடன் கூடியதும், வரட்டிப்பொடியைப் போன்றதுமான சூர்ணம் உண்டாய் உதிருமானல், தலையிலிருந்து தூமமாவது கிளம்புமானல் அவனுக்கு உயிர் வாழ்வு ஒருமாத காலமேயாம். (5) ஆரோக்கிய நிலைமையிலுள்ள ஒருவனுடைய சிரஸ்ஸிலாவது புருவங்களிலாவது புதிதாக ஸீமந்தங்கள் எனப்படும் வடுக்களும் சுழிகளும் உண்டாகுமானல், அவனுக்கு ஆறு தினங்களிலும், அதே குறிகள் வியாதிக்கிரஸ்தனுக்கு உண்டானல் மூன்று நாட்களிலும் மரணம் ஸம்பவிக்கும். (6) ஒருவனுக்கு நாக்குக் கருநிறமடைந்து, வாய் துர்க்கந்தம் வீசி இடது கண் பள்ளத்தில் ஆழ்ந்தும் விடுமானல், பக்ஷிகளாவது தலையின்மீது விழுந்தோடுமானல் அத்தகைய பிணியாளிக்கு சிகித்ஸை செய்யாமல் அவனைக் கைவிட வேண்டும். (7) ஒருவன் ஸ்நானம் செய்து, சரீரமெங்கும் சந்தனம் முதலியதைப் பூசிக்கொள்ள, அவனுடைய தேஹத்தில் மார்பிலுள்ள பூச்சு மாத்திரம் மிகவும் உலர்ந்து விட்டு, மற்ற அவயவங்களிலுள்ள லேபம் மாத்திரம் மிகவும் ஈரமாகவே இருக்குமானல், அவன் அரை மாஸத்திற்கு மேல் ஜீவித்திருக்க மாட்டான். (8) ஒருவனுடைய தேஹத்தில் திடீரென்று இயற்கை நிறமும் இயற்கைக்கு மாறான நிறமும் ஒரே காலத்தில் உண்டானலும், அப்படியே தேஹத்தில் சில அவயவங்களுக்குப் புஷ்டியும் வேறு சிலவற்றிற்கு இளைப்பும் ஒரே ஸமயத்தில் ஸம்பவித்தாலும் அவை ஸமீபத்தில் மரணமுண்டாவதைக் குறிப்பிடுபவையாம். (9) எவனுடைய விரல்கள் இழுத்துச் சுடிக்கப்படும்போது சுடிக்கமுடியாமலிருக்கின்றனவோ அவனும் நீண்ட காலம் பிழைக்கமாட்டான். அப்படியே க்ஷயம், காஸம் முதலிய சில வியாதிகளிலும் விரல் சுடுங்காமலிருப்பது மரணக்குறியாகும். (10) ஒருவனுக்கு இயற்கைக்கு விரோதமாக கண்டத்வனி யுண்டாவது, சுவாஸம் மிகக் குறுகி அல்லது நீண்டதாயிருப்பது, அல்லது நல்ல வாஸனையுள்ளதாகவோ துர்நாற்றமுள்ளதாகவோ இருப்பது, சரீரம் ஈரப்பசையுடையதாக அல்லது முற்றிலும் ஈரப்பசையற்றதாகக் காணப்படுவது, தேஹத்திலும், மலம் வஸ்திரம் விரணம் முதலியவற்றிலும் மனிதனுக்கு இயல்பில்லாத ஒருவித மணம் உண்டாவது, என்னும் இக்குறிகளைக்கொண்டு அம்மனிதனுடைய ஜீவிதகாலம் ஒரு வருஷத்திற்குமேல் நீடித்திராது என்று அறியலாம். (11) ஒருவனுடைய தேஹத்தில் நற்சுவையொன்று அதிகமாயேற்பட்டு ஈக்களும் பேன்களும் அதிக

மாகச் சேர்ந்தாலும், அதிகமாக தேஹத்தில் அருசியுண்டாய், ஈக்களும் பேன்களும் இவனைவிட்டு விட்டாலும் அவனும் ஒரு வருஷ காலத்திற்குமேல் ஜீவித்திருக்கமாட்டான். (12) எப்பொழுதும் சூடாகவே இருந்துவரும் அவயவங்களில் திடீரென்று சைத்தியம் ஸம்பவித்தாலும், அவ்விதமே எப்பொழுதும் குளிர்ச்சியாகவே இருந்துவரும் அவயவங்களில் திடீரென்று அபரிமிதமான உஷ்ணம் உண்டானாலும், வியர்வை-தேஹம் அசைக்க முடியாமற் போதல் இவை நிஷ்காரணமாய் திடீரென்று ஏற்பட்டாலும் அம்மனிதனும் ஒரு வருஷத்திற்கு மேல பிழைத்திருக்கமாட்டான். (13) எவனொருவன் சைத்தியத்தை அதிகமாயுண்டாக்கக்கூடிய கட்டிகள் ஸம்பவித்தும், தேஹமே மிகக் குளிர்ச்சியாயிருப்பதாகக் காணப்பட்டும் அதிக அழற்சியை அநுபவிக்கின்றானோ, குளிர்ச்சியினால் வருந்தும் நிலைமையிலும் சூட்டில் வெறுப்புள்ளவனாயிருக்கிறானோ அவன் சீக்கிரத்தில் இயமனுக்கு வசமாவான். (14) எவனொருவனுக்கு மார்பில் உஷ்ணமும், வயிற்றில் அமிதமான குளிர்ச்சியும் ஏற்படுகின்றதோ, மலம் உடைந்து வெளியாவதுடன் நாவறட்சியும் உண்டாகின்றதோ அவன் சவத்திற்குச் சமானமானவனேயாம். (15) மூத்திரமாவது, மலமாவது, சுக்ரமாவது ஜலத்தில் விடப்பட்டு அமிழ்ந்து விடுமானாலும், நாசியிலிருந்து வெளியாகும் கபமானது அநேக வர்ணமாயிருந்தாலும் அவன் ஒரு மாஸத்திற்குமேல் ஜீவித்திருக்கமாட்டான். (16) ஸமீபத்தில் மரிக்கப்போகும் மனிதன் ஆகாயம் ஸ்தூலமாகப் போய் குரு பதார்த்தமாக மாறியிருப்பது போலவும், ஸ்தூலமான பூமி முதலியது ஆகாயத்தைப்போல் மாறியிருப்பது போலவும் காண்பான்; உருவமில்லாத வாயு முதலிய வஸ்துவை உருவமெடுத்தது போலவும், உருவமுள்ளதை உருவமில்லாத வஸ்துபோலவும் காண்பான்; ஒளியுடன் பிரகாசிப்பதை ஒளியற்றதாகவும், அவ்விதமே வெண்மையானதைக் கருப்பாகவும், இல்லாத வஸ்து ஒன்று எதிரில் இருப்பதாகவும் அவனுக்குத் தோன்றும்; நேத்திரரோகமில்லாமலிருந்தும் ஒரு சந்திரனை அநேக சந்திரனாகவும் களங்கமற்றதாகவும் இருக்கக் காண்பதுண்டு. (17) நித்திரையின்றி விழித்திருக்கையிலேயே இராக்ஷஸர்களையும், கந்தர்வர்களையும், பிரேதங்களையும், மற்றும் அவைபோன்ற வேறு ரூபங்களையும் காண்பான். சீக்கிரம் இறக்கப்போகிற மனிதனுக்கு பயங்கரமான உருவங்கள் கண்களில் புலப்படும். (18) ஸப்த ருஷி நக்ஷத்திரங்களுக்குச் சமீபத்திலுள்ள அருந்ததீ நக்ஷத்திரத்தை யாவது, த்ருவநக்ஷத்திரத்தையாவது, ஆகாசகங்கையையாவது எவனொருவன் காணமுடியாதவனாகிறானோ, அவன் ஒரு வருஷ காலத்திற்குமேல் பிழைத்திருக்கமாட்டான். (19) ஒருவித சப்தமும் இல்லாத தருணத்தில் மேககர்ஜனை, நீரோட்டத்தின் தொனி,

வீணை, மேளம், புல்லாங்குழல் இவற்றின் ஒலி, மற்றும் பலவித மான சப்தங்கள் இவற்றைக் கேட்பான்; இவ்வித சப்தங்களில் ஏதாவது இருந்தால் அத்தருணத்தில் அது கேட்கப்படாமலும் போய்விடும்; காதுகளை விரல்களால் மர்த்தனம் செய்யும்போது "துக துக" என்கிற சப்தமும் கேட்காது; அவ்விதமே கந்த மென்ன, சுவையென்ன, பரிசமென்ன இவற்றையும், இருப்பவற்றை இராதவையாகவும், இராதவற்றை இருப்பவையாகவும் விபரீதமாக உணர்வான்; அல்லது முற்றிலும் உணரவேமாட்டான்; அவிந்து போகிற தீபத்தின் வாஸனையையும் முகர்ந்தறிய முடியாதவனுயிருப் பான். (20) சாஸ்திர முறைப்படி உபயோகிக்கப்பட்ட இரஸங் கள் தேஹத்திற்குத் துர்க்குண முண்டாக்கக்கூடியவையாகவும், முறைதவருக உபயோகிக்கப்பட்டவை ஆரோக்கிய கரமாகவும் இருப்பதுண்டு. (21) உடம்பில் புழுதி படிந்ததுபோல் தோற்றும். (22) தேஹத்தில் அடி முதலியது தாக்குவதையும் அவன் உணர மாட்டான். (23) கடுமையான தவம் புரியாமலும், சாஸ்திர முறைப் படி யோகாப்யாஸம் செய்யாமலும், இந்திரியங்களுக்கு அகோசர மான விஷயத்தை ஒருவன் அறிந்து விடுவானுனல் அவனுக்கும் சீக்கிரம் மரணமுண்டாகுமெனக் கூறலாம். (24) எவனுடைய குரலானது ஹீனஸ்வரமாகவாவது, தீனமாகவாவது, நன்கு விளங் காததாகவாவது, தழுதழுத்ததாகவாவது இருக்கின்றதோ, எவ னொருவன் ஏதோ சொல்ல விரும்பியும் திடீரென்று பேச முடியாமல் பிரமித்துவிடுகிறுனே அவன் நீடித்த நாள் ஜீவித்திருக்கமாட்டான். (25) குரல் துர்ப்பலமடைந்தாலும், தேஹவன்மையாவது நிற மாவது ஹீனமானாலும், தகுந்த காரணங்களின்றியே வியாதி யுண்டானாலும் அவ்விதக் குறிகளைக் கண்டு மரணம் ஸமீபத்திருப்ப தாகக் கூறலாம். தனக்கு அந்திமகாலம் நேரிட்டிருப்பதாக இயற் கைக்கு விரோதமான தொனியோடு பேசுபவனும், அவ்விதமான சப்தமொன்று உண்டாவதாகச் செவியுறுபவனும் சிகித்ஸைக்குத் தகாதவனென்று நிச்சயித்து வைத்தியன் அவனைப் பரிஹரிக்க வேண்டும். 14—40½.

பலவிதமான சாயைகளும் ரிஷ்டங்களும்.—(1) எவனுடைய சாயையானது அவனது இயற்கையான உருவமைப்பு, உருவத்தின் பிரமாணம், நிறம், ஒளி இவைகளுக்கு விபரீதமாயிருப்பதாக ஸ்வப் னத்தில் தோற்றுமோ அம்மனிதன் பிரேதமாகவே ஆய்விடுவான். (2) வெயில், கண்ணுடி, தண்ணீர் இவை முதலியவற்றில் அந்தந்த் தேஹத்தின் உருவமைப்புக்கும் உருவ அளவுக்கும் ஏற்றவாறு எந்த சாயை ஒன்று உண்டாகின்றதோ அதுதான் பிரதிபிம்பம் எனப் படும். தேஹத்தின் நிறமும் ஒளியும் எந்த நிழலில் இயற்கைப் படியே பிரதிபலிக்கின்றனவோ அது சரீரத்தின் ஸம்பந்தமான ஸாக்ஷாத் சாயை யென்றே கூறப்படும். (3) ஒருவனுடைய பிரதி

பிம்பமானது அறுபட்ட உருவமுள்ளதாகவாவது, மெலியதாயிருப்பதாகவாவது, இயற்கையுருவத்தினும் அதிகமாகவாவது, தலையில்லாததாகவாவது, இரண்டு தலைகளுள்ளதாகவாவது, பயங்கரமான நிலைமையுள்ளதாகவாவது, அல்லது வேறு எவ்விதமான விகாரத்தைப் பெற்றிருப்பதாகவாவது காணப்படுமாகில்—அவ்விதமான சாயையின் உருமாருட்டம் அதற்கு இலக்ஷியமாயுள்ள கண்ணாடி முதலிய வஸ்துவின் விகாரத்தைக் காரணமாகக் கொண்டு ஏற்படாததாயிருக்குமாயின்—அம்மனிதனுக்கு ஆயுள் முடிவடைந்ததாய் அறியலாம். (4) பிரதிச் சாயாரூபமான கன்னிகை எவனுடைய கண்களுக்குப் புலப்படுவதில்லையோ அவன் சீக்கிரம் இறந்துவிடுவான். 41—45.

பஞ்சபூத ஸம்பந்தமான சாயைகளும் ரிஷ்டங்களும்.—ஆகாயம் முதலிய ஐந்து பூதங்களுக்கும் அதததற்கேற்றவாறு பற்பல இலக்ஷணங்களையுடைய ஐந்து விதமான சாயைகள் உண்டு; அவை யாவன:—(1) ஆகாய ஸம்பந்தமான சாயையானது நிர்மலமாகவும், மிகவும் நீல நிறமாகவும், ஸ்நிக்தமாகவும், ஒளி வீசுவதுபோலவும் இருக்கும். (2) வாதத்தினலான சாயையானது புழுதிகளால் ஒருவாறு சிவந்ததாகவும், கருநிறமாகவும், பஸ்மம் பூசியதுபோல ரூக்ஷமாகவும், ஒளியற்றதாகவும் இருக்கும். (3) அக்னி ஸம்பந்தமான சாயையானது மிகவும் செந்நிறமாகவும், தேஜோமயமாகவும், பார்ப்பதற்கு இரமணீயமாகவும் இருக்கும். (4) ஜலஸம்பந்தமான சாயையானது சுத்தமான வைடூர்யக் கல்லைப்போல் நிர்மலமாகவும், மிகவும் ஸ்நிக்தமாகவும், இன்பாதரக்கூடியதாகவும் இருக்கும். (5) பூமிஸம்பந்தமான சாயையானது அசைவற்றதாகவும், ஸ்நிக்தமாகவும், குருகுணமுள்ளதாகவும், நிர்மலமாகவும், கருஞ்சிவப்பாகவும் இருக்கும். வாயுஸம்பந்தமான சாயைமட்டும் வியாதிகள், மரணம், மற்றுமுள்ள அநேகவிதமான துன்பங்கள் இவற்றை உண்டுபண்ணும்; மற்ற பூதங்களின் சாயைகள் ஸுகமுண்டுபண்ணத்தகுந்தவையாம். (6) எல்லாவிதமான பிரபையும் தேஜோமயமானது; அந்த பிரபையானது சிவந்தது, பொன்னிறமானது, வெண்மையானது, கருநிறமுள்ளது, பசுமையானது, வெளிறியது, வெண்மையல்லாத ஒருவித நீலநிறமானது என்று ஏழு வகைப்படும். அவற்றுள் நாற்புறமும் மலர்ந்து பரவக்கூடியவையும், ஸ்நிக்தமானவையும், நிர்மலமாயிருப்பவையுமான பிரபைகள் சிறந்தவையாம்; மலினமாகவும், ரூக்ஷங்களாகவும், மலர்ச்சியின்றி சுருங்கியவையாகவுமுள்ள பிரபைகள் சிறந்தவையல்ல. 46—50½.

சாயைக்கும் பிரபைக்குமுள்ள விசேஷங்கள்:—சாயையானது தேஹம் முதலியவற்றின் நிறத்தைத் தான் கவர்ந்து கொள்ளும்; பிரபையோ நிறங்களைப் பிரகாசிக்கச் செய்யும். மேலும் சாயையை அருகில் வந்தால்தான் காணலாம்; பிரபையையோ தூரத்திலேயே

நன்கு விளங்கக் காணலாம். சாயையற்றவனுகவாவது, பிரபை யற்றவனுகவாவது ஒரு மனிதனும் இரான். சாயைகளே ஆதார மாயுடைய விசேஷங்கள் யாவும் அந்தந்த காலத்தில் மனிதர்களுக்கு ஸம்பவிக்கக்கூடிய சுபாசுபங்களைக் குறிப்பிடக் கூடியவைகளா யிருக்கின்றன. 51—52½.

பலவகையான ரிஷ்டங்கள் :—தோள் சரிந்து பாதங்களைத் தேய்ப்பது போல எவனொருவன் நகர்ந்துச் செல்கிறானே, எவன் ஹிதமான உணவை வேண்டியவளவும் புஜிப்பவனுயிருந்தும் அடிக்கடி வன்மையிழந்து வருகிறானே, எவனொருவன் சொற்பமாக உணவு எடுத்துக்கொண்டும் அதிகமாக மலமூத்திர விஸர்க்கம் செய்கிறானே, அதிக உணவுகளையுட்கொண்டும் சொற்பமாக மலமூத்திர விஸர்க்கம் செய்கிறானே, எவன் சொற்பமாகப் புஜித்து—கபம் விருத்தியாய் அதனுல் வருந்தி—பெருமூச்சுவிட்டு இங்குமங்குமாகப் புரண்டு வருந்துகிறானே, எவன் முதவில் மேன்மேலும் பெருமூச்செறிந்து அப்பால் குறுகிய ச்வாஸங்களை விட்டுக்கொண்டு பரிதவிப்பானே, எவன் குறுகிய ச்வாஸங்களை விட்டுக்கொண்டு மிகவும் முறை கேடாக நாடிகள் துடிக்கக் கஷ்டப்படுகிறானே, எவன் கரங்களை உதறிக்கொண்டு மிகவும் சிரமப்பட்டுச் சிரஸ்ஸை அசைக்கின்றானே, எவன் எழுப்பப்படும்போது நெற்றியிலிருந்து வியர்வை வடிய ஸந்திபந்தங்கள் தளர்ந்துபோக மூர்ச்சை யடைகிறானே, எவன் பலிஷ்டனுக அல்லது துர்ப்பலனுக இருந்து நிமிர்ந்த நிலைமையிலேயே நித்திரை செய்கிறானே, எவன் பாதங்களை இயற்கைக்கு விரோதமாக அநேகவகையில் அசைக்கிறானே, எவன் படுக்கையிலும் ஆஸனத்திலும் சுவர் முதலியவற்றிலும் இல்லாத வஸ்துவை இருப்பதாகக் கருதி கிரஹிக்க முயற்சி செய்கிறானே, சிரிக்க வேண்டிய அவசியமில்லாமலிருக்கையில் எவன் சிரிக்கிறானே, உதடுகளை எப்பொழுதும் எவன் நாக்கினுல் துடைத்துக்கொள்கிறானே, மேல் உதட்டை நாக்கினுல் தடவிக் கொண்டு எவனொருவன் துப்புகிறானே, கருப்பாகவோ, பொன்னிறமாகவோ, சிவப்பாகவோ காணப்படும் சாயையானது எவர்களைப் பின்பற்றி துன்பப்படுத்துகின்றதோ, வைத்தியர் - ஆசாரியர் - ஔஷதம் - அன்னபானங்கள் - தோழர்களின் சேர்க்கை முதலியவற்றை எவர் பகைக்கிறார்களோ இவர்கள் அனைவரும் சீக்கிரம் யமனுக்கு வசப்படுவார்கள். எவனுக்குக் கழுத்தும், நெற்றியும், மார்பும் வியர்த்து மிகவும் குளிர்ந்து மற்ற அவயவங்கள் மிகச் சூடாக இருக்கின்றனவோ அவனுக்குத் தெய்வமே கதியாம். எவனுக்கு உடலின் இயற்கையொளியானது மிகவும் சொற்பமாக மழுங்கிப்போய், மனதும் குழப்பமுற்று எப்பொழுதும் வருத்தங்கொண்டு சாயையும் கோளாறடைந்து விடுகின்றதோ, எவனுல் அளிக்கப்பட்ட பலியை வாயஸம்

முதலியவை உண்ணுமல் விட்டு விடுகின்றனவோ, எவன் தகுந்த காரணமின்றியே நல்ல புத்தியையும் — காந்தியையும் - தேஹச் செழிப்பையும் - செல்வத்தையும் திடீரெனப் பெறுகிருனே அல்லது இழந்து விடுகிருனே அம்மனிதன் சீக்கிரம் மரித்து விடுவான். ஆரோக்கிய நிலைமையிலிருப்பவனுக்காவது பிணியாளிக்காவது ஸத்வாதி குணமயமான அல்லது வாதாதி தோஷமயமான பிரக்ருதியெனப்படும் இயற்கைத் தன்மையானது அவற்றிற்குற்ற நிலைமையினும் மாறுபாடடைந்தால், அவன் ஆறு மாதங்கள் வரையில் ஜீவித்திருக்கமாட்டான். பக்தி, நன்னடக்கை, ஞாபகசக்தி, ஔதார்யம், புத்தி, தேஹவன்மை இந்த ஆறும் காரணமின்றியே போய்விடுமாகுல் அவன் ஆறுமாதங்களில் மரித்துவிடுவான். நடந்து செல்லும்போதும் பேசும்போதும் வெறிபிடித்தவன்போல நடுக்க முண்டாய் மூர்ச்சையும் ஸம்பவித்தால் அவன் ஒரு மாதத்தில் இறந்துவிடுவான். மயிர்களை வேருடன் பிடுங்கும்போது வலியொன்றும் உணரப்படாவிட்டால் அவன் ஆறு நாட்களில் இறப்பான். எவனுக்குத் தொண்டைவியாதியின்றியே உணவு தொண்டையினுள் செல்லுவதில்லையோ, ஊழியம் செய்பவர் எவனை எதிர்த்து விரோதம் பாராட்டுகிருர்களோ, எவனுக்குப் பிரேதத்தின் உருவம் உண்டாகின்றதோ, எவனுக்கு இடைவிடாமல் எப்பொழுதும் நித்திரையுண்டாகின்றதோ, அல்லது முற்றிலும் நித்திரையுண்டாவதில்லையோ அவன் வெகு நாள் பிழைத்திருக்கமாட்டான். கண்ணீர்வரும் த்வாரம் அந்த நீரால் அடிக்கடியும் நிரப்பப்படுமாகுலும், கால்கள் மிகவும் வியர்க்குமாகுலும், கண்ணும் வியாகுலப்பட்டு அசைந்தாலும் அவன் சீக்கிரம் உயிரிழப்பான். முன்னுல் எவ்விஷயங்களால் மனங்களித்து வந்தானே அதே விஷயங்களால் பிற்காலத்தில் கிலேசமுண்டாகுல் அவனும் அதிக நாள் ஜீவித்திருக்கமாட்டான். 53—69½.

வியாதிகளைப்பற்றிய ரிஷ்டங்கள் :—(1) எவனுக்கு ஒரு வியாதியானது திடீரென்று ஸகல லக்ஷணங்களோடேயும் ஸம்பவிக்கின்றதோ, அவ்விதமே திடீரென்று எவனுக்கு அத்தகைய வியாதி நிவ்ருத்தியாகின்றதோ, அம்மனிதன் திடீரென்று மரணமடைவான். (2) ஜ்வரமானது அதிக கடுமையாகவும், எல்லாத் தாதுக்களையும் ஆச்ரயித்ததாகவும், வெகு நீடித்த நாட்களாகத் தொடருவதாகவும், வாய்ப் பிதற்றல் - தலைச்சுற்றல் - ச்வாஸகாசம் இவற்ரேடு கூடியதாகவும் இருந்து, பிணியாளியும் இளைத்து அல்லது வீங்கிப் போய், ஜாடராக்னியும் அழிவுற்றவனு யிருந்தால், அல்லது பலசாலியாயிருந்தும் - வாய் பேசமுடியாதவனுகவும் - இருதயத்தில் குத்தல் வலியுள்ளவனுகவும் இருந்தால் அவனுக்குக் கபமின்றியே இருமலுடன்கூட காலையிலாவது மாலையிலாவது அவ்வித ஜ்வரம் உண்டாகுமாகுல், தேஹவன்மையும் தசை நார்களும் சுஷ்கித்துப்

போய் - கபம் அதிகரித்து - ச்வாஸத்துடன் கூட ஜ்வரம் விருத்தியானல் அம்மனிதன் திடீரென்று இறப்பான். (3) இரக்த-பித்த ரோகத்தில் வெளிவரும் இரத்தமானது மிகவும் சென்னிறமாகவும், கருப்பாகவும், இந்திரதனுஸ்ஸு போன்ற நிறமுள்ளதாகவும், செம்பின் நிறமுடையதாகவும் மஞ்சளாகவும் காணப்படுமானலும், மயிர்க் கால்களிலிருந்தும் கழுத்திலிருந்தும் மார்பிலிருந்தும் இரத்தம் வெளிப்படுமானலும், இரத்தம் வஸ்திரத்தில் சாயமுண்டு பண்ணுமானலும், துர்வாஸனை யுடையதானலும், வேகத்துடன் அமிதமாக வெளிப்பட்டாலும், பாண்டு ரோகம்-ஜ்வரம்-வாந்தி-காஸம்-சோகை-அதிஸாரம் இவற்றல் பீடிக்கப்படுபவருக்கு இரத்தமும் அதிகமாய் வெளிப்பட்டாலும் அவை ரிஷ்ட லக்ஷணங்களாம். (4) காஸரோகமும், ச்வாஸரோகமும் ஜ்வரம்-வாந்தி-நாவரட்சி-அதிஸாரம்-சோகை இவற்றுடன் கூட ஸம்பவித்தால் அப்பிணியாளிகளும் சீக்கிரம் உயிர்துறப்பர். (5) க்ஷயரோகமானது பார்ச்வசூலை, வயிற்றுப்பொருமல், இரத்தம் வாந்தியாதல், அதிஸாரம் இவற்றேடு உண்டாயிருந்தால், அதுவும் பிராணபாயம் விளைவிக்கத் தகுந்ததாம். (6) சர்த்தி யென்னும் வாந்தியானது அதிக வேகமாகவும், மல மூத்திரங்களின் துர்வாஸனை யோடும்-சந்திரிகைகளென்னும் பலநிறமான பிந்துக்களோடும் கூடிய பதார்த்தங்கள் வெளிவருமாறும் ஏற்பட்டிருந்தால், இரத்தம்-மலம்-சீழ் இவற்றை வெளிபடுத்துவதோடு, வலி-ச்வாஸம்-காஸம் இவற்றுடன் கூடியதாய் வெகு நாட்கள் தொடருமாயின் அப்பிணியாளி வெகு நாட்கள் ஜீவித்திருக்கமாட்டான். (7) வேறு ரோகங்களால் பீடிக்கப்பட்டு இளைத்துப்போயிருப்பவனுக்கும், நாக்கை வெளியில் தொங்கவிட்டு கஷ்டப்படுபவனுக்கும், பிரஞ்ஞையற்றவனுக்கும் உண்டான திருஷ்ணை யென்னும் நாவரட்சியானது ஆயுளை திடீரென்று அழிக்கும். (8) மிகவும் சைத்தியத்தினல் பீடிக்கப்படுபவனும், இளைத்திருப்பவனும், தைலம் உபயோகித்தது போல் முகம் கசிந்து விகாரமடைந்தவனுமான மதாத்யயரோகியானவன் வெகு நாள் பிழைத்திருக்கமாட்டான். (9) அர்சோரோகத்தில் கைகள்-பாதங்கள்-நாபி-குதம்-பீஜகோசங்கள்-முகம்- இவை வீங்கியும், இருதயம்-விலாப்பக்கங்கள்-மற்றுமுள்ள அவயவங்கள் இவற்றில் வலியும், வாந்தியும், குதம் அழன்றும், ஜ்வரமும் உண்டாய் கஷ்டப்படுவானனல் அப்பிணியாளி பிழைக்கமாட்டான். (10) அதிஸாரத்தில் வெளிவரும் மலமானது கல்லீரலின் துண்டுகளைப் போலவும் இறைச்சி கழுவிய நீர் போலவும் ஒருவாறு கருஞ் சிவப்பாகவும், தைலம்-நெய்-பால்-தயிர்-மஜ்ஜை-வஸை-ஆஸவம்-மூளை-மை-கஞ்சி-வேஸவாரம்-தண்ணீர்-தேன் இவற்றைப் போன்றதாகவும் காணப்படுமானல் அதுவும் அவக்குறியாகும்; அந்த மலம் மிகவும் சிவப்பாகவும், மிகக் கருப்பாகவும், மிகவும் துர்க்கந்தமாகவும்,

அதிக தெளிவாகவும், மிக்க வேதனையைக் கொடுப்பதாகவும், பலவித நிறமுடையதாகவும், தாதுக்களை அறுத்து வெளிப்படுத்துவதாகவும், இயற்கையான கழிவுப்பொருளற்றதாக அல்லது அதிக கழிவுப் பொருளுடன் கூடியதாகவும் இருந்தாலும், ஈக்கள் மொய்த்துக் கொண்டிருந்தாலும், நூலிழைபோன்ற வஸ்துக்கள்-பலவித இரேகைகள் இவற்றுடன் கூடியதாயிருந்தாலும், குதத்தினுள் உள்ள மூன்றுவித வளிகள் என்னும் மடிப்புகள் சிதைவுற்று-நாளம் என்கிற இரத்தக்குழாய் அறுபட்டு-கணுக்களிலும், எலும்புகளிலும் வேதனையுண்டாய், குதம் நெகிழ்ந்து-முற்றிலும் பல பிழந்து-உணவு ஜீர்ணமாகாமல் அவ்விதமே வெளிவந்தாலும், பிணியாளிக்கு நாவரட்சி பெருமூச்செறிதல்-ஜ்வரம்-வாந்தி-எரித்தல்-வயிற்றுப் பொருமல்-வயிற்றுக் கடுப்பு இவை உண்டாயிருந்தாலும் அவன் இறந்து விடுவான். (11) மூத்திரத்திலுள்ள தாதுப்பொருள் உறைந்து உண்டாகும் அச்மரீ யென்கிற வியாதியில் ஆண்குறி வீங்கி அறுன்றுபோய் மூத்திரம் வெளிவரமுடியாமற் கஷ்டப்பட்டு வேதனை அபரிமிதமாயுண்டாய் வருந்தும் பிணியாளியும் பிழைக்கமாட்டான். (12) பிரமேஹத்தில் நாவரட்சியும், தேஹ அழற்சியும், பிடைகைகள் என்னும கட்டிகளும், தேஹத்தில் மாம்ஸ பேசிகள் பதனழிதலும், அதிஸாரமும் உண்டானல் அவனும் இறந்துவிடுவான். (13) பிடகைகள் என்னும் கட்டிகள் மர்மஸ்தானங்களில், முக்கியமாய் இருதயத்திலும், பிருஷ்டபாகத்திலும், முலைகளிலும், தோள்களிலும், குதத்திலும், சிரஸ்ஸிலும், கணுக்களிலும், உள்ளங்கால்களிலும், உள்ளங் கையிலும் உண்டானாலும், பிணியாளி உக்ரமாக மிகுந்தவனும் பிரமேஹ முள்ளவனுமிருந்தாலும் உயிர் துறப்பான்; மாம்ஸபேசிகள் சுருக்கங் கொள்ளுதல், அழற்சி, நாவரட்சி, வெறி, ஜ்வரம், விஸர்ப்பம், மர்மஸ்தானங்கள் தாக்கப்படுதல், விக்கல், ச்வாஸம், தலைச்சுற்றல், உடல் சோர்ந்து போதல் இவ்வித கோளாறுகளுடன் கூடிய பிடகைகளும் பிராணாபாயம் விளைவிக்கும். (14) குல்மரோகமானது திரண்டுருண்டு மிகப் பருமனுகவும், கனமாகவும், ஆமையைப் போல் முதிர்ந்து மேலோங்கிக் கிளம்பியதாகவும், ஸிரைகளால் வியாபிக்கப்பட்டதாகவும், ஜ்வரம்-வாந்தி-விக்கல்-பொருமல்-வலி இவற்றுடன் கூடியதாகவும், காஸம்-பீநஸம்-இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பு-ச்வாஸம்-அதிஸாரம்-உடல் வீக்கம் இக்கோளாறுகளையுடையதாகவும் இருந்தால் பிராணாபாயம் விளைவிக்கக் கூடியதாகும். (15) மஹோதரமானது மலமூத்திரச் சிக்கலோடும், ச்வாஸத்தோடும், வீக்கத்தோடும், விக்கலோடும், ஜ்வரத்தோடும், தலைச்சுற்றலோடும் கூடியிருந்தால், மூர்ச்சையும் வாந்தியும் அதிஸாரமும் உண்டாயிருந்தால் அது உயிரைப் போக்கிவிடும்; மேலும் அவ்வியாதியில் கண்கள் வீங்கியும், ஆண்குறி வக்கிரமாகவும், உடம்பில் எங்கும் சர்மம் வியர்த்துக் கசிந்ததாகவும், விரேசனெள

ஷதங்களால் வயிறு தளர்ந்திருந்தும் மீண்டும் அடிக்கடியும் வயிற்றுப் பொருமல் அதிகமாய் உண்டாவதுமான மஹோதரம் பிராணுபாயம் விளைவிப்பதாகும். (16) பாண்டு ரோகத்தில் வீக்கம் அதிகரித்து, கண்களும் நகங்களும் பார்வையும் மஞ்சள் நிறமாகப் போயிருந்தால் அவை அவக்குறியான ரிஷ்டமாகும். (17) சோம்பல், அழற்சி, அரோசகம், வாந்தி, மூர்ச்சை, வயிற்றுப் பொருமல், அதிஸாரம், மற்றும் பலவிதமான உபத்திரவங்கள் இவற்றுடன் கூடிய சோபை யென்னும் சோகை அபாயகரமானது ; இரத்தக் குழாய் முதலியவை மேலே கோடுகோடாய் பரவியிருப்பதாய்க் காணப்பட்டாலும், ஊனீர் முதலியது கசிந்தாலும், வாந்தி, ஜ்வரம், ச்வாஸம், அதிஸாரம் இவை அனுஸரித்திருந்தாலும் ஆகா ; வீக்கம் புருஷர்களுக்குப் பாதங்களில் ஆரம்பித்து மேன்மேலும் உடலிற் பரவினும், ஸ்த்ரீகளுக்கு சிரஸ்ஸிலிருந்து உடலெங்கும் கீழ் நோக்கி வியாபித்தாலும் அவக்குறிகளாம் ; வயிற்றிலும் ஆண் பெண் குறிகளிலும் ஆரம்பித்துப் பரவும் வீக்கம் இருபாலருக்கும் ஆகாது ; சோபை தணிவடைந்த ஸமயத்தில் ஜ்வரமும் அதிஸாரமும் உண்டானாலும், ஜ்வராதிஸாரங்கள் தணிந்திருக்கையில் சோகை யுண்டானாலும், அதிலும் முக்கியமாய் பலஹீனனுக்கு அவ்வித நிலைமைகள் உண்டாகுமானல், அவை பிராணுபாயத்திற்குக் காரணமாகும். எவனொருவனுக்கு வீக்கம் பாதத்தில் மட்டும் உண்டாகுமோ, ஆடுச் சதை யென்னும் முழங்காலுக்குக் கீழே பின்புறமாயுள்ள சதைகள் இடம் விட்டு நகர்ந்து மூரண்படுகின்றனவோ, கால்களும் இளைத்துவிடுகின்றனவோ அவனை வைத்தியன் சிகித்ஸைக்கு உதவாதவன் என்று விலக்கிவிடவேண்டும் ; உடலில் மற்றப் பாகங்களைத் தவிர்த்து முகமும், கை கால்களும் எவனுக்கு சுஷ்கமாய் விடுகின்றனவோ, அல்லது திடீரென்று வீங்கிவிடுகின்றனவோ அவன் ஒரு மாஸகாலத்தில் மரித்துவிடுவான். (18) விஸர்ப்பரோகத்தில் காஸம், நிறம் மாறுபடுதல், ஜ்வரம், மூர்ச்சை, தேஹம் சோர்வடைதல், தலைச்சுற்றல், வாய் உலர்ந்து போதல், இருதயம் இயற்கைக்கு மாருக நடுங்குதல், உடல் வாடிப்போதல், அதிஸாரம் இவ்வுபத்திரவங்கள் உண்டாயிருந்தால் அவனுக்கு வியாதி நிவ்ருத்தியாகாது. (19) குஷ்டத்தில் அங்கங்கள் சிதைவடைதல், கண்கள் மிகவும் சிவத்தல், குரல் விகாரமுறுதல், ஜாடராக்னி குறைதல், விரணங்களில் கிருமிகள் உற்பத்தியாதல், நாவறட்சி யுண்டாதல், அதிஸாரம் காணுதல் முதலிய இவ்விகாரங்களில் ஏதாவது ஏற்படுமாயின் அவன் வியாதியிலிருந்து நிவ்ருத்தியடையமாட்டான். (20) வாதரோகத்தில் அடியில்வரும் குறிகள் காணப்பட்டால் அப்பிணியாளி உயிர் துறந்துவிடுவான் ; அவையாவன : சர்மம் உணர்ச்சியிழத்தல், சரீரம் சக்தியற்று விழுந்துபோதல், கபம் - சோபையென்னும் சோகை இவ்வியாதிகளால் வருந்துதல்,

வாதரக்தம், மயக்கம், மூர்ச்சை, வெறி, அதிநித்திரை, ஜ்வரம், கழுத்துப் பிடிப்பு, அரோசகம், ச்வாஸரோகம், அவயவம் சுருங்கிப் போதல், கொப்புளித்தல், அழுகிப் பதனழிதல் ஆகியவைகளாவது, தலைநோய், அரோசகம், ச்வாஸம், பிராந்தி, அதிஸாரம் இவைகளாவது உண்டாவதேயாம். (21) எல்லா வியாதிகளுமே குரல் இழந்து, தேஹபலம் இழந்து, ஜாடராக்னி அழிந்து வருந்துகிற மனிதனைக் கொன்றுவிடும். (22) விசேஷம்: வாதரோகம், அபஸ்மாரம், குஷ்டம், இரக்த-பித்தம், மஹோதரம், க்ஷயம், குல்மம், பிரமேஹம் இந்த ரோகங்களால் வருந்து பவருக்கு தேஹம் மிகவும் இளைத்து வன்மையிழந்திருந்தால், அவர்களுக்கு மற்ற விகாரங்கள் சொற்பமாயிருந்தபோதிலும் சிகித்ஸைக்குத் தகாதவர்களென்று அவர்களைக் கைவிடவேண்டும். (23) எந்த ரோகமுமே மேன்மேலும் விருத்தியாய் வருகையில், சரீரவன்மையும் தசைநார்களும் மிகவும் அதிகமாய் க்ஷயித்துவந்து, அரோசகமும் அதிகரித்தால் அப்பிணியாளி மூன்று பக்ஷங்களுக்குள்ளாக இறந்து விடுவான். (24) வாததோஷம் அதிகரித்து உண்டான அஷ்டீலா என்கிற வியாதி மிகவும் அதிகரித்து, இருதயத்திற்கு அருகில் சென்று கடுமையாகத் தொந்தரவு அளித்துவந்தால், நாவரட்சியும் உண்டாயிருந்தால் உடனே உயிர் இழந்துவிடுவான். (25) முழங்காலுக்குக் கீழே பின்புறத்திலுள்ள ஆடுச் சதையென்னும் தசைநார் அதன் இயற்கைச் சக்தியை இழந்து, வாயுவானது நாசியையும் வக்கிரமாகச் செய்திருந்தால், தேஹம் இளைத்துப்போய் மந்யா என்னும் கழுத்து நரம்புகளில் இசிவு கண்டால் அவன் உடனே உயிரிழப்பான். (26) பலம்பெற்றுப் பிரகோபமடைந்த வாயுவானது நாபிக்கும் குதத்திற்கும் இடையில் பிரவேசித்தாவது, துடையிடுக்குகளில் பிரவேசித்தாவது, குதத்தையும் இருதயத்தையும் பற்றிக்கொண்டாவது, தேஹம் இளைத்துப் போயிருப்பவனுக்கு மலங்களைக் கட்டி, வஸ்தியென்னும் மூத்திராசயத்தின் மேற்பாகத்தையும் நாபியையும் அடைத்து, வலியை விருத்திசெய்து, துடையிடுக்குகளில் குத்தலையும் உண்டுபண்ணி, நாவரட்சியையும் பேதியையும் உண்டாக்கி, குதத்தையும துடையிடுக்கையும் இழுத்துப் பற்றிக்கொண்டு, ச்வாஸத்தையும் அதிகரிக்கச் செய்தால் அப்பிணியாளி சீக்கிரம் இறந்துவிடுவான். (27) வாயுவானது பர்சுகங்கள் என்னும் விலாப்பக்கத்து எலும்புகளை இழுத்து விரிவாகச் செய்து, மார்பிலும் பிடிப்பை யுண்டுபண்ணி, கண்களை விழித்தவண்ணம் பேச்சு மூச்சின்றி நிலைத்துநிற்கச் செய்தால் மனிதன் உடனே உயிர் துறப்பான். (28) திடீரென்று ஜ்வரத்தினுல் அதிக தாபமும், நாவரட்சியும், மூர்ச்சையும், தேஹபலக்ஷயமும், ஸந்திபந்தங்களுக்குத் தளர்ச்சியும் உண்டாவது சீக்கிரம் இறந்துவிடுவதற்கான குறிகளாம். (29) விடியற்காலத்தில் கபஜ்வரத்தினுல் வருந்துகிற ஒரு

வனுக்கு, முகத்திலிருந்து வியர்வை மிகவும் கசியுமானால், அவன் உயிருடன் இருப்பது அரிது. (30) எவனுடைய தேஹத்தில் மஸூரிகைகள் பெரும் பவளங்களைப்போலே சிவந்து உருட்சியாய் உண்டாய் வெகு சீக்கிரத்தில் மறைந்து விடுகின்றனவோ, அவன் வெகுநாள் பிழைத்திருக்கமாட்டான். (31) எவனுடைய உடம்பில் விஸ்ப்போடங்கள் என்னும் கொப்புளங்கள் மொச்சைப்பருப்பின் அளவுள்ளவையாகவும், பவளங்கள்போன்ற நிறமுள்ளவையாகவும், உட்கவிந்து விளைந்தவையாகவும், முதிர்ந்த காய்ப்புகள் போன்றவையாகவும் இருக்கின்றனவோ அம்மனிதன் அக்கொப்புளங்களால் மாண்டுவிடுவான். (32) ஒருவனுக்குக் கண்களில் காமாலையின் குறி காணப்படும்போது, முகம் ஊதிப்பருத்தும், கன்னங்கள் இளைத்தும், மனது திகிலடைந்தும், உடல் உஷ்ணமாகவும் இருக்குமானால் சிகித்ஸை செய்யாமல் அவனைக் கைவிடவேண்டியதே. திடீரென்று சர்மம் கிறப்பட்டு இரத்தப்பெருக்கு உண்டாவதாகக் காணப்பட்டால் அம்மனிதனும் மரித்துவிடுவான். (33) விரணங்கள் வாதத்தினால் உண்டாயிருக்கையில் வலியேற்படாமற்போவதும், பித்தத்தினால் உண்டாயிருக்கையில் அழற்சியில்லாமலிருப்பதும், கபத்தினால் உண்டாயிருக்கையில் சீழுண்டாகாமலிருப்பதும், மர்மஸ்த்தானத்தில் உண்டாயிருப்பதில் நோவில்லாமற் போவதும், மேலே எவ்விதமான சூர்ணமும் போடாமலிருக்கையிலும் ஏதோ சூர்ணம் தூவப்பட்டிருப்பது போலவும், ஈட்டி-த்வஜம் முதலியவற்றைப் போன்ற உருவமுள்ளனவாகவும் காரணம் அறிய முடியாமலே காணப்படுமானால், அவ்வித விரணங்கள் யாவும் சிகித்ஸைக்கு வசப்படாதவையென்று விட்டுவிட வேண்டியவையாம். (34) பகந்தரம் என்னும் குதத்தில் உண்டாகும் பிளவையிலிருந்து மலமாவது, மூத்திரமாவது, வாயுவாவது வெளி வந்தாலும், கிருமிகள் உண்டாயிருந்தாலும் அப்பிளவைக்கும் சிகித்ஸை செய்வதில் பிரயோஜனமில்லை. (35) எவனொருவன், முழங்காலோடு மற்றொரு முழங்காலை இடித்துக்கொண்டும், கால்களைத் தூக்கித்தூக்கிச் சப்தமுண்டாகுமாறு நடந்துகொண்டும், அடிக்கடியும் காலைக் கோணலாக உதறிபுதறி வைத்துக்கொண்டும் ஸஞ்சரிக்கிறானோ[1] அப்பிணியாளியும் பிழைக்கமாட்டான. (36) நகங்களுடைய முனைகளைப் பற்களால் கடிப்பவனும், நகங்களால மயிர்களையும் துரும்புகளையும் கிள்ளுபவனும், குச்சியினால் பூமியைக் கீறுபவனும், ஓட்டால் ஓடுகளை அடிப்பவனும், அடிக்கடி மயிர்ச்சிலிர்க்கை யுண்

1. "கட்டயக் ஜாநுநா ஜாநு பாதாவுத்யம்ய பாதயந், யோபாஸ்யதி மூஹுர்வக்ராமாதுரோ ந ஸ ஜீவதி" இதில் முஹுர்வக்ரம் என்பதை மூஹுர்வக்த்ரம் என்று தவறுதலாகப் படித்து, வக்த்ரம் என்றே குறிப்பிட்டு அதற்கு முகம் என்றும் அருணதத்தன் ஆலோசனையின்றி வியாக்கியானம செய்திருக்கிறார்.

டாகும் தேஹமுடையவனும், தெளிவில்லாமல் தோய்ந்திருப்பது போல் காணப்படும் மூத்திரம் விடுபவனும், கபம் முதலியவையின்றியே சுஷ்கமாக இருமுபவனும், ஐவமுள்ளவனும், அடிக்கொருமுறை சிரிப்பவனும், அடிக்கடியும் கர்ஜனை செய்பவனும், காலால் படுக்கையை அடிப்பவனும், அடிக்கடியும் தவறுதல் அல்லது துன்பம் விளையக்கூடிய ஏதோ விஷயங்கள் இருப்பதாக ஆலோசிப்பவனும் பிழைத்திருக்கமாட்டான். (37) ஒரு பிணியாளிக்கு முகத்தில் திடீரென்று திலகங்கள் என்னும் மறுக்களும், வியங்கங்கள் என்கிற வங்குகளும் உண்டாய் உபத்திரவம் விளைவித்தாலும், பற்களிலும் நகங்களிலும் புஷ்பம் போன்ற பிந்துக்கள் உண்டானாலும், வயிற்றின்மேல் பலவிதமான இரேகைகளைப்போல ஸிரைகள் வியாபித்தாலும் அவன் வெகு நாள் ஜீவித்திருக்க மாட்டான். (38) ஊர்த்வ ச்வாஸம் விடுபவனையும், உடற்சூடு இழந்தவனையும், துடையிடுக்குகளில் நோயுண்டாய் வருந்துபவனையும், சுகமின்றி அமைதியற்று கஷ்டப்படுபவனையும் புத்திமானான வைத்தியன் சிகித்ஸைக்கு ஏற்றுக்கொள்ளலாகாது. (39) எவனுக்கு விரைவில் விகாரங்கள் விருத்தியடைந்து இயற்கை நிலைமைகள் குறைந்து வருகின்றனவோ, அவன் பிராணனை விரைவில் இழந்து விடுவான். 70—122½.

**ரிஷ்ட விசேஷங்கள்.**—(1) வைத்தியனானவன், எப்பிணியாளிக்காக ஔஷதம் ஸம்பாதிக்க முயன்று, அதைப் பெறுவதற்கு முடியாதவனாய் விடுகிறானோ, அப்பிணியாளி உயிருடன் இருப்பது அரிதாம். (2) முறைதவறாமல் பக்குவம் செய்யப்பட்டு, அநேகம் வியாதிக்ரஸ்தர்களுக்கு உபயோகித்து நற்பயன் விளைவிக்கக் கூடியதென்று நிச்சயிக்கப்பட்டுள்ள ஔஷதம் எவனுக்குப் பலன் கொடுப்பதில்லையோ அப்பிணியாளிக்குச் சிகித்ஸையே கிடையாதாம். (3) எவனொருவன்பொருட்டு ஔஷதமாவது அன்னமாவது முறைப்படி பக்குவம் செய்யப்படுகையில் காரணமின்றியே அவற்றின் நிறம் மணம் முதலியன இயற்கையினும் மாறுபாடு அடைகின்றனவோ அம்மனிதன் ஆரோக்கிய நிலைமையிலிருப்பினும் வெகு நாள் பிழைத்திருக்கமாட்டான். (4) எந்த ரோகியின் கிருஹத்தில் சிறந்த விறகு இட்டு எரிக்கப்படும் அக்னியானது பெருங்காற்று வீசாமலிருக்கையிலேயே அவிந்துவிடுகின்றதோ, பாத்திரங்கள் அடிக்கடியும் தவறி விழுகின்றனவோ அல்லது உடைந்து விடுகின்றனவோ, அம்மனிதன் பிழைத்திருப்பது அரிது. (5) மிகவும் பலஹீனமான ஒருவனுக்கு உண்டாயிருந்த வியாதியானது திடீரென்று அவனை விட்டுவிடுமானால், அம்மனிதன் ஜீவித்திருப்பது ஸம்சயம் என்றும் ஆத்ரேயமுனிவர் கருதுகிறார். 123—128

**ரிஷ்டக் குறிகளுடன் கூடியவனை வைத்தியன் பரிஹரிப்பதேன்?.**—ஒருவனுக்கு மரிக்குங்காலம் கிட்டியிருந்தால், அவ

னுடைய பந்து மித்திரர்களால் வினவப்பட்டும் வைத்தியனானவன் செவியுறத்தகாத மரணவார்த்தையைத் திடீரெனக் கூறக்கூடாது ;[1] அவன் அப்பிணியாளிக்குச் சிகித்ஸை செய்யவும் கூடாது.[2] ஆயுள் முடிவடைந்த மனிதனுக்கு அருகில் யமதூதர்கள்-பிசாசங்கள் முதலிய பூதகணங்கள், அவனுக்குப் பிரயோகிக்கப்படும் ஔஷதங்களுடைய வீர்யங்களை அழித்துக்கொண்டு வஸிப்பதால், அப்பிணியாளிக்குச் சிகித்ஸை செய்யக்கூடாது. ஆயுளின் காலம் முதலிய தத்துவங்களை யறிந்த வைத்தியனிடம் ஆயுர் வேதத்தின் அகில பலனும் நன்கு ஸ்த்தாபிதமாருமாதலின், எப்பொழுதும் வைத்தியர் ரிஷ்ட ஸம்பந்தமான தத்துவஞ்ஞானத்தில் ஆதரவுள்ளவராயிருக்கவேண்டும். 129—131.

**மரணத்திற்கான மூகாந்தரங்கள்.**—பிராணிகளுக்கு ஆயுளாவது, புண்ணியமாவது, அவ்விரண்டுமாவது க்ஷயமடையுங்கால் மரணம் உண்டாவதாகக் கருதப்படுகிறது.[3] ஆயுளுக்காவது புண்ணியத்திற்காவது க்ஷயமுண்டாகாமலேயே, விஷமங்களை[4] விலக்கி நிற்க முடியாதவர்களுக்கும் திடீரென்று மரணமுண்டாவதைக் கண்டிருக்கின்றோம்.—132.

---

## ஆறும் அத்தியாயம்.

### தூதாதி விஞ்ஞாநம்.

அப்பால் தூதாதி விஞ்ஞாந சாரீரம்[5] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

---

1. "மரணவார்த்தையைக் கூறமாட்டார்" என்றும் சொல்லலாம்.

2. "சிகித்ஸை செய்யவும் மாட்டார்" என்றும் சொல்லலாம்.

3. (1) ஸகலஸௌகரியங்களும் ஸௌக்கியமும் ஆரோக்கிய நிலைமையும் பொருந்தியுள்ள மனிதனுக்கு, நன்கு உபயோகப்படுத்தப்பட்டுவருகிற ரதம் போல், காலக்கிரமத்தில் தேஹதாதுக்கள் இயற்கையிலேயே சிதைவுற்று ஸம்பவிக்கும் மரணம் "ஆயுளின் க்ஷயத்தினுல் உற்பத்தியாவது" என்று கூறப்படுகிறது. (2) ஆரோக்கிய நிலைமையிலிருந்தும், தௌர்ப்பாக்கியத்தினுல் சுகவாழ்க்கைக்குத் தகுந்த ஸௌகரியங்களின்மையால் அகாலத்திலேயே தேஹம் தளர்ந்து அல்லது வியாதிகளுக்குட்பட்டு மரணமடைவது "புண்ணியக்ஷயத்தினுல் ஸம்பவிக்கும் மரணம்" எனப்படுகிறது. (3) வயது முதிர்ச்சி பெற்று ஆயுள் காலமும் புண்ணியமும் ஒருமிக்க க்ஷயிக்கும்போது உண்டாகும் மரணம் "உபய க்ஷயத்தால் உண்டாகும் மரணம்" எனப்படும்.

4. துஷ்டகுணமுள்ள குதிரை, விருஷபம், யானை முதலிய ஜந்துக்களுடைய, அல்லது வாஹநாதிகளுடைய ஸம்பந்தம் இங்கே விஷமம் என்பதால் குறிக்கப்படுகிறது ; அவ்வித ஸம்பந்தம் விலக்க முடியாமல் அவற்ருல் சிலருக்கு அகாலத்தில் நேரிடும் மரணம் இதனுல் குறிக்கப்படுகிறது.

5. வியாதிக்ரஸ்தர்களால் வைத்தியனை அழைத்துவர அனுப்பப்படுபவன் இங்கே தூதன் எனப்படுகிருன். வைத்தியன் வீட்டிலிருந்து புறப்படு

தூதர்கள்-ஸமான வர்ணாச்ரம ஜாதியனராயிருக்கவேண்டும் :— பாஷண்டர்கள்,[1] பிரஹ்ம சர்யம் முதலிய ஆச்ரமங்கள், பிராம் மணர் முதலிய வர்ணத்தார் இவர்களுக்குச் ஸமான ஜாதியின ராகவோ, ஸமான ஆச்ரமமுள்ளவராகவோ, ஸமான வர்ணத்தா ராகவோ தூதர்கள் ஏற்பட்டால், அவ்வித தூதர்கள் கார்யம் ஸித்தியடைவதற்கு ஏற்றவராவர்; இவர்களுக்கு எதிரிடையான இனத்தைச் சேர்ந்தவர்களானால் அத்தூதர்கள் கார்யம் கெட்டுப் போவதற்குக் காரணமாவார்.—1.

தகாத தூதர்கள் :—இதனடியில் குறிப்பிடும் தன்மையுடைய தூதர் வந்து அழைத்தால், வைத்தியன் ரோகியைப் பார்ப்பதற்கு அவர்களுடன் செல்லக்கூடாது; அத்தூதர்களாவன :—தீனமான நிலைமையில் இருப்பவன், பயந்தவன், ஓடுபவன், திகிலடைந்தவன், ரூக்ஷகுணமுடையவன், அமங்களவார்த்தைகளைச் சொல்லுபவன், ஆயுதம் தரிப்பவன், கழியேந்திக் கொண்டிருப்பவன், நபும்ஸகன், மீசையைச் சிரைத்துக் கொண்டிருப்பவன், ஜடை தரிப்பவன், அமங்களகரமான பெயரையுடையவன், கொடிய வேலைகளைச் செய்பவன், அழுக்கடைந்திருப்பவன், ஸ்த்ரீ, அநேகம் பிணியாளி களின் பொருட்டு அழைக்கவந்திருப்பவன், அங்கஹீநமுள்ளவன், சிவந்த புஷ்பம் சிவந்த பூச்சுகள் இவற்றை அணிந்திருப்பவன், எண்ணெய் அல்லது சேற்றைப் பூசிக்கொண்டிருப்பவன், சிதைந்து அழுக்கடைந்த ஒரே ஒரு பழைய ஈர வஸ்திரத்தை உடுத்திருப் பவன், தூரத்திலே நின்றுகொண்டு அழைப்பவன் இவர்களேயாம். 2—4½.

தூதர் வருகையில் தகாத நிலைமைகள் :—வைத்தியன் அமங்கள மான விஷயமாய் ஏதோ சிந்திக்கையிலும், அமங்களமாகப் பேசிக் கொண்டிருக்கையிலும், வஸ்திரமில்லாமல் இருக்கையிலும், வஸ்தி ரம் முதலியதை ஏதோ மனக்கோளாறுடன் கிழிக்கையிலும், பாத் திரம் முதலியதை உடைக்கையிலும், அக்னியில் ஹோமம் செய் கையிலும், பித்ருக்களுக்குப் பிண்டங்களிட்டு தர்ப்பணம் செய்கை யிலும், நித்திரை செய்கையிலும், தலைமயிர்களை விரித்துக் கொண்டி ருக்கையிலும், எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கையிலும், அழு கையிலும், ஜாக்கிரதையற்ற நிலைமையைப் பெற்றிருக்கையிலும் தூதர்கள் வைத்தியனிடம் ரோகிகளைப் பார்ப்பதற்காக அழைக்கச் சென்றால், அப்பிணியாளிகள் பிழைப்பது அரிது.—5, 6½.

---

வது முதல் பிணியாளியைப் பார்த்துவருவது வரையில் நடக்கும் அல்லது காணப்படும் சுபாசுப சகுனம், ஸ்வப்னம் என்னும் வேறு விசேஷங்கள் "தூதாதி" என்பதால் குறிக்கப்படுகின்றன. அவ்வித விஷயங்களின் தத் துவங்களை அறிவிக்கும் அத்தியாயம் "தூதாதி விஞ்ஞாநம்" எனப்படும்.

1. பாஷண்டர்கள்—வேதம் முதலியதைப் பிரமாணமாகக் கொள்ளாத தொண்ணூற்று று உட்பிரிவுகளையுடைய ஜாதியார்.

**ரோகிக்குத் தகாத காலதேசங்களில் தூதன் வைத்தியனிடம் வருதல் :—(1)** தேசமாவது, காலமாவது வியாதிக்குச் சமான குணமுள்ளதா யிருக்கும்போது ரோகியைப் பார்ப்பதற்காகத் தன்னை அழைக்க தூதன் வருவதைக் கண்ட வைத்தியன, அந்த ரோகிக்கு சிகித்ஸை செய்ய ஒப்புக் கொள்ளாமலிருப்பது நலம். (2) தூதர்கள் முதன்முதல் வைத்தியனைப் பார்ப்பதற்கு வரும் போது, நாபி-நாசி-வாய்-தலைமயிர்-உடம்பில் மற்ற பாகங்களிலும் மயிர்-நகம்-பற்கள் இவற்றைப் பரிசித்துக் கொண்டிருந்தாலும், ஆண் குறி-பிருஷ்டபாகம்-ஸ்தனம்-கழுத்து-வயிறு-பவித்திரவிரல் இவற்றைத் தூதன் தொட்டுக் கொண்டிருந்தாலும், பஞ்சு-கைக் கோல்களின் குவியல்-காரீயம்-எலும்பு-மண்டையோடு அல்லது மட்கலயம்-உலக்கை-கல்-துடைப்பம்-முறம்-வஸ்திரமுனை-சாம்பர்-நெருப்புத்தழல்-வஸ்திரத்தினுலான வர்த்தி-உமி-கயிறு-பாதரக்ஷை-திராசு-அதன் கயிறு இவற்றையாவது, நழுவி உடைந்து போன வேறு எவ்வஸ்துவையாவது பரிசித்துக் கொண்டிருந்தாலும், அவ்வித தூதர்கள் எந்த ரோகியின்பொருட்டு வைத்தியனிடம் வருகிறார்களோ, அந்த ரோகியின் மரணத்தை ஸூசிப்பவராவர். (3) அங்ஙனமே நடுநிசியிலும், நடுப்பகலிலும், காலை மாலை யென்கிற ஸந்தி காலங்களிலும், முற்பகலிலும், ஷஷ்டி-சதுர்த்தி-நவமி இத் திதிகளிலும், இராஹு-கேதுக்கள் உதிக்கும் நேரங்களிலும், மற்றும் அவைபோன்ற வேறு ஸமயங்களிலும், பரணி—கிருத்திகை—ஆச்லேஷம்-பூரம்-பூராடம்—பூரட்டாதி—ஆருத்ரை-மகம்-மூலம் இந்த நக்ஷத்திரங்களிலும் தூதன் வைத்தியரிடம் செல்வது ரோகிக்குச் சுபமாகாது. 7—12.

**சுபாசுப சகுனங்கள் :—** ஒரு ரோகியின் பொருட்டுத் தனதிடம் வந்திருக்கிற தூதன், அந்த ரோகி விஷயமாகப் பேசும்போது, அசுபமான சகுனம் காணப்படுமாயின், அத்தூதனோடு வைத்தியன் ரோகியினிடம் செல்லக்கூடாது. அந்த அசுப ஸூசகமான சகுனங்களாவன :—சவத்தையும் சவக்கோலமுள்ளவர்களையும் காண்பது, ஏதாவது அறுபடுதல், ஏதாவது உடைதல், எரிந்துபோதல், தொலைந்துவிடுதல், அல்லது அறுபடுதல் முதலியவற்றின ஸம்பந்தமான வார்த்தைகள், மிகக் கடுங்காரமான சுவையாவது, அதிக் சவ நாற்றமாவது, மிகக் கடுமையான பரிசமாவது, அல்லது அவை போன்ற வேறு விஷயமாவது உணரப்படுதல், இவ்விஷயங்கள் ஸம்பந்தமான வார்த்தைகள் வைத்தியனைச் சுற்றிலும் நடைபெற்றாலும், வைத்தியரிடமே நடைபெற்றாலும் அத்தருணத்தில் தூதன் தன்னிடம் வந்தால், அதைப் பார்த்துவிட்டு ரோகியினிடம் வைத்தியன் அத்தூதனுடன் செல்லக்கூடாது. மேலும் ஹா ஹா என்று கூக்குரலிடுதல், ஆத்திரத்துடன் உறத்துக் கூச்சலிடுதல், அழுகை, தடுத்தல், தும்மல், வஸ்திரம்-குடை-பாதரக்ஷை இவை காணுமற்போதல்,

துன்பப்படுபவரைக் காணுதல், யாகசாலை முதலியவற்றில் கட்டியுள்ள த்வஜங்களும்-பூர்ணகும்பங்களும் கீழே விழுந்துபோதல், அழிந்து போனது முதலிய அநிஷ்டமான பேச்சுகள் காதில்விழுதல், சாட்பரும் புழுதியும் தேஹத்திற்படிந்து விகாரமுண்டுபண்ணுதல், ஸர்ப்பம்-பூனை-உடும்பு-அரணை-குரங்கு இவை வழியில் குறுக்கிடுதல், ஒவ்வொரு திக்கும் எரிந்து கொண்டிருப்பதையும்-துஷ்ட விலங்குகளையும்-அவ்வித பக்ஷிகளையும்-கறுப்புத் தானியங்களையும், வெல்லம்-மோர்-உப்பு-மதுவகைகள்-சர்மம்-கடுகு-கொழுப்பு-எண்ணெய்-புல்-சேறு-வறகு இவற்றையும், நபும்ஸகன்-துஷ்டன்-சண்டாளன்-வலையன்-ஜாலக்காரன் இவர்களையும், பார்க்க வழங்காத மலம்-வாந்தி செய்த வஸ்து, துர்க்கந்தமான பதார்த்தம் முதலியவற்றையும், பஞ்சு முதலிய ஸாரமில்லாத வஸ்துவையும், உயர்ந்து நிற்கும் படுக்கை-ஆஸநம்-வாஹநம் இவற்றையும்-கூன் விழுந்தவர்களையும், கவிழ்ந்த பாத்திரங்களையும் காணுதல், இவையெல்லாம் அசுபஸூசகங்களாம். ஆண் பாலான பெயர்களையுடைய பக்ஷிகள் இடது புறமாகவும், பெண் பாலான பெயர்களையுடைய பக்ஷிகள் வலது புறமாகவும் ஓடுவது சுபசகுனங்களாம். பக்ஷிகளும் மிருகங்களும் பிரதக்ஷிணமாகச் செல்வதும், நாய்-நரிகள் அப்பிரதக்ஷிணமாகச் செல்வதும், ஒற்றைப்பட்ட மிருகங்களாகக் காணப்படுவதும் நன்மை பயக்கக்கூடியவையாம். காடை, வலியன் குருவி, கள்ளிக் காக்கை, கீரிப்பிள்ளை, மயில் இவற்றைப் பார்ப்பதும் நலம். ஆந்தை அல்லது கோட்டான், பூனை, ஓணான் இவற்றைக் காண்பது அசுபமாகும். பன்றி, பல்லி, ஸர்ப்பம், முயல், செந்நாய் இவற்றின் பெயரைக் கூறுவதும் நலம். குரங்கு, கரடி, இவற்றைக் காண்பதும், இவற்றின் சப்தத்தைக் கேட்பதும் சுபம்; ஆனால் குரங்கு, கரடி இவற்றைப் பார்ப்பதையும், அவற்றின் சப்தத்தைக் கேட்பதையும், தவிர்த்து மற்றவைகளைக் காண்பதும் கேட்பதும் அசுபமாம். இந்திரதனுஸ் முன்புறத்தில் தோன்றியிருப்பது அசுபம்; அதுவே வேறு பக்கங்களில் இருந்தால் அது சுபமாகும். அக்னி நிரம்பிய பாத்திரங்களை எதிரில் காண்பதும், பாத்திரங்கள் எதிரில் உடைந்துபோவதும், சூன்னியமான பாத்திரங்களை முன்புறத்தில் பார்ப்பதும் அசுபம். 13—27.

வைத்தியன் ரோகியின் வீட்டில் பிரவேசிக்கையிலும் வெளி வருகையிலும் சுபாசுப சகுனங்கள்.—வைத்தியன் பிணியாளியின் வீட்டில் பிரவேசிக்கும்போது சுபகரமானவை யென்று கருதப்படும் அடியில் விவரிக்கப்போகிற தயிர் அக்ஷதை முதலான எந்த சகுனங்கள் உண்டோ, அவையே வைத்தியன் பிணியாளியின் வீட்டிலிருந்து திரும்பும்போது எதிரில் தோன்றுமானால் அசுபங்களாகும். அசுப ஸூசகமான தூதன் முதலானவர் இவ்விதம் நேரிடக்கண்டதும் வைத்தியன் பிணியாளிக்குச் சிகித்சை செய்யப்போகாமல் அவ

ளைக் கைவிடவேண்டியதே; அப்படிக்கல்லாமல் அவை சுபஸூசகங் களாயிருந்தால், ரோகியினிடம் கருணை பாராட்டி, அதனால் கள் ளம் கபடற்ற நிர்மலமான மனதுடையவனாய் பெரு முயற்சி யெடுத்துக்கொண்டு சிகித்ஸை செய்யவேண்டும். முற்கூறியபடி சுபாசுப சகுன விசேஷங்கள் இதனடியில் விவரிக்கப்படுகின்றன :— தயிர், அக்ஷதை, கரும்பு, நிஷ்பாவம் என்னும் ஒருவித தானியம், கப்பு, தேன், நெய், செம்பஞ்சுக்குழம்பு, மை, பொன்கெண்டி, மணி, தீபம், தாமரைப் பூ, அறுகம்புல், ஈரமான மத்ஸியம் முத லிய மாம்ஸங்கள், நெற்பொரி, கனிவர்க்கங்கள், பக்ஷணங்கள், இரத்தினங்கள், யானை, பூர்ணகும்பம், கன்னிகை, தேர், தன தானிய ஸம்ருத்தனாய் தர்மிஷ்டனாய் எவ்வகையிலும் விருத்தி யடைந்து வருகிற மனிதன், தேவதைகள், அரசன், வெண்மை யான புஷ்பங்கள், வெளுத்த சாமரம், வெளுப்பான வஸ்திரம், வெண்ணிறமான குதிரை, சங்கு, ஸாத்விககுணமுள்ள பிரா மணர், தலைப்பாகை, தோரணம், மங்களவசநம் சொல்பவன், உன் னதமான பூப்பிரதேசம், நன்கு ஜ்வலிக்கும் அக்னி, மனோஹர மான அன்னபானங்கள், மனிதர் நிரம்பிய வண்டி, கன்றுக்குட்டி யுடன் கூடிய பசு, பெண் குதிரை, ஸ்திரீ, சகோரபக்ஷி, சாதகபக்ஷி, ஸாரஸபக்ஷி, இன்பமாகப் பேசுபவர், கையில் அணியும் வலயம் முதலிய ஆபரணங்கள், கண்ணாடி, வெண்கடுகு, கோரோசனை இவற்றை அல்லது இவர்களைக் காண்பது சுபசகுனமாகும்; மிக வும் பரிமளம் வீசும் மணம், மிக்க வெண்மையான நிறம், மதுர ரஸம், இவற்றை அநுபவிக்கும்படி நேரிடுவதும், சாந்தகுணமுள்ள மஹா விருக்ஷபத்தினுடையவும், பசுக்களுடையவும் சப்தத்தைக் கேட்பதும், உயர்த்திப் பிடிக்கப்பட்ட குடை, த்வஜம், சிறிய கொடிகள் இவற்றைக் காண்பதும், துதி செய்வது, பேரி-மிருதங் கம் சங்கு இவற்றின் சப்தங்களையும் புண்யாஹவாசநச் சொற் களையும், வேதாத்யயந சப்தத்தையும் கேட்பது, பிரதக்ஷிணமாக ஸுகமாய் வாயு வீசுவது இவை யாவும் வழியிற் செல்லுகையிலும், ரோகியின் வீட்டிற் பிரவேசிக்கையிலும் ஸம்பவித்தால், அந்த ரோகி ஆரோக்கிய நிலைமையை அடையக்கூடும் என்பதற்கு அறி குறிகளாம். குணத்திற் பலவகைப்பட்டவாறு தூதர்களென்ன சகுனங்களென்ன இவை ஸம்பந்தமான விஷயங்கள் இங்ஙனம் கூறப்பட்டன; இனி ஸ்வப்ன ஸம்பந்தமான சுபாசுப விஷயங்கள் விவரிக்கப்படும். 28—39.

வியாதி ஸூசகங்களான துர்ஸ்வப்னங்கள்.—(1) பிரேதங்கள் என்னும் பூதங்களோடு மதுபானம் செய்துகொண்டு, நாயால் வலி த்து இழுக்கப்படுவதாக ஸ்வப்னம் காண்கிறவன் ஜ்வரரூபமான மிருத்யுவினால் சீக்ரம் கொண்டுபோகப்படுவான். (2) சிவந்த மாலையையும், சிவந்த தேஹத்தையும், அவ்வித வஸ்திரத்தையும்

பெற்று, ஸ்த்ரீயினால் இழுக்கப்படுவதாக ஸ்வப்னம் காண்பவன் இரக்தபித்த ரோகத்தினால் மரணமடைவான். (3) எருமை, நாய், பன்றி, ஒட்டை, கழுதை இவற்றில் ஏதேனும் ஒன்றில் ஏறிக் கொண்டு, ஒருவன் தென்திசை நோக்கிச் செல்வதாக ஸ்வப்னம் கண்டால் இராஜயக்ஷ்மாவினால் அவன் மரணம் அடைவான். (4) தன் மார்பில் முள் அடர்ந்த கொடியாவது, பனஞ்செடியாவது உண்டாவதாக ஸ்வப்னம் காண்பவன் குன்மரோகம் ஸம்பவித்து மரணமடைவான். (5) எவன் ஜ்வாலையில்லாத நெருப்பில் ஹோமம் செய்துகொண்டு, நெய்யைப் பூசிக்கொண்டு, வஸ்திரமில்லாமல் இருக்க, மார்பில் தாமரை உண்டாவதாக ஸ்வப்னத்தில் காண் கிறானோ, அவன் குஷ்டரோகம் உண்டாய் மரித்து விடுவான். (6) ஸ்வப்னத்தில் சண்டாளர்களோடு அநேகவிதமான ஸ்நேஹங்களைப் பருகுபவன் பிரமேஹத்தினால் இறந்துவிடுவான். (7) இராக்ஷஸர் களோடு நர்த்தனம் செய்துகொண்டு ஜலத்தில் அமிழ்ந்து விடுவ தாகக் கனவு காண்பவன் உன்மாதத்தினால் உயிர் துறப்பான். (8) எவன் கழுதை, ஒட்டகம், பூனை, குரங்கு, புலி, பன்றி, பிரேதம், நரி இவற்றில் ஏறிக்கொண்டு போவதாக ஸ்வப்னம் காண்கிறானோ, அவன் மிருத்யுவின் வாயில் அகப்பட்டிருப்பதாய் அறிக. (9) அப்பம், முறுக்கு இவற்றைத் தின்பதாக ஸ்வப்னம் கண்டு, விழித் துக்கொண்டபிறகு அவ்விதமே வாந்தி செய்பவன் பிழைக்கமாட் டான். (10) சூரியக்கிரஹணம், சந்திரக்கிரஹணம் இவற்றை ஸ்வப் னத்தில் காண்பவனுக்கு நேத்திரரோகம் உண்டாகும். (11) சூரிய சந்திரர்கள் ஆகாயத்திலிருந்து விழுவதாக ஸ்வப்னம் கண்டால், நேத்திரம் அவிந்துபோகும். 40—47½.

பல வகையான துர்ஸ்வப்னங்கள்.—சிரஸ்ஸில் மூங்கில், கொடி முதலியவை முளைப்பது, பக்ஷிகள் சிரஸ்ஸில் தாக்குவது, தலை மொட்டையாதல், காகம் - கழு முதலியவற்றால் சுற்றிக்கொள்ளப் படுதல், பிரேதம்-பிசாசம்-ஸ்த்ரீ-திராவிடர்கள், ஆந்திரர், கோமா ம்ஸ பக்ஷிணிகள் இவற்றின் ஸம்பந்தம், பிரம்பு-கொடிகள்-மூங்கில்- புல்-முள் இவற்றின் புதர்களில் சிக்கிக்கொள்ளுதல், பள்ளத்திலும் மயானத்திலும் படுத்துக்கொள்ளுதல், புழுதியிலும் சாம்பரிலும் வீழ்தல், ஜலம் சேறு முதலியவற்றில் மூழ்கிவிடுதல், வேகமான வெள்ளத்தினால் அடித்துக்கொண்டு போதல், நர்த்தனமாடுதல், வாத்தியம் வாசித்தல், பாடுதல், சிவந்த மாலையையும் அவ்விதம் வஸ்திரத்தையும் அணிதல், வயதும் அவயவங்களும் விரைவில் விருத்தியாதல், அப்யங்கஸ்நானம் செய்தல், விவாஹம் செய்து கொள்ளுதல், மீசையையெடுத்துவிடுதல், சமைத்த அன்னத்தை யும் ஸ்நேஹங்களையும் மதுவையும் உட்கொள்ளுதல், வமன விரே சனங்களைச் செய்தல், பொன் இரும்புகளைப் பெறுதல், ஏதோ துன்பமுண்டாதல், ஏதேனும் பந்தனம் ஏற்படுதல், அபஜயம்

பெறுதல், இரண்டு பாதரக்ஷைகள் தொலைந்துவிடுதல், பாதங்களி லுள்ள சர்மம் முற்றிலும் சிதைவுற்று விழுதல், மிகுந்த ஸந்தோஷம், பித்ருக்கள் சினங்கொண்டு விரட்டுதல், தீவர்த்தி-கிரஹங்கள்-நக்ஷத்திரங்கள்-பற்கள்-தேவதைகள்-கண்கள் இவை கீழே விழுதல் அல்லது முற்றிலும் நாசமுறுதல், பர்வதம் பிளந்துவிடுதல், புஷ்பங்கள் பூத்த அடவியிலும்-பாவச் செயல்களைச் செய்பவர்களுடைய இருப்பிடத்திலும்-சவப்படுக்கையிலும்-கனத்த அந்தகாரத்திலும் - தாயாரிடத்திலும் பிரவேசித்துவிடுதல், உப்பரிகை முதலியவற்றிலிருந்து விழுதல், மத்ஸியம் விழுங்கிவிடுதல், காஷாயம் உடுத்திருப்பவர்-ஸௌம்ய குணமில்லாதவர்- வஸ்திரமில்லாதவர்-வன்மையுள்ள கழிகளை யேந்தியிருப்பவர்-சிவந்த கண்களுடையவர்-கறுத்த தேஹமுள்ளவர் இவர்களைக் காண்பது என்னும் இவை போன்ற ஸ்வப்னங்கள் ஒருபொழுதும் சுபமாகமாட்டா. கறுத்த வர்ணமும், பாவ ஸ்வரூபமான முகமும், அவ்வித ஆசாரமும், நீண்ட மயிர்களும், நீண்ட நகங்களும், தொங்குகிற ஸ்தனங்களும், நிறமற்ற புஷ்பமும், அத்தகைய வஸ்திரமும் உடையவளான ஸ்த்ரீயை ஸ்வப்னத்திற் கண்டால், அந்த இரவு மரணகாலத்து இராத்ரி யெனக் கருதக்கூடியதாம். 48—58.

துர்ஸ்வப்ன நிதாநமும் அதனாலான அபாயமும்:—மனம் ஸம்பந்தமான விஷயங்கள், ஓடுவதற்கு ஆதாரமான நாடிகள் இவை பிரபலமான தோஷங்களால் நிரம்பிவிடுவதால், பயங்கரமான துர்ஸ்வப்னங்கள் உண்டாகின்றன; இவற்றால் ரோகி மரணமடைய நேரிடுகிறது; ஆரோக்கிய நிலைமையில் இருப்பவர்கள் இவ்வித ஸ்வப்னங்களால் பிழைத்திருப்பதே ஸந்தேஹிக்கக் கூடியதாகும். அவ்வித நிலைமையை அடைந்துள்ளவர்களில் எவரேனும் ஒருவரே பிராணாபாயத்திலிருந்து தப்பித்துக்கொள்வர்.—59, 59½.

ஏழுவித ஸ்வப்னங்களும் அவற்றின் பலாபல பேதங்களும்:—ஸ்வப்னமானது ஏழுவகைப்படும்; அவையாவன:—திருஷ்ட ஸ்வப்னம்[1], ச்ருதஸ்வப்னம்[2], அநுபூதஸ்வப்னம்[3], பிரார்த்தித ஸ்வப்னம்[4],

1. திருஷ்ட ஸ்வப்னம்—ஸாதாரணமாய் விழித்திருக்கும் நிலைமையில் கண்களால் காணப்படும் விஷயமே ஸ்வப்னத்தில் தோன்றுதல்.

2. ச்ருத ஸ்வப்னம்—காதுகளால்மட்டும் கேட்கப்பட்ட விஷயம் ஸ்வப்னத்தில் தோன்றுதல்.

3. அநுபூத ஸ்வப்னம்—விழித்திருக்கையில் அந்தந்த புலன்களால் நன்கு உணரப்பட்டு, அநுபவிக்கவும் பட்டு, அதே பிரகாரம் நித்திரையில் அநுபவிக்கப்படும் தோற்றம.

4. பிரார்த்தித ஸ்வப்னம்—விழித்திருக்கையில் கண்களால் பார்க்கப்பட்டோ, காதுகளால் கேட்கப்பட்டோ, அல்லது வேறு விதமாகக் கவனிக்கப்பட்டோ, அதை அடைய வேண்டுமென்று கோரிக்கையுண்டாய், அவ்விதமே அதைஅடைவதாகத் தோற்றும் ஸ்வப்னம்.

கல்பித ஸ்வப்னம்[1], பாவிக ஸ்வப்னம்[2], தோஷஜ ஸ்வப்னம்[3] என்பனவாம். இவற்றுள் முதலிற் குறிப்பிட்ட ஐந்துவித ஸ்வப்னங்களும் அவற்றிற்கு ஏற்றவாறு பலன் அளிப்பதில்லை; அவ்விதமே அவரவருடைய பிரக்ருதிதோஷ ஸம்பந்தமான ஸ்வப்னங்களுக்கும், பகலில் காணப்படுகிற ஸ்வப்னத்துக்கும், மறந்துபோன ஸ்வப்னத்திற்கும், வெகு நீண்ட அல்லது மிகவும் குறுகிய ஸ்வப்னத்திற்கும் எவ்வித பலனும் உண்டாகாது. இரவின் முற்பகுதியில் காணப்படும் கனவுக்கு பலன் வெகு காலத்திற்குப் பிறகும் சொற்பமாகவும் உண்டாகும். விடியற்காலத்தில் காணப்படும் கனவுக்கு அதே தினத்தில் பலன் உண்டாகும்; அப்பலன் மஹத்தாவும் இருக்கும். ஸ்வப்னம் கண்ட பிறகு கண் விழித்தவனுக்கு மறுபடி நித்திரையுண்டாகாமல் இருந்தால், அந்த ஸ்வப்னத்திற்கும், காணப்பட்ட ஸ்வப்ன விஷயங்களுக்கு எதிரிடையாகப் பிறர் திடமென்று கூறும் வார்த்தைகளால் மறுக்கப்படாத ஸ்வப்னத்திற்கும் அவ்விதமே அதே தினத்தில் மஹத்தான பலன்கள் ஸம்பவிக்கக்கூடும். 60—63½.

**துர்ஸ்வப்னங்களுக்குப் பரிஹாரம் :—** அசுபஸ்வப்னம் கண்டால் தானம், ஹோமம், ஜபம் முதலியவற்றைச் செய்தால் அதற்கு இயற்கையில் உண்டாகக்கூடிய பலன் குறைந்துவிடுகின்றது. அசுபஸ்வப்னத்தைக் கண்டாலும், அடுத்தாற்போல் இரம்யமான சுபஸ்வப்னத்தைக் கண்டால் அவனுக்கு சுபமான பலனே உண்டாகும்.[4]—64, 65,

**சுபஸ்வப்னங்கள்.—** தேவர்கள், பிராம்மணர்கள், ஜீவித்திருக்கும் பசு-எருதுகள், நண்பர்கள், அரசர்கள், ஸாதுக்கள், கீர்த்திமான்கள், ஜ்வலிக்கும் அக்னி, நிர்மலமான நீர்நிலைகள், கன்னிகை, வெண்ணிறமுள்ளவர்களாய் வெளுத்த வஸ்திரம் தரித்துக் காண்பதற்கு நல்ல பொலிவுள்ளவர்களான சிறு பிள்ளைகள், தனக்கு நாற்புறங்களிலும் இரத்தம் சிந்தியிருக்க மிகப் பிரகாசமான

1. கல்பித ஸ்வப்னம்—பிரத்தியக்ஷ அநுமானாதிகளால் காணப்படாததும், பலன்களால் உணரப்படாததுமான அபூர்வ விஷயம் ஒன்றை மனதில் கல்பித்துக்கொண்டு, அவ்விதம் ஸ்வப்னத்தில் காணுதல்.

2. பாவிக ஸ்வப்னம்—காணப்பட்டும் கேட்கப்பட்டுமுள்ள விஷயங்களுக்கு விபரீதமாகத் தோற்றும் ஸ்வப்னம். இது இனிவரும் நிலைமையைக் குறிப்பிடுவது.

3. தோஷஜஸ்வப்னம்—கோளாறடைந்த வாதாதி தோஷங்களால் ஸம்பவிக்கும் ஸ்வப்னம். இத்தோஷங்கள் மனோவஹ நாடிகளில் ஓடுவதால் பலவித துன்பங்கள் தோன்றும்.

4. அசுப ஸ்வப்னத்திற்கு அடுத்தாற்போல சுபஸ்வப்னம் கண்டால், அசுபஸ்வப்ன பலன்கள் உண்டாகாமல் சுபம் உண்டாவதுபோலவே, சுபஸ்வப்னத்திற்கு அடுத்தாற்போல அசுபஸ்வப்னம் காணப்பட்டால், சுபமான பலன்கள் உண்டாகாமல் அசுப பலன்களே ஸம்பவிக்கும்.

தேஹமுடைய நரமாம்ஸபக்ஷிணி இவர்களை எவன் பார்க்கிருனே, குடை, கண்ணாடி, விஷம், மாம்ஸம், வெளுத்த புஷ்பங்கள், வஸ்திரம், அபரிசுத்தமான வஸ்துக்களால் பூசப்பட்ட பழம், பர்வதம், உப்பரிகை, கனியுடன் கூடிய விருக்ஷம், சிங்கம், மனிதர், யானை இவற்றை எவன் அடைகிருனே, விருஷபம், குதிரை முதலிய வாஹனங்களில் எவன் ஏறுகிருனே, ஆறு, நீரோடை, கடல் இவற்றை எவன் நீந்தித் தாண்டுகிருனே, கிழ்த்திசையையாவது வடதிசையையாவது நோக்கி எவன் செல்லுகிருனே, சேரத்தகாத இடத்தில் எவன் சேருகிருனே, மரிப்பதாக எவன் கருதுகிருனே, எவன் நெருக்கமான கூட்டம் முதலியவற்றிலிருந்து வெளிப்படுகிருனே, தேவர்களாலும் பித்ருக்களாலும் எவன் கொண்டாடப்படுகிருனே, அழுதல், விழுந்து எழுந்திருத்தல், பகைவரை அழித்தல் இவற்றையும் ஸ்வப்னத்தில் எவன் காண்கிருனே அம்மனிதன் தீர்க்காயுளையும், ஆரோக்கிய நிலைமையையும், அதிக செல்வத்தையும் அடைவான். 66—71.

**ஆரோக்கியமடைவதற்கான நற்குறிகள்.**—பிணியாளியானவன், மங்களகரமான ஆசாரங்களை நன்முகச் செய்துவரும் பரிவாரங்களைப் பெற்று வியாதி பரிஹரிக்கப்படும் என்று நம்பிக்கையுள்ளவனுய், ஹிதகாரியங்களைச் செய்வதில் அநுகூலமாயிருந்து, வேண்டியவளவு பொருளுள்ளவனுய், தேஹவன்மையும் வியாதி நிவாரணமாகக் கூடிய அநுகூல இலக்ஷணமுமுள்ளவனுய், வைத்தியரிடமும் பிராம்மணரிடமும் பக்தியுள்ளவனுய், சிகித்ஸை செய்துகொள்வதில் மனம் சலிக்காதவனுயிருந்து வருவானுனல், அக்குறிகள் ஆரோக்கியமடைவதற்கு ஏற்றவைகளாகும்.—72, 73.

**சாரீர ஸ்த்தாநத்தின் முடிவுரை.**—இந்த ஸ்த்தாநத்தில் சரீரத்தினுடைய உற்பத்திக் கிரமம், அதன் மரணமீருகவுள்ள இயற்கை அல்லது சில கோளாறடைந்த நிலைமைகள் ஆகியவை நன்முக இங்ஙனம் கூறப்பட்டன; இவ்வாறு சரீர ஸம்பந்தமான தத்துவங்களை விவரித்திருப்பதால், இது சாரீர ஸ்த்தாநம் என்று வழங்கப்படும்.—74.

# நிதாந ஸ்தாநம்.

## முதல் அத்தியாயம்.

### ஸர்வரோக நிதாநம்.

இங்கு ஸர்வரோக நிதாநம்[1] என்கிற அத்தியாயத்தை ஆத்திரேயர் முதலிய மஹருஷிகள் மொழிந்துள்ளபடியே விவரித்துக் கூறுவோம்:—

வியாதிகளின் பொதுப்பெயர்கள்:—ரோகம், பாபம், ஜ்வரம், வியாதி, விகாரம், துக்கம், ஆமயம், யக்ஷ்மா, ஆதங்கம், கதம், ஆபாதம் என்னும் இப்பெயர்கள் யாவும் பிணியைக் குறிப்பிடுவதற்கான ஓர் இனப் பெயர்களாம்.[2]—1.

---

1. எல்லா ரோகங்களுக்கும் பொதுவான பஞ்சலக்ஷணங்கள் முதலிய நிதாந விஷயங்களை விவரிப்பதால் இவ்வத்தியாயத்திற்கு 'ஸர்வரோக நிதாநம்' என்று பெயர்.

2. ரோகம்—துன்பத்தை விளைவிப்பதால் 'ரோகம்' என்று பிணிக்குப் பெயர். பாபம்—எல்லா வியாதிகளுமே பாபத்தைக் காரணமாகக் கொண்டு ஸம்பவிப்பதால் வியாதிக்கும் 'பாபம்' என்று பெயர் வந்தது. ஜ்வரம்—எந்த வியாதியிலும் தேஹமாவது மனதாவது இரண்டுமாவது தாபப்படுவது இயல்பாகையாலும், பெரும்பான்மையான வியாதிகளில் ஜ்வரமும் ஒரு குறியாக உண்டாவதாலும் ரோகம் என்பதற்கு ஜ்வரமும் பொதுப் பெயராக ஆயிற்று. வியாதி—சரீரத்திலும் மனத்திலும் பலவிதமான துன்பம் விளைவிப்பதால் 'வியாதி' என்கிற பெயர் வந்தது. விகாரம்—தேஹம், மனது, புத்தி, புலன்கள் இவற்றிற்கு இயற்கைக்கு விரோதமான நிலைமைகளை உண்டுபண்ணுவதால் 'விகாரம்' எனப்படுகிறது. துக்கம்—சரீரத்துக்கும் மனதுக்கும் துன்பம் விளைவிப்பதால் 'துக்கம்' எனப்படுகிறது. ஆமயம்—வியாதிகள் பெரும்பாலும் ஆமதோஷத்தினால் உண்டாவதால் 'ஆமயம்' என்று கூறப்படுகிறது. யக்ஷ்மா—அநேக வியாதிகளின் தொகுதியைக் குறிப்பிடுவதால், 'யக்ஷ்மா' என்பது வியாதிக்குப் பொதுப் பெயராகவும் கருதப்படுகிறது. ஆதங்கம்—மிகு கஷ்டப்பட்டு ஜீவிக்க வேண்டியிருப்பதால் 'ஆதங்கம்' என்று கூறப்படுகிறது. கதம்—அநேக காரணங்களால் விகாரங்களையுண்டுபண்ணுவதால் 'கதம்' எனப்படும். ஆபாதம்—பலவகையிலும் துன்பம் அல்லது கெடுதி விளைவிப்பதால் வியாதிக்கு இப்பெயர் வந்தது.

**பஞ்ச லக்ஷணங்கள்:—** நிதாநம், பூர்வரூபம், ரூபம், உபசயம், ஸம்ப்ராப்தி என்கிற இவை ரோகங்களைப் பகுத்தறிவதற்கான ஐந்து இலக்ஷணங்கள்[1] எனப்படும்.—2.

**நிதாநம்:—**[2]நிமித்தம், ஹேது, ஆயதநம், பிரத்யயம், உத்தாநம், காரணம் என்கிற இச்சப்தங்கள் நிதாநம் என்பதைக் குறிப்பிடுவதற்கான பர்யாய பதங்களாம்.—2¾.

**பூர்வரூபம்:—** வியாதி ஸம்பவிப்பதற்கு ஆதாரமாயுள்ள குறிப்பிட்ட தோஷத்தின் குறிகளல்லாத வேறு எந்த இலக்ஷணங்களால் இனி உண்டாகப்போகிற வியாதியானது அறிவிக்கப்படுமோ, அந்த இலக்ஷணங்களை பூர்வரூபம் என்று வழங்கப்படுகிறது. அதாவது—பூர்வரூபாவஸ்த்தையில் வியாதிகள் சொற்பமான நிலைமையில் இருப்பதால், வியாதியின் இயற்கையான இலக்ஷணம் விளங்கக் காணமுடியாததாயிருக்கும்; இப்பூர்வரூபக் குறியும் அந்தந்த வியாதிகளின் இயற்கை இலக்ஷணங்களின் தன்மைக்குத் தகுந்தவாறு ஸம்பவிக்கும்.[3]—3, 4.

---

1. பஞ்சலக்ஷணங்களுக்கு பஞ்சநிதாநம் அல்லது நிதாந பஞ்சகம் என்று பெயர் உண்டு.

2. நிதாநம் என்றால் வியாதிக்குக் காரணம் எனப் பொருள். ஆனால் பஞ்சலக்ஷணங்களுக்கும் பொதுவாக நிதாநம் என்று பெயர் உண்டு. ஆகவேதான் இந்த ஸ்த்தாநத்திற்கு 'நிதாந ஸ்த்தாநம்' என்றும் பெயர் வந்தது. வியாதிக்குக் காரணம் என்பதைக் குறிப்பிடும் இந்த நிதாநம் 'ஸந்நிக்ருஷ்டம்' என்றும், 'விப்ரக்ருஷ்டம்' என்றும் இரண்டுவிதமாகப் பிரிக்கப்படும். (ஸந்நிக்ருஷ்டம் என்றால் ஸமீபித்தது, விப்ரக்ருஷ்டம் என்றால் தூரத்திலிருப்பது என்று பொருள்.) தேஹத்திலேயே வியாபித்துள்ள வாதாதி தோஷங்கள் திடீரென்று கோளாறடைந்து வியாதியை உண்டுபண்ணுவதற்குக் காரணமாகத் தோன்றினால் அதுவும் அதுபோன்றவையும் ஸந்நிக்ருஷ்ட நிதாநமாகும். தகாத உணவு முதலியவை முதலில் தேஹத்தில் பிரவேசித்து, அப்பால் பரிபாககாலத்தில் வாதாதி தோஷங்களுக்குக் கோளாறை உண்டுபண்ணி, அவற்றின் மூலமாய் வியாதியுண்டானால், அவ்வியாதியின் ஹேது விப்ரக்ருஷ்ட நிதாநம் என்று கூறப்படும். மேலும் சீக்கிரம் ஜீர்ணமாகக் கூடாத உணவுகளை உபயோகிக்க அதனால் ஆமதோஷம் உண்டாகலாம்; ஆமதோஷத்தினால் ஜ்வராதி வியாதிகள் உண்டாகும்; இவற்றுள் அஜீர்ணமுண்டாக்கக்கூடிய பதார்த்தங்களைப் புஜிப்பது ஆமதோஷத்திற்கு ஸந்நிக்ருஷ்ட நிதாநமாகவும், ஜ்வராதி வியாதிகளுக்கு விப்ரக்ருஷ்ட நிதாநமாகவும் ஆகின்றது.

3. பூர்வரூபம் என்பதை பிராக்ரூபம் என்றும் கூறுவர்; அதாவது உண்டாகப் போகிற வியாதியின் தன்மையைக் குறிப்பிடும் ஸூக்ஷ்மக்குறியாம். ஒருவனுக்கு ஜ்வரம் உண்டாகப்போகிறதென்றால், அதற்கு முன்பாக தேஹம் பாரமாயிருப்பது, திமிர்ப்பு, இடுப்புவலி, தலைவலி, குளிர் முதலியவை உண்டாகுமல்லவா? இக்குறிகளே உண்டாகப்போகிற ஜ்வரத்திற்குப் பூர்வ ரூபங்களாகும். அதிஸாரம் உண்டாகப் போகிறதென்றால் வயிற்

**ரூபம்:**—முற்கூறிய ‘பூர்வரூபம்’ என்கிற உண்டாகப்போகிற வியாதி ஸூசகமான குறிகளே விளங்கத் தோன்றிவிட்டால், அவை **ரூபம்** என்று சொல்லப்படும்.[1] ‘ரூபம்’ என்பதற்கே ஸம்ஸ்த்தாநம், வியஞ்ஜநம், லிங்கம், இலக்ஷணம், சிந்ஹம், ஆக்ருதி என்பவை பர்யாய நாமங்களாகும்.—5.

**உபசயமும் அநுபசயமும்.**—வியாதியின் காரணத்திற்காவது வியாதிக்காவது நேர் எதிரிடையாயிருப்வையான, அல்லது அவற்றிற்கு எதிரிடையாகக் காரியங்களையாவது செய்யக்கூடியவையான ஔஷதமென்ன, உணவென்ன, வேலையென்ன இவற்றின் பிரயோகத்தினால் வியாதிநிவாரண ரூபமான சுகத்தை உண்டுபண்ணும் யாதொரு உபயோகம் உண்டோ, அதையே **உபசயம்** என்று அறிக; இவ்வுபசயமே வியாதிக்கு ‘ஸாத்மியம்’ என்று கருதப்படுகிறது.[2] அப்படிக்கின்றி ஔஷதாதிகளின் உபயோகம் வியாதியை நிவ்ருத்திக்காமற்போனால், அச்செயல் **அநுபசயம்** என்றும், வியாதிக்கு அஸாத்மியம் என்றும் கூறப்படுகிறது.—6, 7.

---

றில் வேதனை, வயிற்றுப் பொருமல் முதலியவை பூர்வரூபங்களாக உண்டாகும். இப்படியே அந்தந்த வியாதிக்குத் தகுந்தவாறு வெவ்வேறு வகையான பூர்வரூபங்கள் உண்டாகும். பூர்வரூபம் சாரீரம் என்றும், மாநஸிகம் என்றும் இருவகைப்படும்; ஜ்வரத்தில் சிமிர்ப்பு, அரோசகம், தேஹபாரம், தலைவலி முதலிய சரீரத்தைப்பற்றியுண்டாகுபவை ‘**சாரீர பூர்வருபங்கள்**’ என்றும், அதே வியாதியில் மனக்கவலை, நல்ல வார்த்தை முதலியவற்றில் பிரியமின்மை முதலான மனதைப்பற்றி யுண்டாகுபவை ‘**மாநஸிக பூர்வருபங்கள்** என்றும் கூறப்படும்.

1. ரூபம்—ஒவ்வொரு வியாதிக்கும் இயற்கையில் ஏற்படும் குறி.

2. உபசயம் என்றால் வியாதி நிவ்ருத்தியதால். இதையே சிறிது விளங்கக் கூறுவோம்:—நிதாநம் எனப்படும் ரோககாரணத்திற்கு எதிரிடையான ஔஷதத்தையும் உணவையும், வேலையையும் உபயோகிப்பதால் வியாதிக்கு உபசயம் (உபசாந்தி) உண்டாகும்; என்றால்—ஹேது விபரீதமான அல்லது வியாதி விபரீதமான ஔஷதான்ன விஹாரங்களால் உண்டாகும் உபசயமாகும். நிதாநத்திற்காவது வியாதிக்காவது எதிரிடையல்லாத குணமுள்ளவைகளாகத் தோற்றுபவையும், இறுதியில் பலனில் அவற்றிற்கு எதிரிடையான காரியங்களைச் செய்யும் ஔஷத அன்ன விஹாரங்கள் ஹேது விபரீதார்த்தகாரிகள் என்றும், வியாதி விபரீதார்த்தகாரிகள் என்றும் கூறப்படும். இவற்றுள் (1) ஹேது விபரீதமான ஔஷதம்—குரு ஸ்நிக்த்த சீதங்கள் என்னும் காரணங்களால் உண்டான வியாதியில், இலகு ரூக்ஷ உஷ்ணங்கள் என்கிற குணங்களையுடைய பதார்த்தங்களை முறையே பிரயோகித்தல். (2) ஹேது விபரீதமான அன்னம்—ஸந்தர்ப்பணத்தினால் உண்டான வியாதியில் அபதர்ப்பணமான (இலங்கனம் முதலிய) சிகித்ஸையைச் செய்தல். (3) ஹேது விபரீதமான விஹாரம்—மிதமிஞ்சி உழைத்ததால் ஏற்பட்ட வியாதியில் உடம்பு அசையாமல் அமைதியாயிருத்தல். (4) கபத்தினால் உண்டான ஜ்வரத்தில் கிருதபானம் செய்வித்தல் வியாதி விபரீதமான ஔஷதமாகும். (5) அதே கபஜ்வரத்தில் பேயா என்னும் கஞ்சிவகைகளை உப

ஸம்ப்ராப்தி:—தோஷம் முதலிற் கோளாறடைந்த வகைகளையும், அப்பால் அத்தோஷம் தேஹத்திற் பரவும் விதங்களையும், அதனால் வியாதியுண்டாகும் கிரமத்தையும் அறிவிக்கக்கூடிய முறையானது ஸம்ப்ராப்தி எனப்படும்; இதற்கே ஜாதியென்றும், ஆகதியென்றும் பெயராம்.[1] இது ஸங்க்யாஸம்ப்ராப்தியென்றும், விகல்பஸம்ப்ராப்தி யென்றும், பிரதாநஸம்ப்ராப்தி யென்றும், பலஸம்ப்ராப்தி யென்றும், காலஸம்ப்ராப்தி யென்றும் அநேக வகைப்படும். (1) இதன் பிறகு இந்த ஸ்த்தாநத்திலேயே ஜ்வரம் எட்டுவிதம் என்று ஆரம்பித்து ஒவ்வொரு வியாதியின் உட்பிரிவுகளைப் பகுத்து, அவற்றின் எண்ணிக்கைகளைக் குறிக்கப் போகிற விஷயம் ஸங்க்யாஸம்ப்ராப்தி எனப்படும்.[2] (2) பல தோஷங்கள் சேர்ந்து வியாதியை யுண்டாக்கையில், பிரகோபமடைந்த அத்தோஷங்களுக்குள்ள தாரதம்யங்களை அல்லது தோஷங்கள் பிரகோபிப்பதற்குக் காரணமான ரூக்ஷாதிகுணங்களைப் பகுத்தறிந்து, அவற்றின் அம்சங்களாகவோ அல்லது அவ்வம்சங்களின் சில பகுதிகளாகவோ கல்பனை செய்து நிர்ணயிக்

---

யோகித்தல் வியாதி விபரீதமான அன்னமாம். (6) அதே ஜ்வரத்தில் அமைதியாகப் படுத்திருப்பது வியாதி விபரீதமான விஹாரமாம். (7) ஹேது விபரீதார்த்தகாரியான ஔஷதம்—பித்தப் பிரதானமான வீக்கத்தில் பித்தகரமான உஷ்ணமாயுள்ள பிசுமுதலிய ஒற்றடங்களை உபயோகித்தல். (8) ஹேது விபரீதார்த்த காரியான அன்னம்—அதே பித்தவீக்கத்தில் உஷ்ண வீர்யமான விதாஹிகுணமுள்ள உணவுகளை உபயோகித்தல். (9) சர்த்தியில், விரல் குச்சி முதலியவற்றைத் தொண்டையில் செலுத்தி சர்த்தியையே உண்டுபண்ணுதல் ஹேதுவிபரீதார்த்தகாரி செயல் அல்லது விஹாரமாகும். (10) சர்த்தியென்னும் வாந்தியில் அதையே உண்டாக்கக்கூடிய உப்பு முதலியதை உபயோகித்தல் வியாதி விபரீதார்த்தகாரி ஔஷதமாம். (11) அதிஸாரத்தில் விரேசனமுண்டுபண்ணும் பாலையே உட்கொள்ளுதல் வியாதி விபரீதார்த்தகாரியான அன்னம். (12) உட்புகுந்து துன்பமளிக்கும் சல்யத்தை வெளிப்படுத்த வண்டியில் ஏற்றி மேடுபள்ளங்களில் இழுப்பது முதலிய அதிர்ச்சி யுண்டுபண்ணும் சிகித்ஸையே வியாதி விபரீதார்த்த காரியாம்.

1. ஜ்வரத்தில் வாதாதி தோஷங்கள் அவற்றிற்குக் காரணமான பிரதிகூல பதார்த்தங்களால் அல்லது செயல்களால் கோளாறடைய, (ஆமதோஷாதிகளால் வாதாதிகள் விகாரமடைய) அதனால் தேஹத்தில் ஸ்ரோதோமுகங்கள் என்னும் நிணநீர்க்குழாய் முதலிய த்வாரங்களில் ஆமதோஷம் அபிவிருத்தியாய், அதனால் தாதுக்களில் இயற்கையில் ஸம்பவிக்கும் பாசகவேலை திமிதப்பட்டு, உட்புறத்து உஷ்ணவேகம் வெளியில் பரவவே ஜ்வரம் ஸம்பவிக்கிறது என்பது இவ்வியாதியின் ஸம்ப்ராப்தியாகும்.

2. ஸங்க்யாஸம்ப்ராப்தி—ஜ்வரம் எட்டுவிதம் என்றும், காஸம் ஐந்துவிதம் என்றும், குன்மம் எட்டுவிதம் என்றும் இவ்வாறு ஒவ்வொரு வியாதிக்கும் எண்ணிக்கையில் கூறப்படும் பேதம் ஸங்க்யா ஸம்ப்ராப்தியாம்.

கப்படும் விகற்பம் விகல்பஸம்ப்ராப்தி யெனப்படும்.[1] (3) சுதந்திர வியாதியென்றும், பாதந்திர வியாதியென்றும் பகுத்து, வியாதிக்குப் பிராதான்யத்தைக் கூறுவது பிரதாநஸம்ப்ராப்தி யென்று வழங்கப்படும்.[2] (4) ஒரு வியாதிக்குக் காரணம் முதலிய பஞ்சலக்ஷணங்கள் முற்றிலும் ஸம்பவித்திருப்பதையும், அல்லது அவற்றில் சில இலக்ஷணங்கள் மாத்திரம் ஏற்பட்டிருப்பதையும் கொண்டு ரோகம் பலமானது அல்லது துர்ப்பலமானது என்று பேதம் கூறுதல் பலஸம்ப்ராப்தியாகும்.[3] வியாதியானது இரவிலாவது, பகலிலாவது, ஒவ்வொரு ருதுவிலாவது, ஆஹாரம் உட்கொண்டபொழுதாவது—இவ்வாறு ஒவ்வொரு குறிப்பிட்ட காலத்தில் அந்தந்த தோஷத்தின் தன்மைகளை அநுஸரித்து ஸம்பவிக்கும் வகையைக் கொண்டு, வியாதியின் காலங்களை நிர்ணயிக்கும் முறையானது காலஸம்ப்ராப்தி யென்று வழங்கப்படும்.[4] 8—11.

---

1. விகல்பஸம்ப்ராப்தி—வாதாதி தோஷங்கள் தனித்தனியாகவோ, இரண்டிரண்டாகவோ, மூன்றும் ஒருமிக்கச் சேர்ந்தோ வியாதியை யுண்டு பண்ணுகையில் ஒவ்வொரு தோஷத்திற்குமுள்ள ஏற்றக்குறைவான அளவுகளைக் குறிப்பிடும் விஷயம். அல்லது வாதாதிதோஷங்கள் அதததற்குள்ள காரணகுணங்களில் (ருக்ஷ-இலகு-சீதாதிகளால்) எந்தெந்த அம்சத்தினால் கோளாறடைந்தனவென்று குறிக்கப்படும் விஷயமாம்.

2. பிரதாந ஸம்ப்ராப்தி—வியாதி சுதந்திரமானதென்றும், பாதந்திரமானதென்றும் இருவகைப்படும்; சுதந்திரமான காரணங்களால் உண்டாகும் வியாதிகள் சுதந்திரங்கள்; ஒவ்வொரு வியாதியையே காரணமாகக்கொண்டு உண்டாகும் மற்றொரு வியாதி பாதந்திரமாகும். சுதந்திரமான காரணத்தினால் அஜீர்ணம் உண்டாகும்; அஜீர்ணத்தினால் அதிஸாரம் உண்டாகலாம்; இவற்றுள் அஜீர்ணம் சுதந்திர வியாதியாகவும், அதிஸாரம் பாதந்திர வியாதியாகவும் கருதப்படுகின்றன. இவ்வாறு வியாதிகளுக்குச் சுதந்திர பாதந்திர (பிரதாந அப்பிரதாந) பேதங்களைக் குறிப்பிட்டு விவஹரிக்கப்படும் விஷயமே பிரதாநஸம்ப்ராப்தி; ஆகவே பிரதாநஸம்ப்ராப்தியென்பது போலவே அப்பிரதாந ஸம்ப்ராப்தி யென்றும் இதில் மற்றொன்று உண்டு.

3. பல ஸம்ப்ராப்தி—ஒவ்வொரு வியாதிக்கும் என்னென்ன காரணங்கள் உண்டோ, அவ்விதமே பூர்வரூப-ரூபாதிகள் எவ்வளவு உண்டோ அவையெல்லாம் அந்தந்த வியாதியில் பூர்ணமாகக் கண்டிருந்தால் அது பலமான வியாதியாயிருக்குமாகையால், அதுவே பலஸம்ப்ராப்தி யென்றும், அவற்றுள் ஏதாவது சில பாகங்கள் மாத்திரம் காணப்படுமானால் அந்த ஸம்ப்ராப்தி துர்ப்பலமானதென்றும் கருதப்படும்.

4. எந்த தோஷம் பிரகோபமடைய எது அநுகூலமான காலமோ அக்காலத்தில் அத்தோஷம் வியாதியை உண்டுபண்ணலாம் அல்லது விருத்தி பண்ணலாம். எப்படியென்றால்—கபஜ்வரம் இரவின் ஆரம்பத்திலும், விடியற்காலத்திலும், புஜித்தஸமயத்திலும், வஸந்தருதுவிலும் விருத்தியாகும் அல்லது உண்டாகும்.

வியாதிக்குப் பொதுக் காரணங்கள்:—இங்ஙனம் மேற்கூறிய வாறு நிதாநஸம்பந்தமான[1] விஷயம் சுருக்கமாகக் குறிப்பிடப் பட்டது. இனி இவ்விஷயமே விவரித்துக் கூறப்படும்.[2] எல்லா வியாதிகளுக்குமே பிரகோபமடைந்த தோஷங்கள் காரணமாகும். அத்தோஷங்கள் பிரகோபமடைவதற்குக் காரணம் ஹிதமல்லாத ஆஹாரங்களை உபயோகிப்பதும், அஹிதமான காரியங்களைச் செய் வதுமேயாம். காலம், விஷயம், காரியம் என்கிற இம்மூன்றுக்கும் ஹீந-மித்தியா-அதிமாத்திரைகள் என்கிற முன் கூறப்பட்டுள்ள மூன்றுவித சேர்க்கைகளும் அஹிதமானவையாம். [3]—12, 13.

தோஷங்கள் பிரகோபமடைவதற்கான காரணங்கள்:—(1) கைப்பு - கார்ப்பு - துவர்ப்பு, - இச்சுவைகளுள்ள வஸ்துக்களாலும், ரூக்ஷமான உணவினாலும், ஆஹாரத்தை அற்பமாகவும் அகாலத்தி லும் புஜிப்பதாலும், மலம் முதலியவற்றை பலாத்காரமாக வெளிப் படுத்த முயலுவதால் அல்லது அவற்றை அடக்குவதாலும், இரவிற் கண் விழிப்பதாலும், மிகவும் உரத்துப் பேசுவதாலும், அதிக வேலைகளைச் செய்வதாலும், பயத்தினாலும், மனத்துயரத்தினாலும், சிந்தையினாலும், வியாயாமம் என்னும் தேஹவுழைப்பாலும், புணர்ச்சியினாலும், கிரீஷ்மருதுவாலும், பகற்பொழுது இரவு இவற்றின் முடிவு நேரங்களிலும், உணவு ஜீர்ணமான ஸமயத்தி லும் வாததோஷம் பிரகோபமடையும். (2) கார்ப்பு, புளிப்பு, உப்பு இந்த இரஸங்களாலும், தீக்ஷ்ண குணத்தினாலும், உஷ்ண வீர்யத்தினாலும், கோபத்தினாலும், அழற்சி யுண்டுபண்ணும் வஸ்துக்களாலும், சரத்ருதுவிலும், நடுப் பகலிலும், நடு நிசியிலும், உணவு ஜீர்ணமாகும் ஸமயத்திலும் பித்தம் பிரகோபமடையும். (3) மதுரரஸம், அம்லரஸம், இலவணரஸம் இவற்றாலும், ஸ்நிக்த்தமாகவும் குருவாகவும் அபிஷ்யந்தியாகவும் சீதளமாகவும் உள்ள வஸ்துக்களாலும், உட்கார்ந்திருப்பது-நித்திரையுறுதல்-சுக வாழ்க்கை-அஜீர்ணம்-பகலில் தூங்குவது-அதிக பிருஹ்மண சிகித் ஸையைச் செய்துகொள்வது என்கிற இக்காரியங்களாலும், வமந சிகித்ஸை நன்கு நிறைவேறாமையினாலும், உணவு உட்கொண்ட ஸமயத்திலும், வஸந்தருதுவிலும், காலையிலும், மாலையிலும் கபம் பிரகோபமடையும். 14—17¾.

தோஷங்களின் த்வந்த்வ-ஸந்நிபாதப்பிரகோபங்களுக்குக் கார ணங்கள்:—(1) தோஷங்கள் த்வந்த்வங்களாகப் பிரகோபமடை

1. நிதாநம் என்பதால் பஞ்சலக்ஷணங்கள் என்னும் காரண-பூர்வ ரூபாதிகள் ஐந்தும் குறிக்கப்படுகின்றன.

2. இனி ஜ்வர நிதாநம் முதலிய பிரகரணங்களில் விவரிக்கப்படும் விஷயம் எனக் கருத்து.

3. இது விஷயமாக 8-வது பக்கத்தில் "ரோகாரோக்கிய காரணங் கள்" என்னும் தலையங்கத்தையும், 135, 136-ம் பக்கங்களில் விவரித்துள்ள விஷயங்களையும் பார்க்க.

வதற்கு, வாத-பித்த-கபங்களுள் இரண்டிரண்டு தோஷங்களுக்குக் கூறப்பட்டுள்ள அஹிதங்கள் காரணமாகும். (2) அங்ஙனமே எல்லாத் தோஷங்களுக்கும் கூறப்பட்டுள்ள காரணங்கள் ஒருமிக்கக் கலந்து ஸம்பவித்தால் ஸந்நிபாதம் உண்டாகும்; அதாவது பின்வருமாறு : நானாவிதமான பதார்த்தங்கள்-அல்லது நல்லவை பொல்லாதவை யென்னும் பதார்த்தங்கள்-கலந்ததும், அஜீர்ணம் செய்யக் கூடியதும், ஏற்றக்குறைவானதும், விரோத குணங்களைப் பெற்றதும், அளவில் அதிகமாயிருப்பதுமான உணவுகளை உண்பதாலும், கெட்டுப் பதனழிந்த மதுவையும்-அத்தகைய தண்ணீரையும்-உலர்ந்துபோன காய்கறிகளையும்-அவ்விதமான கிழங்குகளையும்-பிண்ணாக்குகளையும்-மண்ணையும்-யவதானியங்கள் சேர்ந்த ஸுரா எனப்படும் மதுவையும்-அழுகி உலர்ந்து இறுகிய இறைச்சிகளையும் உண்பதாலும், மூன்று தோஷங்களையும் பிரகோபிக்கச் செய்யும் மற்றுமுள்ள அந்தந்த வஸ்துக்களாலும், வெவ்வேறு உணவுகளை அடிக்கடி மாற்றுவதாலும், தாதுக்கள் கெட்டுப்போவதாலும், எதிர்காற்றாலும், துஷ்டக் கிரஹங்களின் ஆவேசத்தினாலும், விஷத்தினாலும், கிருத்ரிமவிஷத்தினாலும், கெட்டுப்போன அன்னத்தினாலும், மலைப் பிராந்தங்களில் சில ஸமயம் வஸிப்பதாலும், கிரஹங்களால் ஜன்மநக்ஷத்திரம் பாதிக்கப்படுவதாலும், பலவகையான மித்தியாயோகங்களாலும்[1], பாவச் செயல்களைச் செய்வதாலும், ஸ்த்ரீகளுக்குப் பிரஸவ ஸமயத்தில் உண்டாகும் கோளாறுகளாலும், சிகித்ஸைகள் முறை தவறாகச் செய்யப்படுவதாலும் மூன்று தோஷங்களும் ஒருமிக்கப் பிரகோபமடைந்து ஸந்நிபாதம் உண்டாகும். 18—22½.

ஒவ்வோரு ரோகத்திலும் தோஷங்கள் விகாரமடைதல் :—தோஷங்கள் ஒவ்வொரு ரோகத்திலும் இவ்விதம் பிரகோபமடைந்து, வியாதியுண்டாவதற்கு ஆதாரமான ஸ்தானங்களை நோக்கிச் செல்லுகிற இரஸாயனிகள் என்னும் குழாய்களில் பிரவேசித்துச் சென்று, அப்பால் தேஹத்தில் சீக்கிரம் விகாரமடைகின்றன.—23½.

---

## இரண்டாம் அத்தியாயம்.

### ஜ்வர நிதாநம்.

இதன் பிறகு ஜ்வர நிதாநம்[2] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது:—

---

1. மித்தியாயோகம்—135-136ம் பக்கங்களைப் பார்க்க.

2. ஜ்வரநிதாநாத்தியாயம்—ஜ்வரம உற்பத்தியாவது, அதன் இலக்ஷணங்கள் இவை முதலியவற்றை விவரிக்கும் அத்தியாயம்.

ஜ்வரமும் அதன் பேதங்களும்:—ஜ்வரம் என்பதற்கு ரோகபதி,[1] பாபம்,[2] மிருத்யு,[3] ஓஜோசநம்,[4] அந்தகம்,[5] குரோதம்,[6] தக்ஷாத்வர த்வம்ஸீ[7] என்னும் வேறு பெயர்கள் உண்டு. அது ருத்திரனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து உண்டானது; ஜன்ம காலத்திலும் அந்திம காலத்திலும் மயக்கம் உண்டுபண்ணு மியல்புடையது; மிகத் தாபமளிக்கும்; ஒழுக்கத்தவறுதலால் உற்பத்தியாகக் கூடியது; குரூரமானது; மேலும் வெவ்வேறுவிதமான பிராணிகளுக்கும் உண்டாய் வெவ்வேறு பெயர்களால் வழங்கப்படுகிறது.[8] அவற்றுள் மூன்று தோஷங்களால் தனித் தனியே மூன்றும், இரண்டிரண்டு தோஷங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், ஆகந்துக ஜ்வரம் என்பது ஒன்றும் ஆக ஜ்வரம் எட்டு விதமாம்.[9] 1—2½.

ஜ்வர-ஸம்ப்ராப்தி :—அந்த எட்டுவிதமான ஜ்வரங்களிலும் ஒவ்வொன்றுக்கும் ஆதாரமான வாதாதி தோஷங்கள் அததற்கு ஏற்ற ஹேதுக்களால் கொளாறடைந்து, ஆமாசயத்தில் ஊடுறுவிப்

---

1. ரோகபதி—பெரும்பான்மையான வியாதிகளிலும் ஜ்வரம் ஒரு குறியாயிருப்பதாலும், மற்ற வியாதிகளிலும் இது ஜனங்களுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் அதிகமாய் உண்டாவதாலும் இப்பெயர் வந்தது.

2. பாபம்—பாவத்தினால் ஏற்படுவதால் இவ்வியாதிக்கே பாபம் எனப் பெயர் வந்தது.

3. மிருத்யு—மற்ற வியாதிகளைக் காட்டிலும் எப்பொழுதுமே ஜ்வரத்தினாலேயே மரணம் உலகில் விசேஷமாய் உண்டாவது இயற்கையாயிருப்பதால் இவ்வாறு பெயர் வந்தது.

4. ஓஜோசநம்— ஓஜஸ் என்கிற தாதுவை முக்கியமாய் ஜ்வரம் அழித்துவிடும் ; ஆகையினாலேயே ஜ்வரத்தினால் வருந்துபவன் மிவும் துர்பலமாவும், ஒளிமழுங்கியும், இரத்தம் வெளுத்து முகம் வெளிறியும் போய் விடுகிறான் என்றறிக. (128 வது பக்கத்தில் ஓஜஸ் என்னும் தாதுவைப்பற்றிய விவரத்தைப் பார்க்க.)

5. அந்திம காலத்தில் பொதுவாய் இது வருவதால் 'அந்தகம்' என்று பெயர்.

6. சிவனுடைய கோபமே ஜ்வரமாகப் பரிணமம் அடைந்ததாம் ; ஆகவே இதற்குக் குரோதம் என்று பெயர். (குரோதம் என்றால் கோபம்.)

7. தக்ஷப்பிரஜாபதி ஒரு மஹத்தான யாகத்திற்குத் தன்னைப் பிரார்த்தித்து வரவழைக்காமையால் அவரிடம் சிவனுக்கு அடங்காக் கோபம் உதிக்க, அப்பொழுது தமது நெற்றிக்கண்ணைத் திறந்து தக்ஷருடைய யாகத்தை அழிக்க, அச்சமயம் ஜ்வரம் என்னும் வியாதி அக்கோபத்திலிருந்து உற்பத்தியானதாக ஒரு புராணகதை.

8. யானைக்கு உண்டாகும் ஜ்வரத்திற்கு 'பாகலம்,' என்றும் குதிரைகளின் ஜ்வரத்திற்கு 'அபிதாபம்' என்றும், பசுக்களின் ஜ்வரத்திற்கு 'கோகர்ணகம்' என்றும், பக்ஷிகளின் ஜ்வரத்திற்கு 'மகரம்' என்றும் பெயர். இவ்வாறே விருக்ஷம் முதலியவற்றிற்கும் ஜ்வரம் உண்டாவதுண்டு.

9. வாதஜ்வரம், பித்த ஜ்வரம், கபஜ்வரம் ; வாதபித்தஜ்வரம், வாத கபஜ்வரம், பித்த கபஜ்வரம் ; வாத பித்த கபஜ்வரம் ; ஆகந்துகஜ்வரம் என்பவை யாம்.

பாய்ந்து, ஆமதோஷத்துடன்[1] கலந்துகொண்டு, ஸ்ரோதோமார்க்கங்களை அடைத்து, உணவுகளும் தாதுக்களும் பக்குவமாய் மேன் மேலும் தாதுக்கள் விருத்தியாவதற்கு அவசியமான அக்னியை (உஷ்ணத்தை) வெளிப்படுத்தி,[3] அவ்வெப்பத்தோடு அத்தோஷங்களும் உடலெங்கும் வியாபித்து, தாபத்தையும் உண்டுபண்ணி, உடலை மிகவும் சூடாகச்செய்து ஜ்வரத்தை உண்டுபண்ணுகின்றன; ஜ்வரம் உண்டாயிருக்கையில் ஸ்ரோதோ மார்க்கங்கள் அடைக்கப்பட்டிருப்பதாலேயே, அப்பொழுது வியர்வை உடம்பில் சிறிதும் உண்டாவதில்லை.[4] 3—5½.

ஜ்வர பூர்வ ரூபம்.—அந்த ஜ்வரத்திற்குப் பொதுவான பூர்வ ரூபங்கள் பின்வருமாறு:—சோம்பல், மனதுக்கு நிலையில்லாத்தனமை, தேஹம் குருவாகப் போதல், வாயில் ஏதோ விகாரமான இரஸம் ஏற்படுதல், அன்னாதிகளில் பிரியமில்லாமை, கொட்டாவி விடுதல், கண்ணீருடன் கண்கள் வியாகுலப்படுதல், அங்கங்களில் வேதனை, உணவு முதலியது ஜீர்ணமாகாமற்போதல், தேஹவன்மை குறைந்து விடுதல், அதிக நித்திரை, மயிர்ச்சிலிர்க்கை யுண்டாதல், உடல் நிலைத்து நிற்கமுடியாமற் போதல், முழங்காலுக்குக் கீழுள்ள ஆடுச்சதை யென்னும் தசைகளில் கொறுக்குவலி யுண்டாதல், ஆயாஸம், ஹிதமான உபதேசங்களில் கோபமுண்டாதல், அம்லம்-இலவணம்-கடுரஸம் இச்சுவைகளில் விருப்பம், இனிப்பான தின்பண்டங்களில் வெறுப்பு, குழந்தைகளிடம் வெறுப்பு, அதிக நாவரட்சி, பலவிதமான ஓசைகள்-அக்னி - குளிர்ச்சி - காற்று - ஜலம் - நிழல் - சூடு இவைகளில் திடீரென்று விருப்பமும், அவற்றில் திடீரென்று வெறுப்பும் உண்டாவது என்னும் இவைகளேயாம். இவை உண்டான பிறகு ஜ்வரம் விளங்கக் காணும். 6—9½.

வாத ஜ்வரம்.—ஜ்வரம் உண்டாவதிலும், விடுவதிலும், தேஹத்தில் பலவேறு கலவரமுண்டுபண்ணுவதிலும் ஜ்வரவேகம் மிருதுவாயிருக்கும் தன்மையிலும், வேதனை அதிகரிப்பதிலும், சூடு விருத்தியாவதிலும் திடீரென்று ஏற்றத்தாழ்வு அல்லது ஒழுங்கீனம் ஏற்படும்; அவயவங்களில் ஆங்காங்கு ஒவ்வொரு விதமான வேதனை

1. ஆமதோஷம்- 148-ம் பக்கம் பார்க்க.

2. ஸ்ரோதஸ்ஸுகள் என்பதால், இரஸவஹமாகவும், மூத்திரம் முதலிய கழிவுப் பொருட்கள் செல்லுவதற்கு அவசியமாயிருப்பவையுமான தேஹத்தில் அடங்கிய குழல்கள் குறிக்கப்படுகின்றன.

3. உணவு பக்குவமாகிற விடத்திலும், தாதுக்கள் பக்குவமாய் விருத்தியாகவேண்டிய பாகங்களிலும் நடைபெறும் உஷ்ணத்திற்கான வேலையானது ஆமதோஷத்தினால் தடுக்கப்படவே, அவ்விடங்களிலிருந்து இயற்கையிலுண்டாகும் சூடு தேஹத்தின் மேற்புறத்துக்கு ஒருமிக்கக் கூடி வருவதாலே, தேஹத்தின் மேற்புறத்தில் சூடு அதிகரிக்கின்றது.

4. ஆமதோஷத்தினால் ஸ்வேதவஹமான ஸ்ரோதஸ்ஸுகளும் அடைபட்டு விடுகின்றன.

உண்டாவதும் மறைவதுமாயிருக்கும்; பாதங்களில் உணர்ச்சி குறைந்து விறைப்புண்டாகும்; ஆடுசதையில் கொறுக்குவலியுண்டாகும்; சிரமம் அதிகரிக்கும்; தேஹத்திலுள்ள பூட்டுகள் கழன்று விலகுவதுபோல் ஆய்விடும்; தொடைகள் சுருங்கிவிடும்; இடுப்பில் பிடிப்பும், பிருஷ்டபாகம் நசுக்கப்படுவதுபோன்ற உணர்ச்சியும் உண்டாகும்; வயிறு பிழியப்படுவது போலிருக்கும்; அஸ்திகளும், விசேஷமாக விலாப்பக்கத்து அவயவங்களும் வெட்டப்படுவதுபோல் வேதனையுண்டாகும்; இருதயப் பிடிப்பும், மார்பு குடையப்படுவது போன்ற குத்தலும், தோள்கள் கடையப்படுவது போன்ற கடுப்பும், கைகள் பிளக்கப்படுவதுபோன்ற வேதனையும், முதுகின் மேற்புறத்து இருபாரிசங்களும் நசுக்கப்படுவது போன்ற உணர்ச்சியும் உண்டாகும்; உணவுகளை மெல்லுவதற்குத் தவடைகளில் சக்திக் குறைவு நேரிடும்; கொட்டாவியுண்டாகும்; காதுகளில் ஏதோ சப்தம் கேட்கும்; கன்னங்களில் வலியுண்டாகும்; தலைநோய் அதிகரிக்கும்; வாய் விரஸமாக அல்லது துவர்ப்பான சுவையுடன் கூடியதாயிருக்கும்; மலங்கள் வெளிவராமல் கட்டப்படும்; சர்மம், வாய், கண்கள், நகங்கள், மூத்திரம், மலம் இவை ரூக்ஷமாகவும், சிவப்பாகவும் ஆய்விடும்; வாயில் தூர்நீர் ஊறும்; அரோசகம், வேலைகளில் சிரத்தையின்மை, உணவு முதலியவை ஜீர்ணமாகாமை, வியர்வையின்மை, நித்திரையின்மை இவ்விகாரங்கள் விருத்தியாகும்; தொண்டையும், உதடுகளும் அடிக்கடி உலர்ந்துவிடும்; நாவரட்சியும், கபம் முதலியவையின்றியே வாந்தியும் இருமலும் உண்டாகும்; மனம் துன்பமுறும்; மயிர்ச்சிலிர்க்கையும், பற்களில் கூச்சமும் ஏற்படும்; உடல நடுக்கங்கொள்ளும்; தும்மல் உண்டாகாது; தலைச்சுற்றலும், வாய்ப்பிதற்றலும், உஷ்ணத்தில் விருப்பமும் உண்டாகும்; தேஹம் நிலைத்து நிற்கமுடியாமல் சோர்ந்துபோகும்; இவையெல்லாம் **வாதஜ்வரத்தின்** குறிகளாகும். 10—17½.

**பித்த ஜ்வரம்.**—தேஹமெங்கும் கடும் வெப்பம் அருமிக்க விருத்தியாகும்; வாய்ப்பிதற்றல் உண்டாகும்; வாய் கடுரஸமுள்ளதாயிருக்கும்; நாசியும் வாயும் அழன்றுவிடும்; குளிர்ச்சியில் விருப்பம் உண்டாகும்; தலைச்சுற்றலும், மயக்கமும், வெறியும், ஆறுதலின்மையும் ஏற்படும்; மலம் திரவமாய் விரேசநமாகும்; வாந்தியில் பித்தத்திரவம் வெளியாகும; இரத்தம் கக்கப்படும்; வயிற்றில் புளிப்பு அதிகரிக்கும்; இரத்தக்கோளாறால் உண்டாகக்கூடிய சிவப்பான படைகள் ஸம்பவிக்கும்; சர்மம முதலானவற்றில் மஞ்சள் அல்லது பச்சை நிறம ஏற்படும்; வியர்வை விசேஷித்துண்டாகும்; ச்வாஸம் துர்க்கந்தமாயிருக்கும்; நாவரட்சி அதிகமாகும்; இவையெல்லாம் **பித்த ஜ்வரத்தின்** குறிகளாம். 18—20.

**கப ஜ்வரம்.**—விசேஷமான அரோசகம், திமிர்த்துப்போதல், ஸ்ரோதஸ்ஸுகள் அடைபடுதல், ஜ்வரத்தின் வேகம் அற்பமா

யிருத்தல், உமிழ்நீர் அதிகமாய் ஊறுதல், வாயில் இனிப்பான சுவையுண்டாதல், மார்பில் எண்ணெய்ப்பசை முதலியதால் பூசப்பட்டதுபோன்ற உணர்ச்சி, ச்வாஸம், பீநஸம், இருதயம் இயற்கையினும் அதிகமாகத்துடித்தல், வாந்தி, இருமல், அங்கங்கள் அசைவற்றுப்போதல், சர்மம் முதலியவற்றில் வெண்ணிறம் அதிகரித்தல், சைத்தியம் அதிகரிப்பதால் அங்கங்களில் கட்டிகள் உண்டாதல், சோம்பல், உதர்தம் என்னும் ஒருவித சர்மவியாதி [1] இவைகள் கபஜ்வரத்தின் குறிகளாம்.—21, 22.

ஜ்வரத்தின் காலம் உபசயம் அநுபசயம் முதலியன.—ஒவ்வொரு தோஷமும் பிரகோபமடைவதற்கு அநுகூலமான காலங்களில் அந்தந்த தோஷஸம்பந்தமான ஜ்வரம் உற்பத்தியாவது அல்லது விருத்தியாவது இயல்பு. ஜ்வரம் உற்பத்தியாவதற்குக் காரணங்கள் எவை கூறப்படுகின்றனவோ அவ்வித காரணங்களின் ஸம்பந்தத்தினால் வியாதிக்கு அநுபசயமும், [2] அக்காரணங்களுக்கு எதிரிடையாயுள்ளவற்றின் ஸம்பந்தத்தினால் வியாதிக்கு உபசயமும் [3] உண்டாகும். இரண்டு மூன்று தோஷங்களுடையவும், தனித் தனிக் குறிகள் ஒரு வியாதியில் கலந்திருப்பதாகக் காணப்படுமானால் அந்த வியாதியானது, எந்தெந்த தோஷங்களுடைய இலக்ஷணங்களையும் உடையதாகக் காணப்படுகிறதோ அவ்விதமான இரண்டு அல்லது மூன்று தோஷங்களுடைய சேர்க்கையினால் அந்த வியாதி ஸம்பவித்ததாயிருக்கும்.—23.

வாத-பித்தஜ்வரத்தின் குறிகள்.—தலைவலி, மூர்ச்சை, வாந்தி, எரித்தல், புத்தி மந்தப்படுதல், தொண்டையும் வாயும் உலர்ந்துவிடுதல், ஓரிடத்தில் நிலைத்திருக்க முடியாத ஆறுதலற்ற நிலைமை, பூட்டுக்களில் வேதனை, தூக்கமின்மை, நாவரட்சி, தலைச்சுற்றல், மயிர்ச்சிலிர்க்கை, கொட்டாவி, அதிகமாக வாய்பிதற்றல் என்னும் இவையெல்லாம் வாத-பித்தங்களால் உண்டான ஜ்வரத்தின் இலக்ஷணங்களாம்.—24.

வாத-கபஜ்வரத்தின் குறிகள்.—தாபக்குறைவு, அரோசகம், பூட்டுகளில் வேதனை, தலைநோய், பீநஸம், ச்வாஸம், இருமல், மலபந்தம், சைத்தியம், திமிர்ப்பு, கண்கள் இருளடைதல், தலைச்சுற்றல், சோம்பல் என்னும் இக்குறிகள் யாவும் வாதமும் கபமும் சேர்ந்து உண்டான ஜ்வரத்தைச் சேர்ந்தவையாம்.—25.

பித்த-கபஜ்வரத்தின் குறிகள்.—சைத்தியம், திமிர்ப்பு, வியர்வை, அழற்சி இவை நியமமின்றி ஸம்பவித்தல், நாவரட்சி, இருமல், கபமும் பித்தமும் வெளிப்படுதல், புத்திமயக்கம், சோம்

1. உதர்தம்—அதிக அரிப்பும் வீக்கமும் விரணக்குறியும் கசிவும் உடையதான ஒருவித படை.

2. அநுபசயம்—384-ம் பக்கம் பார்க்க.

3. உபசயம்—384-ம் பக்கம் பார்க்க.

பல், வாயின் உட்புறம் சாம்பர்ப் பூசினமாதிரியாகவும் கசப்பாகவும் இருத்தல் என்னும் இக்குறிகள் யாவும் கபமும் பித்தமும் சேர்ந்து உண்டான ஜ்வரத்தைச் சேர்ந்தவையாம்.—26.

ஸந்நிபாத ஜ்வரத்தின் குறிகள்.—ஸர்வதோஷங்களாலும் உண்டாகும் ஜ்வரம மூன்று தோஷங்களுடைய எல்லா இலக்ஷணங்களோடும் கூடியதாயிருக்கும். இதில் அடிக்கடியும் தாபம் மேலெழுந்துண்டாகும்; அப்படியே சைத்தியமும் அடிக்கொருமுறை ஸம்பவிக்கும்; பகலில் தூக்கம் மிக்க அதிகமாகவும் இரவில் நித்திரையுண்டாகாமலும் இருக்கும்; அல்லது எப்பொழுதுமே தூக்கமிருக்கக் கூடும்; முற்றிலும் எப்பொழுதுமே நித்திரையில்லாமலும் போவதுண்டு. வியர்வை மிகுதியாய் உண்டாவதும் அல்லது முற்றிலும் உண்டாகாமற் போவதுமுண்டு. பாடுதல், கூற்றுடுதல், நகைத்தல் முதலிய இயற்கைக்கு விரோதமான சேஷ்டைகளைச் செய்ய முயலுதல், கண்கள் நீர்வடிந்து கலங்கி நிறத்திற் சிவந்து இடுங்கி இரெப்பை மயிர்கள் சிதைந்தவைகளாகப் போதல், காலின் ஆட்டுச்சதைகளிலும் விலாப்பக்கங்களிலும் தலையிலும் தேஹக் கணுக்களிலும் எலும்புகளிலும் வலியுண்டாதல், காதுகளில் விசேஷ சப்தமும் வலியும் ஸம்பவித்தல், தொண்டையில் முளைகள் உண்டாய் அவ்விடத்தைப் போர்த்திருப்பதுபோலத் தோற்றுதல், நாக்கு அதிகமாய் அழுன்று ஈரப்பசையற்றிருத்தல், உடல் குருவாகவும் பூட்டுகள் தளர்ந்து ஸ்வாதீனமிழந்தவையாகவும் போதல், இரத்தம் பித்தம் கபம் இவற்றைக் கக்குதல், தலையில் அதிக வலியுண்டாய் அதை இங்குமங்கும் உருட்டியசைத்தல், கருஞ்சிவப்பு நிறமான கோடங்கள் என்கிற அதிக தினவுடன்கூடிய படையும் வெண் சிவப்பு நிறமான மண்டலம் என்னும் கனமான படையும் உண்டாதல், இருதயத்தில் வலியேற்படுதல், மலம் முற்றிலுமாவது கட்டிப்போதல், அல்லது அதிகமாய் வெளிப்படுதல், அல்லது சொற்பமாக வெளியாதல், வாய் ஸ்நிக்த்தமாயிருத்தல், தேஹபலம் குன்றுதல், கண்டத்வனி அடங்குதல், வாய்ப்பிதற்றல், வெகுநீடித்து தோஷங்கள் ஒருவித பரிணாமத்தை யடைதல், சோம்பல், எப்பொழுதும் கூக்குரலிடுதல்; இவையெல்லாம் ஸந்நிபாத ஜ்வரத்தின் குறிகளாம்; இந்த ஸந்நிபாதத்திற்கே அபிந்யாஸம் என்றும், ஹதௌஜஸ்[1] என்றும் வேறு பெயர்களுண்டு. தோஷங்கள் ஆங்காங்கு கட்டப்பட்டு, ஜாடராக்னி முற்றிலும் அழிந்து, ஸகல லக்ஷணங்களோடும் கூடிய ஜ்வரமாயிருந்தால் அவ்வித ஸந்நிபாதம் அஸாத்தியமாய்விடும்; அவ்விதமில்லாமல் சில குறிகள் மட்டும் காணப்பட்டால் அது க்ருச்சிரஸாத்தியமாக[2] இருக்கலாம்; அல்

1. ஹதௌஜஸ்—ஓஜஸ்ஸை அழியச் செய்வது.

2. க்ருச்சிரஸாத்தியம்—12-ம் பக்கம் பார்க்க.

லது சில வேளை சிகித்ஸைக்கு வசப்படக் கூடியதாகவும், சில ஸமயம் சிகித்ஸைக்கு வசப்படாததாகவும் விகற்பமடையும். 27—34.

**ஸந்நிபாத ஜ்வரத்தில் சில விசேஷங்கள்.**—மேலும் ஸந்நிபாதத்தினால் உண்டான ஜ்வரத்தில் பித்தமானது தனியாக உடலின் மேற்புறத்தில் சர்மத்தைப் பற்றியிருந்தால், உடலின் மேற்புறத்தில் தாபத்தையும், அது கோஷ்டத்தைப்பற்றி[1] நின்றால் உட்புறமாகக் குடலில் தாபத்தையும் உண்டுபண்ணும். இத்தாபம் முதலிலேயே உண்டானாலும் உண்டாகலாம்; அல்லது பிறகாவது உண்டாகலாம்.[2] அவ்விதமே வாத-கபங்கள் சைத்தியத்தை யுண்டுபண்ணும்.[3] இவ்விரண்டில் முதலில் தாபமும் பிறகு சீதமும் உண்டாகிற ஜ்வரம் க்ருச்சிர ஸாத்தியமாம். முதலில் குளிர்ச்சி அதிகரித்த ஸந்நிபாத ஜ்வரத்தில், கபமானது பித்தத்தினால் உருக்கவும் உலர்த்தவும் பட்டு, சைத்தியம் அல்லது குளிர் அடங்கிவிட்டால்,[4] புளிப்பான வாந்தியும், மூர்ச்சையும், வெறியும், நாவரட்சியும் உண்டாகும். முதலில் தாபம் உண்டாக்கும் ஸந்நிபாதத்தில்[5] கடைசியில் சோம்பலும், உமிழ்நீர்க்கசிவுடன் கூடிய வாந்தியும், தேஹவாட்டமும் ஸம்பவிக்கும். 35—37.

**ஆகந்து ஜ்வரங்கள் நான்கு விதம்.**—அப்பால் ஆகந்து ஜ்வரம்[6] அபிகாதத்தினாலும், அபிஷங்கத்தினாலும், சாபத்தினாலும், அபிசாரத்தினாலும்—இங்ஙனம் நான்கு விதமான காரணங்களால்-உண்டாகின்றது. (1) இவற்றுள் வலுத்த அடி தாக்குவது, உடலை அறுப்பது, எரிப்பது, களைத்துப்போவது இவை முதலானவற்றால் **அபிகாத ஜ்வரம்**[7] உண்டாகின்றது. இதில் வாயுவானது பெரும்

---

1. கோஷ்டம்—குடல்; இரத்தம் முதலிய தாதுக்களுமாம்.

2 முதலில் உடலில் உஷ்ணம் அதிகரித்து, பிறகு அது கிரமமாகக் குறைந்து, அப்பால் குளிர் உண்டாவதும், அதற்கு எதிரிடையாக முதலில் குளிர் அதிகமாக உண்டாய் கிரமமாக அது குறைந்து, பிறகு உஷ்ணம் அதிகரிப்பதும் இங்கே குறிக்கப்படுகின்றன.

3. வாதமாவது, கபமாவது, அல்லது இரண்டுமாவது தனியாகச் சர்மத்தை ஆச்ரயித்து நின்றால் அதில் சைத்தியம் முதலில் அல்லது பிறகும் உண்டாகும். கோஷ்டத்தை இவ்வாத-கபங்கள் ஆச்ரயித்தவையானால் குடலிலும் அவ்விதமே சைத்தியத்தை உண்டுபண்ணும்.

4. குளிர் அடங்கிவிட்டால்—என்பதால் தாபம் அதிகரிப்பதும் குறிக்கப்படுகிறது.

5. குளிர் உண்டாவதற்கு முன் முதலில் தாபம் உண்டாவது என்று பொருள்.

6. ஆகந்துகம் என்றால்—திடீரென்று அடிமுதலியது தாக்குவதாலும் சாபம் முதலியவற்றாலும் (இவ்வித வெளிக்காரணங்களால்) ஸம்பவிக்கும் தற்செயலான ஜ்வரம்.

7. அபிகாதஜ்வரம்—அடி முதலியது தாக்குவதும் சிரமப்படுவது முதலானதும் அபிகாதம் எனப்படும்; அவ்வித அபிகாதங்களால் உண்டாவது "அபிகாத ஜ்வரம்" ஆகும்.

பாலும் இரத்தத்தைக் கெடுத்து, வலியையும் வீக்கத்தையும், நிற மாறுபாட்டையும், இறுதியில் மிக்க வேதனையோடுகூடிய ஜ்வரத்தையும் உண்டுபண்ணும். (2) துஷ்டக்கிரஹங்களின் ஆவேசம், சில ஔஷதங்கள், விஷம், கோபம், பயம், துயரம், காமம் இவற்றின் ஸம்பந்தத்தினால் அபிஷங்கஜ்வரம்[1] உண்டாகிறது. இதில் துஷ்டக்கிரஹங்கள் ஒருவரிடம் ஆவேசித்தால் காரணமின்றியே திடீரென்று அழுவதும், திடீரென்று சிரிப்பதும் வழக்கம்; ஔஷதங்களுடைய வாஸனையை முகருவதால் உண்டாகும் ஜ்வரத்தில் மூர்ச்சை, தலைநோய், நடுக்கம், தும்மல் இவையுண்டாகும்; விஷஸம்பந்தத்தினால் மூர்ச்சையும், அதிஸாரமும், வாய் கருத்துப்போவதும், உடலில் அழற்சியும், இருதயத்தைப்பற்றிய நோய்களும் ஸம்பவிக்கும். கோபத்தினால் உண்டாகும் அபிஷங்க ஜ்வரத்தில் உடல் நடுக்கமும், தலைவலியும் உண்டாகும். பயத்தினாலாவது சோகத்தினாலாவது ஸம்பவிக்கும் அபிஷங்க ஜ்வரத்தில் வாய்ப்பிதற்றல் விசேஷமாயிருக்கும்; காமத்தினாலுண்டாகும் அபிஷங்க ஜ்வரத்தில் புத்திமாறுபட்டம், அரோசகம், அழற்சி, வெட்கம், நித்திரையின்மை, புத்திமழுக்கம், தைரியநாசம் இவை உண்டாகும். கிரஹாபிஷங்க ஜ்வரத்திலும், ஔஷதி கந்தத்தினால் உண்டாகும் அபிஷங்க ஜ்வரத்திலும், விஷாபிஷங்க ஜ்வரத்திலும் மூன்று தோஷங்களும் பிரகோபமடையும்; பயாபிஷங்கஜ்வரத்திலும், சோகாபிஷங்க ஜ்வரத்திலும், காமாபிஷங்க ஜ்வரத்திலும் வாதம் பிரகோபமடைகிறது; கோபாபிஷங்க ஜ்வரத்தில் வாதம் பித்தம் இரண்டும் பிரகோபிக்கும். (3) சாபத்தினால்[2] உண்டாகிறஜ்வரமும், (4) அபிசாரத்தினால்[3] உண்டாகிற ஜ்வரமும் ஸந்நிபாத ஸம்பந்தமானவை; இவ்விரண்டும் ஸஹிக்கக்கூடாத கொடிய ஜ்வரங்களாகக் கருதப்படுகின்றன. அபிசார ஜ்வரத்தில் அடியில் வருவது ஸம்ப்ராப்தியாகும்:—அபிசாரக் கிரியைக்கு ஸம்பந்தமான மந்திரங்களால், ஒரு மனிதனைக் குறிப்பிட்டு ஹோமம் செய்யப்படுகையில், குறிப்பிட்ட அம்மனிதனுக்கு முதலில் மனம் தாபமுற்று வருந்தும்; பிறகு தேஹத்தில் தாபம் உண்டாகும்; அதன் பிறகு கொப்புளங்களும், நாவரட்சியும், தலைச் சுற்றலும், அழற்சியும், மூர்ச்சையும் உண்டாய், ஜ்வரமும் பிரதிதினமும் அதிகமாய் வரும். 38—45.

---

1. அபிஷங்கஜ்வரம்—கோபம், துஷ்டக்கிரஹம் முதலியவற்றால் மனம் தாக்கப்படுவது அபிஷங்கமாகும்; இக்காரணங்களால் உண்டாவது அபிஷங்கஜ்வரமாம்.

2. சாபஜ்வரம்— ருஷிகள், ஆசாரியர்கள், தேவதைகள் முதலியவர்களால் இடப்படும் சாபத்தினால் உண்டாகும் ஜ்வரம்.

3. அபிசாரம் என்பது சூன்னியமிடுதல் என்று வழங்கப்படும் கிரியை; அவ்வித கிரியைகளால் உண்டாவது அபிசாரஜ்வரம் எனப்படும்.

**சாரீர-மாநஸிகாதி ஜ்வரங்கள்.**—மேற்கூறியவைகளால் ஜ்வரம் எட்டுவிதமென்று[1] அறியப்படும். ஆனால் அந்த ஜ்வரங்களை இரண்டிரண்டு விதமாகச் சுருக்கமாகவும் பிரிக்கலாம்; அவையாவன:—சாரீரஜ்வரம் மாநஸிகஜ்வரம் என்றும்,[2] ஸௌம்யஜ்வரம் தீக்ஷ்ணஜ்வரம் என்றும்,[3] ஆந்தரஜ்வரம் பாஹ்யஜ்வரம் என்றும்[4], ப்ராக்ருதஜ்வரம் வைக்ருதஜ்வரம் என்றும்,[5] ஸாத்யஜ்வரம் அஸாத்யஜ்வரம் என்றும்,[6] ஸாமஜ்வரம் நிராமஜ்வரம் என்றும்,[7] வழங்கப்படும். சாரீரஜ்வரத்தில் முதலில் தேஹத்திலும், அப்பால் மனதிலும் தாபம் உண்டாகும்; மாநஸிகஜ்வரத்தில் முதலில் மனதிலும் பிறகு சரீரத்திலும் தாபம் உண்டாகும். வாயுவானது யோகவாஹி யென்னும் சக்தியை[8] உடையதாகையால், அது கபத்துடன் கூடும்போது சைத்தியத்தை விருத்திசெய்து, ஸௌம்ய ஜ்வரத்தை உண்டுபண்ணும்; அவ்விதமே அது பித்தத்துடன் கூடினால் அழற்சியை விருத்திசெய்து தீக்ஷ்ண ஜ்வரத்தை உண்டுபண்ணும். தோஷங்கள் ஒன்றோடொன்று மிச்ரமாகப்போனால், அவை மிச்ரஜ்வரத்தை யுண்டுபண்ணும்.[9] ஆந்தரஜ்வரத்தில் தாபம் உட்புறத்து அவயவங்களை ஆச்ரயித்து உண்டாவதோடு, ஜ்வரஸம்பந்தமான விகாரங்கள் அதிகரித்து, உட்புறத்தில் குழப்பமும், மலபந்தமும் உண்டாகும். பாஹ்ய ஜ்வரத்தில் வெளிப்புறத்திலேயே தாபமும் ஜ்வரஸம்பந்தமான மற்ற விகாரங்களும் உண்டாகும்; ஜ்வரமும் எளிதில் சிகித்ஸிக்கக் கூடியதாம். வர்ஷ ருதுவில் வாத தோஷத்தினாலும், சரத் ருதுவில் பித்தத்தினாலும், வஸந்த ருதுவில் கபத்தினாலும் ப்ராக்ருத ஜ்வரங்கள் உண்டாகும். இதர ருதுக்களில் தோஷங்களால் உண்டாகுமவை வைக்ருத ஜ்வரங்கள் எனப்படும்;

1. வாதஜ்வரம், பித்தஜ்வரம், கபஜ்வரம், வாத-பித்தஜ்வரம், வாத-கபஜ்வரம், பித்த-கபஜ்வரம், ஸந்நிபாதஜ்வரம், ஆகந்துகஜ்வரம் என்று ஜ்வரம் எட்டு விதம்.

2. சரீரத்தைப்பற்றியது சாரீரம், மனதைப்பற்றியது மாநஸிகம்.

3. ஸௌம்யம்—குளிர் அதிகரித்தது, தீக்ஷ்ணம்—கடுமையான உஷ்ண முண்டுபண்ணுவது.

4. ஆந்தரம்—உட்புறத்தைப்பற்றியது, பாஹ்யம்—வெளிப்புறத்தைப் பற்றியது.

5. ப்ராக்ருதம்—இயற்கையில் ஏற்பட்டது; வைக்ருதம்—இயற்கையன்றியில் வேறு விகாரங்களால் உண்டாவது.

6. ஸாத்யம்—சிகித்ஸைக்கு வசப்படக் கூடியது, அஸாத்யம்—சிகித்ஸைக்கு வசப்படாதது.

7. ஸாமஜ்வரம்—ஆமதோஷத்துடன் கூடியது; நிராமஜ்வரம் ஆமதோஷமற்றது. [ஆமதோஷம் என்பதைப்பற்றி 98-ம் பக்கம் பார்க்க.]

8. யோகவாஹி—145-ம் பக்கம் பார்க்க.

9. பல தோஷங்களை அல்லது ஸௌம்ய தீக்ஷ்ணாதி குணங்களைப் பெற்ற த்ருதீயகாதி ஜ்வர விசேஷங்களின் தன்மை குறிக்கப்படுகின்றது.

வைக்ருத ஜ்வரமானது க்ருச்சிர ஸாத்தியமாகும்.[1] வாதத்தினால் உண்டாகிற பிராக்ருத ஜ்வரமும் பெரும்பாலும் க்ருச்சிர ஸாத்திய மாயிருக்கும். வர்ஷாகாலத்தில் வாயுவானது கோளாறடைந்து பித்த கபங்களோடும் கூடிக்கொண்டு ஜ்வரத்தை உண்டுபண்ணும். சரத்ருதுவில் பித்தம் விகாரமடைந்து, ஜ்வரத்தை யுண்டுபண் ணும்; அந்த பித்தத்திற்குத் தூண்டுதலாக கபமும் ஸஹாயம் செய்யும்; அவ்வர்ஷருது சரத் ருதுக்களில் முறையே வாத-பித்தங் கள் கோளாறடைவது இயற்கையானதாலும், அவை விஸர்க்ககால மாயிருப்பதாலும், அவற்றில் உபவாஸமிருப்பதால் பிணியாளிக்கு யாதொரு தீங்கும் நேரிடுவதில்லை. வஸந்தருதுவில் கபம் விகார மடைந்து ஜ்வரத்தை யுண்டுபண்ணும்; அதற்கு அநுஸரணையாக வாதமும் பித்தமும் பிறகு அந்த ஜ்வரத்தை விருத்திபண்ணும். நல்ல பலசாலிகளுக்கு உண்டாகும் ஜ்வரமும், சொற்ப தோஷங் களால் உண்டாகும் ஜ்வரமும், உபத்திரவங்களைப் பெருத[2] ஜ்வர மும் ஸுகஸாத்தியமாகும். அஸாத்தியம் எனப்படும் ஜ்வரத்தின் தன்மை முன்னால் விக்ருதி விஞ்ஞாநீயாத்தியாயத்தில்[3] கூறப்பட் டிருக்கிறது. ஆமஜ்வரத்தில் அந்த ஜ்வரத்திற்கு உபத்திரவங் களும், தீக்ஷ்ணத்தன்மையும், தேஹத்தில் வாட்டமின்மையும், மூத்திரம் அதிகமாகச் சுரப்பதும், மலம் பக்குவமாகாமல் அல் லது வெளிவர முடியாமல் இருத்தலும், பசியின்மையும் ஸம்ப விக்கும். ஜ்வரத்தில் தோஷங்கள் பக்குவநிலைமையடைந்து வரும் போது, ஜ்வரத்தின் வேகம் விருத்தியடைந்து நாவரட்சியும், வாய்ப் பிதற்றலும், ச்வாஸமும், தலைச்சுற்றலும், மலம் வெளியாவதும், வாய்க்குமட்டலும் உண்டாகும். ஜ்வரம் உண்டான நாள் முதல் ஏழு நாட்கள் வரையில் லங்கநம் செய்வதால்,[4] ஆமஜ்வரத்திற்குக் கூறிய இலக்ஷணங்களுக்கு நேர் எதிரிடையான குறிகள் உண்டாகக்

---

1. விக்ருதி விஞ்ஞாநீயாத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கும் விதமாய் வர்ஷகாலத்திலும் பிராக்ருத ஜ்வரம் கூட அஸாத்தியமாகவே ஆகுமல்லவா? இங்கு கூறப்பட்ட விஷயம் விக்ருதி விஞ்ஞாநீயத்தில் கூறியுள்ளதற்கு விரோதமா யிருப்பதாகத் தோற்றும்; ஆனால் அது அப்படியல்ல. இங்கே கூறப்படும் விஷயம் ஸாமாந்ய விதியாகும்; விக்ருதிவிஞ்ஞாநீயத்து விஷயம் விசேஷ விதியாகும்; இவ்விஷயத்தையே திடப்படுத்துவதற்காக அடுத்த பத்தியத்தில், விக்ருத விஞ்ஞாநாத்தியாயத்தில் கூறப்பட்ட அஸாத்திய விஷயமும் குறிக்கப்படுகிறது.

2. உபத்திரவம்—12-ம் பக்கம் பார்க்க.

3. ஜ்வரத்தின் அஸாத்தியக்குறிகள் விக்ருதிவிஞ்ஞாநீயாத்தியா யத்தில் (366-ம் பக்கம்) 'வியாதிகளைப்பற்றிய ரிஷ்டங்கள்' என்கிற தலை யங்கத்தின்கீழ் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

4. லங்கநம்—இதனால் உபவாஸம் மாத்திரம் குறிக்கப்படவில்லை; ஆனால் ஆமதோஷபரிஹாரத்தின் பொருட்டுச் செய்யப்படும் கர்ஷண சிகித்ஸையும் குறிக்கப்படுகிறது.

காணலாம்; இதுவே நிராமஜ்வரத்தின் நிலைமையாகையால்[1] பக்வ நிலைமையடைந்த ஜ்வரம் என்று வழங்கப்படும். 46—55½.

**ஐந்துவித விஷம ஜ்வரங்கள்.**—ஸந்ததம், ஸததம், அந்யேத்யுஷ்கம், த்ருதீயகம், சாதுர்த்திகம் என்று வேறு ஐந்து விதமான ஜ்வரங்களும் வழங்கப்படுகின்றன. தோஷங்களுடையவும் காலங்களுடையவும் பலாபலங்களை அநுஸரித்து இந்த ஜ்வரங்கள் உண்டாகின்றன.[2] இந்த ஐந்து ஜ்வரங்களும் பெரும்பாலும்[3] ஸந்நிபாதத்தினால் ஸம்பவிக்கின்றன. ஆனால் ஒவ்வொரு ஜ்வரத்திலும் எந்த தோஷம் அதிகரித்திருக்குமோ அந்த தோஷத்தின் பெயரைக்கொண்டே அந்த ஜ்வரம் விவஹரிக்கப்படும்.[4]—56, 57.

**ஸந்தத ஜ்வரம்.**—(1) தாதுக்களின் போஷணைக்கு அவசியமான திரவங்களும், மூத்திரமும், மலமும் செல்லுவதற்கான ஸ்ரோதஸ்ஸுகளில் வியாபித்துள்ள வாத-பித்த-கபங்கள், அவற்றிற்குத் துல்லியமான தாதுக்கள் முதலானவைகளால்[5] விருத்தி செய்யப்பட்டு, முழுப் பலத்தையும் பெற்று, குருகுணமடைந்து,

1. நிராமஜ்வரம்—ஆமதோஷம் நீங்கி, சிகித்ஸைக்கு அநுகூலமான நிலைமையை அடைந்த ஜ்வரம். [சொற்ப தோஷங்களை ஆதாரமாகக்கொண்டு உண்டாகும் ஸாதாரண ஜ்வரங்களுக்கு லங்கநத்தினால் ஏழு நாட்களில் நிராமாவஸ்தை உண்டாவதாகக் கூறப்படுகிறதென்பதும், பலமான காரணங்களால் உண்டாகும் ஸந்நிபாத ஜ்வரம் முதலிய இதர ஜ்வரங்கள் அவ்வளவு சீக்கிரத்தில் நிராமாவஸ்தையை அடையாமல் இரண்டு மூன்று வாரங்களுக்குமேல் நிராமாவஸ்தையை அடையக்கூடும் என்று இனி அநேக விடங்களில் கூறப்படும் என்பதும் கவனிக்கத் தகுந்தவை.]

2. பூமியில் ஏற்ற காலத்தில் சிறந்த விதைகளைப் போட்டால், அவை நன்றாக முளைத்து விருத்தியாவது போலவே, தேஹத்தில் அந்தந்த காலக்கிரமத்தை அநுஸரித்து, பலமான தோஷங்களால் அல்லது துர்ப்பலமான தோஷங்களால் ஜ்வரம் உண்டாகும்; ஆகையினால் தோஷாதிகளின் பலாபலங்களுக்கு ஏற்றவாறு ஸந்ததம், ஸததம் முதலிய ஜ்வரங்கள் ஸம்பவிக்கின்றன என்று அறிக.

3. பெரும்பாலும் என்றதால் இரண்டு அல்லது ஒரு தோஷத்தினாலும் இந்த ஜ்வரங்கள் உண்டாகலாம் என்பது கருத்து; மேலும் இவற்றுள் ஸந்ததமும், சாதுர்த்திகமும் ஸந்நிபாதத்தினாலேயே உண்டாகின்றன. ஸந்நிபாதத்திலும் தோஷப்ரகோபங்களில் தாரதம்யமுண்டு.

4. ஸந்நிபாதத்தில் மூன்று தோஷங்களும் பிரகோபமடைந்திருக்கும். அந்த நிலைமையிலும் தாரதம்யமிருக்கக் கூடுமாகையால், அவற்றுள் எந்த தோஷம் எல்லாவற்றிலும் மேலாக அதிகமாகப் பிரகோபித்திருக்குமோ, அத்தோஷத்தைக்கொண்டே அந்த வியாதியும் விவஹரிக்கப்படும்; அதாவது வாதாதிக ஸந்நிபாதம், பித்தாதிக ஸந்நிபாதம், கபாதிக ஸந்நிபாதம் என்றவாறு கூறப்படும்.

5. வாதத்திற்குத் துல்லியமான தாது அஸ்த்தி முதலியது; பித்தத்திற்குத் துல்லியமானது இரத்தம் முதலியது; கபத்திற்குத் துல்லியமானது மேதஸ் முதலியது.

விறைத்துப்போய், முக்கியமாக இரஸதாதுவை மட்டும் ஆச்ரயித்தவைகளாய்,[1] உடலெங்கும் தாபத்தைப் பரவச் செய்து, தட்டுத்தடை யில்லாதவைகளாய் மிகவும் ஸஹிக்கக்கூடாத ஸந்தத ஜ்வரத்தை[2] உண்டுபண்ணுகின்றன. அந்த ஜ்வரத்தின் கடும் வெப்பமானது மலத்தைச் சீக்கிரத்தில் அழித்து, அப்பால் தாதுக்களையும் அவ்விதமே சிதைவுறச் செய்யும். அக்காரணத்தினாலேயே,[3] வாத-பித்த-கபங்களை ஒருமிக்க ஆதாரமாகக்கொண்டு ஸம்பூர்ண லக்ஷணங்களுள்ளதாய் ஸம்பவித்த ஸந்ததஜ்வரமானது இரஸாதி தாதுக்களையும் மலத்தையும் முற்றிலும் சுத்தம் செய்வதாலும்,[4] அசுத்தமாக்குவதாலும் முறையே ஏழு நாட்கள் வரையிலுமோ, பத்து நாட்கள் வரையிலுமோ, பன்னிரண்டு நாட்கள் வரையிலுமோ நீடித்திருந்து[5] நிவ்ருத்தியாகக்கூடும், அல்லது மரணத்தையாவது உண்டுபண்ணும். இது அக்னிவேசருடைய கொள்கை.[6] (2) ஹாரீதருடைய கொள்கை பின்வருமாறு: ஸந்நிபாத ஸம்பர்க்க

---

1. குருகுணமும், விறைத்துப்போவதும், இரஸதாதுவை முக்கியமாய் ஆச்ரயித்திருப்பதும் ஜ்வரத்திற்குள்ள ஆமதோஷத்தினால் என்றறிக.

2. ஸந்தத ஜ்வரம்—விடாமல் தொடர்ந்து வருந்தச் செய்யும் ஜ்வரம்.

3. ஜ்வரவேகத்தினால் மல மூத்திராதிகள் தகுந்தவாறு விபாக முறைப்படி பிரிந்து விடாமலோ, அல்லது தாதுக்களோடு தாதுவாய் லீனமாகவோ இருக்குமாகையால் அந்த நிலைமையே மலத்திற்கு அழிவு என்று குறிப்பிடப்பட்டதாகும். தாதுக்களோவென்றால் உஷ்ணவேகத்தில் ஆதியிலும், ஸந்நிபாதத்தின் இயற்கைப்படி உணவு ஏற்றுக்கொள்ள முடியாமையால் போஷணையின்மையினால் பிறகும் ஸந்தஜ்வரத்தில் க்ஷயமடைந்து விடுவது இயல்பு.

4. உஷ்ண வேகத்தினால் தாது முதலியவை எரிக்கப்படுவதால் உண்டாகும் நிலைமை சுத்தியென்றும், அவ்விதம் எரிக்கப்படாமல் ஆமாவஸ்த்தையிலிருப்பது அசுத்தியென்றும் ஸம்ஸ்க்ருத வியாக்யானங்களில் ஒன்றில் கூறப்பட்டிருக்கிறது; ஆனால் உண்மையில் விஷயம் அதுவல்ல; ஸந்தத ஜ்வரத்தின் தன்மைக்குத் தகுந்த பாசந சிகித்ஸையினால் அல்லது இலங்கந சிகித்ஸையினால் செய்யப்படும் சோதனமானது சுத்தியென்றும், அவ்விதம் செய்யாமல் ஆமதோஷம் விருத்தியாகும்படி விட்டுவிடுவது அசுத்தியென்றும் கருதப்படுவதாக நமது அபிப்பிராயம். மேலும் "முறையே" என்கிற வார்த்தையை இதற்கும் ஸம்பந்தித்துக் கொண்டு, சுத்தியினால் ஜ்வரநிவ்ருத்தியும், அசுத்தியினால் மரணமும் உண்டாகும் என்று பொருள் கூறுவதும் பொருத்தமாயிருக்கும்.

5. வாதாதிக ஸந்நிபாதத்திற்கு ஏழு நாட்களும், பித்தாதிக ஸந்நிபாதத்திற்கு பத்துநாட்களும், கபாதிக ஸந்நிபாதத்திற்குப் பன்னிரண்டு நாட்களும் முறையே காலவரையறையாகும்.

6. அக்னிவேசர்—சரகஸம்ஹிதையின் ஆசிரியரான இருஷி; அக்னிவேசருடைய நூல் சரகரால் திருத்தியமைக்கப்பட்டதால் அதற்கு சரக ஸம்ஹிதையெனப் பெயர் வந்தது.

மான ஜ்வரத்தில் வாத-பித்த-கபங்களால் முறையே ஏழு நாட்களிலும், பதினெட்டு நாட்களிலும், இருபத்திமூன்று நாட்களிலும் ஜ்வரநிவ்ருத்தியாவது மரணமாவது ஸம்பவிக்கும். இது மூன்று தோஷங்களுக்கும் வரையறுக்கப்பட்ட கால நியமம். இரஸாதி தாதுக்களையும் மலத்தையும் மாற்றி மாற்றி சுத்தி செய்தும் அசுத்த நிலைமையில் இருக்கச் செய்தும் வருவதால், ஜ்வரமானது முன் வரையறுத்ததைவிட இன்னும் நீண்டகாலமளவும் அநுஸரித்து தேஹத்திற் பற்றியிருக்கக்கூடும். 58—63.

**விஷம ஜ்வரம்.**—மெலிந்துபோன தேஹமுள்ளவர்களுக்கும், வியாதியிலிருந்து அப்பொழுதே நிவ்ருத்தியானவர்களுக்கும், மித்தியாஹாரங்களையும் மித்தியா விஹாரங்களையும்[1] ஸேவிப்பவர்களுக்கும் ஜ்வரத்திற்குக் காரணமான தோஷமானது சொற்பமாயிருந்தபோதிலும், தூஷ்யம் முதலியவற்றில்[2] ஏதேனும் ஒன்றினிடமிருந்து[3] வேண்டிய பலத்தைப் பெற்று, தனக்கு எதிரிடையான குணங்களுள்ள தாது முதலியவற்றோடு கூடி,[4] க்ஷயத்தையும் விருத்தியையும் மாறி மாறி அடைந்து விஷமஜ்வரத்தை உண்டு பண்ணும்.[5] முற்கூறிய நிலைமையிலுள்ளவர்களுடைய தேஹத்தில் தோஷமானது, அதன் அபிவிருத்திக்கு அநுகூலமான காலத்தில் பலம் பெற்று ஜ்வரத்தை புண்டுபண்ணி, அதற்கு எதிரிடையான குணமுள்ள தாது முதலியவற்றின் பலத்தினால் தாக்கப்பட்டு துர்ப்பலமடைந்து, மீண்டும் ஜ்வரத்தை விருத்தி செய்யமுடியாமல்

---

1. ஆஹாரங்களின் மித்தியாயோகமும், விஹாரங்களின் மித்தியாயோகமும் இதனால் குறிக்கப்படுகின்றன. மித்தியாசாரங்களைப்பற்றி ஸூத்திர ஸ்தானம் நான்காம் அத்தியாயத்தையும், மித்தியாஹாரங்களைப் பற்றி ஸூத்திர. ஆறும் அத்தியாயத்தையும் பார்க்கவும்; மித்தியாயோகம் என்பதைப்பற்றிய விவரங்களை 135-136-ம் பக்கங்களையும் பார்க்க; விஹாரம் என்பதை ஆசாரம் என்றும் கூறலாம்.

2. தூஷ்யம் என்றால் தாதுக்களுக்குப் பெயர். 5-ம் பக்கம் "ஸப்த தாதுக்கள்" என்பதையும் பார்க்கவும்.

3. ஏதேனும் ஒன்றினிடமிருந்து என்று லக்ஷணையாகக் கூறப்பட்டது; இரண்டு மூன்று அல்லது அதிகமான தாதுக்களிடமிருந்தும் தோஷம் பலம் பெறலாம்.

4. வாதத்திற்கு எதிரிடையான குணமுள்ளது மேதஸ் முதலியது; பித்தத்திற்கு எதிரிடையானவை இரஸம் மேதஸ் முதலியன; கபத்திற்கு எதிரிடையானது அஸ்தி முதலியது.

5. தோஷம், தனக்குச்சமான குணமுள்ளவைகளோடு சேருவதால் அப்பொழுது விருத்தியையும், எதிரிடையான குணமுள்ளவைகளோடு சேருவதால் க்ஷயத்தையும் மாறி மாறி அடைகிறது; இவ்வாறு தோஷம் மாறி மாறி விருத்தி க்ஷயங்களை அடிக்கடி அடைவதால், ஜ்வரம் ஏற்றக்குறைவான நிலைமைகளைப் பெற்று 'விஷமஜ்வரம்' என்று வழங்கப்படுவதாயிற்று.

திரும்பி விடுகின்றது.[1] தோஷமானது மிகவும் குறைந்த நிலைமைக்கு வந்திருக்கும்போது, ஜ்வரமானது இரஸாதிதாதுக்களிலேயே மறைந்திருக்கும்; அவ்விதம் ஜ்வரம் ஸூக்ஷ்மமான நிலைமையில் மறைந்திருப்பதாலே அந்த ஜ்வரம் உடலுக்கு இளைப்பையும், நிறமாறுபாட்டையும், திமிர்ப்பையும் உண்டு பண்ணிவரும். இரஸம் ஓடுவதற்கான ஸ்ரோதஸ்ஸுகள் ஸமீபத்திலிருப்பதாலும், அவற்றின் முகத்வாரங்கள் விசாலமாகத் திறந்திருக்குமாகையாலும் தேஹத்தில் எல்லா விடத்திலும் தோஷம் விரைவில் வியாபிக்கும்; அதனால் "ஸந்ததஜ்வரம்" உண்டாகும். அப்படிக்கின்றி நேர் எதிரிடையாக ஸ்ரோதஸ்ஸுகள் குறுகிய முகங்களையுடையவைகளாய் தூரத்திலும் இருந்தால், அப்பொழுது தோஷம் மெதுவாகவும் காலதாமதத்தோடும் பரவுமாகையால், அந்த நிலைமையில் ஸததஜ்வரம் உண்டாகும். தேஹத்தில் பரவி ஆரம்பிப்பதிலும், காரியத்திலும், காலத்திலும் ஒரே நிலைமையைப் பெறுமல் விஷமமாயிருந்து, பற்றற ஒழியாமல் நீடித்து ஜ்வரம் உண்டாவதால் பொதுவில் விஷமஜ்வரம் என்று இவை வழங்கப்படும்.[2] 64—68½.

ஸதத ஜ்வரம்.—ஜ்வரத்திற்குக் காரணமான தோஷம், இரத்தத்தைப் பற்றியதாயிருந்தால், அது பெரும்பாலும்[3] ஸதத ஜ்வரத்

1. எப்பொழுது தோஷமானது தனக்குச் சமான குணமுள்ள தாது முதலியவற்றின் பலத்தைப் பெறுகின்றதோ அப்பொழுது ஜ்வரம் மேலோங்கிக் கிளம்பும்; எப்பொழுது தோஷத்திற்கு எதிரிடையான குணங்கள் விருத்தியாகின்றனவோ, அப்பொழுது ஜ்வரம் குறைந்துவிடும் என்பது இதனால் விளங்கக் கூறப்பட்டது.

2. விஷமம் என்றால் ஸமமல்லாதது, அதாவது ஒழுங்கற்றது எனப்பொருள். இவ்விஷமத்தன்மை மூன்று வகைப்படும்; ஆரம்பவிஷமம், க்ரியாவிஷமம், காலவிஷமம் என்பனவாம். (1) ஆரம்பவிஷமம் என்றால் தேஹத்தில் ஆச்ரயம் பெற்று உண்டாவதில் விஷமம்; உதாரணம்: முதலில் ஜ்வரம் சிரஸ்ஸில் உண்டாகும், அதே ஜ்வரம் கீழ் உடம்புகளில் உண்டாய் கிரமமாக மேலே பரவும். (2) க்ரியையில் விஷமமாயுண்டாதல்: முதலில் சைத்தியமுண்டுபண்ணி, பிறகு தாபத்தையுண்டாக்குதல்; முதலில் தாபமும் பிறகு சைத்தியமும் ஏற்படுதல். (3) காலஸம்பந்தமான விஷமம்: ஜ்வரம் முதலில் காலையில் உண்டாகலாம்; அதே ஜ்வரம் பிறகு பகலில் ஸம்பவிக்கலாம்; அப்பால் அது மாலையிலோ இரவிலோ உண்டாகலாம். இந்தவிதமான ஜ்வரங்கள் ஒரு முறை கீழிறங்கிய பிறகு ஜ்வரம் முற்றிலும் விட்டுவிட்டதென்று நிச்சயிக்கமுடியாது; பிறகு முற்கூறிய கிரமத்தில் அடிக்கடியும் தோஷம் பலத்தைப் பெறும்போதெல்லாம் ஜ்வரம் தொடரும்.

3. பெரும்பாலும் என்பதால், விஷமஜ்வரங்கள் எல்லாத் தாதுக்களையும் ஆச்ரயித்து உண்டாகக்கூடுமென்றும், ஆனால் ஒவ்வொரு ஸமயத்தில் ஒவ்வொரு தாதுவை விசேஷமாகப் பற்றியுண்டாவது வழக்கமென்றும் குறிக்கப்படுகிறது.

தை[1] உண்டுபண்ணும். ஸததஜ்வரமானது இராப்பகல்கொண்ட ஒருதினத்தில் இரண்டுமுறை உண்டாகும்.—69¼.

**அந்யேத்யுஷ்க ஜ்வரம்.**—தோஷமானது, மாம்ஸ ஸம்பந்தமான ஸ்ரோதஸ்ஸுகளை ஆச்ரயித்திருந்தால், பெரும்பாலும் அந்யேத்யுஷ்**கம்** என்கிற ஜ்வரம்[2] ஸம்பவிக்கும். இந்த ஜ்வரம் ஒரு தினத்தில் ஒரே முறை உண்டாகக்கூடியது.—69½.

**த்ருதீயக ஜ்வரம்.**—தோஷம், மேதஸ் என்கிற தாதுவையே பெரும்பாலும் ஆச்ரயித்து **த்ருதீயகம்** என்கிற ஜ்வரத்தை[3] உண்டாக்கும். இந்த ஜ்வரம் எந்த தினத்தில் உண்டாகிறதோ, அதற்கு மறுதினம் இல்லாமல் மூன்றாவது நாள் மீண்டும் உண்டாகும். (1) இது வாத-பித்தங்களால் உண்டானதாயிருந்தால் முதலில் தலையில் வேதனையையும் வேகத்தையும் காட்டும்; (2) அதுவே பித்த-கபங்களால் உண்டாகுமானால் பிடர் என்னும் கழுத்துக்குக் கீழுள்ள பாகத்தில் வேதனையையும் வேகத்தையும் உண்டுபண்ணிக்கொண்டு ஆரம்பிக்கும்; (3) அதுவே வாத-கபங்களால் ஸம்பவிக்குமானால் பிருஷ்ட பாகத்தைப் பற்றிக்கொண்டு உண்டாகும். த்ருதீயக ஜ்வரத்தில் இவ்விதம் மூன்று வகைகள் உண்டு. 70—71.

**சதுர்த்தக ஜ்வரம்.**—தோஷமானது பெரும்பாலும் மேதஸ், அஸ்த்தி, மஜ்ஜை என்கிற மூன்று தாதுக்களில் ஏதாவது பற்றிக்கொண்டு **சதுர்த்தகம்** என்கிற ஜ்வரத்தை[4] உண்டுபண்ணும். மஜ்ஜையையே ஆதாரமாகக்கொண்டு இந்த ஜ்வரம் உண்டாகும் என்று வேறு சிலரது கொள்கை. வாயுவைப் பிரதானமாகப் பெற்ற சதுர்த்தக ஜ்வரம் சிரஸ்ஸை முதலில் பற்றிக்கொண்டு ஆரம்பிக்கும்; கபத்தைப் பிரதானமாகப் பெற்றிருந்தால் கால்களில் முதலில் வேதனை முதலியதை யுண்டுபண்ணிக்கொண்டு ஆரம்பிக்கும்; இவ்வாறு சதுர்த்தகஜ்வரம் இரண்டு வகையான பிரபாவத்தைக் காட்டக்கூடியதாம். 72—72½.

**சதுர்த்தக விபர்யய ஜ்வரம்.**—ஜ்வரத்திற்குக் காரணமான தோஷமானது, அஸ்த்தியையும் மஜ்ஜையையும் ஆச்ரயித்து சதுர்த்

---

1. ஸததஜ்வரம்—ஒரு தினத்தில் பெரும்பான்மையான ஸமயங்களிலும் தொடர்ந்திருப்பதால் இப்பெயர் வந்தது.

2. அந்யேத்யுஷ்கம்—ஜ்வரம் ஒருநாள் வந்து, அன்றையதினமே விட்டுப்போய் மீண்டும் மறுநாள் வருவதால் இப்பெயர் இடப்பட்டது.

3. த்ருதீயகம்—முதல்நாள் ஜ்வரம் உண்டாய், அன்றையதினம் குறைந்து, மறு நாள் ஜ்வரமே இல்லாமல், மறுபடியும் மூன்றாவதுநாள் (அதாவது ஒன்று விட்டு ஒருநாள்) உண்டாவதால் த்ருதீயகம் எனப் பெயரிடப்பட்டது.

4. சதுர்த்தகம்—நான்காவது நாள் உண்டாகிற ஜ்வரம் எனப் பொருள்; ஜ்வரம் என்றைய தினம் வந்ததோ அன்றைய தினம் விட்டுப்போய், நடுவில் இரண்டு நாட்களிலும் ஜ்வரமேயில்லாமல் நான்காவது நாள் உண்டாகிற ஜ்வரம்.

தக விபர்யயம்[1] என்கிற ஜ்வரத்தை உண்டுபண்ணும்; அது வாத-பித்த-கபங்களால் தனித்தனியே உண்டாகக் கூடுமாகையால் மூன்று விதமாகும்.[2] இதில் ரோகிக்கு இரண்டு நாட்கள் அடுத்து ஜ்வரம் விடாமல் அடித்து, அப்பால் ஒரு நாள் தணிந்து, மறுபடியும் இரண்டு நாள் அவ்விதமே அடுத்து ஜ்வரம் உண்டாய்வரும். 73½.

விஷமஜ்வராதிகளில் காலவேற்றுமைகளுச்கு வேறு சில முகாந்தரங்கள்.—தோஷங்களுக்கு ஆஹார ஆசாரங்களால் ஏற்படும் பலாபலங்களாலும், மனதின் பலாபலங்களாலும், ஜன்மாந்தரத்து வினையின் பலாபலங்களாலும் ஜ்வரமானது அப்போதைக்கப்போது உண்டாகின்றது. அல்லது-தோஷங்களுடையவும், தாதுக்களுடையவும், ருதுக்களுடையவும், இராப்பகல்களுடையவும் பலத்தை அநுஸரித்தும், மனதினுடையவும், அதன் விஷயங்களினுடையவும் பலத்தை அநுஸரித்தும் ஜ்வரமானது ஒவ்வொரு ஸமயத்தில் ஸம்பவிக்கின்றது. 74—75½.

ஜ்வரம் இரங்கும் குறிகள்.—தோஷமானது, தாதுக்களுக்குக் கலக்கத்தையுண்டுபண்ணி, பிறகு ஜ்வரம் விடுகிற ஸமயத்தில் மறைந்து விடுகின்றது. அதன்பிறகு பிணியாளி பெருமூச்செறிந்து கொண்டு, வியர்த்து, ஒருவாறு மூச்சுவிட்டுக்கொண்டு, வாந்தியும் செய்வான்; ஒரு இடத்தில் இருக்க முடியாதவனாய் புரண்டலைவான்; நடுங்குவான்; பிதற்றுவான்; உஷ்ண வேகத்தினாலும் சைத்தியத்தினாலும் ஒளி மழுங்கியவனாய் விடுவான். ஜ்வர வேகத்தினால் பீடிக்கப்பட்டவனாய், சோர்வுற்று, ஞாபகசக்தி யிழந்து, கடுஞ்சினங்கொண்டவனைப்போல் காணப்படுவான். அவனுக்கு மலமானது வேகமாகவும், சப்தத்தோடும், திரவமாகவும், சீதம் எனப்படும் கபத்துடனும் கூடியதாகவும் வெளியாகும். 76—78.

ஜ்வரம் முற்றிலும் நிவ்ருத்தியானதன் குறிகள்.—தேஹம் இலகுவாயிருத்தல், சிரமமும் மூர்ச்சையும் தாபமும் நீங்குதல், வாயில் அழற்சியுண்டாதல், இந்திரியங்கள் நிர்மலமாய் அதனதன் வேலையில் திறமையுள்ளதாதல், வேதனையெல்லாம் ஒழிதல், வியர்வை விடுதல், மனது இயற்கை நிலைமையடைதல், உணவில் விருப்பமுண்டாதல், தலையில் தினவு ஏற்படுதல் என்னும் இவை ஜ்வரம் நிவ்ருத்தியானதன் அறிகுறிகளாம்.—79.

---

1. சதுர்த்தக விபர்யம்—சதுர்த்தக ஜ்வரத்திற்கு எதிரிடையாக உண்டாகும் ஜ்வரம் எனப் பொருள்.

2 அஷ்டாங்க ஸங்கிரஹத்திலும் மாதவநிதாநம் முதலிய வேறு சில கிரந்தங்களிலும் இரஸம் முதலிய ஏழு தாதுக்களையும் ஆச்ரயித்த வேறு ஏழுவிதமான ஜ்வரங்களுக்கும் தனித் தனியே இலக்ஷணங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மேலும் "வாதபலாஸகம்," "ப்ரலேபகம்" முதலிய வேறு சில விசேஷ ஜ்வரங்களுடைய ஸ்வரூபாதிகளும் அஷ்டாங்க ஸங்கிரஹத்தின் சுருக்கமான இக்கிரந்தத்தில் விவரிக்கப்படவில்லை.

# மூன்றும் அத்தியாயம்.

## இரத்த-பித்த-காஸ நிதாநம்.

இனி இரத்த-பித்த-காஸநிதாநம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும்:—

**இரத்த பித்தத்தின் நிதாநமும் ஸம்ப்ராப்தியும்.**—மிகவும் உஷ்ண வீர்யமும், தீக்ஷ்ண குணமும், கடு-அம்ல-லவண ரஸங்களும், மற்றும் இவைபோன்ற தன்மைகளுமுடைய அழற்சியுண்டாக்கும் சுபாவமுள்ள வஸ்துக்களையும், பித்தத்தை விருத்தி செய்யும் அவ்வித குணமுடைய பதார்த்தங்களோடு கலந்து, வரகு தானியம், உத்தாலக தானியம்[2] இவற்றின் அன்னங்களையும் அதிகமாய் உபயோகிப்பதால், திரவரூபமான பித்தமும்[3] இரத்தமும் பிரகோபமடைந்து, இரண்டும் ஒன்றாகக் கலந்து ஒன்றோடொன்று பேதமின்றி துல்யரூபத்தைப் பெற்று உடம்பில் எல்லா விடத்திலும் பரவவிடுகின்றன. 1, 2.

**பித்தத்திற்கும் இரத்தத்திற்குமுள்ள விசேஷ ஸம்பந்தம்.**—பித்தமானது இரத்தம் திரிபடைந்துண்டான தோஷமாயிருப்பதாலும், இரத்தத்தோடு கலப்புள்ளதாயிருப்பதாலும், இரத்தத்தை விரைவில் தூஷிக்கக் கூடியதாயிருப்பதாலும், இரத்தத்திற்குள்ள மணமும் நிறமும் இதற்கும் இருப்பதாலும் பித்தமானது இரத்தத்தோடு ஸமானமாகவே வழங்கப்பட்டு வருகிறது. மேலும் இரத்தம் உற்பத்தியாவதற்கு ஸ்தாநங்களாயுள்ள ப்லீஹம், யக்ருத் என்னும் கல்லீரல் இவற்றிலிருந்தே பித்தமும் உற்பத்தியாகின்றது.[4]—3, 3½.

**இரத்த-பித்த பூர்வ ரூபங்கள்.**—இரத்த-பித்தரோகம் உண்டாவதற்கு முன்பு அடியில் வரும் குறிகள் தோன்றும்:—சிரோபாரம், அரோசகம், குளிர்ச்சியில் விருப்பம், உடலில் அனல் எழுச்சி,

---

1. இரத்த பித்தம்— இரத்தமும் பித்தமும் ஸம்பந்தித்து உண்டாகும் வியாதி; காஸம்—இருமல்; அவ்வியாதிகளின் காரண-ரூபாதிகளை *விவரிக்கும் அத்தியாயம்.

2. உத்தாலக தானியம்—58-ம் பக்கத்தில் 7, 8-வது இலக்கமுள்ள வாக்கியத்தைப் பார்க்க.

3. திரவரூபமான பித்தம்—பித்தாசயத்திலிருந்து வெளியாகும் பித்தம் எனக் கருத்து; ஆகவே தோஷரூபமான பித்தம் அல்லவென்று அறியப்படுகிறது.

4. பித்தம் யக்ருத்திலிருந்தும், இரத்தத்தின் முக்கியமான சில அம்சம் ப்லீஹத்திலிருந்தும் உற்பத்தியாவதாய் தற்காலத்திய மேனாட்டு சரீர தத்துவஞ்ஞர்களும் கூறுகிறார்கள்; ஆனால் யக்ருத்திலிருந்து இரத்தமும் ப்லீஹத்திலிருந்து பித்தமும் கூட உற்பத்தியாவதாக மேனாட்டு வைத்தியர்கள் கூறுவதில்லை; அநுபவத்திலும் இவ்வாறு ஸம்பவிப்பதில்லை. என்றாலும் இன்னும் ஆராய்ச்சி செய்தால் இதன் உண்மை விளங்கும்.

புளித்த ஏப்பம், வாந்தி, வமநம் என்றால் வெறுப்பு, காஸம், ச்வாஸம், தலைச்சுற்றல், உடலில் வாட்டம், அயத்தினுடையவும் சுறுமீனுடையவும், ஆமதோஷத்தினுடையவும் வாஸனை முகத்தில் உண்டாதல், தொண்டைக்கம்மல், நேத்திரம் முதலிய அவயவங்களில் சிவப்பு-மஞ்சள்-இலைப்பச்சை என்னும் இந்த நிறங்கள் ஸம்பவித்தல், நீலம்-சிவப்பு-மஞ்சள் இந்த நிறங்களைப் பகுத்துணர முடியாமற்போதல், கனவில் இரத்த நிறமான வஸ்துக்களைப் பார்த்தல் என்பவையாம். 4—6½.

**இரத்த-பித்தம் மூன்று விதம்.**—உடலின் ஊர்த்வபாகத்தில் இரத்த-பித்தம் பிரகோபமடைந்தால் அது நாசித்வாரங்களாலும், நேத்திரமார்க்கங்களாலும், செவிகளாலும், வாயாலும் வெளியாகும். தேஹத்தின் அதோ பாகத்தில் இரத்த-பித்தம் பிரகோபமடைந்தால் ஆண்குறி பெண் குறிகளாலும் குதத்தினாலும் வெளிப்படும் உடலெங்கும் இரத்த-பித்தம் பிரகோபமடைந்தால், எல்லா மயிர்க்கால்களாலும், மற்றும் முற்கூறிய எல்லா மார்க்கங்களாலும் வெளியாகும்.[1]—7½.

**இரத்த-பித்தத்தில் ஸாத்ய லக்ஷணங்கள்.**—மேல் நோக்கி வெளிவரும் இரத்த-பித்தம் எளிதில் சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக் கூடியதாம். ஏனெனில், அது அதிக கபமும் ஸஹாயமாகச் சேர்ந்து ஸம்பவிக்கின்றது;[2] அதை விரேசநத்தினால் எளிதில் நிவ்ருத்தி செய்யலாம்;[3] அல்லாமலும் அநேகவகையான சிகித்ஸைகள் இதற்கு உண்டு; பித்தத்திற்குச் சிறந்தது விரேசந சிகித்ஸையே; இந்த வியாதியில் கபமும் பித்தத்தைப் பின்பற்றிய தோஷமாயிருப்பதால், அக்கபத்தையும் விரேசநம் நன்றாகச் சுத்தி செய்யும், கபம் சுத்தியானதும், இப்பிணியாளிக்கு இனிய சுவையுள்ள கஷா

1. இங்கே மயிர்க்கால்களாலும் இரத்த-பித்தம் வெளிவரும் என்று கூறியிருந்தாலும், அவ்விதம் உண்டாவது மிகவும் அரிது. ஊர்த்வபாகத்தினால் வெளிவருவது ஒன்று, அதோபாகத்தினால் வெளிவருவது ஒன்று, இரண்டு பாகங்களாலும் வெளிப்படுவது ஒன்று; ஆக மூன்றுவித இரத்த-பித்தங்கள்.

2. உடலின் ஊர்த்வபாகம் கபஸ்தானமாகையால், ஊர்த்வபாக ஸம்பந்தமான இரத்த - பித்தத்தில் கபமும் கோளாறடைந்து பற்றுதலைப் பெறுவது ஸஹஜம்; ஆகையால் இரத்த-பித்தத்தில் கபத்திற்கும் ஸம்பந்தம் கூறப்பட்டது.

3. இதில் கபத்திற்கு வமநம் தகுந்த சிகித்ஸையானாலும், வியாதி முக்கியமாய் பித்தஸம்பந்தமுள்ளது பற்றி, பித்தத்திற்குத் தகுந்தவாறு விரேக சிகித்ஸை கூறப்பட்டது. அல்லாமலும் மேல்நோக்கிய வேகத்தை நிறுத்தவேண்டுமென்றால், அந்த வேகத்தைக் கீழ் நோக்கும்படிச் செய்வதுதான் கிரமமாக யுக்தியுக்தமான சிகித்ஸையாகும். இந்த நியாயத்தைக் கொண்டே அதோபாகத்திய இரத்தபித்தத்திற்கு வமநம் செய்விப்பது உசிதமான சிகித்ஸை யெனப்படுகிறது.

யங்களும்[1] அநுகூலமானவை. ஆகவே இயற்கையாகவே கபத்தைப் போக்கக்கூடிய குணமுள்ள திக்தரஸமும் துவர்ப்பு என்னும் துவர ரஸமும் அடங்கிய கஷாயங்கள் அநுகூல முண்டுபண்ணும் என்பது கூறுமலே விளங்கும். 8—10.

**இரத்த-பித்தத்தில் யாப்ய லக்ஷணங்கள்.**—கீழ்நோக்கி வெளியாகும் இரத்த-பித்தம் யாப்யமாகும்; ஏனெனில் அது வாயுவின் ஸம்பந்தத்தை அதிகமாகப் பெற்றிருப்பதோடு, வமந சிகித்ஸையினுல் நிவ்ருத்திக்கக்கூடியதா யிருக்கிறது;[2] அல்லாமலும் இதற்குப் பரிஹார முறைகளும் சொற்பமே; மேலும் பித்தத்திற்கு வமந சிகித்ஸை சிறந்த பரிஹாரமல்ல; இரத்த-பித்த வியாதிக்கு உதவியாயுள்ள தோஷமோ வாதம்; அவ்வாயுவை வமநமும் நிவ்ருத்திக்கக் கூடியதல்ல; ஆகவே இதில் மதுர ரஸமுள்ள கஷாய வகைகள் மட்டுமே ஏற்றவையாம்.—11, 12.

**இரத்த-பித்தத்தில் அஸாத்ய லக்ஷணங்கள்.**—இரண்டு மார்க்கங்களாலும்[3] வெளிவரும் இரத்த-பித்தத்திற்கு சிகித்ஸை செய்வது ஸாத்யமில்லை; ஏனெனில் அது, கபம் வாதம் இவ்விரண்டு தோஷங்களோடும் கலந்து ஸம்பவிக்கின்றது; மேலும் அதை எதிரிடையான மார்க்கத்தில் திருப்புவதும் இயலாது;[4] இதற்குப் பரிஹார முறையும் கிடையாது.[5] இந்த இரத்த-பித்தத்தை, அது வெளியாகும் மார்க்கத்திற்கு எதிரிடையான வழியினுல் திருப்புவதற்கேற்ற சோதந சிகித்ஸை ஒன்றும் இல்லை; ஏனெனில் இரத்த-பித்தத்தில் சோதந சிகித்ஸையும், அது வெளியாகும் மார்க்கத்துக்கு எதிரிடையான வழியில் அதைத் திருப்புவதுமே முக்கியமான பரிஹார முறையென்று நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. இவ்விதமே இதற்குச் சமந சிகித்ஸையும் எவ்விதத்திலும் கிடை

1. கஷாயங்கள்—இதனுல் க்வாதம், பாண்டம், ஸ்வரஸம், கல்கம், ஹிமம் என்கிற ஐந்து விதமான கஷாயவகைகளும் கிரஹிக்கப்படுகின்றன.

2. கீழ் நோக்கிய இரத்த-பித்தத்தைப் பிரதிலோமமாகக் கொண்டு வருவதற்கு வமநம் செய்விப்பது அவசியம்; ஆனுல் வாதத்திற்கு வஸ்தி முதலியது யுக்தமேயன்றி வமநம் முற்றிலும் தகுந்ததல்ல.

3. இரண்டு மார்க்கங்கள்—மேலே வாய், நாசி, செவி முதலியவற்றிலும், கீழே மூத்திரமார்க்கம், குதம் முதலியவற்றிலும் வெளிவருவது.

4. கீழ் மார்க்கங்களாலும் மேல் மார்க்கங்களாலும் இரத்த—பித்தம் வெளிவருவதால், அதற்கு எதிரிடையான மார்க்கம் வேறு ஒன்றும் கிடையாது.

5. வாதம் கபம் என்கிற இவ்விரண்டுக்கும் ஒருமிக்கச் சோதநாதிகளால் நிவ்ருத்தி யுண்டுபண்ணுவது ஸாத்யமில்லை; மேலும் பித்தமும் இதில் பிரதான தோஷமாகையால் ஸந்நிபாதமாகவும் ஆய்விட்டதால் இன்னும் கஷ்டம்; இரண்டு வழிகளாலும் வெளிப்படுவதை பிரதிலோமம் செய்வதற்கான உபாயமும் இல்லை; ஆகையால் இதற்குப் பரிஹாரமுறை கிடையாது எனப்படுகிறது.

யாது ; ஏனென்றால் ஒன்றோடொன்று மூன்று தோஷங்களும் மிச்ரமாயிருக்கும்போது ஸர்வதோஷங்களையும் சமநம் செய்யக் கூடிய சிகித்ஸையல்லவோ ஹிதமானது ? 13—15.

**இரத்த-பித்தத்தின் தோஷக்குறிகளும் உபத்திரவங்களும்.**—இரத்த-பித்த வியாதியில் தோஷங்களின் ஸம்பந்தத்தால் உண்டாகும் குறிகள், இரக்தமோக்ஷணத்தில் ஸிரைகளிலிருந்து வெளியாகும் இரத்தத்திற்கு வாதாதி தோஷ ஸம்பந்தங்களால் உண்டாகும் இலக்ஷணங்களுக்குச் சமானமாயிருக்கு மென்றும் [1], இதற்கு விக்ருதி விஞ்ஞாநத்தில் [2] கூறப்பட்டுள்ளபடி உபத்திரவங்களும் [3] உண்டாகுமென்றும் அறிக. அந்த உபத்திரவங்களுக்குள் காஸமானது அதிக விரைவில் பிராணாபாயம் விளைவிக்கக் கூடியது ; ஆகையால் இப்பொழுது காஸவிஷயமே இதனடியில் கூறப்படும். 15—16½.

## காஸ ரோகம்.

**காஸம் ஐந்து விதம்.**—காஸம் ஐந்து விதம் ; அவையாவன:—வாதகாஸம், பித்தகாஸம், கபகாஸம், க்ஷதகாஸம், க்ஷயகாஸம் என்பனவாம். [4] காஸங்களை உபேக்ஷித்தால் அவையெல்லாம் க்ஷய காஸமாக மாறும். இந்த ஐந்து காஸங்களில் மேன்மேலும் ஒன்றை விட மற்றொன்று முறையே பலமான வியாதியாகும்.—17, 17½

**காஸத்தின் பூர்வரூபங்கள்.**—காஸ ரோகங்கள் உற்பத்தியாகையில் தொண்டையில் தினவும் அரோசகமும், தொண்டையில்

1. வாதாதி தோஷங்களால் விகாரமடைந்த இரத்தத்தின் குறிகளைப் பற்றிய விவரத்தை ஸிராவ்யதவிதி அத்தியாயத்தில் (254-ம் பக்கத்தில்) பார்க்க.

2. இரத்த-பித்தத்தின் உபத்திரவங்கள் அல்லது ரிஷ்டங்களின் விவரத்தை 367-ம் பக்கம் பார்க்க.

3. உபத்திரவம்—138-ம் பக்கம் பார்க்க.

4. இங்கே ஐந்து காஸங்கள் என்றும், வாத-பித்த-கபங்களால் தனியாக மூன்று காஸம் மட்டும் உண்டாகின்றனவென்றும் கூறப்பட்டது. பிறகு இந்த அத்தியாயக் கடைசியில் "வாத-பித்த-கபங்களால் தனித்தனி யுண்டாகும் காஸங்கள் சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக்கூடியவை ; இரண்டிரண்டு தோஷங்கள் சேர்ந்து உண்டாகும் காஸங்கள் யாப்யங்கள் * * *" என்று கூறப்போவதால், அவ்விதமாகக் கவனித்தால் எட்டு வகையான காஸங்கள் உண்டென்று தெரியவருகிறது ; இது முன் பின் விரோதமாகத் தோற்று கிறதே—என்றால் இவ்விரண்டு விஷயங்களும் சரிதான் ; முதலில் தனித் தனி தோஷத்தினால் ஆரம்பிக்கப்பட்டு விருத்தியான காஸம், பிறகு அன்னபானாதிகளின் மூலமாகவும் ஆசாரக்கேட்டின் மூலமாகவும் ஏற்படுகிற அபத்தியாதிகளால் இதர தோஷங்களுக்கும் பிரகோபமுண்டாய் இரண்டிரண்டு மிச்ர தோஷங்களுடைய ஸம்பந்தத்தையும் பெறக்கூடும். ஆனால் முதலில் ஆரம்பிக்கும்போது தனித்தனியான தோஷத்தினாலேயே காஸம் ஸம்பவிப்பது இயல்பு.

ரூகங்கள் என்னும் முளைகள் கிளம்பி நிரம்பியிருப்பது போன்ற உணர்ச்சியும் பூர்வ ரூபங்களாக உண்டாகும்.—18¼.

**காஸத்தின் ஸம்ப்ராப்தி**.—அதில் வாயுவானது அதோபாகத்தில் தடுத்துத் தள்ளப்பட்டு, மேலெழும்பி வந்து மார்பினுள் பிரவ்ருத்தித்து, அவ்விடத்தையும் தொண்டையையும் தாக்கிக் கிளம்பியதாய், சிரஸ்ஸிலுள்ள ஸ்ரோதோமார்க்கங்களை நிரப்பி, அப்பால் அவயவங்களைத் தூக்கி யெறிவதுபோலவும், கண்களைப் பெயர்த்து வீழ்த்துவது போலவும், பிருஷ்டபாகத்தையும் மார்பையும் பாரிசங்களையும் அழுத்திப் பிடிப்பது போலவும் தொந்தரவுகளை யுண்டுபண்ணிக்கொண்டு, வெண்கலம் உடைந்து உண்டாகும் சப்தத்தைப்போன்ற தொனியோடு வாயிலிருந்து அவ்வாயுவின் வேகம் காஸமாகக் கிளம்புகின்றது. வெவ்வேறு காரணங்களால் பலமான வேகத்தோடு வாயு காஸமுண்டுபண்ணிக்கொண்டு கிளம்புகையில், அவ்வேகம் தாக்குவதன் எதிர்ப்பினால் ஏற்படும் சப்தமும் வெவ்வேறு வகையில் பேதமடையும்; அதனால் காஸங்களில் வேதனையும் சப்தமும் பலவகைப்படுவது வழக்கம்.[1] 19—21½.

**வாத காஸம்**.—வாதத்தை விருத்திசெய்யும் காரணங்களால் வாயுவானது பிரகோபமடைந்து, மார்பின் உட்புறத்தையும் தொண்டையையும வாயையும் வரண்டுபோகச் செய்யும்; இருதயத்திலும் விலாப்பக்கங்களிலும் மார்பிலும் சிரஸ்ஸிலும் வலியை உண்டுபண்ணும்; மூர்ச்சை, அதிர்ச்சி, கண்டத்தொனிக்கு க்ஷயம் இவற்றையும் உண்டாக்கும்; அதிக வேகத்தோடும் சப்ததத்தோடும் கூடிய வாட்டு இருமலைத் தூண்டி, உடலைச் சிலிர்க்கச் செய்து கொண்டு, மிகக் கஷ்டப்படுத்தி, வரண்டுபோன கபத்தை வெளிப்படுத்தி, அப்பால் வேகத்தில் குறைவடைந்து தணியும்.—22, 23½.

**பித்த காஸம்**.—பித்தத்தினால் உண்டாகும் காஸக் குறிகள் பின்வருமாறு:—கண்களும், இருமலால் வெளியாகும் கபமும் மஞ்சள் நிறமாயிருக்கும்; வாயில் கைப்பு அதிகரிக்கும்; பித்தமும் ஜ்வரமும், தலைச்சுற்றலும் உண்டாகும்; பித்தமும் இரத்தமும் கக்கப்படும்; நாவரட்சி, குரல் மாறிப்போதல், புகைவதுபோல் வெகு வெப்பத்துடன் மூச்சுவிடுதல், வெறி இவை உண்டாகும்; அடிக்கடியும் காஸத்தின் வேகத்தினால் நெருப்புப் பொரிகளைப்போன்ற ஒளிகள் கண்களுக்கு எதிரில் தோற்றுவதுண்டு.—24, 25.

**கபகாஸம்**.—கபத்தினால் உண்டாகும் காஸரோகக் குறிகள் பின்வருமாறு:—மார்பிலும சிரஸ்ஸிலும் சொற்ப வலியுண்டாகும்; இருதயம் அதிக படபடப்பின்றி ஒருவாறு குருவாகவும இருப்

1. காஸங்களில் (இருமலில்) சில ஸமயம் மார்பில் அதிக வலியும், சில ஸமயம் குஸறந்த வலியும், சில ஸமயம் ஊசி முதலியவற்றால் குத்தப்படுவதுபோன்ற வலியும், சில ஸமயம் அழற்சி அதிகரிப்பதும் இவ்வாறு வேதனைகள் பல வகைப்படும். இருமலின் தொனியும் அவ்விதமே அநேக விதமாக மாறக்கூடும்.

பதாகத் தோற்றும்; தொண்டையில் எப்பொழுதும் கோழை சூழ்ந்திருக்கும்; சரீரம் இளைக்கும்; பீநஸமும், வாந்தியும், அரோசகமும், மயிர்ச்சிலிர்க்கையும் உண்டாகும்; தடித்துத் தோய்ந்துபோனதும், அதிக ஸ்நிக்த்தமும், வெண்மையுமாயுள்ள கபம் வெளிப்படும்.—26, 26½.

**க்ஷத காஸத்தின் நிதாநம் முதலியவை.**—கைச்சண்டை முதலிய அந்தந்த ஸாஹஸ வேலைகளை அவரவருடைய சக்திக்கு மீறி வலுவிற் செய்வதால், மார்பினுட்புறம் தாக்கப்பட்டு ஒருவித க்ஷதம்[1] உண்டாய், வாயுவும் நல்ல பலம் பெற்றதாய், பித்தத்துடன்கூடி பிரகோபமடைந்து காஸத்தையுண்டுபண்ணும். அதனால் அப்பிணியாளி இரத்தத்துடன் கூடியதும், மஞ்சளும் கருப்புங்கூடிய நிறமுடையதும், வரண்டு தோய்ந்து கெட்டியாயிருப்பதும், பதனழிந்ததுமான கபத்தை அதிகமாகக் கக்குவான்[2]; அவ்விதம் இருமலுண்டாகும்போது தொண்டையில் வலியுண்டாகும்; பிளந்துபோவது போலவும், கூர்மையான ஊசிகளால் தைக்கப்படுவது போலவும் உணரக்கூடிய சூலை மார்பில் உண்டாயிருக்கும்; பூட்டுகள் தோறும் வேதனையும், ஜ்வரமும், ச்வாஸமும், தாவரட்சியும், அரோசகமும், உடல் நடுக்கமும் ஸம்பவிக்கும்; அந்த நோயாளி மாடப் புறாவைப்போல் கூக்குரலிட்டவனாய், விலாப்பக்கத்து வலியோடு வருந்துவான்; அப்பால் இவனுக்கு வீர்யமும், நல்ல வஸ்துக்களை உண்பதில் சுவையும், உணவு ஜீர்ணமாகும் சக்தியும், தேஹவன்மையும், இயற்கையான நிறமும் குறைந்துவரும்; இவ்விதம் க்ஷீணநிலைமை அடைந்துவரும் இப்பிணியாளிக்கு மூத்திரத்தில் இரத்தமும் கலந்து வெளியாகும்; முதுகிலும் இடுப்பிலும் பிடிப்பு போன்ற ஓர் அஸௌகர்யமான உணர்ச்சியுண்டாகும். 27—31½.

**க்ஷயகாஸ நிதாநாதிகள்.**—இராஜயக்ஷ்மா என்கிற க்ஷயரோகத்தினால் சிறிது வருந்துகிற மனிதனுக்கு வாயுமுதலான தாதுக்கள் இராஜயக்ஷ்ம நிதாநத்தில் கூறப்போகிற ஸாஹஸ காரியம் முதலிய காரணங்களால்[3] பிரகோபமடைந்து காஸத்தை உண்டுபண்ணும்; அதனால் நோயாளிக்கு துர்நாற்றமுள்ள சீழைப்போன்றதும், மஞ்சள் நிறமானதும், சில ஸமயம் இலைப்பசுமை அல்லது சிவந்த நிறமுடையதுமான கபம் வெளியாகும்; இந்த காஸத்தில் இரண்டு

---

1. க்ஷதம்—என்றால் அபிகாதம் முதலியவற்றால் உண்டாகும் விரணம்; மார்பினுள் ஏதாவது ஸ்ரோதஸ் அறுபட்டு, அதிலிருந்து இரத்தம் வெளிவருமாகையால், இது க்ஷதகாஸம் (விரணத்துடன் கூடிய இருமல்) எனப்படுகிறது.

2. இங்கே வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்களுடையவும் கோளாறடைந்த நிலைமை குறிக்கப்பட்டிருப்பதைக்கொண்டு க்ஷதகாஸம் ஸந்நிபாத ஸம்பந்தமானது என்று அறிந்துகொள்ளலாம்.

3. இராஜயக்ஷ்மநிதாநம் என்னும் அடுத்து வருகிற 5-ம் அத்தியாயத்தில் 4-ம் பத்தியத்தின் மொழி பெயர்ப்பைப் பார்க்க.

விலாப்பக்கங்களும் அறுத்து விழ்த்தப்படுவதுபோலவும், இருதயம் பெயர்ந்து நழுவிவிடுவதுபோலவும் அவ்வளவு கடுமையான உணர்ச்சியுண்டாகும்; திடீரென்று உஷ்ணத்திலும் குளிர்ச்சியிலும் விருப்பம் ஏற்படும்; அதிக உணவுகளைப் புஜிப்பான்; தேஹவன்மை குறையும்; முகம் ஸ்நிக்த்தமாகவும் தெளிவுள்ளதாகவும் தோன்றும்; பற்களும் கண்களும் மிகப் பொலிவுள்ளவைகளாய் துலங்கும்; அதன் பிறகு க்ஷயரோகத்தின் எல்லாக் குறிகளும் உண்டாகும். 32—35.

காஸத்தில் ஸாத்யா ஸாத்யாதி விவரணம்.—இங்ஙனம் க்ஷயகாஸமுண்டானால், அது இயற்கனவே இளைத்து துர்ப்பலமாயிருப்பவருக்கு உடலை அழித்திவிடும்; அதுவே வேண்டியவளவு தேஹபலம் உள்ளவர்களுக்கு ஸம்பவித்தால் யாப்யமாகும்[1]. அவ்விதமே க்ஷதகாஸமும் பலஹீனர்களுக்கு அஸாத்யமாகவும், பலசாலிகளுக்கு யாப்யமாகவும் ஆகும். க்ஷதகாஸம் க்ஷயகாஸம் இரண்டும் நான்கு பாதங்களின்[2] ஸௌகரியங்கள் பூர்ணமாயிருந்தால் ஒருக்கால் சிகித்ஸைக்கு வசப்படக்கூடும். மூன்று தோஷங்களாலும் தனித்தனியே உண்டாகிற காஸங்கள் மூன்றும் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியவையாம். இரண்டிரண்டு தோஷங்களால் உண்டாகிற காஸங்களும் வயது முதிர்ந்தவனுக்கு உண்டாகும் எல்லாக் காஸரோகங்களும் யாப்யமாகும்.—36, 37.

காஸத்தின் உபத்திரவங்கள்.—காஸத்தை உபேக்ஷிப்பதால் ச்வாஸரோகம், க்ஷயம், சர்த்தி யென்னும் வாந்தி, குரல் க்ஷீணமாதல் முதலிய ரோகங்கள் ஸம்பவிக்கும்; ஆகையால் காஸம் உண்டானதும் அதைச் சீக்கிரம் ஸ்வஸ்த்தம் செய்ய முயலவேண்டியது மிகவும் அவசியம்.—38.

---

## நான்காம் அத்தியாயம்.

### ச்வாஸ - ஹித்மா நிதாநம்.

அப்பால் ச்வாஸ-ஹித்மா நிதாநம்[3] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

ச்வாஸரோக நிதாநங்கள் :—காஸம் விருத்தியாவதாலும், முன்னால் ஸர்வரோக நிதாநத்தில் தோஷங்கள் பிரகோபமடைவதற்குக் கூறப்பட்டுள்ள காரணங்களாலும், ஆமாதிஸாரத்தினாலும்,[4] அதிகமாய் வாந்தி ஆவதாலும், விஷஸம்பந்தத்தினாலும், பாண்டு ரோகத்

1. யாப்யம்—12-ம் பக்கம் பார்க்க.
2. நான்கு பாதங்கள்—இதன் விவரங்களை 11-ம் பக்கத்தில் பார்க்க.
3. ச்வாஸம்—மூச்சு அடைப்பால் உண்டாகும் வியாதி; ஹித்மா-விக்கல்; இவற்றைப்பற்றிய நிதாநாதிகளை விவரிக்கும் அத்தியாயம்.
4. ஆமாதிஸாரம்—அதிஸாரகிரஹணீ நிதாநம் என்னும் 8-ம் அத்தியாயத்தில் விவரம் காண்க.

தினாலும், ஜ்வரத்தினாலும், புழுதி-புகை-பெருங்காற்று இவற்றாலும், மர்ம ஸ்த்தாநங்கள் தாக்கப்படுவதாலும், அதிக குளிர்ந்த நீரை உபயோகிப்பதாலும், க்ஷுத்ர ச்வாஸம், தமக ச்வாஸம், சிந்ந ச்வாஸம், மஹா ச்வாஸம், ஊர்த்வ ச்வாஸம் என்கிற ஐந்து விதமான ச்வாஸ ரோகங்கள் உண்டாகின்றன.—1, 2.

ச்வாஸ ஸம்ப்ராப்தி :—வாயுவானது, கபத்தினால் மார்க்கம் தடுக்கப்படுவதால் தேஹத்தில் மற்றப் பிரதேசங்களில் பாய்ந்து ஆங்காங்கு பரவி விகாரமடைந்ததாய்,[1] பிராணவாயு செல்லும் ஸ்ரோதஸ்ஸுகளையும், உணவு உட்செல்லும் மார்க்கத்தையும், இரஸம் செல்வதற்கான ஸ்ரோதஸ்ஸுகளையும் விகாரமடையச் செய்து, மார்பறையிலேயே தங்கி ஆமாசயத்தில் ஆரம்பித்து[2] ச்வாஸ ரோகத்தை உண்டுபண்ணும்.—3, 3½.

ச்வாஸ பூர்வ ரூபம் :—அவ்வாறு உண்டாகும் ச்வாஸரோகத்திற்கு அடியில் குறிப்பிடுபவை பூர்வ ரூபங்களாகும் :—இருதயத்தில் வேதனை, பக்கசூலை, பிராணவாயு இயற்கை மார்க்கத்தை விட்டு வேறு மார்க்கத்தில் பிரவேசித்தல், வயிற்றுப் பொருமல், சுன்னம் பிளக்கப்படுவதுபோன்ற வலி இவைகளேயாம்.—4¼.

க்ஷுத்ர ச்வாஸம்:—அவற்றுள் க்ஷுத்ரச்வாஸமானது[3] ஆயாஸமுண்டாகக்கூடிய காரியங்களைச் செய்வதாலும், அதிகமாய் போஜனம் செய்வதாலும் கிளப்பப்பட்ட வாயுவால் உண்டுபண்ணப் படுகிறது ; இந்த ச்வாஸம் பிறகு தானே தணிந்துவிடும்.—5.

தமக ச்வாஸமும் பிரதமக ச்வாஸமும் :—வாயுவானது கபத்தை மேலாகக் கிளப்பி, இயற்கைக்கு ஒவ்வாத மார்க்கத்தில் சென்று, சிரஸ்ஸையும் கழுத்தையும் வலித்து அவ்விடங்களில் பிடிப்பையுண்டுபண்ணி, விலாப்பக்கங்களைப் பீடித்து, குர்க்குருவென்கிற சப்தத்தோடு கூடிய இருமலையும், உயிருடன் போராடக் கூடிய கடுந் துன்பத்தை விளைவிக்கும் மிகவும் பலமான ச்வாஸத்தையும் உண்டு பண்ணும் ; மேலும் மூர்ச்சை, அரோசகம், பீநஸம், நாவரட்சி இவையும் ஸம்பவிக்கும். இந்த ச்வாஸத்தின் வேகத்தைத் தாங்காதவனாய் அப்பிணியாளி மிகவும் துன்பமனுபவிப்பான் ; கபம் சிறிது வெளியானாலும் க்ஷணநேரம் சுகமாயிருப்பான். இந்த ரோகி படுத்துக்கொண்டால் மிகவும் கஷ்டத்துடன் ச்வாஸம் விடுவான் ; உட்கார்ந்தால் ஒருவாறு சுகம் பெறுவான். நிமிர்ந்து ஆகாயத்தை நோக்கி யுட்கார்ந்தவனாய், நெற்றிக்கட்டு வியர்க்க,

1. ச்வாஸ வாயு இயற்கைப்படி உட்செல்லவும் வெளிவரவும் தடங்கல் ஏற்படுவதால் ச்வாஸ வாயுவும் வாத தோஷமும் விகாரமடைகின்றன.

2. ச்வாஸாசயத்திற்குக் கீழே அடுத்தாற்போல ஆமாசயம் இருப்பதால், ஆமாசயத்தில் ச்வாஸம் ஆரம்பிப்பதுபோல் தோற்றுவதைக் கொண்டு இவ்வாறு கூறப்பட்டதென்று அறிக.

3. க்ஷுத்ரச்வாஸம்—காரணங்களும், இலக்ஷணங்களும், நிவ்ருத்திப்பதில் சிரமமும் மிகச் சொற்பமாயிருப்பதால் இதற்கு இப்பெயர் வந்தது.

மிகவும் வேதனையதிகரிக்க, வாயுலர்ந்து, அடிக்கடியும் ச்வாஸமதிகரித்து, உடல் நடுங்க, உஷ்ணத்தை அபேக்ஷித்து நிற்பான். மேகத்தினாலும், ஜலத்தினாலும், குளிர்ச்சியினாலும், கிழக்கிசை வாயுவாலும், கபத்தைப் பிரகோபிக்கச் செய்யும் காரணங்களாலும் இந்த வியாதி விருத்தியடையும். இது தமக ச்வாஸம் எனப்படும். இது யாப்ய[1] வியாதியாகும்; இது சொற்ப காலத்திற்குள் உண்டானதாயிருந்தாலும், நல்ல தேஹ திடமுள்ளவனுக்கு ஸம்பவித்ததாயிருந்தாலும் ஒருக்கால் சிகித்ஸைக்கு வசப்பட்டாலும் வசப்படலாம். தமக ச்வாஸத்திறகுக் கூறிய இலக்ஷணங்களோடு ஜ்வரமும் மூர்ச்சையும் விசேஷமாகத் தொடர்ந்திருந்தால், அது பிரதமக-ச்வாஸம் என்று வழங்கப்படும். அது சீதளமான பதார்த்தங்களாலும் சிகித்ஸைகளாலும் நிவ்ருத்தியடையும். 6—10½.

சிந்நச்வாஸம் :—சிந்நச்வாஸத்தில் பிணியாளிக்கு இடையிடையில் விட்டு விட்டு ச்வாஸம் அதிகரிக்கும். மர்மங்கள் அறுந்துவிடுவதுபோன்ற வலியினால் அவன் துன்பப்படுவான். வியர்வையும் மூர்ச்சையும் உண்டாகும். வயிற்றுப்பொருமலும், வஸ்தியென்னும் மூத்திரப்பையில் அடைப்பும் அழற்சியும் ஸம்பவிக்கும். கண்ணைக் கவிழ்ந்துகொண்டு, இங்குமங்குமாய் அலைந்து நோக்கியவனாய், மூர்ச்சையடைந்து, ஒரு நேத்திரம் மட்டும் சிவந்திருக்க, வாயும் உலர்ந்து, ஏதேதோ பிதற்றுவான்; அப்பிணியாளி ஏக்கமுற்றவனாய், தேஹவொளி மழுங்கிப் போக, நிலையு தடுமாறியிருப்பான். 11—12½.

மஹா ச்வாஸம் :—பிணியாளியானவன் மறைந்தான சப்தத்தோடு கத்திக்கொண்டு, ஏக்கமுற்று ச்வாஸம் விடுவான். மிகவும் கலக்கமடைந்து உடல் நடுங்க, எப்பொழுதமே கொழுத்த விருஷபம்போல மூச்சுவிடுவான். எல்லாவித அறிவும் மலினமடையும். கண்களும் முகமும் பள்ளத்தில் ஆழ்ந்துவிடும். மார்பு இழுத்துப் பிடித்துக்கொள்ளும். மலமூத்திரங்கள் கட்டப்படும். பேசிக்கொண்டிருக்கையில் வார்த்தைகள் தடைப்படும். தொண்டை உலர்ந்துவிடும். அடிக்கொருமுறை மயக்கமுறுவான். காதுகளிலும் கன்னங்களிலும் சிரஸிலும் வலியுண்டாய் வருந்துவான். இந்த இலக்ஷணங்களுடன் கூடிய வியாதி மஹா ச்வாஸம் எனப்படும். 13—15.

ஊர்த்வ ச்வாஸம் :—மேல்நோக்கி வரும் ச்வாஸம் மிகவும் நீண்டிருக்கும்; மேல் நோக்கி வந்த மூச்சை மறுபடியும் உள்ளுக்கு இழுக்கத் திறமையற்றவனுவான். வாயும் தொண்டை முதலிய உட்செல்லும் மார்க்கமும் கபத்தினால் சூழப்பட்டிருக்கும். வாயு பிரகோபமடைய அதனால் மிகவும் வருந்துவான். இங்கு மங்குமாய் விழித்து மேல்நோக்கிப் பிரமையுடன் பார்ப்பான். மர்ம

1. யாப்யம்—12-ம் பக்கம் பார்க்க.

ஸ்த்தாநங்கள் கத்தரிக்கப்படுவன போன்ற வேதனையைத் தாங்காமல் புலம்புவான். பேசமுடியாமற் போகும். இக்குறிகள் உள்ள வியாதி ஊர்த்வ ச்வாஸம் என்று சொல்லப்படும்.—16, 17.

ச்வாஸ ரோகத்தில் ஸாத்யாஸாத்யக் குறிகள்:—தமகச்வாஸம் முதற்கொண்டு ஊர்த்வச்வாஸம் வரையிலுமுள்ள ச்வாஸ வியாதிகளுக்குக் கூறப்பட்டுள்ள குறிகள் முற்றிலும் வெளிப்படையாயுண்டாகாமலிருந்தால் சிகித்ஸைக்கு வசப்படக் கூடியவையாம். அவற்றின் குறிகள் யாவும் வெளிப்படையாக உண்டானால், அந்த வியாதிகள் நிச்சயமாய் சிகித்ஸைக்கு வசப்படமாட்டா.—17½.

## ஹித்மா.

ஹித்மா நிதாநங்கள் முதலியன:—ஹித்மா அல்லது ஹிக்கா எனப்படும் விக்கலானது ச்வாஸ ரோகத்திற்குக் கூறிய காரணங்களாலேயே உண்டாகின்றது; இதற்குப் பூர்வரூபங்களும், ஸங்க்யாஸம்ப்ராப்தியும்,[1] தன்மைகளும், உற்பத்தி ஸ்த்தாநங்களும் ச்வாஸரோகத்திற்குக் கூறப்பட்டவைகளேயாம். ஹித்மாவானது அன்னஜ ஹித்மா, க்ஷுத்ர ஹித்மா, யமள ஹித்மா, மஹா ஹித்மா, கம்பீர ஹித்மா என்று ஐந்து வகைப்படும்.—18½.

அன்னஜ ஹித்மா:—ரூக்ஷமாகவும், தீக்ஷ்ணமாகவும், காரமாகவும், அஸாத்மியமாகவுமுள்ள அன்னபானங்களை ஒன்றாகக் கூட்டி வெகு துரிதமாக உட்கொள்வதால், நெருக்கி அழுத்தப்பட்ட வாயுவானது அன்னஜஹித்மாவை உண்டுபண்ணும்;[2] இது ஒருவித வேதனையையும் உண்டுபண்ணாது; சப்தம் மெதுவாயிருக்கும்; இத்துடன் தும்மலும் உண்டாகலாம். பிறகு ஸாத்மியமான அன்னபானங்களை உபயோகித்தால் இந்த ஹித்மா தானே நிவ்ருத்தியாகும்.—19, 20½.

க்ஷுத்ர ஹித்மா:—ஆயாஸகரமான வியாயாமம் முதலியவற்றால் சிறிதளவு பிரகோபமடைந்த சொற்ப வாயுவானது க்ஷுத்ர ஹித்மாவை உண்டுபண்ணும்;[3] கழுத்துக்கு அடிப்புறத்திலிருந்து கிளம்பி மேல்நோக்கியதாய், சொற்ப வேகத்தோடு மிருதுவாக வெளிவரும். ஆயாஸமுண்டாகக்கூடிய வேலைகளைச் செய்தால் இந்த ஹித்மா விருத்தியடையும். போஜனம் செய்ததும் விக்கல் குறைந்துவிடும்.—21, 22.

யமள ஹித்மா அல்லது பரிணம ஹித்மா:—உட்கொண்ட உணவானது வெகு மெதுவாக ஜீர்ணமாகும் ஸமயத்தில் உற்பத்தியாய், உணவு ஜீர்ணமான பிறகு விருத்தியடைந்து, இரட்டையாகத்

1. ஸங்க்யா ஸம்ப்ராப்தி—385-ம் பக்கம் பார்க்க.
2. தகாத ஆஹாரங்களை உண்பதால் உண்டாவது அன்னஜ ஹித்மா.
3. க்ஷுத்ர ஹித்மா—வெகு ஸாதாரணமாய் மிகச் சொற்ப வேகத்தோடு உண்டாகும் விக்கல்.

தோன்றும் விக்கல் யமளாஹித்மா எனப்படுகிறது.[1] இந்த விக்கல் உண்டாகும்போது சிரஸ்ஸும் கழுத்தும் நடுக்கங்கொள்ளும்; வயிற்றுப் பொருமலுண்டாகும்; அதிக நாவரட்சி யேற்படும்; வாய்ப்பிதற்றல், வாந்தி, அதிஸாரம், கண்களால் இங்குமங்கும் திகைத்துப் பார்த்தல், கொட்டாவி இவைகளும் உண்டாகும். இரட்டை வேகத்துடன் உண்டாகும் இந்த விக்கலுக்குப் பரிணும ஹித்மா[2] என்றும் வேதிநீ என்றும் பெயருண்டு.—23, 24½.

மஹா ஹித்மா:—புருவங்களும் கன்னங்களும் அசைவற்று நிலைத்திருக்க, கண்கள் விரண்டு அவற்றில் நீர் ததும்ப, சரீரத்தை ஸ்தம்பிக்கச் செய்து, பேச்சுக்குத் தடையை யுண்டுபண்ணி, ஞாபக சக்தியையும் உணர்ச்சியையும் போக்கி, உணவின் வழியை அடைத்து, மர்மஸ்தானங்கள் இழுக்கப்படுவதுபோன்ற நோவை யுண்டுபண்ணி, உடலைப் பின்புறமாக விறைத்து வளையச் செய்து, தேஹத்தை இளைக்கப் பண்ணி யாதொரு விக்கல் உண்டாகின்றதோ அது மஹா ஹித்மா எனப்படும்;[3] இது மிகவும் ஆழமான பிரதேசத்திலிருந்து பெரிய தொனியோடும், மஹாவேகத்தோடும், வெகு வலுத்ததாய் ஸம்பவிக்கும். 25—27.

கம்பீர ஹித்மா:—பக்வாசயத்திலாவது நாபியிலாவது ஆரம்பித்து யாதொரு விக்கலானது மஹா ஹித்மாவைப் போலவே அதே விதமான இலக்ஷணங்களோடும் மிகவும் தீர்க்கமான அநுசப்தத்தோடும்[4] உண்டாய், அடிக்கடியும் கொட்டாவியை உண்டுபண்ணி, அங்கங்களையும் விரியச் செய்கின்றதோ, அது கம்பீர ஹித்மா என்று கூறப்படும்.[5]—28, 28¾.

ஹித்மாவின் ஸாத்யா ஸாத்ய நிலைமைகள்:—அவற்றுள் முதலிற் கூறிய இரண்டு ஹித்மாக்களும் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியவையாம். இறுதியிற் கூறிய இரண்டு ஹித்மாக்களும் அஸாத்யங்களாகும்; எல்லாக் குறிகளோடும் கூடிய யமளஹித்மாவும் அஸாத்யமாகும். ஆமதோஷம் அதிகமாயிருப்பவனுக்கும், கிழவனுக்கும், சிற்றின்பத்தில் அதிகமாகப் பிரவ்ருத்திப்பவனுக்கும், இயற்கையிலேயே இதர வியாதிகளால் தேஹம் இளைத்துப் போனவனுக்கும்,

1. யமள ஹித்மா—ஒவ்வொரு தடவையிலும் இரட்டையான வேகத்தோடு தோன்றும் விக்கல்.

2. பரிணும ஹித்மா—உணவு ஜீர்ணமாகும்போது அல்லது ஜீர்ணமானவுடனே உண்டாகும் விக்கல்.

3. மஹா ஹித்மா—மற்றவைகளை விட இலக்ஷணங்களிலும், தீங்கு விளைவிப்பதிலும் மஹத்தாயிருப்பதால் இப்பெயர் வந்தது.

4. அநு சப்தம்-வெண்கலம் முதலியதை தாக்கும்போது முதலில் கணீர் என்று உதித்த தொனியைத் தொடர்ந்தாற்போல் அடுத்தடுத்து உண்டாகும் பிந்திய சப்தம்; அதுபோன்றதே அநுசப்தம்.

5. கம்பீர ஹித்மா—கம்பீரப் பிரதேசத்திலுண்டாவதால் இப்பெயர் வந்தது.

உணவின்மையினால் துர்ப்பலமானவனுக்கும் எந்த ஹிக்மா உண்டான போதிலும் அஸாத்யமாகவே ஆய்விடும்.—29, 30.

ச்வாஸ-ஹித்மாக்களுக்கு மற்ற வியாதிகளினும் விசேஷம் :— எந்த ரோகங்களுமே சரீரத்திற்கு-ஹாநியை யுண்டுபண்ணும்; ஆனால் ச்வாஸரோகம், ஹித்மா இவைகளைப்போல அவ்வளவு சீக்கிரத்தில் மற்றவை அபாயம் விளைவிப்பவையல்ல. இவ்விரண்டும் மரணகாலத்தில் அனைவருக்கும் அவசியம் ஸம்பவிக்கின்றன.—31.

---

## ஐந்தாம் அத்தியாயம்.

### இராஜயக்ஷ்மாதி நிதாநம்.

இனி இராஜயக்ஷ்மாதி நிதாநம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

இராஜயக்ஷ்மா :— அநேக ரோகங்களால் பின் தொடரப்பட்டதும், முன் செல்லும் அநேகம் வியாதிகளை யுடையதுமான இராஜயக்ஷ்மாவானது க்ஷயம் என்றும், சோஷம் என்றும், ரோகராஜன் என்றும் வழங்கப்படும் —1.

இராஜயக்ஷ்மாவின் வரலாறும் விற்பத்தியும் :—இந்த வியாதியானது ஆதியில் நக்ஷத்திரங்களுக்கும் பிராம்மணர்களுக்கும் அரசனான சந்திரனுக்கு உண்டானதாலும், வியாதிகளுக்கெல்லாம் அரசன் எனத் தகுந்ததா யிருப்பதாலும், யக்ஷ்மா என்னும் பெயரால் முதலில் குறிப்பிடக் கூடியதாயிருப்பதாலும் "இராஜயக்ஷ்மா" என்று விவஹரிக்கப் படுகின்றது. தேஹத்திற்கும் ஔஷதங்களுக்கும் க்ஷயமுண்டுபண்ணுந் தன்மையுடையதாகையாலும், அவ்விதம் அவை க்ஷயிப்பதால் இவ்வியாதி உற்பத்தியாவதாலும் இவ்வியாதி "க்ஷயம்" என்றும் கூறப்படுகிறது. இரஸம் முதலிய தாதுக்களை சுஷ்கமாகச் செய்வதால் "சோஷம்" என்று சொல்லப்படுகிறது. ரோகங்களுக்குள் முக்கியமாக விளங்குவதால் "ரோகராஜன்" என்றும் கருதப்படுகின்றது.—2, 3.

இராஜயக்ஷ்மாவின் ஹேதுக்கள் :—ஸாஹஸமான காரியங்களைச் செய்வது, வேகங்களை அடக்குவது, சுக்ரம்-ஓஜஸ்-ஸ்நேஹம் இவை க்ஷய மடைவது, அன்னபானங்களை உபயோகிப்பதற்கான விதிகளை யுக்தப்படி நிறைவேற்றாமை ஆக இந்த நான்கு காரணங்களால் இராஜயக்ஷ்மா உண்டாகும்.—4.

இராஜயக்ஷ்மாவின் ஸம்ப்ராப்தி :—அக்காரணங்களால் தூண்டப்பட்டு பிரகோபமடைந்த வாதமானது பித்த-கபங்களையும்

---

[1] இராஜ யக்ஷ்மாதி நிதாநம்—க்ஷயம் முதலிய வியாதிகளுடைய உற்பத்தி காரணம், குறிகள் இவை முதலானவற்றைக் கூறும் அத்தியாயம். இங்கே அரோசகம், வாந்தி, ஹ்ருதய ரோகம், த்ருஷ்ணை இவைகளும் விவரிக்கப்படுவதால் "இராஜ் யக்ஷ்மாதி..." என்று கூறப்படுகிறது.

தூண்டி, அவற்றுடன் தேஹத்திலுள்ள எல்லா ஸந்திபாகங்களிலும் பிரவேசித்து, அப்பிரதேசங்களையும் ஸிரைகளையும்[1] அழுத்திப் பிடித்து, ஸ்ரோதஸ்ஸுகளின் முகத்துவாரங்களை யெல்லாம் அடைத்து அல்லது அவற்றை அதிக விரிவாகச் செய்து, அப்பால் தேஹத்தின் மேற் புறங்களிலும் கீழ்ப் புறங்களிலும் குறுக்குப் பக்கங்களிலும் பரவியதாய், அந்தந்த நிலைமைகளுக்கும், கால-தேச-பிரக்ருதி ஸ்வபாவங்களுக்கும் ஏற்றவாறு பிணிகளை யுண்டுபண்ணும்.—5, 6.

**இராஜயக்ஷ்மாவின் பூர்வ ரூபங்கள் :**—இராஜ யக்ஷ்மா உண்டாகும்போது ஸம்பவிக்கும் பூர்வ ரூபக்குறிகள் அடியில் வருமாறு:—பிரதிச்யாயம்,[2] அதிக தும்மல், வாயில் உமிழ் நீர் அதிகமாகக் கசிதல், வாயில் ஒருவாறு இனிப்பு உண்டாதல், அக்னி மாந்த்யம், தேஹம் இளைத்துப்போதல், பாத்திரங்கள்-தட்டு முட்டுகள்-அன்னபானங்கள் இவை முதலியவை நிர்மலமாயிருக்கையிலும் அசுத்தமா யிருப்பதாகத் தோற்றுதல், அன்னபானங்களிலேயே பெரும்பாலும் ஈக்களும் துரும்புகளும் மயிர்களும் மற்றும் அசுத்தங்களும் விழுவதாகக் காணுதல், இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பு, வாந்தி, அரோசகம், வேண்டியவளவு உணவுகளைப் புஜித்து வருகையிலும் தேஹ வலிமை க்ஷயித்துப்போதல், அடிக்கடியும் தன் கைகளை உற்றுப் பார்த்தல், பாதத்தில் வீக்கம், கண்கள் மிகவும் வெளிறிப்போதல், புயங்களின் அளவுகளை அறியவேண்டுமென்கிற விருப்பம், சரீரம் நன்று யிருக்கையிலேயே அதில் ஏதோ அருவருப்பான விகாரங்கள் உண்டாயிருப்பதாகக் காணுதல், ஸ்த்ரீகளிடத்திலும் மதுபானத்திலும் இறைச்சியுண்பதிலும் விருப்பம், அதிக இரக்கமுள்ளவனாயிருத்தல், தலையில் முக்காடிட்டுக் கொள்ளுதல், நகங்களும் மயிர்களும் அதிகமாய் வளர்ந்து போதல், வண்டுகள் ஓணன்-ஸர்ப்பம்-குரங்கு-மற்றுமுள்ள காட்டு விலங்குகள்-பக்ஷிகள் இவற்றால் துன்பப்படுத்தப் படுவதாகவும், மயிர்க் குவியல்களின் மீதும்-எலும்புக் குவியல்களின் மீதும்-உமிப் போர்களின் மேலும்-சாம்பர்க் குவியலின் மேலும் ஏறிப்போவதாகவும், கிராமங்களும் தேசங்களும் பிராணி ஸஞ்சாரமற் றிருப்பதாகவும், ஜலம் வற்றிப் போவதாகவும், பர்வதங்களைப் போன்று தேஜோராசிகள் கீழே விழுவதாகவும், விருக்ஷங்கள் எரிந்துகொண்டிருப்பதாகவும் ஸ்வப்னங்களில் தோற்றுதல் என்னும் இவைகளே யாம். 7—12½.

**இராஜயக்ஷ்மாவில் பதினோரு போதுக்குறிகள் :**—க்ஷயத்திற்குக் காரணமான தோஷம் தேஹத்தில் மேற்புறங்களைப் பற்றியதா

1. ஸிரைகள் என்று இங்கே பொதுவாக இரத்தக் குழாய்கள் அனைத்துமே குறிக்கப் படுகின்றன.
2. பிரதிச்யாயம்-ஒருவகை நாஸாரோகம்.

யிருந்தால்[1] பீநஸம், ச்வாஸம், காஸம், தோளிலும் சிரஸ்ஸிலும் வலி, பேசும்போது தொண்டை வலி, அரோசகம் இவை ஸம்பவிக்கும். தோஷம் கீழ் அங்கங்களில் எதையாவது ஆச்ரயித்திருந்தால் அதிக மலக்கழித்தலும் அல்லது மலம் சுஷ்கித்துப் போவதும் இயல்பு. தோஷம் குடலை அல்லது மத்திய காயத்தைப் பற்றியதாயிருந்தால் வாந்தி அதிகமாயுண்டாகும். தோஷம் குறுக்காகப் பக்கங்களை ஆச்ரயித்ததாயிருந்தால் பக்கச்சூலை யுண்டாகும். அதுவே ஸந்திகள் என்னும் பூட்டுகளைப்பற்றி யிருந்தால் ஜ்வரம் ஸம்பவிக்கும். இராஜயக்ஷ்மாவினால் வருந்துகிற பிணியாளிக்கு இவ்விதம் பதினொரு விதமான வியாதிக்குறிகள் தோன்றும். 13—14½.

இராஜயக்ஷ்மாவின் உபத்திரவங்கள்:—அப்பதினொரு விதமான குறிகளுக்கும் அடியில் குறிப்பிடப்படுபவை உபத்திரவங்களாகும்[2]:—தொண்டை பேசமுடியாமற் போதல், மார்புவலி, கொட்டாவி, உடல் முழுமையும் நோவுண்டாதல், கபம் அதிகமாய் ஊறுதல், பசியின்மை, வாயில் துர்நாற்றமுண்டாதல் என்பனவாம்.—15½.

இராஜயக்ஷ்மாவில் வாத-பித்த-கபங்களால் உண்டாகும் குறிகள் :—இராஜயக்ஷ்மாவில் (1) வாதம் அதிகரிக்குமானால் தலைவலி, பக்கவலி, மாம்ஸங்களிலும் மற்ற அவயவங்களிலும் நசுக்கப்படுவது போன்ற வேதனை, தொண்டையடைப்பு, குரல் கம்மிப்போதல் இக்கோளாறுகள் உண்டாகும். (2) பித்தம் அதிகரிக்குமானால் பாதங்களிலும் தோள்களிலும் கைகளிலும் அழற்சியும், அதிஸாரமும், இரத்த வாந்தியும், வாயில் ஒருவித துர்க்கந்தமும், ஜ்வரமும், வெறியும் ஸம்பவிக்கும். (3) கபம் அதிகரித்தால் அரோசகம், வாந்தி, காஸம், முக்கியமாய் தலையிலும் ஸாதாரணமாய் உடம்பில் எங்கும் பாரம் அதிகரித்ததாகத் தோற்றுதல், வாயில் நீர் ஊறுதல், பீநஸம், ச்வாஸம், குரல் கம்மிப்போதல், அக்னி மாந்த்யம் இவை உண்டாகும். 16—18.

இராஜயக்ஷ்மாவில் தாது க்ஷயத்திற்குக் காரணங்கள் :—மலினமான கசிவுகளுடன் கூடியவையும், கபத்தின் அம்சத்தை அதிகமாகப் பெற்றவையுமான தோஷங்களால் ஸ்ரோதஸ்ஸுகளின்[3] த்வாரங்கள் அடைக்கப்படுவதாலும், அக்னிமாந்தியத்தினால் தாதுக்களுடைய இயற்கைச் சூடு குறைந்துபோய் அற்பமாயிருப்

1. க்ஷயரோகத்திற்குக் காரணமான தோஷம், தேஹத்திற்கு முற்றிலுமே பொதுவாகக் கெடுதி புண்டுபண்ணுவதா யிருந்தாலும், குறிப்பிட்ட சிற்சில பாகத்தையே முக்கியமாகத் தாக்கிவரும் என்று இதனால் ஏற்படுகிறது.

2. உபத்திரவம்-138-ம் பக்கம் பார்க்க.

3. ஸ்ரோதஸ்ஸுகள்—334-ம் பக்கம் பார்க்க.

பதாலும் இரஸமானது தனது ஸ்தாநத்திலேயே[1] ஒருவாறு தஹிக்கப்பட்டு, அந்தந்த உபத்திரவங்களை உண்டுபண்ணும்; இரத்தமும் மாம்ஸம் முதலிய தாதுக்களைப் போஷிப்பதற்குப் போகாமல் மேல் நோக்கி ஓடும். இப்பிணியாளியின் குடலிலேயே பாசகாக்னியினாலேயே அன்னம் பக்குவம் செய்யப்படுகின்றதாகையால், அவ்வுணவு பெரும்பாலும் மலமாகவே மாறிவிடுவதால், தாதுக்களைப் போஷிப்பதற்குப் போதுமானதே யல்ல.[2] இந்த ரோகியின் தேஹத்தில் இரஸதாதுவானது இரத்தமாகவே பரிணமமடையாம லிருக்கும்போது, அது மாம்ஸம் முதலிய தாதுப் பக்குவமாவதெப்படி? க்ஷயரோகமுள்ளவன், கேவலம் மலத்தினால் மட்டும் ஒருவாறு திடன் பெற்று ஏதோ ஒருவிதமாய்[2] உயிருடன் இருந்து வருவான். 19—22.

இராஜயக்ஷ்மாவில் ஸாத்யா ஸாத்ய நிலைமைகள் :—இராஜயக்ஷ்மாவுக்குக் கூறப்பட்டுள்ள இலக்ஷணங்கள் சொற்பமா யுண்டாயிருக்கையிலேயும் க்ஷீணித்துப்போய், வியாதியின் வேகத்தையும் ஔஷத பலத்தையும் தாங்க முடியாதவனான ரோகிக்கு வியாதி அஸாத்தியமானது என்று அவனைப் பரிஹரித்து விடலாம். அவ்விதமான குறிகள் உண்டாகாமலிருந்தால் எல்லா நிலைமையிலும் தகுந்த சிகித்ஸைகளைச் செய்து வரலாம்.—23.

ஸ்வரபேதம்.[3]

ஸ்வரபேதம் ஆறுவிதம் :—மூன்று விதமான தோஷங்களால் தனித்தனியே மூன்றுவித ஸ்வரபேதங்களும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், க்ஷயத்தினால் ஒன்றும், மேதஸ் என்னும் கொழுப்பு அதிகரிப்பதால் ஒன்றும் ஆக ஆறுவித ஸ்வரபேதங்கள் உண்டு. (1) அவற்றுள் வாதத்தினால் உண்டான ஸ்வரபேதத்தில் பிணியாளியின் குரலானது மழுக்கங்கொண்டும், ரூக்ஷமாகவும், நிலையற்றதாகவும் இருப்பதுடன், தொண்டையில் ஏதோ முளைகள் நிரம்பியிருப்பது போன்ற உணர்ச்சியும் ஸ்நிக்த்தமும் உஷ்ணமுமான சிகித்ஸையினால் உபசாந்தி யடையக்கூடிய தன்மையும் உடையதா யிருக்கும். (2) பித்தத்தினால் உண்டாகும் ஸ்வரபேதத்தில் தவடைகளிலும் தொண்

1. இரஸதாது கோஷ்டத்திலேயே இயற்கைக்குத் தகாத விதமாய் ஒருவித பாகத்தையடைந்து, இரத்தம் முதலிய தாதுக்களாக அவ்வளவாய் மாறாமல் மலத்துடன் மலமாகச் சேர்ந்து விடக் கூடிய ஒருவித நிலைமையைப் பெற்று வரும்.

2. தாதுக்களைப் போஷிக்கப் போதுமானதல்ல என்பதால், தேஹம் முற்றிலும் சிதைந்து திடீரென்று மரணமுண்டாகாமல் நீடித்த காலம் வியாதியுடன் போராடிக்கொண்டு ஜீவித்திருக்கும்படிச் செய்யப் போதுமானதல்ல என்று கூறப்படுகிறது.

3. ஸ்வரபேதம்—குரல் இயற்கைப்படி யில்லாமல் வெவ்வேறு வகையில் வித்தியாஸப்பட்டுக் காணுதல். க்ஷயரோகத்திற்கு ஸ்வரபேதம் உபத்திரவம்.

டையிலும் அழற்சியும், உடலிளைப்பும், பேசுவதில் வெறுப்பும் உண்டாகும். (3) கபத்தினால் உண்டான ஸ்வரபேதத்தில் தொண்டையில் கபத்தினால் பூசப்பட்டதுபோன்ற உணர்ச்சியுண்டாகும்; குரகுர என்னும் சப்தத்தோடு குரலானது மந்தமாகவும், தொண்டைக் கட்டுடன் கூடியதாகவும் இருக்கும். (4) ஸந்நிபாதத்தினால் உண்டாகும் ஸ்வரபேதத்தில் முற்கூறிய மூன்று தோஷங்களால் உண்டாகும் குறிகளும் காணப்படும். (5) க்ஷயத்தினால் உண்டாகிற ஸ்வரபேதத்தில் கண்டத்தின் தொனி மிகச் சீரழியும்; தொண்டையில் வேக்காடு மிகவும் அதிகரித்துக் காணும். (6) மேதஸ்ஸினால் உண்டாகும் ஸ்வரபேதத்தில் பேசும்போது உச்சரிக்கப்படும் எழுத்துக்கள் நன்கு விளங்காதவையா யிருக்கும்; கபஜ ஸ்வரபேதத்தின் மற்றக் குறிகளும் உண்டாகும். இவற்றுள் ஸந்நிபாத ஸ்வரபேதமும், இறுதியிற் கூறப்பட்ட ஸ்வரபேதமும் சிகித்ஸைக்கு வசப்படாதவையாம். 24—27.

## அரோசகம்.[1]

அரோசகம் ஐந்துவிதம் :—நாக்கையும் மனதையும் ஆச்ரயித்துள்ள தோஷங்களால் அரோசகம் உண்டாகும். அவற்றுள் வாத பித்த-கபங்களால் தனித்தனியே மூன்று விதமான அரோசகங்களும், ஸந்நிபாதத்தினால் நான்காவது அரோசகமும், மனோ வேதனையால் ஐந்தாவது அரோசகமும் உண்டாகும். வாதத்தினால் உண்டாகும் அரோசகத்தில் வாயில் துவர்ப்பு அதிகரிக்கும். பித்தத்தினால் உண்டாவதில் வாயில் கசப்பு மேலிட்டிருக்கும். கபத்தினால் உண்டாவதில் வாய் இனிப்பாயிருக்கும். ஸந்நிபாதத்தினால் உண்டான அரோசகத்தில் வாயில் எவ்விதமான சுவையும் உணரக் கூடாததாகும். மானஸிக தோஷத்தினால் உண்டாகும் அரோசகத்தில் சோகம், கோபம் முதலிய விகாரங்களின் தன்மைக்குத் தகுந்தவாறு எந்தெந்த தோஷங்கள் கோளாறடைகின்றனவோ, அத்தோஷங்களுக்கு ஏற்றவிதமான குறிகள் காணப்படும்.—28, 29.

## சர்த்தி.[2]

சர்த்தி ஐந்துவிதம் :—வாத-பித்த-கபங்களால் தனித்தனியே மூன்றுவிதமான சர்த்திகளும், ஸந்நிபாதத்தினால் நான்காவது சர்த்தியும், சில விஷயங்களைக் காண்பதால் ஐந்தாவது சர்த்தியும் உண்டாகும். சர்த்தியில் உதான வாயுவானது [3] கோளாறடைந்த

1. அரோசகம்—ருசி அல்லது சுவையை உணர்வதில் நாக்குக்கு உண்டாகும் கோளாறு.

2. சர்த்தி—வாந்தி அல்லது வமனம்.

3. உதானவாயு—130-ம் பக்கம் பார்க்க.

தாய் எல்லாத் தோஷங்களையும் மேல்நோக்கித் தள்ளுகின்றது.[1]—30.

சர்த்திகளின் பூர்வரூபங்கள்:—தோஷங்கள் அவற்றின் ஸ்தானங்களிலேயே சிறுகச் சிறுக ஊறிவருதல், வாய் உப்புக் கரித்தல், வாயில் உமிழ் நீர்க் கசிதல், அரோசகம் இவை சர்த்திகளின் பூர்வரூபங்களாம்.—30½.

வாதத்தினலுண்டாகும் சர்த்தி:—வாததோஷமானது நாபியிலும் பிருஷ்ட பாகத்திலும் பாரிசங்களிலும் வலியை யுண்டுபண்ணிக் கொண்டு, வயிற்றிற் சென்றுள்ள உணவை மேல் நோக்கித் தள்ளி, இடையிடையில் விட்டுவிட்டு, மிகச் சொற்ப அளவாகவும், துவர்ப்பாகவும், நுரைத்ததாகவுமுள்ள உணவுப் பொருளை வமநம் பண்ணச் செய்யும்; அவ்வமனத்தில் வரும் வஸ்து கருநிறமாகவும் கலக்கமற்றதாகவும் இருக்கும்; அப்பொழுது வார்தியாகும் சப்தமும், ஏப்பமும், வமநவேகமும், வெகு பலமாயுண்டாவதோடு, மிகவும் சிரமப்பட்டும் வாந்தியுண்டாகும். இருமல், வாய் உலர்ந்துபோதல், இருதய நோக்காடு, சிரோ வேதனை, பேசும்போது தொண்டைவலி, உடல் வாட்டம் இவையும் தொடர்ந்து உண்டாகும்.—31, 32½.

பித்தத்தினலுண்டாகும் சர்த்தி:—பித்தத்தினல் உண்டாகும் சர்த்தியில் வெளிவரும் வஸ்துவானது க்ஷாரங்கலந்த ஜலம்போலவும், கருஞ்சிவப்பாகவும், அல்லது இலைப்பசுமை அல்லது மஞ்சட்பசுமை நிறமுடையதாகவும், இரத்தத்தோடு கூடியதாகவும், அம்லமாகவும், கார்ப்புள்ளதாகவும், நாவரட்சியும், கொதிப்பு அல்லது அழற்சியுடையதாகவும் இருக்கும்.—33½.

கபத்தினலுண்டாகும் சர்த்தி:—கபத்தினல் வெளியாகும் வஸ்துவானது ஸ்நிக்த்தமாகவும், தடிப்பாகவும், குளிர்ச்சியாகவும், நூல்போன்ற கபக் கோடுகளால் சூழப்பட்டதாகவும், சுவையில் ஒருவாறு இனிப்புடன் கூடியதாகவும், அதிக அளவாகவும் இருக்கும். இவ்வமநம் உண்டாகும்போது மயிர்ச் சிலிர்க்கையும், வாயில் கொப்புளங்களும், வாயில் ஒருவித இனிய சுவையும், சோம்பலும், இயற்கைக்கு விரோதமான இருதயத்துடிப்பும், காஸமும் தொடர்ந்துண்டாகும்.—34, 35.

ஸந்நிபாத சர்த்தி:—ஸந்நிபாதத்தினல் உண்டாகும் சர்த்தி எல்லாக் குறிகளோடும் கூடியதாயிருக்கும்; மேலும் ரிஷ்டப் பிரகரணத்திற் கூறிய இலக்ஷணங்கள் எவையுண்டோ அவையும் தோன்றும்;[2] இந்த சர்த்தியானது சிகித்ஸைக்கு வசப்படாதாகையால், இதை அஸாத்தியம் என்று பரிஹரிக்க வேண்டும்.—35½.

---

1. சர்த்திகளில் வாதத்தினல் உண்டாகும் சர்த்திமாத்திரமன்றி, பித்தாதிகளால் உண்டாகும் சர்த்திகளிலும் வாதத்தின் செயல் முக்கியமானது என்பதைக் குறிப்பிடவே "எல்லாத் தோஷங்களையும்" எனப்படுகிறது.

2. 367-ம் பக்கம் சர்த்திஸம்பந்தமான ரிஷ்ட விவரம் பார்க்க.

அருவருப்பான விஷயங்களைப்பற்றிய சர்த்தி :—துர்க்கந்தங்களையும், மலம் முதலிய அசுத்தங்களையும், மற்றும் அருவருக்கத் தகுந்தவைகளையும் பார்ப்பது கேட்பது முதலியவற்றால் மனம் தாக்கப்படுவதாலும், அல்லது இருதயம் கிலேசப்படுமானாலும் அருவருப்பான விஷயங்களின் ஸம்பந்தமாய் சர்த்தியுண்டாகும்.—36, 36½.

வேறுவிதமான சர்த்திகள் :—கிருமிகள் வயிற்றில் சேருவதாலும், த்ருஷ்ணை யென்னும் நாவரட்சியினாலும், ஆமதோஷத்தினாலும், கர்ப்பம் தரிப்பதாலும் நேரிடும் சர்த்திகளும் வாதாதி தோஷங்களால் ஸம்பவிக்கும் சர்த்திகளைச் சேர்ந்தவைகளே. வயிற்றுவலி, நடுக்கம், இருதயத்தின் இயற்கைக்கு மாறான துடிப்பு இவ்விசேஷக் குறிகளைக் கொண்டும், கிருமிகளாலுண்டாகும் ஹ்ருத்ரோகக் குறிகளைக் கொண்டும் கிருமியினால் ஸம்பவிக்கும் சர்த்தியைக் குறிப்பிட்டுக் கூறலாம்.—37, 37¾.

## ஹ்ருத் ரோகங்கள்.[1]

ஹ்ருத்ரோகம் ஐந்து விதம் :—ஹ்ருத்ரோகங்கள் ஐந்து வகைப்படும். இவ்வியாதிகள் குல்ம நிதாநத்தில் கூறப்படுகிற காரணங்களால்[2] உற்பத்தியாகின்றன.—38½.

வாத ஹ்ருத்ரோகம் :—வாத தோஷத்தினாலுண்டாகும் ஹ்ருத்ரோகத்தில், இருதயத்தில் குத்தலும் வலியும் உண்டாகும்; அது வெடித்துப் போவது போலவும் பிளக்கப் படுவது போலவும், சுஷ்கித்துப் போவது போலவும் தாங்கமுடியாத நோவுண்டாகும்; மேலும் இருதயம் அசைவற்றதாகவும், உட்புறம் சூனியமாய் விட்டது போலவும், அல்லது அதிக வேகமாய் ஓடுவதாகவும் காணப்படும். திடீரென்று தீரத்தன்மையும், துயரமும், பயமும், சப்தங்களைத் தாங்கமுடியாத நிலைமையும், உடல் நடுக்கமும், சில அவயவங்களில் கொறுக்கு வலியும், மயக்கமும், மூச்சடைப்பும், தூக்கக் குறைவும் ஸம்பவிக்கும். 39—40½.

பித்த ஹ்ருத்ரோகம் :—பித்தத்தினாலுண்டாகும் ஹ்ருத்ரோகத்தின் இலக்ஷணங்கள் :—நாவரட்சி, தலைச்சுற்றல், மூர்ச்சை, அழற்சி, வியர்வை அதிகரித்தல், புளித்த ஏப்பம், தேஹ வாட்டம், அம்லமான பித்தம் வாந்தியாதல், நெஞ்செரிவு, உடல் ஒருவாறு மஞ்சள் நிறமாக மாறுதல், ஜ்வரம் என்பனவாம்.—41½.

கப ஹ்ருத்ரோகம் :—கபத்தினாலுண்டாகும் ஹ்ருத்ரோகத்தின் குறிகள் :—இருதயம் அசைவற்றது போலத் தோற்றுதல், உட்புறத்தில் கல் இருப்பது போல குருவாகப் போதல், காஸம், அக்னி மாந்த்யம், உமிழ்நீர் ஊறுதல், அதிக நித்திரை, சோம்பல், அரோசகம், ஜ்வரம் என்பனவாம்.—42½.

---

1. ஹ்ருத்ரோகங்கள் - இருதயத்தைப்பற்றிய வியாதிகள்.
2. 11-ம் அத்தியாயத்தில் 31-வது முதலுள்ள ச்லோகங்களின் மொழி பெயர்ப்புகளை குல்மநிதாந விஷயமாய் பார்க்க.

ஸந்நிபாத ஹ்ருத்ரோகம் :—மூன்று தோஷங்களும் சேர்ந்து உண்டாகும் ஸந்நிபாத ஹ்ருத்ரோகத்தில், முற்கூறிய மூன்று வித ஹ்ருத்ரோகங்களுடைய குறிகளும் உண்டாகும்.—42¾.

கிருமி ஹ்ருத்ரோகம் :—கிருமிகளாலான ஹ்ருத்ரோகத்தின்[1] குறிகள் :—கண்கள் கருத்துப்போதல், பார்வை இருளடைதல், இயற்கைக்கு விரோதமான இருதய சலனம், உடல் இளைத்துப் போதல், சொறி, கபம் ஊறுதல், அடிக்கடியும் இருதயம் வாளால் அறுக்கப் படுவதுபோன்ற உணர்ச்சி என்பனவாம். இக்கொடிய வியாதி வெகு சீக்கிரத்தில் பிராணாபாயம் விளைவிக்குமாகையால், இதற்குச் சிகித்ஸை செய்வதில் தாமதம் கூடாது. 43—44½.

## த்ருஷ்ணாரோகம்.[2]

த்ருஷ்ணாரோகம் ஆறு விதம் :—வாதத்தினாலும், பித்தத்தினாலும், கபத்தினாலும் ஒவ்வொரு த்ருஷ்ணாரோகமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரஸதாது க்ஷயிப்பதால் ஒன்றும், உபஸர்க்கத்தினால்[3] ஒன்றும் ஆக ஆறுவித த்ருஷ்ணைகள் உண்டு.—45¼.

த்ருஷ்ணா ஸம்ப்ராப்தி :—த்ருஷ்ணாரோகம் அனைத்துக்குமே வாத-பித்தங்கள் முக்கிய காரணங்கள்; அத்தோஷங்களும் தேஹத்தில் ஸௌம்யதாதுக்கள் வற்றிப்போவதால் பிரகோபிக்கின்றன; அவ்விதம் அவை பிரகோபிப்பதால் தேஹமெங்கும் தாபம், தலைச்சுற்றல், நடுக்கம், நாவரட்சி, எரிதல், மூர்ச்சை இவை உண்டாகும். நாக்கின் அடிப்புறம், தொண்டை, க்லோமா,[4] தவடைகள் இவற்றிலடங்கிய நீர்பொசிக்கும் குழல்கள்[5] வற்றிப்போய் பலவித த்ருஷ்ணைகள் உண்டாகின்றன. 46—47½.

த்ருஷ்ணையின் பொது லக்ஷணங்கள் :—எல்லாவித த்ருஷ்ணைகளுக்கும் பொதுவான இலக்ஷணங்கள் :—வாய் உலர்ந்து போதல், தண்ணீரைக் குடிக்கக் குடிக்க திருப்தியுண்டாகாமை, அன்ன த்வேஷம், தொண்டைக்கம்மல், தொண்டையும்-உதடுகளும்-நாக்கும் சுறசுறத்துப்போதல், நாக்கு வெளியில் தொங்கிப் போதல்,

1. குடலில் கிருமிகள் அதிகமாகச் சேர்ந்தால், அவற்றால் பிரகோபமடைந்த வாதத்தினால் ஹ்ருதயத்தின் செயல்கள் ஒருவாறு கோளாறடையுமாகையால், கிருமிகளால் உண்டாகும் ஹ்ருத்ரோகம் எனக் கூறப்பட்டது.

2. த்ருஷ்ணா—நாவரட்சி; தேஹத்தில் நீர்ப்பொருட்கள் சுஷ்கித்துப் போவதால் உண்டாகும் வியாதி.

3. உபஸர்க்கம்—வேறு வியாதிகளின் ஸம்பந்தம்; இதர ரோகங்களைக் காரணமாகக்கொண்டு உண்டாவது. அதாவது உபத்திரவம்.

4. க்லோமா—இரைப்பைக்கு அடியில் ப்லீஹத்துக்கும் யக்ருத் என்னும் கல்லீரலுக்கும் இடையில் நீண்டிருக்கும் ஒருவித கிரந்தி. இது ஆங்கிலத்தில் பாங்க்ரியஸ் (Pancreas) எனப்படுகிறது.

5. நீர்ப்பொசிக்கும் குழல்கள்—உமிழ் நீர் முதலியதைப் பொசிப்பிக்கும் கிரந்திகள்.

தேஹவாட்டம், வாய்ப்பிதற்றல், மனம் சோர்ந்துபோதல், அங்ஙனமே நாவரட்சியை அடக்குவதால் உண்டாகக்கூடியவையென்று கூறப்பட்ட வேறு விகாரங்கள்[1] என்பவையாம்.—48, 49.

வாத த்ருஷ்ணை :—வாததோஷத்தினாலான த்ருஷ்ணையில் தேஹம் இளைத்துப்போதல், தீனமான நிலைமை, சன்னத்தில் குடைத்தல், தலைச்சுற்றல், மணமறியமுடியாமை, வாயில் அருவருப்பு, தும்மல், அதிகமான நித்திரை, தேஹவன்மை க்ஷயித்துப் போதல், குளிர்ந்த ஜலத்தைக் குடிப்பதால் வியாதி விருத்தியாதல் என்கிற குறிகள் உண்டாகும்.[2]—50¼.

பித்த த்ருஷ்ணை :—பித்தத்தினாலுண்டாகிற த்ருஷ்ண ரோகத்தில் மூர்ச்சை, வாயில் விவரணமுண்டாதல், கண்கள் சிவந்துவிடுதல், அடிக்கடியும் நாக்கு முதலியது உலர்ந்துவிடுதல், அழற்சி, தேஹத்தினுள்ளிருந்து தூமம் கிளம்புவதுபோன்ற உஷ்ணமான உணர்ச்சி இவை உண்டாகும்.—51.

கப த்ருஷ்ணை :—கபமானது பிரகோபமடைந்து நீர்ப்பொசிக்கும் குழல்களுக்குள் வாயுவைத் தடுத்துவிடும்; அதனால் குழல்களுள் கபம் சேற்றைப்போல உலர்த்தப்படும். தொண்டையில் முளைகள் வியாபித்திருப்பதுபோல் வேதனை உணரப்படும்; நித்திரை அதிகமாகும்; வாய் இனிப்பாகும்; வயிறு பொருமிக்கொள்ளும்; தலை பாரமாகும்; உடல் விறைத்துக் கொள்வதாகத் தோற்றும்; வாந்தியுண்டாகும்; அரோசகமும், சோம்பலும், அஜீர்ணமும் உண்டாகும். 52—53¼.

ஸந்நிபாத த்ருஷ்ணை .—வாத-பித்த-கபங்கள் சேர்ந்து ஸம்பவிக்கும் த்ருஷ்ணையில், தோஷம் ஒவ்வொன்றாலும் உண்டாகும் த்ருஷ்ணைகளுக்குக் கூறிய குறிகள் யாவும் காணும்.—53½.

த்ருஷ்ண விசேஷங்கள் :—உணவுகளால் ஸ்ரோதோ மார்க்கங்கள் தடுக்கப்படுவதால், வாத-பித்தங்கள் பிரகோபமடைந்து ஆமதோஷ ஸம்பந்தமான த்ருஷ்ணை உண்டாகின்றது. உஷ்ணத்தினால் வாடி சிரமப்பட்டு துரிதமாகக் குளிர்ந்த நீரை உபயோகிப்பவனுக்கு, உடற்சூடு தடுக்கப்பட்டு குடலிற் சென்று உண்டாகும் த்ருஷ்ணை பித்தத்தினாலேயே உண்டாகின்றது; மது முதலிய பானவகைகளை அதிகமாகக் குடிப்பவருக்கு யாதொரு த்ருஷ்ணை உண்டாகின்றதோ, தீக்ஷ்ணாக்னி யென்கிற தீவ்ரமான பசியுள்ளவனுக்கு ஸ்நேஹவஸ்துக்களின் உபயோகத்தால் யாதொரு த்ருஷ்ணை ஸம்பவிக்கின்றதோ அவையும் பித்தத்தினாலேயே உற்பத்தியாகின்

1. இதன் விவரத்தை 35-ம் பக்கத்தில் "நாவரட்சியைத் தடுப்பதாலுண்டாகும் தீங்குகள்" என்கிற தலையங்கத்தின் கீழ் பார்க்க.

2. த்ருஷ்ணை ஸாதாரணமாய் வாத-பித்தங்களின் சேர்க்கையால் உண்டாவதாகக் கூறப்பட்டது; ஆகிலும் வாத-பித்தங்களுள் எத்தோஷம் பிரமாணத்தில் அதிகமாகிறதோ, அத்தோஷத்தைக் கொண்டு வாத த்ருஷ்ணை முதலியவை வழங்கப்படுகின்றன.

றன. ஸ்நிக்த்தமாகவும், குரு குணமுள்ளதாகவும், அம்ல-லவண ரஸங்கள் கலந்ததுமான உணவைப் புஜிப்பதாலும் கபஸம்பந்த மான த்ருஷ்ணையே உண்டாகும். 54—56.

இரஸ க்ஷயத்தினுலுண்டாகும் த்ருஷ்ணை:—இரஸதாது க்ஷயிப் பதால் எவ்வித இலக்ஷணங்கள் உண்டாவதாக முன்னால் கூறப்பட் டிருக்கின்றனவோ, [1] அவ்வித இலக்ஷணங்களே இரஸக்ஷயத்தினுல் உண்டாகும் த்ருஷ்ணையிலும் காணும்.—56½.

உபஸர்க்கத்தினுலுண்டாகும் த்ருஷ்ணை :—க்ஷயம், மூர்ச்சை, ஜ்வரம் முதலியவற்றுள் ஏதாவது நீண்ட காலம் தொடர்ந்து வருத் துவதால் உண்டாகும் த்ருஷ்ணை உபஸர்க்கத்தினுல் உண்டாவதாக நிச்சயிக்கப் படுகிறது.—57½.

---

## ஆறும் அத்தியாயம்.

### மதாத்யய நிதாநம்.

இனி மதாத்யய நிதாநம் [2] என்னும் அத்தியாயத்தை விவரிக்கப் போகின்றோம் :—

மதுவின் தீய குணங்கள் :—தீக்ஷ்ணம், உஷ்ணம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம், அம்லம், வ்யவாயி, ஆசுகாரி, இலகு, விகாஸி, விசதம் என்கிற இக்குணங்கள் [3] மதுவுக்கு உண்டு ; ஓஜோதாதுவில் இவற் றிற்கு நேர் எதிரிடையான குணங்கள் [4] அடங்கியிருக்கின்றன. மனதை நிலைகுலையச் செய்யும் தீக்ஷ்ணாதிகுணங்கள் விஷத்திலும் இருப்பதாகக் கூறப்படுகிறது ; ஆனால், விஷத்திலடங்கிய அக் குணங்கள் அதிக வலிவுள்ளவைகளாகையால், உயிரை மாய்க்கக் கூடியவைகளா யிருக்கின்றன.—1, 2.

மதத்தின் முதல் நிலைமை :—மதுவானது முதலில் தீக்ஷ்ணம் முதலிய தனது பத்துக் குணங்களால் ஓஜஸ்ஸின் மந்தம் முதலிய

1. இதைப்பற்றி 124-ம் பக்கம் பார்க்க.

2. மதம் என்றால் வெறி ; வெறியினுலுண்டாகும் தீங்குகளும், மது வின் தீய குணங்களும், அவை ஸம்பந்தமான வியாதி விவரங்களும் இவ் வத்தியாயத்தில் கூறப்படுவதால், இது "மதாத்யய நிதாநம்" என்று சொல்லப்படுகிறது.

3. தீக்ஷ்ணம், உஷ்ணம், ரூக்ஷம், ஸூக்ஷ்மம், வ்யவாயி, இலகு, விச தம் இவற்றைப்பற்றி 7,50,52-ம் பக்கங்களைப் பார்க்க. ஆசுகாரி—வெகு சீக்கிரத்தில் பிராணனைப் போக்குவது முதலிய வேலை செய்யுங் குணம். விகாஸி—ஸந்திபந்தங்களை நெகிழச் செய்வது ; ஓஜஸ்ஸை உடலிலிருந்து விலக்கி விடும் குணம்.

4. மந்தம், சீதளம், ஸ்நிக்த்தம், ஸ்த்தூலம், மதுரம், ஸ்த்திரம், சிர காரி, குரு, ச்லக்ஷ்ணம், பிச்சிலம் என்பவை ஓஜோதாதுவின் குணங்கள் ; இவை முறையே தீக்ஷ்ணாதிகளுக்கு எதிரிடையான குணங்கள்.

பத்துக் குணங்களையும் முறையே சீர்குலையச் செய்து, மனதுக்குச் சொற்பம் சோளாறை யுண்டுபண்ணும்; இது மதம் என்கிற வெறியின் முதல் நிலைமையாகும்.—3.

**மதத்தின் இரண்டாம் நிலைமை** :—மதத்தின் இரண்டாம் நிலைமையோ ஸாவதான மதியைப் போக்கி, ஸாஹஸங்களைச் செய்யத் தூண்டுவதற்கு ஆதாரமானது; அவ்வெறிகொண்ட நிலைமையிலுள்ள மனிதன் பற்பல விகற்பத்தோற்றங்களால் கேடுண்டு விவேகமற்றவனாய், முதலில் அந்த நிலைமை இன்பம் தரக்கூடியது என்று நினைத்து, இறுதியில் சுகமிழந்து விடுகிறான்.—4.

**மதத்தின் மிகத் தீங்கு விளைவிக்கும் நிலைமை** :—இராஜஸகுணம் அல்லது தாமஸகுணமுள்ள மனிதன் மத்திமமான இரண்டாவது மதத்திற்கும் உத்தமமான மூன்றாவது மதத்திற்கும் இடையிலுண்டான நிலைமையைப் பெற்று, ஜடஸ்வரூபியாய், கட்டுக்கடங்காத வெறிகொண்ட யானைபோல எதையும் செய்யத் துணிவான். இந்த நிலைமை எத்தீங்குகளுக்கும் இருப்பிடமானது; துர்நடத்தைக்கு இதுவே ஆஸ்பதம்; பொல்லா வினைப்பயன்களால் ஸம்பவிக்கும் பல விதமான துர்க்கதிகளை அடையும் உபாயத்தை உபதேசிப்பதற்கு இந்த நிலைமையே பரமாசிரியனாகும்.—5, 6.

**மதத்தின் மூன்றாம் நிலைமை** :—மனிதன் மதத்தின் மூன்றாவது நிலைமையில்,[1] மிகவும் பாபாத்மாவாய், மரணத்தைக் காட்டிலும் அதிக கேடான விகார நிலைமையை யடைந்து, சவத்தைப் போல அசைவற்றவனாய் பூமியில் சாய்கிறான்.—7.

**மதுவினாலுண்டாகும் தீமைகள்** :—மதுபானம் செய்வதில் பற்றுள்ளவன் தர்மாதர்மங்களையும், சுகதுக்கங்களையும், அநுகூலப் பிரதிகூலங்களையும், பிரயோஜனாப்பிரயோஜனங்களையும் பகுத்தறிய வல்லமையற்றவனாய் விடுகிறானென்றால், கற்றறிவுள்ளவன் அதை எங்ஙனம் உபயோகிப்பான்? மோஹம், பயம், துயரம், கோபம், மரணம், உன்மாதம் என்னும் பித்துப்பிடித்தல், வெறி, மூர்ச்சை, அபஸ்மாரம், அபதாநகம்[2] இவையெல்லாம் மதுவினால் ஸம்பவிக்கக்கூடியவை; சுருங்கச்சொல்லில், ஸ்மரணையழித்துவிழ்த்தும் குணம் ஒன்றில் இருந்தால், அவ்வஸ்துவிலுள்ள மற்றக் குணங்கள் அனைத்தும் நன்றன்று. முறைதவறாக உபயோகித்த உணவானது பிணியை அல்லது மரணத்தையாவது உண்டு பண்ணும்; மத்யமோ அத்துடன் நிற்காமல், அறம் பொருள்

1. மாதவநிதாநம் முதலிய நிதாநக் கிரந்தங்களில் மதத்திற்கு நான்கு நிலைமைகள் கூறப்பட்டிருக்கின்றன; இங்கே மூன்றாம் நிலைமையை 3-வதுக்கும் 4-வதுக்கும் இடையிலுண்டாகும் ஒரு அவஸ்த்தையாகக் கூறி, 4-வது நிலைமையையே 3-வதாகக் கூறியிருக்கிறார்.

2. அபதாநகம்—15-வது அத்தியாயத்தின் 20-வது ச்லோக மொழிபெயர்ப்பைப் பார்க்க.

இன்பங்களையும், புத்தியையும், தைரியத்தையும், இலஜ்ஜையையும், மற்றுமுள்ள சீர்மைகளையும் அழித்து விடக்கூடியது. 8—10½.

**மதுபானத்தினால் அதிக மதம் பெறாமலிருப்பவர்கள் :—** நல்ல பலசாலிகள், உணவு உட்கொண்ட பின்பு மதுபானம் செய்பவர், அதிக தீனிகளைத் தின்பவர், ஸ்நிக்த்தமானவர், மனோதிடமுள்ளவர், வழக்கமாய் மதுபானம் செய்பவர், மதுபானிகளின் ஸந்ததியில் பிறந்தவர், மேதஸ் என்னும் கொழுப்பும் கபமும் அதிகரித்த தேஹமுள்ளவர், வாத-பித்தங்கள் குறைந்தவர், பலமான ஜாடராக்னி யுள்ளவர் ஆகியவர்களுக்கு மதுபானத்தினால் அதிக வெறி யுண்டாவதில்லை.—11, 12.

**மதுபானத்தினால் அதிக மதம் பெறுபவர்கள் :—** முற்கூறியவர்களுக்கு நேர் எதிரிடையான நிலைமையுள்ளவர்களுக்கும்,[1] அதையே முக்கிய பானமாகக் கருதி அதே நினைவாயிருப்பவர்களுக்கும், கோபக்காரருக்கும் வெறி எளிதில் அதிகரிக்கும்; மேலும் புளிப்பும் ரூக்ஷகுணமுமுள்ள மத்யத்தினாலும், அதை அமிதமாய் உட்கொள்வதாலும், அஜீர்ணமாயிருக்கையில் அதை உபயோகிப்பதாலும் வெறி அதிகமாயுண்டாகும்.—13.

**மதாத்யயம் நான்கு விதம் :—** மதாத்யயமானது வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம் ஆக இந்த நான்கு மூகாந்தரங்களால் உண்டாகின்றன. எல்லா மதாத்யயங்களும் மூன்று தோஷங்களாலேயே உண்டாகின்றனவென்றாலும், எதெதில் எந்தெந்த தோஷம் மற்றதைவிட அதிகரித்திருக்குமோ, அவை அந்தந்த தோஷத்தின் பெயரால் விவஹரிக்கப்படும்.[2]—14.

**மதாத்யயத்தின் பொதுக் குறிகள் :—** மதாத்யயங்களின் பொதுக் குறிகள் பின்வருமாறு.—விசேஷமான மயக்கம், இருதயத்தில் வேதனை, மலம் உடைந்து கழிதல், அடிக்கடி நாவரட்சி, சீதளத்தையும் உஷ்ணத்தையும் மாறிமாறி யுண்டாக்கும் ஜ்வரம், அரோசகம், சிரஸென்ன - விலாஎலும்புகளென்ன - இருதயமென்ன இவற்றில் நடுக்கம், மர்மங்கள் பிளக்கப்படுவது போன்ற வேதனை, இடுப்புப் பிடிப்பு, மார்புப் பிடிப்பு, கண்கள் இருளடைதல், காஸம், ச்வாஸம், நித்திரையின்மை, வியர்வை அதிகரித்தல், வயிறு ஸ்தம்பித்துப் போதல், வீக்கம், மனத்தடுமாற்றம், புலம்புதல், வாந்தி, வாயில் நீரூறுதல், தலைச்சுற்றல், துஸ்வப்னங்களைக் காணுதல் என்பவையேயாம். 15—17.

---

1. தேஹவலிமை குன்றியவர்கள், உணவின்றி மதுவையே அருந்துபவர், ரூக்ஷதேஹிகள், மனோதிடனில்லாதவர், குழந்தைகள் அல்லது கிழவர்கள் ஆகியவர் முற்கூறியதற்கு எதிரிடையானவர்களாம்.

2. வாதமதாத்யயத்தில் பித்த—கபங்களைவிட வாதம் அதிகரிக்கும்; பித்த மதாத்யயத்தில் வாத-கபங்களைவிட பித்தம் மேலோங்கியும், கபமதாத்யயத்தில் வாத-பித்தங்களைவிட கபம் மேலாகவும் காணும்,

**வாத மதாத்யயம் :**—வாதஸம்பந்தமான மதாத்யயத்தில் நித்திரையின்மையும், ச்வாஸமும், நடுக்கமும், தலைவலியும் உண்டாகும்; மேலும் நித்திரையில் இங்குமங்கும் ஓடுவதாகவும், எழும்பிக் குதிப்பதாகவும், பிரேதங்கள் என்னும் பூதங்களோடு பேசுவதாகவும் அப்பிணியாளிக்குத் தோன்றும்.—18.

**பித்த மதாத்யயம் :**—பித்த மதாத்யயத்தில் உடலில் அழற்சி, ஜ்வரம், அதிக வியர்வை, மயக்கம், அதிஸாரம், நாவரட்சி, தேஹம் பச்சை மஞ்சள் நிறமாதல், கண்களும் தவடைகளும் சிவந்து போதல் என்னும் இக்குறிகள் உண்டாகும்.—19.

**கப மதாத்யயம் :**—கபமதாத்யயத்தில் வாந்தி, இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பு, நித்திரை, உதர்த்தம் என்கிற சர்மவியாதி, தேஹ பாரமதிகரித்தல் இவை குறிகளாம்.—19½.

**ஸந்நிபாத மதாத்யயம் :**—வாத-பித்த-கபங்களால் உண்டாகும் ஸந்நிபாத மதாத்யயத்தில்,[1] முற்கூறிய மூன்று தோஷ ஸம்பந்தமான எல்லாக்குறிகளும் ஒரு மிக்கக் காணும்.—19¾.

**மதுபானங்களைத் திடீரென்று மாற்றுவதால் உண்டாகும் தீங்குகள் :**—மதுபானத்தை நடுவில் வெகு நாள் விட்டிருந்து, அதை மறுபடியும் திடீரென்று உபயோகிப்பவனுக்கும், இயற்கனவே உபயோகித்து வந்த ஒருவித மதுவை திடீரென்று பரிஹரித்து அப்யாஸத்திலில்லாத மற்றொரு விதமான மதுவை உபயோகிப்பவனுக்கும், முக்கியமாய் துர்ப்பலமானவனுக்கும் வாத தோஷத்தினால் த்வம்ஸகம், விக்ஷயம் என்கிற கஷ்டம் விளைவிக்கும் வியாதிகள் உண்டாகின்றன.—20, 21.

**த்வம்ஸக வியாதியின் குறிகள் :**—கபத்தை அதிகமாகச் சிந்துவதும், தொண்டை வற்றிப்போவதும், அதிக நித்திரையும், சப்தங்களைச் சஹிக்காமற் போவதும், சோம்பலும் த்வம்ஸகம் என்கிற வியாதியில் உண்டாகும் குறிகளாம்.—21¾.

**விக்ஷய வியாதியின் குறிகள் :**—தேஹத்திலும் சிரஸ்ஸிலும் அதிக வேதனையும், இருதயத்தையும் தொண்டையையும் பற்றிய பிணிகளும், மயக்கமும், இருமலும், நாவரட்சியும், வாந்தியும், ஜ்வரமும் விக்ஷயம் என்னும் வியாதியில் காணும் குறிகளாம்.—22, 22½.

**மதுபானத்தை விலக்குவதாலான பயன் :**—புத்தி பூர்வகமான பிரவ்ருத்தியோடு எவனொருவன் மனோநிக்கிரஹம் செய்து மத்யங்களைப் பானம் பண்ணுவதிலிருந்து விலகிக் கொள்கிறானோ, அவன் சரீர ஸம்பந்தமான விகாரங்களாலும், மனோவிகாரங்களாலும் ஒருக்காலும் தாக்கப்படமாட்டான்.—23½.

---

1. ஸந்நிபாதமதாத்யயத்தில் மூன்று தோஷங்களும் ஸமமாகப் பிரகோபித்திருக்கும். மற்ற மூன்றிலும் ஒவ்வொரு தோஷம் மட்டும் மற்றவைகளைவிட அதிகமாகப் பிரகோபித்திருக்கும்.

**மதுபானத்தினால் உண்டாகும் மூன்று ரோகங்கள் :—** இராஜோ குணப் பிரதானமானவனுக்கும், மோஹம் என்னும் மனோவிகார முடையவனுக்கும், அபத்தியமான உணவுகளை விசேஷமாய் உபயோகிப்பவனுக்கும், இரஸதாதுவின் குழல்களென்ன-இரத்தக் குழாய்களென்ன-உணர்ச்சிக்கு ஆதாரமான நரம்புகளென்ன இவற்றின் அடைப்பினால் மதம், மூர்ச்சை, ஸந்நியாஸம் என்கிற மூன்று ரோகங்கள் ஸம்பவிக்கின்றன ; [1] இவற்றுள் கீழிருப்பவைகளைவிட மேலிருக்கும் ஒவ்வொன்றும் பலத்தில் உயர்ந்தவையாம்.—24, 25.

**மதம் ஏழு விதம் :—** இவற்றுள் மதம் என்பது வாதமதம், பித்தமதம், கபமதம், ஸந்நிபாதமதம், இரத்தமதம், மதுமதம், விஷமதம் என்று ஏழு வகைப்படும். (1) **வாதமதத்தில்** அம்மனிதன் அதிகமாகவும் படபடப்பாகவும் பேசுவதில் பற்றுள்ளவனாகவும், தள்ளாடி விழுபவனாகவும், தட்டுத் தடுமாறி வேலை செய்பவனாகவும், ரூக்ஷமாகவும் கருப்பாகவுமுள்ள தேஹமுடையவனாகவும் இருப்பான். (2) **பித்தமதத்தில்** அவன் கோபிக்கும் சுபாவமுடையவனாகவும், சிவந்த நிறமும் பொன்னிறமும் உள்ளவனாகவும், கலஹத்தில் விருப்பமுள்ளவனாகவும் இருப்பான். (3) **கபமதத்தில்** சொற்பமாயும் முன்பின் விரோதமாயும் பேசக்கூடியவனாகவும், வெளுத்த நிறமாகவும், ஏதோ மனதில் தியானிப்பவனாகவும், சோம்பலுள்ளவனாகவும் காணப்படுவான். (4) **ஸந்நிபாத மதத்தில்** முற் கூறிய மூன்று மதங்களின் குறிகளும் சேர்ந்துண்டாகும். (5) **இரத்த மதத்தில்** கண்களும் மற்ற அங்கங்களும் அசைவற்று நிற்பதோடு, பித்த மதக்குறிகளும் காணும். (6) **மதுமதத்தில்** விகாரமான சேஷ்டைகளும், இயற்கைக்கு விரோதமான குரலும், அங்கங்களில் இயற்கைக்கு மாறான குறிகளும் காணப்படும். (7) **விஷ மதத்தில்** உடல் நடுக்கமும், அதிக நித்திரையும், மற்ற மதங்களைக் காட்டிலும் அதிக கடுமையான இலக்ஷணமும் உண்டாகும். இரத்தமதம் முதலியவற்றிலும் அந்தந்தக் குறிகளின் மேம்பாட்டை அநுஸரித்து வாதம் முதலானவைகளின் ஸம்பந்தத்தினால் ஏற்பட்ட பேதங்களைக் கண்டறிக. 26—29½.

**மூர்ச்சை நான்கு விதம் :—** (1) ஆகாயமானது சிவப்பாகவாவது, கறுப்பாகவாவது, நீல நிறமாகவாவது இருப்பதாகப் பார்த்துக் கொண்டு, கண்கள் சிறிது நேரம் இருளடைந்துவிட, அப்பால் சீக்கிரம் ஞாபகசக்தியைப் பெற்று விழித்துக்கொள்வதோடு, இருதயத்தில் வேதனையும், நடுக்கமும், தலைச்சுற்றலும், சரீர வாட்டமும், கருஞ்சிவப்பான தேஹ நிறமும் ஸம்பவிக்குமானால், அது வாத மூர்ச்சையாகும். (2) பித்த மூர்ச்சையிலோ ஆகாயத்தில்

1. அபத்திய உணவுகளால் இரஸதாது விகாரமடைந்து **மதமும்**, இராஜோகுணத்தினால் இரத்தம் விகாரமடைந்து **மூர்ச்சையும்**, மோஹவிகாரத்தினால் உணர்ச்சி நரம்புகள் விகாரமடைந்து **ஸந்நியாஸமும்** முறையே உண்டாகும் என்பது சிலரது கொள்கை.

சிவந்த நிறமாவது பொன்னிறமாவது இருப்பதாகப் பார்த்துக் கொண்டே கண்கள் இருளடையும்; பிறகு விழித்துக்கொள்ளும் போது உடம்பெல்லாம் வியர்க்க, தேஹ தாபத்தினாலும், நாவரட்சியினாலும் பீடிக்கப் பட்டவனாய், மலம் உடைந்து பேதியாக, நீலமும் பொன்னிறமுமான தேஹத்துடன், சிவந்தும் பொன்னிறமுமான வியாகுலப்பட்ட நேத்திரங்களுடன் கூடியவனாயிருப்பான். (3) கப மூர்ச்சையில் மேகநிறத்தை ஆகாயத்தில் பார்த்துக் கொண்டே கண்கள் இருளடைந்து வெகு நேரம் கழித்துத் தெளிவு உண்டாகும்; இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பும், வாயில் அதிக உமிழ்நீர் ஊற்றும், உடலெல்லாம் ஸ்திதமாகவும் பாரமுள்ளதாகவும், ஈரத்துணியினால் சுற்றிக்கட்டப்பட்டது போன்ற உணர்ச்சியும் உண்டாகும். (4) ஸந்நிபாத மூர்ச்சையில், தனித்தனி தோஷங்களாலான மூர்ச்சைகளுக்குக் கூறப்பட்டுள்ள குறிகள் எல்லாம் காணப்படுவதோடு, பயங்கரமான வலிப்பு முதலிய சேஷ்டைகளைத் தவிர அபஸ்மாரத்தின் மற்றக் குறிகள் கண்டு, வேறொருவிதமான அபஸ்மாரமோவென்று பிரமிக்கும்படி பிணியாளி அசைவற்று பூமியில் விழுவான். 30—35.

ஸந்நியாஸ ரோகம்:—பிராணிகளுடைய தேஹத்தில் மத மூர்ச்சைகளின் ஸம்பந்தமான தோஷங்கள் அவற்றின் வேகங்களை உண்டுபண்ணிய பிறகு, அவ்வியாதிகள் தானே உபசாந்தியடையும்; ஸந்நியாஸம் என்கிற வியாதி மாத்திரம் ஔஷதங்களை உபயோகிக்காமல் நிவ்ருத்தியாவதில்லை. மூன்று தோஷங்களும் ஒருமிக்கப் பிரகோபமடைந்து—ஸந்நிபாத நிலைமையைப் பெற்று—மிகவும் வலிவுடன் வாக்கினுடையவும் தேஹத்தினுடையவும் மனதினுடையவும் வேலைகளையெல்லாம் அடக்கி, ஜீவாதாரமான இருதயம் முதலிய அவயவங்களை ஆச்ரயித்து ஸந்நியாஸம் என்னும் இவ்வியாதியை உண்டுபண்ணுகின்றன; இதனால் அம்மனிதன் கட்டையைப் போலவே சவத்திற்குச் சமானமாய் விழுந்து விடுவான்; இவ்வியாதிக்கு உடனே ஏற்ற சிகித்ஸையைச் செய்யாவிட்டால் பிணியாளி சீக்கிரம் உயிர் துறப்பான். மிகவும் ஆழமாகவும், விசேஷமாய் முதலை முதலிய ஜந்துக்களால் சூழப்பட்டதாகவும், கரைகாண முடியாததுமான கடல் நீர் எனக் கூடியதான ஸந்நியாஸம் என்கிற இவ்வியாதியில் மூழ்கி விடுகிற மனிதனை வெகு சீக்கிரத்தில் மீட்பதற்கு முயலவேண்டும். 36—39.

முறை தவறிய மதுபானத்தினால் உண்டாகும் கேடுதிகள்:—முறைதவறாக மதுவை உபயோகிப்பதால் மதம், கர்வம், கோபம், ஸந்தோஷம் முதலான தனதிடமே ஸம்பவிக்கும் சத்ருக்களால் மனிதன் கட்டப்படுகிறான்; மேலும் யுக்தா யுக்தங்களையும் அவன் அறியமாட்டான்.—40.

**முறைப்படி மதுபானம் செய்வதாலான நன்மை:**—*தனது தேஹபலம், காலம்,*[1] *தேசம்,*[2] *ஸாத்மியம்,*[3] *பிரக்ருதி,*[4] *தனக்குள்ள ஸஹாயம், வியாதி, வயது இவைகளின் கூறுபாடுகளைப் பகுத்தறிந்து, ஏற்றவாறு ஜாக்கிரதையாக ஒருவன் மதுபானம் செய்வதால், அது அமுதபானம் எனக்கூடியதாம்.*—41.

---

# ஏழாம் அத்தியாயம்.

## அர்சோ நிதானம்.

*இனி* அர்சோநிதாநம்[5] *என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது:—*

**அர்சஸ்ஸின் விவரணம்:**—*மாம்ஸமுளைகள் குதமார்க்கத்தை அடைத்து, பிராணிகளை "அரியைப்போல் விசஸநம்" செய்வதால்*[6] *அவை "அர்சஸ்ஸுகள்" என்று வழங்கப்படுகின்றன. வாத-பித்த-கபங்கள் குதத்திலுள்ள சர்மத்தையும், மாம்ஸத்தையும், மேதஸ்ஸையும் மிகவும் கோளாறடையச் செய்து, அபாநத்துவாரம் முதலியவைகளில் பலவித உருவமுள்ள மாம்ஸமுளைகளை உண்டுபண்ணும்; அம்முளைகளே* அர்சஸ்ஸுகள் ஆகும்.—1, 2.

**அர்சஸ்ஸின் சுருக்கமான பேதங்கள்:**—*அர்சஸ்ஸுகள் "ஸஹஜங்கள்"*[7], *"உத்தரகாலஜங்கள்"*[8] *என்று சுருக்கமாய் இருவகைப்படும். மேலும் இதில் "சுஷ்கார்சஸ்"*[9] *என்றும், "ஸ்ராவ்யர்சஸ்"*[10] *என்றும் வேறு இரண்டு வகையுண்டு.*—2½.

**குத த்வாரத்தின் விவரணம்:**—*"குதம்" என்னும் அவயவம் ஸ்தூலாந்த்ரம் என்கிற பெருங்குடலை ஆதாரமாயுடையது; அது நாலரை அங்குலம் நீளமானது; அவ்வவயவத்தில் ஒவ்வொன்றும் ஒன்றரை அங்குல நீளத்தில் மூன்று வலிகள் என்னும் மடிப்புகள் அமைந்திருக்கின்றன. அவற்றுள் உட்புறமாயுள்ள வலி அல்லது மடிப்புக்கு "பிரவாஹிணீ" என்றும்,*[11] *நடுவில் இருப்பதற்கு*

---

1. *காலம்—வஸந்தருது, கிரீஷ்மருது, வர்ஷருது முதலிய காலங்கள் அல்லது ஆதாந விஸர்க்க காலங்கள்.*
2. *தேசம்—அநூபம் ஜாங்கலம் என்கிற பிரதேசங்கள்.*
3. *ஸாத்மியம்—91-ம் பக்கம் பார்க்க.*
4. *பிரக்ருதி—12-ம் பக்கம் பார்க்க.*
5. *மூலரோகம் "அர்சஸ்" எனப்படும்; அப்பிணியைப்பற்றி விவரிக்கும் அத்தியாயம் "அர்சோநிதாநம்" என்று கூறப்படும்.*
6. *அரி—சத்ரு; விசஸநம்—ஹிம்ஸித்தல்.*
7. *ஸஹஜார்சஸ்—பிறந்தது முதலுள்ள மூலரோகம்.*
8. *உத்தர காலஜார்சஸ்—பிற்காலத்திலுண்டாகும் மூலம்.*
9. *சுஷ்கார்சஸ்—இரத்தக்கசிவு முதலியது இல்லாத மூலம்.*
10. *ஸ்ராவ்யர்சஸ்—இரத்தப்பெருக்கு முதலியதோடுகூடிய மூலம்.*
11. *பிரவாஹிணீ—மலத்தை வெளியில் தள்ளுவது அல்லது நெகிழச் செய்யும் வலி.*

"விஸர்ஜநீ" என்றும்,[1] வெளிப்புறத்திலிருப்பதற்கு "ஸம்வரணீ"[2] என்றும் பெயர். அந்த ஸம்வரணீ யென்னும் வலிக்கு வெளிப்புறத்தில் ஒரு அங்குலம் தூரத்தில் ஒன்றரை யவதானியத்தின் அளவில் "குதோஷ்டம்" என்கிற ஆஸனத்வாரத்தின் உதடு அமைந்திருக்கிறது. குதோஷ்டத்திற்கு வெளியில் உரோமங்கள் அடர்ந்திருக்கும். 3—5.

**ஸஹஜார்சஸ்ஸுக்குக் காரணமும் இலக்ஷணங்களும் :—** குதத்தில் முற்கூறிய வலிகள் உற்பத்தியாவதற்கான சுக்ரார்த்தவ பீஜங்கள் கோளாறடைவதே ஸஹஜார்சஸ்ஸுகள் உண்டாவதற்குக் காரணமாகும். தாய் தந்தைகளுடைய துர்நடத்தையாலும், தைவச் செயலாலும் ஆக இரண்டு முகாந்தரங்களால் தோஷங்கள் மூன்றும் ஸந்நிபாதமாகப் பிரகோபமடைந்து, குதத்தின் உற்பத்திக்கு அவசியமான சுக்ரார்த்தவ பீஜங்களுடைய அம்சங்களைக் கோளாறடையச் செய்கின்றன. ஆகவே, ஸஹஜார்சஸ்ஸு அஸாத்ய வியாதி எனப் படுகின்றது. இங்ஙனமே வம்ச பரம்பரையிலுண்டாகும் எல்லா ரோகங்களுமே அஸாத்ய வியாதிகளென்று கருதப் படுகின்றன. ஸஹஜார்சஸ்ஸுகள் என்கிற பிறப்பிலுண்டாகும் இந்த மூல முளைகள் விசேஷமாய் ருக்ஷங்களானவை; பார்ப்பதற்கு அருவருப்பும் கோரமுமான உருவங்களுள்ளவை, உட்புறமாய் அமைந்த முகங்களோடு கூடியவை; நிறத்தில் வெண்மையானவை; கடுமையான உபத்திரவங்களையு[3] முண்டுபண்ணுபவை. 6—8.

**ஆறுவித அர்சஸ்ஸுகள் :—** இதர அர்சஸ்ஸுகள்[4] ஆறுவிதம். வாத-பித்த-கபங்களால் தனித் தனியே உற்பத்தியாகுபவை மூன்று; இரண்டிரண்டு தோஷங்கள் விகாரமடைவதால் ஏற்படும் ஸம்ஸர்க்க தோஷத்தினால் ஒன்று; ஸந்நிபாதத்தினால் ஒன்று; இரத்தத்தினால் ஒன்று; ஆக ஆறு வகைகள்.—8½.

**சுஷ்கார்சஸ்ஸுக்கும் ஆர்த்ரார்சஸ்ஸுக்கும் காரணம் :—** கோளாறடைந்த வாத-கபங்களின் சேர்க்கையினால் **சுஷ்கார்சஸ்ஸுகளும்**, விகாரமடைந்த இரத்தத்தினுடையவும் பித்தத்தினுடையவும் சேர்க்கையினால் **ஆர்த்ரார்சஸ்ஸுகளும்** உண்டாகும்.—9.

---

1. விஸர்ஜநீ—மலம் வெளிப்படுவதற்கு வழிவிடுவதால் இப்பெயர் வந்தது.
2. ஸம்வரணீ—மலம் வெளிப்பட்ட பிறகு குதத்வாரத்தை மூடிவிடும் வலி.
3. இந்த அர்சஸ்ஸில் பிறகு உண்டாகக் கூடிய உபத்திரவங்கள் பகந்தரம், குல்மம் முதலியவைகளாம்.
4. இதர அர்சஸ்ஸுகள் என்பதற்கு உத்தரகாலஜார்சஸ்ஸுகள் எனக் கருத்து.

**அர்சஸ்ஸின் ஸம்ப்ராப்தி :**—தோஷங்கள் பிரகோபமடைவதற்குக் காரணம் முன்னால் கூறப்பட்டிருக்கிறது.[1] அக்காரணத்தினால் ஜாடராக்னி மந்தப்படும்; மலமும் அதிகமாகச் சேர்ந்து விடும்; அப்பால் அமித புணர்ச்சி, வாஹனங்களில் ஏறிச் சென்று அதிர்ச்சியுறுவது, மேடும் பள்ளமுமான அல்லது கடினமான ஆஸனங்களில் கை கால்களைக் கட்டிக்கொண்டு நிர்ப்பந்தமாய் உட்காருவது, வஸ்திநேத்திரம், கல், ஓடு, பூமி, வஸ்திரமுனை இவை தாக்குவது, அதிகமாய் குளிர்ந்த ஜலம் ஸம்பந்திப்பது, அடிக்கடியும் அதிகமாய் முக்குவது, அபானவாயு, மூத்திரம், மலவிஸர்க்கம் இவற்றின் வேகங்களைத் தடுப்பது, அபானவாயு முதலியவற்றை வலுவில் வெளிப்படுத்த முயல்வது, இக்காரணங்களாலும், ஜ்வரம்-குல்மம்-அதிஸாரம் - ஆமதோஷம் - கிரஹணீ-சோகை-பாண்டுரோகம் இவற்றால் தேஹதாதுக்கள் இளைத்துப்போவதாலும், விஷமமான தேஹச்செயல்களாலும், ஸ்த்ரீகளுக்கு அகாலத்தில் கர்ப்பம் வெளியாவதாலும், கர்ப்பம் விருத்தியாய் அதனால் குதபாகம் அழுத்தப்படுவதாலும், இவ்விதமான வேறு சில காரணங்களாலும் அபானவாயுவானது பிரகோபமடைந்து, குதத்வாரத்திலுள்ள முற்கூறிய வலிகள் என்கிற மடிப்புகளில் மலம் அதிகமாகச் சேர்ந்து விடுவதால், அவ்விடங்களில் தூர்நீர்க்கசிவுகள் ஏற்பட்டு அர்சஸ் என்னும் மூல முளைகள் உண்டாகின்றன. 10—14¾.

**அர்சஸ்ஸின் பூர்வரூபங்கள் :**—அர்சஸ்ஸின் பூர்வ ரூபங்களாவன :—அக்னி மாந்தியம்; வயிற்றுப் பொருமல்; தொடைகள் இளைத்துப்போதல்; ஆட்டுச்சதை இசிவு; தலைச்சுற்றல்; உடம்பு இளைத்தல்; கண்களில் வீக்கம்; மலம் உடைந்து பேதியாதல் அல்லது மலச்சிக்கல்; வாயு மிகுதியாகச் சேர்ந்து அடைபட்டு, நாபிக்கு அடியில் உலாவிக்கொண்டு, வேதனையையும் கடுப்பையும் உண்டு பண்ணி, சப்தித்துக்கொண்டே வெகு கஷ்டத்துடன் வெளியாவது; குடலில் இரைத்தலும், ஆரவாரமும் உண்டாவது; அதிக ஏப்பம்; மூத்திரம் மிகுதியாயிறங்குதல்; மலம் சொற்பமாயிருத்தல்; அதுவும் இறுகிக் கிடத்தல்; புகைந்து புளித்த ஏப்பம் வருதல்; சிரஸ்ஸிலும், முதுகிலும், மார்பிலும் வலியுண்டாதல்; சோம்பல்; தேஹ நிறம் மாறுதல்; இந்த்ரியங்கள் துர்ப்பலமடைதல்; கோபம் அதிகரித்தல்; மனத்தெம்பில்லாமை; பாண்டுரோகம்-கிரஹணீ தோஷம்-குல்மம்-உதர ஸம்பந்தமான வியாதிகள் இவை உண்டாயிருப்பதாக மனதில் ஸந்தேஹமுண்டாதல்; என்பவையேயாம். 15—19½.

**அர்சஸ்ஸின் உபத்திரவங்கள் :**—அர்சஸ்ஸுகள் என்கிற மூல முளைகள் நன்கு உண்டானபிறகு முற்கூறிய பூர்வ ரூபக்குறிகளே

---

1. தோஷப்பிரகோபத்திற்குக் காரணங்கள் முன்னால் ஸர்வரோக நிதானாத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கின்றன.

நன்கு வெளிப்படையாக விருத்தியாகின்றன. அர்சஸ்ஸுகளால் கீழே ஆஸனத்வாரம் அடைப்பட்டு விடுவதால் அபாநவாயுவானது கீழே தடுக்கப்பட்டு மீண்டும் மேல்நோக்கிச் சென்று, எல்லா இந்த்ரியங்களையும் எல்லா அவயவங்களையும் ஆச்ரயித்துள்ள மற்ற வாயுக்களுக்கும் கலக்க முண்டுபண்ணி, அவ்விதமே மூத்திரம்-மலம்-பித்தம்-கபம் இவற்றையும் தாதுக்களையும் ஆசயங்களையும் மர்த்தநம் செய்வதுபோல் பீடித்து, ஜாடராக்னியையும் கோளாறடையச் செய்துவிடுவதால் அர்சோரோகம் அனைவருக்கும் பெரும்பாலும் உண்டாவது வழக்கம். அர்சோரோகமுள்ளவன் மிகவும் மெலிந்திருப்பான்; உத்ஸாஹமிழப்பான்; எளிய நிலைமையுடையவனுவான்; வாடியுலர்ந்து ஒளி மழுங்கிக் கிடப்பான்; புழுக்களால் அரிக்கப்பட்ட விருக்ஷம்போல ஸாரமற்றவனுகவும், சாயாஹீனனுகவும்[1] ஆய்விடுவான்; இவ்வாறு மர்மஸ்த்தாநங்களைப் பீடிப்பவையான உபத்திரவங்களோடு காஸம், பீநஸம், வாயில் அரோசகம், ச்வாஸம், நாவரட்சி, உடல்வாட்டம், தேஹம் சோர்ந்து விழுதல், வாந்தி, தும்மல், வீக்கம், ஜ்வரம், ஆண்மையிழத்தல், செவிட்டுத்தனம், திமிரம் என்னும் கண்ணோய், சர்க்கரை அச்மரீ என்னும் மூத்திர ரோகங்கள்[2] இவ்வுபத்திரவங்களாலும் பீடிக்கப்படுவான்; குரல் மந்தப்பட்டு வேறுபாடடையும்; ஏதோ கவலையுடன் யோசித்துக் கொண்டிருப்பான்; அடிக்கடியும் மூக்கைச் சிந்துவான்; அரோசகமுள்ளவனுவான்; எல்லாக் கணுக்களிலும், எலும்புகளிலும், இருதயத்திலும், குதமார்க்கத்திலும், தொடையிடுக்குகளிலும் வலியுண்டாகும்; அன்னம் கழுவிய நீரைப்போன்ற ஒருவிதமான பசை குதமார்க்கத்தில் பொசிந்துவரும்; சில ஸமயம் கட்டப் பட்டும், சில ஸமயம் தானே வெளிவருவதும், சில ஸமயம் இறுகிப்போனதும், சில ஸமயம் இளகியதும், ஒருக்கால் பக்குவமானதும், மற்றொரு வேளை ஆமமானதும் இவ்விதம் இடையிடையே பலவித நிலைமைகளோடு கூடியதாக மலம் வெளியாகும்; மேலும் அவன் வெளிவிடும் மலம் வெண்மையாகவும், சில ஸமயம் பொன்னிறமாகவும், பசுமையாகவும், செந்நிறமாகவும், ஒருவித பசைபோன்ற கசிவுடன் கூடியதாகவும் இருக்கும். 20—27½.

வாதார்சஸ் :—மூல மூளைகள் வாததோஷத்தினால் உண்டானவையானல் பசையற்று, ஒருவித அரிப்புடன் கூடியவைகளாகவும்,

1. ஸாரம் என்றால்—தேஹவன்மை, விருக்ஷத்தின் வைரபாகம்; சாயை யென்றால்—உடலின் தேஜஸ், மரத்தின் நிழல்; புழுக்களால் அரிக்கப்பட்ட மரத்தில் வைரம் அழிந்து, இலைகள் சிதைந்து, நிழலற்றுப்போவது போல், அர்சோரோகியும் பலம் குன்றி ஒளி மழுங்கி ஸாரமற்றவனுவான் எனக் கருத்து.

2. சர்க்கரை என்னும் வியாதி அடுத்த 9-வது அத்தியாயத்தில் 18, 19-வது ச்லோகங்களின் மொழி பெயர்ப்பிலும், அச்மரீ என்பது 6-வது முதல் 18-வது ச்லோக மொழிபெயர்ப்புகளிலும் விவரிக்கப்படும்.

வாடி வதங்கியும், கறுஞ்சிவப்பு நிறமுள்ளவையாகவும், திமிர்த்து அசைவற்றவையாகவும், கறடு முறடாகவும், ரூக்ஷத்தன்மையுடையவையாகவும், ஒன்றுக்கொன்று ஏற்றக்குறைவான உருவங்களோடு கூடியவையாகவும், வக்கிரங்களாகவும், தீக்ஷ்ணங்களாகவும், வெடித்த முகங்களோடு கூடியவையாகவும், கோவை-பேரீச்சு இலந்தை-இலவன் இவற்றின் கனிகளைப் போன்ற உருவமுள்ளவையாகவும் இருக்கும்; அவற்றுள் சில முளைகள் கடப்பம் பூக்களைப் போன்றவையாகவும், வேறு சில முளைகள் வெண்கடுகுக்கு ஒப்பானவையாகவும் இருக்கும். அர்சோரோகிக்கு சிரஸ்ஸிலும், விலாப் பக்கங்களிலும், தோள்களிலும், இடுப்பிலும், துடைகளிலும், துடையிடுக்குகளிலும் அதிக வேதனையுண்டாகும். தும்மல், ஏப்பம், வயிறுவிம்மல், இருதயப்பிடிப்பு, அரோசகம், காஸம், ச்வாஸம், ஜாடராக்னி வைஷம்ய மடைதல், காதிரைத்தல், தலைச்சுற்றல் இவையுமுண்டாகும். இந்த ரோகத்தினால் பீடிக்கப்படுபவன் கெட்டியாகவும், சொற்ப அளவாகவும், சப்தத்தோடு கூடியதாகவும், கடுப்புண்டாக்குவதுமான மலத்தை வெளிவிடுவான்; மேலும் மலமானது நுரைத்தும் பசையுள்ளதுமான ஒருவித கசிவோடு கூடியதாகவுமிருக்கும். அம்மனிதனுடைய சர்மமும், நகங்களும், மலமும், மூத்திரமும், கண்களும், முகமும் கருநிறங்கொள்ளும்; அம்மூல முளைகளாலேயே குல்மம், ப்லீஹம் என்கிற மண்ணீரலின் வீக்கம், மஹோதரம்,[1] அஷ்டீலா எனகிற ஒருவித நோய்[2] இவையும் ஸம்பவிக்கும். 28—33½.

**பித்தார்சஸ்** :—அர்சஸ்ஸுகள் பித்தம் அதிகரித்து உண்டானவையானால் கருத்த முகமுள்ளவையாகவும், சிவந்தும் மஞ்சளுமான நிறமுடையவையாகவும், சிறுகச்சிறுக இரத்தக் கசிவோடு கூடியவையாகவும், ஒருவித துர்நாற்றமுள்ளவையாகவும், மெல்லியவையாகவும், மிருதுவாகவும், தளர்ந்து அசையக் கூடியவையாகவும் இருக்கும்; கிளியின் நாக்கு, கல்லீரல், அட்டையின் முகம் இவற்றிற்குச் சமானமாகவும் காணப்படும்; அழற்சி, வேக்காடு, ஜ்வரம், வியர்த்தல், நாவரட்சி, மூர்ச்சை, அரோசகம், சித்தப்பிரமை இவையுமுண்டாகும்; மூல முளைகள் மிகச் சூடாயிருக்கும். மலம் திரவமாகவும், கருநிறமாகவும், உஷ்ணமாகவும், மஞ்சள் நிறமாகவும், அல்லது சிவந்த நிறமாகவும், ஆமதோஷத்துடன் கூடியதுமாயிருக்கும். முளைகளின் மத்தியபாகம் யவம் என்கிற வாற்கோதுமையின் அளவுள்ளதாகவுமிருக்கும். 34—36½.

**கபார்சஸ்** :—அர்சஸ்ஸுகள் கபப்பிரகோபத்தினால் உண்டானவையானால் அவற்றின் அடிப்புறம் மஹத்தாகவும், கனமாகவும்,

1. மஹோதரம—வயிறற்ல ஒருவித நீர் சுரந்து வயிறு மிகப் பருத்துப்போகும் வியாதி; இதையே ஜலோதரம் என்பார்கள்.

2. ஒருவித நீண்டு அகன்ற சிலைக்கு அஷ்டீலா என்று பெயர்; அது போன்று வயிற்றிலுண்டாகும் கட்டி அல்லது கிரந்தி அஷ்டீலா எனப்படும்.

அதிக வேதனையுண்டுபண்ணுதலையாகவும், வெண்மையாகவும், பருத்து வீங்கியவையாகவும், ஸ்நிக்த்தங்களாகவும், வட்டமாகப் பருத்து குருவாக ஸ்தம்பித்தவையாகவும், பசையுள்ள நீர்க்கசிவுள்ளவையாகவும், நிலைத்து நிற்பவையாகவும், வழுவழுண்டவையாகவும், தினவுள்ளவையாகவும் இருக்கும். மூங்கிற் குருத்து, பலாக்கொட்டை, பசுவின் முலை இவற்றிற்குச் சமானமானவையாகவும் இருக்கும். துடையிடுக்குகள் இவ்வியாதியில் வலித்திழுக்கப்படும்; குதம், வஸ்தியென்னும் மூத்திரப்பை, நாபி இவற்றில் கடுப்பு உண்டாகும். காஸம், ச்வாஸம், இருதயத்தில் இயற்கைக்கு விரோதமான துடிப்பு, வாயில் உமிழ் நீர் அதிகமாய் ஊறுதல், அரோசகம், பீநஸம், பிரமேஹம், மூத்திரக்ருச்சிரம் என்னும் நீர்ச்சுருக்கு, தலையில் உணர்ச்சிக்குறைவு, குளிர் ஜ்வரம், நபும்ஸகத்தன்மை, அக்னிமாந்தியம், சர்த்தியென்னும் வாந்தி, ஆமதோஷத்தை அதிகமாகப் பெற்ற அநேகம் கோளாறுகள் என்னும் இவ்விகாரங்கள் உண்டாகும். மலம் வஸையென்னும் வெண்ணிற நிணநீரைப்போலவும், கபத்துடன் கூடியதாகவும், அளவில் மிக்க அதிகமாவும், வெளி வரும்போது அதிக கடுப்பையுண்டுபண்ணுவதாகவும் இருக்கும். அம்முளைகள் தாராளமாய் நீர்களைப் பொசிப்பதுமில்லை, உடைந்து விடுவதுமில்லை; அப்பிணியாளியின் சர்மம் முதலியவை வெளுத்தும், ஸ்நிக்த்தமாகவும் காணப்படும். 37—41½.

ஸம்ஸர்க்க-ஸந்நிபாதார் சஸ்ஸுகள்:—இரண்டிரண்டு தோஷங்களாலான அர்சோரோகங்களில் எந்த இரண்டு தோஷங்கள் சேர்ந்திருக்கின்றனவோ அவற்றின் இலக்ஷணங்களும், ஸந்நிபாத அர்சஸ்ஸில் மூன்று தோஷங்களுக்கு இயல்பான இலக்ஷணங்களும் ஒருமிக்கச் சேர்ந்தும் காணப்படும். —42.

இரத்தார்சஸ்:—இரத்ததோஷத்தினாலான மூல முளைகள் பித்தார்சஸ்ஸைப் போன்றிருக்கும்; ஆலம் விழுதின் முனை போன்றவையாகவும், குன்றுமணி, பவளம் இவற்றிற்குச் சமானமாகவும் காணப்படும். மலம் இறுகிப்போய் வெளியாகும்போது அதனால் குதமார்க்கத்திலுள்ள அர்சஸ்ஸுகள் அழுத்தப்பட்டு, அவற்றிலிருந்து அதிக உஷ்ணமாகவும் மலினமுமான இரத்தம் திடீரென்று விசேஷமாகக் கசியும்; அவ்விதம் அதிகமாய் இரத்தம் வெளியாவதால் தேஹத்தில் இரத்தக் குறைவு நேரிட்டு, தவளையைப் போன்ற நிறமும் குரலுமுடையவனாய் பிணியாளி வருந்துவான்; தேஹத்தின் இயற்கை நிறமும் பலமும் உத்ஸாஹமும் இழந்து, ஓஜஸ் க்ஷயமடைந்து, இந்த்ரியங்களும் கலக்கமுறும். 43—45.

அர்சஸ்ஸில் உதாவர்த்த உபத்திரவம்:—பயறு, வரகு, சில புல்வகைகள், மூங்கிற்குருத்து, கடலை முதலிய ரூக்ஷமும் ஸங்க்ராஹி குணமும்[1] உடைய பதார்த்தங்களின் உபயோகத்தால் வாயுவானது

1. ஸங்க்ராஹீ—இதைப்பற்றி 46-ம் பக்கம் பார்க்க.

தன் ஸ்தாநத்திலேயே பிரகோபமடைந்து மிகவும் பலம் பெற்று, கீழே மலத்தை மிகச் சுஷ்கமாகச் செய்து, கீழ்நோக்கி ஸ்ரோதஸ்ஸுகளை அடைத்து, அபாநவாயு, மலம், மூத்திரம் இவற்றைக் கடுமையாக மேன்மேலும் சேர்த்துவிடும்; அதனால் குடல்களிலும், முதுகிலும், இருதயத்திலும், விலாப்பக்கங்களிலும் தீவ்ரமான வலியுண்டாகும்; வயிற்றுப் பொருமல், வயிற்றுளைத்தல், இயற்கைக்கு விரோதமான இருதயத்துடிப்பு, ஆஸநத்வாரத்தில் கத்தரிப்பது போன்ற கடுப்பு, மூத்திரப்பையில் விசேஷமான வலி, கிரந்திவீக்கம் போன்ற கட்டி, ஸாதாரண வீக்கம் இவை ஸம்பவிக்கும்; பிறகு அடியில் குதமார்க்கத்தில் தடையுண்ட வாயுவானது மேல்நோக்கிச் சென்று, அதனால் வாந்தி, அரோசகம், ஜ்வரம், இருதய வியாதி, கிரஹணீரோகம், மூத்திரம் வஸ்தியில் அடைபட்டுச் சேருதல், பிரவாஹிகை யென்னும் வயிற்றுக்கடுப்பு, செவிட்டுத்தனம், கண் பார்வை குறைதல், ச்வாஸரோகம், தலைவலி, காஸம், பீநஸம், சித்தப்பிரமை, நாவரட்சி, இரத்த-பித்தம், குல்மம், பலவிதமான உதர வியாதிகள் முதலியவைகளும், மிகக் கடுமையான வேறு வாத வியாதிகளும் உண்டாகின்றன. அர்சோரோகமுள்ளவர்களுக்கு இவ்விதமாய் உதாவர்த்தம்[1] என்கிற மிகவும் துன்பமளிக்கவல்ல உபத்திரவம் உண்டாவது வழக்கம். வாதத்தினால் கோளாறடைந்த குடலுடையவர்களுக்கு, அர்சஸ்ஸுகள் இல்லாமலே மேற்கூறிய உதாவர்த்தம் உண்டாவதுண்டு. 46—52.

**அர்சஸ்ஸுகளில் அஸாத்தியங்களும் யாப்யங்களும்:**—ஸஹஜார்சஸ்ஸுகளும், ஸந்நிபாதத்தினாலுண்டான அர்சஸ்ஸுகளும், ஆப்யந்தரவலியென்கிற உட்புறமாயுள்ள மடிப்பில் உண்டான அர்சஸ்ஸுகளும் அஸாத்தியங்களாகும்; ஜாடராக்னி முதலியவை நல்ல பலமுள்ளவைகளாயிருந்தால், அவைகளே யாப்யங்களாகும்.—53.

**அர்சஸ்ஸில் க்ருச்சிரஸாத்தியங்கள்:**—த்வந்த்வதோஷங்களால்[2] உண்டான அர்சஸ்ஸுகளும், இரண்டாவது வலி யென்கிற நடுவிலிருக்கும் மடிப்பில் உண்டான முளைகளும், வருஷக்கணக்காயிருந்துவரும் அர்சஸ்ஸுகளும் க்ருச்சிர ஸாத்தியங்களாகும்.—54.

**அர்சஸ்ஸில் ஸுக ஸாத்தியங்கள்:**—வெளிப்புறத்து மடிப்பிலுண்டான அர்சஸ்ஸுகளும், ஒரு தோஷத்தினால் மட்டும் உண்டானவையும், சொற்ப காலத்திற்குள் ஸம்பவித்தவையுமான அர்சஸ்ஸுகள் எளிதில் சிகித்ஸைக்கு வசப்படக் கூடியவையாம்.—55.

**வேறு அவயவங்களிலுண்டாகும் அர்சஸ்ஸுகள்:**—ஆண்குறி முதலியவற்றில் உண்டாகும் அர்சஸ்ஸுகளைப்பற்றிய விவரங்களும்

1. உதாவர்த்தம்—இதைப்பற்றி 33-ம் பக்கம் பார்க்க.
2. த்வந்த்வ தோஷங்கள்—வாத-பித்தங்கள், வாத-கபங்கள், பித்த-கபங்கள் என்று இவ்வாறு இரட்டையாகச் சேர்ந்துள்ள தோஷங்கள். இவையே ஸம்ஸர்க்க தோஷங்கள் எனப்படும். (5-ம் பக்கம் பார்க்க.)

அப்பால் அந்தந்த பிரகரணங்களில் கூறப்படும்.[1] நாபியில் உண்டாகும் அர்சஸ்ஸுகள் மண்ணுணிப் பாம்பின் முகம்போன்றவையாகவும், பசையுள்ளவையாகவும், மிருதுவாகவும் இருக்கும்.—56.

சர்மகீலம் :—வியாந வாயுவானது கபத்தைப்பற்றியதாய், வெளிப்புறத்திலுள்ள சர்மத்தில் திடமானதும் கடினமானதுமாயுள்ள செட்டியான முளைபோன்ற ஒருவித வளர்ச்சியை உண்டாக்கும்; அதை சர்மகீலம்[2] என்பார்கள். இது வாதத்தினால் உண்டானதானால் குத்தலும், பசையற்று கடினமாகவும், பித்தத்தினால் உண்டானதானால் கறுஞ்சிவப்பான இரத்தத்துடன் கூடியதாகவும், கபத்தினால் உண்டானதானால் ஸ்நிக்த்தமாகவும், கறடுகட்டியதாகவும், சர்மத்திற்குச் சமான நிறமுடையதாகவும் இருக்கும்.—57, 58.

அர்சஸ்ஸை உபேக்ஷிப்பதாலான உபத்திரவம் :—அறிவிற் சிறந்த வைத்தியன் அர்சஸ்ஸுகளை நிவ்ருத்தி செய்ய சீக்கிரம் முயற்சி செய்ய வேண்டும்; ஏனெனில் மூலமுளைகள் குதம் என்கிற ஆஸனமார்க்கத்தை அடைத்து "பத்த குதோதரம்"[3] என்கிற வியாதியை உண்டு பண்ணிவிடும்.—59.

---

## எட்டாம் அத்தியாயம்.

### அதிஸார-கிரஹணீ ரோகநிதாநம்.

இனி அதிஸார-கிரஹணீ ரோகநிதாநம்[4] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

### அதிஸாரம்.

அதிஸாரம் ஆறுவிதம் :—அதிஸார ரோகமானது வாத-பித்த-கபங்களால் தனித்தனியே ஒவ்வொரு வகையும், ஸந்நிபாதத்தினால் ஒருவிதமும், பயத்தினால் ஒருவிதமும், சோகத்தினால் ஒருவிதமும் ஆக ஆறுவிதமாய் உற்பத்தியாகும்.—½.

அதிஸார நிதாந ஸம்ப்ராப்திகள் :—தண்ணீரை அதிகமாய் உட்கொள்வதாலும், மிக்க மெலிந்து உலர்ந்துபோன இறைச்சி-அஸாத்மியமான உணவுகள்-எள்-மாப்பண்டங்கள்-முளைத்த தானியங்கள் இவற்றாலும், மதுபானத்தினாலும், ரூக்ஷகுணமும் மிதமிஞ்சியது

1. பிறகு உத்தரஸ்த்தாநத்தில் ஆண்குறி முதலியவற்றிலுண்டாகும் அர்சஸ்ஸுகளைப்பற்றி குஹ்யரோக விஞ்ஞாநீயாத்தியாயத்திலும், வேறுவித அர்சஸ்ஸுகள் கர்ணரோக விஞ்ஞாநீயாத்தியாயத்திலும், நாஸாரோக விஞ்ஞாநீயாத்தியாயத்திலும் விவரம் கூறப்படும்.

2. சர்மகீலம்—குதத்தில் சர்மத்தின்மேல் முளையைப்போல் உண்டாகும் ஒருவித அர்சஸ்.

3. பத்தகுதோதரம்—பிறகு 12-ம் அத்தியாயம் பார்க்க.

4. அதிஸாரம்—மலம் மிகவும் திரவமாகப் போய் வெளியாகும் வியாதி; கிரஹணீ—ஆமாசயத்திற்கு அடுத்துள்ள கிரஹணீ என்கிற குடலின் பாகம் கோளாறடைந்து ஸம்பவிக்கும் ரோகம்; இவற்றைப்பற்றி விவரிக்கும் அத்தியாயம் எனப் பொருள்.

மான அன்னத்தினாலும், அர்சஸ்ஸாலும், ஸ்நேஹ சிகித்ஸையில் நேரிடும் தவறுதல்களாலும், கிருமிகள் குடலிற் சேருவதாலும், மல விஸர்க்கம் முதலிய வேகங்களைத் தடை செய்வதாலும், மற்றும் அவ்விதமான வேறு காரணங்களாலும் வாதம் பிரகோப மடைந்து, ஜலஸம்பந்தமான தாதுவைச் சுரப்பித்து கீழே நெகிழச் செய்து, அத்தாதுவைக் கொண்டே ஜாடராக்னியை அழித்து, குடலில் மலா சயத்திற்கு அருகிலுள்ள பாகங்களைக் கெடுத்து, மலத்தைத் திரவ மாகச் செய்து, அதிஸாரத்தை உண்டுபண்ணும். 1—3¾.

**அதிஸார பூர்வ ரூபம் :**—அதிஸாரம் உண்டாகப்போகிறதென் றால் காணக்கூடிய குறிகள் இருதயத்திலும், குதத்திலும், குடலி லும் வலியுண்டாதல், தேஹம் இளைத்தல், மலபந்தம், வயிற்றுப் பொருமல், ஆஹாரம் ஜீர்ணமாகாமை என்பனவாம்.—4, 4¾.

**வாதாதி ஸாரம் :**—அவற்றுள் வாதத்தினால் உண்டாகும் அதி ஸாரத்தில் மலம் பெரும்பாலும் ஜலபாகம் குறைந்ததாகவும், சொற்ப அளவாகவும், சப்தம் வலி இவற்றோடு கூடியதாகவும், இறு கியதாகவும், ரூக்ஷமாகவும், நுரைத்ததாகவும், சில ஸமயம் மல மின்றி முற்றிலும் நீருருவமாகவும், அல்லது அடிக்கடி இறுகிய மல மும் நீருமாகவும், காந்திப்போன வெல்லம் போன்றதாகவும், பிசின் போன்றதாகவும், ஆஸனத்வாரத்தில் கடுப்புண்டாக்குவதாகவும் இருக்கும்; பிணியாளி மல விஸர்க்கம் செய்யும்போது வாயுலர்ந்து, குதம் வெளியில் நழுவ, மயிர்ச்சிலிர்க்கையுண்டாய் வருந்து வான். 5—7.

**பித்தாதிஸாரம் :**—பித்தத்தினால் உண்டாகும் அதிஸாரத்தில் மலம் மஞ்சள் அல்லது இலைப் பசுமை நிறமாகவும் அல்லது பசும் புற்களைப் போன்றதாகவும், கருப்பாகவும், இரத்தம் கலந்ததாகவும், அதிக துர்நாற்றமுடையதாகவும் இருக்கும்; நாவரட்சியும், மூர்ச்சையும், வியர்வையும், அழற்சியும் அதிகமாய் உண்டாகும்; குதத்தில் எரித்தலும், வலியும், இரணமும் உண்டாகும்.—8, 8¾.

**கபாதிஸாரம் :**—கபத்தினால் உண்டாகும் அதிஸாரத்தில் மலம் பிசுபிசுப்பாகவும், நூல்போன்ற விகாரங்கள் ஸம்பவிக்குந் தன்மையதாகவும், வெண்மையாகவும், குதம் முதலியவற்றின் மாம்ஸபேசிகளை ஸ்நிக்த்தமாகச்செய்யக்கூடியதாகவும், கபத்துடன் சிக்கியதாகவும், குருகுணமுள்ளதாகவும், துர்கந்தமாகவும், ஒரு வாறு இறுகியதாகவும், இடைவிடாமல் வலியையுண்டுபண்ணுவதாக வும் இருக்கும்; அப்பிணியாளி விசேஷமாய் நித்திரையுறுபவ னாகவும், சோம்பலுள்ளவனாகவும், அன்னத்தில் வெறுப்புடையவ னாகவும் இருப்பான்; மலம் மிகச் சொற்பமாகவும், கடுப்புடன் கூடியதாகவும், மயிர்ச்சிலிர்க்கை யுண்டாக்குவதாகவும், வாயில் உமிழ்நீர் அதிகமுண்டாக்குவதாகவும், மூத்திரப்பையிலும் குதத் திலும் வயிற்றிலும் குருத்தன்மை தோன்றுவதற்குக் காரணமாக

வும், மலவிஸர்க்கம் செய்தும் செய்யப்படாமலிருப்பதுபோன்ற உணர்ச்சியை யுண்டாக்குவதாகவும் இருக்கும். 9—10½.

**ஸந்நிபாதாதிஸாரம்** :—வாத பித்த கபங்கள் சேர்ந்துண்டாகும் தோஷத்தாலான அதிஸாரத்தில், தனித்தனி அதிஸாரங்களுடைய இலக்ஷணங்கள் அனைத்தும் காணும்.—11.

**பயாதிஸாரம்** :—பயத்தினால் மனது கலக்கமடைந்தால் வாயு பித்தத்துடன் சேர்ந்து பிரகோபித்து, மலத்தைத் திரவமாகச் செய்யும்; பிறகு சீக்கிரம் உஷ்ணமாகவும், திரவமாகவும் இலகுவாகவுமுள்ள மலம் அதிஸாரத்தில் வெளியாகும்.—12.

**சோகாதிஸாரம்** :—பயாதிஸாரத்தில் நேரிடுவது போலவே சோகத்தினாலும் வாத பித்தங்கள் பிரகோபித்து, முற்கூறிய குறிகளையுண்டுபண்ணி மலத்தைத் திரவமாக்கி வெளிப்படுத்தும்.—12½.

**இரண்டிரண்டு விதமான அதிஸாரங்கள்** ,—அதிஸாரத்தை (1) ஆமாதிஸாரம் நிராமாதிஸாரம் என்றும், (2) இரத்தாதிஸாரம் என்றும், இரத்தமில்லாத அதிஸாரம் என்றும் ஆகச் சுருக்கமாய் இரண்டிரண்டு வகையாகப் பிரிக்கலாம்.—13, 13½.

**ஆமாதிஸாரம்** :—அவற்றுள் முதலாவது அதிஸாரத்தில் வெளியாகும் மலம் குருகுணமுடையதாகையால் அந்த மலம் ஜலத்தில் விட்டதும் அமிழ்ந்துவிடும்; துர்நாற்றமுள்ளதாயிருக்கும்; இதில் வயிற்றில் இரைத்தலும், பொருமலும், வலியும், வாயில் உமிழ்நீர் அதிகமாய் ஊறுவதும் உண்டு.—14.

**பக்வாதிஸாரம்** :—முற்கூறிய குறிகளுக்கு எதிரிடையான இலக்ஷணங்களுள்ளதான அதிஸாரம் நிராமாதிஸாரம் எனப்படும்;[1] கபத்தினால் உண்டான அதிஸாரத்தில் மலம் பக்குவமான நிலைமையடைந்திருந்தாலும் ஜலத்தில் அமிழ்ந்துவிடும்.—14½.

## கிரஹணீ ரோகம்.[2]

**கிரஹணிக்குக் காரணம்** :—அதிஸாரங்களுக்கு ஏற்ற சிகித்ஸைகளை வேண்டியவளவு செய்யாமலிருந்து விடுவதாலும், ஜாடராக்னியை அழிக்குங் குணமுடைய உணவுகளை உபயோகிப்பதாலும் கிரஹணீ ரோகம் உண்டாகின்றது.—15½.

**கிரஹணியைப்பற்றிய விசேஷங்கள்** :—ஆஹாரம் ஜீர்ணமானதாகத் தோற்றிய பிறகுகூட மலம் ஆமமாகவோ பக்குவமாகவோ எவனுக்கு அதிஸாரரூபமாய் வெளியாகின்றதோ, அவனுக்கு அதிஸாரம் அதிகமாயிருக்குமாகையால் அவ்வியாதி இயற்கையிலேயே சீக்கிரம் பிராணபாய முண்டாக்கக் கூடும். உணவு ஜீர்ண

1. நிராமாதிஸாரம்—ஆமம்=உணவு மலம் முதலியது பக்குவமாகாததால் உண்டாகும் தோஷம்; நிராமம்=ஆஹாரமோ மலமோ பக்குவமான நிலைமையில் இருப்பது. ஆகவே இதைப்-பக்வாதிஸாரம் என்கிறோம்.

2. கிரஹணீ—இரைப்பையின் கீழ்ப்பக்கத்து கபாடத்துடன் கூடிய முகத்வாரம்; அதைப்பற்றிய வியாதியே கிரஹணீரோகம்.

மாகாமலிருக்கையில் வெளிவரும் மலம் ஆமதோஷத்தோடும் பக்குவமாகாத அன்னத்தோடும் கலந்திருக்கும்; உணவு ஜீர்ணமான பிறகு வெளியாகும் மலம் பக்குவமாகவோ பக்குவமில்லாமல் ஆமமாகவோ இருக்கும். திடீரென்று அடிக்கடியும் மலம் இறுகிப் போய் வெளியாவதும், அல்லது திடீரென்று அடிக்கடி உடைந்து திரவமாக வெளியாவதும் உண்டு. இவ்வித கிரஹணீ ரோகத்தில் மலம் குடலில் அதிகமாகச் சேர்ந்து அதிஸாரமுண்டாவதுடன், இவ்வியாதி வெகு நீடித்தும் போராடும். 16—18.

**கிரஹணீ நான்கு விதம்:**—கிரஹணீரோகமானது வாத-பித்த-கபங்களால் தனித் தனியே மூன்று விதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும் ஆக நான்கு விதமாகக் காணும்.—18½.

**கிரஹணியின் பூர்வரூபம்:**—அக்னிமாந்த்யம், உணவு மெதுவாக ஜீர்ணமாதல், புளித்த ஏப்பம், உமிழ்நீர் அதிகம் ஊறுதல், வாய் சுவை கெட்டுப்போதல், அரோசகம், நாவரட்சி, தேஹவாட்டம், தலைச்சுற்றல், வயிறு விம்மல், வாந்தி, காதிரைத்தல், குடலிரைத்தல் இக்குறிகள் கிரஹணியின் பூர்வரூபங்கள்.—19, 20.

**கிரஹணியின் பொதுக் குறிகள்:**—தேஹம் இளைத்தல், மூச்சு உஷ்ணமாயிருத்தல், தமக ச்வாஸம், ஜ்வரம், மூர்ச்சை, தலைவலி, வயிறு விம்மல், ஜீர்ணமின்மை, கைகால்களில் வீக்கம் ஆக இவை கிரஹணியின் பொதுக்குறிகளாம்.—21.

**வாத-கிரஹணீ:**—அவற்றுள் வாத தோஷத்தினால் உண்டாகும் கிரஹணியில் அடியில் வரும் குறிகள் காணப்படும்:—வாய் உலர்ந்துவிடுதல், கண் மழுக்கங்கொள்ளுதல், காதுகளில் இரைத்தல், விலாப்பக்கங்களிலும் தொடைகளிலும் தொடையிடுக்குகளிலும் வேதனை, அடிக்கடியும் விஷூசியைப்போல் பேதி முதலியவையுண்டாதல், எல்லாச்சுவைகளிலும் விருப்பம், பசியதிகரித்தல், நாவரட்சி, குதத்தில் அறுக்கப்படுவதுபோன்ற கடுப்பு, உணவு ஜீர்ணமான பிறகும் ஜீர்ணமாகும்போதும் வயிற்றில் பொருமல், உணவைப் புஜித்ததும் பொருமல் நீங்குதல், வாதரோகமென்றும், இருதயரோகம் என்றும், குல்மமென்றும், அர்சஸென்றும், ப்லீஹமென்கிற மண்ணீரல் வியாதியென்றும், பாண்டுரோகம் என்றும் இவ்வாறு பலவிதமான பிராந்தியுண்டாதல், திரவமாகவும், சில ஸமயம் சுஷ்கமாகவும், தெளிவாகவும், ஆமதோஷத்துடன் கூடியதாகவும், நுரைத்ததாகவுமுள்ள மலத்தை வெகுநேரம் சிரமப்பட்டு அபானவாயு முதலிய சப்தம் அதிகரிக்க வெளிவிடுதல் என்பனவாம். மேலும் குதத்தில் வலியுண்டாக, ச்வாஸமும் காஸமும் தோன்ற, அடிக்கடியும் மலவிஸர்க்கம் செய்வான். 22—24½.

**பித்த-கிரஹணீ:**—பித்தக் கிரஹணியில் மலம் கருநிறமாகவும், சில ஸமயம் மஞ்சளாகவும், திரவமாகவும் இருக்கும்; பிணியாளி மஞ்சள் நிறமாவான்; துர் நாற்றமும், புளிப்பு முள்ளதான ஏப்பம்

வரும்; மார்பிலும் தொண்டையிலும் அழற்சி, அரோசகம், நாவரட்சி இவையும் ஏற்படும்.—25½.

**கப-கிரஹணீ** :—கபத்தினால் உண்டாகும் கிரஹணியில் புஜிக்கப்படும் உணவு மிகவும் சிரமப்பட்டு பக்குவமாகும்; வாந்தியும் அரோசகமும் உண்டாகும்; வாயில் கோழை சிக்கிக்கொண்டு அடிக்கடி கபம் ஸ்ரவித்து துப்பப்படும்; காஸம், இருதயத்தின் இயற்கைக்கு விரோதமான சலனம், பீநஸம் இவையுமுண்டாகும்; மார்பினுள் ஏதோ திரண்டு அடைப்பட்டிருப்பதாக ஓர் உணர்ச்சியுண்டாகும்; வயிறு பொருமலடைந்தும் குருவாகவும் இருக்கும்; ஏப்பம் ஒருவாறு கெட்டுப்போன இனிப்பான சுவையுடன் கூடியதாயிருக்கும்; ஜாடராக்னி மந்தப்படும்; ஸ்த்ரீகளிடம் விருப்பமுண்டாகாது; உடைந்தும், ஆமதோஷமுள்ளதும், கபத்துடன் கூடியதும், குருகுணமுள்ளதுமான மலம் வெளியாகும்; தேஹம் இளைக்காமலிருந்தும் துர்ப்பலம் அதிகரித்திருக்கும். 26—28¼.

**ஸந்நிபாதகிரஹணீ** :—ஸந்நிபாதகிரஹணியில் ஒவ்வொரு தோஷ ஸம்பந்தமான மூன்று கிரஹணிகளிலும் உண்டாகும் எல்லா இலக்ஷணங்களும் சேர்ந்திருக்கக் காணும்.—28½.

**கிரஹணியில் வேறு சில பேதங்கள்** :—அங்கங்களைப் பகுத்து விவரிக்குமிடத்தில் கூறிய விஷமம் முதலிய மூன்றுவித நிலைமையுள்ள ஜாடராக்னிகளும்[1] கிரஹணீ தோஷங்களாகவே கருதப்படுகின்றன. ஸமாக்னியானது கிரஹணீ முதலிய கோளாறுகள் இன்றியே ஆரோக்கியத்திற்குக் காரணமாகும்.—29½.

**எட்டு வித மஹாரோகங்கள்** :—வாதரோகங்கள், அச்மரீ, குஷ்டம், மேஹரோகங்கள், உதரரோகங்கள், பகந்தரம், அர்சஸ், கிரஹணீ என்னும் இவ்வெட்டும் மிகவும் சிரமப்பட்டு நிவ்ருத்திக்கக்கூடிய மஹாரோகங்கள் ஆகும்.—30.

---

## ஒன்பதாம் அத்தியாயம்.

### மூத்திராகாத நிதாநம்.

இதன் பிறகு மூத்திராகாத நிதாநம்[2] என்கிற அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

**மூத்திராகாதாதிகளின் பொதுவான ஸம்ப்ராப்தி**:—வஸ்தியென்னும் மூத்திரப்பை, வஸ்தி சிரஸ் என்கிற மூத்திரநாளங்கள், ஆண்குறி பெண்குறிகள், இடுப்பு, பீஜங்கள், குதம் இவையனைத்தும் குதஸ்த்தாநத்தைச் சுற்றிலும் எல்லாப் புறங்களையும் கவிந்து

1. 340-ம் பக்கத்தில் "ஜாடராக்னியின் நான்கு வித நிலைமைகள்" என்னும் தலையங்கம் பார்க்க.

2. பற்பல காரணங்களால் மூத்திரம் வெளிப்படுவதில் தடையுண்டாகும் வியாதிகளை விவரிக்கும் அத்தியாயம்.

அமைந்துள்ள எலும்புகளின் குழியில் இணைக்கப்பட்டிருப்பதால், இவை ஒரே இடத்தை ஆதாரமாயுடையவையென்று கூறப்படுகின்றன. வஸ்தியானது தலை கீழாக அமைந்திருக்கிறது; அதில் பாரிசங்களில் ஸூக்ஷ்மமான மூத்திர நாளங்களால் எப்பொழுதும் மூத்திரம் கசிந்துகொண்டே யிருக்கும்; அவ்விதமான மூத்திர நாளங்களின் மூலமாகவே தோஷங்கள் வஸ்தியில் பிரவேசித்து மர்மஸ்தானங்களைப் பீடித்து மிகவும் சிரமஸாத்தியமாயுள்ள இருபதுவிதமான மூத்திராகாதங்களையும், இருபது விதமான பிரமேஹங்களையும் உண்டுபண்ணும். 1—3.

**மூத்திரக்ருச்சிரம்** :—(1) வஸ்தியிலும், துடையிடுக்குகளிலும், மூத்திரத்வாரத்திலும் வலியை யுண்டுபண்ணிக் கொண்டு, துளித் துளியாகவும், அடிக்கடியும் **வாதத்தினால்** உண்டான மூத்திர க்ருச்சிரத்தில் [1] மூத்திரம் வெளியாகும். (2) **பித்தத்தினால்** ஆன மூத்ர க்ருச்சிரத்தில் மூத்திரம் அழற்சியையும் வலியையும் உண்டு பண்ணிக்கொண்டு, மஞ்சள் அல்லது சிவப்பாக வெளியாகும். (3) **கபத்தினால்** ஆன மூத்திர க்ருச்சிரத்தில் வஸ்தியிலும் ஆண் குறியில் அல்லது பெண் குறியிலும் குருத்வமும் வீக்கமும் ஏற்பட்டு, மூத்திரம் பிசுபிசுப்புடையதாய் கட்டப்பட்டு மெதுவாக வெளியாகும். (4) **ஸந்நிபாத மூத்திரக்ருச்சிரத்தில்** முற்கூறிய எல்லாக்குறிகளும் கலந்து காணும். 4—5.

**அச்மரியின் ஸம்ப்ராப்தி** :—வாயுவானது எப்பொழுது வஸ்தியின் முகத்தை அடைத்து மூத்திரத்தைத் தனியாகவாவது, பித்தத்துடன்கூடிய மூத்திரத்தையாவது, கபத்தோடு கூடிய மூத்திரத்தையாவது, சுக்ரத்தோடு கூடிய மூத்திரத்தையாவது சோஷணம் செய்கின்றதோ அப்பொழுது பசுவின் வயிற்றில் பித்தத்திலிருந்து கோரோசனைபோல அச்மரீ [2] உண்டாகின்றது; அவற்றுள் ஸாதாரண வாதாச்மரியைவிட பித்தாச்மரியும், அதைவிட கபாச்மரியும், அதைவிட சுக்ராச்மரியும் மேன்மேலும் கடுந்துன்பம் விளைவிப்பவையாம். எல்லா அச்மரிகளுமே கபத்தை முக்கியமாய் ஆதாரமாகக் கொண்டு உண்டாகின்றன,—6, 6½.

**அச்மரியின் பூர்வரூபம்** :—அச்மரியின் பூர்வரூபக்குறிகள் பின்வருமாறு :—வஸ்தி விம்மிக் கொள்ளுதல், அதற்கு அடுத்தப் பிரதேசங்களில் நாற்புறமும் அதிக வேதனை, மூத்திரம் ஆட்டு மூத்திரத்தின் வாஸனையும் தோற்றமும் உடையதாயிருத்தல், நீர்ச்சுருக்கு, ஜ்வரம், அரோசகம் என்பனவாம்.—7, 8.

---

1. மூத்திர க்ருச்சிரம்—நீர்ச்சுருக்கு வியாதி.
2. அச்மரீ—மூத்திரத்திலுள்ள உப்புவகை முதலியவை வாதாதி தோஷங்களால் இறுகிப்போய் கோரோசனையைப்போல கெட்டியாகப் பரிணமிக்கும் வியாதி விசேஷம்.

**அச்மரியின் ஸாதாரண ரூபங்கள்** :—நாபியிலும், ஸேவநியிலும்,[1] வஸ்தியின் மேற்புறத்திலும் வலியுண்டாம். மூத்திர மார்க்கம் தடுக்கப்படும்போது மூத்திரம் நின்று நின்று வெளியாகும். தடை நீங்கியபிறகு நீர் தாராளமாகவும், நிர்மலமாகவும், கோமேதக நிறமாகவும் இறங்கும். அதிர்ச்சியையுண்டுபண்ணி அதைத் தாக்கினால் மூத்திரம் இரத்தத்தோடு வெளியாகும்; சிரமமுண்டாகும்படி ஏதாவது வேலை செய்வதால் அச்மரீ உண்டாயிருக்குமிடத்தில் வலி அதிகரிக்கும்; இவை அச்மரியின் ஸாதாரணக் குறிகளாம்.—9, 10.

**வாதாச்மரீ**:—அவற்றுள் வாதாச்மரியில் உண்டாம் குறிகள்:—வேதனை மிகவும் அதிகமாகும்; பற்களைக் கடிப்பான்; நடுங்குவான்; மர்மஸ்த்தாநத்தைப் பிசைந்துகொள்வான்; அடிக்கடியும் கூவிக்கொண்டு நாபியைப் பிடித்துப் பிசைவான்; அபாநவாயுவுடன் விசேஷ மலவிஸர்க்கம் செய்வான்; அடிக்கடியும் துளித் துளியாக மூத்திரம் விடுவான். அச்மரீ யென்னும் மூத்திரக்கல் கருப்பாகவும், ரூக்ஷமாகவும், சிறிய முட்களைப்போன்ற அவயவங்களுடன் கூடியதாகவும் இருக்கும்.—11, 12.

**பித்தாச்மரீ** :—பித்தாச்மரியில் வஸ்தி சமைக்கப்படுவதுபோல் அழற்சியுறும். இவ்வச்மரி சேராங்கொட்டை போன்று, சிவந்தும், மஞ்சள் நிறமாகவும் கருநிறமாகவும் காணப்படும்.—13.

**கபாச்மரீ** :—கபத்தினால் அச்மரியில் வஸ்தி சீதளமாகவும், குருவாகவும், குத்தப்படுவது போலவும் இருக்கும். அச்மரி பெரிதாகவும், வழுவழுண்டதாகவும், தேன் வர்ணமாகவும் அல்லது வெண்மையாகவும் காணப்படும்.—14.

**மூன்று அச்மரிகளின் விசேஷம்** :—இம்மூன்று அச்மரிகளும் பெரும்பாலும் பாலர்களுக்கே காணும்; இவை உண்டாவதற்கு ஆதாரமான இடங்களும், அச்மரிகளின் விருத்தியும் சொற்பமாகையால், அவற்றைக் கிரஹிப்பதும் வெளியில் எடுப்பதும் எளிது.—15.

**சுக்ராச்மரீ** :—சுக்ரவேகத்தை அடக்குவதால் சுக்ராச்மரீ உற்பத்தியாகின்றது; அது சிறு பிராயம் நீங்கியவர்களுக்கே உண்டாகும். சுக்ரம் ஸ்த்தாநத்திலிருந்து நழுவிய பிறகு அதை வெளியில் விடாமல் அடக்கினால், வாயுவானது பீஜ கோசங்களுக்குள்ளேயே அச்சுக்ரத்தை அடக்கி சுஷ்கமாகச் செய்துவிடும்; அவ்விதம் வறண்டு சுக்ரம் இறுகிப்போமானால், அதுவே "சுக்ராச்மரீ" எனப்படும். வஸ்தியில் வேதனையும், நீர்க்கடுப்பும், பீஜவீக்கமும் உண்டாகும்; சுக்ராச்மரீ உற்பத்தியானவுடனே அவ்விடத்தை அழுத்தினால் சுக்ரம் வெளியாய், அச்மரியும் மறையும். 16—17½.

---

1. ஸேவநீ—ஆண் குறியின் அடிப்புறத்தில் அதாவது பின்புறமாய் தைக்கப்பட்டது போல் நெடுக அமைந்திருக்கும் வடு.

**சர்க்கரா** :—அச்மரியே வாயுவால் அநேக அணுக்களாக உடைக்கப்படுமானால் சர்க்கரா எனப்படும்; அந்தச் சர்க்கரை யானது, வாயு கீழ் நோக்கி அசையும்போது மூத்திரத்துடன் வெளி யாகும்; வாயு பிரதிகூலமாய் மேல் நோக்கிய நிலைமையிலிருந்தால் அச்சர்க்கரை உட்புறத்திலேயே கட்டப்பட்டுப்போம்.—18, 19.

**வாதவஸ்தி**:—வெளியிடவேண்டிய ஸமயங்களில் மூத்திரத்தை வெளிவிடாமல் அடக்கும் வழக்கமுள்ளவனுடைய வஸ்தியின் முகத்வாரத்தை வாயுவானது அடைத்து, மூத்திரத்தை மேன் மேலும் வஸ்தியினுள் சேர்த்து, வலியையும், தினவையும் உண்டு பண்ணி, சில ஸமயம் வஸ்தியை அதன் இயற்கை ஸ்த்தானத்தி லிருந்து நழுவச் செய்து, மீண்டும் மேற்புறமாகப் புரட்டி, கர்ப்பம் தரித்திருப்பதுபோல அதைப் பருமனாகவும் ஒருவாறு அசையும் படியாகவும் செய்து விடுகிறது. அதில் வலியும், அழற்சியும், மூத் திரக்கசிவும் ஏற்பட்டு, மூத்திரம் மேல்நோக்கித் திருப்பி யிழுக்கப் படுவதுமுண்டு; மூத்திரம் துளித் துளியாக வெளியாகும்; வஸ்தி யைப் பிடித்து அழுத்தும்போது தாரையாகவும் வெளிப்படும். இவ்விரண்டும் **வாதவஸ்தி** யென்று கருதப்படுகின்றன. இவற்றுள் முதலிற் கூறிய வாதவஸ்தி க்ருச்சிர ஸாத்தியமானது; இரண்டா வது வாதவஸ்தியில் வாதம் மிகப் பிரபலமாயிருப்பதால், அது முதலிற் கூறியதைவிட இன்னும் கஷ்ட ஸாத்தியமானது. 20—22½.

**வாதாஷ்டீலா** :—வாயு மலாசயத்திற்கும் வஸ்திக்கும் இடையி லிருந்துகொண்டு, அஷ்டீலையைப் போல திரண்டு அசைவற்று மேலே கிளம்பியுள்ள கிரந்தியை உண்டுபண்ணும்; அது **வாதாஷ் டீலா** எனப்படும்; அது விம்மலையும், மலம்-மூத்திரம்-அபாநவாயு இவற்றிற்கு அடைப்பையும் உண்டாக்கும்.—23, 24.

**வாத குண்டலிகா** :—வஸ்தியினுள் வாயுவானது இயற்கைக்கு மாறாக மேல்நோக்கி அசைந்து, தீவ்ரமான வலியை யுண்டுபண்ணிக் கொண்டு மூத்திரத்திற் பிரவேசித்துச் சுழன்றோடும்; அப்பொழுது அவ்வஸ்தியானது ஸ்தம்பித்து அல்லது மேல்நோக்கிப் புரண்டு அசைந்தும், குருகுணத்துடன்கூடியதுமாயிருக்கும்; அல்லது மல விஸர்க்கம் செய்யும்போது மூத்திரம் துளித் துளியாக வெளியிடப் படும்; இதை **வாத குண்டலிகா**[1] என்பார்கள்.—25, 25½.

**மூத்திராதீதம்** :—மூத்திரம் வெகு நேரம் அடைக்கப்பட்டுப் போமானால், அது வெளியிட முடியாததாயிருக்கும்; அல்லது உள்ளே தடுக்கப்பட்டுச் சிறுகச்சிறுகவாவது வெளியாகும்; இதனால் சொற்பவலியுண்டாகும். இதற்கு **மூத்திராதீதம்**[2] எனப் பெயர். 26½.

1. வாத குண்டலிகா—வாயு கீழும் மேலுமாய் சுழன்று குண்டலம் போல் ஓடியுண்டாகும் வியாதி.

2. மூத்திராதீதம்—வெகுநேரம் மூத்திரம் அடக்கப்படுவதாலும், அது மிகவும் மீடித்து மெதுவாக வெளியாவதாலும் இப்பெயர் வந்தது.

மூத்திர ஜடரம் :—வெளிவிடவேண்டிய ஸமயங்களில் மூத்திரத்தை வெளிவிடாமல் அடக்குவதால், அந்த நீர் கீழே தடுக்கப்பட்டுப் போய், எப்பொழுது வாதத்தினால் மேலே எதிரிடையாகத் திருப்பிச் செலுத்தப்படுகிறதோ, அப்பொழுது நாபிக்குக் கீழே வயிற்றில் மூத்திரம் நிரம்பிவிடும்; அதனால் தீவ்ரமான வலியும், வயிற்றுப் பொருமலும், அஜீர்ணமும், மேன் மேலும் மலத்தின் சேர்க்கையும் உண்டாகும். இது மூத்திர ஜடரம்[1] என்று கூறப்படும். 27—28¼.

மூத்திரோத்ஸங்கம் :—மூத்திரமார்க்கத்தின் கோளாறால் அல்லது வாயுவினால் மேலுக்கு இழுக்கப்பட்ட சொற்ப மூத்திரமானது வஸ்தியிலாவது, மூத்திரநாளத்திலாவது, மர்மஸ்த்தாநத்தின் முனைக்குக் கீழாவது தங்கிப் போய், மெதுவாக வெளியாகும்; மீண்டும் அம் மூத்திரம் தடுக்கப்பட்டு மிச்சமுள்ளது மர்மஸ்த்தாநத்தினுள் தங்கலாம்; அவ்வவயவத்திற்கு அதனால் குருத்வம் அதிகமாகும். இவ்வியாதி மூத்திரஸங்கம் அல்லது மூத்திரோத்ஸங்கம்[2] எனப்படும். 28—30.

மூத்திரக் கிரந்தி :—வஸ்தியின் முகத்வாரத்தில் உருண்டையாய் அசைவற்ற ஒரு சிறிய கிரந்தி திடீரென்று ஏற்படுவதுண்டு; அச்மரியைப் போலவே இதுவும் வலியுண்டுபண்ணும். இது மூத்திரக்கிரந்தி[3] யெனப்படும்.—31.

மூத்திர சுக்ரம் :—மூத்திரம் வெளியிடவேண்டியிருக்கையில், அதை அடக்கிக்கொண்டு ஸ்த்ரீயுடன் புணர்பவனுக்கு, வாயுவினால் சுக்ரம் விசரப்பட்டு ஸ்த்தாநத்திலிருந்து நழுவி, மூத்திர விஸர்க்கம் செய்யும்போது அதற்கு முன்னதாகவாவது பிறகாவது சாம்பர்க் கரைத்த ஜலம்போல் சுக்ரம் கலந்த மூத்திரம் வெளியாகும். அது மூத்திர சுக்ரம்[4] எனப்படுகிறது.—32, 32½.

விட்விகாதம் :—ரூக்ஷமான தேஹ நிலைமையுள்ளவர்களுக்கும், துர்ப்பலர்களுக்கும் வாதத்தினால் மலமானது இயற்கைக்கு மாறாக மேல்நோக்கிச் செலுத்தப்பட்டு மூத்திர ஸ்ரோதஸ்ஸுகளைச் சுற்றிலும் வியாபிக்கும்பொழுது, மூத்திரம் மலத்தின் அம்சங்களால் கவரப்பட, மலத்திற்குச் சமான நாற்றமுடையதாகும். அவ்வியாதியை விட்விகாதம்[5] என்று கூறுவர்.—33, 34.

---

1. மூத்திர ஜடரம்—வஸ்தியில் மூத்திரம் நிரம்பி விம்மிப்போதல்.
2. மூத்திரஸங்கம்—மூத்திரம் வஸ்தியில் மேன்மேலும் சேருதல்.
3. மூத்திரக்கிரந்தி—மூத்திரத்தினால் ஏற்பட்ட கிரந்தி.
4. மூத்திர சுக்ரம்—மூத்திரத்துடன் கூடிய சுக்ரம்.
5. விட் விகாதம்—மலம் அடைபடுதல் எனப் பொருள்; என்றால் அநுலோமமான மார்க்கம் தடுக்கப்பட்டு பிறகு குடலில் ஊறி பலவித ஸ்ரோதஸ்ஸுகளின் மூலமாய் மலத்தின் அம்சங்கள் மூத்திரத்தில் ஸம்பந்திக்கும்படி நேரிடும் வியாதி.

**உஷ்ண வாதம்** :—வியாயாமம், தீக்ஷ்ணமாகவும் உஷ்ணமாகவுமுள்ள போஜநம், வழி நடத்தல், வெயில் முதலிய காரணங்களால் விருத்தியடைந்த பித்தம் வாயுவினால் கீழே தள்ளப்பட்டு, வஸ்தியிலும் ஆண்குறி அல்லது பெண்குறியிலும் வலியையும் எரிச்சலையும் உண்டுபண்ணி மஞ்சள் நிறமாகவும், இரத்த நிறமாகவும், உஷ்ணமுமாயுள்ள மூத்திரத்தை அல்லது இரத்தத்தையே அடிக்கடியும் பிணியாளிக்கு மிகவும் கஷ்டத்தை யுண்டுபண்ணி வெளிப்படுத்தும். இதை **உஷ்ணவாதம்**[1] என்பார்கள்.—35, 36.

**மூத்திரக்ஷயம்** :—ரூக்ஷமாகவும் வாட்டங்கொண்டுமுள்ள தேஹமுடைய மனிதனின் வஸ்தியில் அடங்கியிருக்கும் பித்தமும் வாயுவும் சேர்ந்து வலியையும் அழற்சியையும் தந்து மூத்திரத்தை க்ஷயிக்கச் செய்து, **மூத்திர க்ஷயம்** என்னும் வியாதியை உண்டுபண்ணும்.—37.

**மூத்திர ஸாதம்** :—பித்தமாவது, கபமாவது, இரண்டுமாவது வாதத்தினால் தாக்கி இறுக்கப்படும்போது மூத்திரம் மஞ்சளாகவும், செந்நிறமாகவும், வெண்மையாகவும், தடிப்பாகவும் வெகு கஷ்டப்பட்டு வெளியாகும்; அம்மூத்திரம் சுஷ்கித்து, அழற்சியுண்டுபண்ணுவதாகவும், கோரோசனை சங்கு இவற்றின் சூர்ணங்களின் நிறமாகவும், அல்லது ஸகல வர்ணங்களோடு கூடியதாகவும் இருக்கும். இதை **மூத்திரஸாதம்**[2] என்பார்கள்.—38, 39.

**அத்தியாய முடிவுரை** :—இங்ஙனம் மூத்திரம் வெளியாவதற்குத் தடையுண்டாக்கும் வியாதிகள் நிதாந-லக்ஷணங்களோடு விரிவாகக் கூறப்பட்டன. மூத்திரம் அதிகமாய் வெளியாவதால் உண்டாகும் ரோகங்கள் நிதாந-லக்ஷணங்களோடு இதன் பிறகு விரிவாகக் கூறப்படும்.—40.

---

## பத்தாம் அத்தியாயம்.

### பிரமேஹ நிதாநம்.

இனி பிரமேஹ நிதாநம்[3] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும் :—

**பிரமேஹம் இருபதுவிதம்** :—பிரமேஹம் இருபது விதம்; அவற்றுள் கபத்தினால் பத்துவித பிரமேஹங்களும், பித்தத்தினால் ஆறு பிரமேஹங்களும், வாதத்தினால் நான்கு பிரமேஹங்களும் ஸம்பவிக்கும்.—$\frac{3}{4}$.

---

1. உஷ்ணவாதம்—பித்தமும் வாயுவும் சேர்ந்து உண்டாவதால், அதற்கேற்றவாறு இப்பெயர் இடப்பட்டது.

2. மூத்திரஸாதம்—மூத்திரம் குறைந்து விடும் வியாதி.

3. மிதமிஞ்சி மூத்திரம் பலவாறாக வெளிப்படும் ரோகம் "பிரமேஹம்" எனப்படுகிறது; பிரமேஹ ரோகத்தின் காரண-லக்ஷணாதிகளை விவரிக்கும் அத்தியாயம் "பிரமேஹநிதாநம்" எனப்படுகிறது.

**பிரமேஹத்தின் போதுக்காரணங்கள்:**—மேதஸ் என்னும் தாது, மூத்திரம், கபம் இவற்றை விருத்தி செய்யக்கூடிய உணவுகளும், பானவஸ்துக்களும், வேலைகளும் பிரமேஹங்களை உண்டுபண்ணக் கூடியன. இனிப்பு, புளிப்பு, ஸ்நிக்த்தம், குரு, பசை, குளிர்ச்சி என்னும் இக்குணங்களும், நூதனமான தானியங்களும், கட்குடியும், ஆநூப தேசத்து மிருகம் முதலியவற்றின் இறைச்சியும், கரும்பும், வெல்லமும், மோரும், ஒரே இடத்தில் வாஸம் செய்வதும், ஒரே ஆஸனத்தில் உட்கார்ந்திருப்பதும், நியமமில்லாத சயனமும் பிரமேஹ ரோகங்களை விருத்தி செய்யக் கூடியன. 1—3.

**கபப் பிரமேஹ ஸம்ப்ராப்தி :**—சீர்குலைந்த கபமானது வஸ்தியை ஆச்ரயித்து, உடல், திரவக்கசிவுகள், முக்கியமாய் வியர்வை, கொழுப்பு, இரஸதாது, மாம்ஸம் இவற்றைத் தூஷிப்பித்து பிரமேஹ ரோகங்களை உண்டுபண்ணுகின்றது.—4.

**பித்தப் பிரமேஹ ஸம்ப்ராப்தி :**—கபம் முதலிய ஸௌம்ய தாதுக்கள் க்ஷீணித்திருக்கையில், பித்தமானது, மூத்திரத்தைப் பற்றிய இரத்தத்தைச் சீரழித்து, ஆறுவித பிரமேஹரோகங்களையுண்டுபண்ணும்.—4½.

**வாதப் பிரமேஹ ஸம்ப்ராப்தி :**—தாதுக்கள் க்ஷயமடைகையில், அந்த தாதுக்களை, வாயுவானது வஸ்தியிற்கொண்டு சேர்த்து, அவை க்ஷயிக்கையில் வாதஸம்பந்தமான பிரமேஹத்தை நான்கு விதமாய் உண்டுபண்ணும்.—5.

**ஸாத்தியாஸாத்திய நிர்ணயம் :**—கபத்தினுலும், பித்தத்தினுலும், வாதத்தினுலும உண்டாகிற பிரமேஹங்களுக்கு முறையே எளிதான ஸமசிகித்ஸையும்,[1] விஷமசிகித்ஸையும்,[2] அபாயகரமான நிலைமையும்[3] இயல்பாகையால், அவை முறையே சிகித்ஸைக்கு

---

1. ஸமசிகித்ஸை—ஸமஸ்வரூபமான தோஷங்களும் தாதுக்களும் கோளாறடைந்தால், அவற்றிற்கு எதிரிடையான குணங்களைச் செய்யக் கூடிய சிகித்ஸை ஸமசிகித்ஸையாகும். [உ-ம். கபமும், அவ்விதமான நீர்மயமாயுள்ள தாதுக்களும் சீர் கெடுவதால் ஸம்பவிக்கும் பிரமேஹத்துக்கு லங்கநம் முதலிய கர்ஷண சிகித்ஸை செய்யவேண்டியது அவசியம்; இது ஸம சிகித்ஸையாகும்.]

2. விஷமசிகித்ஸை—அநுகூலமில்லாத சிகித்ஸை. [உ-ம். பித்தத்துக்கு சீத-மதுராதி குணமுள்ள சிகித்ஸை ஏற்றது; ஆனுல் பிரமேஹத்தில் தீக்ஷ்ணம் கடுரஸம் முதலிய குணங்களே தகுந்தவை; இவ்வித சிகித்ஸையால் குணமுண்டாவது அரிதாகையால் விஷமசிகித்ஸையாம்.]

3. பிரமேஹத்தில் நீர்மயமான தாதுக்கள் பிரகோபமடைவதால், அதற்கு இலங்கன சிகித்ஸை அல்லது கர்ஷணசிகித்ஸை செய்யவேண்டியிருக்க, வாதப்பிரகோபத்தினுல் இப்பிரமேஹம் ஏற்பட்டிருப்பதால் அதற்கு ஏற்ப பிருஹ்மணசிகித்ஸை அவசியமாயிருப்பதால், இவ்வியாதியில் கர்ஷணமாவது பிருஹ்மணமாவது செய்வதற்கு முடியாதாகையால், இது அபாயகரமானதென்றும், ஆகவே அஸாத்தியம் என்றும் கூறப்பட்டது.

எளிதில் வசப்படக் கூடியவையாகவும், யாப்யங்களாகவும், அஸாத்தியங்களாகவும் ஆகின்றன.—6.

**பிரமேஹத்தின் பொதுக் குறிகள் :**—மூத்திரம் அளவில் அதிகமாயிருப்பதும், பலவிதமான கழிவுப்பொருட்களால் கலங்கியிருப்பதும் பிரமேஹங்களுக்குப் பொதுவான குறிகளாம்.—6½.

**பிரமேஹத்தில் பேதம் கற்பித்தல் :**—பிரமேஹங்களில் தோஷங்களுக்கும் தாதுக்களுக்கும் தன்மையில் பேதமில்லாமலிருந்தும், அவை ஒன்றோடொன்று சேருவதிலுள்ள ஏற்றக் குறைவுகளைக் கொண்டும் மூத்திரங்களுக்கு உண்டாகும் நிறம் முதலியவற்றால் பிரமேஹங்களில் பேதங்கள் கல்பிக்கப்படுகின்றன.—7½.

**இருபது வித மேஹங்கள் :**—(1) சிறுநீரானது தெளிவாகவும், அளவில் அதிகமாகவும், வெண்மையாகவும், குளிர்ந்ததாகவும், வாஸனையற்றதாகவும், அல்லது சிறிது கலங்கியதுபோலவும், கொஞ்சம் பிசுபிசுப்புள்ளதாகவும், ஜலத்தைப் போன்றதாகவும் காணப்படுமாகில் அது உதகமேஹம்[1] என்று கூறப்படும். (2) மூத்திரம் மதுரமான சுவையுள்ளதாகவும், எவ்விதத்திலும் கருப்பஞ்சாறைப் போன்றதாகவும் இருந்தால் அது இக்ஷுமேஹம்[2] என்று கூறப்படும். (3) ஸாந்த்ர மேஹம்[3] என்னும் பிரமேஹத்தில் சிலநேரம் மூத்திர வேகத்தை அடக்கியிருக்க, அந்த நீர் இறுகியது போலத் திரிபடைந்து வெளியாகும். (4) ஸுரை யென்னும் ஒருவித மதுவைப்போல் மூத்திரம் மேலே தெளிவாகவும் அடியில் கலங்கிய கனமான வஸ்துக்கள் அடங்கியதுமா யிருந்தால், அது ஸுரா மேஹம்[4] எனப்படும். (5) மாக்கரைத்த ஜலத்தைப் போல வெண்மையாகவும், அளவில் அதிகமாகவும், மயிர்ச்சிலிர்க்கையுடன் கூட மூத்திரம் வெளியானால் அது பிஷ்டமேஹம்[5] என்று கூறப்படும். (6 சுக்ரமேஹம்[6] உள்ளவன் சுக்ரத்தைப் போன்றதாக அல்லது சுக்ரம் கலந்ததாக மூத்திரம் வெளி விடுவான். (7) ஸிகதா மேஹம்[7] என்கிற வியாதியுள்ளவன், மெல்லிய மணல்களைப் போன்ற உருவமுள்ள அணுக்களாகும் மலங்களை மூத்திரத்தோடு

---

1. உதகமேஹம்—உதகம் என்றால் ஜலம்; மேஹம்—நீர் அதிகம் இறங்குதல்; ஆகவே தண்ணீரைப் போன்ற மேஹம் எனப் பொருள்.

2. இக்ஷுமேஹம்—இக்ஷு என்றால் கரும்பு; அதுபோன்ற நீரிறக்கம் "இக்ஷுமேஹம்".

3. ஸாந்த்ரம் என்றால் இறுகியது, அல்லது தோய்ந்து போனது; அவ்விதமுள்ள நீர் இறக்கம் "ஸாந்த்ர மேஹம்".

4. ஸுரை யென்றால்-கள்; அதுபோன்ற மேஹம் 'ஸுரா மேஹம்.'

5. பிஷ்டம் என்றால்-மா; அதாவது அரிசி மா முதலியது; அது போன்றது 'பிஷ்ட மேஹம்.'

6. சுக்ரம்-புருஷர்களுடைய எட்டாவது தாது; அதுபோன்றது 'சுக்ர மேஹம்'.

7. ஸிகதா-என்றால் மணல்; அதுபோன்ற மேஹம் 'ஸிகதா மேஹம்'.

வெளிவிடுவான். (8) சீதமேஹம்[1] என்கிற ரோகமுள்ளவன் இனிப்பான சுவையுள்ளதாகவும், மிகவும் குளிர்ச்சியாகவும், அளவில் அதிகமுமான மூத்திரத்தை வெளி விடுவான். (9) சிறுநீர் ஒருவனுக்கு அடிக்கடியும், மிகச் சொற்பம் சொற்பமாகவும் இறங்குமானால் அது சனைர் மேஹம்[2] எனப்படும். (10) நூலிழைபோன்ற சொள்ளு நீருக்கு ஒப்பாகவும், பசையுள்ளதாகவும் மூத்திரம் வெளியிடப்படுமானால், அது லாலாமேஹம்[3] எனப்படும். (11) மணத்தினாலும், நிறத்தினாலும், சுவையினாலும், பரிசத்தினாலும் க்ஷாரத்திற்குச் சமானமாக மூத்திரம் இருந்தால், அது க்ஷார மேஹம்[4] என்று கூறப்படும். (12) சிறு நீரானது நீலநிறமாயிருந்தால் நீலமேஹம்[5] என்றும், (13) அஞ்ஜனத்தைப்போல் கருநிறமாயிருந்தால் காலமேஹம்[6] என்றும் கூறப்படும். (14) கடுரஸமுள்ளதும், அழற்சியை யுண்டுபண்ணுவதும், மஞ்சள் நிறமுமான மூத்திரம் வெளிவருமானால் அது ஹாரித்ர மேஹம்[7] எனப்படும். (15) மஞ்ஜிஷ்டி யென்கிற நிறப்பொருள் கலந்த தண்ணீரைப் போன்றதும், ஒருவித துர்நாற்றமுள்ளதுமாகிய மூத்திரம் வெளியாகுமானால் அது மாஞ்ஜிஷ்ட மேஹம்[8] எனப்படும். (16) சிறு நீரானது ஒருவித சவர்நாற்றமும், உஷ்ணமும், உப்புச்சுவையும், இரத்தநிறமும் உள்ளதாயிருந்தால் அது இரத்தமேஹம் எனப்படும். (17) வஸாமேஹம் என்கிற ரோகமுள்ளவனுக்கு நீரானது வஸையென்னும் கொழுப்பு நீரோடு கலந்தாவது, அல்லது வஸையாகவேவாவது அடிக்கடியும் வெளியாகும். (18) மஜ்ஜமேஹம்[9] என்கிற மூத்திரரோகமுள்ளவன், மஜ்ஜையென்னும் தாதுவைப்

---

1. சீதம்-என்றால் குளிர்ச்சி ; மிகக் குளுமையாக மூத்திர விஸர்க்கம் செய்தல் "சீதமேஹம்" ஆகும்.

2. சனைர் என்றால் சிறுகச் சிறுக அல்லது மெதுவாக எனப் பொருள் ; மெதுவாக நீர் இறங்குதல் சனைர் மேஹம் எனப்படும்.

3. லாலா என்பது-வாயிலிருந்து ஒழுகும் சொள்ளு நீர் ; அது போன்ற மேஹம் "லாலா மேஹம்".

4. க்ஷாரம்-ஒருவித தீக்ஷ்ணவீர்யமுள்ள உப்பு ; அதுபோன்ற மேஹம் "க்ஷாரமேஹம்".

5. நீலம்—தெளிவான ஆகாயநிறம் ; அதைப்போன்ற மேஹம் "நீல மேஹமாம்."

6. காலம்—மையைப்போல் மங்கலான கருப்பு ; அது போன்றது "கால மேஹமாம்."

7. ஹாரித்ரா—என்றால் மஞ்சள் ; மஞ்சள் கரைத்த நீர்போன்றது "ஹாரித்ர மேஹம்".

8. மஞ்ஜிஷ்டி—ஒருவித நிறப்பொருள் : அது போன்ற மேஹம் "மாஞ்ஜிஷ்ட மேஹமாகும்."

9. மஜ்ஜா—என்பது எலும்புக்குள் அடங்கியிருக்கும் கொழுப்பு ஸம்பந்தமான தாது ; அது ஸம்பந்தமான அல்லது அதுபோன்றது "மஜ்ஜ மேஹம்" ஆகும்.

போன்ற அல்லது மஜ்ஜையோடு கூடிய நீரை அடிக்கடியும் வெளி விடுவான். (19) மதங்கொண்ட யானையைப்போல எப்பொழுதும் வேகமில்லாமல், நிணநீரோடு கூடிய மூத்திரத்தை அடிக்கடி நடுவில் தடுக்கப்பட்டு வெளியிடுவானானால் அது ஹஸ்திமேஹம்[1] எனப் படும். (20) மதுமேஹரோகியின் நீர் தேனைப்போன்றதா யிருக்கும்;[2] மதுமேஹம் (1) தாதுக்கள் க்ஷீணிப்பதால் வாதம் பிரகோபமடைந்தும், (2) மற்றத் தோஷங்களால் வாதத்தின் மார்க் கம் மறைத்துத் தடுக்கப்பட்டும் ஆக இரண்டுவித காரணங்க ளாலும் ஸம்பவிக்கும்.[3] இதர தோஷங்களால் ஆவரணம் செய் யப்பட்ட அவ்வாயுவானது திடீரென்று ஆவரண தோஷங்க ளுடைய[4] குறிகளை விளங்கச் செய்யும்; இந்த நிலைமையிலுள்ள வாயு ஒரு க்ஷணத்தில் க்ஷீணித்துப் போய், க்ஷணாந்திரத்திலெல்லாம் மறுபடியும் விருத்தியாய் கிருச்சிர ஸாத்தியமாகும். 8—19½.

பிரமேஹங்களுக்கெல்லாம் மதுமேஹம் என்கிற பொதுப் பெயர்:—எல்லா மேஹங்களுமே சிகித்ஸையின்றி உபேக்ஷிக்கப் படுமானல், காலக்கிரமத்தில் மதுமேஹமாய் மாறுவதாலும், பெரும்பாலும் எல்லா மேஹங்களிலும் மூத்திரம் மதுவைப்போல் இறங்குவதாலும், மேஹங்களிலெல்லாம் தேஹத்தில் இனிப்பு அதிகரிப்பதாலும் மேஹங்கள் அனைத்துமே மதுமேஹம் என்கிற பெயரால் வழங்கப்படுகின்றன.—20, 21.

பிரமேஹங்களின் உபத்திரவங்கள்:—(1) உணவு ஜீர்ணமா காமை, அரோசகம், வாந்தி, அதிக நித்திரை, காஸம், பீநஸம் இவை கபப்பிரமேஹங்களின் உபத்திரவங்களாம். (2) வஸ்தியிலும் லிங்கத்திலும் குத்தல் அல்லது வலியுண்டாதல், பீஜம் வெடித்துப் போதல், ஜ்வரம், அழற்சி, தாவரட்சி, புளித்த ஏப்பம், மூர்ச்சை, மலம் உடைந்து வெளியாதல் என்னும் இவை பித்தப் பிரமேஹங் களின் உபத்திரவங்களாம். (3) உதாவர்த்தம், கழுத்திலும் இரு தயத்திலும் பிடிப்பு, சபலபுத்தி, வஸ்தி முதலிய விடங்களில் வலி,

---

1. ஹஸ்தி—யானை; அதைப்போல் மூத்திரவிஸர்க்கம் வெகு அதிக மாகச் செய்யப்படுமானல் "ஹஸ்திமேஹம்" எனப்படும்.

2. தேனைப்போல் இனிப்பாக இருக்குமாகையால் இது "மது மேஹம்" எனப்படுகிறது.

3. தேஹத்தில் தாதுக்கள் க்ஷீணித்துவந்தால், வாததோஷம் பிரகோ பிப்பது இயல்பு; வாததோஷம் தேஹத்தில் ஸஞ்சரிக்கும் மார்க்கங்கள் வேறு தோஷம் முதலியவற்றால் மறைக்கப்படுமானல், அல்லது அடைக்கப் படுமானல் அப்பொழுதும் வாதம் பிரகோபமடையும். "வாயோர் தாது க்ஷயாத் கோபோ மார்கஸ்யாவரணேந ச" என்பது பிராசீன வைத்தியா சாரியர்களுடைய கொள்கை.

4. ஆவரண தோஷங்கள் என்பதால், மார்க்கத்தை மறைக்கும் இதர தோஷங்களும் இவ்வியாதியில் ஸம்பந்தம் பெற்றதாய் அறிக.

நித்திரையின்மை, உடல் சுஷ்கித்தல், காஸம், ச்வாஸம் இவை வாதப்பிரமேஹங்களின் உபத்திரவங்களாகும். 22—24.

பிரமேஹபிடகைகள்:—பிரமேஹ ரோகங்களுக்கு ஏற்ற சிகித்ஸை செய்யாமல் உபேக்ஷித்தால், ஸந்திகளின் மர்மஸ்த்தாநங்களிலும், சதை பருத்த இடங்களிலும் பத்துவித பிடகைகள் என்னும் பிளவைகள் உண்டாம்; அவை:—சராவிகா, கச்சபிகா, ஜாலிநீ, விநதா, அலஜீ, மஸூரிகா, ஸர்ஷபிகா, புத்ரிணீ, விதாரிகா, வித்ரதி என்பனவாம். (1) ஓரங்களில் உயர்ந்தும், மத்தியில் குழிவிழுந்தும், கருஞ் சிவப்பு நிறமாகவும், ஏதேனும் திரவப்பொசிவுள்ளதும், வலியை யுண்டுபண்ணுவதும், அகல் என்னும் கலத்தைப் போன்றதுமாயிருக்கும் சிலந்திக்கு சராவிகா என்று பெயர். (2) ஆழ்ந்தப் பிரதேசத்தில் வலியை யுண்டுபண்ணுவதும், குத்தலுடையதும், அதிக ஆழமான பிரதேசங்களைப் பற்றியதும், பரிசிப்பதற்கு வழுவழுப்பானதும், ஆமையின் முதுகைப்போல் தோற்றுவதுமான சிலந்தி கச்சபிகா எனப்படும். (3) அசைவற்றதாகவும், கொடி கொடியாகத் தோற்றும்படி ஸிரைகள் படர்ந்ததாகவும், ஸ்நிக்த்தமான ஜார்நீர்க்கசிவுகளை யுடையதாகவும், மிகவும் ஆழமாகப் புரையோடுந் தன்மையதாகவும், அதிக குத்தல் வலிகளை யுண்டுபண்ணுவதாகவும், நுட்பமான வெளித்வாரத்தை யுடையதுமான பிளவை ஜாலிநீ எனப்படும். (4) ஆழமான பிரதேசத்தில் வலியும் ஜார்நீர்ச்சுரப்பும் பெற்றதாகவும், கருநிறமாகவும், பூசினைப் போலத் தாழ்ந்ததும், விசாலமுமாய் முதுகிலாவது வயிற்றிலாவது உண்டாகும் சிலந்தியை விநதா[1] என்பார்கள். (5) அலஜீ[2] யென்னும் பிளவையானது வளர்ந்து எழும்பி வருகையில் சர்மத்தை எரிக்கும்; உண்டான விடத்தில் சுற்றிலும் பரவும்; ஆகவே மிகத் துன்பந்தரக்கூடியது; சிவப்பும் கருப்புங்கலந்த நிறமுடையது; அதிக நாவரட்சியை யுண்டுபண்ணும்; கொப்புளங்களையும், அழற்சியையும், மயக்கத்தையும், ஜ்வரத்தையும் உண்டுபண்ணும். (6) அளவினாலும் உருவத்தினாலும் கடலைக்குத் துல்லியமாயிருப்பதான சிலந்தியானது மஸூரிகா[3] எனப்படும். (7) கடுகின் அளவான உருவமுடையதும், சீக்கிரம் பக்குவமாய் மஹத்தான வலியையுண்டுபண்ணுவதும், கடுகைப்போன்ற அநேகம் கொப்புளங்களால் சூழப்பட்டதுமான சிலந்தி ஸர்ஷபிகா[4] எனப்படும். (8) மிகவும் சிறிய அநேகம் பிளவைகளால் சூழப்பட்ட பெரிய சிலந்தி புத்ரிணீ[5]

---

1. விநதா—ஆழ்ந்து தாழ்ந்த பிளவை யெனப் பொருள்.
2. அலஜீ—அநேகம் சிறிய சிலந்திகளால் சூழப்பட்டது.
3. மஸூரம—ஒருவித கடலை; அதுபோன்றது "மஸூரிகா."
4. ஸர்ஷபம்—கடுகு; அதைப்போன்ற சிலந்தி.
5. புத்ரிணீ—தனக்குப் புத்திரன்களைப்போன்ற சிறிய சிலந்திகளுடன் கூடிய பெரிய சிலந்தி.

எனப்படுகிறது. (9) அமுக்கிருங் கிழங்குபோல வட்டமாகப் பருத்து, கடினமாகவுமுள்ள பிளவையானது விதாரிகா என்று கூறப்படும். (10) அடுத்து வரப்போகிற அத்தியாயத்தில் வித்ரதியென்னும் பிளவையின் விஷயம் விவரித்துக் கூறப்படும். 25—33¾.

**பிரமேஹ பிடகைகளில் வேதனையும் வேதனைக்குறைவும் :—** (1) முதலிற் கூறிய மூன்று பிளவைகளும், புத்ரிணியும், விதாரிகாவும் அதிக மேதஸ் உள்ளவருக்கு உண்டாவதால், தாங்கக் கூடாத வேதனையுண்டு பண்ணும். (2) பித்தத்திலான மற்றப் பிரமேஹ பிடகைகள் சொற்ப மேதஸ்ஸுள்ளவருக்குப் பொறுக்கக் கூடிய வேதனையுடன் உண்டாகும். அப்பிளவைகளின் ஸம்பந்தமான தோஷங்களுக்கு ஏற்ப அந்தந்த தோஷமும் அதிகரித்திருக்கும்.—34, 35½.

**பிரமேஹபிடகைகளைப் போன்ற வேறு பிளவைகள் :—** மேதஸ் என்னும் தாது கோளாறடைந்திருந்தால், பிரமேஹம் இல்லாமற் கூட மேற்கூறிய பிளவைகள் உண்டாகின்றன. ஆனால் அப்பிளவைகள் ஓரிடத்தை நன்றாக ஆச்ரயித்து வெளிப்படையாகப் பருத்துக் கிளம்பும் வரையில் அவை உண்டாவதாகத் தெரிவதில்லை.—36.

**மேஹம் என்கிற பிரமையுண்டாக்கும் வியாதி :—** மேஹத்திற்குள்ள பூர்வரூபங்கள் காணுமலே மஞ்சளாகவாவது சிவப்பாயாவது சிறுநீர் வெளிவருமானால் அது மேஹரோகம் அல்லவென்றும் இரத்த-பித்தம் என்றும் அறியவேண்டும்.—37.

**மேஹத்தின் பூர்வ ரூபங்கள் :—** அதிக வியர்வை, தேஹத்தில் ஒருவித நாற்றம், அவயவங்களின் தளர்ச்சி, படுத்துத் தூங்குவதிலும் ஆஸநங்களில் அமர்வதிலும், அவை போன்ற ஸுகங்களிலும் அதிகப் பற்றுதல், மார்பிலும் கண்களிலும் நாக்கிலும் செவிகளிலும் பசை பூசினாற்போன்ற உணர்ச்சி, உடல் கனத்தல், மயிர் நகங்களின் அதிக வளர்ச்சி, குளிர்ச்சியில் விருப்பம், தொண்டையும் வாயும் சுஷ்கித்தல், வாயில் இனிய உணர்ச்சி, பாதங்களிலும் உள்ளங் கைகளிலும் அழற்சி, மூத்திரத்தில் எறும்புகள் மொய்த்தல் இவை மேஹ ரோகங்களின் பூர்வ ரூபங்கள்.—38, 39.

**மேஹத்தில் இரண்டுவித விசேஷங்கள் :—** மதுரமாகவும், பசையுடன்கூடியதும், ஆகவே தேனைப்போலிருப்பதுமான பிரமேஹத்தைக் கண்டு, அது தர்ப்பணம் என்கிற போஷணம் மிதமிஞ்சி செய்யப்பட்டதன் காரணமாய் கபத்தினால் உண்டானதாயென்றும், அல்லது இதரதோஷங்கள் க்ஷீணித்துப் போய் வாதம் பிரகோபமடைந்ததால் ஸம்பவித்ததாயென்றும் ஆக இவ்விரண்டுவிதமான விஷயங்கள் விசாரத்திற்கு இடமுண்டாக்கும்.—40.

**பிரமேஹத்தில் ஸாத்தியா ஸாத்திய நிலைமைகள் :—** கபமேஹங்களும், பித்தஸம்பந்தமான மேஹங்களும் எல்லாப் பூர்வரூபங்களோடும் உண்டானால் அவை சிகித்ஸைக்கு வசப்படமாட்டா;

பித்தத்தினால் உண்டாகும் மேஹரோகங்களில் பூர்வரூபங்கள் இல்லாமலிருந்தாலும் அவை யாப்யங்களாகும்; மேஹரோகங்களில், முக்கியமாய் பித்த வாத ஸம்பந்தமான மேஹங்களில் மேதஸ் அதிகமாகக் கெட்டுப்போகாமலிருந்தால் பிரமேஹங்கள் சிகித்ஸைக்கு எளிதில் வசப்படக் கூடியன.—41.

---

## பதினோராம் அத்தியாயம்.

### வித்ரதி-வ்ருத்தி-குல்ம நிதாநம்.

பிறகு வித்ரதி-வ்ருத்தி-குல்ம நிதாநம்.[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும் :—

### வித்ரதி.

**வித்ரதியின் காரணங்களும் வகைகளும் :—**ஒரு சிலந்தியானது பழகிப்போனவையும், அதிக உஷ்ணமானவையும், ரூக்ஷமானவையும், உலர்ந்தவையும், அழற்சி யுண்டுபண்ணுபவையுமான உணவுகளாலும், மேடு பள்ளமான படுக்கைகளில் படுத்துப் புரளுவதாலும், மற்றும் இரத்தத்தைக் கெடுக்கக்கூடிய அந்தந்த காரணங்களாலும் கெட்டுப்போன சர்மம்-மாம்ஸபேசிகள்-மேதஸ்-எலும்புகள்-ஸ்நாயு-இரத்தம்-கண்டரைகள் இவற்றை ஆதாரமாகப்பற்றி, அதிக ஆழமான ஸ்த்தாநங்களில் பரவி, விசேஷ வேதனையைக் கொடுத்துக்கொண்டு, வட்டமாகச் சிறிது பிரதேசத்திற் பரவியாவது, அதிக விசாலமாகப் பரவியாவது உண்டானால் அதுதான் வித்ரதி எனப்படுகின்றது. வாத-பித்த-கபங்களால் தனித்தனியாகவும், ஸந்நிபாதமாகவும், இரத்த தோஷத்தைப் பெற்றும், வெளியிலிருந்து அடி தாக்குவதைக் காரணமாகக் கொண்டும் ஆக ஆறு விதமாக வித்ரதி உண்டாகும். இந்த வித்ரதிகள் உட்புறத்து அவயவங்களையாவது, வெளிப்புற அவயவங்களையாவது ஆச்ரயித்து உண்டாகும்; இவை முறையே அந்தர்வித்ரதி யென்றும் பாஹ்ய வித்ரதி யென்றும் வழங்கப்படும். 1—3.

**பாஹ்யவித்ரதியும் அந்தர் வித்ரதியும் :—**(1) அவற்றுள் பாஹ்ய **வித்ரதியானது,** தேஹத்தின் வெளிப்புற அவயவங்களில் ஆங்காங்கு ஸம்பவிக்கக்கூடும்; இது கடுந்துன்பம் விளைவிக்கக் கூடியதாகவும் இருக்கும். (2) முடிகளுண்டாய் உயர்ந்து பருத்துக்காணும் **அந்தர் வித்ரதியானது** பாஹ்ய வித்ரதியினும் அதிக துன்பந்தரக் கூடியது; அதிக ஆழத்தில் உண்டாய், குல்மத்தைப்போல் திரண்டும், புற்று போலக் குவிந்துயர்ந்தும், அக்னி அல்லது சஸ்திரங்களைப் போன்று

---

1. வித்ரதி—விப்புருதி யெனப்படும சீழ்க்கட்டி; வ்ருத்தி—பீஜம் பல காரணங்களால் வீங்கிப்போதல்; குல்மம்—குடலைப்பற்றிய ஒருவித சிலந்தி; இவற்றைப்பற்றிய இலக்ஷணாதிகளை விவரிக்கும் அத்தியாயம்.

எளிதில் பிராணாபாயம் விளைவிப்பதுமாய் உண்டாகும்; அந்தர் வித்ரதியானது நாபி, வஸ்தி, யக்ருத், ப்லீஹம், க்லோமா, இருதயம், இரைப்பை, அடைபிடிக்குகள், வ்ருக்கங்கள், குடலின் இறுதியிலுள்ள அபானஸ்தலம் இவற்றில் எதிலாவது உண்டாகும். 4—5¼.

வாத வித்ரதி :—அவற்றுள் வாதத்தினால் உண்டாகும் வித்ரதி அதிக வலியைத் தரும்; கருஞ்சிவப்பாயிருக்கும்; அது வளர்ந்து பழுப்பதற்கு வெகு நாள் செல்லும்; உருவத்தில் கரடுமுரடாயிருக்கும்; குத்தலும், வலியும், தலைச்சுற்றலும், வித்ரதியுள்ள விடத்தில் விம்மலும், அர்னீர்ப்பெருக்கும் ஏற்படும்; வித்ரதி மற்றவிடங்களில் பரவி, விண் என்று தறிக்கும்.—6½.

பித்த வித்ரதி :—பித்தத்தினால் உண்டாகும் வித்ரதி சிவந்து இரத்தமாகவோ கருநிறமாகவோ இருக்கும்; நாவறட்சியையும், மயக்கத்தையும், ஜ்வரத்தையும், எரிச்சலையும் உண்டுபண்ணும்; சீக்கிரத்தில் உண்டாய் பழுத்துவிடும்.—7¼.

கப வித்ரதி :—கப வித்ரதி தினவுள்ளதாயிருக்கும்; வாந்தியாவதற்கான உணர்ச்சியையுண்டுபண்ணும்; குளிர்ச்சிய திகரிக்கும்; வித்ரதியுண்டான இடம் விறைத்துக் கொள்ளும்; கொட்டாவியும், அரோசகமும், குருத்தன்மையும் காணும். இது புறப்பட்டு வளர்வதற்கும் பழுப்பதற்கும் வெகு நாட்கள் செல்லும்.—8¼.

ஸந்நிபாத வித்ரதி :—வாத - பித்த - கபங்கள் சேர்ந்து உண்டாகும் வித்ரதியில் மூன்று தோஷங்களாலும் தனித் தனியே உண்டாகும் வித்ரதிகளுக்குக் கூறிய இலக்ஷணங்கள் யாவும் காணப்படும்.—8½.

பாஹ்ய-அந்தர் வித்ரதிகளில் வாதாதி பேதங்கள் :—இவற்றுள் பாஹ்யவித்ரதிகளுக்கும், அந்தர்வித்ரதிகளுக்கும், வாதாதி தோஷ ஸம்பந்தமான இலக்ஷணங்களை வைத்தியர் தமது புத்தித் திறமையைக் கொண்டு பகுத்தறிந்து கொள்ளவும்.—9.

இரத்த வித்ரதி :—இரத்தத்தின் கோளாறால் உண்டாகும் வித்ரதியானது கருத்த கொப்புளங்களால் சூழப்பட்டிருக்கும்; அது ஒருவாறு மங்கல் நிறமான கருப்பாயிருக்கும்; கடுமையான அழற்சியும் வலியும் ஜ்வரமும் உண்டாகும்; பித்த வித்ரதியின் குறிகள் காணும்; இவை இரத்த ஸம்பந்தமான பாஹ்ய வித்ரதியின் குறிகளாகும். இரத்த ஸம்பந்தமான அந்தர் வித்ரதியிலும் முற்கூறிய குறிகள் ஸம்பவிக்கும்; ஆனால் அவ்விதமான அந்தர் வித்ரதியானது ஸ்த்ரீகளுக்குத்தான் உண்டாகும்.—10.

க்ஷதவித்ரதி :—ஆயுதங்கள் முதலியவற்றால் அடியுண்டாலும், அல்லது விரணத்தில் அபத்தியமா யிருந்தாலும் வாயுவால் நாற்புறமும் வீசப்பட்ட விரணத்தின் உஷ்ணமானது இரத்தத்துடன் கூட பித்தத்தையும் தூண்டி, பித்தத்தினாலும் இரத்தத்தினாலும்

உண்டாகிற வித்ரதிகளின் குறிகளையுடையதும், அநேக விதமான உபத்திரவங்களோடு கூடியதுமான ஒருவித வித்ரதியை உண்டாக்கும். இது க்ஷதவித்ரதி[1] யெனப்படும்.—11, 11½.

வித்ரதிகளுக்கு ஆச்ரயமான அவயவங்களின் தன்மைக்கேற்ற இலக்ஷணங்கள் :—அவற்றுள் எந்தெந்த வித்ரதி எவ்வெவ்விடத்தை ஆச்ரயித்து உண்டாகின்றதோ அவ்வவ்விடத்திற்குத் தகுந்த மாதிரியாய் உபத்திரவக் குறிகளும் ஸம்பவிப்பதாகக் கருதப்படுகிறது. வித்ரதி நாபியினுட்புறத்தில் உற்பத்தியானால் விக்கல் உண்டாகும். வஸ்தியினுள் உற்பத்தியானால் மூத்திரம் மிகக் கஷ்டப்பட்டும், துர்நாற்றத்துடன் கூடியதாகவும் வெளிவரும். யக்ருத் என்னும் கல்லீரலில் உற்பத்தியானால் ச்வாஸம் வெகு கஷ்டப்பட்டு வெளியிடப்படும். ப்லீஹம் என்கிற மண்ணீரலில் வித்ரதி புறப்பட்டால் மூச்சுவாங்குவது தடைப்படும். க்லோமா என்னும் கணையத்தில் வித்ரதியுண்டானால் நாவரட்சியும், தொண்டைக்கட்டலும் ஏற்படும். இருதயத்தில் புறப்பட்டால் எல்லா அங்கங்களிலும் பிடிப்பு உண்டாகும்; மேலும் மயக்கமும், தமக ச்வாஸமும், காஸமும், இருதயத்தில் அபாயகரமான வேதனையும் உண்டாகும். வயிற்றினுள் புறப்படுமானால் வயிற்றிலும், விலாப் பக்கங்களிலும், அவற்றின் இடைகளிலும், தோள்களிலும் கடும் வலியுண்டாகும்; வயிற்றில் பொருமலுடன் கூடிய ஒருவித சப்தமும் தோன்றும். துடையிடுக்குகளில் உண்டானால் துடைகள் அசைக்கக்கூடாமலாய்விடும். வ்ருக்கங்கள் என்கிற மூத்திரக் கிரந்திகளில் உண்டானால் இடுப்பும் பிருஷ்டபாகங்களும் அசைக்க முடியாமலிருக்கும். ஆஸநத்வாரத்தில் உண்டானால் விலாப்பக்கங்களில் வலியும், அபாநவாயுவுக்குத் தடங்கலும் ஏற்படும்.[2] 12—15½.

வித்ரதியின் ஆம-பக்வ-விதக்த்த ஸ்வரூபங்கள் :—அவ்வித்ரதிகளுக்கு ஆமமான நிலைமையும்,[3] பக்வமான நிலைமையும்,[4] விதக்த்தமான நிலைமையும்[5] வீக்கத்திற்குக் கூறிய[6] இலக்ஷணங்களைப் போன்றவையே.—16.

அந்தர்வித்ரதிகளிலிருந்து கழிவுகள் வெளிவரும் வழிகள் :—நாபிக்கு மேற்புறங்களில் உண்டாகும் வித்ரதிகள் பழுத்து உடைந்தால் அக்கழிவுகள் வாயின் மூலமாகவும், நாபிக்குக் கீழே உண்டாகும் வித்ரதிகள் பக்வமாய் உடைந்தால் குதமார்க்கத்தினாலும்,

1. க்ஷத வித்ரதி—காயம்பட்டு உண்டாகும் விப்புருதி.

2. இங்கு குறிக்கப்பட்டுள்ள நாபி முதலிய பத்து அவயவங்களும் தேஹத்தின் உட்புறத்தில் அடங்கினவை; ஆகவே இவற்றை ஆச்ரயித்து உண்டாகும் வித்ரதிகள் யாவும் அந்தர் வித்ரதிகளாம்.

3. ஆமம்—264-ம் பக்கம் பார்க்க.

4. பக்வநிலைமை—பழுத்த நிலைமை.

5. விதக்த்த நிலைமை—பழுத்துப் பதனழியும் நிலைமை.

6. 261-ம் பக்கம் பார்க்க.

நாபியிலேயே உண்டான வித்ரதியின் கழிவுகள் இரண்டு மார்க்கங்களாலும் வெளியாகும்.—16$\frac{3}{4}$.

**வித்ரதியின் கழிவுப் பொருட்களின் தன்மைள்** :—வித்ரதியிலிருந்து வெளியாகும் கழிவுகளின் தன்மைகளைக் கவனித்து, அந்தந்த விரணங்களுக்குக் கூறப்போகிறபடியே [1] வாதாதி தோஷங்களுடைய ஸம்பந்தத்தையும் அறியலாம்.—17$\frac{1}{4}$.

**வித்ரதிகளில் அஸாத்தியமானவை** :—அவற்றுள் ஸந்நிபாத வித்ரதியும், இருதயம்-நாபி-வஸ்தி இவற்றில் உண்டாய் நன்றாகப் பழுத்திருக்கும் வித்ரதியும், வெளியிலோ உட்புறமாகவோ உடைந்த அவ்வித வித்ரதியும், உட்புறத்தில் உடைந்து முகத்திலிருந்து இரத்தத்தை வெளிப்படுத்தும் வித்ரதியும், மிக்க மெலிந்தவனுக்கு உண்டாகும் வித்ரதியும், உபத்திரவங்களோடு கூடிய வித்ரதியும் சிகித்ஸைக்கு வசப்படாதவையாம்.—18$\frac{1}{2}$.

**ஸ்தநவித்ரதி** :—இவ்விதமே பிரஸவித்திருக்கிற அல்லது கர்ப்பிணிகளாயுள்ள ஸ்திரீகளுக்கு ஸ்தநங்களில், ஊதி விசாலித்த ஸிரைகளை ஆதாரமாகக்கொண்டு கெட்டியான வீக்கம் ஒன்று உண்டாகும். ஸ்தநம் பாலுள்ளதானாலும், பாலில்லாததானாலும் அதில் பாஹ்ய வித்ரதியின் குறிகளுக்கு ஏற்ற இலக்ஷணங்களோடு இவ்வித்ரதி உற்பத்தியாகிறது. கன்னிகைகளுடைய ஸ்தநங்களில் ஸிரைகளுடைய முகங்கள் மிகவும் நுட்பமாயிருப்பதால் அவர்களுக்கு இவ்வித்ரதி யுண்டாவதில்லை. 19—20$\frac{1}{2}$.

## வ்ருத்தி. [2]

**வ்ருத்தியின் பொது விஷயம்** :—வாயுவானது வயிற்றில் மேலே வழி தடுக்கப்பட அதனால் பிரகோபமடைந்து, வீக்கத்தையும் வலியையும் உண்டு பண்ணிக்கொண்டு அசைந்து, வங்க்ஷணம் என்கிற தொடையிடுக்கின் உட்புற வழியாய், பீஜகோசங்களுக்குள் சென்று, அங்குள்ள வித்துகளுக்குச் செல்லும் தமனிகளை அழுத்தி வருந்தச் செய்து, அக்கோசங்களில் வ்ருத்தியை யுண்டுபண்ணும். மூன்று தோஷங்களால் தனித் தனியாகவும், இரத்தத்தினாலும், மேதஸ் என்னும் கொழுப்பாலும், மூத்திரத்தினாலும், அந்த்ரம் என்னும் குடல் இறங்குவதாலும் ஆக ஏழு முகாந்தரங்களால் வ்ருத்தியென்னும் கோளாறு உண்டாகின்றது. மூத்திர வ்ருத்தியும், அந்த்ர வ்ருத்தியுங்கூட வாயுவாலேயே உண்டாகின்றன வாயினும், ஸாதாரணமான இலக்ஷணங்களைக்கொண்டு வேறு முகாந்தரங்களால் உண்டாவதாகக் கூறியது உபலக்ஷணமாகும். 21—23.

1. உத்தரஸ்தாநத்தில் விரணப்ரதிஷேதம் என்கிற அத்தியாயத்தில் 5-வது முதல் 10$\frac{1}{2}$ ச்லோகம் வரையில் விவரம் காண்க.

2. வ்ருத்தி—பீஜகோசம் என்னும் அண்டம் பருத்து அல்லது வீங்கிப் போகும் வியாதி.

வாத வ்ருத்தி :—வாத ஸம்பந்தமான வ்ருத்தியில், பீஜகோசத்தைப் பரிசிக்கும்போது காற்று நிரம்பிய துருத்தியைப் போன்றதாய் அது உணரப்பட்டு, ரூக்ஷமாகவும், திடீரென்று வலியையுண்டு பண்ணுவதாகவும் இருக்கும்.—23½.

பித்த வ்ருத்தி :—பித்த ஸம்பந்தமான வ்ருத்தியில் பீஜகோசம் கனிந்த அத்திப்பழம் போன்றிருக்கும் ; அழற்சியும் சூடும் சமைக்கப்படுவதுபோன்ற வேதனையும் அதில் இருக்கும்.—24.

கப வ்ருத்தி :—கபத்தினால் ஆன வ்ருத்தியில் பீஜகோசம் சீதளமாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், தினவுள்ளதாகவும், கடினமாகவும், சொற்ப நோவுள்ளதாகவும் இருக்கும்.—24½.

இரத்த வ்ருத்தி :—இரத்த தோஷத்தினால் ஆன வ்ருத்தியில் பீஜகோசத்தில் கருத்த கொப்புளங்களும், பித்த ஸம்பந்தமான வ்ருத்தியின் இலக்ஷணங்களும் காணும்.—25.

மேதோவ்ருத்தி :—கொழுப்பு அதிகரிப்பதால் ஆன வ்ருத்தியில் கபவ்ருத்திக் குறிகளோடு, மிருதுவாகவும், பனம்பழம் போன்றதாகவும் பீஜ கோசம் பருத்துக் காணும்.—25½.

மூத்திர வ்ருத்தி :—மூத்திரத்தை அடக்கும் வழக்கமுள்ளவருக்கு மூத்திர வ்ருத்தி யென்பது உண்டாகும் ; அதில் பீஜகோசம் நடக்கும்போது ஜலம் நிரம்பிய துருத்தியைப்போல் குலுங்கியசையும் ; மிருதுவாகவும் வலியுடன் கூடியதாகவும் இருக்கும் ; நீர்ச்சுருக்கு உண்டாகும் ; பீஜங்களின் அடிப்புறங்களில் வலயம் போன்ற குறியும் காணப்படும்.—26, 27.

அந்த்ர வ்ருத்தி :—வாத தோஷத்தைப் பிரகோபிக்கச்செய்யும் ஆஹாரம், குளிர்ந்த ஜல ஸ்நானம், வேகங்களை அடக்குவது, பலாத்காரமாய் வேகங்களை ஏவுவது, பெருஞ்சுமைகளைச் சுமப்பது, நெடுந்தூரம் வழி நடப்பது, விஷமமாக அங்கங்களை உபயோகித்து வேலை செய்வது, மற்றும் அதிர்ச்சியுண்டுபண்ணும் காரியங்கள் இவற்றால் பிரகோபமடைந்த வாயு எப்பொழுது க்ஷுத்ராந்த்ரம் என்கிற சிறுகுடலின் ஒருபாகத்தைச்சுருக்கி முறுக்குண்டுபண்ணி, அது இருக்க வேண்டிய ஸ்த்தானத்திலிருந்து கீழே செலுத்துகின்றதோ அப்பொழுது தொடையிடுக்கில் கிரந்தியைப்போன்ற வீக்கத்தை உண்டுபண்ணும். இவ்விதமான அண்ட வ்ருத்தியை ஏற்ற பரிஹாரமின்றி உபேக்ஷித்து வந்தால், வாயுவானது அவ்வவயவத்தில் விம்மலையும், வலியையும், பிடிப்பையும் உண்டுபண்ணும் ; பீஜகோசத்தை மெதுவாக அழுத்தினால் ஒருவித சப்தத்தோடு மேல் நோக்கி குடல் உட்சென்றுவிடும் ; அதை அழுத்தாமல் விட்டவுடனே பீஜ கோசத்தைப் பருக்கச்செய்து கொண்டு மறுபடியும் குடல் கீழே இறங்கிவிடும். வாத வ்ருத்திக்குத் துல்லியமான குறிகளையுடைய இந்த அந்த்ர வ்ருத்தியானது ஸாதாரண சிகித்ஸைக்கு வசப்படாத அஸாத்திய வியாதியாகும். 28—30½.

## குல்மம்.[1]

**குல்மத்தின் பொதுக்குறிகள்:**—ருக்ஷமாகவும், கரு நிறமாக அல்லது சென்னிறமாகவும் காணப்படும் நால்வலைகளைப் போன்ற ஸிரைகள் என்னும் இரத்தக் குழாய்களால் சூழப்பட்ட கிரந்தி குல்மம் என்னும் வியாதி.—31.

**குல்மங்கள் எட்டு விதம்:**—குல்மரோகம் எட்டு விதம். அவை யாவன—வாத-பித்த-கபங்களால் தனித்தனியே மூன்றுவித குல்மங்களும், த்வந்த்வ தோஷங்களால் மூன்று குல்மங்களும், ஸந்நிபாதத்தினல் ஒரு குல்மமும் ஆக ஏழு குல்மங்கள் உண்டாகின்றன; ஸ்த்ரீகளுக்கு மாதவிடாய் ஸம்பந்தமான உதிரதோஷத்தினுல் எட்டாவதான குல்மம் உற்பத்தியாகும்.—32.

**குல்ம-நிதான-ஸம்ப்ராப்தி-பூர்வ ரூபங்கள்:**—ஜ்வரம், வாந்தி, அதிஸாரம் முதலியவற்ருலும், வமநம் முதலான சிகித்ஸைகளாலும் இளைத்துப் போயிருப்பவனுக்கும், வாயுவைப் பிரகோபிக்கச் செய்யும் உணவுகளைப் புஜிப்பவனுக்கும், பசியுடன் குளிர்ந்த ஜலத்தைக் குடித்துவிட்டு உடனே அன்னத்தைச் சாப்பிடுபவனுக்கும், இலங்கநமிருப்பவனுக்கும், தேஹத்திற்கு அதிர்ச்சியுண்டு பண்ணக்கூடிய நீந்துதல் முதலிய வேலைகளைச் செய்பவனுக்கும், வாந்தியுண்டாமலிருக்கையில் பலாத்காரமாய் வாந்தியுண்டாவதற்கு முயல்பவனுக்கும், தானே வெளியாகப் போகிற அபாந வாயு முதலியவைகளை வலுவில் அடக்குபவனுக்கும், ஸ்நேஹ சிகித்ஸையையும் ஸ்வேத சிகித்ஸையையும் செய்து கொள்ளாமலே சோதநம் என்னும் வமந-விரேசநாதிகளைச் செய்து கொள்பவனுக்கும், சோதந சிகித்ஸை செய்துகொண்டபிறகு உடனே விதாஹியென்னும் குணத்தை அல்லது ஸ்யந்தநம் என்னும் குணத்தையாவது பெற்றுள்ள உணவுகளை உபயோகிப்பவனுக்கும் வாததோஷம் முக்கியமாய் மேலோங்கி நிற்க மற்றத் தோஷங்களும் தனித் தனியே பிரகோபமடைந்தோ, அல்லது இரண்டிரண்டாகப் பிரகோபித்தோ, மூன்றும் ஒருமிக்க விருத்தியடைந்தோ, இரத்தமும் இவற்றோடு பிரகோபித்துக் கோளாறடைந்தோ, மஹாஸ்ரோதஸ் என்னும் குடலை மேற்கூறிய தோஷங்கள் ஆதாரமாகப் பெற்று, கீழும் மேலும் வழிகளை மறைத்து, மேலும் கீழுமாய் ஏறியிறங்கக் கூடியதும், பரிசித்து உணரக்கூடியதும், கிரந்தியைப் போன்ற உருவமுடையதுமான குல்மம் என்கிற வியாதியை உண்டாக்குகின்றன; இந்த வியாதிக்குப் பூர்வ ரூபமாய் சூலை யென்னும் வயிற்றுவலி யுண்டாகும். 33—37½.

---

1. குல்மம் என்றால் புதர் எனப் பொருள்; பலவிதமான தோஷங்களைக் கவர்ந்துகொண்டு அநேகம் நாடி நரம்புகளால் பின்னிக்கொள்ளப்பட்ட தாதுவை ஆச்ரயித்த இவ்வியாதி ஒருவித புதர்போன்றதாயிருப்பதைக் கருதி குல்மம் என்று பெயரிடப்பட்டதென்று அறிக.

**குல்மத்தின் உற்பத்தி** :—தாதுக்கள் க்ஷீணிப்பதால் அல்லது கபம், மலம், பித்தம் இவற்றால் மார்க்கம் அடைக்கப்படுவதால்[1] வாயு பிரகோபித்து குடலுக்குள் விசேஷமாகத் தங்கி, ரூக்ஷத் தன்மை அதிகமாவதால் அவ்வாயு கெட்டியாகத் திரண்டு விடுகிறது; இவ்வாயு தனக்குற்ற இடத்தில் கோளாறடைந்தால் சுதந்திரமாகவும், இதர தோஷங்களுடைய ஸ்த்தாநங்களில் கோளாறடைந்தால் பரதந்திரமாகவும் இருந்து இவ்வியாதியை யுண்டுபண்ணும்.[2] இத்தோஷம் உருவமற்றதாயிருந்தும் ஓரிடத்தில் பிண்டம் போல் ஒருமிக்கச் சேருவதால் உருவமுடையதுபோல் குல்மம் என்று கூறப்படுமாறு பரிணமிக்கின்றது; இது வஸ்தி, நாபி, இருதயம் இவற்றிற்கு அருகிலுள்ள பாரிசங்களை ஆதாரமாகக் கொண்டு உண்டாகின்றது.[3] 38—40.

**வாத குல்மம்** :—வாததோஷத்தினால் உண்டாகும் குல்மத்தில் மந்யா என்கிற ஸ்த்தலத்திலும்[4] சிரஸ்ஸிலும் வலி, ஜ்வரம், ப்லீஹம் விருத்தியாதல், குடல் இரைத்தல், ஊசியினால் குத்தப்படுவதுபோன்ற வேதனை, மலம் இறுகிச் சேர்ந்துபோதல், அடிக்கடியும் வெகு சிரமப்பட்டு மேல் மூச்சுவிடுதல், அங்கங்கள் திமிர்த்துப்போதல், வாய் உலர்ந்துவிடுதல், உடல் இளைத்தல், ஜாடராக்னி விஷமப்படுதல்,[5] சர்மம் முதலியவை ரூக்ஷமாகவும் கருநிறமாகவும் ஆய்விடுதல் என்பவை குறிகளாம். வாயு எப்பொழுதும் சலனத்தன்மையையே இயற்கையாயுடையதால் அதனால் உண்டாகும் குல்மத்தின் உருவமும், ஸ்த்தாநமும், விருத்தியும், குறைவும், அதனாலுண்டாகக்கூடிய வலியும் நிலையற்றதாயிருக்கும்; இந்த குல்மம் எறும்புகளால் மொய்த்துக் கொள்ளப்பட்டதுபோல் துடித்துக்கொண்டு விசேஷ வலியை யுண்டுபண்ணும். 41—43.

**பித்த குல்மம்** :—பித்த தோஷத்தினால் உண்டாகும் குல்மத்தில் உடலில் அழற்சியும், புளித்த ஏப்பமும், மூர்ச்சையும், பேதியும், அதிக வியர்வையும், நாவரட்சியும், ஜ்வரமும், சர்மம் முதலியவற்றில் மஞ்சள் நிறமும் காணும்; குல்மத்தைப் பரிசித்தால் ஸஹிக்கமுடியாத வலியுண்டாகும்; குல்மம் உள்ள இடம் மிகச்

---

1. இது ஆவரண வாதத்தினால் உண்டாகும் கோளாறு எனப்படும்.
2. வாயுவுக்குக் குடலில் உற்ற இடம் பக்வாசயம்; பித்தத்திற்கு பித்தாசயம் அல்லது நாபியும், கபத்திற்கு இரைப்பை அல்லது ஆமாசயமும் உற்ற விடங்களாம். இதன் மற்ற விவரங்களை 129—ம் பக்கத்தில் பார்க்க.
3. வஸ்தியென்னும் மூத்திரப்பைக்கு நேராக வாதகுல்மமும், நாபிக்கு நேராகப் பித்தகுல்மமும், இருதயத்திற்கு அருகில் கபகுல்மமும் உண்டாகின்றன எனக் கருத்து.
4. மந்யா—331-ம் பக்கம் பார்க்க.
5. ஜாடராக்னி விஷமப்படுதல்—இதுவே விஷமாக்னி என்று கூறப்படுகிறது; 340-ம் பக்கம் பார்க்கவும்.

கூடாக இருக்கும்; அது அக்னியினால் வாட்டப்பட்டு ஜ்வாலையுடன் எரிவதுபோல வேதனை யுண்டுபண்ணும்.—44, 44½.

**கப குல்மம்** :—கப குல்மத்தில் உடல் திமிர்த்துப்போவது, அரோசகம், அக்னி மந்தப்படுவது, குளிருடன் கூடிய ஜ்வரம், பீநஸம், ஆலஸ்யம், இருதயத் துடிப்பு, இருமல், சர்மம் முதலியவை வெளுத்துப்போவது ஆக இக்குறிகள் காணும்; குல்மமானது ஆழமான பாகங்களை ஆச்ரயித்ததாய், கடினமாகவும், குருவாகவும், ஒருவாறு உணர்ச்சியற்றதாகவும், அசையாமல் ஓரிடத்திலேயே தங்கியிருக்கக்கூடியதாகவும், அதிக வேதனை யுண்டுபண்ணாததாகவும் இருக்கும்.—45, 46.

**குல்மங்களின் ஸ்த்தாநங்களும் அவை வேதனை யுண்டுபண்ணும் காலங்களும்** :—மேற்கூறிய குல்மங்களுக்குக் காரணமான தோஷங்களுடைய இயற்கை ஸ்த்தாநங்கள் எவையோ [1] அவையே அந்தந்த தோஷங்களால் உண்டாகிற குல்மங்களுக்கும் பெரும்பாலும் ஸ்த்தாநங்களாம்; மேலும் எந்தெந்த தோஷத்திற்கு எவை பிரகோப காலங்களோ [2] அவையே பெரும்பாலும் அந்தந்த தோஷங்களால் உண்டாகும் குல்மங்கள் வேதனையை அதிகமாய் உண்டுபண்ணுவதற்கும் ஏற்ற காலங்களாகும்.—46½.

**த்வந்த்வதோஷங்களாலுண்டாகும் குல்மங்கள்** :—த்வந்த்வ தோஷங்களால் உண்டாகும் குல்மங்கள் மூன்று விதம்; அவை இரண்டிரண்டு தோஷங்களாலும் தனித் தனியே காணக்கூடிய மிச்ர லக்ஷணங்களோடு கூடியவைகளாயிருக்கும்.—47.

**ஸந்நிபாத குல்மம்** :—மூன்று தோஷங்களாலும் உண்டாகிற குல்மமானது கடுமையான வலியையும், அழற்சியையும் உண்டுபண்ணுவதோடு, சீக்கிரம் வேக்காடு உண்டாகவும் செய்யும். இந்த குல்மரோகம் அஸாத்தியமாகும்.—47½.

**இரத்த குல்மம்** :—ஸ்த்ரீகளுக்கு மாத்திரமே இரத்த குல்மம் உண்டாகும். ஒரு ஸ்த்ரீ ருதுகாலத்திலாவது, பிரஸவித்திருக்கையிலாவது, யோனிரோகம் ஏதாவது நேர்ந்திருக்கையிலாவது வாததோஷத்தை விருத்தி செய்யக்கூடிய வஸ்துக்களை உபயோகித்தாளானால் அவளுக்கு வாயு பிரகோபித்து, மாதந்தோறும் யோனியிலேயே ஆர்த்தவம் என்கிற உதிரத்தைத் தடுத்து, வயிற்றில் கர்ப்ப ஸம்பந்தமான குறிகளை உண்டுபண்ணும்; மேலும் இயற்கைக்கு விரோதமான இருதயத் துடிப்பையும், கர்ப்ப காலத்திற்கு இயல்பான இச்சைகளையும், முலைப்பாற் சுரப்பையும், உடற்சோர்வு முதலிய மற்றக் குறிகளையும் இந்த குல்மம் வெளிப்படையாகக் காட்டும். வாயு அதிகமாகச் சேர்ந்துவருவதாலும், யோனியில்

1. வாதாதி தோஷங்களுடைய இயற்கை ஸ்த்தாநங்களின் விவரங்களை 129-வது பக்கத்திற் காண்க.

2. வாதாதி தோஷங்களின் பிரகோபகாலங்களின் விவரத்தைப்பற்றி 131-வது, 132-வது பக்கங்களில் விவரம் காண்க.

பித்தம் ஸம்பந்தித்திருப்பதாலும்[1] கிரமமாக அந்த இரத்தமானது அவளுக்கு வாத-பித்தங்களாலான குல்மத்தின் குறிகளை உண்டு பண்ணும்; அவையாவன :—வலி, வயிற்றில் குல்மம் அசைவற்றிருத்தல், அழற்சி, அதிஸாரம், நாவரட்சி, ஜ்வரம் இவை முதலிய உபத்திரவங்களும், கெட்டுப்போன இரத்தத்திற்கு ஆதாரமாகப் போன கருப்பையில் மிகவும் வலி, யோனியில் துர்நீர்ப்பெருக்கு, துர்நாற்றம், குத்தல், அவ்வவயவம் ஒருவாறு நழுவிப்போதல், வேதனை இவைகளேயாம். இந்த குல்மமானது அவயவங்களை அசைத்து கர்ப்பம்போல் துடிப்பதில்லை; ஆனால் இது வலியுண்டு பண்ணும்; இதுவே ஒருக்கால் பிண்டம்போலப் பருத்துவந்தால் வெகு நீடித்து ஒரு சிறிது துடிக்கும். இந்த ஸ்த்ரீயின் வயிறு வளராமல், குல்மம் மாத்திரமே வளர்ந்து வரும். 48—54½.

**குல்ம-வித்ரதிகளுக்கு பேதம்** :—எல்லாக் குல்மங்களும், அவற்றிற்குக் காரணமான தோஷத்தைமட்டும் ஆதாரமாகப் பெற்று உண்டாகின்றன; ஆகையினாலேயே அவை வெகு மெதுவாகப் பக்குவம் அடையும்; அல்லது பக்குவமாகாமலே நிற்கும். வித்ரதியோ வென்றால் குணத்தில் மிகவும் சீர்கெட்ட இரத்தத்தை ஆதாரமாகப் பெற்று உண்டாவதால் வெகு சீக்கிரத்தில் பக்குவமாய் விடும். சீக்கிரம் விதாஹத்தை அடைவதாலேயே அவ்வியாதி வித்ரதி யெனப்படுகின்றது.—55, 56½.

**பாஹ்ய-ஆந்தர குல்மங்களின் பேதம்** :—குல்மமானது உட்புற அவயவங்களை ஆச்ரயித்து உண்டானால்[2] வஸ்தியிலும், குடலுக்கு வெளிப்புறத்தில் வயிற்றிலும், இருதயத்திலும், ப்லீஹம் என்கிற மண்ணீரலிலும் வேதனையுண்டாகும்; அக்னி மாந்தியம், நிறமாறுபாடு, பலக்குறைவு இவைகளும் ஸம்பவிக்கும்; மல மூத்திராதிகளின் வேகங்கள் நன்கு பிரவ்ருத்திக்கமாட்டா. பாஹ்யம் என்னும் வெளிப்புறத்தை ஆச்ரயித்துண்டானால்[3] முற்கூறியவற்றிற்கு எதிரிடையான குறிகளைக் காணலாம்; கோஷ்டம் என்னும் அவயவங்களில் அதிக வலியுண்டாகாது; குல்மம் உண்டான இடத்தில் நிறம் மாறுபடும்; வெளியில் குல்மம் முட்டிட்டுக் கொண்டது போல் அதிகமாய் உயர்ந்து நிற்கும்.—57, 58½.

**ஆநாஹம்** :—கீழே குதமார்க்கத்திலும், மேலே கண்டமார்க்கத்திலும் வாயு வெளிப்பட முடியாமல் வயிற்றிலேயே தகையப்படுவதால், அவ்வாயு இரைத்தலையும் அதிக வலியையும்

---

1. இரத்தத்திற்கு பித்த குணங்கள் இயற்கையாக இருப்பதால், பித்தம் அவ்வவயவத்தில் ஸம்பந்தித்திருப்பதாகக் கூறப்பட்டது.

2. குடலுக்குப் புறம்பாயுள்ள வஸ்தி முதலிய அவயவங்களை ஆச்ரயித்து உண்டாகும் குல்மம் "ஆந்தர குல்மம்" அல்லது உட்புற குல்மம் எனப்படும்.

3. குடலில் உண்டாவது ப்ராஹ்ய குல்மம் அல்லது வெளிப்புற குல்மமாகும்.

உண்டுபண்ணும். அதனால் பொருமல் உண்டாம்; அதை ஆநாஹம் என்பார்கள். [1]—59½.

**அஷ்டீலாவும் பிரத்யஷ்டீலாவும்** :—(1) ஓர் உருட்சியான குழவியைப்போல கெட்டியாக மேலே உயர்ந்து வளர்ந்துள்ள கிரந்தியானது அஷ்டீலா என்று கூறப்படுகிறது; ஆநாஹத்திற்குக் கூறியுள்ள இலக்ஷணங்களும் இதில் காணும். (2) இதே குறிகளுடன் கூடிய அஷ்டீலையானது குறுக்காக நீண்டு வளர்ந்திருந்தால் பிரத்யஷ்டீலா எனப்படும்.—60½.

**தூநியும் பிரதூநியும்** :—(1) வாயுவானது பிரகோபமடைந்து, பக்வாசயத்திலிருந்து ஆரம்பித்து குதம், உபஸ்தம் இவற்றை நோக்கிக் கடுமையான வலியை யுண்டுபண்ணிக்கொண்டு அசைந்துச் செல்லுமானால் அது தூநீ என்னும் வியாதியாகும். (2) இதற்கு நேர் எதிரிடையாக வாயுவானது குதத்தில் ஆரம்பித்து மேல்நோக்கிச் சென்று வலியை யுண்டுபண்ணுமானால் அது பிரதூநீ [2] என்று கூறப்படும்.—61½.

**குல்மத்தின் பூர்வரூபங்கள்** :—அடியில் குறிப்பிடப்படும் இலக்ஷணங்கள் குல்மத்திற்குப் பூர்வரூபங்களாகும் :—அதிக ஏப்பம், மலபந்தம், எப்பொழுதும் வயிறு நிரம்பியிருப்பதுபோல் திருப்தி, உணவுகளை யேற்றுக்கொள்ள முடியாமை, குடலில் சப்தம் உண்டாதல், வயிற்றில் பலவிதமான கலவரம், வயிற்றுப் பொருமல், ஜீர்ணசக்தி யிழந்துபோதல் என்பனவாம்.—62.

---

## பன்னிரண்டாம் அத்தியாயம்.

### உதர நிதாநம்.

இனி உதர நிதாநம் [3] என்னும் அத்தியாயம் விவரித்துக் கூறப்படும் :—

**உதரரோகங்களின் போதுக் காரணங்கள்** :—ஜாடராக்னி மந்தப்பட்டால் ஸாதாரணமாய் ஸகல வியாதிகளும் உண்டாகக்கூடும்; அவற்றிலும் விசேஷமாய் உதர ரோகங்களே உண்டாகும்; அஜீர்

1. ஆநாஹம் என்பதையே ஆத்மாநம் என்றும் கூறுவர். ஆத்மாநத்திலேயே பிரத்யாத்மாநம் என்கிற மற்றொரு வகையும் ஸுச்ருதரால் கூறப்பட்டிருக்கின்றது; அதாவது :—"விலாப்பக்கங்களிலும் இருதயத்திலும் பொருமல் உண்டாகாமல், ஆமாசயம் என்னும் இரைப்பையை மாத்திரம் ஆச்ரயித்து உண்டாகும் ஆத்மாநமானது "பிரத்யாத்மாநம்" என்று வழங்கப்படும்.

2. பிரதூநீ—இதை பிரதிதூநி யென்றும் கூறுவர்.

3. வயிறுவது, வயிற்றில் அடங்கிய ப்லீஹம் முதலிய அவயவங்களாவது நோய்கொண்டு விம்மிப்பெருத்து (நீரேற்றங்கொண்டும்) உண்டாகும் வியாதிகள் உதரரோகங்களாகும்; அவற்றை விவரிக்கும் அத்தியாயம் உதரநிதாநம் எனப்படுகிறது.

ணத்தினாலும், மலினமான உணவுகளை உபயோகிப்பதாலும் பழைய மலங்கள் மேன்மேலும் சேர்ந்து விடுவதாலும் உதர ரோகங்கள் ஸம்பவிக்கும்.—1.

**உதரரோகங்களின் ஸம்ப்ராப்தி** :—வாதாதி தோஷங்கள் வயிற்றின் அடிப்புறத்திலும் மேற்புறத்திலும் மாம்ஸபேசிகளுக்கும் சர்மத்திற்கும் இடையிலுள்ள நீர்ப்பொருட்கள் ஓடுவதற்கான ஸ்ரோதஸ்ஸுக்களைத் தடுத்து, பிராணவாயு - அபாநவாயு - ஜாடராக்னி இவற்றைத் தூஷிப்பித்து, வயிற்றை ஊதிப் பருக்கச் செய்து உதரரோகத்தை உண்டுபண்ணும்.—2, 2¼.

**உதரரோகங்கள் எட்டு** :—வாத-பித்த-கபங்களால் தனித் தனியே மூன்றுவிதமான உதரரோகங்களும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், ப்லீஹம் என்னும் மண்ணீரலின் வீக்கத்தினால் ஒன்றும்,[1] மலம் முதலியவை வெளிப்பட முடியாமல் கட்டிப்போவதால் பத்தோதரம் என்று ஒன்றும், குடலில் ஏதேனும் காரணத்தினால் த்வாரம் விழுவதால் க்ஷதோதாரம் என்று ஒன்றும், வயிற்றில் நீரேற்றம் உண்டாவதால் உதகோதரம் என்று ஒன்றும் ஆக எட்டு விதமான உதரரோகங்கள் உண்டாவதுண்டு.—3.

**உதரரோகங்களின் பொதுத் தோற்றங்கள்** :—உதரரோகத்தினால் வருந்தும் மனிதர்கள் வாய் உதடுகளெல்லாம் வற்றிப்போனவர்களாகவும், வீங்கிய கால் கை வயிறுகளுடையவர்களாகவும், அசையத்திறமையற்று பலம் குன்றி உணவு ஏற்றுக்கொள்ள முடியாதவர்களாகவும், உடல் மெலிந்தவர்களாகவும், விம்மிப் பருத்துப் போன வயிற்றுடன் கூடியவர்களாகவும், சவம்போன்ற தோற்றமுள்ளவர்களாகவும் காணப்படுவார்கள்.—4, 4¼.

**உதரரோக பூர்வ ரூபங்கள்** :—உதரரோக பூர்வ ரூபங்கள் பின் வருமாறு :—பசி முற்றிலும் உண்டாகாமற் போதல், உணவு வெகு நீடித்தும் தக்த்தபாகமாகவும் பக்குவமாதல்,[2] உணவு ஜீர்ண மானதும் ஜீர்ணமாகாததும் அறிய முடியாமை, திருப்தி யுண்டாகுமாறு உண்பதைத் தாங்க முடியாமை, அடிக்கடியும் பலம் குன்றுதல், சொற்ப வேலை செய்தாலும் பெருமூச்செறிதல், மலம் மேன் மேலும் விருத்தியாதல், மலம் வெளிப்பட முடியாமற்போதல், பாதங்களில் சிறிது வீக்கம் உண்டாதல், வஸ்தியென்னும் மூத்திரப்பையின் ஸந்தியில் வலி காணுதல், எளிதில் ஜீர்ணமாகக் கூடிய போஜன பதார்த்தங்களைச் சிறிதளவு புஜித்தாலும் வஸ்தி விம்மிப்போதல், வயிற்றின்மீது ஸாதாரணமாயுள்ள மடிப்புகள் மறைந்து பருத்துப்போய் கொடி கொடியாக இரத்தக் குழாய்கள் படர்ந்து வெளிப்படையாகத் தோற்றுதல் என்பனவாம். 5—7½.

---

1. ப்லீஹோதரம் என்பதால் யக்ருதுதரமும் குறிக்கப்பட்டதாகக் கருதவேண்டும்.

2. தக்த்த பாகம்—இதன் விவரத்தைப்பற்றி 270-ம் பக்கம் பார்க்க.

உதர ரோகங்களின் பொதுக் குறிகள்:—திமிர்ப்பு, உடல் இளைத்துப்போதல், குடலில் மலம் சேர்ந்து விடுதல், ஜாடராக்னி மந்தப்படுதல், உடலில் அழற்சி அல்லது வெப்பம் அதிகரித்தல், வீக்கம், வயிறு விம்மிப்போதல், முடிவில் நீரேற்றம் உண்டாதல் என்னும் இவை எல்லா உதர ரோகங்களிலும் ஸம்பவிக்கும் ஸாதாரண இலக்ஷணங்களாகும்.—8, 8½.

உதரரோகத்தில் நீரேற்றமில்லாத நிலைமையின் குறிகள்:— நீரேற்ற முண்டாகாத எல்லா உதரரோகங்களிலும் வயிறு சிவந்த நிறமாகவும், வீக்கம் ஏற்படாமல் அதிக பாரம் பெருததாகவும், வலைபோல் பரவிய ஸிரைகள் அடர்ந்ததாகவும், எப்பொழுதும் குடகுட என்கிற சப்தத்துடன் கூடியதாகவும் இருக்கும். வாயுவானது நாபியிலும் குடலிலும் பொருமலை யுண்டுபண்ணி, வேகத்தையும் உண்டாக்கி ஒழிந்துவிடும்; மேலும் அவ்வாயு இருதயத்திலும், இடுப்பிலும், நாபியிலும், குதத்திலும், துடையிடுக்குகளிலும் வேதனையை யுண்டுபண்ணிக்கொண்டு சப்தத்துடன் வெளிப்படும். மலபந்தமும உண்டாகும்; மூத்திரமும் சொற்பமாயிறங்கும்; ஜாடராக்னி சொற்பம் குறைந்த சக்தியுடையதாயிருக்கும்; உணவு முதலியவற்றில் விசேஷ விருப்பமுண்டாகாது; வாயில் அரோசகமுண்டாம். 9—11½.

வாதோதரம்:—அவற்றுள் வாததோஷத்தினாலான உதர ரோகத்தில் கைகளிலும், பாதங்களிலும், பீஜகோசத்திலும், வயிற்றிலும் வீக்கம்; மேல் வயிறு, விலாப்பக்கங்கள், கீழ்வயிறு, இடுப்பு, முதுகு இவற்றில் வலியும், கணுக்களில் அதிக வேதனையும் உண்டாகும்; கபமில்லாத வறட்டு இருமலும், தேஹமெங்கும் நசுக்கப்படுவதுபோன்ற வலியும், கீழ் உடலில் பாரம் அதிகரித்தலும், மலச்சிக்கலும் ஸம்பவிக்கும்; சர்மம் முதலியது கருஞ்சிவப்பு அல்லது சிவப்பாக மாறும்; உதரவீக்கம் திடீரென்று அதிகரிப்பதும் குறைவதுமாயிருக்கும்; வயிற்றில் குத்தலும் பிளக்கப்படுவது போன்ற உணர்ச்சியும் உண்டாகும்; மெல்லிய கருநிறமான ஸிரைகள் வயிற்றின்மீது படர்ந்து வியாபித்திருப்பதைக் காணலாம்; வயிற்றைத் தட்டிப் பார்த்தால், காற்று நிரம்பிய துருத்தியில் உண்டாவது போன்ற சப்தம் தோன்றும்; வாயுவானது வலியையும் ஒருவித சப்தத்தையும் உண்டுபண்ணிக்கொண்டு வயிற்றில் எல்லாப் பாகத்திலும் ஓடியுலாவும். 12—15.

பித்தோதரம்:—பித்த ஸம்பந்தமான உதரரோகத்தில் ஜ்வரம், மூர்ச்சை, உடலில் அழற்சி, நாவரட்சி, வாயில் ஒருவித காரமான உணர்ச்சி, தலைச்சுற்றல், அதிஸாரம், சர்மம் முதலியவை மஞ்சள் நிறமாகப் போதல் இவை உண்டாம்; மேலும் வயிறு பசுமை நிறமாகவும், மஞ்சள் அல்லது சிவந்த ஸிரைகளால் பரவப்பட்டதாகவும் காணப்படும்; வியர்வை அதிகரிக்கும்; சூட்டினால் எரிக்கப்

படுவதுபோல் தோன்றும்; வெப்பம் விசேஷித்துக் காணும்; உதரமானது பரிசிப்பதற்கு மிருதுவாகவும், சீக்கிரம் முதிர்ந்து பக்குவமடைவதாகவும் இருந்து மிகத் துன்பமுண்டாக்கும்.—16, 17.

கபோதரம் :—கபப் பிரகோபத்தினலான உதரரோகத்தில் உடல் இளைக்கும்; எவ்வித உணர்ச்சியும் குறையும்; வீக்கமும் உடல்பாரமும் அதிகரிக்கும்; நித்திரை அதிகமுண்டாகும்; குமட்டலுடன் வாயில் நீர் ஊறும்; அரோசகம் உண்டாகும்; ச்வாஸமும், காஸமும், சர்மம் முதலியதில் வெண்மை நிறமும் ஏற்படும்; வயிறு ஸ்திமிதப்பட்டு, மழமழப்பாய், வெண்மையான ஸிரைகளால் வியாபிக்கப்பட்டதாய், மிகப் பெரிதாகக் காணும்; இவ்வுதர ரோகம் மிக மெள்ள மெள்ள விருத்தியாகும்; கடினமாகவும், பரிசிக்கையில் குளிர்ந்ததாகவும், குருவாகவும், அசைவற்றதாகவும் காணப்படும்.—18, 19.

ஸந்நிபாதோதரம் :—மூன்று தோஷங்களையும் பிரகோபிக்கச் செய்யும் அந்தந்த காரணங்களாலும், ஸ்த்ரீகளால் இடப்படும் அவர்களது இரஜஸ்[1] முதலிய மலபதார்த்தங்களாலும், க்ருத்ரிம விஷங்களாலும், தூஷீவிஷம்[2] முதலியவற்றாலும் மூன்று தோஷங்களும் இரத்தமும் பிரகோபமடைந்து, கோஷ்டத்தில் பிரவேசித்து முற்றிலும் கோளாறடைந்து, தாது க்ஷயம்-மூர்ச்சை-தலைச்சுற்றல் இவற்றுடன்கூடிய மூன்று தோஷங்களுடைய இலக்ஷணங்களையும் பெற்ற உதர ரோகம் துரிதமாய் விருத்தியடைந்து பக்குவமாகும்; இது மிகக் கடுந்துன்பம் விளைவிக்கும்; இது சீதகாலங்களிலும், வாயு விசேஷமாய் வீசுகையிலும், மேகத்தினல் ஆகாயம் மூடப்படுகையிலும் அதிக கஷ்டமுண்டுபண்ணும். 20—21½.

ப்லீஹோதரம் :—மிதமிஞ்சி உணவுகளைப் புஜித்து, அடித்தாற்போல நடந்தோடியும், வாஹநமேறி சவாரி செய்தும், மற்றும் பல வகையான காரியங்களைச் செய்தும் அதிர்ச்சியுண்டாவதாலும், அதிக புணர்ச்சியினாலும், அதிகமாய் வழி நடப்பதாலும், அளவு மீறிய வமநத்தினாலும், வியாதியினால் தேஹம் கிருசமாகப் போவதாலும் வயிற்றினுள் இடது பக்கத்திலுள்ள ப்லீஹம் என்னும் மண்ணீரல் பருத்து அதன் ஸ்த்தாநத்தை விட்டு விலகியதுபோல் வீங்கியிருக்கும்; அல்லது இரஸாதி தாதுக்களால் விருத்தியான இரத்தமும் அதைப் பருக்கச் செய்யும். அந்த ப்லீஹமானது முதலில் அஷ்டீலையைப்போல[3] மிகவும் கடினமாயிருந்து, பிறகு

1. இரஜஸ்—4-ம் பக்கம டிடிபணியில் ஆர்த்தவம் என்பதைப் பார்க்க.

2. தூஷீவிஷம்—தேச விசேஷத்தினாலும், கால மஹிமையினாலும், உணவுகளின் தன்மையினாலும், பகலில் நித்திரை செய்வதாலும் தேஹத்தில் பற்றிய விஷம் வீர்யாதிகளில் மாறுபட்டுக் கெடுதியைத் தரும் நிலைமையைப் பெற்றால் தூஷீவிஷம் எனப்படுகிறது. இது வீர்ய மிழந்த விஷம்.

1. அஷ்டீலா—இதன் விவரத்தைப்பற்றி இதற்கு முன்னுள்ள அத்தியாயத்தில் 60½ ச்லோக மொழி பெயர்ப்பைப் பார்க்க.

ஆமை முதுகைப்போல் கிரமமாக வளர்ந்து உதரரோகத்தை உண்டுபண்ணும். ச்வாஸம், காஸம், நாவரட்சி, வாயில் அரோசகம், வயிற்றுப்பொருமல், வலி, ஜ்வரம் இவைகள் காணும், சர்மம் வெளுத்துப்போகும்; வாந்தியும், மூர்ச்சையும், வேதனையும், அழற்சியும், மதிமயக்கமும் உண்டாகும்; வயிறு சிவப்பாக அல்லது வேறுவித நிறமாறுபாட்டுடன் கூடியதாகவும், கருப்பு அல்லது மஞ்சள் நிறமான ஸிரைகள் பரவியதாகவும் காணப்படும். இந்த ப்லீஹோதரத்தில் உதாவர்த்தம், வலி, வயிற்றுப்பொருமல் இக்குறிகள் இருந்தால் அது வாதப்பிரகோபத்தினால் உண்டானதென்றும்; மூர்ச்சை, நாவரட்சி, அதிற்சி, ஜ்வரம் இவை இருந்தால் பித்தப் பிரகோபத்தினால் உண்டானதென்றும், பாரம், அரோசகம், கடினத்தன்மை இவை இருந்தால் கபப்பிரகோபத்தினால் உண்டானதென்றும் அறிக. 22—27.

**யக்ருதுதரம்** :—வலது புறத்தில் யக்ருத்து ப்லீஹத்தைப் போலவே வீங்கி, தன் ஸ்தானத்தை விட்டு மற்ற விடங்களிலும் பரவினால், அது யக்ருதுதரம்[1] எனப்படும்.—27½.

**பத்தகுதோதரம்** :—உணவுடன் கூடத் தெரியாமல உட்கொள்ளப்படும் இறகுகள், மயிர்கள், குதத்தில் உண்டாகும் மூல மூளைகள், உதாவர்த்த வியாதி, குடலுக்குச் சுளைவைத் தரக்கூடிய மற்று முள்ள வஸ்துக்கள் முதலியவற்றால் குதமார்க்கம் அடைபட்டுப் போய் அபானவாயு பிரகோபமடைந்து, மலத்தையும் பித்தத்தையும், கபத்தையும் தடை செய்து உதர ரோகத்தை யுண்டுபண்ணும்; அதனால் தேஹத்தில் எரித்தலும், ஜ்வரமும், நாவரட்சியும், தும்மலும், காஸ ச்வாஸங்களும், துடைகள் மெலிந்துபோதலும் ஸம்பவிக்கும்; மேலும் சிரஸ்ஸிலும் இருதயத்திலும், நாபியிலும், குதத்திலும் வலியுண்டாகும்; மலபந்தம், அரோசகம், வாந்தி இவையும் காணும்; வயிற்றில் வாயு வெளிப்படாமல் அடைந்திருக்கும்; அது அசைவற்றதாகவும், கருப்பு அல்லது சிவப்பான ஸிரைகளால் பரவப்பட்டதாகவும், அல்லது அவ்வித ஸிரைகள் காணப்படாததாகவும் இருக்கும்; நாபியின் மேற்புறமானது பெரும்பாலும் கோபுச்சம் போன்றதாய்விடும்.[2] 28—31½.

**சித்ரோதரம்** :—உணவுகளோடுகூட எலும்பு முதலிய சல்யங்கள் குடலில் பிரவேசிப்பதாலாவது, மிதமிஞ்சிய உணவுகளை உண்பதினாலாவது குடலில் த்வாரம் விழுந்துவிட, அது அக்னியினால் சமைக்கப்படுவதுபோன்ற வலியை யுண்டுபண்ணும்; அந்த த்வா

---

1. யக்ருதுதரம்—கல்லீரல் வீங்கிப்போகும் வியாதி; இதற்கே யக்ருத்தாலீ யென்றும் பெயர்; இதையே **கல்மாந்தம்** என்றும், **மாந்தக்கட்டி** யென்றும் தமிழில் கூறுவர்.

2. பத்தகுதோதரம்—ஆஸனத்வாரம் அடைபட்டு ஸம்பவிப்பதால் இப் பெயர் வந்தது; இதையே **பத்தோதரம்** என்றும் கூறுவர்.

ரங்களின் வழியாய் மலத்துடன் கூடிய அன்னரஸம் குடலுக்கு வெளியிற் பொசிந்துபோம்; சிறுகச் சிறுக அந்த இரஸம் குதத்தின் மூலமாகவும் வெளியாகும்; அந்த இரஸம் சவர் நாற்றமுடையதாய், பிசுபிசுப்புடன் கூடிய மஞ்சளும் சிவப்புங் கலந்த நிறமுடைய திரவமாயிருக்கும்; இவ்வாறு குதத்தினால் வெளிவருவதுபோக மிச்சமுள்ள திரவம் குடலுக்கு வெளியில் வயிற்றிலுள்ள இடங்களை நிரப்பி கொடிய உதரரோகமுண்டுபண்ணும்; அந்த இரஸம் நாபியின் அடிப்புறத்தைப் பருக்கச் செய்து, சீக்கிரம் நீருதரவத்தை அடைகின்றது. கிரமமாக வாத பித்த கபக் குறிகள் மிக அதிகரிக்கும்; ச்வாஸம்-நாவரட்சி-தலைச்சுற்றல் இவைகளும் ஏற்படும். இந்த வியாதியைச் சித்ரோதரம்[1] என்று கூறுவர்; இதையே பரிஸ்ராவ்யுதரம்[2] என்பார்கள். 32—35½.

உதகோதரம்:—ஸ்நேஹபாநம் முதலிய சிகித்ஸைகளைச் செய்து வருகையில் திடீரென்று அபக்குவமான ஜலத்தைக் குடிப்பவனுக்கும், அதிக தண்ணீரை அருந்துபவனுக்கும், அக்னிமாந்தியமுள்ளவருக்கும், தாதுக்கள் க்ஷீணமடைந்தவனுக்கும், மிகவும் தேஹம் மெலிந்து போனவனுக்கும் நீருருவமான தாதுக்களுடன் ஒன்றுகக் கலந்துபோன வாயுவும் கபமும் தேஹத்தில் நீரோட்டத்திற்கு அவசியமான மார்க்கங்களை அடைத்து விட்டு, அவ்விரண்டும் உதரத்திலேயே சுழலமிட்டுக்கொண்டு, அந்த நீர்ப்பொருளையே அதன் ஸ்த்தாநத்திலிருந்து அதிகமாய் விருத்தி செய்கின்றன; இதனால் வயிறு பருத்து வீங்கிப்போய் உதரரோகம் ஸம்பவிக்கும்; இவ்வியாதியுண்டானதும் நாவரட்சி, குதம் நழுவுதல், அவ்விடத்தில் வலியதிகரித்தல், காஸம், ச்வாஸம், அரோசகம் இவைகள் தோன்றும்; வயிற்றின்மேல் அநேக நிறமான ஸிரைகள் படர்ந்து காணும்; பரிசிப்பதாலும் சப்திப்பதாலும் வயிறு ஜலம் நிரம்பிய துருத்தியைப்போல் தோன்றும்; குலுங்கி அசைந்து நடுங்கும்; மேலும் அதிக பெரிதாகவும், ஸ்நிக்த்தமாகவும், நன்குகப் பருத்து முன்னுக்குவந்த நாபியுடன் கூடியதாகவும் இருக்கும். இது தகோதரம்[3] என்று வழங்கப்படும். 36—39½.

உபேக்ஷிக்கப்பட்ட உதரரோகங்களில் காணும் நிலைமை:— எல்லா உதர ரோகங்களும் சிகித்ஸை செய்யாமல் உபேக்ஷிக்கப்பட்டால், தோஷங்கள் அவற்றின் ஸ்த்தாநங்களிலிருந்து நழுவி வெளிப்பட்டு, ஒருவாறு பக்குவமடைந்து தீராத்தன்மையைப்

---

1. சித்ரோதரம்—குடலில் சித்ரம் (த்வாரம்) விழுவதால் உண்டாகும் உதரரோகம்.

2. பரிஸ்ராவ்யுதரம்—பரிஸ்ராவி என்றால் பொசிவது எனப் பொருள்; இரஸம் அல்லது நீர்ப்பொருள் குடலிலிருந்து வெளியிற் பொசிவதால் சித்ரோதரமே பரிஸ்ராவ்யுதரம் என்றும் கூறப்படுகிறது.

3. தகோதரம்—நீர் சேர்ந்த வயிறு; இதற்கே உதகோதரம், ஜலோதரம், மஹோதரம், நீர்க்கோவை யென்றும் பெயர்கள் உண்டு.

பெற்று, ஸந்திகளேயும், ஸ்ரோதஸ்ஸுகளின் முகங்களேயும், திரவமாகச் செய்து, இவையனைத்தும் சேர்ந்து, வியர்வைநீரும் கூடி தேஹத்து வெளிபுறத்து ஸ்ரோதஸ்ஸுகளை அடைத்து குறுக்காகத் தங்கி நின்று, முன் உதகோதரத்தில் விருத்தியான நீரையே விருத்திசெய்து பிச்சையை [1] உண்டுபண்ணும்; அப்பொழுது வயிறு குருவாகவும், அசைவற்றதாகவும், வட்டமாகவும், அடித்தால் சப்தமுண்டாகாததாகவும், மிருதுவாகவும், கொடிகள் போன்ற ஸிரைகள் மறைந்ததாகவும் காணப்படும்; நாபியில் பரிசித்தால் நாற்புறமும் நீர் அல்லது வீக்கம் பரவி அசையும்; அப்பால் இவ்வுதரத்தில் நீர் சுரக்க ஆரம்பிக்கும்; பிறகு வயிறும் அதிகமாகப் பருத்துவரும்; ஸிரைகள் எல்லாம் மறைந்துவிடும்; பிறகு உதகோதரத்திற் கூறிய குறிகளும் காணப்படும். 40—43½.

உதரத்தில் ஸாத்தியா ஸாத்திய நிலைமைகள்:—வாதோதரம், பித்தோதரம், கபோதரம், ப்லீஹோதரம், ஸந்நிபாதோதரம், உதகோதரம், இவற்றில் ஒவ்வொன்றும் மேன்மேலும் கிருச்சிர ஸாத்தியங்களாகும். மற்ற இரண்டும் ஒரு பக்ஷத்திற்குப் பிறகு பெரும்பாலும் ஆபத்தை விளைவிக்கும்; அப்பொழுது வயிற்றில் நீர் சேர்ந்து, ரிஷ்டப் பிரகரணத்திற் கூறிய [2] உபத்திரவங்களோடு கூடியிருந்தால் அப்பிணியாளி இறப்பான்.—44, 45.

உதரரோகம் எல்லாம் கஷ்ட ஸாத்தியம்:—உதரரோகம் அனைத்துமே பெரும்பாலும் மிகவும் கஷ்டஸாத்தியம் என்றே கருதப்படுகிறது; நல்ல பலசாலியா யிருந்தாலும், நீர் வயிற்றில் சேராமலிருந்தாலும், உதரம் புதிதா யுண்டானதாயிருந்தாலும், தகுந்த முயற்சியோடு சிகித்ஸை செய்தால் வியாதி நிவ்ருத்தியாகக் கூடும்.—46.

---

## பதின்மூன்றும் அத்தியாயம்.

### பாண்டுரோக-சோப-விஸர்ப்ப நிதானம்.

இனி பாண்டுரோக-சோப-விஸர்ப்ப நிதானம் [3] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படும்:—

### பாண்டுரோகம்.

பாண்டுரோக ஸம்ப்ராப்தி:—பாண்டுரோகத்தில் பித்தத்தைப் பிரதானமாகப் பெற்ற தோஷங்கள் அவற்றின் பிரகோபத்திற்கு

1. பிச்சை—ஒருவித பிணநீரைப் போன்ற துர்நீர்.
2. ரிஷ்டப் பிரகரணம்—சாரீரஸ்தானத்தில் விக்ருதி விஞ்ஞானீய அத்தியாயம். 368-ம் பக்கம் மஹோதரத்தின் ரிஷ்ட விவரம் பார்க்க.
3. பாண்டு—தேஹம் வெளிறி அல்லது பசுமை நிறங்கொள்ளும் பித்தப்பிரதானமான வியாதி. சோபம்—சோகை யென்னும் வீக்கம். விஸர்ப்பம்—ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குப் பாவும் ஒருவித சர்ம தோஷம். இம்மூன்றுக்கும் விசேஷ ஸம்பந்தம் உண்டென்று இவை ஒரே அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன.

ஆதாரமாகக் கூறப்பட்டுள்ள ஹேதுக்களால் விருத்தியடையும்; அவற்றுள் நல்ல வலிவு பெற்ற வாயுவினால் இருதயத்திலுள்ள பித்தமானது பலமாகத் தள்ளப்பட, அது மூலதமநிகள் என்னும் பத்து இரத்தக் குழாய்களில் பிரவேசித்து, அங்கிருந்து உடலெங்கும் வியாபித்து, கபம் - சர்மம் - இரத்தம் - மாம்ஸம் இவற்றைத் தூஷிப்பித்து, சர்மத்திற்கும் மாம்ஸத்திற்கும் இடையில் தங்கி, சர்மத்தில் வெண்மை, மஞ்சள், பசுமை ஆகிய நிறங்களை யுண்டுபண்ணும்; அவற்றுள் ‘பாண்டு’ என்னும் வெண்மையே அதிகமாயிருக்குமாகையால், இது பாண்டுரோகம் எனப் படுகிறது. 1—3¾.

பாண்டுரோகத்தின் பொதுக் குறிகள்:—அந்த ரோகத்தினால் தேஹத்தில் முதலில் பாரம் அதிகரிக்கும்; தாதுக்கள் சிதிலமாகப் போகும்; ஓஜஸ்ஸின் குணங்கள் சீரழியும்; அப்பால் இரத்தம் மேதஸ் இவை குறையும்; தேஹம் பாரமற்றதாகும்; இந்திரியங்கள் உணர்ச்சி யிழந்துவிடும்; கண்களின் சுற்றுப்புறங்கள் வீக்கங்கொள்ளும்; உடல் இளைக்கும்; கோபம் அதிகரிக்கும்; நாசியிலிருந்து அடிக்கடியும் சளி ஒழுகிச் சிந்தவேண்டியிருக்கும்; சொற்பமாகப் பேசுவான்; அன்ன த்வேஷமுண்டாகும்; குளிர்ச்சியானவற்றை வெறுப்பான்; மயிர்கள் உதிரும்; ஜாடராக்னி அழியும்; துடைகள் இளைக்கும்; ஜ்வரமும், ச்வாஸமும், காதிரைத்தலும், தலைச்சுற்றலும், சோர்வும் உண்டாம். 4—6½.

பாண்டு ஐந்து விதம்:—அப்பாண்டு ரோகம் வாத பித்த கபங்களால் தனித் தனியே ஒவ்வொரு விதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், மண்ணை உண்பதால் ஒன்றும் ஆக ஐந்துவிதமாகும்.—7.

பாண்டுவின் பூர்வரூபங்கள்:—இருதயம் அதிக மாகத் துடித்தல், சர்மம் ரூக்ஷமாதல், அரோசகம், மஞ்சள் நிற மூத்திரம், வியர்வையின்மை, அக்னிமாந்தியம், தேஹ இளைப்பு, உடற் சோர்வு இவை பாண்டுரோகத்தின் பூர்வரூபக் குறிகள்.—8¼.

பாண்டு லக்ஷணம்:—(1) அவற்றுள் வாததோஷம் பிரகோபித்து உண்டாகும் பாண்டுவில் தேஹமெங்கும் வலி, குத்தல், நடுக்கம், ஸிரைகளும் நகங்களும் மல மூத்திரங்களும் கருப்பாகவும் ரூக்ஷமாகவும் சிவப்பாகவும் மாறுதல், வீக்கம், வயிற்றுப் பொருமல், வாயில் அரோசகம், மலம் சுஷ்கித்துப் போதல், பக்கசூலை, தலைவலி இக் குறிகள் காணும். (2) பித்தம் பிரகோபித்த பாண்டுவில் ஸிரை முதலியவை இலைப் பசுமை அல்லது மஞ்சள் நிறமாகப் போதல், ஜ்வரம், கண்கள் இருளடைதல், நாவரட்சி, வியர்வை அதிகமாதல், மூர்ச்சை, குளிர்ச்சியில் விருப்பம், துர்நாற்றம், வாயில் ஒருவித கடுஞ்சுவை, மலம் உடைந்து திரவமாதல், புளியேப்பம், அழற்சி இக்குறிகள் காணப்படும். (3) கபப் பிரகோபத்தினால் உண்டாகும் பாண்டு ரோகத்தில் ஸிரை முதலியவை வெண்மையாதல், சோம்பல், வாய் இலவணரஸமடைதல், மயிர்சிலிர்க்கை,

தொண்டைக் கம்மல், காஸம், வாந்தி இக்குறிகள் தோன்றும் (4) மூன்று தோஷங்களும் பிரகோபித்து உண்டாகும் ஸந்நிபாத பாண்டுவில் எல்லாத் தோஷங்களுடையவும் குறிகள் கலந்து காணும்; வியாதியும் மிகவும் தாங்கக்கூடாத கஷ்டங்களை யுண்டுபண்ணும். (5) ம்ருத்திகா பாண்டுவில் துவர்ப்பான மண் வாதத்தையும், உழ மண் பித்தத்தையும், இனிய சுவையுள்ள மண் கபத்தையும் தூஷிக்கச் செய்து, இரஸாதி தாதுக்களையும் கெடுத்து, புஜித்த உணவையும் ரூக்ஷமாகச் செய்து, அந்த மிருத்திகை பக்குவமாகாமலே ஸ்ரோதஸ்ஸுகளையும் நிரப்பி அவற்றைத் தடுத்து, முன்போல் பாண்டு ரோகத்தை யுண்டுபண்ணும்; அதனால் நாபியும், பாதங்களும், முகமும், ஆண்குறியும் வீக்கங்கொள்ளும்; மலம் கிருமிகளோடும், இரத்தங்கலந்தும், உடைந்து திரவமாகவும் வெளியாகும்; அவ்வாறே கபமும் வெளிப்படும். 9—14½.

## காமாலை.[1]

காமாலை :—பித்தத்தை விருத்தி செய்யும் வஸ்துக்களை உபயோகிக்கும் பாண்டு ரோகிக்குக் கோஷ்டத்திலும் சாகைகளிலும் உள்ள பித்தம் இரத்தத்தையும் மாம்ஸத்தையும் காந்தச் செய்து, காமாலையை உண்டுபண்ணும்; அதனால் கண்களும், நகங்களும், முகமும், சர்மமும், மல மூத்திரங்களும் மஞ்சள் நிறமாக மாறும்; தேஹத்தில் அழற்சியும், ஜீர்ணக் குறைவும், நாவரட்சியும் உண்டாம். இந்த்ரியங்களுக்குரிய சக்தி குறையும; தவளையைப் போன்ற நிறமும் உண்டாகும். பித்தம் அதிகரித்தவனுக்கு இவ்வியாதி பாண்டு ரோகமின்றியும் உண்டாகலாம். 15—17.

கும்பகாமலா :—காமாலைக்கு ஏற்ற சிகித்ஸையை உற்ற காலத்தில் செய்யாவிட்டால், வீக்கம் அதிகமா யேற்பட்டு கும்பகாமலா[2] யென்னும் கஷ்ட ஸாத்தியமான வியாதி ஸம்பவிக்கும்.—17½.

ஹலீமகம் :—பாண்டு ரோகத்தில் வாத பித்தங்களின் மேம்பாட்டினால் எப்பொழுது பசுமையும் கருநிறமும் மஞ்சள் நிறமும் உண்டாகின்றனவோ, தலைச்சுற்றல், நாவரட்சி, ஸ்த்ரீகளிடத்தில் விருப்பமின்மை, மந்தஜ்வரம், சோம்பல், பலக்குறைவு, ஜடராக்னி மந்தப்படுதல் இவையும் ஏற்படுகின்றனவோ, அப்பொழுது ஹலீமகம் என்கிற வியாதி உண்டானதாய் அறிக; அதையே லோடரம் என்றும், அலஸம் என்றும் கூறுவர்.—18, 19¼.

## சோபம்.[3]

சோபையும் அதன் ஸம்ப்ராப்தியும்:—முற்கூறிய பாண்டுரோகம் முதலியவற்றிற்கு முதலில் சோபையே உபத்திரவங்களில் முக்கிய

1. காமாலை—இதை ஸம்ஸ்கிருதத்தில் காமலா என்பார்கள்.
2. முகம் முதலியது வீங்குவதால் கும்பகாமலா எனப்படும்.
3. சோபம்—வீக்கம்; இதுவே சோபை யெனப்படுகிறது.

மாய் உண்டாவதாகக் கூறப்படுவதால், அந்த சோபையே இதன் பிறகு விவரித்துக் கூறப்படுகிறது. கோளாறடைந்த வாயுவானது கோளாறடைந்த பித்தத்தையும் இரத்தத்தையும் கபத்தையும் ஸிரைகளுக்கு வெளிப்புறமாகப் பரப்பும; அவற்றால் வாயு மார்க்கம் தடை செய்யப்பட்டுப்போக, சர்மத்தையும் மாம்ஸ பேசிகளையும் ஆச்ரயித்த பருத்த வீக்கம் உண்டாகும்; ஆகவே இதை ஸந்நி பாதத்தினால் உண்டாகும் வியாதியென்பர்.—21, 21½.

**சோபையின் பேதங்கள் :**—அந்தந்த காரணபேதங்களால் இவ் வியாதியில் ரூபபேதங்கள் உண்டாக இது ஒன்பது விதமாகப் பிரிக் கப்படுகிறது :—(1) வாத-பித்த-கபங்களால் தனித்தனியே மூன்று வித சோபைகளும், இரட்டை தோஷங்களால் மூன்றும், ஸந்நிபா தத்தினால் ஒன்றும், அபிகாதத்தினால் ஒன்றும், விஷஸம்பந்தத் தினால் ஒன்றும் ஆக ஒன்பது வகைகளாம். (2) நிஜசோபையென் றும், ஆகந்துக சோபை யென்றும் அதைத்தையும் இரண்டுவிதமாக வாவது பிரிக்கலாம். (3) அல்லது ஸர்வாங்க சோபையென்றும், ஏகாங்க சோபையென்றும் வேறு இரண்டு பிரிவுகளாகவும் பிரிக்க லாம். (4) பெரிய சோபை, உன்னத சோபை, கிரந்திரூபமான சோபையென்று மூன்று விதமாகவும் பிரிக்கலாம்.—22, 23½.

**சோபைகளின் காரணங்கள் :**—எல்லாவிதமான சோபைகளுக் கும் அடியிற்கூறப்படும் குரு அம்லாதி வர்க்கம் ஸாமாந்ய ஹேது வாகும். தோஷங்களால் உண்டாகும் சோபைக்கோ விசேஷ ஹேதுக்கள் உண்டு :—வியாதிகளாலும், வமந விரேசநாதி சிகித் ஸைகளாலும், உபவாஸம் முதலியவற்றாலும் இளைத்திருப்பவனுக் கும், வெகு வேகமாய் போஜனம செய்பவனுக்கும் சோபையுண்டா கும்; குருவாகவும், அமல ரஸமுள்ளதாகவும், ஸ்நிக்த்தமாகவும், சீதளமாகவும், இலவண ரஸமுடையதாகவும், க்ஷாரகுணமுள்ள தாகவும், தீக்ஷ்ணமாகவும், உஷ்ணமாகவும் இருக்கிற காய்கறிகளை யும் ஜலத்தையும் அமிதமாய் உட்கொள்பவனுக்கும், அதிகமாய் நித்திரை செய்பவனுக்கும், இரவில் விசேஷமாய் கண் விழிப்பவ னுக்கும், மண்-கிராம்ய மாம்ஸம்,[1] உலர்ந்துபோன இறைச்சி இவற் றைத் தின்பவனுக்கும், அஜீர்ண முள்ளவனுக்கும், விசேஷமாய் சிரமப்பட்டவனுக்கும், அதிக புணர்ச்சியுடையவனுக்கும், கால் களால் எப்பொழுதும் நடப்பவனுக்கும், வாஹநத்தில் ஏறி வெகு தூரம் சவாரி செய்பவனுக்கும் சோபை யுண்டாகலாம்; ச்வாஸம், காஸம், அதிஸாரம், அர்சஸ், உதரரோகம், பிரதரம் முதலிய ஸ்த்ரீ ரோகம், ஜ்வரம், விஷூசி, அலஸகம், வாந்தி, கர்ப்பம் தரித்தல், விஸர்ப்பம், பாண்டு இவற்றாலும் சோபை உண்டாம்; இதர ரோகங்

1. கிராம்ய மாம்ஸம்—ஸாதாரணமாய் கிராமங்களில் கிடைக்கும் மாம்ஸம்; காடை, கோழி, குருவி முதலியவைகளின் மாம்ஸம் கிராம்ய மாம் ஸம் எனப்படுகின்றன. அற்பச் சத்துள்ள எளிய மாம்ஸங்கள் எனக் கருத்து.

களுக்கும் முறைதவருன சிகித்ஸை செய்வதால், தோஷங்கள் மார்பினுள் தங்கி உடலின் மேற்புறத்திலும், வஸ்தியில் அல்லது அதற்குக் கீழே தங்கி நாபிக்குக் கீழ்ப்புறத்திலும், நாபிக்கு மேலேயும், மார்புக்குக் கீழே தங்கி உடலின் மத்தியபாகத்திலும் சோபையை யுண்டுபண்ணும்; அத்தோஷங்கள் தேஹமெங்கும் பரவினல் ஸர்வாங்க சோபை யுண்டாகும். 24—29.

சோபையின் பூர்வ ரூபம்:—சோபைக்கு நேத்திரம் முதலியதில் அதிக அழற்சியும், ஸிரைகளில் இசிவும், தேஹத்தில் அதிக பாரமும் பூர்வ ரூபங்களாகும்.—29½.

வாத சோபை :—வாதத்தினுலுண்டாகும் சோபை சஞ்சலமாகவும், ரூக்ஷமாகவும், உரோமங்களை விறைக்கச்செய்வதாகவும், சிவப்பும் வெண்மையும் கலந்த நிறத்துடன் கூடியதாகவும் இருக்கும்; சில ஸமயம் வீக்கம் சுருங்கித் துடிக்கும்; மயிர்ச் சிலிர்க்கையுண்டாம்; வலியுண்டாகும்; குத்தலும் பிளக்கப்படுவது போன்ற உணர்ச்சியும் திமிர்ப்பும் காணும்; வீக்கம் துரிதமாய் உண்டாய் துரிதமாகவே அடங்குவதும் உண்டு; வீக்கத்தை அழுத்தினல் அவ்விடத்தில் பள்ளம் விழுந்து மீண்டும் உடனே உயர்ந்து ஸமநிலைமையைப் பெறும்; வீக்கம் வெகு கனமாயிராது; ஸ்நிக்த்தமாகவும் உஷ்ணமாகவும் உள்ள வஸ்துக்களையிட்டுத் தேய்ப்பதால் சோபை நிவாரணமாகும்; சோபை இரவில் குறையும்; பகலில் அதிகரிக்கும்; சோபை யுண்டாயிருக்கையில் சர்மத்தில் கடுகை அரைத்துப் பூசினுற்போல் ஒருவித அரிப்பு உண்டாம். 30—32.

பித்த சோபை :—பித்தத்தினுல் உண்டாகும் சோபையானது மஞ்சள் நிறமாகவோ, செந்நிறமாகவோ, கருநிறமாகவே, இருக்கும்; உரோமங்கள் சிறிது செந்நிறமாகும்; சோபை சீக்கிரம் உடம்பில் பரவி குறையும்; தேஹத்தின் மத்தியில் முதலில் இவ்வீக்கம் மெல்லியதாய் உண்டாகும்; இதில் நாவரட்சி, அழற்சி, ஜ்வரம், அதிக வியர்வை, துர்நீர்க்கசிவு, வெறி, தலைச்சுற்றல், குளிர்ச்சியில் விருப்பம் இவை ஏற்படும்; மலம் உடைந்து வெளிப்படும்; ஒருவித துர்நாற்றமும் கடுமையான வலியும், மிருதுவாகவும் உள்ள வீக்கம் காணும்.—33, 34.

கப சோபை :—கபத்தினுல் உண்டாகும் சோபையானது கினவுள்ளதாயிருக்கும்; உரோமங்களும் சர்மமும் வெண்மையாகும்; சோபை கடினமாகவும், சீதளமாகவும், குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், வழவழப்பாகவும், அசைவற்றதாகவும், திரண்டு வளர்ந்ததாகவும் இருக்கும்; நித்திரையும், வாந்தியும் அக்னி மாந்தியமும் உண்டாம்; அழுத்தினுல் பள்ளம் விழுந்து அப்பள்ளம் மீண்டும் மறைவதற்கு வெகுநேரம் ஆகும்; இது உற்பத்தியாவதும் நிவ்ருத்தியாவதும் வெகு தாமதிக்கும்; இரவில் அதிகரிக்கும்; தர்ப்பமுனை, சஸ்திரங்கள் முதலியவற்ருல் குத்தப் படுமாகுல் இரத்தம்

வராமல், நேரம் சென்று ஒருவித தூர்நீர் கசியும்; உஷ்ணமான பரிசத்தை இவ்வீக்கம் அபேக்ஷிக்கும்.—35, 36½.

ஸம்ஸர்க்க ஸந்நிபாத சோபைகள் :—த்வந்த்வ தோஷங்களால் உண்டாகும் மூன்று விதமான சோபைகளிலும் இரண்டிரண்டு தோஷங்களின் குறிகள் கலந்து காணும்; ஸந்நிபாத சோபையில் மூன்று தோஷங்களுடைய குறிகளும் ஒருமிக்க உண்டாகும்.—37.

அபிகாதஜ சோபை :—சஸ்திரம் முதலியவற்றால் அறுபட்டுப் போவது, பிளவுபடுவது, மற்றும் காயம்படுவது முதலியவைகளாலும், பனிக்காற்றாலும், கடற்காற்றாலும், சேராங்கொட்டையின் சாறு-காஞ்சோறியின் சுணை இவை தாக்குவதாலும் விஸர்ப்பத்துடன் கூடிய சோபை உண்டாகும்; இது அபிகாத சோபை ஆகும்; இந்த சோபை மிகவும் உஷ்ணமாகவும், சென்னிறமாகவும், பெரும்பாலும் பித்தத்தின் குறிகளுடன் கூடியதாகவும் காணப்படும்.—38, 39.

விஷஜ சோபை :—விஷமுள்ள பிராணிகள் மேலே ஊர்ந்துச் செல்லுவதாலும், மூத்திரத்தைச் சிந்துவதாலும், கோரப் பற்கள் நகங்கள் இவற்றால் தீண்டுவதாலும், விஷமில்லாதப் பிராணிகளுடைய கோரப்பற்களும் நகங்களும் தாக்குவதாலும், மல மூத்திரங்கள்-சுக்ரம் இவற்றால் மலினமான வஸ்திரம் முதலியவற்றின் ஸம்பந்தத்தினாலும், விஷ விருக்ஷங்களிலிருந்து வரும் வாயுவின் பரிசத்தினாலும், கிருத்ரிம விஷங்களாலான சூர்ணங்களின் ஸம்பந்தத்தினாலும் உண்டாகும் வீக்கம் மிருதுவாகவும், தொங்கிக் கொண்டு அசையுந்தன்மையதாகவும், சீக்கிரம் உண்டாய் அழற்சியும் வலியும் தருவதாகவும் இருக்கும்.—40, 41½.

சோபையில் ஸாத்தியா ஸாத்தியங்கள் :—வெகு ஸமீப காலத்தில் உண்டானதும், உபத்திரவங்களால்[1] அநுஸரிக்கப் படாததுமான சோபை சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக் கூடியதாம்; முன்னால் கூறிய சோபைகள்[2] அஸாத்திய ரோகங்களாம்.—42.

## விஸர்ப்பம்.

விஸர்ப்ப பேதங்கள் :—தோஷங்களும், தூஷ்யங்கள் என்கிற தாதுக்களும் கோளாறடைந்து உண்டாகும் விஸர்ப்பமானது வாத-பித்த-கபங்களால் தனித் தனியாகவும், த்வந்த்வ தோஷங்களாலும், ஸந்நிபாதத்தினாலும், அபிகாதத்தினாலும் ஆக எட்டுவிதமாய் உண்டாகும். இந்த விஸர்ப்பங்கள் பாஹ்யாங்கங்களையாவது, ஆந்தராங்கங்களையாவது, உபயாங்கங்களையாவது பற்றி மூன்று விதமாகக் காணும். இவற்றுள் பாஹ்ய விஸர்ப்பத்தைவிட ஆந்தர விஸர்ப்பமும், அதைவிட உபயாங்கங்களைப் பற்றிய விஸர்ப்பமும் மேன்மேலும் சிகித்ஸையில் கஷ்டஸாத்தியமானவை.—43, 43½.

1. உபத்திரவங்கள்—138-ம் பக்கம் பார்க்க.
2. சோபையின் ரிஷ்டங்கள்—369-ம் பக்கம் பார்க்க.

**விஸர்ப்ப ஸம்ப்ராப்தியும் அதன் பேதங்களும்** :—அதில் அந்தந்த தோஷங்கள் தாம் பிரகோபிப்பதற்குத் தகுந்த காரணங்களாலும், விசேஷமாக விதாஹியென்னும்[1] குணமுடைய பதார்த்தங்களாலும் தேஹத்தில் சீக்கிரம் பரவிவிடுகின்றன. அத்தோஷங்கள் தேஹத்தில் உட்புறங்களை ஆச்ரயித்தவையானல் ஆந்தர விஸர்ப்பங்களும், வெளிப்புறங்களை ஆச்ரயித்தவையானல் பாஹ்யவிஸர்ப்பங்களும், இரண்டையும் ஆச்ரயித்தவையானல் உபயாச்ரய விஸர்ப்பங்களும் ஸம்பவிக்கும். —44, 44¾.

**ஆந்தர பாஹ்ய விஸர்ப்பங்கள்** :—(1) மர்மஸ்தாநங்களின் ஸந்தாபத்தினாலும், மூர்ச்சையுண்டாவதாலும், கண் காது முதலிய அவயவங்கள் தாக்கப்படுவதாலும், அதிக நாவரட்சியாலும், வேகங்களை முறைதவறாக விடுவதாலும், ஜாடராக்னியும் தேஹ வன்மையும் சீக்கிரம் குறைந்து விடுவதாலும் ஆந்தர விஸர்ப்பங்கள் உண்டாகும். (2) இக் காரியங்களுக்கு நேர் எதிரிடையான செயல்களால் பாஹ்ய விஸர்ப்பங்கள் உண்டாகும். 45—46½.

**வாத விஸர்ப்பம்** :—அவற்றுள் வாதத்தினுல் ஆன விஸர்ப்பத்தில் உடம்பெங்கும் விரணமும், வாத ஜ்வரம் போன்ற நோயும், சோபை, துடிப்பு, குத்தல், பிளக்கப் படுவது போன்ற வேதனை, இசிவு, கடுப்பு, மயிர்ச் சிலிர்க்கை இவையும் காணும்.—47½.

**பித்த விஸர்ப்பம்** :—பித்தத்தினுல் உண்டாகும் விஸர்ப்பத்தில் விஸர்ப்பம் என்னும் விரணம் வெகு விரைவில் உடலெங்கும் பரவும்; விரணம் மிகவும் சிவப்பாயிருக்கும்; பித்த ஜ்வரத்திற்குச் சமான இலக்ஷணங்கள் காணப்படும்.—48.

**கப விஸர்ப்பம்** :—கப விஸர்ப்பங்களில் விரணங்களில் தினவு உண்டாகும்; விஸர்ப்பங்கள் ஸ்நிக்த்தமாயிருக்கும்; கப ஜ்வரத்திற்குச் சமான வேதனைகளும் காணும்.—48½.

**உபேக்ஷிக்கப்படும் விஸர்ப்பங்களின் தன்மை**:—எல்லா விஸர்ப்பங்களும் சிகித்ஸையின்றி உபேக்ஷிக்கப்படுமானல் அவை அந்தந்த தோஷத்திற்குற்ற இலக்ஷணங்களோடு தேஹ மெங்கும் பரவும்; அந்த விஸர்ப்பங்கள் பக்குவநிலைமை யடைந்து உடைந்தால் அவை யாவும் அந்தந்த தோஷங்களால் உண்டாகும் விரணங்களுடைய குறிகளைப் பெற்றிருக்கும்.—49½.

**அக்னி விஸர்ப்பம்** :—வாத பித்தங்களாலான விஸர்ப்பமானது ஜ்வரம், வாந்தி, மூர்ச்சை, அதிஸாரம், நாவரட்சி, தலைச் சுற்றல், எலும்புகளில் வேதனை, அக்னிமாந்தியம், தமகச்வாசம், அரோசகம் இவற்றோடு கூடியிருக்கும்; எல்லா அங்கங்களும் அக்னியினுல் எரிக்கப்பட்டவைபோல் தவிக்கும்; விஸர்ப்பம் எங்கெந்த பிரதேசத்தில் வியாபிக்கின்றதோ அவ்வவ்விடமும் வெகு சீக்கிரத்தில் எரிந்து அவிந்த கொள்ளிக்கட்டைக்கு ஒப்பாகக் கருப்

1. விதாஹி—74-ம் பக்கம் பார்க்க.

பாகவோ, நீல நிறமாகவோ, செந்நிறமாகவோ ஆய்விடும். துரித மாகப் பரவும் கொப்புளங்களால் அவ்வவ்விடமும் அக்னியினால் எரிக்கப்பட்டதுபோலாகும்; மேலும் அந்த விஸர்ப்பம் அதிவேக மாக மர்மங்களை அனுஸரித்துச் சென்று, அதனால் வாயு மிகவும் பலம் பெற்றுவிடவே அங்கங்களில் வேதனையை அதிகமாய் உண்டு பண்ணும்; ஞாபக சக்தியை இழக்கச் செய்யும்; நித்திரையைப் போக்கிவிடும்; ச்வாஸத்தை விருத்தி செய்யும்; விக்கலும் உண்டா கும்; அம்மனிதன் இவ்விதமான அவஸ்த்தையைப் பெறவே, எவ் விடத்திலும் அமைதியாயிருந்து சுகம் பெற முடியாதவனாவான்; அமைதியின்மையினால் மிகவும் பீடிக்கப்படுபவனாய் தரையிலும், சயனத்திலும், ஆஸனம் முதலியவைகளிலும் படுத்துப் புரண்டு, கிலேசமடைந்து, மனம் தேஹம் இவற்றிற்குண்டான சிரமத்தினால் ஸம்பவித்ததான எளிதில் எழுப்ப முடியாத நித்திரையைப் பெறு வான்; அது அக்னி விஸர்ப்பம் என்று கூறப்படும். 50—55½.

கிரந்தி விஸர்ப்பம்:—கபத்தினால் வாயுவானது தடுக்கப்பட, அக்கபத்தை வாயு பலவிதமாக உடைத்து, அல்லது இரத்தம் விருத்தியான மனிதனின் சர்மத்திலும், ஸிரைகளிலும், ஸ்நாயுக்களி லும் உள்ள இரத்தத்தையாவது அவ்விதம் உடைத்து, அதைத் தூஷிப்பித்து, நீளமாகவும், சிறியனவாகவும், வட்டங்களாகவும், பருத்தவையாகவும், கடினமாகவுமுள்ள இரத்த ஸம்பந்தமான கிரந்திகளை வரிசை வரிசையாய் உண்டுபண்ணும்; அக்கிரந்திகள் கடுமையான வலியையும் ஜ்வரத்தையும் உண்டாக்கும்; ச்வாஸம், காஸம், அதிஸாரம், வாய் வரண்டுபோதல், விக்கல், வாந்தி, தலைச் சுற்றல், மயக்கம், உடல் கருநிறமாக மாறுதல், மூர்ச்சை, உடல் சோர்ந்து ஒடிந்து விழுவதுபோன்ற உணர்ச்சி, அக்னிமாந்தியம் இவைகளும் இவ்வியாதியில் உண்டாகும்; வாத கடங்கள் பிரகோ பித்து உண்டாகும் இது கிரந்தி விஸர்ப்பம் எனப்படும். 56—59.

கர்த்தம விஸர்ப்பம்:—கப-பித்தங்களாலான விஸர்ப்பத்தில் ஜ்வரம், நித்திரை, விறைப்பு, சோம்பல், தலைவலி, அங்கங்கள் ஒடிந்து விழுவன போன்ற உணர்ச்சி, இளைப்பு, வலிப்பு, வாய்ப் பிதற்றல், அரோசகம், தலைச்சுற்றல், மூர்ச்சை, பசியின்மை, எலும்பு களில் கடுப்பு, நாவரட்சி, இந்த்ரியங்களில் குருத்வம், மலம் ஆமமா யிருத்தல், ஸ்ரோதஸ்ஸுகளில் பிசுபிசுப்பு இவை காணும்; இவ் விஸர்ப்பம் பெரும்பாலும் ஆமாசயத்திற்குச் சமீபமாய் உடலின் மத்திய பாகத்தில் பரவும்; ஏதாவது குறிப்பிட்ட ஓரிடத்தைப் பற்றியதாய் இவ்விஸர்ப்பம் சொற்ப வலியையுண்டுபண்ணும்; அதிக மஞ்சள் நிறமாகவும் செந்நிறமாகவும் வெண்மையாகவுமுள்ள கொப்புளங்களால் அவ்விடம் சூழப்பட்டிருக்கும்; அவ் விஸர்ப்பம் தவளைபோன்ற நிறமுடையது; கருத்து ஸ்நிக்த்தமானது; மலின மானது; குருத்தன்மையோடு சோபையுடையது; வெகு ஆழத்தில்

பழுக்குந் தன்மையது ; தூர்நீர்க்கசிவுடன் வெளிப்படையாய் வியாபித்து உடையக் கூடியது ; சேறுபோன்றது ; சிதறுண்ட மாம்ஸத்துடன் கூடியது ; ஸ்நாயுக்களும் ஸிரைகளும் விசேஷயாக நன்கு வெளியில் புலப்படும்படி வியாபித்திருப்பது ; சவநாற்ற முள்ள இதை **கர்த்தம விஸர்ப்பம்** என்பார்கள். 60—64.

**ஸந்நிபாத விஸர்ப்பம்** :—மூன்று தோஷங்களாலும் உண்டாகும் **ஸந்நிபாத விஸர்ப்பத்தில்** வாத-பித்த-கபங்களினுடைய இலக்ஷணங்களும் காண்பதோடு, விஸர்ப்பமானது எல்லாத் தாதுக்களிலும் பரவிவிடும்.—64½.

**ஆகந்துக விஸர்ப்பம்** :—அடிமுதலியது தாக்குவதாகிற பாஹ்ய காரணத்தினால் பிரகோபமடைந்த வாயுவானது இரத்தத்துடன் கூட பித்தத்தையும் தூண்டி விஸர்ப்பத்தை உண்டுபண்ணும் ; அவ்விஸர்ப்பம் கொள்ளுகளைப்போன்ற கொப்புளங்களால் ஆயிருக்கும் ; வீக்கமும், ஜ்வரமும், வலியும், எரித்தலும் அதிகமாயிருக்கும் ; அவ்விஸர்ப்பங்கள் கருஞ்சிவப்பாக அல்லது சிவந்த நிறமாகவும் இருக்கும்.—65, 66.

**விஸர்ப்பங்களில் ஸாத்தியா ஸாத்தியங்கள்**:—(1) தனித்தனியே வாத-பித்த-கபங்களால் உண்டாகும் மூன்று விஸர்ப்பங்களும், உபத்திரவங்கள் ஸம்பவிக்காத த்வந்த்வ தோஷங்களாலான விஸர்ப்பங்களும் சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக்கூடியவையாம். (2) ஆகந்துக விஸர்ப்பம் என்கிற க்ஷதஜ விஸர்ப்பமும், ஸந்நிபாத விஸர்ப்பமும் சிகித்ஸைக்கு வசப்படாத அஸாத்திய ரோகங்கள் ஆகும் ; மர்மஸ்தானங்களை ஆச்ரயித்துண்டான எல்லா விஸர்ப்பங்களும், ஸ்நாயுக்கள் ஸிரைகள் தசைநார்கள் இவை சிதறிப்போன விஸர்ப்பங்களும், தூர்நீர்ப் பெருக்குகளோடு கூடிய விஸர்ப்பங்களும், சவநாற்ற முள்ளவைகளும் அஸாத்தியங்களாகும்.—67, 67½.

---

## பதினான்காம் அத்தியாயம்.

### குஷ்ட-ச்வித்ர-க்ருமி-நிதாநம்.

அப்பால் **குஷ்ட-ச்வித்ர-க்ருமி-நிதாநம்**[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகின்றது :—

### குஷ்டம்.

**குஷ்டமும் அதன் ஸம்ப்ராப்தியும்** :—மித்தியாஹார விஹாரங்களாலும்,[2] விசேஷமாய் விருத்தமான ஆஹார விஹாரங்களா

1. குஷ்டம் என்பது கடுமையான சர்மவியாதி ; ச்வித்ரம் என்பது வெண்குஷ்டம் என்று வழங்கப்படும் வியாதி ; க்ருமிகள்—தசைகள் முதலிய வற்றையும் இரத்தத்தையும் கெடுத்து தேஹத்தில் விருத்தியாகும் நுண்ணுயிர்கள். இவற்றைப்பற்றிய அத்தியாயம் எனப் பொருள்.

2. மித்தியாஹாரங்களைப்பற்றி ஸூ. 6-வது அத்தியாயத்திலும், மித்தியாவிஹாரங்களைப்பற்றி ஸூ. 4-வது அத்தியாயத்திலும் பார்க்க.

லும்,[1] மேன்மக்களை நிந்திப்பது-கொலை அல்லது பிராணி ஹிம்ஸை புரிவது-பிறருடைய பொருளை அபஹரிப்பது முதலிய பாவச் செயல்களாலும், பூர்வஜன்மத்திற் செய்த தீவினைகளாலும் தோஷங்கள் திடீரென்று தூண்டப்பட்டு, சரீரத்தினுள் குறுக்கு நெடுக்காய் ஓடும் ஸிரைகளில் பிரவேசித்து, சர்மம்-லஸீகை-நிணநீர்-இரத்தம்-மாம்ஸம் இவைகளைச் சிதைவுறச் செய்து, அப்பால் தேஹத்தில் வெளிப்புறச்சதையிலும் பரவியோடி, கெட்டுப்போன அந்த தோஷங்கள் சர்மத்திற்கு நிறமாறுபாட்டை யுண்டுபண்ணி விடும்; இதையே குஷ்டம் என்பார்கள். எல்லாவிதமான குஷ்டமும் தகுந்த சிகிதஸையின்றி உபேக்ஷிக்கப்படுமானால் காலக்கிரமத்தில் ஸர்வசரீரத்தையும் சுருக்கி ஒடுக்கி விடுவதால் இது குஷ்டம் எனப்படுகிறது; மேலும் இத்தோஷங்கள் உள்ளே எல்லாத் தாதுக்களிலும் வியாபித்து, அவற்றை துர்நீர்களின் சேர்க்கையால் கசிவுறச் செய்து, வியர்வை-கெட்ட நிணநீர்-பதனழிந்த நிலைமை இவற்றையும், ஸூக்ஷ்மமாகவும் மிகக் கொடுந்துன்பம் விளைவிப்பவையுமான கிருமிகளையும் உண்டுபண்ணி, உரோமங்களையும்-சர்மத்தையும்-ஸ்நாயுக்களையும்-தமநிகளையும்-தருணாஸ்த்திகள் என்னும் முருந்துகளையும் அக்கிருமிகள் கிரமமாகத் தின்றுவரும். இக்காரணங்களாலான குஷ்டத்தினும் ச்வித்ரம் வேறுவித வியாதியென்று கூறப்படுகிறது. 1—5½.

குஷ்டம் ஏழு விதம் :—தனித்தனியே வாதாதி தோஷங்களால் மூன்றுவிதமும், இரண்டிரண்டு தோஷங்கள் சேருவதால் மூன்று விதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும் ஆக ஏழுவித குஷ்டங்கள் உண்டு. எல்லாக் குஷ்டங்களும் ஸந்நிபாதத்தினால் உண்டாகின்றனவாயினும், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு அல்லது இரண்டு தோஷம் மற்ற இரண்டைவிட அதிகரித்திருப்பதைக் கருதி, வாதாதி தோஷங்களால் தனித் தனியாகவும், இரண்டிரண்டு தோஷங்களாலும் வெவ்வேறு குஷ்டங்கள் உண்டாவதாகவும் கூறப்படுகிறது. இவற்றுள் வாதத்தினால் உண்டாவது கபால குஷ்டம் எனப்படும்; பித்தத்தினால் உண்டாவது உதும்பரகுஷ்டமாகும்; மண்டல குஷ்டமும், விசர்ச்சிகா என்கிற குஷ்டமும் கபத்தினால் உண்டாகின்றன; ருஷ்யஜிஹ்வம் என்பது வாதபித்தங்களால் உண்டாகின்றது; சர்மைககுஷ்டம், கிடிபகுஷ்டம், ஸித்மகுஷ்டம், அலஸக குஷ்டம், விபாதி குஷ்டம் என்பவை வாத கபங்களால் உண்டாகின்றன; தத்ரு குஷ்டம், சதாருகுஷ்டம், புண்டரீககுஷ்டம், விஸ்ப்போடகுஷ்டம், பாமாகுஷ்டம், சர்மதளகுஷ்டம் இவை பித்தகபங்களால் ஸம்பவிக்கின்றன. காகணம் என்கிற குஷ்டம் ஸந்நிபாதத்தினால் உண்டாகின்றது. 6—9¼.

---

1. விருத்தாஹாராதிகளைப்பற்றி 89, 90-ம் பக்கங்களைப் பார்க்க.

ஸப்த மஹா குஷ்டங்கள் :—கபாலம், உதும்பரம், மண்டலம், தத்ரு, காகணம், புண்டரீகம், ருக்ஷஜிஹ்வம் இவ்வேழும் மஹா குஷ்டங்கள் என்று வழங்கப்படுகின்றன.—10.

குஷ்ட பூர்வ ரூபங்கள் :—சர்மமானது மிகவும் வழவழப்பாகவும், கடினமாகவும், அதிக வியர்வையோடு கூடியதாக அல்லது முற்றிலும் வியர்வை யற்றதாகவும், நிறமாறுபாடுள்ளதாகவும், அழற்சியும் தினவுமுடையதாகவும், சில ஸமயம் உணர்ச்சியற்றதாகவும், குத்தல் வலியுள்ளதாகவும், கோடம் முதலிய படைகளைப் பெற்றதாகவும் காணப்படும் ; தேஹத்தில் சிரமம் அதிகரிக்கும் ; விரணங்களில் வலி அதிகரிக்கும் ; விரணங்கள் உண்டாவது சீக்கிரமாகவும், அவை மறைவது மெதுவாகவும் இருக்கும் ; விரணங்கள் ஆறியும் ரூக்ஷமாயிருக்கும் ; சொற்ப காரணத்தினாலும் விரணம் முதலியது மிகுதியாய் விருத்தியாகும் ; மயிர்ச்சிலிர்க்கையும் இரத்தம் கருநிறமாவதும் உண்டு ; இவை குஷ்டத்திற்கு முன்னால் உண்டாகும் குறிகள். 11—12½.

கபால குஷ்டம் :—சர்மம் கருஞ்சிவப்பான கபாலம் போன்றதாகவும், ரூக்ஷமாகவும், உணர்ச்சியற்றதாகவும், வன்மையாகவும், ஒருவாறு மெல்லியதாகவும் இருக்கும் ; குஷ்டம் உண்டான விடங்களின் ஓரங்கள் விஸ்தாரமாகவும் மேடு பள்ளமாகவும் காணப்படும் ; இயற்கையுருவம் நீங்கி விகாரமடைந்த உரோமங்கள் அங்கு அடர்ந்திருக்கும் ; குத்தல் அதிகமாகவும், தினவு சொற்பமாகவும் இருக்கும் ; சீக்கிரத்தில் தேஹமெங்கும் வியாபிக்கும் ; இதற்குக் கபாலகுஷ்டம் என்று பெயர்.—13, 14.

உதும்பர குஷ்டம் :—கனிந்த அத்திப்பழம் போன்றதாய் ஒருவாறு சிவந்த சர்மத்தோடும் மயிர்களோடும் மங்கிய வெண்ணிறமான ஸிரைகளோடும் கூடியதாகவும், அதிகமாய் விருத்தியடைந்து விசேஷமான கசிவுநீர்களோடு கூடியதாகவும், சில ஸமயம் இரத்தம்போன்றதாய் அழற்சியும் வலியுமுடையதாகவும், சீக்கிரத்தில் உற்பத்தியாய் வெடித்து கிருமிகளுண்டாக்குவதாகவும் உள்ளதை உதும்பர குஷ்டம் என்று அறிக.—15, 15½.

மண்டல குஷ்டம் :—சலனமற்றதாகவும், திரண்டு குருவாகவும், ஸ்நிக்த்தமாகவும், வெண்சிவப்பாகவும், சீக்கிரம் பரவாததாகவும், விரணங்கள் ஒன்றோடொன்று கலந்ததாகவும், மேலெழுந்து பருத்ததாகவும், அதிக தினவு அதிதுர்நீர்ப்பெருக்கு அதிக கிருமிகள் இவற்றோடு கூடியதாகவும், சுற்றிலும் ஓரங்களில் வழுவழுப்பாகவும், பருத்ததாகவும் ... 

ருக்ஷஜிஹ்வம் :—சுரசுரப்புள்ளதும், மெல்லிய படையுருவமுள்ளதும், ஓரங்களில் சிவந்ததும், உட்புறம் கருத்து, ஒரு சிறிது உயர்ந்து விருத்தியானதும், குத்தல்-அழற்சி-வலி-துர்நீர்ப்பசை இவற்றுடன் கூடியதும், கடினமான கொப்புளங்களால் சூழப்பட்டதும், ஆகவே காடியின் நாக்குபோன்றதும், அதிக கிருமிகளுள்ளதுமான குஷ்டம் ருக்ஷஜிஹ்வம் [1] எனப்படும்.—18, 19.

சர்மகுஷ்டம் :—எந்த குஷ்டம் சர்மத்தை யானையின் தோலைப்போல மிகவும் உறத்துப் பருத்து கடினமான பரிசமுள்ளதாகச் செய்கின்றதோ, அது சர்மகுஷ்டம் என்று கூறப்படும்.—19¼.

ஏககுஷ்டம் :—உடம்பில் மிகுதியான பாகங்களை ஆச்ரயித்து விஸ்தாரமாகப் பரவி யுண்டாவதும், வியர்வைநீர் சிறிதுமில்லாததும், மத்ஸியத்தின் செதிள்கள்போன்ற செதிள்களை யுண்டுபண்ணுவதுமான குஷ்டம் ஏககுஷ்டம் எனப்படுகிறது.—19¾.

கிடிபகுஷ்டம் :—ரூக்ஷமாகவும், காய்ப்பு காய்த்ததுபோல் பரிசிப்பதற்குக் கடினமாகவும், தினவுள்ளதாகவும், சுரசுரப்பாகவும், கறுப்பாகவும் உள்ள குஷ்டம் கிடிபம் என்று கூறப்படும்.—20, 20½.

ஸித்மகுஷ்டம் :—சுற்றிலும் வெளிப்புறங்களில் ரூக்ஷமாகவும், உட்புறத்தில் ஸ்நிக்த்தமாகவும் இருந்து, தேய்த்தால் எதில் புறணித்தூள்கள் உதிர்கின்றனவோ, எது வழுவழுண்டு - மெல்லியதாய் - வெண்சிவப்பாய் சுரைப்பூவைப் போல் உண்டாகின்றதோ அது ஸித்மகுஷ்டம் எனப்படும்; இது பெரும்பாலும் உடலின் ஊர்த்வபாகத்திலேயே உண்டாகும்.—21, 21¾.

அலஸக குஷ்டம் :—தினவுள்ளவையும், செந்நிறமுமான கட்டிகளோடுகூடிய குஷ்டம் அலஸகம் ஆகும்.—22.

விபாதிகா குஷ்டம் :—எதில் கைகால்களில் வெடிப்பு, கடுமையான வலி, குறைவான தினவு, சிவந்த கொப்புளங்கள் இவை இருக்கின்றனவோ அது விபாதிகா குஷ்டம் என்று கூறப்படும்.—23.

தத்ரு :—அறுகம்புற்களைப்போல் படர்ந்ததும், காசாம்பூ நிறமுடையதும், வரம்பு கட்டி வட்டமாயிருப்பதும், தினவுள்ளதும், ஒட்டுவாரொட்டியுமான படை தத்ரு எனப்படும்.—24.

சதாரு .—அடிப்புறம் பருத்து, அழற்சியும் வலியுமுள்ளதாய், கருஞ்சிவப்பு நிறமுள்ள அநேகம் விரணங்களோடுகூடிய குஷ்டம் சதாரு எனப்படும்; மேலும் இதில் துர்நீர்க்கசிவும் கிருமிகளும் விசேஷம்; பெரும்பாலும் இது ஸந்திப் பிரதேசங்களிலேயே ஸம்பவிக்கும்.—25.

புண்டரீக குஷ்டம்:—சுற்றிலும் சிவந்து, மத்தியில் வெளுத்து, தினவு - அழற்சி - வலி இவற்றோடு கூடியதாய், சிறிது மேலெழுந்துப் பருத்து, தாமரைப்பூப்போல சிவந்த இரேகைகள் பரவியதான குஷ்டம் புண்டரீகம் எனப்படும்; நிணநீரும் இரத்தமும்

1. ருக்ஷஜிஹ்வம் என்பதையே ருஷ்யஜிஹ்வம் என்றும் வழங்குவர்.

இதில் மிகுதியாகத் தோய்ந்து வியாபித்திருக்கும்; சீக்கிரம் இவ் விரணம் பழுத்து உடையும்.—26, 26½.

விஸ்ப்போடம் :—வெண்சிவப்பான மெல்லிய சர்மங்களை யுடைய கொப்புளங்களால் வியாபிக்கப்பட்ட குஷ்டம் விஸ்ப்போடம் எனப்படும்.—27.

பாமா :—தினவும் - துர்நீர்க்கசிவும் - வலியும் அதிகமாயுள்ளவையும், கருஞ்சிவப்பா யிருப்பவையும், உருவத்தில் சிறியவையுமான அநேக கொப்புளங்கள் அல்லது பிடகைகள் பாமா எனப்படும்; இது பெரும்பாலும் பிருஷ்டங்களிலும், கரங்களிலும், முழங்கைகளிலுமே உண்டாவது வழக்கம்.—28.

சர்மதளம் :—கொப்புளங்களோடு கூடியதும், பரிசிக்கக்கூடாத கடும் வலியுள்ளதும், தினவு - எரித்தல் - குத்தல் இவைகளுள்ளதும், செந்நிறமானதும், வெடிப்புகளுள்ளதுமான குஷ்டம் சர்மதளம் எனப்படுகிறது.—28½.

காகண குஷ்டம் :—கடுமையான எரித்தல்-வலி இவற்றோடு கூடியதும், குன்றுமணியைப் போல முதலில் சிவந்தும், கருத்ததுமான நிறமுள்ளதும், பிறகு அநேகவித நிறங்களைப் பெற்று குஷ்ட ஸம்பந்தமான எல்லாக் குறிகளையும் அடைவதுமான வியாதி காகண குஷ்டம் என்று வழங்கப்படும்.—29, 30.

குஷ்டங்களில் தோஷ பேதங்களை யறிதல் :—முற்கூறிய குஷ்டங்களில் வாதாதிதோஷப் பிரகோபங்களின் தன்மைகளை, தோஷபேதீயாத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ள வாதாதி தோஷங்களின் குறிகளென்ன செயல்களென்ன இவற்றைக் கொண்டு [1] அறிந்துகொள்ளலாம்.—30½.

குஷ்டத்தில் அஸாத்தியாதி லக்ஷணங்கள் :—மூன்று தோஷங்களும் சேர்ந்துண்டாகும் ஸந்நிபாத குஷ்டமும், ரிஷ்டங்களை விவரித்த அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிற குறிகளோடுகூடிய குஷ்டமும், [2] அஸ்தி-மஜ்ஜை-சுக்ரம் இவற்றை ஆச்ரயித்துண்டாகும் குஷ்டமும் அஸாத்தியமாகும். மேதோதாதுவைப் பற்றிய [3] குஷ்டம யாப்யமாகும். பித்தத்தையும், இரண்டிரண்டு தோஷங்களையும், இரத்தத்தையும், மாம்ஸத்தையும் பற்றிய குஷ்டம் கிருச்சிரஸாத்தியம். கபமும் வாதமும் அதிகரித்துண்டானதும், சர்மத்தைப்பற்றியதும், ஒரே தோஷத்தால் உண்டாவதுமான குஷ்டம் எளிதில் நீக்கக்கூடியது. 31—32½.

தாதுக்களைப் பற்றிய குஷ்டங்களின் குறிகள் :—(1) அவற்றுள் குஷ்டம் சர்மத்தை ஆச்ரயித்ததாயிருந்தால் குத்தல் - நிறமாறு

1. இதைப்பற்றி ஸூ. 12-வது அத்தியாயத்தை, முக்கியமாய் 137-ம் பக்கத்தைப் பார்க்க.

2. குஷ்ட ஸம்பந்தமான ரிஷ்டங்களைப்பற்றி 369-ம் பக்கம் காண்க.

3. மேதோதாது—கொழுப்பு.

பாடு - ரூக்ஷத்தன்மை இக்குறிகள் உண்டாகும். (2) இரத்தத்தை ஆச்ரயித்த குஷ்டமானால் அதிக வியர்வையும், அதிக நித்திரையும், வீக்கங்களும் காணும். (3) மாம்ஸத்தைப்பற்றிய குஷ்டத்தில் கரங்களிலும் பாதங்களிலும் விஸ்ப்போடங்கள் என்கிற கொப்புளங்கள் ஸம்பவிக்கும்; ஸந்திகளில் அதிக துர்நீர்க்கசிவும் உண்டாகும். (4) மேதஸ் என்னும் கொழுப்பைப்பற்றிய குஷ்டத்தில் கை கால்கள் முடமாகவும், அவயவங்கள் அசைக்க முடியாமலும் போகும்;[1] வெடிப்புகளும் ஆங்காங்கு ஸம்பவிக்கும். (5, 6) அஸ்த்திகளையும் மஜ்ஜாவையும் பற்றிய குஷ்டங்களில் நாசி சிதைவுறும்; கண்கள் சிவக்கும்; தொண்டைக்கம்மல் உண்டாகும்; விரணத்தில் கிருமிகளும் உற்பத்தியாகும். (7) சுக்ரத்தைப்பற்றிய குஷ்டம் அவன் மனைவி மக்களையும் பாதிக்கும். இரத்தம் முதலிய தாதுக்களில் இங்கு கூறப்பட்டுள்ள தாது ஸம்பந்தமான குஷ்டங்களின் குறிகள் யாவும் முறையே அதததற்கு முன்பாகக் கூறப்பட்டுள்ள குஷ்டங்களிலும் காணும். 33—36.

## ச்வித்ரம்.

ச்வித்ரம்:—குஷ்டத்தைப் போலவே அவ்வித காரணங்களாலேயே ச்வித்ரமும் உண்டாகும்; ச்வித்ரத்திற்கே கிலாஸம் என்றும் தாருணம் என்றும் வேறு பெயர்களும் கூறப்படுகின்றன;[2] இது துர்நீர் முதலிய கசிவுகளற்றது, மூன்று தாதுக்களால் உண்டாய், மூன்று தாதுக்களையும்[3] ஆதாரமாகப் பெற்றது.—37.

ச்வித்திரத்தில் வாதாதி தோஷங்களின் குறிகள்:—வாதத்தினலான ச்வித்ரம் ரூக்ஷமாகவும் சிவப்பாகவும் இருக்கும். பித்தத்தினுல் உண்டாகும் ச்வித்ரம் தாமரை யிதழைப்போல் சிறிது சென்னிறமாகவும், எரித்தலோடு கூடியதாகவும், மயிர்களையுதிர்த்துவிடக் கூடியதாகவும் இருக்கின்றது. கபத்தினுல் உண்டாவது வெண்மையாகவும், அடர்த்தியாகவும், குருத்தன்மையையும் தினவையும் உண்டுபண்ணுவதாகவும் இருக்கும். வாத-பித்த-கபங்களால் உண்டாகும் ச்வித்ரங்களுக்குக் கூறிய குறிகளே

1. கைகால்கள் முடமாகப்போதல், அவயவங்கள் அசைவற்றுப்போதல் என்னும் இவ்விரண்டு இலக்ஷணங்களும் முன்னுல் கூறிய மாம்ஸத்தைப் பற்றிய குஷ்டத்திற்குச் சம்பந்தப்பட்டவையாக அந்வயிப்பது யுக்தம்; ஆனுல் ஸர்வாங்கஸுந்தரீ வியாக்யாநத்தில் மேதஸ்ஸைப்பற்றிய குஷ்டத்திற்கு இவை ஸம்பந்தப்பட்டவையென்று குறிப்பிட்டிருப்பதை அநுஸரித்து நாமும் அவ்வாறே எழுத நேரிட்டது.

2. மாதவ நிதாநம் முதலியதில் தாருணம் என்பதற்குப் பதிலாய் வாருணம் என்று கூறப்பட்டிருக்கிறது.

3. மூன்று தாதுக்கள் என்பதால் வாத-பித்த-கபங்கள் என்கிற மூன்று தோஷங்களும், இரத்த-மாம்ஸ-மேதஸ் என்னும் மூன்று த்ரவ்யங்களும் பொதுவில் குறிப்பிடப்படுகின்றன.

இரத்த - மாம்ஸ - மேதஸ்ஸுகளைப் பற்றிய ச்வித்ரங்களுக்கும் முறையே குறிகளாகும். வாதாதி தோஷங்களால் உண்டானதும், இரத்தம் முதலிய தாதுக்களைப்பற்றியதுமான இரண்டு ச்வித்ரங்களிலும் வர்ணத்தினாலேயே பேதம் அறியப்படும்.[1]—38, 38½.

ச்வித்ரத்தில் ஸாத்தியாஸாத்தியக் குறிகள்:—முற்கூறிய ச்வித்ரங்களில் வாதத்தினாலுண்டானதைவிட பித்தஸம்பந்தமான ச்வித்ரமும், பித்தத்தினாலானதைவிட கபச்வித்ரமும் மேன்மேலும் கஷ்டஸாத்தியங்களாகும்; இவ்விதமே இரத்தத்தைப் பற்றிய ச்வித்ரத்தைவிட மாம்ஸத்தைப்பற்றியதும், அதைவிட மேதஸ்ஸைப்பற்றிய ச்வித்ரமும் மேன்மேலும் கஷ்டஸாத்தியங்களாகும். மயிர்களை வெண்மையாகச் செய்யாததும் தேஹத்தில் அதிகமாய் வியாபிக்காததும், வெவ்வேறு இடங்களில் உண்டான ச்வித்ரங்கள் ஒன்றோடொன்று சேராததாகவும், புதிதாகவும், நெருப்புத்தாக்கியதால் உண்டாகாததாகவுமிருக்கிற ச்வித்ரம் சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக் கூடியதாகும். இவற்றிற்கு மாறாக வேறு விதமாயுள்ள ச்வித்ரங்கள் அஸாத்தியங்களாகும்; ஆண் பெண் குறிகளிலும், கரங்களிலும், உதடுகளிலும் உண்டான ச்வித்ரம் அதிக நாட்பட்டதாகாவிடினும் அஸாத்தியமாகும்.—39, 40½.

சர்மரோகம் முதலியவை பரவும் முகாந்தரம்:—ஒருவருக்கொருவர் பரிசிப்பது, ஒன்றாகச் சேர்ந்து புஜிப்பது, ஒரே சயனத்தில் படுப்பது இவை முதலியவற்றால் பெரும்பாலும் எல்லா வியாதிகளும் ஒருவரிடமிருந்து மற்றவரிடத்திற்குப் பரவுகின்றன; நேத்திர வியாதிகளும், சர்ம வியாதிகளும் அவ்விதம் விசேஷமாகப் பரவக்கூடியன.—41½.

## கிருமிகள்.

கிருமிகளின் பிரிவுகள்:—கிருமிகள் பாஹ்யக்கிருமிகள்,[2] ஆந்தரக்கிருமிகள்[3] என்று இருவகைப்படும். அவற்றுள் வெளி மலங்களில் உண்டாகுபவை, கபத்தில் உண்டாகுபவை, இரத்தத்தில் உண்டாகுபவை, குடலிலுள்ள மலத்தில் உண்டாகுபவை என்று அக்கிருமிகள் உற்பத்தியாகும் முகாந்தரங்களைக்கொண்டு நான்கு விதமாகவும் பிரிக்கப்படுகின்றன; பெயர்களைக்கொண்டும் இருபது விதமாகவும் அவை பிரிக்கப்படும்.—42, 42¾.

---

1. வாதத்தினாலுண்டானதும் இரத்தத்தை ஆச்ரயித்ததுமான ச்வித்ரம் சிவப்பாகவும், பித்தத்தினாலுண்டானதும் மாம்ஸத்தைப்பற்றியதுமான ச்வித்ரம் சிறுது சிவப்பாகவும், கபத்தினால் உண்டானதும் மேதஸ்ஸைப் பற்றியதுமான ச்வித்ரம் வெண்மையாகவும் இருக்கும்; இக்குறிகளையே முக்கியமாகக் கவனித்து பேதங்கள் அறியப்படுகின்றன.

2. பாஹ்யக்கிருமிகள்—தேஹத்தின் வெளிப்புறத்தில் உண்டாகும் ஸூக்ஷ்ம ஜந்துக்கள்.

3. ஆந்தரக்கிருமிகள்—உடலின் உட்புறத்தில் உண்டாகும் ஸூக்ஷ்ம ஜந்துக்கள்.

பாஹ்யக் கிருமிகள் :—அவற்றுள் பாஹ்யக்கிருமிகளாவன : இரத்தம் முதலிய பாஹ்யமலத்தினல் உண்டாகும் கிருமிகள் சில.[1] அவைகளில் சில எள்ளுக்குச் சமமான உருவமும் நிறமுமுடையவை; அவை அழுக்குத் துணிகளையும் மயிர்களையும் ஆச்ரயித்தவைகளாயிருக்கும்; அவற்றிற்கு அநேகம் கால்கள் உண்டு; உருவத்திற் சிறிய இக்கிருமிகளுக்கு யூகங்கள்[2] என்றும், லிக்ஷைகள்[3] என்றும் இரண்டுவிதமாகப் பெயர் வழங்கப்படும். இக்கிருமிகள் கோடங்கள்,[4] பிடகைகள்[5] இவற்றையும், கட்டிகளையும், தினவையும் உண்டுபண்ணும்.—43, 44½.

ஆந்தரக் கிருமிகள் :—குஷ்டத்திற்குக் கூறிய காரணங்களே சரீரத்தின் உட்புறத்தை ஆச்ரயித்து வளருபவையான ஆந்தரக் கிருமிகளுக்கும் காரணங்களாம்; அவற்றுள் கபத்தினல் உண்டாகும் கிருமிகளே அதிகம்; மதுரமான அன்னம், வெல்லம், பால், தயிர், மாப்பண்டங்கள், புதிய தானியங்களாலான அன்னம் இவற்றால் இக்கிருமிகள் உண்டாம்—45½.

கிருமிகள்-மலத்திலுற்பத்தியாகுபவை :—மலத்தை அதிகமாய் விருத்திசெய்யக்கூடிய தானியங்களையும், அவ்விதமான கீரைகளையும், காய்களையும், ஆவியில் வேகவைத்த கடலை முதலிய தானியங்களையும், மற்றும் அவை போன்றவைகளையும் உபயோகிப்பதால் குடலில் மலங்களிலிருந்து கிருமிகள் உண்டாகின்றன.—46.

கபத்தினலுண்டாகும் ஏழுவித கிருமிகள்:—ஆமாசயம் என்னும் இரைக்குடலில் கபம் அதிகமாகச் சேருவதால் உண்டாய் விருத்தியடைந்து குடலிலெங்கும் கிருமிகள் பரவுவதுண்டு; அவற்றுள் சில கிருமிகள் பெரிய நாடாவைப்போன்றவை; சில கிருமிகள் மண்ணுணிப்பாம்பு போன்றவை; சில கிருமிகள் முளைத்த தானியங்களின் அங்குரங்களுக்கு ஒப்பானவை; சில மெல்லியவையாய் நீண்டிருக்கும்; சில நுண்ணியவையாயிருக்கும்; சில கிருமிகள் வெண்மையாகவும், வேறு சில சென்னிறமாகவும் இருக்கும். அவை ஏழுவிதமான பெயருடையவை; அவையாவன: அந்த்ராதம், உதராவிஷ்டம்,[6] ஹ்ருதயாதம், மஹாகுஹம்,[7] குரு,[8] தர்ப்ப குஸு

---

1. விரணம் முதலியவற்றிலிருந்து வெளிபபடும் இரத்தம் மயிர்களடர்ந்த அவயவங்களில் தங்கிவிட, அந்த இரத்தம் பதனழிந்துவிட்டதும் அதிலிருந்து இக்கிருமிகள் உண்டாகின்றன; ஆகவே இது தேஹத்தினுட்புறத்து இரத்தத்திலுண்டாவதல்லவென்று அறிக.
2. யூகம்—பேன்.
3. லிக்ஷை—ஈர் என்னும் பேன் முட்டை.
4. கோடம்—சரீரமெங்கும் பரவக்கூடிய ஒருவித சிவந்த படை.
5. பிடகை—இதுவே பிடிகா எனப்படும் ஒருவித கட்டி.
6. உதராவிஷ்டம்—உதராவேஷ்டம் என்று சிலக் கிரந்தங்கள்.
7. மஹாகுஹம்—மஹொதுதம் என்று சிலக் கிரந்தங்கள்.
8. குரு—சுரு என்று இதரக் கிரந்தங்களில் கூறப்படுகிறது.

மம், ஸுகந்தம என்பனவாம். இக்கிருமிகள் இருதயத்துடிப்பு, வாயில் நீரூறுதல், உணவு ஜீர்ணமாகாமை, அரோசகம், மூர்ச்சை, வாந்தி, ஜ்வரம், வயிற்றுப்பொருமல், தேஹ இளைப்பு, தும்மல், பீநஸம் இவற்றை யுண்டுபண்ணும். 47—50.

இரத்தத்தில் உண்டாகும் கிருமிகள் :—ஸிரைகள் என்கிற இரத்தக் குழாய்களில் ஓடும் இரத்தத்தில் உற்பத்தியாகிற ஜந்துக்கள் மிகவும் ஸூக்ஷ்மமானவை; அவைகளுக்குக் கால் இல்லை; உருவத்தில் உருட்சியாய் சிவந்திருக்கும்; மிக்க நுண்ணியவையாகையால் இவற்றில் சில வெறும் கண்ணுக்குப் புலப்படமாட்டா; இவை கேசாதம், லோமவித்வம்ஸம், லோமத்வீபம், உதும்பரம், ஸௌரஸம், மாத்ரு[1] என்று ஆறு விதங்களாம்; இவை குஷ்டத்திற்குச் சமமான செயல்களையே செய்யும்.—51, 52.

சிறு குடலில் உண்டாகும் கிருமிகள் :—மலத்தில் உண்டாகும் கிருமிகள் பக்வாசயம் என்கிற சிறுகுடலில் உற்பத்தியாகின்றன; அவை இயற்கையிலேயே கீழ்நோக்கி குதமார்க்கத்தினால் வெளிவர முயல்கின்றன; அவை வளர்ந்து விருத்தியாய் எப்பொழுது ஆமாசயம் என்னும் இரைப்பையை நோக்கி அசைய முயல்கின்றனவோ, அப்பொழுது இப்பிணியாளியின் வாயும்-ஏப்பமும்-வெளிவிடப்படும் மூச்சுக்காற்றும் மலத்திற்குச் சமமான நாற்றமுள்ளனவாயிருக்கும்; அக்கிருமிகள் பருத்தவையாகவும், திரண்டு உருண்டவையாகவும், மெல்லியவையாகவும், பருத்து நீண்டவையாகவும் இருக்கும்; அவற்றுள் சில நிறத்தில் ஒருவாறு கருப்பாகவும், மஞ்சளாகவும், நன்றாகக் கருத்தவையாகவும், வெண்மையாகவும் காணப்படும். அவை ககேருகம், மகேருகம், ஸௌஸுராதம், ஸுனநம், லேலிஹம் என்று ஐந்துவிதங்களாம். இக்கிருமிகள் பேதி, வயிற்றுவலி, பொருமல், இளைப்பு, கடினத்தன்மை, பாண்டுரோக நிலைமை, மயிர்ச்சிலிர்க்கை, பசியின்மை, குதத்தில் தினவு, குதம் வெளிப்படுவது ஆக இவ்விகாரங்களை உண்டுபண்ணும். 53—56.

---

## பதினைந்தாம் அத்தியாயம்.

### வாதவியாதி நிதாநம்.

இனி வாதவியாதி நிதாநம்[2] என்கிற அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

வாதத்தின் மஹிமை :—உலகத்தில் ஸகலவிதமான நன்மைகளையும் தீமைகளையும் செய்வதற்கு முக்கிய காரணமாயிருப்பது

1. ஸௌரஸம் என்பதை ஸஹஜம் என்றும், மாத்ரு என்பதை இரஸமாத்ரு என்றும் சிலர் வழங்குவர்.

2. வாத தோஷத்தினால் ஆன ரோகங்களை விவரிக்கும் அத்தியாயம்.

முறையே கோளாறடையாத இயற்கை நிலைமையிலுள்ள வாயுவும், கோளாறடைந்த வாயுவுமேயாம்;[1] விசேஷமாக தேஹத்தின் நன்மை தீமைகளுக்கும் அவ்விதம் இரண்டு நிலைமையிலுள்ள வாயுவே முறையே முக்கிய காரணமாகும். அவ்வாயுவானது விச்வகர்மா,[2] விச்வாத்மா,[3] விச்வரூபம்,[4] பிரஜாபதி,[5] ஸ்ரஷ்டா,[6] தாதா[7] விபு,[8] விஷ்ணு,[9] ஸம்ஹர்த்தா,[10] மிருத்யு,[11] அந்தகன்[12] என்கிற காரணப் பெயர்களையும் உடையது; இத்தகைய பிரபாவங்களையுடையதுபற்றி, வாயு கோளாறடையாதவாறு செய்ய மிகப் பெருமுயற்சியுடன் எப்பொழுதும் பிரயத்தனம் செய்யவேண்டும். 1—2¼.

வாதத்தின் இயற்கை நிலைமைகளையும் விகார நிலைமைகளையும் விவரிக்கும் பிரகரணம் :—இவ்வாயுவின் இயற்கை வேலைகள், கோளாறடைந்த நிலைமையிலுள்ள வேலைகள் இவ்விஷயங்கள் தோஷாதி விஞ்ஞாநீயாத்தியாயத்தில்[13] ஸங்கிரஹமாகக் கூறப்பட்டன. இதன் ஐந்துவிதமான பெயர்களும், ஐந்து ஸ்த்தாநங்களும், ஐந்துவித சலனங்களும், ஐந்துவித இயற்கைச் செயல்களும் தனித்தனியே விஸ்தாரமாகவும் தோஷபேதீயாத்தியாயத்தில்[14] கூறப்பட்டன. இவ்வத்தியாயத்தில் வாயுவின் கோளாறால் ஆகும் செயல்கள் நிதாந-லக்ஷணாதிகளோடு விவரிக்கப்படும். 3—4½.

வாதத்தின் இரண்டுவித பிரகோபங்கள் :—அமிதமாய் உபயோகிக்கப்பட்டவையும், தாதுக்ஷயத்திற்குக் காரணமானவையுமான வஸ்துக்களால் வாயுவானது பிரகோபமடையும்; இரஸாதி போஷணத்திரவ்யங்கள் இல்லாமல் சூனியமாயுள்ள ஸ்ரோதஸ்ஸுகளில் இவ்வாயு ஸஞ்சரித்து, அவற்றையே இது மிகுதியாய் நிரப்பிப்

---

1. இயற்கை நிலைமையிலுள்ள வாயு நன்மைகளுக்கும்-ஆரோக்கிய நிலைமைக்கும், கோளாறடைந்த வாயு தீமைகளுக்கும்-அநாரோக்கிய நிலைமைகளுக்கும் காரணமாகும்.
2. விச்வகர்மா—உற்பத்தி, விருத்தி, போஷணம், மாரணம், சோஷணம் முதலிய ஸகல வேலைகளையும் செய்யுந்தன்மையது.
3. விச்வாத்மா—எல்லா நன்மைகளுக்கும் ஹேதுவானது.
4. விச்வரூபம்—வெளிப் பொருட்களையும், ஆத்யாத்மிகம் என்கிற ஆத்மதத்வங்களையும் கவர்ந்துள்ள உருவமைப்பைப் பெற்றது.
5. பிரஜாபதி—பிரஜைகளைப் பரிபாலிக்கும் தன்மையது.
6. ஸ்ரஷ்டா—உலகத்தைப் படைப்பது.
7. தாதா—உலகத்தைப் தாங்குவது.
8. விபு—உலகத்திற்கெல்லாம் பிரபுபோன்றது.
9. விஷ்ணு—எங்கும் வியாபித்திருப்பது.
10. ஸம்ஹர்த்தா—ஸகல நாசங்களையும் நிறை வேற்றுவது.
11. மிருத்யு—யமஸ்வரூப முடையது.
12. அந்தகன்— தனக்குத் தானே மாரகஸ்வரூப முள்ளது.
13. இவ்விஷயமாய் 121, 122, 123, 124, 125-ம் பக்கங்களைப் படிக்க.
14. இவ்விஷயமாய் 129 முதல் 141-ம்பக்கம் வரை பார்க்க.

பிரகோபமடைந்து பலம் பெறும்; அல்லது அந்த ஸ்ரோதஸ்ஸுக்களில் இதரதோஷங்கள் நிரம்பியிருந்தால், அவற்றில் இதுவும் சிறிது பிரவேசித்து, அந்த இதர தோஷங்களால் ஆவரணம் செய்யப்பட, அதனாலும் பலம் பெற்றுப் பிரகோபமடையும்.[1]—5, 6.

கோஷ்டத்தில் கோளாறடைந்த வாயுவின் குறிகள் :—(1) அவற்றுள் வாயுவானது பக்வாசயத்தில் பிரகோபமடைந்தால் குத்தல் வலியையும், வயிற்றுப்பொருமலையும், குடலிரைத்தலையும் உண்டு பண்ணும்; மேலும் மலபந்தமும், அச்மரியென்னும் மூத்திரத்தில் கல்லடைப்பும், விருத்தி யென்னும் குடலிறக்கம் முதலிய அண்டவ்ருத்தியும், அர்சஸ்ஸும் இடுப்பின் மேற்புறம் கீழ்ப்புறம் முதுகு இவற்றில் வலியும், கீழ் அவயவங்களில் கஷ்டமான பல உபத்திரவங்களும் உண்டாகும். (2) ஆமாசயத்தில் வாயு பிரகோபித்தால் நாவரட்சி, வாந்தி, ச்வாஸகாஸம், விஷூசி, தொண்டையடைப்பு, ஏப்பம், நாபிக்கு மேற்பட்ட அவயவங்கள் ஸம்பந்தமான கோளாறுகள் இவை யுண்டாகும். 7—8½.

வாதம் இந்த்ரியங்களில் பிரகோபித்தல்:—செவி முதலிய இந்த்ரியங்களில் வாததோஷம் பிரகோபிக்குமானால், அது பிரகோபமடையும் இந்த்ரியத்தைச் சிரழித்து விடும்.—8¾.

தாது முதலியவற்றில் வாதப்பிரகோப லக்ஷணங்கள் :—வாதம் சர்மத்தில் பிரகோபம் அடைந்தால், சர்மம் வெடித்து விடுவதும், ரூக்ஷமாய் ஆவதும் இயல்பு. இரத்தத்தில் பிரகோபித்தால் கடுமையான வலிகள் உண்டாகும்; உணர்ச்சியின்மை, அழற்சி, செந்நிறம், அல்லது வேறு நிறமாறுபாடு, அரும்ஷிகா என்னும் விரணம் இவையும் காணப்படும்; உட்கொள்ளப்பட்ட அன்னம் வயிற்றுப் பொருமலைத் தரும்; அரோசகமும், உடல்மெலிவும், தலைச்சுற்றலும் உண்டாகும். மாம்ஸத்திலும், மேதஸ்ஸிலும் வாதம் பிரகோபித்தால், குத்தல் வலியோடுகூடிய கடினமான கிரந்திகளையும், தலைச்சுற்றலையும், தேஹத்தில் குருத்தன்மையையும் உண்டுபண்ணும்; மேலும் அவயவங்கள் முஷ்டியினாலும் தடியினாலும் அடிக்கப்பட்டதற்கொப்ப அதிக வலியோடும் விறைப்புடனும் கூடியிருக்கும். வாதம் அஸ்த்தியில் பிரகோபித்தால் துடைகளிலும், ஸந்திகளிலும், எலும்புகளிலும் கடுமையான வலியுண்டாகும்; தேஹவன்மை க்ஷீணிக்கும். மஜ்ஜை யென்னும் தாதுவில் பிரகோபித்தால் எலும்புகளில் த்வாரம் விழும்; நித்திரை யுண்டாகாது; உடம்பு விறைத்து வலியுள்ளதாயிருக்கும். வாயு சுக்ரதாதுவில் பிர

1. வாயுவானது இரண்டு வகையில் பிரகோபமடையும்; அவற்றுள் ஒன்று-தாதுக்கள் க்ஷயித்து, அவ்விடத்தில் ஸ்த்தானத்தை வாதம் ஆக்ரமித்து அதிகமாய் விருத்தியாதல்; அது தாது க்ஷய ஸம்பந்தமான பிரகோபம். மற்றொன்று இதர தோஷங்களால் வாதமார்க்கம் மறைக்கப்பட்டு பிரகோபிப்பது; அது ஆவரணப்பிரகோபம் எனப்படுகிறது.

கோபித்தால் அந்த தாது சீக்கிரம் வெளியாகும், அல்லது வெளி வராமலே நின்றுவிடும்; அல்லது அந்த தாது விகாரமடையும்; இவ்வித சுக்ரத்தினால் உற்பத்தியாகும் கர்ப்பத்திற்கும் இக்கோளாறுகளே ஸம்பவிக்கும். ஸிரைகளில் வாயு கோளாறடைந்தால் அவை விம்மிப் பருத்தாவது, சுஷ்கித்துச் சூனியமாகவாவது ஆய் விடும். ஸ்நாயுவில்[1] பிரகோபித்தால் க்ருத்ரஸீவாதம்,[2] ஆயாம வாதம்,[3] குப்ஜத் தன்மையென்னும் முதுகு கூன் இவை காணும். ஸந்திபாகங்களில் பிரகோபமடைந்தால், அவ்விடங்களில் வாயு நிரம்பிய துருத்தியைப்போல் உணரக்கூடிய வீக்கம் காணும்; அவயவங்களை நீட்டி மடக்குவதில் வேதனை அதிகரிக்கும். 9—14½.

ஸர்வாங்க வாதம் :—எல்லா அங்கங்களையும் பற்றிப் பிரகோபித்த வாயுவானது குத்தல் குடைத்தல்களையும், பிளக்கப் படுவது போன்ற உணர்ச்சியையும், துடிப்பையும், அங்கங்கள் முறிவது போன்ற வலியையும், அவயவங்களுக்கு விறைப்பையும், இசிவையும், உணர்ச்சியின்மையையும், ஸந்திகளில் வளைவு அல்லது கோணலையும், நடுக்கத்தையும் உண்டுபண்ணும்.—15½.

ஆக்ஷேபக வாதம் :—வாயுவானது பிரகோபித்து அடிக்கடி எல்லா நாடிகளிலும் ஓடும்போது அவயவங்களில் இசிவு உண்டாம்; ஆகவே இவ்வாத வியாதி ஆக்ஷேபகம் எனப்படுகிறது.—16½.

அபதந்த்ரகம் அல்லது அபதாநகம் :—வாயுவானது தேஹத்தினுள் கீழே ஓட அவ்விடத்தில் தடுக்கப்பட்டு உடனே மேல்நோக்கி யெழும்பி, இருதயத்தை ஆச்ரயித்து, அங்கிருந்து நாடிகளிலும் பிரவேசித்து ஓடும்; அப்பொழுது, அவ்வாதம் இருதயத்திலும் சிரஸ்ஸிலும் கன்னங்களிலும் வேதனையை யுண்டுபண்ணிக் கொண்டே தேஹத்தில் இசிவை யுண்டாக்கி வில்லைப்போல உடலை வளையச் செய்யும். அப்பொழுது பிணியாளி வெகு கஷ்டப்பட்டு மூச்சுவிடுவான்; நேத்திரம் அசைவற்றும், சோர்ந்து செரிந்தும், மூடியவண்ணமும் இருக்கும்; பிறகு புறாவைப்போல் கூவுவான்; அவனுக்கு உணர்ச்சியிராது. இது அபதந்த்ரகம் என்றும் அபதாநகம் என்றும் கூறப்படும். வாயுவினால் இருதயம் விடுபடும் போதெல்லாம் அவன் இயற்கை நிலையைப் பெறுவான். மறுபடி வாதத்தினால் இருதயம் பற்றிக்கொள்ளப்படும் போதெல்லாம் முற் கூறிய விகாரமான அவஸ்த்தையை அடைவான். 17—20.

---

1. ஸ்நாயு—329-ம் பக்கம் பார்க்க.

2. க்ருத்ரஸீ—491-ம் பக்கம் பார்க்க.

3. ஆயாமவாதம்—இதற்கு மேலே அந்தராயாமம், பஹிராயாமம் என்கிற இரண்டுவித ஆயாமங்களையும் பற்றி 22-வது முதல் 26-வது ச்லோகங்களின் மொழிபெயர்ப்பு வரையில் விவரம் காண்க. (488-ம் பக்கம்.)

அபதந்த்ரகத்தில் கஷ்டஸாத்திய நிலைமைகள் :—கர்ப்ப பாதத்தினுலும்,[1] அதிக இரத்தப் பெருக்காலும், அபிகாதத்தினுலும் உண்டாகும் அபதந்த்ரகங்கள் மிகவும் கஷ்டஸாத்தியங்களாகும்.—21.

அந்தராயாமம் :—வாயுவானது மந்யா[2] என்கிற இரண்டு நாடிகளையும் பிடித்து அழுத்தியதாய், தமநிகளையும்[3] வலித்துக் கிரஹித்துக்கொண்டு ஸகல தேஹத்திலும் பரவும்போது ஜத்ருவெனும் தோள்களின் மேற்புறங்களும் தேஹத்தின் மற்றப் பாகமும் வாதவேகங்களால் உட்புறமாய் வில்லைப்போல் வளைத்து இசிக்கப்படும்; கண்கள் ஸ்தம்பிக்கும்; கொட்டாவி உண்டாகும்; பற்கள் ஒன்றோடொன்று சேர்த்து கடிக்கப்படும்; வாயில் நுரை தப்பும்; விலாப் பக்கங்கள் அதிகமாய் வலிக்கும். பேச முடியாமல் வாய் கட்டப்படும்; முகவாய்க்கட்டையையும் அசைக்க முடியாமற் போகும்; பிருஷ்டபாகத்திலும் கழுத்துப்பட்டையிலும் பிடிப்புண்டாகும். இவ்வியாதி அந்தராயாமம்[4] எனப்படும். 22—23¾.

பாஹ்யாயாமம் :—முற்கூறிய விதமாகத்தான் பாஹ்யாயாமமும் உண்டாகும்; ஆனால் தேஹத்தினுடைய வெளிப்புறம் வலித்து இசிக்கப்படுமாகையால், இதில் சிரஸானது பின்புறமாகச் சாய்க்கப்படும்; மார்பு மேற்புறமாக உயர்ந்து வளைந்து நிற்கும்; கழுத்து முரண்டு வலித்துக்கொள்ளும்; வாயிலும் பற்களிலும் ஒருவாறு கருநிறமுண்டாகும்; வியர்வை அதிகப்படும்; அவயவங்கள் கடைசியில் தளர்ந்து விழும். இதை பாஹ்யாயாமம்[5] எனவும், தநுஷ்கம்பம் என்றும், வேகீ என்றும் கூறுவர். 24—26.

விரணாயாமம் :—தோஷங்கள் மர்மஸ்தானத்தைப் பற்றிய விரணத்தை ஆச்ரயித்து, பிறகு வாயுவினால் தூண்டப் பட்டவையாய், பாதம் முதல் சிரஸ் வரையிலும் தேஹத்தில் எல்லாப் பாகத்தையும் வியாபித்து வலித்து இழுக்கும்; அவனுக்கு நாவரட்சியுண்டாய் உடல் வெளுத்துப்போகும்; இதற்கு விரணாயாமம்[6] எனப் பெயர்; இது சிகித்ஸைக்கு வசப்படாத வியாதி.—27, 27½.

ஆக்ஷேபகாதிகள் தெளிவுறும் நிலைமை :—ஆக்ஷேபகம் முதலிய முற்கூறிய இசிவுள்ள எல்லா வாதரோகங்களிலும் ஆரம்பித்த வேகங்கள் அடங்கியதும், மனிதன் ஆரோக்கிய நிலைமையில் இருப்பவனைப் போல் தெளிவுறுவான்.—28.

1. கர்ப்ப பாதம்—315-ம் பக்கம் பார்க்க.
2. மந்யா—331-ம் பக்கம் பார்க்க.
3. தமநி—செவ்விரத்தக்குழாய்.
4. அந்தராயாமம்—தேஹத்தை மார்பு வயிறு இவற்றின் பக்கமாக வளைக்கும் வலிப்பு.
5. பாஹ்யாயாமம்—தேஹத்தை வெளிப்புறமாய் (முதுகுப் பக்கமாய்) வலித்து இசிவையுண்டுபண்ணும் வாதவியாதி.
6. விரணாயாமம்—விரணத்திலுண்டாகும் கடுமையான இசிவு.

ஹநுஸ்ரம்ஸம் :—நாக்கை அதிகமாய் இழுத்து வழிப்பதாலும், சுஷ்கமான வஸ்துக்களைப் புஜிப்பதாலும், அடி முதலியது தாக்குவதாலும் முகவாய்க் கட்டையின் அடியிலுள்ள வாயு முகவாய்க் கட்டையைத் தளரச் செய்து, வாயைத் திறந்தவாறுவது மூடியவாறுவது இருக்கச் செய்துவிடுகின்றது. அது ஹநுஸ்ரம்ஸம்[1] எனப்படும். இதனால் உணவுகளை மெல்லுவதும் பேசுவதும் மிக்க கஷ்டமாகும்.—29, 30.

ஜிஹ்வா ஸ்தம்பம் :—பேசுவது முதலான வேலைகளைச் செய்வதற்கான நாடியைப் பற்றிய வாயுவானது கோளாறடைந்து, நாக்கை அசைக்கக் கூடாமற் செய்துவிடும்; அந்த வியாதி ஜிஹ்வா ஸ்தம்பம் என்று கூறப்படும். அதனால் அன்னபானங்களை உட்கொள்வதற்கும் பேசுவதற்கும் சக்தியில்லாமற் போய்விடும்.—31.

அர்திதம் அல்லது ஏகாயாமம் :—சிரஸ்ஸினால் பாரத்தைச் சுமப்பதாலும், அமிதமான சிரிப்பாலும், அதிகமாய் பேசுவதாலும், திடுக்கிடச் செய்வதாலும், முகத்தை வக்கிரமாக வைத்துத் தும்முவதாலும், கடினமான அம்பால் தாக்கப்படுவதாலும், மேடு பள்ளமான தலையணையில் தலைவைத்துப் படுப்பதாலும், கடினமான வஸ்துக்களை மெல்லுவதாலும், மற்றும் அந்தந்த வாதப் பிரகோபகரமான வஸ்துக்களாலும் அல்லது செயல்களாலும் தேஹத்தின் மேற்புறமுள்ள வாயுவானது பிரகோபமடைந்து, முகத்தின் ஒரு பாகத்தை வக்கிரமாகச் செய்வதோடு, பேசும் போதும், சிரிக்கும் போதும், வஸ்துக்களைப் பார்க்கும்போதும் அந்த வக்கிரத்தன்மை விளங்கக் காணப்படும்; அப்பால் தலை நடுக்கங்கொள்ளும்; வாய் பேசமுடியாமல் தடைப்படும்; கண்கள் அசையாமல் நிலைத்து நிற்கும்; பற்கள் அசைந்தாடும்; குரல் கம்மிவிடும்; காது சப்தங்களைக் கேட்காது; தும்மல் தாராளமாய் வராது; வாஸனையறியும் உணர்ச்சி யிழக்கப்படும்; நினைவு தடுமாறும்; நித்திரையில் மனம் திகிலடையும்; உமிழ் நீர், சளி இவை வாயின் ஒரு பாரிசமாய் மட்டும் வழியும்; ஒரு கண் மூடிக்கொள்ளும்; தோள் முதல் மேற்புறமாகவாகிலும், சரீரத்தின் ஒரு பாரிசம் முடியவாகிலும், சரீரத்தின் கீழ்ப்பாதியாகிலும் கடுமையான வலியால் வருந்தும்; இதைச் சிலர் அர்திதம் என்றும், வேறு சிலர் ஏகாயாமம் என்றும் கூறுவர்.[2] 32—36½.

1. ஹநுஸ்ரம்ஸம்—முகவாய்க்கட்டை யெலும்பு முனைகள் அவற்றின் ஸந்தி ஸ்த்தாநங்களிலிருந்து நழுவுவதாலான கோளாறு.

2. முகத்தில் மட்டும் ஒரு பாரிசத்தைத் தாக்கும் வாதரோகமே அர்திதம் என்று கூறப்படுவது வழக்கம்; ஸுச்ருதாசார்யரின் கொள்கையும் அதுதான். சரீரத்தில் ஒரு பாரிசத்தை முற்றிலும் தாக்கியுண்டாகும் வாதரோகத்தை அர்திதம் என்று வழங்காமல் ஏகாயாமம் என்று வழங்குவதே உசிதம் என்று கருதி, வாக்படாசாரியர் அர்திதம் என்பதை முன்பும், ஏகாயாமம் என்பதை பிறகும் இங்கு குறிப்பிட்டார் என்று கருதவேண்

ஸிராக்ரஹம் :—வாயுவானது இரத்தத்தைப் பற்றிக்கொண்டு, சிரஸ்ஸைத் தாங்கும் ஸிரைகளை ருக்ஷமாகவும், வேதனையோடு கூடியவையாகவும், கருப்பாகவும் செய்துவிடும்; அது ஸிராக்ரஹம்[1] என்று வழங்கப்படும் ; இவ்வியாதி சிகித்ஸைக்கு வசப்படாதது.—37½.

ஏகாங்க ரோகம் அல்லது பக்ஷவதம் :—வாயுவானது உடலின் ஒரு பகுதியைப் பற்றிக்கொண்டு, அப்பக்கத்தின் ஸிரைகளையும் ஸ்நாயுக்களையும் சுஷ்கமாக்கி, ஸந்திபந்தங்களைத் தளர்த்தி ஏதாவது ஒரு பக்கத்தை ஸ்வாதீனமற்றதாகச் செய்யும் ; சரீரத்தின் ஒரு பக்கம் முழுமையும் அசைக்கமுடியாததாகவும், உணர்ச்சியற்றதாகவும் ஆய்விடும் ; அதைச் சிலர் ஏகாங்கரோகம் என்றும் வேறு சிலர் பக்ஷவதம்[2] என்றும் கூறுவர்.—38, 39½.

ஸர்வாங்கரோகம் :—அவ்விதமாகவே வாததோஷமானது சரீரம் அனைத்தையும் பற்றியதாயிருந்தால் அந்த வியாதி ஸர்வாங்க ரோகம்[3] எனப்படும்.—40.

பக்ஷவதத்தில் ஸாத்தியா ஸாத்திய நிலைமை :—வாததோஷத்தினால் மட்டும் தாக்கப்பட்டு உண்டான பக்ஷவதமானது மிகவும் கஷ்டஸாத்தியமாகக் கருதப்படும் ; இதர தோஷங்களோடு கூடிய வாதத்தினால் தாக்கப்பட்டுண்டாகும் பக்ஷவாயுவானது ஸாதாரணமாய் கஷ்டஸாத்தியமாகும் ; க்ஷயத்திற்குக் காரணமான பக்ஷவாயுவோ அஸாத்தியம் எனப்படும்.—41.

தண்டக வாதம் :—கபத்தோடு கூடிய வாதமானது ஆமதோஷத்தை அதிகரிக்கச் செய்து, த்வாரங்களை அடைத்து, அவயவங்களைத் திமிர்க்கச்செய்து, அசைக்க முடியாமலும் பண்ணி, உடலை மரக்கழியைப்போல் ஆக்கி, அஸாத்தியமான தண்டகம் என்கிற வியாதியை உண்டுபண்ணும்.—42.

அபபாஹுகம் :—தோளின் அடிப்புறத்திலுள்ள வாயுவானது அங்குள்ள ஸிரைகளைச் சுருங்கப்பண்ணி, புயத்தை அசைக்க முடியாமற் செய்யும் ; இது அபபாஹுகம் எனப்படும்.—43.

விச்வாசீ :—விரல்களை நோக்கிக் கரதலத்தை அநுஸரித்து புயத்திற்குப் பின்புறமாகப் பரவிய கண்டரைத் தொகுதியானது வாயுவால் தாக்கப்படுமானால், அப்பக்கத்தில் புயம் அசைக்கமுடியாமற் போகும் ; அது விச்வாசீ எனப்படும்.—44.

கஞ்ஜமும் பங்குவும் :—இடுப்பிலுள்ள வாயுவானது, ஒரு துடையின் கண்டரையை வலித்து இழுத்தால் அம்மனிதன் கஞ்ஜம்

டும். அர்திதத்தில் தேஹத்தில் ஒரு பகுதி முடிய தாக்கப்படும் என்றால் பாரிசவாயுவுக்கும் அர்திதத்திற்கும் பேதமிராமற் போய்விடும்.

1. ஸிராக்ரஹம்—வாதம் நரம்புகளை ஆதாரமாயுடையதென்பதைக் கொண்டு இந்தப் பிரகரணங்களில் ஸிரா என்கிற பதத்திற்கு நரம்பு என்று பொருள் ; ஸிராக்ரஹம் என்பதை சிரோக்ரஹம் என்றும் கூறுவர்.

2. பக்ஷவதம்—இதுவே பக்ஷவாதம் அல்லது பார்சவவாயு.

3. ஸர்வாங்கரோகம்—ஸர்வாங்க வாதம் என்றும் கூறுவர்.

என்கிற வாதரோகத்திற்கு உள்ளாவான்; அவ்விதமே இரண்டு தொடைகளும் தாக்கப்படுமானால், பங்கு எனப்படுவான்.[1]—45.

**கலாய கஞ்ஜம்**:—காலில் பூட்டுகள் தளர்ந்தால் நடக்கும் போது கால் நடுங்கும்; நொண்டியைப்போலவும் நடப்பான்; அவ் வியாதியை **கலாய கஞ்ஜம்** என்பார்கள்.—46.

**ஊருஸ்தம்பம் அல்லது ஆட்யவாதம்**:—உட்கொண்ட உணவு சிறிது ஜீர்ணமாகியும் ஜீர்ணமாகாமலும் இருக்கையில் சீதமாகவும், உஷ்ணமாகவும், திரவமாகவும், சுஷ்கமாகவும், குருவாகவும், ஸ்நிக்த் தமாகவும் உள்ள வஸ்துக்களைத் தின்பதாலும், அவ்விதமே ஆயாஸ கரமாகவும் அதிர்ச்சியுண்டு பண்ணுபவையுமான காரியங்களைச் செய்வதாலும், அகால நித்திரையினாலும், இரவிற் கண்விழிப்பதா லும் மிகவும் ஆமதோஷம் விருத்தியடையும்; கபம்-மேதஸ் என் னும் கொழுப்பு-வாயு இவற்றுடன் அது கலந்து மிகவும் கோளா றடைந்து, மற்றொரு தோஷத்தையும் விகாரப்படுத்தித் தொடைகளில் புகுந்ததானால், பிறகு தொடையெலும்புகளின் உட்புறங்களையும் நிரப்பி, விருத்தியடைந்து திமிர்த்துப்போன கபத்தினால் அத் தோஷம் தொடைகளையும் திமிர்க்கச் செய்யும்; தொடைகள் ஸ்திமித மாகவும், சீதமாகவும், உணர்ச்சியற்றவையாகவும் இருக்கும்; அவை குருவாகவும், பிறருடைய அவயவங்களைப்போல் ஸ்வாதீன மற்றவையாகவும், உள்ளே அதிக கடுப்பு வலியுள்ளவைகளாகவும் இருக்கும்; சிந்தை யதிகரிக்கும்; உடலெல்லாம் வேதனையுண்டா கும்; அவயவங்கள் திமிதப்பட்டுப்போம்; சோம்பல் அதிகமா யுண்டாகும்; வாந்தியாகும்; அரோசகம் உண்டாகும்; ஜ்வரமும் காணும்; கால்கள் இளைக்கும்; நடப்பதும் கஷ்டமாகும்; அவை உணர்ச்சியற்றுப் போகும். இதை **ஊருஸ்தம்பம்** என்பார்கள்; சிலர் **ஆட்யவாதம்** என்று கூறுவர். 47—51.

**க்ரோஷ்டுக சீர்ஷம்**:—வாதமும் இரத்தமும் கோளாறடைந்து, அவை முழங்காலின் நடுவில் அதிக வலியை உண்டுபண்ணிக் கொண்டு, நரித்தலையைப்போன்ற வீக்கத்தை யுண்டுபண்ணினால் அது **க்ரோஷ்டுக சீர்ஷம்**[2] எனப்படும்.—52.

**வாத கண்டகம்**:—பாதம் தவறுதலாக வக்கிரமாக வைக்கப் படுவதாலாவது, சிரமத்தினாலாவது வாதம் கோளாறடைந்து, கணுக்காலைப்பற்றி வலியை யுண்டுபண்ணினால் அதை **வாதகண்ட கம்** என்பார்கள்.—53.

**க்ருத்ரஸீ**:—புறங்காலை நோக்கிச் செல்லும் கண்டரையின் தொகுதியானது, வாயுவால் பீடிக்கப்பட்டு, நடக்கமுடியாமல் காலில் பிடிப்பை யுண்டுபண்ணினால் அதை **க்ருத்ரஸீ** என்பார்கள்.—54.

---

1. கஞ்ஜம் அல்லது பங்கு என்பதற்கு நொண்டி என்று பொருள்.
2. க்ரோஷ்டுக சீர்ஷம்—இதை **நரித்தலை வாயு** என்று தமிழ் நாட்டில் வழங்குவார்கள்.

கல்லீ :—முற்கூறப்பட்ட விச்வாசீ யென்னும் வாதரோகமும், இந்த க்ருத்ரஸீவாதமும் கடுமையான வலியை யுண்டுபண்ணும் போது கல்லீ என்று ஒவ்வொன்றும் கூறப்படும்.—54½.

பாதஹர்ஷம்:—பாதங்கள் சிலிர்த்துக்கொண்டு கூச்சங்கொண்டு திமிர்த்துப்போனால், அதை கபமும் வாயுவும் பிரகோபித்து ஸம்பவித்த பாதஹர்ஷம் என்கிற வாதவியாதியென்று அறிக.—55½.

பாததாஹம் .—வாயுவானது பித்தத்தோடும் இரத்தத்தோடும் கலந்து பாதங்களில் அழற்சியை யுண்டுபண்ணும் ; நடக்கும்போது இக்கஷ்டம் அதிகமாகும் ; இதை பாததாஹம் என்பார்கள்.—56½.

---

## பதினாறும் அத்தியாயம்.

### வாத-சோணித நிதாநம்.

இனி வாத-சோதணித நிதாநம்[1] என்னும் அத்தியாயம் விவரிக்கப்படுகிறது :—

வாத சோணிதத்தின் காரணங்கள்:—விதாஹியும்,[2] விருத்தமும்,[3] இரத்தத்தைக் கெடுப்பதுமான அந்தந்த உணவையும் உபயோகிப்பவருக்கும், நியமமின்றியே நித்திரை - கண்விழித்தல்-புணர்ச்சி இவற்றைச் செய்பவர்களுக்கும், பெரும்பாலும் அதிகமாய் திரிந்து வேலைசெய்யும் வழக்கமில்லாத ஸுகுமாரமான மனிதர்களுக்கும் அபிகாதத்தினாலும், மலங்களை அப்போதைக்கப்போது சுத்தி செய்யாமையாலும் இரத்தம் தூஷிக்கப்பட்டிருக்கையில், வாதத்தையும் சைத்தியத்தையும் வ்ருத்திசெய்யக்கூடிய வஸ்துக்களால்[4] வாதம் பிரகோபித்து, வேறு மார்க்கங்களில் பிரவேசித்து, அவ்வாறே விகாரமடைந்த இரத்தத்தினால் தகையப்பட்டு, முதலில் அந்த இரத்தத்தையே இன்னும் அதிகமாகக் கெடுக்கும். இந்த வியாதி முதலில் பாதங்களில் வியாபிக்கும்; நடப்பது, சவாரிசெய்வது முதலிய காரியங்களால் பாதங்கள் மிகவும் பருத்துத் தொங்கும். இதை ஆட்யரோகம் என்றும், குடம் என்றும், வாதபலாஸம் என்றும், வாதரக்தம் என்றும் அநேகம் பெயர்கள் இட்டு வழங்குவர். 1—4¼.

வாத சோணிதத்தின் பூர்வ ரூபம் :—இவ்வியாதியின் பூர்வ ரூபங்களாவன :—குஷ்டத்திற்கு உண்டாவதுபோலவே இதற்கும் பூர்வ ரூபங்கள் உண்டாகும் ; மேலும் சரீரம் இளைக்கும் ; அவயவங்கள் தளர்ச்சியடையும் ; முழங்கால், கணுக்காலுக்கு மேலுள்ள

---

1. வாததோஷமும் இரத்தமும் கெட்டுப்போய் உண்டாகும் குஷ்டம் மாதிரியான வியாதி வாதசோணிதம் அல்லது வாதரக்தம் எனப்படும் ; இதை விவரிக்கும் அத்தியாயம் வாதசோணித நிதாநம்.
2. விதாஹி—74-ம் பக்கம் பார்க்க.
3. விருத்தம்—90, 91-ம் பக்கங்களைப் பார்க்க.
4. இதைப்பற்றி 387, 388-ம் பக்கங்களைப் பார்க்க.

பாகம், துடை, இடுப்பு, தோள்கள், கைகள், பாதங்கள் மற்றுமுள்ள அவயவ ஸந்திகள் இவற்றில் தினவும், துடிப்பும், குத்தல் வலியும், கடுப்பும், பாரமும், உணர்ச்சியற்ற நிலைமையும் ஸம்பவிக்கும்; மேற்கூறிய குறிகள் அடிக்கடியுண்டாய் மறைந்துவிடும்; மறுபடி அடிக்கடியும் காணும். 5—6½.

வாதசோணிதம் பரவும்வகை இரண்டு:—வாதசோணிதமானது முதலில் பாதங்களுடைய மூலங்களையும், சில ஸமயத்தில் கைகளின் மூலப்பிரதேசங்களையும் ஆச்ரயித்ததாய் எலிவிஷம்போல் பிரகோபமடைந்து, பிறகு விரைவில் உடலெங்கும் வியாபித்துவிடும். அவ் வியாதி சர்மத்தை அல்லது மாம்ஸத்தைப்பற்றியதாயிருந்தால் அது உத்தாநவாதசோணிதம்[1] என்று கூறப்படும்; அவ்வியாதியில் உத்தாநவாதசோணிதமே முதலில் உண்டாகும். பிறகு சில காலம் கழித்து கம்பீரவாதசோணிதம்[2] உண்டாகும்; அது எல்லாத் தாதுக்களையும் ஆச்ரயித்ததாகும். 7—8½.

உத்தாநவாத சோணிதம்:—உத்தாநவாத சோணிதத்தில் சர்மம் தினவடையும்; கறுஞ்சிவப்பாகும்; உஷ்ணமும் அழற்சியுமடையும்; வலித்து இழுக்கப்படும்.—9¼.

கம்பீர வாதசோணிதம்:—கம்பீரவாத சோணிதத்தில் முதலில் உத்தாநவாதத்திலும் அதிக கடுமையான வலி உண்டாகும்; வீக்கமானது கிரந்தியைப் போன்றதாகவும், அழற்சியை விருத்தி செய்து பழுக்கக் கூடியதாகவும் இருக்கும்; வாயுவானது ஸந்திகளிலும், எலும்புகளிலும், மஜ்ஜையிலும் அறுப்பதுபோல வலியையுண்டுபண்ணிக்கொண்டு, வேகத்தோடு பலமாக சரீரத்தின் உட்புறங்களில் எல்லா விடங்களிலும் ஓடிக்கொண்டு, அப்பிரதேசங்களை வக்கிரமாகச் செய்து, மனிதனை கஞ்ஜனாகவாவது பங்குவாகவாவது[3] ஆக்கிவிடும்.—10, 11.

வாதம் அதிகரித்த வாத சோணிதம்:—வாதசோணிதத்தில் வாததோஷம் மற்றவைகளை விட அதிகரித்து விடுமானால் வலி, துடிப்பு, குத்தல் குடைத்தல் இவை உண்டாகும்; வீக்கமானது ரூக்ஷமாகவும், கருநிறமாகவும், அல்லது மங்கலாகவும் காணப்படுவதோடு, அவ்வீக்கம் அடிக்கடி விருத்தியடைவதும் குறைவதுமாயிருக்கும்; தமனிகளும், விரல்களும், ஸந்திபாகங்களும் சுருங்கிவிடும்; அவயவங்களில் பிடிப்பும் வலியும் அதிகரிக்கும்; குளிர்ச்சியில் வெறுப்பும், அதனால் வியாதிக்கு விருத்தியும் ஏற்படும்; அவயவங்கள் திமிர்த்துப்போய் உணர்ச்சியற்றுப் போகும்.—12,13.

---

1. உத்தாநவாத சோணிதம்—தேஹத்தின் மேற்புறத்தைப்பற்றிய வாதரக்த வியாதி; அதாவது ஆழமான தாதுக்களில் ஸம்பந்திக்காதது.

2. கம்பீர வாதசோணிதம்—தேஹத்தில் ஆழமான உட்புறங்களைப் பற்றிய வாதரக்த வியாதி.

3. கஞ்ஜன், பங்கு-இவற்றைப்பற்றி 490, 491-ம் பக்கங்களைப் பார்க்க.

இரத்தம் அதிகரித்த வாதசோணிதம் :—இரத்தம் விகாரமடைந்து அதிகரித்த வாத சோணிதத்தில் வீக்கமானது அதிக வலி குடைத்தல்களுடன் சிவந்தும் அழன்றுமிருக்கும்; அரிப்பும், தாரீர்க்கசிவும் காணும். ஸ்நிக்த்த சிகித்ஸையினாலாவது ரூக்ஷ சிகித்ஸையினாலாவது இது தணியமாட்டாது.—14.

பித்தம் அதிகரித்த வாதசோணிதம் :—பித்தம் அதிகரித்த வாதசோணிதத்தில் அழற்சி, மதிமயக்கம், அதிக வியர்வை, நாவரட்சி, மூர்ச்சை, வெறி, பரிசிப்பதையும் தாங்கமுடியாமை, சர்மம் சிவந்துபோதல், வீக்கம் இவை உண்டாம்; அவ்வீக்கம் பழுத்துக் கடுமையான அழற்சியுண்டுபண்ணும்.—15.

கபம் அதிகரித்த வாதசோணிதம் :—கபம் அதிகரித்த வாத சோணிதத்தில் தேஹம் அசைக்கமுடியாமல் விறைத்துக் கொள்ளும்; குருத்தன்மையும், உணர்ச்சியின்மையும், ஸ்நிக்த்தமான நிலைமையும், குளிர்ச்சியும் தோன்றும்; அரிப்பும் உண்டாகும்; வேதனை மந்தமாயிருக்கும்.—15½.

ஸம்ஸர்க்க ஸந்நிபாத வாத சோணிதங்கள் :—இரண்டிரண்டு தோஷங்களால் உண்டாகும் வாத சோணிதத்திலும், ஸந்நிபாத வாதசோணிதத்திலும், அந்தந்த தோஷங்களின் குறிகள் கலந்து காணப்படும்.—16.

வாதசோணிதத்தில் ஸாத்தியாஸாத்தியங்கள் :—(1) வாத சோணிதவியாதி ஒரு தோஷம் கோளாறடைந்து ஸம்பவித்ததாயிருந்தாலும், சொற்ப காலத்திற்குள் நூதனமாய் உண்டானதாயிருந்தாலும் எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியதாகும். (2) இரண்டு தோஷங்கள் சேர்ந்துண்டான வாதசோணிதம் யாப்யமாகும. (3) மூன்று தோஷங்களால் உண்டானதும், தார்நீர்க்கசிவுகளையுடையதும், அசைத்து அசைவற்றுப் போனதும், அர்புதம் போன்றதுமான வாதசோணிதம் அஸாத்தியமானது.—17.

வாதசோணித ஸம்ப்ராப்தி :—வாயுவானது சாகைகளிலும்[1] ஸந்திகளிலும் உட்புகுந்து விரைவில் இரத்த மார்க்கங்களை அடைத்துப் பாழாக்குகின்றது; பிறகு இரத்தமும் வாயுவும் ஒன்றோடொன்று ஊடுருவிச் சேர்ந்து விகாரமடைந்து, பிராணாதி வாயுக்களும் கோளாறடைந்து, அடியில் குறிப்பிடப்படுமாறு வேதனைகளை மிகவும் உண்டுபண்ணி உயிரைப் போக்கும்.—18.

வாதசோணிதத்தில் பிராணாதி வாயுக்களால் உண்டாகும் உபத்திரவங்கள் :—(1) ஐந்துவித வாயுக்களில்[2] பிராணவாயுவானது

---

1. சாகைகள்—இரத்தம் முதலிய 6-தாதுக்களும் சர்மமும் சாகைகள் எனப்படும். (சாகைகள் என்றால் கை கால்களுக்கும் பெயர்; ஆனால் இங்கு முக்கியமாய் இரத்தம் முதலிய தாதுக்களே குறிக்கப்படுகின்றன.)

2. ஐந்துவித வாயுக்கள்—129-ம் பக்கமும் பார்க்க.

ரூக்ஷத்தன்மையினாலும், வியாயாமத்தினாலும்,[1] இலங்கனத்தினாலும்,[2] மிதமிஞ்சிய உணவாலும், அபிகாதத்தினாலும்,[3] விசேஷமாய் வழி நடப்பதாலும், இயற்கைக்கு விரோதமாய் வேகங்களை[4] ஏவுவது அல்லது அடக்குவதாலும் பிரகோபிக்கும்; பிறகு நேத்திரம் முதலிய புலன்களுக்குக் கெடுதியைத் தரும்; பீநஸம், அர்திதம்,[5] நாவரட்சி, காஸம், ச்வாஸம் முதலிய வேறு அநேகம் வியாதிகளையும் உண்டுபண்ணும். (2) தும்மல், ஏப்பம், வாந்தி, நித்திரை இவற்றைத் தடுத்து அடக்குவதாலும், அதிக கனமான பாரத்தைச் சுமப்பது, அதிகமாய் அழுதல்-அதிகமாய் சிரித்தல் இவை முதலியவற்றாலும் உதானவாயு விகாரமடைந்து, தொண்டையடைப்பு, மனம் திகிலடைதல், வாந்தி, அரோசகம், பீநஸம், களகண்டம்[6] இவை முதலிய தோள்களுக்கு மேற்பட்ட அவயவங்கள் ஸம்பந்தமான அந்தந்த வியாதிகள் உண்டாகும். (3) அதிகமாய் நடந்துபோதல், அதிகமாய் யோசனைசெய்தல், மிதமிஞ்சி விளையாடுதல், முறைதவறான செயல்களைச் செய்தல், விருத்தமானவையும் ரூக்ஷமாயிருப்பவையுமான உணவுகளைப் புஜித்தல், பயப்படுதல், திடீரென்று விசேஷமாகக் களிப்புறுதல், துயரப்படுதல் இவை முதலியவற்றால் வியானவாய விகாரமடைந்து, ஆண்தன்மை, உத்ஸாஹம், தேஹபலம் இவற்றைக் குறைத்து, வீக்கத்தையும் மனக்கலக்கத்தையும் ஜ்வரத்தையும் உண்டுபண்ணும்; மேலும் ஸர்வாங்க வாதத்தையும், குடைத்தலையும், மயிர்ச்சிலிர்க்கையையும், அவயவங்களுக்கு உணர்ச்சியற்ற நிலைமையையும், குஷ்டத்தையும், விஸர்ப்பத்தையும், மற்றும் அகில அங்கங்களையும் ஆச்ரயித்த எல்லா வியாதிகளையும் உண்டுபண்ணும். (4) விஷமமாகவும், சீதளமாகவும், அஜீர்ணமுண்டு பண்ணுவதாகவும், பலவிதமான பத்தியாபத்திய பதார்த்தங்கள் கலந்து மிச்ரமாகவும் உள்ள போஜனங்களாலும், அகாலத்தில் படுத்து நித்திரைசெய்வது அல்லது அகாலத்தில் கண் விழித்திருப்பது முதலியவைகளாலும் தூஷிக்கப்பட்ட ஸமானவாயுவானது வயிற்றுநோய், குல்மம், கிரஹணீ முதலிய பக்வாசய-ஆமாசயங்களைப்பற்றிய வியாதிகளை உண்டுபண்ணும். (5) ரூக்ஷமாகவும், குருவாகவுமுள்ள உணவுகளை உண்பதாலும், வேகங்களை அடக்குவது அல்லது வலிய வெளியிடுவதற்கு முயல்வதாலும், நடத்தல்-வாஹநத்தில் சவாரி செய்தல் - ஆஸநத்திலேயே

1. வியாயாமம்—உடலையுழைத்து தேஹப்பயிற்சி செய்தல்.
2. இலங்கனம்—உபவாஸம். ஸூத். 14-ம் அத்தியாயமும் பார்க்க.
3. அபிகாதம்—அடி முதலியது தாக்குதல், அல்லது அதிர்ச்சியுண்டாகுமாறு அலைந்து கஷ்டப்படுதல்.
4. வேகங்கள்—53-ம் பக்கம் பார்க்க.
5. அர்திதம்—வாதவியாதி நிதானம் பார்க்க.
6. களகண்டம்—கழுத்தில் உண்டாகும் புறை குழல்.

உட்கார்ந்திருத்தல் - மற்றும் அலைந்து திரிதல் முதலியவற்றை அதிகமாய் செய்வதாலும் அபானவாயு பிரகோபித்து, மூத்திரதோஷங்கள் - சுக்ரதோஷங்கள் - அர்சஸ் என்னும் மூலரோகம் - குதம் நழுவிப்போதல் முதலிய பக்வாசயத்தைப்பற்றிய கஷ்ட ஸாத்தியமான அநேகம் வியாதிகளை உண்டுபண்ணும். 19—28.

## வாத விகாரங்கள்.[1]

ஸர்வவாயுக்களுக்கும் ஆமமும் நிராமமுமான நிலைமைகள்:— சோம்பல், திமிர்த்துப்போதல், குருத்தன்மை, ஸ்நிக்த்தமாயிருத்தல், அரோசகம், ஆலஸ்யம், சைத்தியம், வீக்கம், ஜாடராக்னி அழிவுறுதல் இக்குறிகள் கண்டிருந்தாலும், காரமான சுவை ரூக்ஷத்தன்மை இக்குணமுள்ள வஸ்துக்களில் விருப்பம் இருந்தாலும், அவ்விதமான பதார்த்தங்களால் உபசயம்[2] உண்டாவதாலும் ஸர்வ வாயுக்களும் ஆமதோஷத்துடன் கூடியவையென்றும், முற்கூறிய சோம்பல் முதலியவற்றிற்கு எதிரிடையானவற்றால் அவ்வாயுக்கள் ஆமதோஷ மற்றவையென்றும் அறிக.—29, 30.

ஆவரண வாத விகாரங்கள்:—இதன்பிறகு வாயுவுக்கு ஆவரண ஸம்பந்தமான[3] விஷயம் அநேகம் பேதங்களோடு விவரித்துக் கூறப்படும். (1) வாததோஷமானது பித்தத்தினால் ஆவரணம் செய்யப்படுமானால் உடலில் அழற்சி, தாவரட்சி, வயிற்றுநோய், தலைச்சுற்றல், கண்கள் இருளடைதல், கடுரஸத்தினாலும் அம்லரஸத்தினாலும் இலவணரஸத்தினாலும் உஷ்ணவீர்யத்தினாலும் சூடவில் எரித்தல், குளிர்ச்சியில் விருப்பம் இவை உண்டாம். (2) கபத்தினால் வாததோஷம் ஆவரணம் செய்யப்படும்போது சைத்தியம், குருத்தன்மை, வலி, கடுரஸம் முதலியவற்றால் வியாதி உபசாந்தியடைதல், இலங்கநம், ஆயாஸம், ரூக்ஷமும் உஷ்ணமுமான வஸ்துக்களில் விசேஷ விருப்பம் என்னும் இவை இலக்ஷணங்களாம். (3) இரத்தத்தினால் ஆவரணம் செய்யப்பட்ட வாதத்தினால் உண்டாகும் குறிகளாவன:—அழற்சியும் வலியும் சர்மத்திற்கும் மாம்ஸங்களுக்கும் இடையில் மிகவும் உண்டாகும்; சிவந்த வீக்கமும் உடலில் மண்டலாகாரமான படைகளும் காணும். (4) வாயு மாம்ஸத்தினால் ஆவரணம் செய்யப்படும்போது, வீக்கம் கடினமாகவும், மங்கல் நிறமாகவும் இருக்கும்; அங்ஙனமே பிடகைகள் என்னும் கட்டிகளும் காணும்; அவயவங்கள் திமிர்த்துப்போய் சிலுசிலுப்பும், எறும்புகள் ஊர்வது போன்ற உணர்ச்சியும் உண்டாகும். (5) மேதஸ் என்னும் கொழுப்பால் வாயு ஆவரணம் செய்யப்படுமானால் வீக்கம் அசையக்கூடியதாகவும், ஸ்நிக்த்தமாக

1. வாத வியாதி நிதானத்தில் விவரிக்கப்படாத ஆவரண வாதாதி ஸம்பந்தமான கோளாறுகள் இங்கு விளக்கப்படுகின்றன.

2. உபசயம்—384-ம் பக்கம் பார்க்க.

3. ஆவரணம்—வாதவியாதி நிதானமும் பார்க்க.

வும், மிருதுவாகவும், சீதளமாகவும் உடலெங்கும் தோன்றும்; அரோசகமும் ஏற்படும்; இது கஷ்டஸாத்தியமான ஆட்யவாதம்[1] என்றும் வழங்கப்படும். (6) அஸ்த்தியினால் வாயு ஆவரணம் செய்யப்பட்டிருக்கையில் பரிசவுணர்ச்சி மிக்க உஷ்ணமாயிருக்கும்; கரங்களால் மெதுவாகப் பிடித்து அழுத்துவது அப்பிணியாளிக்கு இதமாயிருக்கும்; ஊசியினால் குத்தப்படுவதுபோல் உடலில் அதிக வேதனையுண்டாகும்; நோயாளி மிகவும் துன்பம் அனுபவிப்பான்; வலியும் விசேஷமாயிருக்கும். (7) மஜ்ஜையினால் வாதம் ஆவரணம் செய்யப்பட்டிருக்கையில் அவயவங்கள் சோர்ந்து வளையும்; கொட்டாவி அதிகமாகும்; அமைதியின்றி இங்குமங்கும் அப்பிணியாளி புரண்டு அலைவான்; வலி அதிகமாயுண்டாகும்; கைகளால் அவ்வவயவங்களைப் பிடித்து மெதுவாக அழுத்துவதால் வலி நிவ்ருத்தியாய் சுகமுண்டாகும். (8) வாதமானது சுக்ரதாதுவினால் ஆவரணம் செய்யப்படுமானால், சுக்ரம் வெகு துரிதமாய் வெளியாய் விடும்; அல்லது வெளியாகாமலே க்ஷீணிக்கலாம்; அல்லது அச் சுக்ரத்தினால் கர்ப்போற்பத்தியுண்டாகாமற் போய்விடலாம். (9) வாதமானது அன்னத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருக்கையில், வயிற்றில் உணவு உட்கொண்டதும் வலி அதிகரிக்கும்; உணவு ஜீர்ணமான பிறகு வேதனை நிவ்ருத்தியாகும். (10) வாதம் மூத்திரத்தினால் ஆவரணம் செய்யப்பட்டிருக்கையில் மூத்திரம் வெளிவராது; வஸ்தியென்னும் மூத்திரப் பையினுள் ஆத்மானம் என்னும் பொருமல் தோன்றும். (11) வாயு மலத்தினால் ஆவரணம் செய்யப்பட்டால் கீழே அபானத்தில் மலம் கட்டப்பட்டு அவ்விடத்தில் கடுப்பு வலி உண்டாகும்; உட்கொள்ளப்படும் ஸ்நேஹவஸ்துவும் சீக்கிரம் ஜீர்ணமாகும்[2]; அப்பிணியாளி போஜனம் செய்வானானால், உடனே வயிற்றில் பொருமல் உண்டாகும்; உட்கொண்ட உணவுகளால் மலம் இறுக்கப்பட்டு, ஈரப்பசையெல்லாம் வற்றிப்போய் உலர்ந்து கஷ்டப்பட்டு மிகவும் தாமதித்து வெளிப்படும். (12) ஸர்வதாதுக்களாலும் வாதம் ஆவரணம் செய்யப்படுமானால், இடுப்பிலும் துடையிடுக்குகளிலும் ப்ருஷ்டபாகத்திலும் வலியுண்டாகும்; வாயுவும் விலோமமாய் அசையும்;[3] இருதயம் சுகநிலைமை யிழந்து பீடிக்கப்படும். 31—41½.

பித்தாவ்ருதமான பஞ்சவாயுக்களின் குறிகள் :—(1) பித்தத்தினால் பிராணவாயு ஆவரணம் செய்யப்படுமானால் தலைச்சுற்றல், மூர்ச்சை, வலி, அழற்சி இக்குறிகள் காணும்; உட்கொண்ட அன்

1. ஆட்யவாதம்—ஊருஸ்தம்பமும் ஆட்யவாதம் எனப்படும்.

2. விரேசனத்தை நிறைவேற்றாமல் ஜீர்ணமாய்விடும் எனக் கருத்து.

3. விலோமம்—இயற்கையில் மேலிருந்து கீழ் நோக்கிய அசைவானது அதற்கு எதிரிடையாகக் கீழிருந்து மேல்நோக்கி அசைதல்.

னம் வயிற்றில் விதக்த்த நிலைமையை [1] அடைந்து வாந்தியுமுண்டாகும். (2) அதே தோஷத்தினால் உதாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால் அப்பொழுதும் தலைச்சுற்றல் முதலிய முற்கூறிய விகாரங்கள் உண்டாகும்; மேலும் தேஹத்தினுள் அழற்சியும், உடல் வன்மைக்கு அழிவும் ஏற்படும். (3) வியாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால் அழற்சி உடலெங்கும் வியாபித்துவிடும்; தேஹ வாட்டமுண்டாகும்; அவயவங்களுக்கு இயற்கையிலுள்ள அசைவுகள் தடைப்படும்; தாபமும் வேதனையும் அதிகரிக்கும். (4) ஸமாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால், உடற்சூடு குறைவதும், வியர்வை அதிகரிப்பதும், அமைதியின்மை விருத்தியாவதும், நாவரட்சியும் குறிகளாகும். (5) அபாநவாயு ஆவரணம் செய்யப்பட்டிருக்கையில், அழற்சியுண்டாகும்: மலம் மஞ்சள் நிறமாகும்; வலி மிகவும் அதிகமாகும்; யோனி அல்லது ஆண்குறியிலும் குதத்திலும் எரித்தல் உண்டாகும். 42—45.

கபாவ்ருதமான பஞ்சவாயுக்களின் குறிகள் :—(1) கபத்தினால் பிராணவாயு ஆவரணம் செய்யப் பட்டிருக்கையில் தேஹம் பொதுவாக மெலிந்துவிடும்; சோம்பல், அரோசகம், வாந்தி, நாசியிலிருந்து கபத்தை வெளியிற் சிந்தமுடியாமற் போதல், தும்மல் வெளிவர முடியாமற்போதல், ஏப்பம் தடைபடுதல், மூச்சு வாங்குவதற்கும் விடுவதற்கும் இயலாமை என்னும் இக்குறிகள் காணும். (2) உதாநவாயு அத்தோஷத்தினால் ஆவரணம் செய்யப்படுமானால், தேஹம் பாரமாய்விடுதல், அரோசகம், வாயால் பேச முடியாமலும் தொண்டையினால் சப்திக்க முடியாமலும் வாயடைப்பு உண்டாதல், தேஹவன்மையும் நிறமும் அழிவுறுதல் என்னும் இக்குறிகள் உண்டாகும். (3) வியாநவாயு ஆவரணம் செய்யப்படுகையில் கணுக்களிலும் எலும்புகளிலும் பிடிப்பு உண்டாகும்; அவயவங்கள் எல்லாம் பாரமாயிருப்பதாக உணரப்படும்; நடக்கும்பொழுது கால் அடிக்கடியும் அதிகமாய் தடைபுறும். (4) ஸமாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால், அங்கங்கள் மிகவும் குளிர்ந்திருக்கும்; வியர்வையுண்டாகாது; ஜாடராக்னியும் மந்தமாய்விடும். (5) அபாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால் மூத்திரமும் மலமும் ச்லேஷ்மத்தோடு கலந்தவண்ணம் வெளியாகும். 46—48½.

வாதத்திற்கு இருபத்திரண்டுவித ஆவரணங்கள் :—இங்ஙனம் முன் விவரித்திருக்குமாறு வாததோஷத்திற்கு இருபத்திரண்டு விதமான ஆவரண பேதங்கள் உண்டென்று வைத்திய சாஸ்திர வல்லோர் உணர்ந்து அறிவித்திருக்கின்றனர்.—49.

வாதத்திற்கு வேறு இருபதுவித ஆவரணங்கள் :—பிராணவாயு முதலிய எல்லா வாதங்களும் முற்கூறிய வகையில் முறையே

1. விதக்த்தம்—இதுவே தக்த்தபாகமாம். 218-ம் பக்கமும் பார்க்க.

ஒன்றோடொன்று ஆவரணம் செய்து கொள்வதுண்டு; அவ்விதமாய் வாதத்திற்கு ஏற்படும் ஆவரணபேதங்கள் இருபது விதங்களாகும்.[1] பிராணவாயுவினால் உதாநவாயு ஆவரணம் செய்யப்படுமானால் மூச்சு வாங்குவதும் மூச்சுவிடுவதும் தடையுறும்; பிரதிச்யாயமும், சிரோக்ரஹமும், இருதயத்தைப்பற்றிய ரோகமும், வாய் சுஷ்கமாவதும் ஆக இவ்விகாரங்கள் காணும். உதாநவாயுவினால் பிராணவாயு ஆவ்ருதமானால் தேஹநிறமும், ஓஜஸ்ஸும், சரீரபலமும் க்ஷயமடையும். குறிப்பிட்ட இவ்வழியை அனுஸரித்து வைத்தியர், வாதங்களுடைய ஸ்த்தாநங்களையும், இயற்கைச் செயல்களுக்குண்டான ஏற்றத் தாழ்வுகளையும் பரீக்ஷித்துப் பார்த்து, ஸகலவித ஆவரணத்தையும் பகுத்தறியவேண்டும்.[2] 50—52½.

ஆவரணவாதத்தில் எண்ணிறந்த விதங்கள்:—பிராணவாயு முதலிய ஐந்துவித வாயுக்களுக்கும் ஒன்றோடொன்று சேர்க்கை அநேகவகையில் உண்டாகலாம்; மேலும் அவ்விதம் ஒன்றோடொன்று மிச்ரங்களாகக் குணிக்கப்படுகிற அவ்வாதங்களுக்கு அங்ஙனமே பரஸ்பரம் மிச்ர நிலைமையிலுள்ள பன்னிரண்டு வகையில் குணிக்கப்பட்ட பித்தம் முதலியவற்றோடு சேர்க்கையினால் வாதத்திற்கு ஆவரண ஸம்பந்தமான எண்ணிக்கை அநேக வகையில் அதிகரிக்கும். இங்ஙனம் பரஸ்பரம் மிச்ரமான பித்தாதி தோஷஸம்பந்தமான ஆவரணங்களோடு பிராணாதிவாதங்களுக்கும் சேர்க்கைகள் அநேகவகையில் உண்டாவதைக்கொண்டும், அவற்றின் சேர்க்கைகளிலுள்ள தாரதம்யங்களைப் பகுத்துக் கணக்கிடு

1. பிராணவாயு, உதாநவாயு, வியாநவாயு, ஸமாநவாயு, அபாநவாயு என்னும் இவ்வைந்தும் க்ரமமாக ஒன்றை மற்றொன்று ஆவரணம் செய்யும். பித்த-கபங்களால் பிராணாதி வாயுக்கள் ஆவரணம் செய்யப்படுவதாகக் கூறப்பட்டது போலவே, பிராணாதிகளுள் ஒன்று மற்றொன்றாலும் ஆவரணம் செய்யப்படும். பிராணவாயுவால் உதாநம் முதலிய மற்ற நான்கு வாயுக்களும் தனித்தனியே ஆவரணம் செய்யப்படுவது போலவே உதாநாதி வாயுக்களாலும் தனித்தனியே பிராணவாயுவும் ஆவரணம் செய்யப்படும். அங்ஙனமே உதாநத்தினால் வியாநம், ஸமாநம், அபாநம் இம்மூன்று வாயுக்களும் ஆவரணம் செய்யப்படும். வியாநம் முதலிய மூன்று வாதங்களாலும் உதாநமும் ஆவ்ருதமாகும். அப்படியே வியாநத்தினால் ஸமாந அபாநங்களும், ஸமாந அபாநங்களால் வியாநமும் மாறி மாறி ஆவரணம் செய்யப்படும். ஸமாநவாயுவினால் அபாநமும், அபாநவாயுவினால் ஸமாநமும் ஆவ்ருதமாகும். இங்ஙனம் ஒரு வாதம் மற்றொரு வாதத்தையும் தனித்தனியே ஆவரணம் செய்வதோடு, இரண்டிரண்டாகவும் மும்மூன்றாகவும் சேர்ந்து மிச்சமுள்ள வாதங்களை ஆவரணம் செய்ய, இருபது விதமான ஆவரண வாத விகாரங்கள் கணக்கிடப்படும்.

2. பிராண உதாநவாயுக்களின் பரஸ்பர ஆவரணத்தினாலுண்டாகும் இலக்ஷணங்கள் குறிப்பிட்டு இங்கு ஸங்க்ரஹமாய் த்ருஷ்டாந்தமாகக் கூறப்பட்டன. உதாநத்தினால் அபாநம் ஆவ்ருதமானால் வாந்தி, ச்வாஸ காஸங்கள் முதலியவை யுண்டாகும். அபாநத்தினால் உதாநம் ஆவ்ருதமானால்

*வதைக்கொண்டும் சேர்க்கையின் ஆவ்ருத்தி எண்ணமுடியாததாய் விடுகிறது; அத்தகைய ஸௌக்ஷ்ம நிலைமையிலுண்டாகும் ஆவரண வாதங்களின் ஆவ்ருத்தி பேதத்தை உபசயம் என்கிற நிதானத்தைக் கொண்டு மெள்ள மெள்ள அடிக்கடியும் பரீக்ஷித்து, வைத்தியன், அதற்குள்ள இலக்ஷணோற்பத்தியையும் வெகு கருத்துடன் நுட்பமாகப் பரிசோதித்து அறியவேண்டும்.* 53—55½.

**பிராண-உதான வாயுக்களின் மேன்மை :—***ஐந்துவித வாதங்களுள் பிராணவாயுவே ஜீவாதாரமானது; உதானவாயுவும் முக்கியமானதே; ஆகவே அவ்விரண்டும் தாக்கப்பட்டு கலக்கமுறுமானல் ஆயுளுக்கும் தேஹவன்மைக்கும் தீங்கு நேரிடும்.—56½.*

**ஆவரணவாதங்களில் ஸாத்தியாஸாத்திய நிலைமைகள் :—** *வாதங்கள் ஆவரணங்களைப் பெற்றிருப்பதாக அறியப்படாமற் போய் விடுவதாலும், அல்லது தெரிந்தும் வருடக் கணக்கில் சிகித்ஸையின்றி அஜாக்கிரதையாயிருந்து விடுவதாலும் அத்தகைய ஆவரண வாதரோகங்கள் பெருமுயற்சி செய்தும் சிரமப்பட்டு சிகித்ஸை செய்யவேண்டிய நிலைமைக்கு வந்து விடும்; அல்லது சிகித்ஸைக்கு வசப்படாதவையாகவும் ஆய்விடலாம்.—57½.*

**ஆவரணவாதங்களின் உபத்திரவங்கள் :—***ஆவரண வாதங்களுக்கு ஏற்ற சிகித்ஸை செய்யாமல் உபேக்ஷித்துவந்தால் வித்ரதி, ப்லீஹவ்ருத்தி, இருதய ரோகம், குல்மம், அக்னிமாந்த்யம் முதலியவை அவற்றிற்கு உபத்திரவங்களாக ஸம்பவிக்கின்றன.—58.*

---

*வஸ்தி பொருமலடைவதும், உதாவர்த்தமும், குல்மமும், ஜாடராக்னி விருத்தியடையும் குறிகளாகும். அபானவாயு வியானவாயுவால் ஆவ்ருதமானல் மலமூத்திர சுக்ரங்கள் அதிகமாய் வெளிப்படும். வியானவாயு ஸமானவாயுவால் ஆவ்ருதமானல் மூர்ச்சை, சோம்பல், வாய்ப்பிதற்றல், தேஹமெலிவு, அக்னிமாந்தியம் முதலியவை யுண்டாகும். வியானவாயு உதானத்திஞல் ஆவ்ருதமானல் வாய் கருநிறமாதல், தேஹம் நிமிர்ந்தல், அக்னி மந்தித்தல், அவயவங்கள் அசைக்கமுடியாமற்போதல் முதலியவை குறிகளாகும்.*

அஷ்டாங்க ஹ்ருதயம்
ஸூத்திர-சாரீர-நிதாந ஸ்த்தாநங்களுக்கு

# விஷய அகராதி

குறிப்பு:—ஒவ்வொரு விஷயத்திற்கும் எதிரிலுள்ள இலக்கங்கள் புஸ்தகத்தின் பக்கங்களைக் குறிக்கும்.

## அ

இ

ஈ



உ

ஊ

சா

**தா**

மி



மு

# சார்ங்கதர ஸம்ஹிதை.

## பிராசீன ஸம்ஸ்க்ருத ஆயுர்வேதக் கிரந்தத்தின் சரியான மொழிபெயர்ப்பு.

ஆயுர்வேத ஸாராம்சங்கள் முழுமையும் அடங்கியது.
மூன்று கண்டங்களும்
32-அத்தியாயங்களும் அடங்கியது.

வைத்திய பரிபாஷைகள், நாடீ பரீக்ஷாதிகள், ரோக விவரணம் முதலியவை 7 அத்தியாயங்களில் பூர்வ கண்டத்திலும், அநேக வகையான கஷாய முறைகள், சூர்ணங்கள், மாத்திரைகள், லேஹ்யங்கள், தைல கிருதங்கள், ஆஸவாரிஷ்டங்கள், பஸ்ம ஸிந்தூராதிகள் முதலியவை 12 அத்தியாயங்களில் மத்யம கண்டத்திலும், வமந - விரேசந - வஸ்தி - நஸ்யாதி அநேகவித அபூர்வமான சிறந்த சிகித்ஸா கிரமங்கள் 13 அத்தியாயங்களில் உத்தர கண்டத்திலும் விவரிக்கப்படுகின்றன.

வியாக்யாநம், முகவுரை, மூன்றுவிதமான விரிவுள்ள விஷய அகராதிகள் சேர்க்கப்பட்டுள்ளன.

வைத்தியர்களுக்கும் வைத்தியரல்லாதவருக்கும் வெகு உபயோகமானதென்று அனைவரும் கொண்டாடுவது. சார்ங்கதர ஸம்ஹிதை ஒவ்வொரு வீட்டிலும் அவசியம் இருக்கவேண்டியது அவசியமென்று இதைப் படித்தவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

முற்றிலும் சீர்திருத்திய மூன்றாம் பதிப்பு.

| | | |
|---|---|---|
| உயர்ந்த பைண்டு விலை | ரூ. | **5—4—0.** |
| 2-ம் தரம் ,, | ,, | **4—4—0.** |

**வைத்திய காலாநிதி ஆபீஸ்,**
வேப்பேரி, மதராஸ்.